நான்மாடக்கூடலான திருவிளையாடல்-





திருச்சிற்றம்பலம்.

# கூடற்காண்டம்.

## பத்தொன்பதாவது

## நான்மாடக்கூடலான படலம்.

### பரசிவவணக்கம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

பூதங்களல்லபொறியல்லவேறுபுலனல்லவுள்ளமதியின்
பேதங்களல்லவிவையன்றிநின்றபிறிதல்லவென்றுபெருநூல்
வேதங்கிடந்துதடுமாறும்வஞ்சவெளியென்பகூடன்மறுகிற்
பாதங்கணோவவளையிந்தனாதிபகர்வாரையாயுமவரே.

(இ-ள்.) கூடல் மறுகில்-மதுரையின்திருவீதியில், பாதங்கள் நோவ வளை இந்தனம் ஆதி பகர்வாரை ஆயுமவர்-தமதுதிருவடிகள் வருந்த வளையலும் விறகுமுதலியனவாக விற்றருளிய சோமசுந்தரக்கடவுளை யாராய்ந்துணருமறிவுடையோர், பூதங்கள் அல்ல - பிருதிவிமுதலியபூதங்களுமல்ல, பொறியல்ல-ஞானேந்திரியங்களுமல்ல, வேறு புலன அல்ல - ஏனை ஐம்புலன்களுமல்ல, உள்ளம் ஆதியின் பேதங்கள அல்ல - மனமுதலிய அந்தக்கரணங்களின் விகற்பங்களுமல்ல, இவை அன்றி நின்ற பிறிது அல்ல என்று-(அப்பூதமுதலிய) இவைகள்தாமல்லாமலும் சேடித்துநின்ற வான்மாவுமல்லவென்று, பெரு நூல் வேதம் கிடந்து தடுமாறும வஞ்சவெளி என்ப-பெருநூலாகியவேதங்கள் (உண்மையுணராது) கிடந்து தடுமாறிநிற்கும் வெறுவெளியென்று கூறுவர்.

முதலியன என்றது மாணிக்கம்விற்றதும் குதிரைவிற்றதும் எனக்கொள்க.

உளளமதியின்பேதங்கள்லவென்பதற்கு - மதியின் உள்ளம்பேதங்களல்லவென்று சொல்வகைசெய்து ஆராயின் மனமுதலிய அந்தக்கரணங்களல்லவெனறு பொருள்கொள்ளுதலுமொன்று. உததமகாப்பியத்தி னூன்முகத்திலெழுந்த செய்யுளுக்கு அக்காப்பியத்தின்வரலாறுணாத்துதற்கு ஒருவாறு பதப்பொருளைவிட்டு இலக்கணையாக முன்னர்ப்பொருள்கோடல் இலக்கணமாதலால் இந்நூன்முகத்து அவவாறு பொருள்கொள்ள "சத்தியாய்சிவமாகித்தனிப்பர-முத்தியானமுதல்" என எழுந்த செய்யுளிற்போந்த முதல் என்னும நிட்களசிவத்தி னிலக்கணத்தை வற்புறுத்தற்கு இப்பாயிரம் எழுந்ததாதலால், பிருதிவி, அப்பு, தேயு, வாயு என்னும் பூதங்கள் நித்தியமாய் நிலைத்தோற்றமுடைமையும், அவற்றின் புணாச்சியால் அவன்,

அவள், அது என்னும் பிரபஞ்சத்தோற்றாவும், அப்பூதங்களுள் வாயு மற்றை மூன்றுபூதங்களையும் நிலைபெறச்செய்து தான் அவற்றின சமூகத்தில் நிலைபெறுதலாலும், தேயு மற்றை மூன்றுபூதங்களையும் அழித்துத் தான் அவற்றின்சமூகத்தில் அழிதலாலும், அப்பு மற்றை மூன்றுபூதங்களையுந்தோற்றித் தான் அவற்றின்சமூகத்தில்தோன்றுதலாலும், பிருதுவி மற்றை மூன்றுபூதங்களினின்று நுகரப்படும் பயன்களைக் கொடுப்பித்துத் தானும் அவற்றின்சமூகத்தில் பயன்படுதலாலும், இவ்வாறு செயப்படு பொருள்களுக்கு ஒவ்வொன்றே வினைமுதல்களாய் வேறாய் நின்று காரியநிகழ்த்துதலைக் காட்சியளவையால் கண்கூடாகக் காணநிற்றலின் தமக்கு வேறு வினைமுதல் வேண்டாமையும் உடைமையால் அதுவேதெய்வமெனின்;—பூதக்கூட்டுறவால் ஆகிய வுருக்கள் தோன்றுதலும் கெடுதலும் உள ஆதலால் நித்தியமின்மையும் நிலைத்தோற்றம் அன்றித் தோற்றக் கேடுகளுடைமையும்; இநான்கு பூதங்களும் ஒருசேர முத்தொழிற்படுதலின் ஒன்றையொன்று காரியப்படுத்தும் வன்மையை யுடையன அல்லவாதலால் செயப்படுபொருட்கு ஓர்வினைமுதல் வேண்டுமாறுபோல முத்தொழிற்படுதலின்றி மேம்பட்டுள்ளானொருவன் வினைமுதலாக நின்று அவற்றைத் தொழிற்படுத்தற்கு வேண்டப்படும் ஆதலால் உலோகாயதன் கூற்றை மறுத்துப் பூதங்களல்லவெனவும், நீரிறைக்குங் கருவியிலமைந்த அவயவங்கள் தாமே தொழிற்படுதல்போல ஐம்பொறிகளுந் தாமே சத்தாதிவிடயங்களையுணர்ந்து அநுபவியாநிற்றலால் அவையே பொருள் என்னில்;—சத்தாதிவிடயங்களை ஐம்பொறிகளும் ஒருசேரவுணராமலும், சத்தத்தையுணரும்பொறி ஏனைவிடயங்களை யுணராமலும், ஓரிந்திரியமுணரும்விடயத்தை மற்றோரிந்திரியமுணராமையும் உடைமையால் அவற்றைக்கூட்டிக் காரியப்படுத்தும் ஓர்வினைமுதல் வேண்டப்படுமாதலால் சங்கிராந்தவாதியின் கூற்றைமறுத்துப் பொறியல்ல எனவும் ; மூலப்பிரகிருதியிற் றோன்றிய சத்த முதலிய பஞ்சதன்மாத்திரைகளுமே உலகமாய் நிற்றலின் அவையே பொருளாம் என்னில்;—அப்பஞ்சதன்மாத்திரைகளுந் தோன்றுதற்குக் கருவியாய் நின்ற அந்த மூலப்பகுதி சடமாதலால் அவற்றைக் காரியப்படுத்த ஓர்வினைமுதல்வேண்டப்படும் ஆதலால் சாங்கியன்கூற்றை மறுத்துப் புலனல்ல எனவும்; அந்தக்கரணங்களையின்றி இந்திரியங்கள் சத்தாதிவிடயங்களை யறிதல்கூடாமையால் அவையே பொருள் என்னில்;—அவற்றைக் காரியப்படுத்த ஓர்வினை முதல்வேண்டும் ஆதலால் அச்சங்கிராந்தவாதியின்கூற்றை மறுத்து உள்ளமதியின்பேதங்களல்ல எனவும்; கண்ணால் உருவத்தையன்றி யேனைவிடயங்களையுணர்ந்து நுகர்தல் ஒண்ணாதென்றுணரும் ஆன்மா தனக்கு வேண்டியவிடயங்களை நுகர்தற்கு அதத்தற்குத்தக்க இந்திரியங்களைப்பொருந்தி நுகர்ந்துவருதலால் அதுவே பொருள் என்னில்;—அந்த ஆன்மா ஓர்வினைமுதல் அறிவிக்க அறியும் சதசத்தாகையால் ஈஸ்வர அவிகாரவாதியின் கூற்றைமறுத்துப்பிறிதல்ல எனவும், இதுகாறுஞ் சமயிகள்கூற்றைமறுத்து மேல்வருதல் நிட்களசிவத்தின் இலக்கணத்தை வற்புறுத்த எழுந்ததனால் அந்த நிட்களசிவம் பிரபஞ்சசிருட்டிக்குத் தனக்கோர் உபாதானகாரணமாய் நின்ற மாயை, மாமாயையென்னும் இவற்றிற்கு அப்பாற்பட்ட தோன்றாநிலையாய் நிற்றலால் வஞ்சவெளியெனவுங்கூறினார். உள்ளமாதி உள்ளமதிகுறுக்கல். உள்ளமதியின்பேதங்கள் என்றது மனமுதலிய கரணங்கள் தம்முள் தொழில் வேறுபாடுடைமைபற்றி யென்க. பதப்பொருளைச் சக்கியார்த்தம் எனவும், இலக்கணையாற் பொருள்கோடலை லட்சியார்த்தம் எனவும், அவ்வாறு பொருள்கொள்ளநிற்றலை வியஞ்சகம் எனவும் வடநூலார் கூறுவர். இதனைத் தமிழ்நூலார் சிறப்புப்பாயிரம் என்பர் "தெய்வவணக்கமுஞ்செயப்படுபொருளும்-செப்புவதாகுஞ்சிறப்புப்பாயிரம்" என்பது சூத்திரம். சிதநியாரில் "சாற்றுபெய

ரானவைதலம்புனல்கனற்பின்-காற்றுமெனலாம்" என்பதில் "போற்றுமிவைநித்த வியல்பாமிவைபுணர்ப்பே" எனவும் "ஒத்துறுபுணர்ச்சியி னுருக்கள்பலவாகும்" எனவும் "நிலம்புனலனல்கால்காண நிற்றிடுமழிக்குமாக்கும்-பலந்தருமொருவனிங் குப்பண்ணிடவேண்டாவென்னில்" எனவும் "பூதமானவைநித்தமென்று புகன்ற தென்னையுருக்களாய் - ஆதலோடழிவாகுமாதலினுக்குவோரவர்வேண்டிடும்" என வும் "நாறுகாயடைகூடும்வேறொருவன்றனுலெனநோக்கிநீ - தேறுபூதசெயற்கும் வேண்டுமொருத்தனென்றுதெளிந்திடே" எனவும் "இலங்கியதோற்றநிற்ற லீறி வையிசைதலாலே - நலங்கிளர்தோற்றநாசந் தனக்கிலாநாதன்வேண்டும்" எனவும் உலோகாயதன்கூற்றும், மறுப்பும்; சங்கற்பநிராகரணத்தில் "செயலுறுபூட்டைப் பலவகையுறுப்புமிலகியதொழில்போல் - ஐம்பொறிபுலன்களின்புறமன்றே" என வும் "அஞ்சுமொருகாற்றுஞ்சாதறிற்கழிவென்" எனவும் "ஒன்றின்பயனனியொன் றறியாதால்" எனவும் சங்கிராந்தவாதியின்கூற்றும், மறுப்பும் "மூலம்புரியட்டக ம்விகிர்தியாகிமூன்றாய்ப்பிரகிருதி - தூலசூக்கம்பரமாயச்சுத்தபுருடன்சந்நிதியில் - பாலன்சேட்டைபுரிந்துலகம்யோனிபலவாய்ப்பரந்தொடுங்கும்" எனவும் "இரண்டி னையும் - அருடனுருவாய்ச்சேட்டிப்பித்தறியுமமலனரனேயாம்" எனவும் சாங்கிய ன்கூற்றும், மறுப்பும் "இனையவாய்தலினிகழ்தருபயனவை - அந்தக்கரணமுந்தியு ணர்ந்திடும் - இவையகல்வுழிஇயைம்பொறிபுலனிகழா" எனவும் "மனுதியுமெய்யு யிர்ச்செயினும் - தனக்கிலை" எனவும் சங்கிராந்தவாதியின்கூற்றும், மறுப்பும் "கண் ணுலோசையுங்கந்தமுங்கருத - ஒண்ணுதென்னு முணர்வுடைமையினுல் - அவ்வப்பு லன்கட்கவ்வப்பொறிகள் -.செவ்விதினிறுவிச்சேர்ந்தவைநுகரும்" எனவும் "அறி ந்திடுமான்மாவொன்றையொன்றிறைலறிதலானும் - அறிந்தவைமறத்தலானுமறிவிக் கவறிதலானும் - அறிந்திடுந்தன்னையுந்தா னறியாமையானுந்தானே - அறிந்திடுமெறி வனன்றுமறிவிக்கவறிவனன்றே" எனவும் ஈஸ்வரவவிகாரியின்கூற்றும், மறுப்பும்; மாயைமாமாயைக்கு அப்பாற்பட்டுநின்ற நிட்களசிவத்தினிலக்கணம் "அப்பாலைக்கப் பாலைக்கப்பாலானையாருரிற்கண்டடியேனயர்த்தவாறே" என்னும் உண்மைத்திருவா க்கும் ஆகிய இவ்வேதுக்களால் உணர்க. "எவையுந்தானுய்" என்ற மாயாவாதியின் கூற்றை மறுத்து நிட்களசிவத்தினிலக்கணத்தை வற்புறுத்தியதெனக் கொள்ளலும் ஒன்று. இதுபிறர் தம்மதமேற்கொண்டு கனவு என்னுமதம். "அல்லையீதல்லையீதெ னமறைகளுமன்மைச் - சொல்லினுற்றுதித்திளைக்கு மிச்சுந்தரநாடற்கு" என முன் னர்க்கூறியசெய்யுளின்கருத்தும் இதுவேயெனக்கொள்க. (க)

## சிவசத்திவணக்கம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்

திருமகள்வலக்கண்வாக்கின்சேயிழையிடக்கண்ஞானப்
பெருமகணுதற்கணுகப்பெற்றுவான்செல்வங்கல்வி
யருமைவீடளிப்பாள்யாவளவளுயிர்த்துணைவன்காண
வொருமூலைமறைந்துநாணியொசிந்தபூங்கொம்பினின்றுள்.

(இ-ள்.) திரு மகள் வலக் கண் - பூமகளே வலக்கண்ணும், வாக்கின் சேயி ழை இடக்கண் - நாமகளே யிடக்கண்ணும், ஞானப் பெருமகள் நுதற் கண் ஆகப் பெற்று - பராஞானமாதே நெற்றிக்கண்ணுமாகப்பெற்று, வான் செல்வம் கல்வி அரு மை வீடு அளிப்பாள் யாவள் - பெருஞ் செல்வத்தையுங் கல்வியையும் பெறுதற்க ரிய மோட்சத்தையும் கொடுப்பவள் எவள், அவள் - அவ்விறைவியே, உயிர்த்துணை

வன் காண - தனதுயிர்போன்ற துணைவனாகிய சிவபெருமான் நோக்கியருள, ஒரு முலை மறைந்து நாணி ஒசிந்த பூங் கொம்பின் நின்றாள் - மூன்று திருத்தனங்களில் ஒரு திருத்தனமறைந்து நாணமிக்கூர்ந்து அலைவுண்ட பூங்கொம்பைப்போல நின்றருளினாள்.

"பரையாதிவிருப்ப[illegible]ந்தொழிலாகி யுலகமெலாம்படைத்துக்காத்து - வரையாதுதுடைத்துமறைத்தருளியவை நின்றுந் தன்வடிவுவேறாய் - உரையாதி பொருள்கடந்தவொருமுதல்வி" எனக்கூறியவாறு நின்ற சிற்சத்தி படைப்பாதித் தொழில்கட்கு மனோன்மணிமுதலிய சத்திகளாகப் பல வேறுவகைப்பட்டு நிற்றலால் இவையுபற்றிப் பூமகளை இச்சாசத்தியாக வுபசரித்து ஆன்மாக்களுக்குக் கன்மங்கழியும்வண்ணம் அதனை நுகர்விக்கும் நிலைத்தொழிலும், கன்மவொப்பு வருவிக்க மலங்களை முதிர்விக்கு மறைப்புத்தொழில் அந்நிலைத்தொழிலு ளடங்குதலால் அம்மறைப்புத்தொழிலும் ஆகிய இருதொழில்களையும ஒருசேர வுடைமை நோக்கித் திருமகளை வலக்கண் எனவும், நாமகளைக் கிரியாசத்தியாக வுபசரித்து அந்த ஆன்மாக்களுக்குக் கன்மங்கழியுமுகத்தால் மலபாகம்வரச்செய்யும் படைப்புத்தொழிலொன்றையுடைமைநோக்கிக் கலைமகளை யிடக்கண் எனவும், பந்தம் விடுவிக்கும் அருட்டொழிலும் அதனுளடங்கும் இளைப்பாற்றல் என்னும் சங்காரத்தொழிலும் ஆகிய இத்தொழில்களையும் ஒருசேரவுடைமைநோக்கி ஞானமாதை நுதற்கண்ணெனவும், இவ்வைந்து தொழில்களையும் ஆன்மாக்களுக்கு மலபாகம்வருவித்து உய்வித்தற் பொருட்டுடைய முதல்வி ஒருமுலைமறைந்து நின்றவளாதலாலவளைநோக்கி வான் செல்வங் கல்வி-அருமைவீடளிப்பாள் யாவளவள் எனவுங்கூறினர். படைப்பு முதலிய ஐந்தொழில்களையும் அவற்றால்வரும் பயன்களையும் "அழிப்பிளைப்பாற்றலாக்கமவ்வவர்கன்மமெல்லாம் - கழித்திடலுகரச்செய்தல் காப்பதுகன்மவொப்பிற் - றழித்திடன்மலங்களெல்லா மறைப்பருள்செய்திதானும்-பழிப்பொழிபந்தம்வீடு பார்த்திடினருளே யெல்லாம்" எனவருஞ் சித்தியாருட்காண்க. (உ)

## நூல்.

கதிர்மதிமிலைந்தவேணிக் கண்ணுதல்வருணனேய
வதிர்கடல்வறப்பச்செய் தவாடலீதனையானேய
[illegible]ர்மழையேழின்மேலுமுன்னைநான்முகிலும்போக்கி
மதுரைநான்மாடக்கூடலாக்கியவண்ணஞ்சொல்வாம்.

(இ-ள்.) கதிர் மதி மிலைந்த வேணி கண்ணுதல் - விளங்குஞ் சந்திரனை யணிந்த சடாமகுடத்தையுடைய சோமசுந்தரக்கடவுள், வருணன் ஏய அதிர் கடல் வறப்ப செய்த ஆடல் ஈது - வருணனேவிய ஒலிக்குங் கடல்வற்றச்செய்தருளிய திருவிளையாடலிது, அனையான் ஏய முதிர் மழை ஏழின்மேலும் முன்னை நால் முகிலும் போக்கி - அவ்வருணனேவியசூல்முதிர்ந்த ஏழுமேகங்களின்மேலும் முன்புபோலப் புட்கலாவர்த்தமுதலிய நான்குமேகங்களையுஞ்செலுத்தி, மதுரை நான்மாடக் கூடல் ஆக்கியவண்ணம் சொல்வாம் - மதுரையை நான்மாடக்கூடலாகச்செய்தருளியதிருவிளையாடலை இனிக்கூறுவாம்.

சரணடைந்தோரைக் காக்குங் கருணைக்கடல் என்னுங் கருத்துத்தோன்றக் கதிர்மதிமிலைந்தவேணிக்கண்ணுதல் என்றார். இது கருத்துடையணி. ஏவிய ஏய' [illegible]

எற்றுதெண்டிரைநீர்ச்சேர்ப்பன்றன்செயலிழுக்கிநாண
முற்றிருகண்ணுஞ்சேப்பவுடன்றெழுகோபசெந்தீப
பற்றிடவாகம்வெம்பிபரவையுமயாறும்வெந்து
வற்றிடவெகுண்டுநின்றான்மானமும்வலியுங்குன்றான்.

(இ-ள்.) எற்று தெண் திரை நீர் சேர்ப்பன் தன் செயல் இழுக்கி நாணம் உற்று - (கரையொடு) மோதுந் தெள்ளிய அலையையுடைய கடற்றுறைக்கு இறைவனாகிய வருணன் தனதுசெயலுக்குத் தவறுபாடுவந்தமையால்நாணங்கொண்டு,இரு கண்ணும் சேப்ப உடன்று எழு கோபச் செந் தீ பற்றிட - இரண்டு கண்களுஞ் சிவக்கக் கொதித்தெழுந்த கோபமாகிய செவந்நெருப்புமூள, ஆகம் வெம்பி - உடல்கருகி, பரவையும் யாறும் வெந்து வற்றிட - கடலும் ஆறும் (அத்தீப்பற்றுதலால்) வெந்து வற்ற, மானமும் வலியும் குன்றான - (தனது) மானமும் வன்மையு மாகிய இவற்றில் சிறிதுங் குறையானாகி, வெகுண்டு நின்றான் - கோபித்துநின்றான்.

நெருப்புத் தான்பற்றிய பொருளைக் கருகச்செய்தல் அதற்கு இயல்பு ஆதலால் தன்மையணிதோன்றக் கோபச்செந்தீபற்றிட ஆகம் வெம்பியெனவும், அதுநீ வடவாமுகாக்கினிபோல வுள்ளது என்பதுதோன்றப் பரவையும் யாறு வெந்து பற்றிட எனவும், அடியார்க்கு எளியன் என்பது மேகங்களையேவிய தனது செயலாற் றெளிந்து மீளவுங் கோபங்கொண்டது கன்மவொப்பு வருவிக்க மலங்களை முதிராவிக்கும் இறைவனது திரோதாயிசத்தியா லென்பதுதோன்ற வெகுண்டு நின்றான் எனவுங்கூறினர். இழுக்கி காரணப்பொருளில்வந்த வினையெச்சம். (ரு)

நளிர்புனன்மதுரைமூதூர்நாயகனாடறன்னைத்
தெளிகிலனாகிப்பின்னுஞ்செழுமுகிலேழுங்கூவிக்
குளிர்கடல்வறந்ததென்னக்குடித்தெழுந்திடித்துப்பெய்யா
வொளிவளர்மதுரைமுற்றுமொல்லெனக்களைமினென்றான.

(இ-ள்.) நளிர் புனல் மதுரை மூதூர் நாயகன் ஆடல் தன்னை தெளிகிலனாகி - பெரிய நீர்சூழ்ந்த மதுரையென்னும் தொன்றுதொட்டுள்ள திருநகரில எழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளின் திருவிளையாடலைச் சிறிதும் தெளியானாகி, பின்னும் செழு முகில் ஏழும் கூவி - மீளவுங் குறைவில்லாத ஏழுமேகங்களை அழைத்து, குளிர் கடல் வறந்தது என்ன குடித்து எழுந்து இடித்து பெய்யா - குளிர்ந்த கடல் சுவறியதென்று கண்டோர்சொல்ல நீர்குடித்து மேலெழுந்து இடித்துப் பெய்து, ஒளி வளர் மதுரை முற்றும் ஒல்லெனக் களைமின் என்றான் - புகழ்மிக்க மதுரையென்னுந் திருநகர்முழுமையும் விரைந்து சென்று அழியுங்களென்று ஏவினான்.

ஒளிபோலப்புகழும் பலருமறிய நிற்றலால் புகழை ஒளியென்றது உவமையாகுபெயர். (சு)

பொள்ளெனமேகமேழும்புகுந்துபார்தெரியமுந்நீர்ப்
ப்ள்ளமும்வறப்பமுற்றப்பருகிமெய்கருகிமின்னித்
தெள்ளருந்திசையும்வானுஞ்செவிடுறப்பிலமும்பாரும்
விள்ளமால்வரைகளெட்டும்வெடிபடமேருசாய.

(இ-ள்.) மேகம் ஏழும் பொள்ளென புகுந்து - ஏழுமேகங்களும் விரைந்து விற்சென்று, பார்தெரிய-நிலந்தோன்ற, முந்நீர் பள்ளமும் முற்ற வறப்பபருகி-

கடலாகியபள்ளமும் முற்றவற்ற நீர்குடித்து மேல் எழுந்து, மெய் கருகி மின்னி- உடல்கருகி மின்னல்வீசி, தெள்ளரும் திசையும் வானும் செவிடு உற - (கட்புலன்க ளுக்குத்) தோன்றுதற்கரிய எட்டுத்திசைகளும் வானுலகமும் செவிடுபடவும், பில மும் பாரும் விள்ள - பாதலமும் நிலவுலகும் பிளவுபடவும், மால்வரைகள் எட்டும் வெடிபட - பெரிய அட்டகுல பர்வதங்களும் துகள்படவும், மேருசாய - மகமேரு வேர்பறியவும்.

செய்மைக்கண்ணதாதலால் தெள்ளருந்திசை என்றார். (சு)

ஊழிநாள்வெடிக்குமண்டகடாகத்தினொலிபோலார்த்துப்
பாழிவானுருமுவீழப்பணாடவிமணிகள்சிந்தி
யாழிநீர்ஞாலந்தாங்குமராவுடலெள்ளியத்திக்கிற்
சூழிமால்யானைநின்றநிலைகெடத்துணுக்கங்கொள்ள,

(இ-ள்.) ஊழிநாள் வெடிக்கும் அண்ட கடாகத்தின் ஒலிபோல் ஆர்த்து பாழிவானுருமு வீழ - ஊழிக்காலத்தில் பிளவுபட்டுடையும் அண்டகடாகத்தின் ஒலிபோலக் கோஷித்துப் பெரிய இடியேறுகள்விழவும், ஆழி நீர் ஞாலம் தாங்கும் அராபணாடவி மணிகள் சிந்தி உடல் எள்ளிய - கடல்சூழ்ந்த உலகைச்சுமக்கும் ஆதி சேடன் ஆயிரம்படங்களிலுமுள்ள இரத்தினங்களை (திக்குகள்தோறும்) சிதறி நிலை பெயராத தனது உடலை நெளிக்கவும, திக்கில் சூழிமால் யானை நின்ற நிலைகெட துணுக்கம கொள்ள - திக்குகள்தோறும் நின்ற முகபடாத்தையுடைய பெரிய அட் டகஜங்கள் தாம் கலங்காதுநின்ற நிலைகெடும்படி நடுக்கங்கொள்ளவும்.

நெளிய முதனிலை திரியாதுவந்த பிறவினை வினையெச்சம் " குடிபொன்றி " எனவருதலிற்காண்க. (எ)

வெள்ளியநீறுபூத்துமுழவெனவீங்குகாய்போற்
றெள்ளியவாலிசிந்தத்திரண்டதிண்பளிக்குத்தூண்போ
லொள்ளியதாரைசோரவும்பர்மீன்கணங்களோடுந்
துள்ளியதிரையிலாடுமீன்கணுந்துடித்துவீழ.

(இ-ள்.) வெள்ளிய நீறுபூத்து முழவு என வீங்கு காய்போல் தெள்ளிய ஆலி சிந்த - வெண்ணிறத்தையுடைய நீற்றினைப் புறத்திற்பூத்து மத்தளத்தைப்போ லப் பருத்தபூசனிக்காய்போல்த தெளிந்த மழைத்துளிகளைச்சிந்தவும், திரண்ட திண் பளிக்குத் தூண்போல் ஒள்ளிய தாரைசோர - திரண்ட திண்ணியபளிங்காலாகிய தூண்களைப்போல ஒளிவாய்ந்ததாரைகள்சோரவும், உம்பர் மீன் கணங்களோடும் துள்ளிய திரையிலாடும் மீன்கணம் துடித்து வீழ - மேலிடத்துள்ள நக்ஷத்திரங்க ளாகியநாண்மீன்கூட்டங்களோடும் துள்ளிச்செல்லும் அலைகளிலாடும் மீன்கூட்டங் கள் தாவிவீழவும்.

வெள்ளியநீறுபூத்து என்னுங் குறிப்பால் காய் - என்றதைக் கல்யாணபூச ணிக்காய் எனக்கொள்க. (அ)

ஆர்த்தெழுகொண்மூவேழுஞ்சராசரமனைத்துஞ்சூழ்ந்து
போர்த்தனஞாலமுண்ணப்புக்கதோர்வடிவங்கொண்டு
தீர்த்தனில்விசும்பும்பாருந்திசைகளுந்தெரியாவாகப்
பார்த்தகண்ணுழையாவாகப்பரந்திருள்கான்றவன்றே.

(இ-ள்.) ஆர்த்து எழுகொண்மூ ஏழும் சராசரம் அனைத்தும் சூழ்ந்து போர்த்தன - கோஷித்து மேலெழுந்த சப்தமேகங்களும் இயங்கியற்பொருளும் நிலையியற்பொருளுமாகிய எல்லா உயிர்களையும் சூழ்ந்து புறத்திற்போர்த்தன, ஞாலம் உண்ண புக்கது ஓர் வடிவம் கொண்ட நீர்த்தனில் - உலகமுற்றும் அழிக்கும்படி சென்ற ஓர் திருவுருவத்தைக் கொண்டருளிய பிரளயகால உருத்திரமூர்த்தியைப் போல, விசும்பும் பாரும திசைகளும் தெரியா ஆக பார்த்தகண் நுழையா ஆக பரந்த இருள் கான்ற - விண்ணுலகமும் நிலவுலகமும் எட்டுத்திக்குகளும் மறைபடவும் பார்த்தகண் இருள் நெருக்கத்தாற் செல்லாதொழியவும் பரவிய இருளை யம்மேகங்கள் வெளிப்படுத்தின.

இல் ஒப்புப்பொருளில்வந்த ஐந்தனுருபு. (கூ)

பைஞ்சுடரெறிக்கும்பச்சைகாரொளிபரப்புநீலம்
புஞ்சவாளுடுக்களன்னநித்திலம்பொன்னங்குப்பை
செஞ்சுடர்மணிகடுப்புச்சிதறுவகணவரோடும்
விஞ்சையர்மகளிரூடிவெறுத்தெறிகலன்கள்போல.

(இ-ள்.) பைஞ்சுடர் எறிக்கும் பச்சை - பசியகிரணங்களைவீசு மாரகதங்களையும், கார் ஒளி பரப்பு நீலம்-கரிய ஒளியைவீசும் நீலங்களையும், புஞ்சம் வாள் உடுக்கள் அன்ன நித்திலம் - திரண்ட ஒள்ளிய நக்ஷத்திரங்களையொத்த முத்துகளையும், பொன்னங்குப்பை - பொற்குப்பைகளையும், செஞ்சுடர் மணிகள் துப்பு - செவந்த கிரணங்களையுடைய பதுமராகங்களையும் பவளங்களையும், விஞ்சையர் மகளிர் கணவரோடும் ஊடி வெறுத்து எறிகலன்கள் போல சிதறுவ - விஞ்சைஸ்திரீகள் தத்தமக்குரிய கணவர்களோடும்பிணங்கி வெறுத்துக்கழற்றிவீசின ஆபரணங்களைப்போல (ஏழுமேகங்களும் திசைகள்தோறுஞ்) சிந்தின.

மரகதம், நீலம், முத்து, பொன், பதுமராகம், பவளம், பொன் இவைகளைச் சொரிந்தன என்றமையால் ஏழுமேகங்களுள் சம்வர்த்தம், புட்கலாவர்த்தம் என்னும் இரண்டுமேகங்களும் எனக்கொள்க. (கo)

கடியகாலுதைப்பப்பெய்யுங்கடுஞ்செலவெழிலிமாடக்
கொடியநீணகரைச்சூழ்ந்துபுதைத்தலுங்கோலொன்றோச்சிப்
படியெலாம்புரக்குங்கோனுநகருளார்பலருஞாலம்
மடியுநாளிதுவேயென்னுமயங்கினருயங்கினரே.

(இ-ள்.) கடியகால் உதைப்ப கடும் செலவு பெய்யும் எழிலி - அச்சத்தைத் தரும் பெருங்காற்றடித்துத்தாக்க விரைந்துசெல்லும் செலவினையுடையவாகிப் பெய்யாநின்ற ஏழுமேகங்களும், கொடிய மாடம் நீள் நகரை சூழ்ந்து புதைத்தலும்- கொடிகளையுடைய மாடங்கள் நெருங்கிய அகன்ற மதுரைநகர்ப்புறத்தைச்சூழ்ந்து போர்க்க, கோல் ஒன்று ஓச்சி படி எல்லாம் புரக்கும் கோனும் நகர் உள்ளார் பலர் உம் - ஒப்பில்லாத செங்கோலைச்செலுத்தி உலகமுற்றும் பாதுகாக்கும் அபிடேகபாண்டியனும் அந்நகரிலுள்ளோர் எவரும், ஞாலம் மடியுநாள் இதுவே என்னுமயங்கினர் உயங்கினர் - உலகமுற்றும அழியும் சங்காரகாலம் இக்காலமே என்று மயங்கிச்சோர்ந்தார்கள்.

கடிய, கொடிய உரிச்சொல்லடியாகவும் பொருளடியாகவும்பிறந்த குறிப்புவினைப்பெயரெச்சங்கள். கடிச்செலவு - கடுஞ்செல்வு உரிச்சொற்றிரிபு. (கக)

கண்ணுதன்மூர்த்திதானேயின்னமுங்காக்குமென்றுப்
புண்ணியநகராரோடும்பொருக்கெனக்கோயிலெய்தி
விண்ணிழிவிமானவாழ்க்கைவிடையவனடிக்கீழ்வீழ்ந்தா
னண்ணலாராடன்மூன்றுமறிந்துகைகண்டவேந்தன்.

(இ-ள்.) அண்ணலார் ஆடல் மூன்றும் அறிந்து கைகண்ட வேந்தன்-(தனது நிமித்தம்) சோமசுந்தரக்கடவுள் செய்தருளிய திருவிளையாடலை முன்னமேதெரிந்து கைவந்த அபிடேகபாண்டியன், கண்ணுதல் மூர்த்தி தானே இன்னமும் காக்கும் என்று-நெற்றியின்கண் அழற்கண்ணையுடைய அச்சோமசுந்தரமூர்த்தியே இன்னமுங் காத்தருளுவானென்று, புண்ணியநகராரோடும் பொருக்கென கோயில் எய்தி - புண்ணியதலமாகிய மதுரையிலுள்ளோரோடும் விரைந்து திருக்கோயிலையடைந்து, விண் இழி விமான வாழ்க்கை விடையவன் அடிக்கீழ் வீழ்ந்தான் - விண்ணுலகினின்றும் வந்த இந்திரவிமானத்தின்கண் பெருவாழ்க்கையையுடைய அச்சோமசுந்தரக்கடவுளினுடைய திருவடிக்கீழ்த் தண்டாகாரமாக வீழ்ந்தான்.

மேகங்களொருசேரப் பெய்தலைநோக்கி இது ஊழிக்காலமோ என்று சிறிதுமயங்கியபாண்டியன் இடுக்கண் யாதுவரினும் அதனைச்சென்று முறையிடுதற்கு முன்னே யொழிக்கும் இறைவன் ஒருவன் நமக்கு உளன் என்பதை முன்னமேதெரிந்துணர்ந்தவன் ஆதலால் அண்ணலாராடல்முன்னே யறிந்துகைகண்டவேந்தன் எனவும், அவ்விறைவன் தனது குறையை முற்றுந் தவிர்த்தொழித்தல் திண்ணம் ஆதலால் அடிக்கீழ் வீழ்ந்தான் எனவுங்கூறினார். (கஉ)

விடையினையாலமுண்டமிடற்றினைகங்கைதாங்குஞ்
சடையினைகூற்றைவென்றதாளினைமேருச்சாபப்
படையினையடியேந்துன்பப்பாட்டினைநீக்கியாளு
நடையினையாகியெங்கணல்லுயிர்காத்தல்வேண்டும்.

(இ-ள்.) விடையினை-இடபவூர்தியையுடையாய், ஆலம் உண்ட மிடற்றினை-விடமுண்ட ஸ்ரீகண்டத்தையுடையாய், கங்கைதாங்கும் சடையினை - கங்கையைச் சுமந்த சடாமகுடத்தையுடையாய், கூற்றைவென்ற தாளினை - இயமனையுதைத்த திருவடியை யுடையாய், மேருச்சாபப் படையினை - மகமேருவாகிய விற்படையையுடையாய், அடியேம் துன்பப்பாட்டினை நீக்கியாளும் நடையினையாகி-அடியேமாகிய எங்களது துன்பமிகுதியைநீக்கியாட்கொண்டருளும் நடையையுடையாயாகி, எங்கள் நல் உயிர் காத்தல்வேண்டும் - எங்களது நல்ல உயிர்களைக் காத்தருளுதல்வேண்டும்.

விடையினை, ஆலமுண்டமிடற்றினை, கங்கைதாங்குஞ்சடையினை, கூற்றைவென்றதாளினை, மேருச்சாபப்படையினை எனத்தனது அபிப்பிராயத்தோடுகூடிய விசேஷியங்களை அரசன் கூறியது குடிகளோடு தான்படும் துன்பத்தைநீக்கிக் காத்தருளவேண்டும் என்னுங்கருத்தை யுட்கொண்டிருத்தலால் கருத்துடையவடைகொளியணி தேயுப்பி[illegible]த்திலழிதற்கு அஞ்சியடைந்த அறக்கடவுளை விடையாகக்கொண்டவன் எ[illegible]திருமால்முதலிய தேவர்களுய்ய ஆலமுண்ட கண்டன் எனவும், உலகம் யாவும் அழிதற்கஞ்சிச் சரண்புகுந்த அயன்முதலியோர்பொருட்டுக் கங்கை தாங்குஞ் சடையன் எனவும், இயமனினின்று மார்க்கண்டேயரைத் தப்புவித்த பொருட்டுக் கூற்றைவென்ற தாளினன் எனவும், அயன்முதலியபலர்க்கும் திரிபுரிகள்செய்யுந் துன்பங்களையொழித்தற்பொருட்டு மேருச்சாபப்படையினன் எ

வும் வருதல் விசேஷியங்கள். இங்குக்கூறிய வரலாறுகள் முன்னர்ப்பல இடங்களி லும் வருதல்காண்க. (கங)

என்னலுந்தென்னர்க்கென்று மெய்தியவிடுக்கண்டீர்க்கு
முன்னவன்முன்போனான்கு முகிலேயுநோக்கியின்ன
தொன்னகரெல்லைநான்குஞ் சூழ்ந்துநான்மாடமாகி
யிந்நெடுமாரியேழும் விலக்குமினெனவிடுத்தான்.

(இ-ள்.) என்னலும் - என்று முறையிடவும், தென்னர்க்கு என்றும் எய்திய இடுக்கண் தீர்க்கும் முன்னவன்-பாண்டியர்களுக்கு எப்பொழுதும் வரும் துன்பத்தைத் தீர்த்தலையே கடனாகக்கொண்ட சோமசுந்தரக்கடவுள், முன்போல் நான்கு முகிலையும் நோக்கி - முன்புபோலப் புட்கலாவர்த்தமுதலிய நான்குமேகங்களை யும்பார்த்தருளி, இன்னதொல் நகர் நான்கு எல்லையும் சூழ்ந்து நான்மாடமாகி- தொன்றுதொட்டுள்ள இந்த மதுரைநகரின் நான்குதிசை எல்லையிலும் புறத்திற்சூழ்ந்து நான்குமாடங்களாகி, இ நெடு மாரி ஏழும் விலக்குமின் எனவிடுத்தான் - இந்த ஏழு பெரியமேகங்களையும் விலக்குங்களென்று ஏவியருளினர். (கச)

வந்துநான்மாடமாகிவளைந்துநாற்றிசையுஞ்சூழ்ந்து
சந்துவாய்தெரியாதொன்றித்தாமோருருடிலாய்மாடப்
பந்திகோபுரஞ்செய்குன்றங்கால்கள்போற்பரிப்பப்போர்த்த
விந்துவார்சடையோனேயவெழிலிமாநகரமெங்கும்.

(இ-ள்.) இந்துவார் சடையோன் ஏய எழிலி வந்து-சந்திரனையணிந்த சடாமகுடத்தையுடைய சோமசுந்தரக்கடவுள் ஏவிய நான்கு மேகங்களும்வந்து, நான் மாடமாகி வளைந்து நாற்றிசையுஞ் சூழ்ந்து - நான்குமாடங்களாகி (இரண்டுயோசனைதூரம்) வளைந்து நாற்றிசையிலுஞ் சூழ்ந்து, தாம் ஒரு குடிலாய் சந்து வாய்தெரியாது ஒன்றி-தாம் ஒருகுடிசையாகிப் பொருத்துவாய் சிறிதும் தெரியாமல் ஒன்றுபட்டு, மாடப்பந்தி கோபுரம் செய்குன்றம் கால்கள்போல் பரிப்ப - மாடவரிசைகளும் கோபுரங்களும் செய்குன்றங்களும் கால்கள்போலச்சுமக்க, மாநகரம் எங்கும் போர்த்த - பெரிய அந்நகர்முற்றும் போர்த்தன. (கரு)

அன்னநான்மாடத்துள்ளுநகருளாரமைச்சர்வேந்தன்
றன்னநாற்கருவித்தானைசராசரம்பிறவுந்தாழ்ந்து
முன்னைநாடனினுமின்பமூழ்கிநன்கிருந்தாருழிற்
பொன்னனாள்பாகன்றாளிற்புக்கமர்ந்திருந்தாரொத்தார்.

(இ-ள்.) அன்ன நான் மாடத்து உள்ளும்-அந்தநான்மாடங்களினுள்ளும், நகருளார் அமைச்சர் - அந்நகரிலுள்ளாரும் மந்திரிகளும், வேந்தன் தன்னநால் கருவித்தானை - அரசனும் அவனுடைய நான்குசேனைகளும், சராசரம் பிறவுந் தாழ்ந்து- இயங்கியற்பொருளும் நிலையியற்பொருளுமான சரம் அசரங்களும் மற்றுள்ளனவுந் தங்கி, முன்னை நாள் தனினும் இன்பம் மூழ்கி நன்கு இருந்தார்-முன்னாளில் உண்டாகிய இன்பத்தினும் அளவறுத்தற்கரிய இன்பத்திலழுந்தி யிடையூறின்றி இருந்தாராதலால், பொன் அன் னாள்பாகன் தாளில் ஊழின் புக்கு அமர்ந்திருந்தார் ஒத்தார்- உமாதேவியாரை இடப்பாகத்திலுடைய சிவபிரான் திருவடிக்கீழ் முறைப்படி இரண்டறக்கலந்தவரையொத்தவராயினர்.

வருணன்விட்டகடலை வற்றச்செய்தகாலத்தில் வந்தமகிழ்ச்சியினும் பெரிதாதலின் முன்னைநாள்தனினும் எனவும், சரியைமுதலிய சிவபுண்ணிய முதிர்ச்சியால் இருவினையொப்பு மலபாகம்வந்து திருவருள்மேலிட்டாற் கூடுவதாதலில் ஊழின் எனவுங்கூறினார். அகரவுருபு பன்மைப்பொருட்கண்வந்த ஆறனுருபு. (கசு)

கழைகெழுவரையினுச்சிகவிழ்கின்றபுயல்போற்கார்சூழ்ந்
திழைமணிமாடத்தும்பரெறிதுளியுடைந்துதுள்ளத்
தழைகடல்வறப்பவாங்கித்தம்முடல்வறப்பப்பெய்து
மழைகளும்வெள்கிநின்றவருணனும்வெள்கினான்.

(இ-ள்.) கழைகெழு வரையின் உச்சி கவிழ்கின்ற புயல்போல் - மூங்கில்கள் நெருங்கிய மலையினுச்சியிற்பெய்கின்ற மழைத்துளிகள் உடைந்து துள்ளுவது போல, கார்சூழ்ந்து - மேகங்கள்சூழ்ந்து, மணி இழை மாடத்து உம்பர் எறி துளி உடைந்து துள்ள - இரத்தினங்களழுத்திய மாடங்களின்மேல் பெய்யும் மழைத்துளிகள் உடைந்து சிதறித்துள்ள, தழைகடல் வறப்பவாங்கி தம் உடல் வறப்பப் பெய்து மழைகளும் வெள்கி நின்ற - பெருக்கமுற்றகடல்வற்றமுகந்து தமது சரீரங்கள் பசையறச்சொரிந்து மேகங்களும் நாணிநின்றன, வருணனும் வெள்கினான் - (தனதுசெயல் முற்றாமையால்) வருணனும் நாணமேலிட்டு அசைவறநின்றுவிட்டான்.

உவமைக்கும் பொருட்கும் ஒற்றுமையுண்மையால் பொருளின் தொழிலை யுவமைக்கு ஏற்றிக்கூறினும். (கஎ)

நடுங்கினன்கழிந்தவச்சநாணமீதூரமான
மொடுங்கினனுள்ளத்துள்ளோருவகைவந்தெய்தப்பொற்பூந்
தடங்கரைகுறுகாமுன்னேய்தணிந்துபின்றோய்ந்துபாச
மடங்கினன்மடங்காவன்பின்வள்ளலைப்பூசைசெய்வான்.

(இ-ள்.) நடுங்கினன் கழிந்த அச்சம் நாணம்மீதூர மானம் ஒடுங்கினன்-நடுங்கி மிகுந்த அச்சமும் நாணமும் அதிகரிக்கத் தனது மானம் ஒடுங்கி, உள்ளத்துள் ஓர் உவகை வந்து எய்த-தனது மனத்துள்ளே தன்னையறியாத ஒருமகிழ்ச்சி இடையறுதடைய, பொற்பூதடங் கரை குறுகாமுன் நோய்தணிந்து - பொற்றாமரைத்தீர்த்தக்கரையை யடைதற்குமுன்னே நோயினின்றும் நீங்கி, பின்தோய்ந்து பாசம் மடங்கினன் - பின்பு நீராடித் தன்னினின்றுநீங்காத அவிச்சையுங்கெட நீங்கி, மடங்கா அன்பின் வள்ளலைப்பூசைசெய்வான் - நிலைதளராத பேரன்போடு சோமசுந்தரக்கடவுளைப் பூசிக்கத்தொடங்கினான்.

நடுங்கினன் ஒடுங்கினன் மடங்கினன் முற்றெச்சங்கள். (கஅ)

புனிதநீறுடிக்கண்டிபூண்டுவான்கங்கையாதி
வனிதையர்பசும்பொற்கும்பவாசநீர்வடித்துநீட்டப்
பனிமலர்சந்தங்கந்தமணிக்கலம்பசும்பொன்றூட்
யினையனபிறவுமின்றுகற்பகமெடுத்துக்காட்ட.

(இ-ள்.) புனிதம் நீறுடி கண்டி பூண்டு-மாசில்லாத திருநீறணிந்து உருத்திராட்சக்கண்டிகைதரித்து, வான் கங்கை ஆதி வனிதையர் பசும்பொற் கும்பம் வாசம் நீர்வடித்து நீட்ட - ஆகாயகங்கைமுதலிய பெண்கள் பசியபொன்னாலாகிய கல

சத்தில் வாசம் ஊட்டிய நீரைவடித்து ஒருபால்தரவும், பனிமலர் சந்தம் சுந்தம் ம ிக்கலம் பசும் பொன் ஆடை இனையன பிறவும் ஈன்று கற்பகம் கொடுத்துக்கா தண்ணிய மலரையும் சந்தனக்குழம்பையும் வாசனைத்திரவியங்களையும இரத்தினமழுத்திய பொன்னாபரணங்களையும் பசியபீதாம்பரத்தையும் இவைபோன்ற பிறவற்றையும் பெற்றுக் கற்பகம் ஒருபால் எடுத்துக்கொடுக்கவும்.

கங்கைமுதலியவற்றை முன்னர்க்காண்க. (கக)

ஐங்கனியமுதமைந்துகௌவியமமுதுதூபஞ்
செங்கதிர்விளக்கமின்னதேவராண்ெ ாடுப்பச்சேற்க
ணங்கைதன்பதியைப்பூசித்தாயிரநாமங்கூறிப்
பைங்கதிர்முத்தஞ்சாத்தித்தொழுதடிபணிந்துநின்றான்.

(இ-ள்.) ஐங்கனி அமுதம் ஐந்து கௌவியம் அமுது தூபம் செங்கதிர் விளக்கம் இன்ன தேவர் ஆன்கொடுப்ப - வாழைக்கனிமுதலிய ஐந்துகனிகளும் பஞ்சாமிர்தங்களும் பஞ்சகௌவியங்களும் திருவமுதும் தூபமும் செவந்த ஒளியையுடைய தீபமும் ஆகிய இவ்வகள்போன்ற பிறவற்றைக் காமதேனு ஒருபால் வழங்கவும், சேற்கண் நங்கை தன்பதியை பூசித்து - அங்கயற்கண்ணியார் இறைவராகிய சோமசுந்தரக்கடவுளைப் பூசனைசெய்து, ஆயிரம் நாமம் கூறி பைங்கதிர் முத்தம் சாத்தி தொழுது அடிபணிந்து நின்றான் - ஆயிரந்திருநாமங்களையும் எடுத்துக்கூறி ஒவ்வொரு திருநாமங்களுக்குப் பசிய ஒளிவாய்ந்த முத்துகளைச்சாத்தித்துதித்துத் திருவடியைவணங்கி (அவ்வருணன்) நின்றான்.

ஐந்துகனி-வாழைக்கனி, மாங்கனி, பலாக்கனி, இவற்றோடுதக்க இரண்டு கனிகளைக் கூட்டிப் பொருள் கொள்க. (உ0)

அருச்சனைபுவந்தவாதியமலனியாதுவேண்டிற்
றுரைத்தியென்றேதநீக்கோனெல்லைதாழ்ந்தொன்றினுங்
களைத்திடவரியவிந்தக்கடியவென்வயிற்றுநோய்நின்
றிரைத்தடமாடியின்னேதீர்ந்திடப்பெற்றேனெந்தாய்.

(இ-ள்.) அருச்சனை உவந்த ஆதி அமலன்-(அவன்செய்த) அருச்சனையை விரும்பியருளிய சோமசுந்தரக்கடவுள், நீ வேண்டிற்று யாது உரைத்தி என்று ஓது - நீ விரும்பியது யாது சொல்வாய் என்றுவினவ, நீர் கோன் எல்லை தாழ்ந்து - அவ்வருணன் விரைவில்வணங்கி, ஒன்றினும் களைத்திட அரிய இந்தக் கடிய என்வயிற்றுநோய்-மணிமந்திர ஔஷதமுதலியவற்றில் ஒன்றினாலும் நீங்குதலில்லாத இந்தக் கொடிய எனது வயிற்றுநோய், எந்தாய் - என்தந்தையே, நின் திரை தடம் ஆடி இன்னே தீர்ந்திடப் பெற்றேன்-உனது அலைதலையுடைய பொற்றாமரைத்தீர்த்தத்தில் நீராடி இப்பொழுதே தீரப்பெற்றேன்.

அருச்சனை அருள்செய்யும் இறைவனது பணியாய் ஒழுக்கமுதலிய அங்கங்கட்கு அங்கியாய்நிற்றலால் அவனேயதனையேற்று அருள்புரிகின்றவனாதலால் உவந்த ஆதி என்றார் "மன்மதுநினையவர்க்கு வழுத்தமந்திரங்கள்சொல்ல, இனமலர் கையிற்கொண்டங் கிச்சித்ததெய்வம்போற்றிச், சினமுதலகற்றிவாழுஞ் செயலறமானவியார்க்கு, மூனமொருதெய்வமெங்குஞ் செயற்குமுன்னிலையாமன்றே" என வருஞ்சித்தியாரிற்காண்க. இன்னே இனியென்னும் இடைச்சொல்லின் திரிபு. (உக)

ஷை வேறு.

வேதமுதல்கலைகாட்சிமுதலளவைவிரிஞ்சன்முதல்விண்ணோர்செய்யுஞ்
சோதனையுளகப்படாச்சோதியுனைச்சோதிக்கத்துணிந்தேனந்தோ [சை
பேதைமையேனிடத்தென்னகுணங்கண்டென்பிணிதீர்த்தென்பெற்றாயா
கோதமிலாய்குற்றமேகுணமாகக்கொள்வதுநின்குணமோவையா.

(இ-ள்.) வேதமுதல் கலை காட்சி முதல் அளவை விரிஞ்சன் முதல் விண்ணோர் செய்யும் சோதனை உள் அகப்படாத சோதி - வேதமுதலிய நூல்களும் காட்சியும் முதலிய அளவைகளால் பிரமன்முதலிய தேவர்களாராயும் ஆராய்ச்சியுள் அகப்படாத பேரொளியே, அந்தோ உன்னை சோதிக்க துணிந்தேன் - ஐயோ உனது நிலைமையை ஆராய நான் துணிந்தேன், பேதைமையேன் இடத்து என்ன குணம் கண்டு என்பிணிதீர்த்து என்பெற்றாய் - (அத்தன்மையையுடைய) அறிவில்லேனிடத்து என்னகுணத்தைக்கண்டு என்னுடைய நோயைத்தீர்த்து என்னபயன்பெற்றாய், ஆசை கோதம் இலாய் - விருப்பும் வெறுப்புமில்லாத பெருமானே, ஐயா குற்றமே குணம் ஆக கொள்வது நின்குணமோ - ஐயனே (அடியார்கள்செய்யும்) குற்றத்தைக் குணமாகக்கொண்டருள்வது நினதுகுணமோ (கூறாய்.)

அளவை பலவகைப்படினும் காட்சி, அனுமானம், ஆகமம் என மூன்றனுளடங்குதலால் வேதமுதல்கலை என்றது ஆகமவளவையையும், முதலளவை என்றது அநுமானத்தையும் எனக்கொள்க. முதல் விண்ணோர் என்றது திருமாலையும், இந்திரனையும் எனக்கொள்க. அயன்முதலிய இவர்கள் தத்தம் போதச்செயலால் சோதிக்கத்தொடங்கினவர்என்பான். செய்யுஞ்சோதனையுளகப்படாச்சோதியெனவும், யானும் என்போதத்தால் சோதிக்கத்துணிந்தேனென்பான் துணிந்தேனந்தோ எனவும், அவிச்சைவசத்தனாயுள்ள என்னிடத்து ஒழுக்கமுதலிய பதினாறு குணங்களுள் யாதுகண்டாய் என்பான் பேதைமையேனிடத்தென்னகுணங்கண்டென் பிணிதீர்த்தென்பெற்றாய் எனவும், நீவிருப்பு வெறுப்பு இயல்பாகவே யிகந்தோய் ஆதலால் அடியார்செய்யும் அபராதத்தைக் குணமாகக்கொள்வது உன்கடமையென்பான் ஆசைகோதமிலாய் குற்றமே குணமாகக்கொள்வது நின்குணமோ வையா எனவுங் கூறினான். "அவையெல்லாம் அளவைகாண்டல் கருதலுரையென் றிம்மூன்றினடங் கிடுமே" எனவும்' "மறையினானயனான்மாலோன் மனத்தினான்வாக்கான்மற்றுங், குறைவிலாவளவினாலுங் கூறொணாதாகிநின்ற, இறைவனார்"எனவும், "ஒழுக்கமன்பருளாசாரமுபசாரமுறவுசீலம், வழுக்கிலாத்தவந்தானங்கள் வந்தித்தல்வணங்கல்வாய்மை, அழுக்கிலாத்துறவடக்க மறிவொடர்ச்சித்தலாதி, இழுக்கிலாவறங்களானால் இரங்குவான்பணியறங்கள்" எனவும், "அரனடிக்கன்பர்செய்யும் பாவமேயறமதாகும், பரனடிக்கன்பிலாதார் புண்ணியம்பாவமாகும், வரமுடைத்தக்கன்செய்த மாவேள்விதீமையாகி, நரரினிற்பாலன்செய்த பாதகநன்மையாய்த்தே" எனவும் சித்தியாரில் வருதலை முறையாகக்காண்க. (உஉ)

பொன்னகரான்காலந்தாழ்த்துனை யருச்சித்தயர்ச்சியொடும்போனவாறு, மென்னையான்வினவியதும்வலாரியிறைகொடுத்ததுமவ்விறைக்குநேர்யான், பின்னைவினாயதுமவன்சொல்வழியுன்னைச்சோதித்தபெற்றிதானு, முன்னவனேயுன்னருளாலென்பிணிக்குமருந்தாகிமுடிந்தவாறே.

(இ-ள்.) பொன் நகரான் காலம் தாழ்த்து உனை அருச்சித்து அயர்ச்சியொடும் போன ஆறும் - பொன்னுலகையுடைய இந்திரன் அமைய நோக்கி யுன்னை யரு

ச்சனைசெய்து சோர்வோடும் தன்னகரத்திற்குச் சென்றவனையும், என் என யான் வினவியதும் - அச்சோர்வுநோக்கிக் காரணமென்னவென்று நான் வினவியதும், வலாரி இறைகொடுத்ததும் (அதற்கு) இந்திரன் விடைகொடுத்ததும், அ இறைக்கு நேர் யான் பின்னைவினவியதும் - அந்தவிடைக்குநேராக யான் மீளவினவியதும், அவன் சொல்வழி உன்னைசோதித்த பெற்றிதானும் - அவன்விடைவழியில்நின்று உன்னைச்சோதித்த தன்மையும் ஆகிய இவற்றுளொவ்வொன்றுமே, முன்னவனே உன் அருளால் என்பிணிக்கு மருந்து ஆகி முடிந்த ஆறு-யாவர்க்கு முதல்வனே யுனது திருவருளால் எனது நோய்க்கு மருந்தாய் முடிந்தவகையாம்.

இந்திரன் விடைகொடுத்தது பதியிலக்கணமும் பதியினருள்வழிப்படும் அடியாரிலக்கணமும் ஆதலால் புண்ணியமுதிர்ச்சியால் விரும்பிக்கேட்டலும், வினவியது அதில் ஏகாக்கிரசித்தனாய்நின்று அடியார்க்கு அருளும் பதியினுண்மையை யாராய்தலினாலாதலில் சிந்தித்தலும், சோதித்தது பதியினுண்மை யித்தன்மையதென்று ஆராய்ந்தவழிப் பசுஞான சுதந்தரமினமுடையது எனத் தெளிதலாதலில் தெளிதலும் ஆகிய இம்மூன்றும் உண்மைஞானங்கள் ஆதலால் உடற்பிணியுமின்றி யுயிர்ப்பிணியையும் அதனுள் அடக்கி யொவ்வொன்றும் என்பிணிக்கு மருந்தாகி முடிந்தவாறேஎனவும், இம்மூன்று நிகழ்தற்கு ஞானாசிரியனையின்றி நிகழாவாதலால் அவன் சொல்வழி யுன்னைச்சோதித்த பெற்றியெனவுங்கூறினான், "கேட்டலுடன்சிந்தித்த றெளிதனிட்டை ளைத்தலெனவீரிரண்டாங்கிளக்கின்ஞானம், வீட்டையடைந்திடுவார்" எனச்சித்தியாரில் வருதல்காண்க. (௨௩)

ஆறுமதிமுடியணிந்தவருட்கடலேவயிற்றுநோயன்றிமேனாண்
மாறுபடுமிருவினையுமலவலியுங்கெடவீட்டின்வழியும்பெறறேன்
வேறினிமந்திரமென்னைமணியென்னைமருந்தென்னைமெய்மையாகத்
தேறுமவர்க்கிப்புனிததீர்த்தமேபிணியனைத்துந்தீர்ப்பதன்றே.

(இ-ள்.) ஆறுமதிமுடி அணிந்த அருள் கடலே வயிற்று நோய் அன்றி - கங்கையையும் சந்திரனையும் சடையிலணிந்த கிருபாசமுத்திரமே எனது வயிற்றுநோயல்லாமலும், மேல் நாள் மாறுபடும் இருவினையும் மலவலியும கெடவீட்டின் வழியும்பெற்றேன் - அநாதியே என்னுடன் மாறிய இருவினைகளும் மலவன்மையுங்கெட மோட்சவழியையும்பெற்றேன், இனிவேறு மந்திரம் என்னை மணி என்னை மருந்து என்னை - இனிவேறு மந்திரம் யாதுளது மணி யாதுளது மருந்து யாதுளது, மெய்மையாக தேறுமவர்க்கு இப்புனிததீர்த்தமே பிணி அனைத்தும் தீர்ப்பது அன்றோ - உண்மையாகத் தெளிந்தவர்க்கு இந்தப்பரிசுத்தமாகிய பொற்றாமரைத்தீர்த்தமே நோய்முற்றுந்தீர்ப்பதல்லவா.

நோயுற்ற ஒருவனுக்கு அந்நோய்தீர்த்தற்கு மணி, மந்திரம், ஔடதம், சாதனம் ஆதலால் வேறினி மந்திரமென்னை மணியென்னை மருந்தென்னையென்றான். மணி என்றது நோயுற்றான் நோய்தீர்த்தற்குச் செபித்தலெனச் சிலர்கூறுவர். மந்திரமே செபித்தலிலடங்குதலின் மணி என்பது செபித்தல் அன்று நோய்தீர்க்கும் ஒருவகைக்கல்லெனச் சிலர் கூறுவர். இவ்விரண்டும் ஒக்கும். (௨௪)

ஷ வேறு.

அடியனேன்முன்னஞ்செய்தவபராதமிரண்டுந்திருமு
டிபொறுத்தருள்வாயென்றுபன்முறைபரவித்தாழ்ந்து
மடிவிலாமகிழ்ச்சிபொங்கவரங்களுஞ்சிறிதுவேண்டிக்
கடியதன்னகரம்புக்கான்குடதிசைக்காவல்வேந்தன்.

(இ-ள்.) அடியனேன் முன்னம்செய்த அபராதம் இரண்டும் தீரும் படிபொறுத்து அருள்வாய் என்று - அடியேன் முன்பு அறியாதுசெய்த இரண்டு அபராதங்களையும் பொறுத்துக் கருணைசெய்வாயென்று, பல்முறை பரவிதாழ்ந்து மடிவு இலா மகிழ்ச்சிபொங்க - பலதடவையுந் துதித்துவணங்கி அழிவில்லாத மகிழ்ச்சிமேலெழுந்தோங்க, வரங்களும் சிறிதுவேண்டி - வரங்களையும் சிறிது குறையிரந்துபெற்று, குடதிசைக் காவல் வேந்தன் - மேற்றிசைக்காவல் பூண்டவருணன், கடியநன்னகரம் புக்கான் - ஒளியையுடைய தன்னகரிற்சென்றான்.

அபராதம் இரண்டு ஆவன முன்னர் மதுரையையழிக்கக் கடலையேவியதும், அதனோடமையாது பின்னர் மேகங்களை யேவியதும் எனக்கொள்க. (௨௫)

வன்றிறல்வருணன்விட்டமாரியைவிலக்கவீசன்
மின்றிகழ்சடையினின்றுநீங்கியமேகநான்குங்
குன்றுபோனிவந்துநான்குகூடமாக்கூடலாலே
யன்றுநான்மாடக்கூடலானதான்மதுரைமூதூர்.

(இ-ள்:) வன்றிறல் வருணன்விட்ட மாரியைவிலக்க - வன்மை வாய்ந்த வருணன் ஏவிய ஏழுமேகங்களையும் விலக்கும்பொருட்டு, ஈசன் மின்றிகழ் சடையினின்று நீங்கியமேகம் நான்கும் - சிவபெருமான் தனது மின்னல்போல விளங்கும் சடையினின்று நீங்கிய புட்கலாவர்த்தமுதலிய நான்குமேகங்களும், குன்றுபோல் நிவந்து நான்கு கூடமாக கூடலாலே - மலைபோல மேல்நிவந்து நான்குகூடங்களாய்க் கூடுதலாலே, மதுரை மூதூர் - மதுரையாகிய தொன்றுதொட்டுள்ள நகரம், அன்று நான் மாடக்கூடலானது-அக்காலந்தொட்டு நான்மாடக்கூடலென்னும் பேர் பெற்றது.

வன்றிறல் இன்னிசைதருதற்குவந்த ஒருபொருட்கிளவி. ஆக என்னும் வினையெச்சத்தி னீறுதொக்கு ஆ எனநின்றது. (௨௬)

நான்மாடக்கூடலானபடல முற்றிற்று.

---

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - ௧௩௨.

---

# இருபதாவது.

# எல்லாம்வல்லசித்தரானபடலம்.

---

கலித்துறை.

சத்தநான்மறைப்பொருள்வரைதள்ளுநீண்முடிமேல்
வைத்தகார்களுநான்மாடமாமதுரைமேல்வருண
னுய்த்தமாரியைத்தடுத்தவாறுரைத்துமேலுயர்த்தோர்
சித்தராய்விளையாடியசெயல்சிறிதுரைப்பாம்.

(இ-ள்.) சத்தம் நான் மறைப் பொருள் வரை தள்ளும் நீள் முடி மேல்-ஒலிவடிவமாகிய நான்குவேதங்களின் பொருளினெல்லையைக்கடந்த நீண்டசடாமுடியின்மேல், வைத்த கார்கள் நான் மாடம் ஆக-அணிந்த புட்கலாவர்த்தமுதலிய மேகங்

எல்லாம்வல்லசித்தர் திருவிளையாடல்.



கள் (தமது ஆணைவழிநின்று) நான்குமாடமாக, மதுரைமேல் வருணன் உய்த்த மாரியை தடுத்த ஆறு உரைத்தும்-மதுரையின்மேல் வருணன் செலுத்திய ஏழுமேகங்களையுஞ் சோமசுந்தரக்கடவுள் தடுத்த திருவிளையாடலைக்கூறினேம், ஏறு உயர்த்தோர் சித்தராய் விளையாடிய செயல் சிறிது உரைப்பாம்-இடபக்கொடியையுயர்த்திய அச்சோமசுந்தரக்கடவுள் சித்தமூர்த்திகளாய் விளையாடியருளிய திருவிளையாடலை இனிச் சிறிது கூறுவாம்.

பரஞானத்தாலன்றி விந்து சத்தியின்காரியமாகிய அபரஞானத்தா லாராய்தற்கு அரிதென்பார் சுத்தநான்மறைப்பொருள் வரைதள்ளுநீண்முடி என்றார். (க)

தேடருங்கதிர்மணிமுடிச்செழியனும்பாண்டி
நாடருந்திருவெய்திமேனல்லவீடெய்தக்
கூடலம்பதிமேவியகுணங்குறிகடந்த
வேடரங்கொருசித்தமெய்வேடராய்வருவார்.

(இ-ள்.) தேடரும் கதிர் மணி முடி செழியனும் - தேடிக்கொள்ளுதற்கரிய ஒளிவாய்ந்த நவமணிகளழுத்தியகிரீடத்தை உடைய அபிடேகபாண்டியனும், பாண்டிநாடரும் திரு எய்தி மேல் நல்ல வீடு எய்த - பாண்டிநாட்டிலுள்ள அனைவரும் இம்மையிற் பெருஞ்செல்வத்தையடைந்து மறுமையில் நல்ல மோட்சவீட்டை யடைய, கூடல் அம்பதி மேவிய குணம் குறி கடந்த வேடர்-மதுரைத் திருநகரில் எழுந்தருளிய குணத்தையும் குறியையுங் கடந்த திருவேடத்தையுடைய பெருமானார், அங்கு ஒருசித்த மெய வேடராய் வருவார் - அந்நகரில், ஒரு சித்தவடிவமாகிய திருவேடமுடையவராய் வருகின்றார்.

மலநோய்க்கு மருந்தினைப்பெற்றவர் என்பார் திருவெய்தி எனவும், அம்மருந்தால் மலநோய்தீர்ந்தவர் பெறுமபேறு சிவானந்தப்பெரும்பேறு என்பார் நல்லவீடு எய்த எனவுங் கூறினார். குணங்குறிகடந்த என்ற குறிப்பால் வேடர் என்றது நிட்களசிவத்தை எனவுணர்க. குணம் என்றது முக்குணங்களை. குறி என்றது ஆண் பெண் என்னும் பகுப்பினை. அம் அழகெனப் பொருள்கொள்ளாது வேண்டாவழிவந்த சாரியையெனினும் அமையும். (உ)

வட்டவார்சடைக்குஞ்சியும்பூணநூன்மார்பு
மிட்டநீறணிதிலகமுமிணைக்குழை தூங்க
விட்டவெள்ளைமுத்திரையுந்தோல்விரித்தபட்டிகையுஞ்
சுட்டவெண்பொடிப்பொக்கணந்தூக்கியதோளும்.

(இ-ள்.) வட்டம வார் சடை குஞ்சியும் - வட்டமாகக் கட்டிய நீண்டசீடையாகியசிகையையும், பூண நூல் மார்பும்-உபவீதமணிந்த திருமார்பையும், இட்ட நீறு அணி திலகமும் - இட்ட திருநீற்றின்மேலணிந்த திலதத்தையும், இணைக்குழை தூங்கவிட்ட வெள்ளை முத்திரையும் - பொருத்துதலையுடைய குண்டலங்கள் தொங்கியசையவிட்ட சங்காலாகிய தோடுகளையும், தோல் விரித்த பட்டிகையும் - புலித்தோலாற்செய்த யோகபட்டிகையையும், சுட்ட வெண் பொடி பொக்கணம் தூக்கிய தோளும் - நீற்றியவிபூதியைத் தருதற்கமைந்த பொக்கணத்தை நான்றவிட்ட திருத்தோளையும்.

பொக்கணம் பிறர்க்கு விபூதியைத்தருதற்கு இப்பிவடிவாகத் தலையோட்டாலமைத்ததொருகருவி. "சுத்தியபொக்கணத்தென்பணிகட்டங்கம்" எனவருந் திரு

க்கோவையார்க்கு நச்சினார்க்கினியர் எழுதியவுரையிற்காண்க. ஐந்துமுகங்கள் தலையிற்பொருந்தச்செய்த வட்டவடிவாகிய ஓர்பைஎனவும் பொருள்கொள்ளுதலும் ஒன்று. (ரு)

துய்யவெண்பொடியழிந்துமெய்சேவந்திடச்சுவடு
செய்யும்வெண்டிரட்படிகநீண்மாலையுஞ்சேவந்த
கையிலங்குகட்டங்கமுங்கண்டவர்மனஞ்சென்
றுய்யவன்புறவீக்கியவுதரபந்தனமும்.

(இ-ள்.) துய்ய வெண் பொடி அழிந்து மெய் சேவந்திட சுவடு செய்யும் வெண் திரள் படிகம் நீள் மாலையும்-புனிதமாகிய வெள்ளிய திருநீறழிந்து திருமேனி சேவக்கச் சுவடுசெய்யாநின்ற வெள்ளிய திரண்ட படிகமணிகள்கோத்த நீண்டமாலையையும், சேவந்த கை இலங்கு கட்டங்கமும்-சேவந்த கையில் விளங்கும் மழுவையும்,கண்டவர் மனம் சென்று உய்ய வன்பு உற வீக்கிய உதரபந்தனமும்-பார்த்தவர்கள் மனஞ்சென்று பதிந்து பிழைக்கச் சிக்கெனக்கட்டிய திருஉதரபந்தனத்தையும்.

அட்டவேங்கையீருரிவைகீண்டசைத்தகோவணமும்
மொட்டவீக்கியபுலியதளுடுக்கையுமிடத்தோ
ளிட்டயோகபட்டிகையும்பொன்னிடையிடைகட்டப்
பட்டசுஃறொலிவேத்திரப்படைக்கையும்படைத்து.

(இ-ள்.) அட்ட வேங்கை ஈர் உரிவை கீண்டு அசைத்த கோவணமும் - தான் கொன்ற வேங்கையினின்று ஈர்ந்த தோலைத் துண்டுசெய்து கட்டிய திருக்கோவணத்தையும், ஒட்ட வீக்கிய புலிஅதள் உடுக்கையும் - (இடையில்) பொருந்தக் கட்டிய புலித்தோலாகிய உடையையும், இடத் தோள் இட்ட யோகபட்டிகையும் - இடத் தோளிலிட்ட யோகபட்டிகையையும், பொன் இடை இடை கட்டப்பட்ட சுஃறொலி வேத்திரப்படை கையும் படைத்து - பொற்கம்பியால் இடை இடையே கட்டப்பட்ட சுஃறென்னும் ஒலிக்குறிப்பையுடைய பிரம்பாகிய ஆயுதத்தை ஏந்திய திருக்கரத்தையும்கொண்டருளி.

சுஃறொலி - பிரம்பைவீசும்போதுண்டாகும் ஓர்வகைக்குறிப்போசை. (௬)

வேதகிண்கிணிசிலம்புசூழ்ந்தடிகளின்மிழற்ற
வோதருஞ்பதமுளரியூறருண்மதுவொழுகப்
போதவானந்தமதுநுகர்ந்தலர்முகம்பொலியப்
பாதபங்கயமுபநிடப்பாதுகைசூட.

(இ-ள்.) வேதம் கிண் கிணி சிலம்பு சூழ்ந்து அடிகளில் மிழற்ற - வேதமே சதங்கையாகவும் சிலம்பாகவும் சூழ்ந்து திருவடிகளி லொலிக்கவும், ஓது அரும் பதம் முளரி ஊறு அருள் மது ஒழுக - சொல்லுதற்கரிய அப்பாததாமரையினின்று சுரக்காநின்ற திருவருளாகிய தேன்சிந்தவும், போத ஆனந்தமது நுகர்ந்து அலர் முகம் பொலிய - ஞானனந்தமாகிய தேனைநுகர்ந்து அலர்ந்த திருமுகம் விளங்கவும், பாத பங்கயம் உபநிடம் பாதுகை சூட - அந்தத் திருவடித்தாமரைகள் உபநிடதமாகிய பாதுகையைச்சூடவும்.

தனதுதிருவடியைத் தமதபோதத்தாலுணராது தடுமாறி யேக்கற்று-நின்ற வேதமும் உபநிடதமும் தான் ஆன்மாக்களுக்கு அருளுதற்பொருட்டு யோகமூர்த்தி

யாய்ச் சகளீகரித்தருளியகாலையில் அவ்வேதமும் உபநிடதமும் ஆனந்தமேலீட்டால் அணிகலமாகவும் பாதுகையாகவு முருமாறிச் சூழ்ந்து சூடியன என்பார் வேதகிண் கிணிசிலம்புசூழ்ந்தடிகளின்மிழற்ற எனவும், பாதபங்கயமுபநிடப்பாதுகைசூடஎன வும் கூறினார். பலமூர்த்தங்களாகச் சகளீகரித்தல் ஆன்மாக்களுக்கு அருளுதற்பொ ருட்டு என்பது "போகியாயிருந்துயிர்க்குப்போகத்தைப்புரிவதோரார் - யோகியா யோகமுத்தியுதவுதலதுவுமோரார்- வேகியானுற்போற்செய்தவினையினைவீட்டலோ ரார் - ஊகியாமூடரெல்லாமும்பரினொருவனென்பார்" எனச் சித்தியாரில் வருதல் காண்க. (௬)

சிறிதுமூரலும்வெயர்வையுந்திருமுகத்தரும்பக்
குறுகியாவணஞ்சித்திரகூடநாற்சந்தி
மறுகுசூளிகையுபரிகைமாளிகைவாயி
லறுகுசூழ்நிரைதெற்றியிவ்விடந்தொறுமடைந்து.

(இ-ள்.) சிறிது மூரலும வெயாவையும தரு முகதது அருமப குறுக-சிறுது புன்னகையும் வேர்வும் திருமுகத்திற்றோன்றச் சென்று, ஆவணம் சித்திரகூடம் நா ற்சந்தி மறுகு சூளிகை உபரிகை மாளிகை வாயில் அறுகு நிரை சூழ் தெற்றி இவ்வி டந்தொறும் அடைந்து - கடைவீதியும் சித்திரகூடமும் நாற்றெருக்கூடுமிடமும் வீ தியும் இறப்பினையுடைய உபரிகையும் மாளிகையின் வாயிலும் சிங்கத்தால் வரிசை யாகச் சுமக்கப்பட்ட திண்ணையும் ஆகிய இந்த இடங்கள்தோறும் சேர்ந்து.

அறுகு - சிங்கம். (௭)

தெற்கிருப்பவர்போல்வடதிசைவயிற்சென்று
புக்கிருப்பதுங்கிழக்குளார்போலமேற்றிசையி
னக்கிருப்பதும்யாவருநாடினரறியத்
தக்கதன்றியேயிந்திரசாலமாத்தணந்தும்.

(இ-ள்.) தெற்கு இருப்பவர் போல் வடதிசை வயின் சென்று புக்கு இருப்ப தும் - தெற்கிலிருப்பவர்போல வடதிசையிற்சென்று சேர்ந்திருத்தலும், கிழக்கு உ ள்ளார்போல மேற்றிசையில் நக்கு இருப்பதும் - கீழ்த்திசையி லுள்ளார்போல மே ற்றிசையிற் சென்று நகைத்திருத்தலும், யாவரும் நாடினர் அறியத்தக்கது அன்றி யே இந்திரசாலம் ஆக தணந்தும் - இமைகொட்டாது பார்த்துநின்ற எவரும் மீளத் தேடி அறியக்கூடாதவண்ணம் இந்திரசாலமாக மறைந்தருளியும்,

தக்கதன்றியே யிந்திரசாலமாத்தணந்தும் என்றது அதிரிசயம். (௮)

சேயவெற்பினையணியதாசசெய்துமற்றணித்தாய்
மேயவெற்பினைச்சேயதாவிடுத்துமெய்முதுமூப்
பாயமக்களையிளையவராக்கியுங்குதலை
வாயமக்களைக்கழிமுதுமக்களாவகுத்தும்.

(இ-ள்.) சேய வெற்பினை அணியது ஆகச்செய்தும் - தூரத்திலுள்ள மலை யைச் சமீபத்திலுள்ளதாகச் செய்தும், அணித்தாய் மேய வெற்பினை சேயது ஆக விடுத்தும்-சமீபித்ததாய்ப் பொருந்திய மலையைத் தூரத்திலுள்ளதாகச்செய்தருளி யும், மெய் முது மூப்பு ஆய மக்களை இளையவராக்கியும் - உடல்முதிர்ந்த மூப்புவா

ய்ந்தவிருத்தரை இளைஞராக்கியும், குதலைவாய மக்களை கழிமுது மக்களாக வருத்து ம்-இளங்குதலைபேசும் வாயையுடைய பாலர்களை மிக்கவிருத்தராகச்செய்தருளியும்.

சேயவெற்பினையணியதாச்செய்தும் என்றது ஆகருஷணம். மெய்முதுமூப் பாயமக்களையிளையவராக்கியுங்குதலை-வாயமக்களைக்கழிமுதுமக்களாவருத்தும் என் றது வயஸ்தம்பம். மற்றுவினை மாற்றுப்பொருளில் வந்தது. (கூ)

ஆணைப்பெண்ணுருவாக்கியும்பெண்ணையாணுருவ
மாணக்காட்டியுமலடியைமகப்பெறச்செய்துங்
கோணற்கூன்செவிடூமைகண்குருடுபங்கெவருங்
காணத்தீர்த்துநாலுலோகமுங்கனகமாச்செய்தும்.

(இ-ள்.) ஆணை பெண்ணுரு ஆக்கியும் - ஆணினைப் பெண்வடிவமாகச் செய் தும், பெண்ணை ஆண் உருவம் மாணக் காட்டியும் - பெண்ணினை யாண்வடிவமாக மாட்சிமைப்படச்செய்தும், மலடியை மகபெறச் செய்தும் - மலடியைப்பிள்ளைபெ றச்செய்தும், கோணல் கூன் செவிடு ஊமை கண் குருடு பங்கு எவரும் காணத்தீர் த்தும் - (முதுகு) வளைந்த கூனரும் செவிடரும் ஊமைகளும் அந்தகரும் முடவரு மாகிய இவர்களுடைய அவயவக்குறைபாடுகளை எவரும்பார்க்கத் தீர்த்தருளியும், நாலு லோகமும் கனகமாகச் செய்தும் - வெள்ளி முதலிய நான்கு லோகங்களையும் பொன்னாகச்செய்தும்.

நாலுலோகங்கள் வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம். இவை கனகமாகச் செய் தல் வாதம். (க0)

செல்வர்தம்மனைப்பொருளெலாம்வறுமையிற்சிறந்தோ
ரில்லமெய்தவுநட்டவரிகலின்றித்தம்மின்
மல்லுவெஞ்சமரிழைப்பவுங்காஞ்சிரமரத்தி
னல்லதீங்கனிபழுப்பவும்விஞ்சைகணயந்தும்.

(இ-ள்.) செல்வர் தம் மனை பொருள் எல்லாம் வறுமையில் சிறந்தோர் இல் லம் எய்தவும் - செல்வரது வீட்டிலுள்ள பொருள்களெல்லாம் தரித்திரத்திற் குறை வின்றி நிறைந்தோர்வீட்டிலடையவும், நட்டவர் தம்மில் இகலின்றி மல்லு வெஞ் சமர் இழைப்பவும் - சினேகித்தோர் சிறிதும் பகையின்றியே (தம்முள்) மல்லாகிய கொடிய போரைச்செய்யவும், காஞ்சிரமரத்தில் நல்ல தீங்கனி பழுப்பவும்-எட்டிம ரத்தில் நல்ல சுவை பழுத்த கனிகள் பழுக்கவும், விஞ்சைகள் நயந்தும்-(இவ்வாறு) வித்தைகளைச்செய்தருளியும். (கக)

பருவமாறியபருவத்தில்வையைநீர்பரந்து
வருவதாக்கியுமீளவும்வறந்திடச்செய்தும்
பொருவிறீஞ்சுவையோடையும்பொய்கையுமுவர்ப்புத்
தருவவாக்கியுமுவரியின்சுவையதாத்தந்தும்.

(இ-ள்.) பருவம் மாறிய பருவத்தில் வையை நீர்பரந்து வருவது ஆக்கியும்- நீர்வறக்கும் முதிர்வேனிற்காலத்திலும் வையைநதிபெருக்கெடுத்து வரச்செய்தரு ளியும், மீளவும் வறந்திடச்செய்தும் - மீளவும் அப்பெருக்கு வற்றச்செய்தருளியு ம், பொருவு இல் தீஞ்சுவை ஓடையும் பொய்கையும் உவர்ப்பு தருவ ஆக்கியும்-ஒப் பில்லாத இனியசுவையமைந்த ஓடைநீரும் பொய்கைநீரும் உவர்ப்புத்தருவனவாகச்

செய்தருளியும், உவரி இன்சுவையதாகதந்தும் - கடலின் உவர்நீர் இனியசுவையினை யுடையதாகச்செய்தருளியும். (கo)

வீசிமாத்திரைக்கோலினைவிண்ணினட்டதன்மே
லூசிநாட்டியிட்டூசிமேற்பெருவிரலூன்றி
யாசிலாடியுமூசிமேற்றலைகிழக்காக
மாசில்சேவடிப்போதுவான்மலர்ந்திடச்சுழன்றும்.

(இ-ள்.) மாத்திரைக்கோலினை விண்ணில் வீசிநட்டு அதன்மேல் ஊசிநாட்டியிட்டு-மாத்திரைக்கோலை விண்ணின்மேல் வீசிநட்டு அம்மாத்திரைக்கோலின்மேல் ஊசியைநாட்டி, ஊசிமேல் பெருவிரல் ஊன்றி ஆசு இல் ஆடியும்-அவ்வூசியின்மேல் பெருவிரலையூன்றிக் குறைபாடில்லாம லாடியருளியும், ஊசிமேல் தலை கிழக்கு ஆக மாசு இல் சேவடி போதுவான் மலர்ந்திட சுழன்றும் - அவ்வூசியின்மேல் தலைகீழாகப் பரிசுத்தமாகிய தமது செவந்த திருவடித்தாமரைகள் ஆகாயத்தில் மலரச்சுழன்றுடியருளியும். (கக)

சண்டவெம்பணிப்பகையெனப்பறந்துவிண்டாவிக்
கொண்டலைப்பிடித்திடியொடுங்குடித்தநீர்பிழிந்து
கண்டவர்க்கதிசயம்பெறக்காட்டியுங்காண
விண்டலத்தினிற்பண்டுபோலிறைகொளவிடுத்தும்.

(இ-ள்.) வெம் சண்ட பணிப்பகை எனப்பறந்து - கொடியவேகத்தையுடைய கருடனைப்போலப்பறந்து, விண் தாவி கொண்டலைப் பிடித்து இடியொடும் குடித்த நீர்பிழிந்து - வானில் தாவி மேகத்தைப்பிடித்து இடியோடும் அவைகுடித்தநீரைப்பிழிந்து, கண்டவர்க்கு அதிசயம்பெறக் காட்டியும் - பார்ப்போர்க்கு அதிசயம் உண்டாக அம்மேகங்களைக்காட்டியருளியும், காணவிண் தலத்தினில் பண்டுபோல் இறைகொள விடுத்தும் - (பலரும்) காண அந்தவானில் முன்போல உலாவி வசிக்கவிடுத்தருளியும். (கச)

எல்லிடைப்படும்பொருள்களையிராவெழப்பார்த்து
மல்லிடைப்படும்பொருள்களைப்பகல்வரவமைத்தும்
வல்லழற்புனலுளர்வளிவலிகெடப்பார்த்து
நல்லபோதுகாய்கனியிலாநாள்படக்கண்டும்.

(இ-ள்.) எல் இடை படும் பொருள்களை இரா எழப்பார்த்தும்-பகற்காலத்திற்றோன்றும் சூரியன்முதலிய பொருள்களை இராக்காலத்தில் வரப்பார்த்தருளியும், அல் இடைப்படும் பொருள்களை பகல்வர அமைத்தும் - இரவிற்றோன்றும் சந்திரன் முதலியபொருள்களைப் பகற்காலத்தில் வரப்பார்த்தருளியும், வல் அழல் புனல் உளர் வளிவலிகெடப்பார்த்தும் - கொடியநெருப்பும் நீரும் சஞ்சரிக்கும் காற்றும் ஆகிய இவைகளின் வேகவன்மைகள்கெட நோக்கியருளியும், நல்லபோது காய்கனி இல்லாத நாள்பட கண்டும் - வாசமிக்கமலர்களும் காய்களும் கனிகளும் இல்லாத பருவங்களில் அவைமலரவும் காய்க்கவும் பழுக்கவும்செய்தருளியும். (கரு)

பிளைகால்விழிக்கிழவனைப்பிரம்பினல்வருடிக்
காளையாடவராக்கியக்கணவருக்கிசைய
வீளைவாய்முதுகற்பினர்கருவடைந்திளமை
யாளவேத்திரம்வருடிநீறளித்தருள்செய்தும்.

(இ-ள்.) பீளைகால் விழி கிழவரை பிரம்பினால்வருடி காளை ஆடவராக்கி - பீளைசிந்துங் கண்களையுடைய காலஞ்சென்ற விருத்தர்களைத் தாம் ஏந்திய பிரம்பினுல் தடவிக் காளைப்பருவத்தையுடைய வாலிபர்களாகச்செய்தருளி, அக்கணவருக்கு இசைய விளைவாய் முதுகற்பினர் கரு அடைந்து இளமை ஆள-(வாலிபர்களாகிய) அந்தக்கணவர்கள் கருத்திற்கிசைய விளைவாய்ந்த வாயையுடைய கிழத்தன்மைவாய்ந்த இலவாழ்க்கைக்குரிய மாதர்கள் கருப்பமெய்தி மங்கைப்பருவத்தையடைய, வேத்திரம் வருடி நீறு அளித்து அருள்செய்தும் - பிரம்பால்தடவி திருநீறுதந்து கிருபைகூர்ந்தருளியும்.

விளை ஒருவகையொலி. (கசு)

அகரமாதிமூன்றாகியவாகருடணமே
புகரிலாவதிரிச்சியமஞ்சனம்பொருவில்
வகரமாதிமூன்றாகியவசியமேவாத
மிகலிலாவயத்தம்பமென்றின்னவைசெய்தும்.

(இ-ள்.) அகரம் ஆதிமூன்றாகிய - அகரத்தை முதலிலுள்ள மூன்றாகிய, ஆகருடணம் புகர் இல்லா அதிரிச்சியம அஞ்சனம் - ஆகருஷணமும் குற்றமில்லாத அதிர்சியமும் அஞ்சனமும், பொருவு இல் வகரம் ஆதி மூன்றாகிய - ஒப்பில்லாதவகரத்தை முதலிலுள்ள மூன்றாகிய, வசியம் வாதம் இகல் இல்லாத வயத்தம்பம் என்ற இன்னவை செய்தும்-வசியமும் வாதமும் தம்முள் மாறுபடாத வயஸ்தம்பமும் என்று சொல்லப்பட்ட இவைபோல்வனவற்றைச்செய்தருளியும்.

அகரத்தின்விகாரமே ஆகாரம் ஆதலால் ஆகாரத்தை அகரத்துள்ளடக்கி அகரமாதி எனவும், வா என்னும் உயிர்மெய்யெழுத்தும் வகரமெய்யின்மேலேறிய அகரத்தின்விகாரம் ஆதலால் வா என்னும் உயிர்மெய்யெழுத்தை வகரத்துளடக்கி வகரமாதியெனவுங்கூறினார். ஆகருடணம், அதிரிச்சியம், அஞ்சனம் இவற்றிலுள்ள முதலெழுத்துகள் அகரம் ஆதலாலும், வசியம், வாதம், வயத்தம்பம் இவற்றிலுள்ளமுதலெழுத்துகள் வகரம் ஆதலாலும் அகரமாதி வகரமாதி என்றார். ஆகருடணம் தூரத்திலுளளதைச் சமீபததில்வருவித்தல். அதிரிச்சியம் கண்களுக்குப் புலப்படுவதைப் புலப்படாமற்செய்தல். அஞ்சனம் மறைந்துகிடக்கும்பொருள்களை விளக்கிக்காட்டுதல். வசியம் பகைவரைத் தன்வயப்படுத்துதல். வாதம் இரும்புமுதலிய உலோகங்களைப் பொன்னாக்குதல், வயத்தம்பம் பாலனைப்பாலனாகவே இருக்க வயதை நிறுத்துதல். அன்றி விருத்தனை இளைஞனாகவும், இளைஞனை விருத்தனாகவும் நிலைபெறச்செய்தலெனினும் அமையும். (கஎ)

வேதநூறெளியார்களெக்கலைகளும்விளங்கப்
பூதிநாவினிற்சிதறியும்பூழியன்காதன்
மாதராரொடும்பயில்புதுமணமலர்க்காவிற்
காதனீண்டகோட்டெங்கினைக்கரும்பனைசெய்தும்.

(இ-ள்.) வேதம் நூல் தெளியார்கள் - வேதநூல்வழியுள்ள கலைகளைச்சிறிதும் அறிந்து தெளியாதவர்களுக்கு, எக்கலைகளும் விளங்க பூதிநாவினில் சிதறியும்- அறுபத்துநான்குகலைகளும் ஐயந்திரிபின்றி விளங்கத் திருநீற்றை அவர்கள் நாவிற் சிதறியும், பூழியன் காதல் மாதரார் ஓடும்பயில் புதுமண மலர் காவில் - அபிடேகபாண்டியன் தனதில்வாழ்க்கைக்குரிய மனைவியோடும் சஞ்சரித்தலவும் அன்றலர்

ந்த மணமிக்க மலர்கணிறைந்த பூஞ்சோலையிலுள்ள, காதம் நீண்டகோள் தெங்கி னை கரும்பனை செய்தும் - காததூரம் உயர்ந்து ஓங்கிய வயிரம்வாய்ந்த தென்னம ரத்தினைக் கரியபனைமரமாகச்செய்தருளியும். (கஅ)

ஏனைவான்றருக்குலங்களைப்புட்களையிருகோட்
டானையாதிப்பல்விலங்கினையொன்றையொன்றாக
ஞானநோக்கினுனோக்கியுநாடியவிளையோர்
மானினோக்கியராகிலோமெனவெழில்வாய்ந்தும்.

(இ-ள்.) ஏனைவான் தருக்குலங்களை புட்களை - அது ஒழிந்த பெரியவிருட்ச க்கூட்டங்களையும் பட்சிகளையும், இருகோடு ஆனை ஆதி பல்விலங்கினை-இரண்டுகொ ம்பினையுடைய யானைமுதலிய பலமிருகங்களையும், ஒன்றை ஒன்றாக ஞான நோக்கி னால் நோக்கியும் - ஒருபொருளை மற்றொருபொருளாக ஞானநோக்கால் நோக்கியரு ளியும், நாடிய இளையோர் மானினோக்கியர் ஆகிலோம் என எழில் வாய்ந்தும் - (யா வரும்) விரும்பிநோக்கும் கட்டழகையுடைய காளையரும் மான்போலும் மருண்ட நோக்கையுடைய மங்கையர்கள் ஆனோம் அல்லம் என்று மனம்வருந்தப் பேரழகு வாய்ந்தருளியும்.

எழில்வாய்ந்தும் என்றது வசியம். (கக)

நாகநாடுபொன்னாட்டுளபொருளுமங்கரு
ளாகவாக்கியுமின்னணம்விச்சைகளனந்த
மாகநாயகன்மலைமகளுயகன்மதுரை
யேகநாயகன்றிருவிளையாடல்செய்திருந்தான்.

(இ-ள்.) நாகநாடு பொன்னாடு உள்ள பொருளும் அங்கருள் ஆக ஆக்கியும் - பாதலத்திலுள்ள பொருள் வானுலகத்திலுள்ள பொருள்களாகவும், வானுலகத்தி லுள்ள பொருள் பாதலத்தி லுள்ளபொருள்களாகவும் செய்தருளியும், இன்ன ணம் அனந்தம் விச்சைகள் - இவ்விதமாக அளவில்லாத ஆகருடணமுதலியவித்தை களை, மாகநாயகன் மலைமகளுயகன் மதுரை ஏகநாயகன் திருவிளையாடல் செய்தி ருந்தான் - சிவலோகத்திற்கு இறைவரும் உமாதேவியாரிறைவரும் மதுரையிலெ ழுந்தருளிய ஒப்பில்லாத இறைவருமாகிய சித்தமூர்த்திகள் திருவிளையாடல்களாகச் செய்திருந்தருளினர்.

நாகநாட்டுள்ளபொருள் பொன்னாட்டுள்ள பொருளும், பொன்னாட்டுள்ள பொருள் நாகநாட்டுப்பொருளும் எனமாற்றிப் பொருள்கொள்க. ஏகம் என்பதற்கு ஒப்பின்மை எனச் சிந்தாமணியில் நச்சினார்க்கினியர் கொண்டனர். (உ0)

சித்தயோகிகள்செய்கின்றவாடன்மேற்செலுத்தி
வைத்தகண்களுஞ்சிந்தையும்வாங்கலர்திகைத்துத்
தத்தமாள்வினைத்தொழின்மறந்திருந்தனர்தகைசான்
முத்தவேதியராதியமுதுநகர்மாக்கள்.

(இ-ள்.) தகை சால் முத்த வேதியர் ஆதிய முது நகர் மாக்கள் - பெருந்தன் மைமிக்க முத்தத்தன்மைவாய்ந்த அந்தணர்முதலிய தொன்றுதொட்டுள்ள மதுரை நகரிலுள்ள நான்குவருணத்தாரும், சித்த யோகிகள் செய்கின்ற ஆடல் மேல் செலு த்தி வைத்த கண்களும் சிந்தையும் வாங்கலர் - சித்தயோகிகள் செய்தருளுகின்ற

திருவிளையாடல்களின்மேல் செலுத்திய தமது கண்களும் மனங்களும் மீளத் தம்வ சமாக்க வலிமையில்லாதவராய், திகைத்து தத்தம் ஆள்வினை தொழில் மறந்து இருந்தனர்-மயங்கித் தத்தம்வருணங்களுக்குரிய நித்தியகருமங்கள் முதலியவற்றையுமறந்து தம்பித்திருந்தார்கள்.

முத்தத்தன்மை ஆவது பெத்தத்தில் சிவன் தோற்றமற்று ஆன்மாவின்தோற்றமாய் நிற்றல்போல் ஆன்மாவின் தோற்றமற்றுச் சிவத்தோற்றமாய்நிற்றல். (உக)

இனையசெய்தியையுழையராலிறைமகனறிந்தா
னனையசித்தனையிங்ஙனந்தருகெனவடுத்தார்
தனையகற்றினன்சித்தனைச்சார்ந்தவர்தாமும்
வினையைவென்றவராடலைவியந்துகண்டிருந்தார்.

(இ-ள்.) இனைய செய்தியை உழையரால் இறைமகன் அறிந்தான் - இந்த அற்புதச்செய்திகளை வேவுகாரரால் அபிடேகபாண்டியன் தெரிந்து, அனைய சித்தனை இங்ஙனம் தருக என அடுத்தார் தனை அகற்றினன் - அந்த அற்புதச்செயல்களையுடைய சித்தமூர்த்திகளை இவ்விடத்து வருவிக்கக்கடவரெனத் தன்னை யடுத்துநின்ற அவ்வேவுகாரர்களை யேவினன், சித்தனைச் சார்ந்தவர் தாமும் வினையை வென்றவர் ஆடலை வியந்து கண்டு இருந்தார்-(அந்த அரசன் ஏவலால்) சித்த மூர்த்திகளை யடைந்தவரும் இயல்பாக வினையினின்று நீங்கிய அந்தச்சித்தமூர்த்திகளின் திருவிளையாடலை வியந்து நோக்கி அதன்வசத்தராயிருந்தார்கள்.

அடுத்தார்தனைகட்டுனைச் சுவைப்பொருள்படவந்த தான் என்னும் அசைநிலையிடைச்சொல் தன் எனக் குறுகிநின்றது. (உஉ)

அமைச்சர்தங்களைவிடுத்தனனமைச்சருஞ்சித்தர்
தமைச்சரண்பணிந்தரசன்முன்வருகெனத்தவத்தோ
ரெமக்குமன்னனாலென்பயனெனமறுத்திடமண்
சுமக்குமன்னவன்றம்மவர்தொழுதனர்போனார்.

(இ-ள்.) அமைச்சர் தங்களை விடுத்தனன்-(சென்றவேவுகாரர்கள் வாராமையைக்கண்டு) மந்திரிகளையேவினான், அமைச்சரும் சித்தர் தமை சரண் பணிந்து அரசன் முன் வருக என - அம்மந்திரிகளும் சித்தமூர்த்திகளைவணங்கி எமதரசர்முன்வரக்கடவீரென்றுகூற, தவத்தோர் எமக்கு மன்னனால் என் பயன் என மறுத்திட - அச்சித்தமூர்த்திகள் (அந்த அரசனால்) எமக்கு வரும் பயன் யாதுளதென்று மறுக்க, மண் சுமக்கும் மன்னவன் தம்மவர் தொழுதனர் போனார்-நில உலகபாரத்தைச் சுமக்கும் அபிடேகபாண்டியன் உறவினராகிய மந்திரிகள் வணங்கிச்சென்றார்கள்.

மந்திரிகள் அரசனாணையை மேற்கொண்டு தாமேநடத்துவோர் ஆதலால் மன்னவன்தம்மவர் என்றார். வருக அகரவீறு தொகுத்தல். சித்தர்தமை தாம் என்னும் படர்க்கைப் பன்மைப்பெயர் தம் எனக் குறுகிநின்றது. (உ௩)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மன்னனமுனமைச்சர்சித்தாமறுத்துரைமாற்றங்கூற
முன்னவனருள்பெற்றிம்மைமறுமையுமுனிந்தயோக
ரிங்கிலவேந்தர்மட்டோவிந்திரனயன்மாலேனோர்
தன்னையுமதிப்பரோவென்றிருந்தனன்றருமவேந்தன்.

கல்லானைக்குக்கரும்பருத்திய திருவிளையாடல்.



(இ-ள்.) அமைச்சர் மன்னன் முன் சித்தர் மறுத்துரை மாற்றங் கூற - (சென்ற) மந்திரிகள் பாண்டியன்முன்புவந்து சித்தமூர்த்திகள் மறுத்துக் கூறிய வார்த்தையைச்சொல்ல, முன்னவன் அருள் பெற்று இம்மை மறுமையும் முனிந்த யோகர் - (பிரமன் முதலிய எத்தேவர்கட்கும்) முன்னவனாகிய சோமசுந்தரக்கடவுளினுடைய திருவருளைப்பெற்று இம்மைப்போகத்தையும் சுவர்க்காதி போகத்தையும் வெறுத்தயோகிகள், இந் நில வேந்தர் மட்டோ - இந்த நிலஉலகையாளும் அரசர்மட்டுமா, இந்திரன் அயன் மால் ஏனோர் தன்னையு மதிப்பரோ என்று தருமவேந்தன் இருந்தனன் - இந்திரனையும் பிரமனையும் திருமாலையும் அவரொழிந்த மற்றத்தேவர்களையும் ஓர் பொருளாகக் கருதுவார்களோ வென்று சிவபுண்ணிய வடிவாகிய அபிடேகபாண்டியன் வாளாவிருந்தனன்.

தனதிச்சையால் பிரபஞ்சத்தோற்றத்திற்குத் திருமேனிகொண்டருளினவனாதலால் முன்னவன் எனவும், பரஞானத்தாற் பரத்தினைத் தரிசித்தவர் அப்பரத்தினையே யுணர்ந்து நின்று ஏனைப்பொருள்களைநோக்கார் ஆதலால் அருள்பெற்றிம்மை மறுமையுமுனிந்தயோகர் எனவும், இம்மைமறுமையின்பங்களை யருவருத்தொழித்தவர் அயன் மால் முதலியோரையும் ஓர்பொருளாகக்கொள்ளார் ஆதலால் இந்நிலவேந்தர்மட்டோ விந்திரனயன்மாலேனோர் தன்னையுமதிப்பரோ வென்றிருந்தனன் எனவுங் கூறினார் "முன்னைப்பழம்பொருட்குமுன்னைப்பழம்பொருளே" எனவும், "பரஞானத்தாற்பரத்தைத்தரிசித்தோர் பரத்தைப்பார்த்திருப்பர் பதார்த்தங்கள்பாரார்" எனவும், "கொள்ளேன்புரந்தரன்மாலயன்வாழ்வு" எனவும் வரும் உண்மைத் திருவாக்குகளாலுணர்க. (உச)

எல்லாம்வல்லசித்தரானபடலமுற்றிற்று.

---

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - கூஉசுகூ.

---

## இருபத்தோராவது.

# கல்லானைக்குக்கரும்பருத்தியபடலம்.

---

கலிநிலைத்துறை.

செல்லார்பொழில்சூழ்மதுராபுரிச்சித்தரெல்லாம்
வல்லாரவராடலையாருரைசெய்யவல்லா
ரெல்லாரும்வியப்புறவித்தனிச்சித்தசாமி
கல்லானைதின்னக்கரும்பீந்தகதையுஞ்சொல்வாம்.

(இ-ள்.) செல் ஆர் பொழில் சூழ் மதுரா புரி எல்லாம் வல்லார் சித்தர் அவர் ஆடலை உரை செய்ய வல்லார் யார்-மேகங்கள்நிறைந்த சோலைசூழ்ந்த மதுராபுரியில் எழுந்தருளிய எல்லாம்வல்லராகிய சித்தமூர்த்திகள் அவர் (செய்தருளிய) திருவிளையாடலை யெடுத்துச் சொல்லவல்லவர் யார், எல்லாரும் வியப்பு உற இத் தனி சித்த சாமி-கண்டவரெவரும் அதிசயங்கூர இந்த ஒப்பில்லாத சித்தமூர்த்திகள், கல்லானை

தின்ன கருப்பு ஈந்த கதையும் சொல்வாம்-கல்லானைதின்னும்படி கரும்பைக்கொடு த்தருளிய திருவிளையாடலையும் இனி யெடுத்துக்கூறுவாம்.

சித்தமூர்த்திகள் விளையாடிய திருவிளையாடல் முற்றுந் தமக்கு எடுத்துக்கூ ற வன்மையில்லை என்பார் அவராடலை யாருரைசெய்யவல்லார் என்றார். (க

பின்னேயமச்சம்பெருகப்பெரியோரையெண்ணா
தென்னேயெளியாரெனயானிகழ்ந்திங்ஙனிண்டச
சொன்னேனவர்க்கென்குறையென்னிற்றருவினானே
தந்நேரிலாதார்தமைக்காணத்தருவதென்று.

(இ-ள்.) பின் நேயம் அச்சம் பெருக - பின்பு (சித்தமூர்த்திகளிடத்துத்தம து புதல்வனைக்கண்டாலொத்த) அன்பும் (அரசர்மக்களைக்கண்டாலொத்த) அச்ச மும் மேலெழுந்தோங்க, என்னே - இது என்ன, பெரியோரை எண்ணாது எளியார என இகழ்ந்து யான் இங்ஙன் ஈண்ட சொன்னேன் - பெரியோரைச் சிறிதும் நன்கு மதியாது எளியார்போல அவமதித்து யான் இவ்விடத்துவரும்படி (அமைச்சாமுன் னிலையில்) தெரிவித்தேன், அவர்க்கு என்னில் குறை என் - அவர்க்கு என்னிடத் தில் பெறுங் குறைபாடு யாதுளது, நானே தருவி தம் நேரில்லாதார் தமை காண தருவது என்று - (குறைபாடுடையேன்) யானே (ஆகையால் அவரைத்) தேடித் த மக்கொப்பில்லாதாராகிய அச்சித்தமூர்த்திகளைக் காணக்கடவேனென்றுகருதி.

தமக்கோர்குறைபாடில்லார் பிறரைநாடி யடையும் வழக்கின்மையால் அவ ர்க்கு என்னிற்குறையென் எனவும், நமக்கோர் குறைபாடுடையார் பிறரை நாடிய டையும் வழக்குண்மையால் தருவிநானே - தந்நேரிலாதார்தமைக் காணத்தருவது எனவுங் கூறினன். (உ

ஆனந்தசித்தர்தமைக்காண்பலென்றன்புகூர்ந்த
மீனந்தரித்தகொடிவேந்தன்குறிப்புநோக்கி
மோனந்தரித்தசிவயோகருமுந்தித்தம்பொன்
மானந்தனக்குவடமேற்றிசைவந்திருந்தார்.

(இ-ள்.) ஆனந்த சித்தர் தமைக் காண்பல் என்று அன்பு கூர்ந்த - பேரின்ப வடிவமாகிய சித்தமூர்த்திகளைக் காண்பேனென்று அன்புமிக்க, மீனம் தரித்த கொ டிவேந்தன் குறிப்பு நோக்கி - கயற்கொடியையேந்திய அபிடேகபாண்டியனுடைய உள்ளக்குறிப்பையுணர்ந்து, மோனம் தரித்த சிவயோகரும் முந்தி - மௌனநிலை யைமேற்கொண்ட அந்தச்சிவயோகமூர்த்திகளும் (அப்பாண்டியனுக்கு) முற்பட்டு தம்பொன் மானந் தனக்கு வடமேற்றிசை வந்திருந்தார் - தமது பொன்னாலாகிய இந்திரவிமானத்துக்கு வடமேற்றிசைப்பக்கத்தில் வந்திருந்தருளினார்.

எல்லாம்வல்லராதலால் குறிப்புநோக்கி என்றார். (௩

அருகாதசெல்வத்தவனன்றுதைத்திங்கடோற்றம்
வருகாலமாகமதுரேசனைவந்துவந்தித்
தருகாதரத்தாற்கழிந்துள்வலமாகமீள
வருவானவன்முன்வருகாஞ்சுகிவன்கண்மாக்கள்.

(இ-ள்.) அன்று தைத் திங்கள் தோற்றம் வரு காலம் ஆக - அந்நாள் மக மாதப்பிரவேசம் வருங்காலமாக, அருகாத செல்வத்தவன் வந்து மதுரேசனை வ

நித்த - நிறைந்த செல்வத்தையுடைய அபிடேகபாண்டியன் வந்து சோமசுந்தரக் கடவுளை வணங்கி, உருகு ஆதரத்தால் கழிந்து உள்வலமாக மீள வருவான் அவன் முன் வரு காஞ்சுகி வன்கண் மாக்கள்-மனமுருகுதற்கேதுவாகிய அன்பால் ஆசையிருந்து உள்ளே பிரதட்சிணமாக மீளவரும் அப்பாண்டியன் முன்பு கோலால் விலக்கிச்செல்லும் கஞ்சுகிகளாகிய தறுகண்மையையுடைய மெய்காப்பாளர்.

கழிந்து என்னும் எச்சத்திற்கு வினைமுதல்வேண்டும் ஆதலால் ஆசை எனக்கொண்டாம் "அன்பீனுமார்வமுடைமை" என்பதனாற்காண்க. ஆல் உருபு ஏதுப்பொருட்டு. கஞ்சுகமுடையோன் கஞ்சுகி. இது காஞ்சுகி எனவருதல் நீட்டும்வழி நீட்டல். கஞ்சுகம் சட்டை. (ச)

சீறிட்டவேங்கையதட்சேக்கையர்சீறியைந்தும்
பாறிட்டவேடர்யோகபட்டத்தர்கட்டங்கத்தி
லேறிட்டகையரிறுமாந்திருப்பாரைநோக்கி
மாறிட்டுநீக்கியெழப்போகெனவந்துசொன்னார்.

(இ-ள்.) சீறிட்டவேங்கை அதள் சேக்கையர் - கோபித்த வேங்கையினது தோலை ஆசனமாக உடையவராகி, சீறி ஐந்தும் பாறிட்ட வேடர் - கோபித்து ஐம்புலன்களையும் வெற்றிகொண்ட தவவேடத்தையுடையவராகி, யோகபட்டத்தர் - யோகப்பட்டிகையையுடையவராகி, கட்டங்கத்தில் ஏறு இட்ட கையர் - மழுவாயுதத்தின்மேல் வைத்த கையையுடையவராகி, இறுமாந்திருப்பாரை நோக்கி - இறுமாப்புற்றிருக்கும் சித்தமூர்த்திகளைப்பார்த்து, மாறிட்டு நீக்கி எழ போக என வந்து சொன்னார் - கோல் நீட்டி அங்கு நின்றும் நீங்கி யெழப்போகக்கடவீரென்று வந்து சொன்னார்கள்.

கட்டங்கம் கடங்கம் என்னும் வடசொற்றிரிபு. ஆலாஸ்யமகாத்மியத்தில் கட்டுவாங்கம் என இருத்தலால் கட்டங்கம் கட்டுவாங்கம் என்னும் வடசொற்றிரிபு எனக்கொள்ளில் கட்டிற்கால் வடிவமாகவுள்ள ஒருவகை ஆயுதம் எனக்கொள்க.(ரு)

பின்றுவருதென்னர்பிரான்பெரியோரைநோக்கி
யென்நாடுநுந்நாடுமக்கென்வருமியாதுவேண்டு
நுந்நாமமேதுநுவன்மின்னெனவைய்ரொந்த
நன்றாடுமெந்தநகருள்ளுந்திரிவமப்பா.

(இ-ள்.) பின் ஆக வரு தென்னர் பிரான் - (மெய்காப்பாளருக்குப்) பின்றாகவரும் அபிடேகபாண்டியன், பெரியோரை நோக்கி நும் நாடு எ நாடு - அச்சித்தமூர்த்திகளைப்பார்த்து உமது நாடு எந்தநாடு, உமக்கு என் வரும் - உமக்கு யாது கைவரும், யாது வேண்டும் - (என்னால்) உமக்கு என்னவேண்டும், நும் நாமம் ஏது நுவன்மின் என - உமது பேர் யாது சொல்லுங்களென்று வினவ, ஐயர் அப்பா எந்த நல் நாடும் எந்த நகருள்ளும் திரிவம்-அச்சித்தமூர்த்திகள் (அப்பாண்டியனைநோக்கி) அப்பனே எந்த நல்ல நாட்டினுள்ளும் எந்த நகரினுள்ளும் சஞ்சரிப்போம். (சா)

ஆனாலுமிப்போதணிகான்மிரநாட்டிற்காசி
தானாமிருக்குந்தலமாகுநாதனாகி
யானாதபிச்சைப்பெருவாழ்வுடையார்நமரா
நாணாளும்விஞ்சைநடாஅய்த்திரிசித்தரோம்யாம்.

(இ-ள்.) ஆனாலும் - ஆயினும், இப்போது அணி காஸ்மீர நாட்டில் காசிநகரந்தான் நாம் இருக்குந் தலமாகும் - இப்போது அழகுமிக்க காஸ்மீரநாட்டிலுள்ள காசி நகரந்தான் நாம் வசிக்குந்தலமாகும், நாதன் ஆகி ஆறாத பிச்சை பெருவாழ்வு உடையார் நமராம் (பிரமன் முதலிய பசுக்களுக்குப்) பதியாகி நீங்காத பிச்சையாகிய பெரிய வாழ்வினையுடைய சிவபெருமான் அடியார்களே நமது உறவினராம், யாம் நாள் நாளும் விஞ்சை நடாய் திரிசித்தரேம் - நாம் எந்நாளும் ஆகருஷண முதலிய வித்தைகளை நடத்தித்திரிகின்ற சித்தராம்.

இதனால் நாடும் நகருந் தொழிலுங் கூறப்பட்டன. நாள்நாள் என்னும் அடுக்கு பன்மைப்பொருளில் வந்தது. (எ)

ஆனந்தகானந்தொடுத்திங்குளவானசைவத்
தானம்பலவுந்தொழுந்தற்பரமாகிவந்தே
ஞானந்தருமிந்நகரிம்மையிற்சீவன்முத்தி
மானந்தமானபரமுத்திமறுமைநல்கும்.

(இ-ள்.) ஆனந்த கானம் தொடுத்து இங்கு உள ஆன சைவத் தானம் பலவும் தொழும் தற்பரமாகி வந்தேம் - காசிதொட்டுத தெனபாலுள்ள சைவத்தலங்கள் பலவற்றையும் வணங்கும் அதுவே பிரயோசனமாய்ச் சஞ்சரிக்கின்றேம், ஞானந் தம் தரும் இந்நகர் (அடைந்தோர்க்குத்) திருவருள் ஞானத்தைப் பாலிக்கும் இந்த மதுரைநகரமானது, இம்மையில் சீவன் முத்தி - இப்பிறப்பிற் சீவன்முத்தியையும், மறுமை மான் அந்தமான பரமுத்தி நல்கும் - மறுமையில் பிரகிருதி மாயைக்கு அப்பால் பட்ட பரமுத்தியையுந் தந்தருளாநிற்கும்.

தற்பரம் தத்பரம் என்னும் வடசொற்றிரிபு. தத் அது, பரம் பிரயோசனம். மான் என்றமையால் இதற்குக் காரணமான விந்துமோகினியை உபலக்கணத்தாற் கொள்க. தத்துவ முப்பத்தாறும் நீங்கின இடத்தே முத்தியாகையால் காரியத்தைக் காரணமாக வுபசரித்து மானந்தமான என்றார். மால் நந்தமான எனச் சொல்வைகசெய்து பாசமாகிய மயக்கங்கெட்ட எனப் பொருள்கொண்டு நுகர்வோன்றொழிலை நுகர்ச்சிமேலேற்றிக் கொள்ளுதலும் ஒன்று. (அ)

ஈண்டுள்ளவர்க்கெம்விளையாடலைக்காட்டிபிச்சை
வேண்டும்பலசித்தியுநல்குவம்வேதமாதி
மாண்டங்குமெண்ணெண்கலைஞானமும்வல்லமல்லாற்
சேண்டங்குமெல்லாப்பொருளும்வலசித்தரேம்யாம்.

(இ-ள்.) ஈண்டு உள்ளவர்க்கு எம் விளையாடலை காட்டி - இங்குள்ளவர்க்கு எமது திருவிளையாடல்களை முன்னர் உணர்த்தி, இச்சை வேண்டும் பல சித்தியும் நல்குவம் - (அவைகண்டெம்மை வழிபடுவோர்க்கு) அவரவரிச்சைவழியே வேண்டிய பல சித்திகளையும் தந்தருள்வோம், வேதம் ஆதி மாண் தங்கும் எண்ணெண் கலை ஞானமும் வல்லம் - வேதமுதலிய மாட்சிமைதங்கிய அறுபத்துநான்கு கலைஞானங்களின் தேர்ச்சியிலும் வன்மையையுடையேம், அல்லால் - இவையுமன்றி, யாம் சேண் தங்கும் எல்லாப் பொருளும் வல்ல சித்தரேம் - நாம் தூரத்திலுள்ள எல்லாப்பொருளையும் அழைத்தலில்வல்ல ஆக்கினை சித்தரெனப் பெயரும் உடையேம்.

சேண்டங்குமெல்லாப்பொருளும் வல்ல சித்தர் என்றமையில் ஆக்கினை சித்தர் எனப் பெயர் போந்தமையால் இதனாற் பெயர் கூறப்பட்டது. (௯)

உன்றனமக்குப்பெறல்வேண்டுவதொன்றுமிலலை
தென்றுவெனவுண்ணகைசெய்தனர்சித்தயோகர்
மன்றுமிவர்தம்மிறுமாப்புஞ்செருக்கும்வீறு
மென்றலளவிட்டறிவேனெனவெண்ணித்தேர்வான்.

(இ-ள்.) சித்தயோகர் தென்று - அந்தச் சித்தமூர்த்திகள் பாண்டியனே, உன்றால் நமக்குப் பெறல் வேண்டுவது ஒன்றுமில்லை என உள் நகை செய்தனா - உன்றல் நமக்குப் பெறும்பொருள் சிறிதுமில்லையென்று புன்னகை செய்தருளினு ர், மன் ஆம் இவர் தம் இறுமாப்பும் செருக்கும் - நிலைபெற்ற இவரது இறுமாப்பை யும் அகங்காரத்தையும், வீறும் எனறல் அளவிட்டு அறிவேன் என்ன எண்ணி தேர் வான்-நிகரன்றியுள்ள என்னளவைகளால் அளந்தறிவேனென்று ஆராய்ந்தறிவானு யினன்.

இதனுல் யாதுவேண்டும் என்னும் வினுவிற்கு விடை கூறப்பட்டது. (கo)

தேரும்பொழுதோருழவன்ஞெருசெல்வக்கன்ன
லாருங்கமுகென்னவயிர்ப்புறக்கொண்டுதாழப்
பாருந்திசையும்புகழ்பங்கயச்செங்கைதாங்கி
நீரும்பிறையுங்கரந்தார்தமைநேர்ந்துசொல்வான்.

(இ-ள்.) தேரும்பொழுது ஓர் உழவன் - அவ்வாறு ஆராயுங்காலையில் உழு தொழிலையுடைய ஒருவன், ஒரு செல்வக்கன்னல் ஆரும் கமுகு என்ன அயிர்ப்பு உற க்கொண்டு தாழ - செழித்தோங்கிய ஒரு கரும்பைக் கண்டோரெவரும் இது கமுக மரமோவென்று ஐயங்கொள்ளக் (கையுறையாகத்) தாங்கிவணங்க, பாரும் திசையு ம் புகழ் பங்கயம் செங்கை தாங்கி - நிலவுலகும் எட்டுத்திக்கும் புகழும் தாமரை போன்ற தனது செவந்த கையிலெடுத்து, நீரும் பிறையும் கரந்தார் தமை நேர்ந்து சொல்வான் - கங்கையையும் சந்திரனையும் ஒளித்துவந்தருளிய சித்தமூர்த்திகளை எதிர்ந்து சொல்லுகின்றுன்.

கைம்மாறு கருதாது கொடுக்குங் கரம் ஆதலால் இடத்தினிகழ்பொருளின் தொழில் தந்து பாருந்திசையும் புகழ்பங்கயச்செங்கை என்றூர். செல்வம் என்னுங் குறிப்பால் செழித்தோங்கும் எனப் பொருள்கொண்டாம். "குழைகொண்டுகோழி யெறியும்வாழ்க்கையள்" என்பதனுலுணர்க. (கக)

வல்லாரில்வல்லேமெனவும்மைமதித்தநீரிக்
கல்லானைக்கிந்தக்கரும்பையருத்தினெல்லாம்
வல்லாருநீரேமதுரைப்பெருமானும்நீரே
யல்லாலெவர்நும்மனம்வேட்டதளிப்பனென்றுன்.

(இ-ள்.) வல்லாரில் வல்லேம் என உம்மை மதித்த நீர் - வல்லவருள் யாம் வல்லேம் என்று தம்மைத்தாமே நன்கு மதித்த நீர், இக்கல்லானைக்கு இந்த கரும் பை அருத்தின் - இங்கு நிற்குங் கல்லானைக்கு இந்தக்கரும்பினை ஊட்டின், எல்லாம் வல்லாரும் நீரே மதுரைப்பெருமானும் நீரே அல்லால் எவர் - எல்லாம் வல்லவரும் நீரே மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளும் நீரேயன்றி யாருள்ளார், நும் மனம் வேட்டது அளிப்பன் என்றுன் - உமது மனத்திற்கருதியது எதுவோ அதனை த் தடையின்றிக்கொடுப்பேன் என்று கூறினுன்,

ஏழனுருபுகூட்டிப் பிரித்தற்கண்வந்தது. தாம் என்னும் படர்க்கைப்பெயர் முன்னிலையில் உபசாரப்பொருட்டின்மேல் நிற்றலால் தம்மைத்தாமே எனப் பொருள்கொண்டாம். (௧௨)

என்றுமுகிலைத்தளையிட்டவன்கூறக்கேட்டுத்
தென்னாவருதியெனப்புன்னகைசெய்துசித்தர்
நின்னால்வருவதெமக்கேதுநினக்குநாமே
யுன்னாசைதீரத்தருகின்றதலாமலுண்டோ.

(இ-ள்.) என்று முகிலை தளையிட்டவன் கூற கேட்டு - என்று மேகங்களைத் தளையிட்ட பாண்டியன் சொல்லக் கேட்டருளி, தென்னா வருதி என புன்னகை செய்து - பாண்டியனே இங்கு வருவாயென்று புன்னகையரும்பி, சித்தர் நின்னால் வருவது எமக்கு ஏது - அச்சித்தமூர்த்திகள் உன்னால் வரும் பயன் எமக்கு என்ன உள்ளது, நினக்கு - உனக்கு, நாமே உன் ஆசை தீர தருகின்றது அல்லாமல் உண்டோ- நாமே உனது ஆசை தீரும்படி தருவதல்லாமல் (யான்பெறுவது) வேறுண்டோ (உன்பால் ஒன்றுமில்லை என்றபடி.)

ஏகாரம் பிரிநிலைக்கண்வந்தது. (௧௩)

செல்லாவுலகத்தினுஞ்சென்றொருவிஞ்சைகற்றோர்
பல்லாருநன்குமதிக்கப்பயனெய்துவார்க
ளெல்லாமறிந்தவெமக்கொன்றினுமாசையில்லை
கல்லானைகன்னற்கறிக்கின்றதுகாண்டியென்றார்.

(இ-ள்.) ஒரு விஞ்சை கற்றோர்-(ஆகருஷண முதலிய ஆறனுள்) ஒரு வித்தையைக் கற்றவர்கள், செல்லா உலகத்தினும் சென்று பல்லாரும் நன்கு மதிக்க பயன் எய்துவார்கள்-அடைதற்கரிய உலகத்திலுஞ்சென்று பலரும் (அதனை) நன்குமதிக்கக் காட்டிப் பயனடைவார்கள், எல்லாம் அறிந்த எமக்கு ஒன்றிலும் ஆசை இல்லை-எல்லாவற்றையும் அறிந்த எங்களுக்கு ஒருபொருளிலும் விருப்பமில்லை, கல்லானை கன்னல் கறிக்கின்றது காண்டி என்றார்-கல்லானையானது கரும்பைக்கடித்துச் சுவைத்தலைக் காண்பாயென்றார்.

ஆகருஷணமுதலிய அறுவகைத்தொழில்மேலும், தனது எண்குணத்துள் முற்றுமுணர்தல் மேலுஞ்செல்ல எல்லாமறிந்த என்றார். காண்டி எனத் தெளிவுபற்றி எதிர்காலத்தை இறந்தகாலமாகக் கூறியது காலவழுவமைதி. (௧௪)

கடைக்கண்சிறிதேகுறித்தார்முன்கடாக்கல்யானை
மடைக்கண்டிறந்துமதமூன்றும்வழியவிண்வா
யடைக்கும்படிவாய்திறந்தார்த்துப்புழைக்கைநீட்டித்
தொடைக்குன்றனான்கைச்சுவைத்தண்டைப்பறித்ததன்றே.

(இ-ள்.) சிறிதே கடைக்கண் குறித்தார் முன் - சிறிது கடைக்கண்செய்தருளிய சித்தமூர்த்திகளின்முன், கடாக் கல்யானை - மதஞ்சிந்துங் கல்யானையானது, மடைக்கண் திறந்து மதம் மூன்றும் வழிய - மடைக்கண்போலக் கண்திறந்து மூன்று மதங்களும் ஒழுக, விண் வாய் அடைக்கும்படி வாய் திறந்து ஆர்த்து - மேகத்தின் வாயடையும்படி தனது வாயைத்திறந்தொலித்து, புழைக்கை நீட்டி தொடைக் குன்று அன்னான் கைச் சுவைத்தண்டை பறித்தது - துவாரம்பொருந்திய துதிக்கை

யை நீட்டி மாலையையணிந்த மலையைப்போலத் திண்மைவாய்ந்த பாண்டியனது கையிலுள்ள கரும்பினைப்பறித்தது.

கல்லாற்சமைந்த யானையாயினும் யானை என்றமையால் சாதியடைதந்து கடாக்கல்யானை என்றார். மாலையையணிந்ததோர் மலையின்மையால் தொடைக்குன்றன் என்றது இல்பொருளுவமையணி. (௧௫)

பறித்துக்கடைவாய்வழிசாறளிபாய்ந்துநக்கக்
கறித்துக்குதட்டிப்பருகிக்கரமூசலாட
நெறித்துத்தருக்கிநிழல்சீறிநிமிர்ந்துநிற்ப
மறித்துக்கடைக்கண்குறித்தார்பினுமாயம்வல்லார்.

(இ-ள்.) பறித்து கடை வாய் வழி சாறு அளிபாய்ந்து நக்க - (பாண்டியன் கையினின்றும்) பறித்துக் கடைவாயின் வழி ஒழுகுஞ் சாற்றினை வண்டுகள் பாய்ந்து சுவைப்பார்க்க, கறித்து குதட்டி பருகி - கடித்துக் குதட்டிச் சுவைத்து, கரம் ஊசலாட நெறித்து - (தனது) துதிக்கை ஊசல்போலாடப் பிண்டிசெய்து, தருக்கி நிழல் சீறி நிமிர்ந்து நிற்ப - அகங்கரித்துத் தனது நிழலைக்கோபித்து நிமிர்ந்து நிற்க, பின்னும் மாயம் வல்லார் மறித்துக் கடைக்கண் குறித்தார் - பின்னும் மாயைவித்தையில்வல்ல சித்தமூர்த்திகள் மீளவுஞ் சிறிது கடைக்கணித்தருளினார்.

கறித்தலும் குதட்டுதலும் பருகுதலும் கரமூசலாடலும் நெறித்தலுந் தருக்குதலும் நிழல் சீறுதலும் நிமிர்ந்து நிற்றலும் யானைக்குரிய தொழிலாதலால் தொழிற்றன்மையணி. (௧௬)

மட்டுற்றதாரான்கழுத்திற்கண்டமாலைதன்னை
யெட்டிப்பறித்தஇகல்காஞ்சுகிமாக்கள்சீறிக்
கிட்டிக்களிற்றைப்புடைப்பான்கிளர்கோல்கொண்டோச்சச்
சிட்டத்தவர்கண்சிவந்தானையைச்சீறிநோக்க.

(இ-ள்.) மட்டு உற்றதாரான் கழுத்தில் கண்டமாலை தன்னை எட்டிப்பறித்தது - வாசமிக்க மாலையையணிந்த பாண்டியனுடைய கழுத்திலணிந்த கண்டாவளியை யெட்டிப்பறித்தது, இகல் காஞ்சுகி மாக்கள் சீறி கிட்டி களிற்றை புடைப்பான் கிளர் கோல்கொண்டு ஓச்ச - போர்செய்யும் மெய்காப்பாளர் மிகவும் கோபித்து நெருங்கி யானையை யடிக்கும்படி தமது கையில் விளங்கும் கோலை மேலெடுக்க, சிட்டத்தவர் கண் சிவந்து ஆனையைச் சீறிநோக்க - யார்க்கும் மேலாகிய சித்தமூர்த்திகள் கண்கள் சிவந்து யானையைக் கோபித்துப்பார்த்தருள.

கண்டாவளி, கண்டாவலி யென்னும் வடசொல் திரிபு. கண்டத்திலணிந்த முத்தின் வரிசையாலாகிய கோவை. ஏகாவலியென வடநூலிற் கூறப்பட்டது. (௧௭)

கண்டாவளியைக்களிறுண்டதுகண்கள்சேப்புக்
கொண்டானரசன்சிவயோகரிற்கோபமூளத்
தண்டாவரசன்றமருட்டறுகண்ணர்சீறி
வண்டாரிதழிமறைத்தாரையடிக்கவந்தார்.

(இ-ள்.) கண்டாவளியை களிறு உண்டது-கழுத்திலணிந்த கண்டாவளியைப் பறித்த யானையானது (அதனை) உண்டது, அரசன் கண்கள் சேப்புக் கொண்டான் - அரசன் கண்கள் சிவந்து, சிவயோகரில் கோபம் மூள - சிவயோகர்களாகிய சித்தமூர்த்திகளிடத்துக் கோபம் மேலெழுந்தோங்க, தண்டா அரசன் தமருள் -

(அங்குநின்றும்) நீங்காத பாண்டியனுடைய பரிசனராயுள்ள மெய்காப்பாளர்களில், தறு கண்ணர் சிறி வண்டு ஆர் இதழி மறைத்தாரை அடிக்க வந்தார் - அஞ்சாமையையுடைய வீரர்கள் கோபித்து வண்டுகணிறைந்த கொன்றைமாலையை மறைத்தருளிவந்த அச்சித்தமூர்த்திகளை யடிக்கும்படி வந்தார்கள்.

நோக்க என்னும் வினையெச்சம் உண்டது என்னும் பிறவினையின் முதனிலை கொண்டது. சேப்புக்கொண்டான் ஒருசொல். இந்த அற்புதச்செய்தியைநோக்கி மெய்காப்பாளரும் அஞ்சினர் என்பார் தமருட்டறுகண்ணர் என்றார். (௧௮)

அப்போதிளமூரலரும்பியசித்தசாமி
கைப்போதமைத்துக்கடிந்தோர்தமைநின்மினென்ன
மைப்போதகமன்னவர்வைத்தடிபேர்க்கலாற்றா
தொப்போதரியநிலையோவியம்போலநின்றார்.

(இ-ள்.) அப்போது இளமூரல் அரும்பிய சித்தசாமி - அக்காலையில் புன்னகைசெய்தருளிய சித்தமூர்த்திகள், கைப்போது அமைத்து கடிந்தோர் தமை நின்மின் என்ன - தமது கைத்தாமரையை மறித்துக்கோபித்து (தம்மை) அடிக்கவந்தவர்களை நில்லுங்களென்று கூறியருள, மை போ தகம் அன்னவர் வைத்த அடிபேர்க்கல் ஆற்றாது - கரிய யானையை ஒத்த வீரர்கள் வைத்த காலைப் பேர்த்துவைக்க முடியாது, ஒப்பு ஓது அரிய நிலை ஓவியம்போல நின்றார் - (தனக்கு ஒன்றும்) உவமையின்மையால் உவமை கூறுதற்கரிய நிலையியற்பொருளாகிய சித்திரம்போல நின்றார்கள். வைத்த என்னும் பெயரொச்சத்தின் அகரவீறுதொகுத்தல். (௧௯)

மத்தக்களிற்றான்வெகுளித்தழன்மாறியன்பு
பொத்தப்புதைந்தமனத்தற்புதம்பொங்கிச்சோரச்
சித்தப்பெருமானடிமாமுடிதீண்டப்பாச
பெத்தத்தமியேன்பிழையைப்பொறுமென்றுவீழ்ந்தான்.

(இ-ள்.) மத்தம் களிற்றான் வெகுளி தழல் மாறி - மதமயக்கமுடைய ஆனைச்சேனையையுடைய பாண்டியன் கோபாக்கினி பற்றறநீங்கி, அன்பு பொத்த புதைந்த மனத்து அற்புதம் பொங்கிச் சோர - அன்பானது சிறிது மிடமின்றிப்போர்க்க (அதனால்) மூடுபட்ட மனத்தினிடத்து (அடைதற்கரிய) அதிசயம் பொங்கி வழிதலால், சித்தப்பெருமான் அடிமா முடி தீண்ட - சித்தமூர்த்திகளினுடைய திருவடிகளைத் தனது பெரிய மணிமகுடந்தீண்ட, பாச பெத்தத் தமியேன் பிழையைப் பொறுமென்று வீழ்ந்தான் - பாசத்தாலாகிய பந்தத்திற் கட்டுண்ட தமியேன்செய்த குற்றங்களைப் பொறுத்தருளுமென்று தண்டாகாரமாக வீழ்ந்து வணங்கினான்.

சோர என்னும் வினையெச்சங் காரண்காரியப்பொருள்மேல் நிற்றலால் வழிதலால் என்றும். பாசபெத்தம் இரண்டும் வடசொல்லாதலால் வருமொழி வல்லெழுத்து இயல்பாயிற்று. அற்புதம் என்றமையால் அடைதற்கரிய என்றும். பாசம் ஆணவமுதலிய மலங்கள்மேல் நிற்றலால் சாதியொருமை. (௨௦)

அன்புக்கிரங்குங்கருணைக்கடலானவைய
ரின்புற்றுவேண்டும்வரங்கேளெனத்தாழ்ந்துவேந்த
னன்புத்திரப்பேறருள்வாயெனநல்கிச்செங்கை
வன்புற்றவேழமிசைவைத்தருணாட்டம்வைத்தார்.

(இ-ள்.) அன்புக்கு இரங்கும் கருணைக்கடலான ஐயர்-(அடியவர்களது) அன்புக்குக்கனிந்தருளும் கிருபைக்கடலாகிய சித்தமூர்த்திகள்,இன்பு உற்று வேண்டும் வரம் கேள் என-மகிழ்கூர்ந்து வேண்டியவரத்தைக் கேளாயென்றருள,வேந்தன் தாழ்ந்து நன் புத்திரப்பேறு அருள்வாய் என நல்கி-அபிடேகபாண்டியன் வணங்கி நல்ல புத்திரப்பேற்றை அருள்செய்வாயென்று குறையிரக்கக் கொடுத்தருளி, செங்கை வன்பு உற்ற வேழமிசை வைத்து அருள் நாட்டம் வைத்தார்-(தமது) செவந்த திருக்கரத்தை வலிமைமிக்க யானையின்மேல் வைத்துக் கிருபாநோக்கம் வைத்தருளினார்.

இரங்குவானது பணியாதலால் அன்புக்கிரங்கும் எனவும், கல்லானை என்பது தோன்ற வன்புற்ற வேழம் எனவுங் கூறினார். (உக)

கலிவிருத்தம்.

தழைக்குநீள்கதிர்த்தண்முத்தமாலையைப்
புழைக்கைநீட்டிக்கொடுத்ததுபோதக
மழைக்கைநீட்டினன்வாங்கினனீதியிற்
பிழைக்கலாதபெருந்தகைவேந்தனே.

(இ-ள்.) தழைக்கும் நீள் கதிர் தண் முத்த மாலையை - பரந்த மிக்க கிரணத்தையுடைய தண்ணிய கண்டாவளியாகிய முத்துமாலையை, போதகம் புழைக்கை நீட்டி கொடுத்தது - (விழுங்கிய) கல்லானையானது (மீளவும் தனது) துவாரம்பொருந்திய துதிக்கையால் நீட்டிக்கொடுக்க, நீதியில் பிழைக்கலாத பெருந்தகை வேந்தன் - மனுநீதியினின்று சிறிதும் தவறாத பெருந்தகைமையையுடைய அபிடேகபாண்டியன், மழைக்கை நீட்டினன் வாங்கினன் - மேகம்போலப் பிரிதியுபகாரங்கருதாது கொடுக்கும் தனது கையைநீட்டி வாங்கினான்.

செங்கோல் சிறிதுங் கோடாதவன் என்பார் நீதியிற் பிழைக்கலாத என்றார். கொடுத்தது முற்றெச்சம். (உஉ)

முத்தமாலிகைவாங்குமுன்முன்னின்ற
சித்தசாமிதிருவுருக்கண்டிலன்
மத்

(இ-ள்.) முத்த மாலிகை வாங்கு முன் - முத்தமாலையைக் கைநீட்டி வாங்குதற்குமுன், முன் நின்ற சித்த சாமி திருவுரு கண்டிலன் - தன் முன்னின்றருளிய சித்தமூர்த்திகளினுடைய திருவுருவைக்காணாகி, மத்தம் யானை வடிவமும்-மதமக்கத்தையுடைய யானையின் வடிவமும், ஏனைய ஒத்தது ஆக உரவோன் வெருவினான் - (அங்குநின்ற) மற்றைய கல்லானைகளை ஒத்திருக்க அன்பிற்பெரியோனாகிய அபிடேகபாண்டியன் அச்சமுற்றான்.

கண்டிலன் முற்றெச்சம். (உ௩)

இந்தவாடலெமக்குயிராயவிவ்
வந்தமில்லியருள்விளையாட்டென
முந்தைவேதமுதல்வனை மீளவும்
வந்துவந்தனைசெய்தனன்மன்னனே.

(இ-ள்.) இந்த ஆடல் எமக்கு உயிராய இ அந்தம் இல்லி அருள் விளையாட்டு என்று - இந்தத் திருவிளையாடல் எமதுயிர்க்கு உயிராய் நிலவிய இந்த இறுதியில்லாத சோமசுந்தரமூர்த்தியின் அருள் விளையாடலெனறு கருதி, மூன்றை வேத முதல்வனை மன்னன் மீளவும் வந்து வந்தனை செய்தனன் - யாவருக்கும் முற்பட்டவராகிய அச்சோமசுந்தரக்கடவுளை அரசன் மீளவும் வந்து வந்தித்தான். (௨௪)

முழுதுணர்ந்தமுதல்வநின்னாடலை
யிழுதையேனறியாதளந்தேனென்று
வழுதிறைஞ்சியபராதமீந்துகை
தொழுதுநின்றுதுதிக்கத்தொடங்கினான்.

(இ-ள்.) முழுதும் உணர்ந்த முதல்வ - முற்றுமுணர்ந்தருளிய முதல்வனே, நின் ஆடலை இழுதை யேன் அறியாது அளந்தேன் என்று - உனது திருவிளையாடலை அறிவில்லேனாகிய நான் அறியாமையால் அளந்தறியத் தொடங்கினேனென்று, அழுது இறைஞ்சி அபராதம் ஈந்து கைதொழுது நின்று துதிக்க தொடங்கினான்-அழுது வணங்கி அடியேன் பேரபராதி ஆதலால் (அவ்வபராதத்தைப் பொறுத்தருள்கவென) அபராதத்தை இறுத்துக் கைகூப்பிநின்று துதிக்கத்தொடங்கினான்.

அறியாமையாற் பிழைசெய்தோர் அறிந்தவழி யது தீர்த்தற்பொருட்டு அபராதமிறுத்தல் முறையாதலால் அபராதமீந்து என்றார். முழுது என்பதனிறுதியில் முற்றும்மை தொகுத்தல். (௨௫)

கொச்சகக்கலிப்பா.

வேதியாய்வேதவிளைபொருளாய்வேதத்தி
னீதியாய்நீதிநெறிகடந்தநீளொளியா
யாதியாயீறாய்நடுவாயவைகழிந்த
சோதியாய்நின்றாயென்சோதனைத்தோநின்னியல்பே.

(இ-ள்.) வேதியாய் - வேதத்தில் வல்ல அந்தணனே, வேதம் விளைபொருளாய் - (நுண்ணுணர்வுடையோர் ஆராயுந்தோறும்) வேதத்தில் விளையும் பொருளாய் உள்ளவனே, வேதத்தின் நீதியாய் - அவ்வேதத்துளடங்கிய நீதிவடிவானவனே, நீதி நெறி கடந்த நீள் ஒளியாய்-அந்த நீதியின் நெறியைக்கடந்துநின்ற மிக்க ஒளிவடிவாயுள்ளாய், ஆதியாய் ஈறாய் நடுவாய் அவை கழிந்த சோதியாய் நின்றாய் - முதலாயுள்ள தோற்றமும் இறுதியாயுள்ள ஒடுக்கமும் நடுவாயுள்ள நிலையும் அவற்றைக் கழிந்துநின்ற சோதியும் ஆகி நின்றாய், நின் இயல்பு என் சோதனைத்தோ - (இவ்வாறு நின்ற) உனது தன்மை எனது சோதனையிலகப்பட்டதோ.

அயன் முதலிய யாவருக்கும் வேதாகமங்களைத்தந்து அவற்றின் பொருளை விரித்தருளுதலால் அந்தணனாய் நின்றான் என்பான் வேதியாய் எனவும், வேதத்தில் ஆன்மாக்கள் தரத்திற்கேற்ப ஆங்காங்குப் பலகடவுளரைத் தான் கூறியிருப்பினும் அக்கடவுளர்பாலன்புபூண்டு வழிபட்டொழுகு மான்மாக்களுக்கு, அரசன் தன்னாணையைத் தன்னேவல்வழி நிற்கு மந்திரி முதலாயினரிடத்து வைத்துக் குடிகளைக் காக்குமாறுபோலத் தன்னாணையைத் தன்னேவல்வழி நிற்கும் அக்கடவுளரிடத்து வைத்துப் பயன் கொடுத்தருளு முதற் கடவுள் சிவனேயாதலால் அவ்வேதத்திற் கூறும் பொருளெல்லாம் அவனே என்பான் வேதவிளைபொருளாய் எனவும், தானருளிய வேதாகமங்களின்வழி யொழுகாத ஆன்மாக்களைத் தனது சத்தியால் நரகத்திற்புகுத்தியும், அவற்றின்வழி யொழுகும் ஆன்மாக்களைச் சுவர்க்காதி யுலகிற் செலு

த்தியும் நிற்பது அவனது அருட்குணம் என்பான் வேதத்தினீதியாய் எனவும், மன வாக்கிற்கதீதன் என்பான் நீதிநெறிகடந்த எனவும், சோமசூரியாக்கினி முதலிய ஒளிகளுக்கெல்லாம் ஒளிதரும் பேரொளியாய் நின்றான் என்பான் நீளொளியாய் எனவும், ஆன்மாக்களுக்கு மலபாகம் வருவித்தற்பொருட்டுத் தோற்றமும் நிலையும் இறுதியுமாய்த் தனது சத்திகளால் நின்றான் என்பான் ஆதியாயீறாய் நடுவாய் எனவும், அவை அவனுக்கு இல்லை என்பான் அவை கழிந்த எனவும், அவற்றாட்படாதவனுதலால் அளவை கடந்தவன் என்பான் என் சோதனைத்தோ நின்னியல்பே எனவுங் கூறினான். " யாதொருதெய்வங்கொண்டீ ரத்தெய்வமாகியாங்கே - மாதொருபாகனார்தாம்வருவர் " எனவும், " மறைகளீசன்சொலச்சொல்வழி வராவுயிரைவைக்கும் - சிறைகள்மாநிரயமிட்ட பணிசெய்வோர்செல்வத்தோடும் - உறையுமாபதிகளும்பருலகங்கள் யோனிக்கெல்லாம் - இறைவனுணையினாலின்பதுன்பங்களியைவவாகும்" எனவும், " நாயகன்கண்ணயப்பானுயகி புதைப்பவெங்கும்-பாயிருளாகிமூடப் பரிந்துலகினுக்குநெற்றித் - தூயநேத்திரத்தினாலே சுடரொளிகொடுத்தபண்பிற் - றேயமாரொளிகளெல்லாஞ் சிவனுருத்தேசதென்னார் " எனவும், "மெய்ச்சுடருக்கெல்லாம் - ஒளிவந்தபூங்கழல் " எனவும் வரும் உண்மைத்திருவாக்குகளாலுணர்க.(உ௬)

நின்னான்மொழிந்தமறைநின்னடிகள்வந்தித்தும்
பன்னாளருச்சித்தும்பாதந்தலைசுமந்து
முன்னுமம்வாசித்துமுன்னையறியேனென்று
சொன்னாலடியனேன்சோதனைத்தோநின்னியல்பே.

(இ-ள்.) நின்னால் மொழிந்த மறை நின் அடிகள் வந்தித்தும் - உன்னால் திருவாய்மலர்ந்தருளப்பட்ட வேதங்கள் உனது திருவடிகளை வந்தனைசெய்தும், பல் நாள் அருச்சித்தும்-பலநாளும் உன்னை அருச்சனைசெய்தும், பாதம் தலை சுமந்தும்- உனது திருவடிகளைத் தலைமேற்சுமந்தும், உன் நாமம் வாசித்தும் உன்னை அறியேன் என்று சொன்னால் நின் இயல்பு அடியனேன் சோதனைத்தோ - உனது திருநாமங்களைக்கூறியும் உன்னை யறியேனென்று முறையிட்டால் உனது தன்மை யடியேனுடைய சோதனையுளகப்பட்டதோ.

விகாரங்கட்குக் காரணமாகிய பரதந்திரமுதலிய உபாதைகள் தனக்குச் சிறிதுமின்றி நின்ற அநாதிமுத்தசித்துருவாகிய இறைவன் அருளே திருவுருவாகக்கொண்டு, ஆன்மாக்களுய்தற்பொருட்டும் குருபரம்பரை விளங்குதற்பொருட்டும் வேதாகமங்களைக் கூறியருளினமையால் நின்னால் மொழிந்த மறை எனவும், வேதாரணியமென்னும் திருப்பதியில் அருச்சித்தும் வந்தித்தும் வழிபட்டமையால் பன்னாளருச்சித்தும் வந்தித்தும் எனவும், பாதுகையாகிச் சுமத்தலால் பாதந் தலைசுமந்தும் எனவும், அவ்விறைவனது திருநாமங்களை கூறப்படுதலால் உன்னுமம் வாசித்தும் எனவும், விந்துசத்தியின் காரியப்பாடாய்ச் சொற்பிரபஞ்சமாய் நின்ற வேதம் அவ்விறைவனை விச்சுவாதிகனெனவுங் கூறுதலால் உன்னை யறியேனென்று சொன்னாலெனவுங் கூறினான். அருளே திருவுருவாகக்கொண்டு என்பது. " உருவருள்குணங்களோடு முணர்வருளுருவிற்றோன்றும் - கருமமுமருளரன்றன் காசரணுநிசாங்கம் - தருமருளுபாங்கமெல்லாம் தானருடனக்கொன்றின்றி - யருளுருவுயிருக்கென்றே யாக்கினன்சிந்தனன்றே " என்பதனாலும், ஆன்மாக்களுய்தறபொருட்டுங் குருபரம்பரை விளங்குதற்பொருட்டும் என்பது " ஆரணமாகமங்க ளருளினாலுருவுகொண்டு - காரணனருளானுகிற் கதிப்பவரில்லையாகும் - நாரணன்முதலாயுள்ள சு

நரர்சுரர்நாகர்க்கெல்லாம் - சிரஞ்சிருசந்தானச் செய்தியுஞ்சென்றிடாவே" என்பதனாலும், இறைவனை விச்சுவாதிகன் என வேதங்கூறும் என்பது "உலகினையிறந்து நின்ற தரனுருவென்பதோரார்" என்பதனாலும் உணர்க. செய்யுளாதலால் வந்தித்தும் பன்னாளருச்சித்தும் என மாறிக்கூறினார். உபாதைகள் ஆவன பரதந்திரம், சிற்றுணர்வு, சிறுசெயல், விருப்பு, வெறுப்பு. (௨௭)

பெரியதினும்பெரியதுமாய்ச்சிறியதினுஞ்சிறியதுமா
யரியதினுமரியதுமாயெளியதினுமெளியதுமாய்க்
கரியதுமாய்க்காண்பானுங்காட்சியுமாயவைகடந்த
துரியமுமாய்நின்றாயென்சோதனைத்தோநின்னியல்பே.

(இ-ள்.) பெரியதினும் பெரியதும் ஆய் - மகத்திலும் மகத்துமாய், சிறியதினும் சிறியதும் ஆய் - அணுவிலுமணுவுமாய், அரியதினும் அரியதும் ஆய்-அரிய பொருளிலும் அரிய பொருளுமாய், எளியதினும் எளியதுமாய் - எளிய பொருளிலும் எளிய பொருளுமாய், கரியதும் ஆய் - நடுநின்றுணர்த்துஞ் சாட்சிப்பொருளுமாய், காண்பானும் காட்சியுமாய்-ஆன்மாவும் உணரும் விடயப்பொருளுமாய், அவை கடந்த துரியமும் ஆய் நின்றாய்-அவற்றைக்கடந்த காட்டுவானாகியும் நின்றவனே, நின் இயல்பு என் சோதனைத்தோ - உனது தன்மை என் சோதனையிலகப்பட்டதோ. (இல்லை என்றபடி.)

அளவின்றிப்பரந்த அண்டங்கள் யாவும் தன்னுள் வியாப்பியமாகத் தான் வியாபகமா யெங்கு நிறைந்து நிற்றலால் பெரியதினும் பெரியதுமாய் எனவும், மலபாகம் வருவித்தருளுதற்கு அணுக்களாகிய உயிர்கட்குள்ளிருந்து அதிசூக்கும ஐந்தொழிலு நடத்துதலால் சிறியதினுஞ் சிறியதுமாய் எனவும், உழுவலன்பிற் றலைப்படாத அயன் முதலிய தேவர்கட்கும் அரியனாய் நிற்றலால் அரியதினு மரியதுமாயெனவும், அவ்வன்பிற்றலைப்பட்ட அடியார்க்கெளியனாதலால் எளியதினுமெளியதுமாய் எனவும், முற்றுமுணர்தற்றன்மையால் எவ்வெப்பொருள்களினுட்கோளையு முணர்ந்து அதற்கேற்ப நடுநின்று அவ்வவ்வினைப்பயன்களை யருத்துதலால் கரியதுமாய் எனவும், நிமித்தகாரணனாய் நின்றதான் அநந்தர் சீகண்டர் முகத்தால் அதனைக் கூட்டுதற்கண் கலப்பினால் ஒன்றாய் நிற்றலால் காண்பானுங் காட்சியுமாய் எனவும், பொருளால் வேறாய் நிற்றலால் அவை கடந்த எனவும், சித்தமுஞ் செல்லாத சேட்சியனாகிய இறைவனை இயைபுபற்றிச் சித்தமுஞ்செல்லாச் சேட்சியதாகிய துரியமுமாய் எனவுங்கூறினான். "அண்டப்பகுதியினுண்டைப்பிறக்கம்-அளப்பருந்தன்மை வளப்பெருங்காட்சி - யொன்றனுக்கொன்று நின்றெழில்பகரின் - நூற்றொருகோடியின் மேற்படவிரிந்தன - இன்னுழைகதிரின் றுன்னணுப்புரையச் - சிறியவாகப்பெரியோன்" எனவும், "அணுத்தருந்தன்மை யில்லையோன்காண்க" எனவும், "கனவிலுந்தேவர்க்கரியாய்போற்றி" எனவும், "நனவிலும்நாயேற்கருளினைபோற்றி" எனவும், "பல்லுயிரெல்லாம் பயின்றனனாகி" எனவும், "சித்தமுஞ்செல்லாச் சேட்சியன்காண்க" எனவும் வரும் ஏதுக்களாலுணர்க. (௨௮)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

என்றுபலமுறைபழிச்சிமனையெய்திவிக்ரமனையீன்றுபன்னாட்
டொன்றுமுறைகோலோச்சிவிக்கிரமன்சுவன்மிசைப்பார்சுமத்திப்பாசம்
வென்றுகளைந்தருட்சித்தசாமிதிருவருணோக்கால்விளைபேரின்ப
மன்றமதுவிழ்வண்டிற்கலந்திருந்தானபிடேகமாறன்மன்னே.

யானையெய்ததிருவிளையாடல்.



(இ-ள்.) என்று பல முறை பழிச்சி மனை எய்தி விக்ரமனை ஈன்று - என்று
பதரந் துதித்துத் தனது கோயிலையடைந்து விக்கிரமபாண்டியனைப்பெற்று, பல்
ள் தொன்று முறை கோல் ஓச்சி விக்கிரமன் சுவல் மிசை பார் சுமத்தி-பலநாளும்
ண்டுபோல மறநூல் முறைப்படி செங்கோல் செலுத்தி அவ்விக்கிரமபாண்டியனு
டைய பிடர்மேல் பூபாரத்தைச்சுமத்தி, பாசம் வென்று களைந்து-பாசத்தொடக்கை
வன்று பற்றறக்களைந்து, அருள் சித்தசாமி திருவருள் நோக்கால் விளைபேரின்பம்-
னக்கு ஆசிரிய மூர்த்தமாய் வந்தருளிய) அருள்வடிவாகிய சித்தமூர்த்தியின் தி
வருட்பார்வையால் விளையும் பேரின்பத்தில், மது வீழ் வண்டில் - மதுவில் வீழ்ந்த
ண்டைப்போல, மன்ற அபிடேக மாறன் கலந்திருந்தான் - தேற்றமாக அபிடே
பாண்டியன் இரண்டறக்கலந்திருந்தான்.

விக்கிரமன் பராக்கிரமத்தையுடையவன். சித்தமூர்த்திகள் திருவருளாற்
பற்றனன் என்பார் பலமுறை பழிச்சி விக்கிரமனையீன்று எனவும், அம்மூர்த்திக
ர திருவருள் நோக்கால் பாசக்ஷயம் பெற்றுப் பரமுத்தியடைந்தான் என்பார் ச
பிசைப் பொருள்படச் சித்தசாமி திருவருள் நோக்கால் எனவும் கூறினார். (உ௧)

கல்லானைக்குக்கரும்பருத்தியபடலம் முற்றிற்று.

---

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - ௧௩௮௫.

---

## இருபத்திரண்டாவது

# யானையெய்தபடலம்.

---

கலிவிருத்தம்.

விழ்கடுக்கையர்கலானைகழைதின்ன
விட்டதிதுபஞ்சவனிடத்தமணரேவி
விட்டமதயானைவிழமேவலர்புரத்தைச்
சுட்டகணைவிட்டுயிர்தொலைத்தமுறைசொல்வாம்.

(இ-ள்.) கட்டு அவிழ் கடுக்கையர் கல்லானை கழை தின்ன இட்டது இது-மு
றுக்கவிழ்ந்த கொன்றைமலர்மாலையையணிந்த சித்தமூர்த்திகள் கல்லானையானது க
ரும்புதின்னக் கொடுத்தருளியது இந்தத்திருவிளையாடல், பஞ்சவன் இடத்து அமண
ர் ஏவிவிட்ட மதயானைவிழ - விக்கிரமபாண்டியன்மேல் சமணர்களேவிய மதமய
க்கத்தையுடைய யானையானது சாய்ந்து வீழ்ந்திறக்க, மேவலர் புரத்தை சுட்டகணை
விட்டு உயிர்தொலைத்த முறை சொல்வாம்-பகைவர் திரிபுரங்களை நீறுபடுத்திய பாண
த்தினை ஏவி யதனுயிரைமாய்த்தருளிய திருவிளையாடலை யினிக்கூறுவாம்.
உயிர் தொலைத்தலாவது உடம்பின்வாழ்க்கையைப்போக்குதல். (௧)

விக்கிரமபாண்டியன்வெலற்கரியசெங்கோ
றிக்குநிலனுந்திறைகொள்செல்வநிறைவெய்த
வக்கிரமவெங்கலியரும்பகையொதுங்கச்
சக்கரமுருட்டியிடர்சாய்த்துமுறைசெய்வான்.

(இ-ள்.) விக்கிரமபாண்டியன் வெலற்கு அரிய செங்கோல்-விக்கிரமபாண்டியன் செலுத்தும் (பிறரால்) தடுத்தற்கரிய செங்கோலானது, திக்கும் நிலனும் திறைகொள் செல்வம் நிறைவு எய்த-எட்டுத்திக்கினுமுள்ள இந்திரன்முதலியோரும் நிலவுலகிலுள்ள அரசர்களும் இறுக்குந் திறையாலாகிய செல்வததின் நிறைவடைந்தோங்க, அக்கிரமவெங்கலி அரும்பகை ஒதுங்க சக்கரம் உருட்டி-நீதி திறம்புதலென்னும் கொடியகலியாகிய அரியபகைமுதுகிட்டோடத் தனது ஆணையாகிய சக்கரத்தையுஞ் செலுத்தி, இடர் சாய்த்து முறை செய்வான்-(அப்பகையால் தன்கோற்கீழ்வாழுங் குடிகள்) துன்பத்தை யடையாமற்காத்து வருவானாயினன்.

தனது பெயர்ப்பொருளை விளக்கினனென்பார் அவனது செங்கோற்கு வெலற்கரிய எனத் தொழிலடைதந்தும், அப்பெயர்ப்பொருளாலாகிய பயனை உருவத்தாலும் அருவத்தாலும் அடைந்தானென்பார் திக்குநிலனும் திறைகொள் செல்வநிறைவெய்த எனவும், இடர்சாய்த்து எனவுங்கூறினர். திக்கு நிலன் இடவாகுபெயர். (உ)

புத்தரமணாதியபுறக்களையகழ்ந்து
நித்தமறையாகமநெறிப்பயிர்வளர்த்து
மெய்த்தவிதிபத்தியின்விளைந்தபயன்யாருந்
துய்த்திடமநுத்தொழினடத்திவருதூயோன்.

(இ-ள்.) புத்தர் அமண் ஆதியபுறக்களை அகழ்ந்தும்-புத்தருஞ் சமணரும் முதலாகிய புறமதக்களை களைவேரோடு களைந்தும், நித்தம் மறை ஆகம நெறி பயிர் வளர்த்தும்-அழியாத்தன்மையையுடைய வேதநெறியும் ஆகமநெறியுமாகிய பயிர்கள்மேலெழுந்தோங்க வளர்த்தும், மெய்த்தவிதிபத்தியின் விளைந்த பயன் யாரும் துய்த்திட-(அவ்வேதப்பயிரிலும் ஆகமப்பயிரிலும்) மெய்மையையுடைய விதியும் பத்தியுமாக விளைந்தபயன்களை எவரும் நுகர்ந்துகளிக்க, மநுதொழில் நடத்திவரு தூயோன் - மநுநூல் முறைமையை நடத்திவரும் பாண்டியன்.

வைதிகசைவங்களை விருத்திசெய்தானென்பார், நித்தமறையாகமப்பயிர் வளர்த்தும்எனவும், அவற்றிற்குப் பெரும்பகையாயுள்ள புத்தமுதலிய புறமதங்களைக் களைந்தானென்பார். புத்தரமணாதிய புறக்களையகழ்ந்தும்எனவும், அப்பயிர்களால் விளையும்பயன்கள் விதியும் பத்தியும் ஆதலால் மெய்த்தவிதிபத்தியின் விளைந்தபயன் எனவும், அப்பயன்களைத் தன் கோற்கீழ்வாழுங் குடிகள் நுகரமநுநீதி நடத்தினன் என்பார் யாருந்துய்த்திட எனவும், இவ்வாறிருமைப்பயன்களையுங் குடிகளுக்கு உண்பிப்போன் மனத்தூயனாவோன் வேண்டும் என்பார் தூயோன் எனவுங்கூறினர். விதியாவது அருளை நோக்காது அறத்தினையீட்டடல். பத்தியாவது அந்த அறத்தின் முதிர்ச்சியால் அருள்வழி நிற்றல். இன் வேண்டாவழிச்சாரியை. (௩)

மருவிதழியானுறையும்வானிழிவிமானத்
தருகுவடபக்கமுறவாலயமெழுப்பி
யுருவருவிரண்டினையுமொருவிவருசித்தர்
திருவுருவுகண்டுபணிசெய்தொழுகுநாளில்.

(இ-ள்.) மரு இதழியான் உறையும் வான் இழிவிமானத்து அருகு-வாசமிக்க கொன்றைமலர் மாலையையணிந்த சோமசுந்தரக்கடவுள் எழுந்தருளிய விண்ணுலகினின்றும்வந்த இந்திரவிமானத்தின் பக்கத்தில், வடபக்கம் உற ஆலயம் எழுப்பி-(சிற்பநூல்விதிப்படி) வடபாலில் ஓராலயங்கட்டுவித்து, உரு அரு இரண்டினையும் ஒருவி

வரு சித்தர் திருவுருவுகண்டு - உருவும் அருவுமாகிய இரண்டினையும் நீக்கி அருளுருவங் கொண்டுவந்த சித்தமூர்த்திகளது திருவுருவைத் (தனது பிதாவின் கட்டளையின்படி) நியமித்து, பணிசெய்து ஒழுகும்நாளில் - பூசித்து நடந்துவருங்காலையில்.

பஞ்சபூத பரிணாமமாகிய தூலவுருவும் மூலப்பகுதியின் காரியமாகிய சூக்குமவுருவு மாயா காரியமாதலால் அதனைக் கடந்து அருளுருவாய் வந்தார் என்பார் உருவரு விரண்டினையும் ஒருவி வருசித்தர் எனவும், சித்தமூர்த்திகள் வரத்தால் தோன்றினமையால் அவன் பிதா இட்ட கட்டளையென்பார் ஆலயம் எழுப்பி சித்தர் திருவுருவுகண்டு பணிசெய் தொழுகுநாளில் எனவுங் கூறினார். தூலவுடம்பு தோன்றுதற்குச் சூக்குமவுடம்பு காரணமாதலால் காரியமுன்னுங் காரணம் பின்னுமாக வைத்தார். "தூலமாமுருவுதோன்றச்சூக்குமமுதல்" என்ற ஏதுவாலுணர்க. (௪)

செய்யகதிரோன்வழியசெம்பியனொருத்தன்
கையனவன்வென்றிபயில்காஞ்சிநகருள்ளான்
பொய்யமணர்கட்டுரைபுறத்துறையினின்றான்
மையின்மதிமாறனொடுமாறுபடநின்றான்.

(இ-ள்.) செய்ய கதிரோன்வழிய செம்பியன் ஒருத்தன் - சூரியன் மரபின் வழிவந்த சோழனொருவனுள்ளான், கையன் - அவனே நீ வழிப்பட்டு நடப்பவன், அவன் வென்றி பயில் காஞ்சிநகருள்ளான் - அச்சோழனே வெற்றிமிக்க காஞ்சிநகரத்தில் வசிப்பவன், பொய் அமணர்கட்டுரை புறத்துறையில் நின்றான் - பொய்மையொழுக்கினையுடைய சமணர்மதமாகிய புறமார்க்கத்தினின்றவன், மை இல் மதிமாறனொடு மாறுபட நின்றான்-(அவன்) குற்றமில்லாத சந்திரன்மரபிற் றோன்றிய பாண்டியனோடு முரணிமாறுபட்டு நின்றான்.

குலவிரோதம் முன்னமே உள்ளது தோன்றச்செய்ய கதிரோன்வழிய செம்பியன் எனவும், மையின்மதிமாறனெனவும், இடையிற் சமயவிரோதம் உள்ளதென்பது தோன்றப் பொய்யமணர்கட்டுரை புறத்துறையினின்றான் எனவும், இவற்றால் இறுதியில் நின்றது பகைமையென்பது தோன்ற, மாறுபட நின்றான் எனவும் கூறினார். (௫)

முடங்கன்மதிசெஞ்சடைமுடித்துவிடையேறும்
விடங்கரதுசேவடிவிழுங்கியமனத்து
மடங்கனிகர்தென்னனெதிர்வந்துபொரலாற்றா
தடங்கலனோர்வஞ்சனையினாலடமதித்தான்.

(இ-ள்.) முடங்கல் மதி செஞ்சடை முடித்து விடை ஏறும் - வளைந்த சந்திரனைச்செவந்த சடாமுடியிற்சூடி இடபத்தி லாரோகணித்தருளும், விடங்கரது சேவடிவிழுங்கிய மனத்து - சோமசுந்தரக்கடவுளினுடைய செவந்த திருவடிகளை யிடையறாது பதித்தமனத்தையுடைய, மடங்கல் நிகர் தென்னன் எதிர்வந்து பொரல் ஆற்றாது - சிங்கத்தையொத்த விக்கிரமபாண்டியனெதிரேவந்து போர்செய்யமுடியாது, அடங்கலன் ஓர்வஞ்சனையினால் அடமதித்தான் - பகைவனாகிய சோழன் ஒரு சூழ்ச்சியாற் கொல்லக்கருதினான்.

பலதரம்வந்து போர்செய்ய ஆற்றாது முதுகிட்டோடினவனாதலால் பொரலாற்றாது ஓர் வஞ்சனையினால் அடமதித்தான் என்றார். (௬)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அஞ்சனங்கவுஞ்சங்கோவத்தனந்திரிகூடங்காஞ்சி
குஞ்சரசையமேமகூடமேவிந்தமென்னு
மஞ்சிவர்வரைகளெட்டும்வைகுறுமமணர்தம்மி
லெஞ்சலில்குரவர்க்கோலைவேறுவேறெழுதிவிட்டான்.

(இ-ள்.) அஞ்சனம் கவுஞ்சம் கோவத்தனம் திரி கூடம் காஞ்சி - அஞ்சனமுங் கிரவுஞ்சமுங் கோவத்தனமுந் திரிகூடமுங் காஞ்சியும், குஞ்சரசையம் ஏமகூடம் விந்தம் என்னும் மஞ்சு இவர்வரைகள் எட்டும் வைகுறும் அமணர்தம்மில் - யானைகள் சஞ்சரிக்கும் சையமும் ஏமகூடமும் விந்தமுமென்று சொல்லப்பட்ட மேகங்கள் சஞ்சரிக்கும் அட்டகுல பர்வதங்களிலும் தங்கிய சமணர்களில், எஞ்சலில் குரவர்க்கும் வேறுவேறு ஓலை எழுதிவிட்டான்-குறைதலில்லாத ஆசிரியத்தன்மை வாய்ந்த எண்ணாயிரஞ்சமணர்களுக்கும் ஓலையைத் தனித்தனி யெழுதியனுப்பினன்.

சையம் என்பது சகிக்கத்தக்கதென்னும் பொருட்டு. வைகுறும் ஒருசொல். இல்லுருபு கூட்டிப் பிரித்தற் பொருளில்வந்தது. முற்றும்மை தொகுத்தல். (எ)

வடிவுபோலுள்ளமெல்லாமாசிருள்புதையநின்ற
வடிகண்மாராவாரெண்ணாயிரவருமார்த்தார்வேய்ந்த
முடிகெழுவேந்தன்விட்டமுடங்கலைநிமிர்த்துவாசித்
திடிகெழுகார்போற்குன்றினிழிந்துவேறிடத்திற்செல்வார்.

(இ-ள்.) வடிவுபோல் உள்ளம் எல்லாம் மாசு இருள் புதைய நின்ற அடிகண்மாராவார் எண்ணாயிரவரும் - தமதுருவம் கருநிறம் வாய்ந்திருத்தல் போலத் தமதிருதய முற்றிலும் அஞ்ஞானமாகிய இருள்பொத்த நின்ற அடிகண் மாராவாராகிய எண்ணாயிரஞ் சமணர்களும், ஆர்த்தார்வேய்ந்த முடிகெழுவேந்தன் விட்ட முடங்கலை நிமிர்த்து வாசித்து - ஆத்திமாலையைச்சூடிய கிரீடந்தரித்த சோழனனுப்பிய ஓலையைப் பிரித்து வாசித்து, இடிகெழுகார்போல் குன்றின் இழிந்து வேறிடத்தில் செல்வார் - இடியோசைமிக்க மேகம்போல அம்மலைகளினின்றிறங்கிக் காஞ்சிநகரத்திற்குச் செல்வாராயினர்.

சமணருள் ஆசிரியர்க்கு அடிகள் என்பது சிறப்புப்பெயராதலால் மார் என்னும் பன்மை விகுதிதந்து அடிகள் மாராவார் எனவும், அம்மலைகளே தமக்குரிய இருக்கைகளாக உடையராதலால் காஞ்சிநகரத்தை வேறிடமெனவும் கூறினர். உவமைக்கும் பொருட்கும் ஒற்றுமையுண்மையால் பொருளின குணதை வடிவுபோலென்பதற்கேற்றியும் உவமையின் குணத்தை விரித்து ஆரவாரதேதோடு எனப்பொருட்கேற்றியும் கூறினம். (அ)

யாவருமொருங்குகூடியிருள்வழிகொள்வதேய்ப்பக்
காவல்வல்லரணஞ்சூழ்ந்தகாஞ்சிமாநகரத்தெய்திப்
பூவலர்தாரான்கோயிற்புறங்கடைபுகுந்துவேந்த
னேவலர்விடுப்பவுள்போயிறைமகனிருக்கைபுக்கார்.

(இ-ள்.) யாவரும் ஒருங்குகூடி இருள் வழி கொள்வது ஏய்ப்ப-அடிகள் மாராவார் எவரும் ஒரு சேரக்கூடி இருட்கூட்டம் ஒருவழிப்பட்டுச் செல்வதற்கு ஒப்ப, காவல் வல் அரணஞ் சூழ்ந்த காஞ்சிமாநகரத்து எய்தி - காவலாக வலிய மதில் சூழ்ந்த காஞ்சியென்னும் பெரிய நகரத்தையடைந்து, பூ அலர் தாரான் கோயில்

புறங்கடை புகுந்து, ஆத்திமலரால் விளங்கும் மாலையையணிந்த சோழனது கோயிலின் தலைவாயிலையடைந்து, வேந்தன் ஏவலர் உள்விடுப்ப போய் இறைமகன் இருக்கை புக்கார் - அச்சோழனது வாயில் காப்போர் உள்ளே விடுப்பச் சென்று அச்சோழனுடைய அரசிருக்கையை யடைந்தார்.

பூ என்னும் பொதுப்பெயர் தாரானென்னும் சார்பாற் பொதுமைநீங்கி ஆத்திமலர் மேல்நின்றது. (௯)

மன்னவன்முடிமேற்பீலிவைத்தனராக்கங்கூற
வன்னவனவரைநோக்கிவசியமுன்னாறும்வல்லீர்
தென்னனையாபிசாரஞ்செய்துயிர்செருத்தாலுங்கட்
கென்னதுநாடுபாதிதருவல்போயியற்றுமென்றான்.

(இ-ள்.) மன்னவன் முடிமேல் பீலி வைத்தனர் ஆக்கங்கூற - சோழனுடைய கிரீடத்தின்மேல் (தாமேந்திய) மயிற்றோகைகளை வைத்து ஆசிவசனங்கூற, அன்னவன் அவரை நோக்கி - அச்சோழன் அவ்வடிகள்மாரைப்பார்த்து, வசியம் முன் ஆறும் வல்லீர் - வசிய முதலிய ஆறுதொழிலிலும் வன்மையையுடைய அடிகள்மாரே, தென்னனை - விக்கிரமபாண்டியனை, ஆபிசாரஞ் செய்து உயிர் செருத்தால்-ஆபிசார வேள்விசெய்து உயிர்கொன்றால், உங்கட்கு என்னது நாடு பாதி தருவல்போய் இயற்றும் என்றான் - உங்களுக்கு எனது நாட்டிற் பாதி கொடுப்பேன் போயதனைச் செய்யுங்களென்று ஏவினான்.

அடிகள் மாராவார்க்கு மயிற்றோகை ஏந்துதல் குறியீடாகையால் பீலி எனவும், தம்மை வழிபடுவோரைக்காணில் ஆசிவசனங் கூறும்போது மயிற்றோகை வைத்துக்கூறுதல் வழக்காதலால் முடிமேல் வைத்தனர் ஆக்கங்கூற எனவுங்கூறினார். வசியமுன் ஆறுமென்றது வசியம், வயஸ்தம்பம், வாதம், அதிரிசியம், அஞ்சனம், ஆகருஷணமுமாம். இவற்றின் பாகுபாடுகளை எல்லாம்வல்ல சித்தரானபடலத்திற் காண்க. ஆபிசாரமாவது சத்துரு மரணமடையும்படி செய்யும் ஒரு கொடுந்தொழில். (௧௦)

தவம்புரிந்தவமேசெய்வார்தாமதற்குடன்பட்டேகி
நிவந்ததெண்டிரைநீர்ப்பாலிநெடுங்கரைக்காதமூன்றிற்
கவர்ந்தகன்சாலைகோலியோசனையகலங்கல்லி
யவம்படுவேள்விக்குண்டங்கோணமெட்டாகக்கண்டார்.

(இ-ள்.) தவம் புரிந்து அவமே செய்வார் தாம் அதற்கு உடன் பட்டு ஏகி - (புறத்தில்) தவத்தைச்செய்து அகத்தில் அவத்தையே செய்யும் எண்ணாயிரஞ் சமணர்களும் அத்தீத்தொழிலுக்கு உடன்பட்டுச்சென்று, நிவந்த தெண்டிரை நீர் பாலி நெடுங்கரை - பெருக்கெடுத்தோங்கிவரும் தெள்ளிய அலையையும் நீரையுமுடைய பாலியாற்றினது நெடிய கரையில், காதமூன்றில் கவர்ந்த அகன் சாலை கோலி - மூன்றுகாதவழி பரந்த இடத்தையுடைய யாகசாலையொன்று கோலி, யோசனை அகலம் அவம்படு வேள்விக்குண்டம் கல்லி - ஒருயோசனை யகலம் தீமைமிக்க ஒருயாககுண்டந்தோண்டி, கோணம் எட்டாகக்கண்டார் - அக்குண்டத்தை எண் கோணமாகச்செய்து.

தாம் செய்யுந் தீத்தொழிலை மறைத்தற்குத் தவத்தொழிலை மேற்கொண்டாரென்பார், தவம் புரிந் தவமே செய்வார் என்றார். கவர்ந்த என்னும் பெயரெச்சத்

தின் ஏற்றகாம் "பெற்றொன்றுயர்த்த பெருமான்" என்றாற்போல ஈறுதொக்கு நின்றது. அகம் அகன் இறுதி நிலைப்போலி. கண்டார் முற்றெச்சம். (கக)

விடம்பொதிகாட்டம்பெய்துநிம்பநெய்விராயநஞ்சி
னுடம்புடையுயிரின்கோழூன்கறிப்பொடியூறுமெண்ணெ
யிடம்படவாயங்காந்தவெரிக்குழிபுதையப்பெய்து
கொடும்பழிவேள்விசெய்தார்கொல்லாதவிரதம்பூண்டார்.

(இ-ள்.) விடம் பொதி காட்டம் பெய்து - விஷம் நெருங்கிய எட்டி முதலிய சமித்தை களையிட்டு, நிம்ப நெய்விராய - வேப்பெண்ணெயிற்கலந்த, நஞ்சின் உடம்பு உடை உயிரின் கோழ் ஊன் - நஞ்சு பொருந்திய சரீரத்தையுடைய சர்ப்பத்தின் கொழுவிய தசையையும், கறிப்பொடி ஊறும் எண்ணெய் - மிளகின் பொடியூறும் திலநெய்யையும், இடம்படவாய் அங்காந்த எரிக்குழி புதையபெய்து - விசாலமாக வாயைத்திறத்தல்போலக் கொழுந்துவிட்டெரித்தெழுதலையுடைய யாகக்குழி புதைபடும்படிபெய்து, கொல்லாதவிரதம்பூண்டார் - கொல்லாமையையே விரதமாகப்பூண்ட எண்ணுயிரவரும், கொடும்பழி வேள்விசெய்தார் - கொடியபழிவாய்ந்த அபிசாரயாகத்தைச்செய்தார்கள்.

கொல்லாமையே விரதமெனக் கூறவேண்டுவதை விரதம் பயனிலையாகக் கொல்லாத விரதமெனக்கூறுவது வடநூலார் தருமதருமி அபேதமென்பார். இதனைத்தமிழ்நூலார் உபசாரவழக்கு என்பார். பெய்து எனப் பொதுவினைதந்தார். கஉ

மாடுளபொதும்பர்நந்தாவனமுளசோலையுள்ள
காடுளகருகிச்சாயக்கயலுளவோடையுள்ள
கோடுளவாவியுள்ளகுளமுளவறப்பத்தாவிச்
சேடுளமுகிலுந்தீயச்சிகையெழுகுண்டத்தீவாய்.

(இ-ள்.) பொதும்பர் மாடு உள்ள-மரக்கூட்டங்களிடத்துள்ள உயிர்களும், நந்தாவனம் உள்ள - நந்தவனங்களிலுள்ள உயிர்களும், சோலை உள்ள-சோலைகளிலுள்ள உயிர்களும், காடு உள்ள - காட்டிலுள்ள உயிர்களும், கருகிசாய-கருகி இறக்கவும், கயல் உள்ள ஓடை உள்ள - கயல்மீன் உள்ள ஓடைகளில் உள்ளனவும், கோடு உளவாவியுள்ள - கரையுள்ள தடாகங்களிலுள்ளனவும், குளம் உள்ள - குளத்திலுள்ளனவும், வறப்ப-வற்றித்தீயவும், தாவி சேடு உள்ள முகிலும் தீய - மேலெழுந்து பெரிய மேகபடலங்களும் தீந்து சாயவும், சிகை எழுகுண்டம் தீவாய்-கொழுந்துவிட்டெழுந்த யாககுண்டத்துள்ள தீயினிடத்து.

மாடுள பொதும்பர் முதல் காடுளவென்பது காறும் உள்ள உயிர்கள் ஓரறிவுள்ள உயிர்முதல் ஐயறிவுயிர்காறுமுள்ளனவும், ஓடையுளவென்பதுமுதல் குளமுளவென்பதுகாறும் மலரும் ஏனையுயிர்களும் ஆதலால் கருகி, வறப்ப எனப் பொதுவினை தந்தனர். (கங)

கூற்றெழுதோற்றம்போலவஞ்சனக்குன்றம்போலக்
காற்றெழுசெவியுநால்வாய்கௌவியமருப்புமாறு
ஆற்றெழுமதமுமூசலாடியவொற்றைக்கையு
மேற்றெழுவிடம்போற்சீறியெழுந்ததோர்தறுகண்யானை.

(இ-ள்) கூற்று எழு தோற்றம்போல - இயமன் உதித்தெழுந்த காட்சிபோலவும், அஞ்சனக்குன்றம்போல - ஒரு அஞ்சனமலை முளைத்தெழுந்த காட்சிபோலவும், ஏற்று எழுவிடம்போல் - கடலிற்பொருந்தி எழுந்த விஷம்போலவும், காற்று எழுசெவியும்-காற்றை வீசாநின்றசெவியையும், நால்வாய் வெளவியமருப்பும்-தொங்கியசையும் வாயிற்பொருந்திய கொம்புகளையும், மாறு ஊற்று எழுமதமும்-மாறுமற்சுரந்தெழாநின்ற மதத்தையும், ஊசல் ஆடிய ஒற்றைக்கையும் - ஊசலைப்போலாடாநின்ற துதிக்கையையும் உடையதாகி, ஓர் தறுகண்யானை சீறி எழுந்தது - ஒரு அஞ்சாமையையுடைய யானையானது கோபித்தெழுந்தது.

யானையானது தனித்தனி கொல்லுதற்றொழிலிலும் ஒருசேரக் கொல்லுதற்றொழிலிலும் வல்லதென்பது தோன்றக் கூற்றெழுதோற்றம்போலெனவும், ஏற்றெழுவிடம்போல் எனவும், நிலைகலங்காத உன்னத தோற்றமுடையதென்பது தோன்ற அஞ்சனக்குன்றம்போல எனவுங் கூறினார். (௧௪)

அந்தமாவேள்வித்தீயுமவியமும்மதமுஞ்சோர
வந்தமாகளிற்றைநீபோய்வழுதியைமதுரையோடுஞ்
சிந்தவேதொலைத்தியென்றுதென்றிசைசெல்லவேவி
முந்தவேவிடுத்தமாசுமூழ்குடலமணப்பேய்கள்.

(இ-ள்.) அந்தமா வேள்வித் தீயும் அவிய மும்மதமுஞ் சோர வந்த மா களிற்றை - அந்தப்பெரிய ஆபிசாரயாகத்தில் கொழுந்துவிட்டெரிந்த தீயும் அவியும்படி மும்மதங்களுஞ்சோரத் தோன்றியெழுந்த பெரியயானையை (நோக்கி) நீபோய் வழுதியை மதுரையோடும் சிந்தவே தொலைத்தி என்று - நீசென்று விக்கிரமபாண்டியனை மதுரையிலுள்ளாரோடும் கெடும்படி அழிப்பாயென்று, தென்றிசைசெல்ல ஏவி-தென்றிசைநோக்கிச் செல்லஏவி, முந்தவே விடுத்தமாசு மூழ்கு உடல் அமணப்பேய்கள்-தம்மில் முற்பட அனுப்பிய கரியநிறமிக்க சரீரத்தையுடைய எண்ணாயிரஞ் சமணராகிய பேய்களும்.

தோன்றும்பொழுதே யந்தக் கொடிய யாகத்திலுங் கொடியதாய்த் தோன்றியதென்பார் அந்தமாவேள்வித்தீயு மவியமும்மதமுஞ்சோர வந்தமாகளிறு என்றார். (௧௫)

ஷை வேறு.

அருளற்றிருளுடலிற்புதையமணக்கயவர்களுட்
டெருளற்றருமறையிற்படர்செயலற்றிகபரமெய்ப்
பொருளற்றவனனிகத்தொடுபுறமொய்த்திடமதமா
வெருளற்றிடிகுரலிற்படிவெடிபட்டிடவருமால்.

(இ-ள்.) அருள் அற்று இருள் உடலில் புதை அமணக்கயவர்களுள் (அகத்தில்) சிவகருணையாகிய ஒளி சிறிதுமின்றி மறத்தொழிலாகிய இருளே தமதுடம்பின் காரொளிபோலப் பொதிந்த சமணராகிய கீழ்மக்களுள், தெருள் அற்று அருமறையின் படர் செயல் அற்று இகபரம் மெய்ப்பொருள் அற்றவன் அனிகத்தொடு - அறிவினின்று நீங்கி அரியவேத நெறிப்பட்டுச்செல்லும் செயலொழிந்து இகபோகத்தையும் பரபோகத்தையும் அடைதற்குரிய அறத்தொழிலையும் ஒழிந்த சோழனுடைய சேனைகளோடு, புறம்மொய்த்திட-புறத்திற்சூழ்ந்துவர, மதமாவெருள் அற்று

இடிகுரலில் படி வெடி பட்டிடவரும் - யானையானது அச்சமொழிந்து இடியின் ஒலிபோன்ற தனது முழக்கத்தால் உலகம் வெடிபட வாராநிற்கும்.

அறத்தொழில் சிறிதுமின்றி மறத்தொழிலே பெரிதும் உடையதென்பார் ஒப்புப்பொருளில்வந்த ஐந்தனுருபுதந்து அருளற்றிருளுடலிற்புதை என்றார். இம்மை இன்பத்தையும் சுவர்க்காதி இன்பத்தையும் தருதற்குரியது அறமாதலாலும் தெருளற்றருமறையிற்படர் செயலற்று என்ற குறிப்பேதுவாலும் மெய்ப்பொருளென்பதற்கு அறமென்றும். உள் என்னும் ஏழனுருபுகூட்டிப் பிரித்தற்கண்வந்தது. அமணப்பேய்கள் என்னும் வினைமுதல்மொய்த்திட என்னும் பயனிலையைக்கொண்டு முடிதலாற் குளகம். (கரு)

அடியின்னளவகல்பாதலமுடியின்னளவண்ட
மிடியின்னளவெழுகார்செவியெறிகாலளவகில
மடியும்மளவுளர்கான்மதமழையின்னளவுலக
முடிவின்னெழுகடல்கண்ணழலளவாமுதுவடவை.

(இ-ள்.) அகல் பாதல அளவு அடியின் அளவு - அகன்ற பாதாளவுலகத்தினளவு அந்த யானை வைத்த காற்சுவட்டின் அளவினதாம், அண்டம் அளவு முடியின் அளவு - வானுலகளவு அதனது தலையின் அளவினதாம், எழுகார் அளவு இடியின் அளவு - சத்தமேகங்களினொலியளவு அதனது முழக்கத்தின் அளவினதாம், அகிலம் மடியும் உளர் கால் அளவு செவி எறி கால் அளவு - எல்லாவுலகங்களுமடிய எறியும் சஞ்சரிக்கும் ஊழிக்காற்றினது அளவு அதனது காதுவீசும் காற்றினளவினதாம், உலகமுடிவின் எழுகடல் அளவு மதமழையின் அளவு - உலகமுடிவிற் புடைபெயர்ந்தெழாநின்ற கடலினளவு அதனது மதமாகிய வெள்ளத்தின் அளவினதாம், முதுவடவை அளவு கண் அழல் அளவாம் - பெரிய வடவாமுகாக்கினியினளவு அதனது கண்களிற் சிந்தும் கோபாக்கினியினளவினதாம்.

பாதலத்தினளவு யானையின் அடியினளவெனவும், வானுலகத்தினளவு அதன் சென்னியினளவு எனவும், சத்தமேகங்களி னொலியளவு அதன் முழக்கத்தினளவு எனவும், ஊழிக்காற்றினளவு அதன் காதுவீசுங் காற்றினளவு எனவும், ஊழியினிலை பெயருங் கடலளவு அதனது மதவெள்ளத்தினளவெனவும், வடவாமுகாக்கினியினளவு அதனது கோபாக்கினியினளவெனவும் ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாதிருக்கச் சம்பந்தங் கற்பித்துக் கூறினமையால் தொடர்புயர்வு நவிற்சியணி. அதிசய அணியெனினுமொக்கும். மடியும்மளவு என்னுந்தொடரிலுள்ள அளவு முன்னும் பின்னுஞ் சென்றதனால் இடைநிலைத்தீவகவணி. செய்யுளாதலால் பின்முன்னாக வந்தன.

கூற்றஞ்சிடவருமிக்கரிகுரலஞ்செவிமுழைவா
யேற்றஞ்செயமடங்குஞ்செவியெறிகால்வழிவிழித்தீ
யூற்றஞ்செயமடைவாயுடைந்தொழுகுங்கடமதநீர்
நாற்றஞ்செயத்திசைவேழமுநடுக்கஞ்செய்துநலியும்.

(இ-ள்.) கூற்று அஞ்சிடவரும் இக்கரி குரல் - இயமனும் கண் புதைத்தஞ்சும்படி வாராநின்ற இந்த யானையினது முழக்கமானது, அஞ்செவி முழைவாய் ஏற்றஞ்செய - தமது அகஞ்செவியாகிய முழையினிடத்துத் தாக்குதலாலும், மடங்குஞ் செவி எறி கால் வழி - அதனது மடங்கிய காதுகள் வீசும் காற்றின்வழியே, விழித்தீ ஊற்றம் செய - தமது கண்களிலுள்ள கோபாக்கினி மூண்டெரிதலாலும், மடைவாய் உடைந்தொழுகும் கடமத நீர் நாற்றஞ்செய-நீர்மடைவாய் உடைபட்டொழு

கும் வெள்ளம்போலக் கரடங்கள் திறந்தொழுகும் மதப்பெருக்கானது நாற்றஞ்செய்தலாலும், திசை வேழமும் நடுக்கஞ்செய்து நலியும்-திக்குகள்தோறுமுள்ள அந்த அட்டகஜங்களும் நடுநடுங்கிச் சோரச்செய்து வருத்தாநிற்கும்.

இதனால் இந்த யானையின் ஒலி திக்குயானைகளின் காதில் சென்றதெனவும், இதனது காது வீசுங்காற்றால் அந்த யானைகளின் கோபத்தீ மூண்டதெனவும், இதனது மதநீர் வாசனை திக்குகள்தோறுமுள்ள யானைகட்குப்பகைமைதோன்றக் கமழ்ந்ததெனவும் கூறினமையால், திக்கஜங்களையும் வென்றதென்பார் திசைவேழமும் நடுக்கஞ்செய்து நலியும் என்றார். (௧அ)

இடிக்கும்புயல்வயிற்றைக்கிழித்திடியேற்றினையுதிர்க்கும்
வெடிக்கும்பிளிறொலியாற்றிசைவிழுங்கிச்செவிடாக்குந்
துடிக்கும்புழைக்கையோச்சிவிண்டொடுகுன்றினைச்சுற்றிப்
பிடிக்குங்கடல்கலக்குந்தனிப்பெருமத்தெனத்திரிக்கும்.

(இ-ள்.) இடிக்கும் புயல் வயிற்றைக் கிழித்து இடியேற்றினை உதிர்க்கும் - ஒலிக்காநின்ற மேகத்தின் வயிற்றைக்கிழித்து இடியேற்றை யுதிர்க்காநிற்கும், வெடிக்கும் பிளிறு ஒலியால் - முழங்காநின்ற பேரொலியினால், திசை விழுங்கிச் செவிடாக்கும் - எட்டுத்திக்குகளையும் விழுங்கிச் செவிடுபடச்செய்யும், துடிக்கும் புழைக்கை ஓச்சி-துடிக்காநின்ற துதிக்கையைவீசி, விண் தொடு குன்றினை சுற்றி பிடிக்கும்-விண்ணினை அளாவ உயர்ந்த மலைகளை வேரோடுபறித்துச் சுற்றிப்பிடிக்கும், கடல் கலக்கும் தனி பெருமத்தென திரிக்கும் - கடலைக்கலக்கும் ஒப்பில்லாத பெரிய மத்தாகிய மந்தரகிரியைப்போல அம்மலையைச் சுழற்றும். (௧௯)

உருமுக்குரலொலியிற்றுளரொலிவிட்டெறிசெவியிற்
றிருமுட்பிறையெயிறிற்றழலெறிகட்டிருளுடலிற்
றருமுக்கடவருவித்துரலடியிற்றெனநிலமேல்
வருமுக்கிரவடவைக்கனல்வரினொப்பதமதமா.

(இ-ள்.) உருமு குரல் ஒலியிற்று - இடிபோன்ற முழக்கத்தையுடையது, உளர் ஒலி விட்டு எறிசெவி யிற்று-சஞ்சரிக்குங் காற்றை வீசும் செவியினையுடையது, இருமுள் பிறை எயிறிற்று-இரண்டு முட்போலும் முனைகூரிய இளம்பிறைபோன்ற தந்தங்களையுடையது, அழல் எறி கட்டு - கோபாக்கினியை வீசும் கண்களையுடையது, இருள் உடலிற்று - அந்தகாரம்போன்ற கரியசரீரத்தையுடையது, அரு முக்கட அருவித்து - சொல்லுதற்கரிய மும்மதமாகிய அருவியையுடையது, உரலடி யிற்று என-உரல்போலும் வட்டவடிவாகிய காலையுடையதென்று கண்டோர் சொல்ல, நிலமேல் உக்கிரம் வரும் வடவை கனல் வரின் அ மதமா ஒப்பது - நிலவுலகின்மேல் கொடுமைவாய்ந்த வடவாமுகாக்கினி வந்தால் (அதனை) அந்த மதத்தையுடைய யானை ஒக்கும். (இல்லையாயின் வேறுவமையில்லை) என்றபடி.

ஒலியிற்று செவியிற்று உடலிற்று அருவிற்று அடியிற்று இவை யிடையில் இன்சாரியை பெற்றுவந்த ஒன்றன்பாற்படர்க்கைக் குறிப்பு வினைமுற்றுகள். கட்டு சாரியை பெறாதுவந்த குறிப்புவினைமுற்று. இவ்வாறில்லாத வொன்றை யுவமையாக்கிக்கூறினமையால் இல்பொருளுவமையணி. (௨௦)

தெழிபட்டதிக்கயத்தின்செவிதீயப்பகையோடும்
வழிபட்டொருகடுகூற்றெனவருகுஞ்சரவரவை
விழிபட்டவர்மொழியாலுணர்விரைபட்டலர்வேம்பன்
சுழிபட்டலைபுனல்போன்மனஞ்சுழன்றுநினைந்தழன்றான்.

(இ-ள்.) தெழி பட்ட திக்கயத்தின் செவி தீய - தனது முழக்கந்தாக்கிய திக்குயானைகளின் காதுகள் கரிந்துதீய, பகை யோடும் வழி பட்டு ஒரு கடு கூற்று எனவரு குஞ்சரம் வரவை - பகைவராகிய சமணரோடும் ஒருவழிப்பட்டு ஒப்பில்லாத கடியயமனைப்போல வாராநின்ற யானையின்வரவை, விழிபட்டவர் மொழியால் உணர் விரைபட்டு அலர் வேம்பன் - கண்டோர்கூறுஞ் சொற்களால் அறிந்த வாசமிக்கலர்ந்த வேப்பமாலையையுடையபாண்டியன், சுழிபட்ட அலை புனல் போல் மனம் சுழன்றான் நினைந்து அழன்றான் - சுழியிறபட்டு ஓடுதலைத்தவிர்ந்து சுழலும் நீரைப்போலத் தனதுமனங் குடியோம்புதலைத்தவிர்ந்து சுழன்று (அதனது வேகவரவை) நினைந்து வருந்தி.

சுழன்றான், அழன்றான் முற்றெச்சங்கள். உவமையும் பொருளும் ஒற்றுமையுண்மையால் உவமையின் றொழிலைப் பொருட்கேற்றிக் கூறினும். (உக)

மைப்போதகம்பொறையாற்றியமணிக்கோயின்முன்குறுகாக்
கைப்போதகமுரித்தான்கழற்காற்போதகமுறத்தாழ்ந்
திப்போதகந்தனையுந்தொலைத்தெனைக்காத்தியென்றிரந்தா
னப்போதகல்வானின்றொருதிருவாக்கெழுந்தன்றே.

(இ-ள்.) மை போதகம் பொறை ஆற்றிய மணிக்கோயில் முன் குறுகா - கரிய திக்கஜங்களால் சுமக்கப்பட்ட இரத்தினங்களழுத்திய இந்திரவிமானத்தின் முன்சென்று, கைப்போதகம் உரித்தான் கழல் கால் போது அகம் உற தாழ்ந்து - துதிக்கையையுடைய யானையை உரித்தருளிய சோமசுந்தரக்கடவுளுடைய வீரகண்டையையணிந்த திருவடித்தாமரையைத் தனது மனத்தில் பொருந்தவணங்கி, இ போதகம் தனையும் தொலைத்து எனை காத்தி என்று இரந்தான் - இந்தயானையையுங்கொன்று என்னைக்காப்பாயென்று குறையிரந்தான், அப்போது அகல்வான் நின்று ஒருதிருவாக்கு எழுந்தன்று - அக்காலையில் பரந்த ஆகாயத்தினின்று ஒரு அசரீரி எழுந்தது.

கடலையு மேகத்தையுந் தொலைத்தருளியதுபோல இந்தயானையையுந் தொலைத்தருள்வாய் என்பான் இறந்தது தழீஇய எச்சவும்மையும் சுட்டும் தந்து இப்போதகந்தனையும் என்றான். குறுகா செய்யா என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். எழுந்தன்று அன் சாரியை பெற்றுவந்த வினைமுற்று. (உஉ)

விட்டார்வலிகெடநாமொருவிற்சேவகனாகி
யொட்டார்விடவருவெங்கரியுயிர்வௌவுதுமுதனின்
மட்டார்பொழிற்கடிமாநகரயற்கீழ்த்திசைமருங்கோ
ரட்டாலமண்டபஞ்செய்யெனவதுகேட்டெழுந்தரசன்.

(இ-ள்.) விட்டார் வலி கெட நாம் ஒருவில் சேவகன் ஆகி - ஏவினவர்களுடைய மனவன்மைகெட நாம் ஒருவில்லையேந்திய சேவகனாகி, ஒட்டார் விட வரு வெங்கரி உயிர் வௌவுதும் - அந்தப்பகைவர் ஏவவாராநின்ற கொடியயானையின் உயிரைக்கொள்ளை கொள்ளுகின்றோம், முதல் நின்மட்டு ஆர் பொழில் கடி மா நகர்

அயல் கீழ் திசை மருங்கு - முதலில் உனது தேனிறைந்த சோலையின் மணம்மிக்க பெரியநகரின் அயலில் கீழைத்திசைப்பக்கத்தில், ஓர் அட்டாலை மண்டபம் செய் என ஒரு அட்டாலை மண்டபஞ்செய்யா யென்று திருவாககருள, அது கேட்டு அரசன் எழுந்து - அத்திருவாக்கை அரசன் கேட்டெழுந்து.

புறத்தன்றி அகத்தும் இராப்பகையுளரென்பார் ஒட்டார் என்றார். (உங)

அகங்கவ்வியகளிப்பெய்திவந்தட்டாலைமண்டபம்பொன்
னகங்கவ்வியதெனத்தூணொருநானாஞ்கினிலெடுத்தே
சகங்கவ்வியபுகழான்செயத்தறுகட்கணைமதமா
முகங்கவ்வியவிற்சேவகன்வருவானதுமொழிவாம்.

(இ-ள்.) அகம் கவ்விய களிப்பு எய்தி வந்து - மனத்தில் இடைவிடாது பொருந்த மகிழ்ச்சியடைந்து (சந்நிதானத்தினின்று) வந்து, சகம் கவ்விய புகழான் அட்டாலை மண்டபம் ஒன்று பொன் நகம் கவ்வியது எனத் தூண் ஒரு நால் நான்கினில் எடுத்தே செய்ய - உலகிற்பரந்த புகழையுடைய விக்கிரமபாண்டியன் அட்டாலைமண்டபம் ஒன்றை மகமேருவே தூணமாக உருமாறிச் சுமந்ததென்று சொல்லும்படி பதினாறு தூண்களாற் சுமக்கப்படும்படி எடுத்துக்கட்டி முடிக்க, தறுகண் கணை மதமா முகம் கவ்விய வில் சேவகன் வருவான் அது மொழிவாம் - (சிவபெருமான்) கொலைத்தொழிலையுடைய அம்பானது யானையின் முகத்திற் றைத்துருவ வில்லையேந்திய சேவகனாகி வருகின்றான் அதனைக் கூறுவாம்.

முதலிலும் இறுதியிலும் நின்ற கவ்விய என்னும் எச்சங்கள் செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சங்கள். (உச)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

நீனிறநீத்தநீந்துநிழன்மதியிரண்டுண்டென்ன
வானிறவலயச்சங்கவார்குழைநுழைவித்தம்பூம்
பானிறவெகினங்காணுப்படர்சடைமறைத்துத்தோற்றுங்
கானிறைகுஞ்சிச்சூட்டிற்களிமயிற்கலாபஞ்சூடி.

(இ-ள்.) நீல் நிறம் நீத்தம் நீந்தும் நிழல் மதி இரண்டு உண்டேல் என்ன - நீலநிறத்தையுடைய கடலை நீந்திச்செல்லும் ஒளியையுடைய சந்திரனிரண்டுண்டாயினவற்றையொப்ப, வால் நிறம் வலயம் சங்கம் வார் குழை நுழைவித்து - வெள்ளிய நிறத்தையுடைய வட்டவடிவாகிய சங்காற்செய்த நீண்டகுண்டலங்களைத் திருச்செவியில் நுழைவித்து, அம்பூம்பால் நிறம் எகினம் காணு படர்சடை மறைத்து - அழகிய தாமரைமலரில் வசிக்கும் வெள்ளிய நிறத்தையுடைய பிரமனாகிய அன்னத்தால் காணப்படாத படர்ந்த சடாபாரத்தை மறைத்தருளி, தோற்றும் கான் நிறை குஞ்சி சூட்டில் களி மயில் கலாபம் சூடி - கண்களுக்குப் புலப்படும் வாசநிறைந்த சிகையாலாகிய சுடிகையில் களிக்கும் மயிலினது இறகைச்சூடி.

பறவைகளைத் தேடித்திரியும் மறத்தொழிலையுடைய வேட்டுவக்கோலம்போலன்று என்பார் பூம்பானிறவன்னங்காணு எனவும், அருளுருவவேட்டுவக்கோலம் என்பார் சடைமறைத்து, களிமயிற் கலாபஞ்சூடி யெனவுங் கூறினார். நீலநிறம் நீனிறம் கண்டக்குறை. உண்டென்ன தொகுக்கும்வழி தொகுத்தல் இதுவும் இல்பொருளுவமையணி. என்ன என் உவமவுருபிடைச்சொற்பகுதி. (உரு)

கருங்கடன்முளைத்தசெக்கர்க்கதிரெனக்குருதிக்கச்சை
மருங்குறவீக்கிச்சோரிவாயுடைவாளுங்கட்டி
யிரங்குநான்மறைகளேங்கவிருநிலந்தீண்டுதாளிற்
பொருங்கழல்வளைத்துவாளிப்புட்டிலும்புறத்துவீக்கி.

(இ-ள்.) கருங் கடல் முளைத்த செக்கர் கதிர் என - கரியகடல்மேல் முளைத்
த செவந்தகிரணத்தையுடைய சூரியனைப்போல, குருதி கச்சை மருங்கு உறவீக்கி -
உதிரநிறம்வாய்ந்த கச்சையை யிடையிற் பொருந்தக்கட்டி, சோரிவாய் உடைவா
ளுங்கட்டி - உதிரங்கக்கும் வாயையுடைய உடைவாளையும் அதன்புறத்துச்சேர்த்
தி, இரங்கு நான்மறைகள் ஏங்க இருநிலம் தீண்டு தாளில் பொருங்கழல் வளைத்து-
சாணுதவருந்தும் நான்குவேதங்களும் அலறத் தான் செய்த பெருந்தவத்தால் பெரி
யநிலவுலகு பரிசிக்கும் திருவடியில் போர்செய்தற் குறிப்பையுணர்த்தும் வீரகண்
டையையணிந்து, வாளிப்புட்டிலும் புறத்துவீக்கி - அம்பறுத்தூணியையும் முதுகி
ற்கட்டியருளி. (௨௬)

வீங்கியதடந்தோளிட்டவார்சிலைவில்லினோடும்
பாங்குறையிமையப்பாவைபாதியேயன்றிமுற்றும்
வாங்கியவண்ணம்போன்றுமல்லதுமாலுமோர்பா
லோங்கியவண்ணம்போன்றுமொளிநிறம்பசந்துதோன்றி.

(இ-ள்.) வீங்கிய தடம் தோள் இட்ட வார் சிலை வில்லி னோடும் - பருத்த
பெரிய தோளில் சாத்திய நீண்ட வில்லினோடும், பாங்கு உறை இமையப்பாவைபா
தியே அன்றி முற்றும் வாங்கிய வண்ணம் போன்றும் - இடப்பாதியில் வசிக்கும் உ
மாதேவியார் அவ்விடப்பாதியேயல்லாமல் அத்திருமேனி முழுமையும் தமக்குக்
காணியாகக்கொண்டாலொத்த பசிய நிறத்தையொத்தும், அல்லது மாலும் ஓர்பா
ல் ஓங்கிய வண்ணம்போன்றும் - அதுவன்றித் திருமாலும் ஓர்வலப்பாலில் வசித்த
ருளும் நிறத்தையொத்தும், ஒளிநிறம் பசந்துதோன்றி - காரொளிபடைத்து.
நீனிற நீத்தமென்னுஞ் செய்யுள்முதல் இச்செய்யுள்காறும் வேடுருக்கொண்
டுவந்தானென்பதுதோன்ற அச்சாதித்தொழிற் பண்புகளைக் கூறினார். (௨௭)

காமனுங்காமுற்றஞ்சுங்காளையாம்பருவந்தோன்றத்
தாமுலகளந்தவென்றித்தனிவிற்சேவகனாய்த்தோன்றி
மாமறைமகுடமன்னமண்டபத்தேறித்தென்னர்
கோமகனிடுக்கண்டீர்ப்பான்குஞ்சரவரவுநோக்கா.

(இ-ள்.) காமனுங் காமுற்று அஞ்சும் காளையாம் பருவம் தோன்ற - மன்மத
னும் விரும்பி இவ்வடிவம நமக்கில்லையே யென்று பொறாமைகொண்டஞ்சும் காளைப்
பருவம்வாய்க்க, உலகம் தாம் அளந்த வென்றி தனிவில் சேவகன் ஆய் தோன்றி-
உலகமுற்றும் தன்கீழ்ப்படுத்திய வெற்றிவாய்ந்த ஒப்பில்லாத வில்லையேந்திய வேட்
டுவவீரனா யெழுந்தருளி, மாமறை மகுடம் அன்ன மண்டபத்து ஏறி - மகத்தாகிய
வேதபுருடன் சூடிய கிரீடத்தையொத்த மண்டபத்தின்மேலேறி, தென்னர்கோம
கன் இடுக்கண் தீர்ப்பான் - பாண்டியர் மரபிற்றோன்றிய விக்கிரமபாண்டியனுடைய
துன்பத்தைத் தீர்த்தற்பொருட்டு, குஞ்சரம் வரவு நோக்கா - (சோழனேவிய) யா
னையைப் பார்த்தருளி.

காமனும் என்பதில் நின்ற உம்மை உயர்வு சிறப்பு. (௨௮)

அஞ்சுகூவிளிச்செய்த்தென்னவதுவரவறனிலாதான்
வெஞ்சினக்கோலினென்றாள்மிதித்துமெய்குழையவாங்கிச்
செஞ்சிலைநெடுநாண்பூட்டித்திருவிரறெறித்துத்தாக்கிக்
குஞ்சரமெட்டுமஞ்சக்கோளரிமுழக்கங்காட்டி.

(இ-ள்.) அஞ்சு கூவிளிச்செய்த்து என்ன அதுவர - அஞ்சுகூப்பிடுதூரத்தில் வந்தயானைவர, அறன் இலாதான் வெஞ் சினக் கோலின்-(குடிகளைப்பாதுகாக்கும்) தருமநெறியினில்லாத அரசனது கொடியகோபத்தையுடைய கொடுங்கோலைப்போல, செஞ்சிலை நோன் தாள் மிதித்து மெய் குழையவாங்கி - செவ்வேயுள்ள வில்லைத்தனது வலியதிருக்காலால் மிதித்துத் தனது திருமேனியும் வளையவளைத்து, நெடுநாண் பூட்டி - நெடியநாணினை விற்கடையிற்பூட்டி, திருவிரல் தெறித்து தாக்கி - தனது திருவிரல்களால் தெறித்துக் குணத்தொனிசெய்து, குஞ்சரம் எட்டும் அஞ்ச கோளரி முழக்கம் காட்டி - எட்டுத்திக்கிலுமுள்ள அஷ்டகஜங்களும் மனம்நடுங்கிட்டஞ்சச் சிங்கம்போல வீரகோஷஞ்செய்து.

அஞ்சுகூவிளிச்செய்த்து ஒருகுரோசம். நோன்றாள் மிதித்து மெய்குழைய வாங்கி தொழிற்றன்மையணி. உடையவன்றொழிலை யுடைமைமேலேற்றி வெஞ்சினக்கோல் என்றார். கோள் அரிவன்மையை யுணர்த்தும் அடையோடுகூடி நின்ற ஒருசொல். (உ௯)

இங்கிதநெடுங்கோதண்டமிடங்கையிலெடுத்துநார
சிங்கவெங்கணைதொட்டாகந்திருகமுன்னிடத்தாள்செல்ல
வங்குலியிரண்டாலையன்செவியுறவலித்துவிட்டான்
மங்குலின்முழங்கும்வேழமத்தகங்கிழிந்ததன்றே.

(இ-ள்.) இங்கு இதம் நெடுங்கோதண்டம் இடங்கையில் எடுத்து - இம்மதுரையிலுள்ளோர்க்கு இன்பஞ் செய்தற்பொருட்டு நீண்ட வில்லினை இடக்கையிற்பிடித்து, நாரசிங்க வெங்கணை தொட்டு - கொடிய நாரசிங்கபாணத்தைக் குதையிலேறிட்டு, ஆகம் திருக முன் இடத்தாள் செல்ல இரண்டு அங்குலியால் ஐயன்செவி உற வலித்து விட்டான் - தனது திருமேனி திருகும்படி (வலக்கால்மண்டலித்து) முன்னே தனது இடக்கால்செல்ல இரண்டு திருவிரல்களால் வேடுருவாய்வந்த சிவபிரான் தனது செவியளவு விருத்தாகாரமாக நாணைவளைத்துப் பிரயோகம்பண்ணியருள, மங்குலின் முழங்கும் வேழம் மத்தகம் கிழிந்தது - மேகம்போல முழங்கிவந்த யானையினது மத்தகம் கிழிபட்டது.

செய்தற்பொருட்டு இசையெச்சம். விட்டான் முற்றெச்சம். விற்றொடுத்து அம்பினை யெய்வார்க்குரிய நிலைகள் நான்குள் ஆலீடநிலை வலக்கால் மண்டலித்து இடக்கால் முந்துறலாதலால் முன்னிடத்தாள் செல்ல என்றார். நான்கு நிலைகளாவன- பைசாசம், மண்டலம், ஆலீடம், பிரத்தியாலீடமுமாம். (௩0)

கொண்டலினலறிச்சிறிவீழ்ந்ததுகொடியவேழம்
பிண்டதுபாருஞ்சேடன்சென்னியும்பிளந்ததண்டம்
விண்டதுபோலுமென்னத்துண்ணெனவெருவிப்போன
பண்டையதருக்கும்வீறும்படைத்தனதிசைமால்யானை.

(இ-ள்.) கொடிய வேழம் கொண்டலின் அலறிச் சீறி வீழ்ந்தது - கொடிய யானையானது மேகம்போலக்கதறிச்சீறி நிலத்தின்மீது விழுந்தது, பாரும் பிண்டது- (அதனால் அப்பாரத்தைச் சுமக்கலாற்றாது) நிலவுலகமும் பிளந்தது, அண்டம்

விண்டதுபோலும் என்ன துண்ணென வெருவி சேடன் சென்னியும் பிளந்தது-அண்டம் பிளவுபட்டதுபோலுமென நடுக்குற்றஞ்சி ஆதிசேடனுடைய ஆயிரஞ்சிரங்களும் பிளவுபட்டன, போன-புறங்காட்டியோடிய, திசை மால் யானை-திக்குகளிலுள்ள மதமயக்கத்தையுடைய யானைகள், பண்டைய தருக்கும் வீறும் படைத்தன- (கோஷித்து வந்தயானை இறந்ததென்று தமக்கு) முன்னுள்ள செருக்கையும் இறுமாப்பையும் அடைந்தன.

சென்னி-சாதியொருமை. நிலவுலகமுதலியன பிளவுபடுதலாலாகிய கோஷத்தையுணர்ந்ததென்பார். பண்டைய தருக்கும் வீறும் படைத்தன எனவும், தான்சுமக்கும் அண்டம் பிளவுபட்டதென்னும் அச்சத்தால் தலைகிழிந்ததென்பார். அண்டம் விண்டதுபோலுமென்ன துண்ணென வெருவி யெனவுங் கூறினர். இது ஒன்றற்கொன்று காரணகாரியமாய் நிற்றலால் காரணமாலையணி. (௩க)

புதைபடக்கரித்தோல்போர்த்தபுண்ணியமூர்த்திதாளா
லுதைபடக்கிடந்தகூற்றமொத்ததுமத்தயானை
சுதைபடுமதிக்கோவேந்தன்றொழுகுலச்சிறுவனொத்தான்
பதைபடுமமணர்காலபடரெனப்படரிற்பட்டார்.

(இ-ள்.) புதை பட கரித்தோல் போர்த்த புண்ணிய மூர்த்தி தாளால் உதை பட கிடந்த கூற்றம் - (தனது திருமேனி) புதைய யானையினது தோலைப்போர்த்தருளிய சிவபெருமான் தனது திருவடியால் உதைக்கச்சாய்ந்த இயமனை, மத்தம் யானை ஒத்தது - மதமயக்கத்தையுடைய யானையானது ஒத்துச் சாய்ந்தது, சுதை படு மதிக்கோ வேந்தன் தொழுகுலம் சிறுவன் ஒத்தான் - அமுதம்பொருந்திய சந்திரன் மரபிற்றோன்றிய விக்கிரமபாண்டியன் (உழுவலன்பால்) அந்தணர்குலத்திற் பிறந்த மார்க்கண்டேயனை ஒத்தான், பதை படும் அமணர்கால படர் என படரில் பட்டார் - (யானை சாய்ந்ததைக்கண்டு) பதைக்குஞ் சமணர்கள் இயமன் சாய்ந்ததைக்கண்ட காலபடாளடையுந் துன்பம்போலத் துன்பத்தி லழுந்தினார்கள்.

தனது மெய்யன்பர் வசிக்குந் திசையினுஞ் செல்லுதலொழிக வென்ற சிவபிரானுணையைக் கடந்தமையால் புண்ணியமூர்த்திதாளா லுதைபட எனவும், அடியருளத்துக் குடிகொண்ட அப்பெருமான் முன்னோர்காலையில் தனது இனத்தில் ஓர் யானையைமாய்த்து அறிவுறுத்த அதனது தோலைப்போர்த்தருளியதும் உணராமல் அவனடியனைக் கொல்லச்சென்ற யானையாதலால் மத்தயானை கூற்றம் ஒத்தது எனவும், ஏனைக்கடவுளர்போல் தோற்றக்கேடுகளின்றி யருளுருக்கொண்ட அப்பெருமான் திருவடிக்கு அன்புபூண்டொழுகுதலாற் றொழுகுலச்சிறுவன் எனவும், பாண்டியனும் அவ்வாறுடைமையால் அன்புடைமைதோன்றச் சுதைபடுமதிக்கோவேந்தன் ஒத்தானெனவும், தம்முதல்வனுக்கோ ரிடையூறுவரின் அவன் பரிசனமாயுள்ளார் அந்த இடரைத் தாமும் அடைவார் ஆதலால் காலபடர் எனவும், தாம் ஏவிய யானையையே பற்றுக்கோடாகப்பற்றிப் பின்சென்றவராதலால் பதைபடுமமணர் படரிற்பட்டார் எனவும் தெளிவுபடக் கூறினமையால் தெரிதருதேற்றவுவமையணி. ௩உ

இருள்கிடந்தனையதானைபிட்டசிந்துரங்கார்மாலை
யிருண்முகத்தொதுங்கிச்செல்லுமிரவிசெங்கிரணம்போன்ற
திருண்முழுதுண்ணக்காலைவெழுகதிர்வட்டமன்ன
திருளினைமறைத்தகண்டனெய்தவாய்ப்பெய்யுஞ்செந்நீர்.

(இ-ள்.) யானை இருள் கிடந்தது அனையது - (சாய்ந்த) யானையானது இருட்படலம் ஒருசேர நிலவுலகின் மேற்சாய்ந்ததை யொத்தது, இட்ட சிந்தூரம் - அந்தயானையி னெற்றியிலிட்ட சிந்தூரம், கார் மாலை இருள் முகத்து ஒதுங்கிச் செல்லும் இரவி செங்கிரணம் போன்றது - கரியமாலைக்காலத்திலுள்ள இருள்முகத்தில் ஒதுங்கிச்செல்லாநின்ற சூரியனது செவந்த கிரணத்தையொத்தது, இருளினை மறைத்த கண்டன் எய்த வாய் பெய்யும் செந்நீர் - இருள்ஒளியை மழுக்கும் கரியகாளகண்டத்தையுடைய சிவபெருமான் எய்தவாயிற் பெய்யும் உதிரம், இருள் முழுதும் உண்ண காலை எழு கதிர் வட்டம் அன்னது - இருள்முற்றையும் ஒருசேர உண்ண உதையகாலத்திலெழும் சூரியனை ஒத்திருந்தது.

முழுது என்பதனிறுதியில் முற்றும்மை தொகுத்தல். கிடந்தனையது தொகுக்கும்வழி தொகுத்தல். முதலினுள்ளனவற்றையே தொடர்புபடக் கூறுதலால் சந்தானவுவமையணி. (ருரு)

பொய்யறுமனத்தார்தேற்றும்புன்னெறியொழுக்கம்பூண்ட
வெய்யகோன்கொடுங்கோறன்னைவெண்மருப்பாகத்தாங்கி
மையன்மாவடிவங்கொண்டுவந்தவெங்கலியைத்தென்னன்
செய்யகோலையன்சிங்கவாளியாய்ச்சிதைத்ததன்றே.

(இ-ள்.) பொய் அறு மனத்தார் தேற்றும் புல் நெறி ஒழுக்கம் பூண்ட வெய்ய கோன் கொடுங் கோல் தன்னை - பொய்யொழுக்கம் அறுதமனத்தையுடைய சமணர்கள் (மெய்போலத்தேற்றிய) பாபநெறியின் ஒழுக்கத்தைக் கைக்கொண்ட கொடிய சோழனுடைய கொடுங்கோலை, வெள் மருப்பு ஆக தாங்கி - வெள்ளிய கொம்பாக ஏந்தி, மையல் மாவடிவங்கொண்டு வந்த வெங்கலியை - மதமயக்கத்தையுடைய யானையின் உருவுகொண்டுவந்த கொடியகலியை, தென்னன் செய்ய கோல் - விக்கிரமபாண்டியனது செங்கோலானது, ஐயன் சிங்க வாளியாய் சிதைத்தது - சிவபெருமானுடைய நாரசிங்கபாணமாய்ச் சென்றழித்தது.

வேதாகமநெறியோடு மாறுபட்ட சமணநெறியில் நிற்றலால் அவன் பற்றிய கோல் கொடுங்கோல் எனவும், அதனால் அவனுட்டிஉள்ளது என்றுங் கலிஎனவும், வேதாகமநெறி நிற்றலால் பாண்டியன்பற்றியகோல் செங்கோல் எனவும், அதனால் அவனுட்டிஉள்ளது என்றும் அறம் எனவும் குறிப்பாற் போதரலால் உதாரவணி.

உருமுவீழ்ப்புண்டகுன்றினும்பன்மாவம்புதொட்ட
பெருமுழைவாயும்வாயும்பெருகினவருவிச்சோரி
கருமுகின்மானச்சேனங்கழுதுகள்பூதமொய்த்த
திருமணித்தடந்தோள்வீங்கத்தென்னவனுவகைபூத்தான்.

(இ-ள்.) உருமு வீழ்ப்புண்ட குன்றின்-இடிவீழ்ந்தமலையையொத்த, உம்பல் மா அம்புதொட்ட பெருமுழை வாயும் வாயும்-யானையின்மேலம்புதைத்துப் பிளந்த பெரியமலைக்குகையையொத்த வாயினின்றும் (அந்தயானையின்) வாயினின்றும், அருவி சோரி பெருகின - அருவியாகிய உதிரவெள்ளங்கள் பெருக்கெடுத்தோடின, கருமுகில் மான-சூற்கொண்ட கரியமேகத்தையொப்ப, சேனம் கழுதுகள் பூதம் மொய்த்த - பருந்துகளும் பசாசுகளும் பூதங்களும் (தசையுண்ண) நெருங்கின, திருமணி தடந்தோள் வீங்க தென்னவன் உவகை பூத்தான் - வீரலட்சுமி வசிக்கும் அழகிய பெரியதோள்கள் பருத்தோங்கப் பாண்டியன் மகிழ்கூர்ந்தான்.

வீழ்ப்புண்ட என்னும் பெயரெச்சத்தில் வீழ்ப்பு என்னுந் தொழிற்பெயர் உண் என்னும் வினைப்பகுதியோடுகூடி ஓர் பகுதியளவாய் நின்றது. இன் ஒப்புப்பொருட்டு. (௩௫)

ஆனையின்புண்ணீருண்ணவடுத்தகாருடற்பேயென்னச்
சேனைபின்செல்லப்போந்ததிணியிருளமணர்தம்மை
மீனவன்கண்டுசீறவேந்தவன்குறிப்பினிற்கு
மானவெஞ்சினவேன்மன்னர்வல்லைபோய்முடுக்கலுற்றார்.

(இ-ள்.) ஆனையின் புண் நீர் உண்ண அடுத்த கார் உடல்பேய் என்ன - ஆனையினது உதிரத்தை உண்ண அடுத்துநெருங்கிய கரியஉடலையுடைய பேய்க்கூட்டம்போல, சேனை பின் செல்ல போந்த திணி இருள் அமணர்தம்மை - சேனை தமது பின்றொடர யானைபின்றொடர்ந்த வலிய கரியவுருட்டுச்சமணர்களை, மீனவன் கண்டு சீற - விக்கிரமபாண்டியன் பார்த்துக்கோபிக்க, வேந்தவன் குறிப்பில் நிற்கும் மானம் வெஞ்சினம் வேல் மன்னர் வல்லை போய் முடுக்கலுற்றார்-அப்பாண்டியன் குறிப்பின்வழி நிற்கும் மானத்தையும் கொடியகோபத்தையும் உடைய வேலையேந்திய ஏனை அரசர்கள் விரைந்தோடித் துரத்தத் தொடங்கினார்கள்.

மானம் ஆவது தமது பேரரசுக்கு வந்ததீங்கு தமதாகக் கருதுதல். (௩௬)

எடுத்தனர்கையிற்றண்டமெறிந்தனர்மறிந்துசூழ்போய்த்
தடுத்தனர்கரகந்தூளாத்தகர்த்தனர்பீலியோடுந்
தொடுத்தனருடுத்தபாயைத்துணிபடக்கிழித்துக்கால்வாய்
விடுத்தனர்மானம்போக்கிவிட்டனர்சில்லோர்தம்மை.

(இ-ள்.) கையில் தண்டம் எடுத்தனர் சில்லோர் தம்மை எறிந்தனர் - கையில் தண்டத்தையெடுத்துச் சிலசமணரை அடித்தார்கள், மறிந்து சூழ் போய் சில்லோர் தம்மைத் தடுத்தனர் - குறுக்காகச்சூழ்ந்து சென்று சிலரைத்தடுத்து, கரகம் தூளாக பீலியோடும் தகர்த்தனர்-(அவர்களேந்திய) கரகங்கள் தூளாக மயிற்றோகையோடும் பொடிபடுத்தினார்கள், சில்லோர் தம்மை தொடுத்தனர் உடுத்த பாயை துணிபட கிழித்து கால்வாய் விடுத்தனர் - சிலர்களை யவர்கள் தொடுத்துடுத்தபாயைத் துண்டுபடக்கிழித்துக் கால்வாயில் விடுத்தார்கள், சில்லோர் தம்மை மானம் போக்கிவிட்டனர் - சிலரை அவமானப் படுத்திவிட்டார்கள்.

எடுத்தனர், தடுத்தனர், தொடுத்தனர் முற்றெச்சங்கள். (௩௭)

எறியுண்டுசெய்தமாயமிழப்புண்டுசேனையோடு
முறியுண்டுநடுக்கம்பாவமூழ்குண்டுமாழ்கிச்சாம்பிப்
பறியுண்டதலையர்யாரும்பழிப்புண்டுபாயுந்தாமு
மூழியுண்டகாகத்தோடுமொதுங்குண்டுபதுங்கிப்போனார்.

(இ-ள்.) எறி யுண்டு - (பாண்டியன் வழிநின்ற அரசர்களால்) அடிபட்டு, செய்த மாயம் இழப்புண்டு - (மதுரையைத்தாமழிக்கச்) செய்த வஞ்சனையாகிய யானையை இழந்து, சேனை யோடு முறி யுண்டு-(தமக்குத் துணையாகவந்த) சேனைகளோடு முறிப்பட்டு, நடுக்கம் பாவம் மூழ்குண்டு மாழ்கி - நடுக்கத்திலும் பாவத்திலும் மூழ்கி மயங்கி, பறி யுண்ட தலையர் யாரும் சாம்பிப் பழிப்புண்டு - உரோமம் பறிக்கப்பட்ட தலையையுடைய சமணர்கள் யாரும் வருந்திப் பழிப்படைந்து, பாயும்

நாமும் உறியுண்ட கரகத்தோடும் ஒதுங்குண்டு பதுங்கிப்போனார் - பாயும் நாமும் உறியிற்பொருந்திய கமண்டலத்தோடும் ஒளித்துப் பதுங்கி ஓடினார்கள்.

தாம் செய்த வஞ்சத்தால்வந்த யானையாதலால் மாயமெனக்காரணத்தைக் காரியமாக உபசரித்தார். மதுரையை அழிக்கத் தாமாக்கிய உயிர் தம்மால் கொலைசெய்யப் படுதலால் பாவமூழ்கி எனவும், சுவேதசமாகிய உயிர்கள் கருவியால் உயிர் போகாதிருத்தற்பொருட்டு நகத்தாற் பறித்தலால் பறியுண்ட தலையர் எனவும், நாம் என்னும் உயர்திணைப்பன்மைப் பெயரோடு பாய் என்னும் அஃறிணைப்பெயரும் விரவி வருதலால் சிறப்பால் போனாரெனவும் கூறினார். எறி, முறி, மூழ்கு, ஒதுங்கு என்னும் வினைப்பகுதியோடு உண் என்னும் செயப்பாட்டுவினை விகுதிகள்வந்து வேறு பொருள்தந்து நின்றன. பறியுண்டு செயப்பாட்டுவினை வினையெச்சம். (ருஅ)

மாதங்கந்தடிந்தட்டாலமண்டபத்திருந்தவீரன்
பாதங்கள்கையாற்பற்றிப்பாண்டியனிரந்துவேண்டிப்
போதங்கள்கடந்தாயென்றும்பொலியவிங்கிருத்தியென்ன
வேதங்கட்கருத்தஞ்சொன்னவேதியனதற்குநேர்ந்தான்.

(இ-ள்.) மாதங்கம் தடிந்து அட்டாலமண்டபத்து இருந்த வீரன் பாதங்கள் - யானையைக்கொன்று அட்டாலமண்டபத்தின்மேலிருந்தருளிய வேட்டுவ உருக்கொண்டுவந்த சிவபெருமானுடைய திருவடிகளை, பாண்டியன் கையால் பற்றி இரந்து வேண்டி-பாண்டியன் தனது கைகளாற்பற்றிக்குறைகூறி, போதங்கள் கடந்தாய் என்றும் இங்கு பொலிய இருத்தி என்ன - (பிரமன்முதலியோர்) சுட்டறிவிற்கு அப்பாற்பட்டு நின்றோய் எந்நாளும் இவ்விடத்தில் விளங்க இருப்பாயென்று வேண்ட, வேதங்கட்கு அருத்தம் சொன்ன வேதியன் அதற்கு நேர்ந்தான்-(கண்ணுவர்முதலிய முனிவர்கட்கு) வேதத்தின்பொருளை விதித்தருளிய வேட்டுவவடிவாய்நின்ற அந்தணன் அவ்வேண்டுகோளுக்கு உடன்பட்டருளினான்.

குறைபாடொழிந்த பாண்டியன் பின்னுங் குறைகூறினான் என்றார், அட்டாலமண்டபத்தில் இத்திருவுருவோடெழுந்தருளித் தன்போலப்பலரும் கருணைக்கிலக்காகி யுய்யுந்திறத்தை விரும்பினவனாதலால். அடியார் குறைகூறுதற்குக் கருணைசெய்யும் பேரருளனாதலால் அதற்கு நேர்ந்தான் எனக் கூறினார். (ருக)

பின்னுஞ்சில்வரங்கணல்கப்பெற்றுநான்மாடக்கூடன்
மன்னுஞ்சின்மயனைவந்துவந்தித்துவருநாட்காம
னென்னுஞ்சின்மலர்பூந்தண்டாரிராசசேகரனைப்பெற்று
மின்னுஞ்சில்லியந்தேர்வேந்தன்மேதினி[illegible]ரக்குமன்னோ.

(இ-ள்.) பின்னும் சில் வரங்கள் நல்கப் பெற்று - பின்னுஞ் சிலவரங்கள் தந் திருளப்பெற்று, நான்மாடக்கூடல் மன்னுஞ்சின் மயனை வந்து வந்தித்து வருநாள் - நான்மாடக்கூடலில் எழுந்தருளிய ஞானவடிவாகிய சோமசுந்தரக்கடவுளை நாள்தோறும் வந்து வந்தனைசெய்து வருநாளில், காமன் என்னும் சில் மலர் பூந் தண்டார் இராசசேகரனைப் பெற்று - கண்டோர் மன்மதனென்று சொல்லும் மெல்லிய மலர்ந்த பொலிவையுடைய தண்ணியமாலையையணிந்த இராசசேகரனைப்பெற்று, மின்னுஞ் சில்லி அம் தேர் வேந்தன் மேதினி புரக்கும் - விளங்காநின்ற உருள்பூண்ட அழகிய தேரையுடைய விக்கிரமபாண்டியன் உலகினைப் பாதுகாத்து வாராநின்றான்.

அபிடேகபாண்டியன் சித்தமூர்த்திகள் திருவருளால் தன்னைப்பெற்றதுபோல, விக்கிரமபாண்டியன் வேட்டுருக்கொண்டுவந்த பெருமான் திருவருளால் இராசசேகரபாண்டியனைப் பெற்றான் என்பார் வந்தித்து வருநாள் இராசசேகரனைப்பெற்று என்றார். (சo)

வம்புளாயமலர்ந்தவாரான்வரவிடுமத்தக்குன்றிற்
சிம்புளாய்வடிவங்கொண்டசேவகனேவல்செய்த
வம்புளாய்த்தூணம்விள்ளவன்றவதரித்தவாபோற்
செம்புளாய்கொடியநாரசிங்கமாயிருந்ததன்றே.

(இ-ள்.) வம்பு உள் ஆய் மலர்ந்த ஆரான் - வாசந்தனதகத்துக் கமழுமலர்ந்த ஆத்திமாலையையுடைய சோழன், வரவிடு மத்தம் குன்றில் - ஏவிய மதமயக்கத்தையுடைய மலைபோன்ற யானையின் மத்தகத்தில், சிம்புள் ஆய் வடிவம் கொண்ட சேவகன் ஏவல் செய்த அம்பு உள்ளாய் - (நரசிம்மத்தின் இறுமாப்பொழிக்கச்) சரபப்புள்ளாய்த் திருவுருவங்கொண்டருளிய சிவபெருமானுடைய ஏவல்வழிநின்ற நாரசிங்கபாணமானதுதைத்து அதனுள்ளாகி, தூணம் விள்ள அன்று அவதரித்த ஆறுபோல் - (பிரகலாதன்பொருட்டுத் திருமால் இரணியாட்சன்சுட்டிய) தூணம் பிளவுபட அன்று நரசிம்மமூர்த்தியாய் அவதரித்த வகைபோல, செம்புள் ஆய் கொடிய நாரசிங்கம் ஆய் இருந்தது - பருந்து பின்றொடர்ந்து ஆராயும் உக்கிரத்தையுடைய நரசிம்மமூர்த்தியாய் எழுந்தருளியிருந்தது.

விநாயகக்கடவுளும் முருகக்கடவுளும் வயிரவக்கடவுளும் வீரபத்திரக்கடவுளும் திருமால் அவதாரங்களுள் சில அவதாரங்களி லொறுத்துக் கருணைசெய்தருளிய செயல்கள் சிவபெருமான் செயல்களே யாதலால் வீரபத்திரக்கடவுள் கொண்ட சரபமூர்த்தத்தைச் சிவபெருமான்மேலுபசரித்துச் சிம்புளாய்வேடங்கொண்டசேவகன் எனவும், எங்கும் நாராயணனே என்ற பிரகலாதன்பொருட்டு இரணியன் சுட்டிய தூணத்தில் திருமால் அவதரித்தமையால் தூணம் விள்ள அன்றவதரித்தவாபோல் எனவும், அந்த நாரசிங்கபாணஞ் சென்றவழியெல்லாம் பிணக்காடாய்முடியும் ஆதலால் செம்புளாய் எனவுங் கூறினார். கூர்மாவதாரத்தில் விநாயகக்கடவுள் ஒறுத்தனர் எனவும், மச்சாவதாரத்திலும் வராகாவதாரத்திலு முருகக்கடவுள் ஒறுத்தனர் எனவும், வாமனாவதாரத்தில் வயிரக்கடவுள் ஒறுத்தனர் எனவும், நரசிம்மாவதாரத்தில் வீரபத்திரக்கடவுள் ஒறுத்தனர் எனவும் வருதலைக் காஞ்சிப்புராணத்திலும், கூர்மபுராணத்திலும், திருவாரூர் லீலையிலுங் காண்க. "வறுங்கடற்பரப்பகட்டினிலெஞ்சுகூர்மங்க - ளூறுங்கரும்பெருஞ்சேற்றிடையொளிப்பனமுன்னாள்-நறுந்துழாயணியாமையை நலியுறப்பற்றிக் - குறும்படக்கியபிரான் வருதிறன்குறித்தனபோல்"எனவும், "மாயமீன் விழிபறித்தவனமுன் வருமிளவல்" எனவும் காஞ்சிப்புராணத்தில் வலம்புரி விநாயகப்படலத்தில் வருதல்காண்க. ஏனையவை மேற்காட்டிய நூல்களில் உணர்க. ஆய் செயவெனெச்சத்திரிபு. (சக)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

உலகெலாமழித்துமீளவுண்டாக்குமுருத்திரன்வீரசத்தியினிற்
சிலதரித்திறவாவவுணன்மார்பிடந்தசிங்கநாயகனையங்கெய்தி
யலகின்மாதவஞ்செய்துரோமசன்றன்பேரறியவோர்தீர்த்தமுண்டாக்கி
யிலகுபேறடைந்தான்பிரகலாதனுநோற்றீறிலாப்பெருவரமடைந்தான்.

(இ-ள்.) உலகு எல்லாம் அழித்து மீள உண்டாக்கும் உருத்திரன் வீரசத்தியினில் சில தரித்து - எல்லாஉலகங்களையும் ஒடுக்கிமீளவும தனது சத்தியாற்படைத்தருளும் உருத்திரமூர்த்தியினது வீரசத்திகளுள் சிலசத்திகளை யவனருளால் தரித்து; இறவாத அவுணன் மார்பு இடந்த சிங்கநாயகனை-இறவாத இரணியாட்சனுடைய மார்பினைப்பிளந்த உக்கிர நரசிம்மமூர்த்தியை, உரோமசன் அங்கு எய்தி அலகு இல் மாதவம் செய்து தன்பேர் அறிய ஓர் தீர்த்தம் உண்டாக்கி இலகு பேறு அடைந்தான் - உரோமசமுனிவன் அத்தலத்தையடைந்து அளவில்லாத பெரியதவத்தைச் செய்து தனது பேர்விளங்க ஒருதீர்த்தம் தொட்டுவிளங்கும் பெரும்பேறடைந்தான், பிரகலாதனும் கோற்று ஈறு இல்லாத பெருவரம் அடைந்தான் - பிரகலாதனும் தவஞ்செய்து பெரியவரங்களை அம்மூர்த்தியாற் பெற்றான்.

திருமால் இரணியாட்சனை நாரசிம்மமூர்த்தியாய் வதைத்தது உருத்திரப் பெருமான் அருட்பேற்றால் என்பார் உருத்திரன் வீரசத்தியினிற சிலதரித்திறவாவவுணன் மார்பிடநத என்றார். (௩௨)

யானையெய்தபடல முற்றிற்று.

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - ௧௬௨௭.

---

## இருபத்துமூன்றாவது

# விருத்தகுமாரபாலரானபடலம்.

கலிநிலைத்துறை.

தழையுலாங்கையரேவியதந்திமேல்விடைமே
லழகர்சேவகஞ்செய்தவாறறைந்தனமவரே
கிழவனாகிப்பின்காளையாய்க்கிஞ்சுகச்செவ்வாய்க்
குழவியாய்விளையாடியகொள்கையைப்பகர்வாம்.

(இ-ள்.) தழை உலாம் கையர் ஏவிய தந்தி மேல் - மயிற்றோகையையேந்திய கையையுடைய சமணர்கள் ஏவிய யானையின்மேல், விடை மேல் அழகர் சேவகம் செய்த ஆறு அறைந்தனம் - இடபத்தின்மே லாரோகணித்தருளும் பேரழகு வாய்ந்த சோமசுந்தரக்கடவுள் சேவகஞ்செய்த திருவிளையாடலைக்கூறினோம், அவரே - அச்சோமசுந்தரக்கடவுளே, கிழவன் ஆகி பின் காளை ஆய் கிஞ்சுகம் செவ்வாய் குழவி ஆய் விளையாடிய கொள்கையை பகர்வாம் - முதலில் விருத்தராகி இடையில் காளைப்பருவமுடையவராகி முடிவில் முள்முருக்கமலர்போன்ற செவந்தவாயையுடைய மதலையாகி விளையாடியருளிய திருவிளையாடலை யினிக்கூறுவாம்.

கிழவனாகி, காளையாய், குழவியாய் என்றது சொன்முறையணி. (௧)

தென்னன்விக்கிரமன்புயத்திருநிலச்செல்வி
மன்னிவாழுநாண்மதுரையின்மறையவனொருவ
னன்னவன்விருபாக்கனுமவன்குடிவாழ்க்கை
மின்னனாள்வடமீனனாள்பெயர்சுபவிரதை.

(இ-ள்.) தென்னன் விக்கிரமன் புயத்து இருநிலச்செல்வி மன்னிவாழும் நாள் - விக்கிரமபாண்டியனுடைய புயத்தில் பெரியபூதேவி நிலைபெற்று வாழுங்காலையில், மதுரையில் மறையவன் ஒருவன் - மதுராநகரில் அந்தணன் ஒருவன் உள்ளான், அன்னவன் விரூபாக்கன் ஆம் - அம்மறையவன் விரூபாக்கனென்னும் பெயரையுடையவனும், அவன் குடிவாழ்க்கை மின் அன்னாள் - அவன் இல்வாழ்க்கைக்குரிய மனைவியானவள், வட மீன் அன்னாள் - அருந்ததிபோலுங் கற்பினையுடையாள், சுபவிரதைபெயர் - பெயரோ சுபவிரதை யெனப்பட்டவள்.

மின் அன்னாள் - மின்னலையொத்தவள். விரூபாக்கன் - சிவபெருமான் திருநாமங்களுள் ஓர் திருநாமமே தனக்குப்பெயராய் வழிப்பட்டொழுகுகின்றவன் என்பார் அன்னவன் விரூபாக்கனும் எனவும், அவனொழுக்கிற்குத்தக்க நல்ல விரதங்களையுடையாள் என்பார் பெயர் சுபவிரதை எனவும் கூறினார். விரூபாக்கன்மேல் நோக்கிய திருக்கண்ணையுடையவன். (௨)

அனையர்தங்களுக்கரும்பெறன்மகவின்றியனந்தம்
புனிதநல்லறஞ்செய்தொழிலொழுக்கமும்பூண்டு
நனையவார்குழலன்னையரெழுவர்பானண்ணி
யினியமாதவஞ்செய்தொருபெண்மகவீன்றார்.

(இ-ள்.) அனையர் தங்களுக்கு அரும் பெறல் மகவு இன்றி-அவ்விருவர்களுக்கும் அடைதற்கரிய புத்திரப்பேறில்லாமல், அனந்தம் புனிதம் நல் அறம் செய்தொழில் ஒழுக்கமும் பூண்டு-அளவில்லாத குற்றமற்ற சிவதருமமே செய்துவரும் தொழிலையும் சோமசுந்தரக்கடவுளையும் அங்கயற்கண்ணம்மையையும் வழிபடும் நல்லொழுக்கத்தையுமேற்கொண்டு, நனையவார்குழல் அன்னையர் எழுவர்பால் நண்ணி - தேன் சிந்தும் நீண்ட கூந்தலையுடைய சத்தகன்னியர்கள் சந்நிதியையடைந்து, இனியமாதவம் செய்து ஒருபெண்மகவு ஈன்றார் - இனியபெரியதவத்தைச்செய்து ஒருபெண் குழந்தையைப்பெற்றார்கள்.

பண்டு புத்திரப்பேற்றுக்குரிய நற்கருமமில்லையென்பார் அரும்பெறன்மகவின்றி யெனவும், இம்மையில் எண்ணியாங்கே தரவல்லது சிவபுண்ணியம் என்பார் புனிதநல்லறம் எனவும், ஏனைக்கடவுளர்பாற்செய்யும் வழிபாட்டினும் சிவபெருமான்பாற்செய்யும் வழிபாடேவேண்டியாங்கேதரவல்லது என்பார் விசேடண அன்னுவயங்கொண்டு புனிதநல்லொழுக்கமுமெனவும், உமாதேவியார்கூறுகள் பலசத்திகளாதலால் அன்னையர் எழுவர் எனவுங்கூறினார். சத்தகன்னியர்களாவார் அபிராமி, மகேஸ்வரி, கௌமாரி, நாராயணி, வராகி, இந்திராணி, காளி. (௩)

பேருங்கௌரியென்றழைத்தனர்பிராயமோரைந்திற்
சாருங்கௌரியும்பிறவிநோய்தணிப்பதற்குறுதி
தேருஞ்சிந்தையாடந்தையைவணங்கியிச்சென்ன
மீருந்தெய்வதமந்திரமியாவெனவினவ.

(இ-ள்.) பேரும் கௌரி என்று அழைத்தனர் - (அங்கயற்கண்ணம்மையார் திருவருளாற்பிறந்தமையால்) பெயருங் கௌரியென்றிட்டழைத்தார்கள், பிராயம் ஓர் ஐந்தில் சாரும் கௌரியும் - ஐந்துபிராயத்தையடைந்த அக்கௌரியும், பிறவி நோய் தணிப்பதற்கு உறுதி தேரும் சிந்தையாள் - (இனிவரும்) பிறவியாகிய நோயைத்தணிக்க உமாதேவியார் திருவருட்பயனை ஆராயும்மனத்தையுடையவளாகி, தந்தையை வணங்கி இ சென்னம் ஈரும் தெய்வதம் மந்திரம் யா என வினவ-

தனது பிதாவைவணங்கி இப்பிறவிநோயையொழிக்கும் தெய்வமும் அத்தெய்வத்தை வழிபடுமந்திரமும் எவையென்றுகேட்க.

உறுதி தொழிலாகுபெயராய்ப் பயன்மேல் நிற்றலால் திருவருட்பயன் என்றும். தெய்வதம், பொருளால் உயர்திணையாயினும் சொல்லால் அஃறிணையாதலால் தெய்வதம் மந்திரம் என்னும் வினைமுதல்களுக்கு யா எனப் பலவறிசொற்பயனிலை தந்து முடித்தார். (அ)

அந்தணனுமதிசயித்தரும்பெறன்மகட்குச்
சிந்தையார்வமோடிறைவிதன்மநுவினைச்செப்பத்
தந்தைபாலதுதெளிந்துநாத்தழும்புறப்பயின்றாண்
முந்தைநாளருந்தவக்குறைமுடித்திடவந்தாள்.

(இ-ள்.) அந்தணனும் அதிசயித்து - விரூபாட்சனும் அதிசயங்கூர்ந்து, அரும்பெறல் மகட்கு சிந்தை ஆர்வமோடு இறைவிதன மநுவினை செப்ப - பெறுதற்கரிய தனதுபுத்திரிக்கு மனத்திற்பொங்கியெழுந்த அன்போடு பராசத்தியினது திருமந்திரத்தைக்கூற, முந்தை நாள் அருந்தவக்குறை முடித்திடவந்தாள் - முற்பிறப்பிற்செய்த அரியதவத்தில் விடப்பட்ட குறையை இப்பிறப்பில்முடிக்க அவதரித்த கௌரியானவள், தந்தைபால் அதுதெளிந்து நா தழும்பு உற பயின்றாள் - தனது பிதாவினிடத்து அதனைக்கேட்டுச் சிந்தித்துத்தெளிந்து நாவில் தழும்புபடப் பழகிவந்தாள்.

ஐந்துபிராயத்தில் சனனத்தைப்போக்குங்கடவுளையும் அக்கடவுளை வழிபட்டுச்செபிக்கும் மந்திரத்தையும் வினவியதால் அதிசயித்தெனவும், அப்புதல்வி அவனது தவப்பேறுயிருத்தலால் அரும்பெறல் எனவும், ஆசைக்கு அன்புகாரணமாதலால் காரணத்தைக் காரியமாக உபசரித்து ஆர்வமெனவும், பராசத்திதிருமந்திரம் இருடிதேட்சணாமூர்த்தியாகவும் சந்தஸ் காயத்திரியாகவும் உடையதாய்ப் பிறவியைப் போக்குதற்குரியதாதலால் இறைவிதன் மநுவினைச்செப்ப எனவும், கேட்டல்மாத்திரம் அமையாது, சிந்தித்தலும் தெளிதலும் ஆசிரியனிடத்திருந்தே அமைவுபெற வேண்டியவாதலால் உபலக்கணத்தால் சிந்தித்தலையும் தழுவித் தந்தைபாலது தெளிந்து எனவும், தனக்கு உபதேசமாகிய திருமந்திரத்திற்குரிய பராசத்தியை-பாசமும், அங்குசமும், வரதமும், அபயமும் ஆகிய இந்நான்கையுங்கொண்டருளிய திருக்கரங்களையும், தாமரையும் அமுதகலசத்தையும் ஏந்திய இரண்டு திருக்கரங்களையும் உடைய இருதிறத்துமூர்த்தமாகக்கொண்டு செபித்தலால் நாத்தழும்புறப்பயின்றாள் எனவுங்கூறினார். (கூ)

தாதைதன்றவக்கொழுந்தினுக்கிசையமாசைவ
மாதவத்தனுயாதியாசசிரமத்தில்வழங்கும்
வேதவித்துமாய்மரபினுன்மேம்படுவானெனப்
போதுபோதுமென்றுளத்தொடுபுகன்றுகொண்டிருந்தான்.

(இ-ள்.) தாதைதன் தவக்கொழுந்தினுக்கு இசைய - விரூபாட்சன் தனது பெறுதற்கரிய தவக்கொழுந்துபோன்ற புத்திரிக்குப்பொருந்த, மாசைவ மாதவத்தனுய் - மகாசைவத்தின்வழிநின்ற பெரியதவத்தையுடையவனாய், ஆதி ஆச்சிரமத்தில் வழங்கும் வேதவித்தும் ஆய் - பிரமசரிய ஆச்சிரமத்தில் செல்லும் வேதவித்துமாய், மரபினுல் மேம்படுவான் - கோத்திரம் சூத்திரங்களால் மேம்பட்டமண

அ

வாளன், எப்போது போதும் என்று உளத்தொடு புகன்று கொண்டு இருந்தான்- எக்காலையில் வருவானென்று தனதுமனத்தில் இடைவிடாது கருதியிருந்தான்.

வைதிகப்பிராமணருள் சிவதீட்சைபெற்று அவ்விதிவழிநடப்போன்வேண்டும் என்பான் மாசைவ மாதவத்தனாய் எனவும், வேதம்பயிலுதற்குரிய ஆச்சிரமம் பிரமசரியம் ஆதலால் வேதம் நிரம்பப்பயின்றவன் வேண்டுமென்பான் ஆதி ஆச்சிரமத்தில் வழங்கும் வேதவித்துமாயெனவும், தன்குடிப்பிறப்போடொத்தவன்வேண்டுமென்பான் மரபினால் மேம்படுவான் எனவுங்கருதினான்.

போதும் என்பது, புகு என்னும் அடிப்பாடடியாகப்பிறந்த செய்யுமென்னும் வினைமுற்று, ஒடு உருபுமயக்கம், புகன்றென்பது மனத்திற்குக் கூறுதலின் மையால்விட்ட இலக்கணை. (௬)

பருவநாலிரண்டாகமேற்கடிமணப்பருவம்
வருவதாகவங்கொருபகல்வைணவப்படிவப்
பிரமசாரியாய்க்கடைதொறும்பிசசைபுக்குண்பா
னொருவன்வந்தனன்பலிக்கவனயற்புலத்துள்ளான்.

(இ-ள்.) பருவம் நாலிரண்டாக-எட்டுப்பிராயமாக, மேல் கடிமணப்பருவம் வருவது ஆக - அக்காலையில் நிகழுங்கல்யாணப்பருவம்வர, அங்கு ஒருபகல்-அக்காலையில் ஒருநாள், வைணவப்படிவம் பிரமசாரியாய் - வைணவவடிவம்வாய்ந்த பிரமசரிய ஆச்சிரமத்தையுடையவனாய், கடைதொறும் பிச்சைபுக்குஉண்பான் ஒருவன் அவண் பலிக்கு வந்தனன் - (அந்தணர்கள்) வீட்டுவாயில்தோறும் (சென்று) பிச்சை வாங்கியுண்ணும் ஒருவன் அவ்விடத்துப்பலிக்குத் தன்வீட்டுக்குவந்தான், அயல் புலத்து உள்ளான் - (அம்மறையவன்) வேற்றூரிலுள்ளவன்.

எட்டாவதுபிராயம் மணஞ்செய்தற்குரிய கன்னிகைப்பருவமாதலால் மேற்கடிமணப்பருவம் என்றதற்கு, அக்காலையில் நிகழும் எனப்பொருள் கூறினாம். அங்கு என்னு மிடைச்சொல்லின் அடிப்பாடாகிய அகரம் காலத்தின்மேல் நின்றது. வாங்குதலென்னும் பொருணிகழ்ச்சிதோன்றப் புகுதலென்னும் தொழினிகழ்ச்சியால் புக்கென உபசரித்தார் ''பிச்சைபுக்குண்பான்பிளிறுமை'' எனவும் வருதல் காண்க. (௭)

பிச்சைவேண்டினனவற்குத்தன்பெண்ணினைக்கொடுப்பா
னிச்சைகூர்ந்தருந்தவத்தினால்வருந்தியீன்றெடுத்த
விச்சைவேதியன்மனையொடுசுற்றமும்வினவா
தச்சமின்றிநீரொடுத்தவனங்கையிற்பெய்தான்.

(இ-ள்.) பிச்சைவேண்டினன் அவற்கு தன்பெண்ணினை கொடுப்பான் இச்சை கூர்ந்து - பிச்சைவேண்டிவந்த அப்பிரமசரியனுக்குத் தனது பெண்ணைக்கொடுக்க விருப்பங்கொண்டு, அருந்தவத்தினால் வருந்தி ஈன்று எடுத்த விச்சை வேதியன் - அரியதவச்செய்கையால் உடல்மெலிந்து பெற்றெடுத்த கல்வியில்வல்ல விருபாட்சன், மனையொடு சுற்றமும் வினவாது - தன்மனைவியாகிய சுபவிரதையோடு சுற்றத்தாரையும் வினவி ஆராயாது, அச்சம் இன்றி நீர் எடுத்து அவன் அங்கையில் பெய்தான் - அச்சம் சிறிதுமில்லாமல் கரகநீரொடுத்து அப்பிரமசரியன்கையில் என் கன்னிகையைக் கொடுத்தேனென்று தாரைவார்த்தான்.

மனைவி சுற்றத்தார்சீற்றம் தன்பால்வருமென்று சிறிதும் நினையானாயினானென்பார் அச்சமின்றி எனக்கூறினார். (௮)

கலிக்குநூபுரச்சிறடிக்கன்னிதன்விதியும்
பலிக்குவந்தவனல்வினைப்பகுதியுந்துரப்ப
வொலிக்குமந்திரச்சிரகநீரொழுக்கினன்முந்திச்
சலிக்குமன்னையுந்தமர்களுங்கேட்டுளந்தளர்வார்.

(இ-ள்.) கலிக்கும் நூபுரம் சிறடி கன்னி தன் விதியும் பலிக்கு வந்தவன் நல் வினைப்பகுதியும் துரப்ப - ஒலிக்கின்ற சிலம்பையணிந்த சிற்றடியையுடைய கன்னிப்பருவத்தையுடைய கௌரியின்போகூழ்ப்பயனும் பிச்சைக்குவந்த பிரமசாரியினுடைய ஆகூழ்ப்பயனும் செலுத்த, முந்தி ஒலிக்கும் மந்திரம் சிரகம் நீர் ஒழுக்கினன் - முற்பட்டு உச்சரிக்கும் மந்திரத்தோடு கரகத்தில் கிரப்பியநீரைத் தாரைவார்த்தான், சலிக்கும் அன்னையும் தமர்களும் கேட்டு உளம் தளர்வார் - மனம் வருந்தும் சுபவிரதையும் நெருங்கிய சுற்றத்தார்களும் கேள்வியுற்று மனத்தளர்ச்சியடைவாராயினர்.

அப்பிரமசாரியன் வைணவ ஒழுக்கினனாதலால் கன்னிபோகூழ்ப்பகுதியெனவும், வறியன் வைப்புநிதியை எதிர்ந்ததுபோலப் பெண்ணரசியாகிய கௌரியைப்பெற்றமையால் பலிக்குவந்தவன் நல்வினைப்பகுதி யெனவும், மனைவியோடும் சுற்றத்தாரோடும் வினவாது தத்தஞ்செய்தலால் அவை துரப்ப முந்தியெனவுங் கூறினர். நல்வினைப்பகுதி என்றமையால் விதிஎன்றதைப் போகூழ்ப்பயன் என்றும்.(கூ)

குலனுமோர்கிலன்கோத்திரமோர்கிலன்குடிமை
நலனுமோர்கிலனொழுக்கமுங்கல்வியுநண்ணுந்
தலனுமோர்கிலன்கன்னியைத்தத்தஞ்செய்தானெப்
புலனுமோர்ந்தவன்விதிவழிமதியெனப்புலந்தார்.

(இ-ள்.) குலனும் ஓர் கிலன் கோத்திரம் ஓர்கிலன் - அவன் இன்னகுலத்தினன்எனவும் உணராது குலம் உணர்ந்தவழிக்கோத்திரம் உணரவேண்டுதலின் அதனையும் உணராது, குடிமையும் நலனும் ஓர்கிலன் - அதனையுணர்ந்தவழிக் குடிப்பிறப்பின் சிறப்பையுணரவேண்டுதலின் அதனையும் உணராது, ஒழுக்கமும் கல்வியும் நண்ணும் தலனும் ஓர்கிலன் - அதனையுணர்ந்தவழி அவன்சமய ஒழுக்கத்தையும் கல்வித்திறமையையும் அவன்வசிக்கும் தலத்தையும் உணரவேண்டுதலின் அவற்றையும்உணராது, கன்னியை தத்தஞ்செய்தான் - தன்கன்னிகையை (என்றும்அறியாத பிரமசாரியனுக்குத்) தத்தஞ்செய்துவிட்டனன், எப்புலனும் ஓர்ந்தவன் - (இவனோ) எல்லாநூல்களையுங் கற்றவன், விதி வழி மதி எனப்புலந்தார் - விதியின்வழிமதியென்னும் பழமொழி இவன்பாற் புலப்பட்டதென்று மனைவிமுதலிய சுற்றத்தார் வருந்தினர்கள்.

"விதியேமதியாய்விடும்" என்ற ஏதுவாலுணர்க. (௪0)

மற்றவன்குடிகோத்திரஞ்சூத்திரமற்று
முற்றறிந்துநம்மரபினுக்கொக்குமான்மாயோன்
சொற்றதந்திரவழிவைணவத்தொடக்குண்டுதிரியுங்
குற்றமொன்றினிமறுப்பதென்கொடுப்பதென்றிசைந்தார்.

(இ-ள்.) அவன் குடி கோத்திரம் சூத்திரம் மற்றும் முற்றும் அறிந்து - அப்பிரமசரியனுடைய குடிமையையும் கோத்திரத்தையும் சூத்திரத்தையும் மற்றுள்ள

னவற்றையும் முழுதும் அவனாலறிந்து, நம்மரபினுக்கு ஒக்கும் - நம்முடையமரபினுக்கு ஒருவகைஒத்திருக்கின்றான், மாயோன் சொற்ற தந்திர வயிணைவத் தொடக்குண்டு திரியுங் குற்றம் ஒன்று-திருமால்கூறிய பாஞ்சராத்திரத்தின்வழிப்பட்ட வைணவக்கட்டுண்டு திரியாநின்ற குற்றமொன்றுதான் இவனிடத்துளது, இனிமறுப்பதுஎன் - (முன்னரே தத்தஞ்செய்தமையால்) இனி நாம்மறுக்கக்கடவது என்னஉள்ளது, கொடுப்பது என்று இசைந்தார் - கொடுப்பதுதான் இனிக்கடமையென்று சுபவிரதைமுதலியோர் உடன்பட்டார்கள்.

மற்றென்னும் இடைச்சொற்களில் முன்னது அசைநிலை. பின்னது பிறிதென்னும் பொருள்மேல்நின்றது. சூத்திரமெனபது, போதாயனம், ஆபஸ்தம்பம், ஆஸ்வலாயனம், திராகியாயனம், கார்த்தியாயனம், சத்தியாஷாடம், பிறிதென்றது குலமும் கல்வியும் முதலியன. தமது ஒழுக்கத்துக்கு அவனது ஒழுக்கம்முரணுடையதென்பார். வைணவத் தொடக்குண்டுதிரியும் குற்றமொன்றெனவும், முரணிய இவனுக்கு மகட்கொடைநேர்தல் தவறென்பார் இனிமறுப்பதெனனெனவுங் கூறினார். முற்றுஎன்பதனிறுதியில் முற்றும்மைதொகுத்தல். (௧௧)

தாயுமொக்கலுமொத்தபின்றாதையும்வேதத்
தாயுமெண்மணத்தாதியாமறநிலையாற்றாற்
றேயுநுண்ணிடைக்கன்னியைச்செம்பொனாற்புதைத்துக்
காயுமாரழன்முன்னரக்காளைகைக்கொடுத்தான்.

(இ-ள்.) தாயும் ஒக்கலும் ஒத்தபின் - சுபவிரதையும் சுற்றத்தாரும் மனம் ஒத்தபின், தாதையும் வேதத்து ஆயும் எண் மணத்து ஆதியாம் அற நிலை ஆற்றால் - விரூபாக்கனும் எட்டுவிவாகத்துள் பிரமவிவாகமாகிய அறநிலையின்வழியால், தேயும் நுண் இடை கன்னியை செம்பொன்னால் புதைத்து - (தனத்தோற்றத்தால்) மெலிந்துவரும் நுண்ணியஇடையையுடைய கன்னிகையாகிய தனதுபுதல்வியைச்செவந்த பொன்னாற்செய்த ஆபரணத்தால் உடல் தோன்றாமல் அலங்கரித்து, காயும் ஆரழல் முன்னர் அக்காளை கொடுத்தான் - வெம்மைவீசும் நிறைந்த ஓமாக்கினிமுன் பிரமசாரியனாய் வந்த அப்பிராமணனுக்கு மணமுடித்தான்.

அறநிலை மறநிலையென்னும் இரண்டனுள் அறநிலையிற் பிரமம்என்னும் விவாகமடங்குதலால் காரியத்தைக் காரணமாக வுபசரித்து அறநிலையாற்றால் எனவும், அறநிலையுள் இன்னதென்பது புலப்பட ஆயுமெண்மணத்தாதியாம் எனவும், மங்கல வேள்வித் தீயாயினும் தீயாதலால் சாதியடைதந்து காயும் எனவும் கூறினார். செம்பொனென்றது அடையடுத்தகாரண ஆகுபெயராய்க் காரியமாகிய ஆபரணத்தின் மேல் நின்றது. எண் மணம் ஆவன பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், ஆசுரம், இராக்கதம், பைசாசம். இவற்றுள் பிரமம் ஆவது பிரமசாரிக்குக் கன்னியைத்தீ முன்னர்க்கொடுத்தல். (௧௨)

தெய்வமங்கலவரிசைகள்செய்துதான்பயந்த
மௌவலங்குழற்கன்னியைமணமகனோடுங்
கௌவையம்புனல்வேலிசூழ்கடிநகர்விடுத்தான்
சைவமங்கலவேதியத்தாபதனிப்பால்

(இ-ள்.) தெய்வ மங்கல வரிசைகள் செய்து - தங்கள்குலத்திற்குரிய மங்கலவரிசைகளை நடத்தி, தான் பயந்த மௌவல் அம்குழல் கன்னியை - தான்பெற்ற

முல்லைமாலையையணிந்த யழகியகூந்தலையுடைய புதல்வியை, சைவமங்கல வேதிய சதாபதன்-சைவத்தின் சிறப்புவாய்ந்த தவவேடத்தையுடைய விரூபாட்சன், மணமகனோடும் கௌவை அம்புனல் வேலி சூழ் கடி நகர் விடுத்தான - வைணவனாகிய மணவாளனோடும் ஒலியையுடைய நீர்வளமிக்க வயல்சூழ்ந்த காவல்பூண்ட அவனது நகரதிற்கு அனுப்பினான், இப்பால் - இப்புறம்.

புனல்வேலியென்றமையால் வயல்என்றும், பூசுரராதலால் தெய்வமங்கல வரிசையெனவும், கற்புடையவளாதலால் மௌவலங்குழலெனவும், சைவவேடத்திற் சிறந்தவனாதலால் சைவமங்கலத்தாபதனெனவுங் கூறினார். (௧௩)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

இல்லார்க்குக்கிழியீடுநேர்பட்டாலெனப்பல்லாரில்லந்தோறுஞ்
செல்லாநின்றிரந்துண்டுதிரிந்தமகன்மணமகனாய்ச்செல்வநல்க
வல்லாளைமணந்துவருவான்போற்றம்மனைபுகுதவன்கட்சீலப்
பொல்லாராய்வைணவத்துப்புக்கொழுகுதாய்தந்தைபொறாராகி.

(இ-ள்.) இல்லார்க்கு கிழியீடு நேர்பட்டால் என-வறுமையுற்றவர்க்குத் தைவிகமாய்ப் பொன்முடிப்புக் கிடைத்தாற்போல, பல்லார் இல்லந்தோறும் செல்லாநின்று இரந்து உண்டு திரிந்த மகன் மணமகன் ஆய்செல்வம் நல்கவல்லாளை மணந்துவருவான்போல் தன்மனை புகுத - பலஅந்தணர்களுடைய வீடுகள்தோறுஞ் சென்றுயாசகித்து உண்டுதிரிந்த வைணவப்பிரமசரியன் மணவாளனாக இடையறுத பெருஞ்செல்வத்தைக்கொடுக்கவல்ல இலட்சுமியை மணஞ்செய்துவருகின்றவனைப்போலக் கௌரியை மணஞ்செய்து தன்னுடைய இல்லிற்சென்று புகுத, வன் கண்சீலப் பொல்லாராய் வைணவத்து புக்கு ஒழுகு தாய் தந்தை பொறார்கள் ஆகி - கொடுமையையே சீலமாகப் பூண்டுகொடியவராய் வைணவமதமேற்கொண்டு அதன்வழிப்பட்டொழுகும தாயும் தந்தையும் மனமபொறுதவர்களாய்.

கௌரியை மனைவியாகப்பெற்றது அவனது பெருஞ்செல்வப் பேறென்பார். இல்லார்க்குக் கிழியீடு நேர்பட்டால் எனவும், அக்கௌரியை மணவினைமுடித்தது அவனது பெருந்தவப்பேறென்பார் செல்வ நல்க வல்லாளை மணந்துவருவான்போலெனவும், வைணவருள்ளும் மிகக்கொடியரென்பார் வன்கட்சீலப்பொல்லாராய் ஒழுகுஎனவும் கூறினார். (௧௪)

வந்தமணவாட்டிசிவசிந்தனையுஞ்சைவதவவடிவுநோக்கி
வெந்தவுடலபோன்மனமும்வெந்தவளைவேறொதுக்கிவேண்டாராகி
நிந்தனைசெய்தொழுகுவாரவளையொருநாணீத்துநீங்கிவேற்றூர்த்
தந்தமர்மங்கலங்காண்பான்றனியேவைத்தகம்பூட்டித்தாங்கள்போனார்.

(இ-ள்.) வந்த மணவாட்டி சிவசிந்தனையும் சைவ தவம் வடிவும் நோக்கி - (தமதில்லிற்கு) வந்த மணக்கோலத்தையுடைய மருகியின் சிவசிந்தையையும் சைவ தவவேடப்பொலிவையும் பார்த்து, வெந்த உடல்போல் மனமும் வெந்து - (தமது மதக்கொள்கையால்) வெந்த தமது உடம்புபோல மனமும் வெந்து, அவளை வேறு ஒதுக்கி வேண்டார் ஆகி நிந்தனை செய்து ஒழுகுவார் - அந்தக் கௌரியை வேறிடத்திற் குடியேற்றிச் சிறிதும் வேண்டாதவர்களாய் என்றும் நிந்தைசெய்து நடக்கும் அவனது தாய் தந்தையர்கள், அவளை ஒருநாள் நீத்து நீங்கி - அக்கௌரியை ஒருநாள் தம்மினின்றும் நீக்கித் துரந்து, வேற்றூர் தம் தமர் மங்கலம் காண்பான் தனி

யே வைத்து அகம் பூட்டி தாங்கள் போனார் - அயலூரில் தமது சுற்றத்தார் மனைவி யினையைக்காணத் தனியே ஓரிடத்தில் வைத்துத் தமது வீட்டிற்குப் பூட்டிட்டுத் தாங்கள் சென்றார்கள்.

முன்னரே புறத்தில் வெந்தோர்க்கு அகத்தும் வேதலை உடைத்தாதல் வழக்காதலால் மணவாட்டி சிவசிந்தனையும் சைவதவவடிவுநோக்கி வெந்த உடல்போல் மனமும் வெந்து எனவும், தமது கருமங்கட்குக் கௌரியை யுடன்படுத்த இசையாதவராயிருந்ததால் வேறொதுக்கி எனவும் அமையாது வேண்டாராகியெனவும், தங்கட்குத் தீராப்பகைமை யுடைமைபோலக் கருதினவராதலால் நிந்தனை செய்தெனவுங் கூறினார். (௩௫)

உண்மாசுகழுவுவதுநீறென்றேயுபநிடதமுறைப்பக்கேட்டு
மண்மாசுபடப்பூசும்வடிவுடையாரகன்றதற்பின்மனையில்வைகும்
பெண்மாசுகழியவொருசிவனடியார்தமைக்காணப்பெறாமலின்றென்
கண்மாசுபடுவதெனக்கனிந்தொழுகுதலையன்பாற்கவலைகூர்வாள்.

(இ-ள்.) நீறே உள் மாசு கழுவுவது என்று உபநிடதம் உரைப்பக் கேட்டும்- (நீர்புறத்தழுக்கைப்போக்கித் தூய்மை செய்தல்போலத்) திருநீறே அகத்தழுக்காகிய மலங்களைப்போக்கித் தூய்மை செய்வதென்று வேதத்தின் சிகையாகிய பிரபலச்சுருதி கூறக்கேட்டிருந்தும், மண் மாசு பட பூசும் வடிவுடையார் அகன்றதன்பின் - தமது தேகத்தில் மண்ணை யழுக்குப்படப்பூசும் வடிவினையுடையவர்கள் தமது இல்லினின்று நீங்கினபின், மனையில் வைகும் பெண் மாசு கழிய-அவர்கள் மனையில் வசிக்கும் கௌரி தனது குற்றமொழிய, ஒரு சிவனடியார் தமை காண பெறாமல் இன்று என் கண் மாசு படுவது என-ஒரு சிவன் அடியார் திருவேடத்தைக்காண இதுகாறும்பெறாமல் இப்பொழுது என் கண்மாசு படுகின்றதுஎன்று, கனிந்து ஒழுகுதலை அன்பால் கவலை கூர்வாள்-பழுத்தொழுகும் தலையன்பினால் கவலைகூரத் தொடங்கினாள்.

நெல்லிற்கு முளை தவிடு உமிபோல ஆன்மாக்களைப்பந்தித்து முறையே போகம், பந்தம், போத்திருத்துவம் பண்ணுவன மும்மலங்கள் என்பார் உண்மாசுஎனவும், புறமுகமாய் நோக்குவோர்க்கு ஆகமவிதிப்படி நீற்றுதலையுடையது என்னும் பொருள் படினும் அகமுகமாய் நோக்குவோர்க்கு மலங்களை நீற்றுவதென்னும் பொருள்படும் என்பார் தேற்றேகாரந்தந்து கழுவுவது நீறென்றே எனவும், திருநீற்றின் மான்மியத்தை வேதாந்தம் விதந்து கூறுவதென்பார் உபநிடதமுரைப்ப எனவும், கேட்டற்குரிய அதிகாரிகள் என்பார் கேட்டும் எனவும், அவ்வாறு கேட்டிருந்தும் வேதவிருத்தமாகிய செய்கைகளில் ஒழுகுவோர் என்பார் மண்மாசுபடப்பூசும் எனவும், இவரில்லிற்கு நான்வந்த காலங்காறும் வைணவ தவவேடத்தையன்றிச் சைவ தவவேடத்தையுடைய சிவனடியாரைக் கண்டிலள் என்பார் சிவனடியார் தமைக்காணப் பெறாமலென்றன் - கண்மாசுபடுவது எனவும், தலையன்பு என்றமையாற் கனிந்தொழுகு எனவுங் கூறினார். நெல்லினுள்ள முளைத்தற் சத்தி முளையைத் தோற்றுவிக்கும் வகைபோல ஆன்மாக்களிடத்துச் சுகதுக்கங்களை முதற்காரணமாய் நின்று கன்மமலந் தோற்றுவித்தலும், முளைத்தற்கு அநுகூலஞ்செய்து உடனிற்குந் தவிடுபோல அந்தச் சுகதுக்கங்க ளவ்விடத்துத் தோன்றுவதற்குத் துணைக்காரணமாய்த் தன் காரியமாகிய தனுகரண முதலியவற்றையும் உயிரையும் மாயாமலங் கூட்டுவித்து நிற்கும் எனவும், அம்முளை யவ்விடத்துத் தோன்றுவதற்கு நிமித்தகாரணமாகிய உமிபோல அத்தோற்றத்திற்கு நிமித்தகாரணமாய் அவற்றை முறுகுவித்து அச்சுக

துக்கங்களை யான்மா நுகர ஆணவமலம் நிலைபெறுத்தும் எனவும் வருதல், "மும்மலநெல்லினுக்கு முளையொடுதவிடுமிப்போல் - மம்மர்செய்தணுவினுண்மை வடிவினை மறைத்துநின்று-பொய்மைசெய்போகபந்த போத்திருத்துவங்கள்பண்ணும்" என்ற தனுவால் உணர்க. (௪௬)

சிவனடியார்க்கன்பிலாச்சிந்தையேயிரும்பேவல்செய்துநாளு
மவனடியார்திறத்தொழுகாவாக்கையேமரஞ்செவிகண்ணாதியைந்தும்
பவனடியாரிடைச்செலுத்தாப்படிவமேபாவைமறைபரவுஞ்சைவ
தவநெறியல்லாநெறியேபவநெறியென்றளியளாய்த்தளர்வாள்பின்னும்.

(இ-ள்.) சிவனடியார்க்கு அன்பு இல்லாத சிந்தையே இரும்பு - சிவபெருமானடியவரிடத்து அன்பு சிறிதுமில்லாத மனமே இரும்பாம், ஏவல் செய்து நாளும் அவன் அடியார் திறத்து ஒழுகாத ஆக்கையே மரம் - அவரேவிய ஏவலைச்செய்து எந்நாளும் அச்சிவபெருமானடியவர் திறத்திற்செல்லாத சரீரமே மரமாம், செவி கண் ஆதி ஐந்தும் பவன் அடியார் இடைச் செலுத்தாத படிவமே பாவை - செவி கண் முதலிய இந்திரியங்களைந்தையும் ஆன்மாக்களுக்குப் பந்தம் அருளும் அச்சிவபெருமானது அடியவர்களிடத்துச் செலுத்தாத உருவமே பதுமையாம், மறை பரவும் சைவ தவநெறி அல்லாத நெறியே - வேதங்கள் துதிக்கும் சைவத்தின் தவமார்க்கமல்லாத மற்றைச் சமயமார்க்கங்களே, பவநெறி என்று அளியள் ஆய் தளர்வாள் - ஆன்மாக்களுக்குப் பாவத்தைத்தரு மார்க்கங்களென்று அன்புடையவளாய்த் தளர்வாளாயினாள், பின்னும் - மீளவும்.

சிவபெருமான் தனது அடியவர் திருவேடத்தையே ஆதாரமாகக்கொண்டு நின்று ஆன்மாக்கள் செய்யும் வழிபாட்டிற்கேற்ப அருள் செய்து நிற்பான் என்பாள் சிவனடியார்க் கன்பிலாச்சிந்தையே எனவும், அவனடியார் திறத்தொழுகா வாக்கையே எனவும், செவிகண்ணாதி யைந்தும் பவனடியாரிடைச்செலுத்தாப் படிவமே எனவும், நிலையியற்பொருளாகிய தாவரத்தில் உலோகங்களுள் ஒரு சார்பொருட்கு இரும்பு என்றல் உபசாரம் என்பாள் பிரிநிலை யேகாரந்தந்து சிந்தையே யிரும்பு எனவும், உற்பிசத்தில் ஒருசார்பொருட்கு மரம் என்றல் உபசாரம் என்பாள் ஆக்கையே மரம் எனவும், செயற்கைப்பொருள்களுள் ஆண், பெண் பகுப்புத்தோன்றச்செய்த உருவத்தைப் பாவை என்றல் உபசாரம் என்பாள் படிவமே பாவை எனவும், முத்தி பெறுதற்கு ஏதுக்களாகிய சோபானங்களை மலைவுபடாது முறைப்படக்கூறி யந்நிலைகளில் நிற்கும் ஆன்மாக்களுக்கு அம்முத்திதருஞ் சமயம் சைவசமயம் என்பாள் மறைபரவுஞ் சைவதவநெறி எனவும், உய்திபயக்கும் பொருள்கள்போல உய்தியில் பொருள்களைப் பலபடக்கூறுவன ஏனைச்சமயங்கள் என்பாள் அல்லாநெறியே பவநெறி எனவுங் கூறினாள். சிவபெருமான் அடியவர் திருவேடத்தையே ஆதாரமாகக் கொண்டு நின்றருளுவன் என்பதற்கு "தாவரசங்கமங்களென்றிரண்டுருவினின்று-மாபரன்பூசைகொண்டு மன்னுயிர்க்கருளைவைப்பன்" என்ற தனுவால் உணர்க.

எனைத்துயிர்க்குமுறுதியிகபரமென்பவவைகொடுப்பானெல்லாந்தானா
யனைத்துயிர்க்குமுயிராகுமரனென்பவனறிவார்க்கங்கம்வாக்கு
மனத்துறுமெய்ப்பத்திவழிவருமென்பவப்பத்திவழிநிற்பார்க்கு
வினைத்துயர்தீர்த்திடவெடுத்தவடிவென்பதவனடியார்வேடமன்றே.

(இ-ள்.) எனைத்து உயிர்க்கும் உறுதி இகபரம் என்ப - எல்லா உயிர்களுக்கும் பயனுயுள்ளன இம்மைப்போகமும் மறுமைப்போகமும் என்று கூறுவார்கள், அவை கொடுப்பான் எல்லாம் தான் ஆய் அனைத்து உயிர்க்கும் உயிராகும் அரன் என்ப

(அவ்வுயிர்களுக்கு) அவற்றைக்கொடுப்பவன் எல்லாத் தானுமில்லா உயிர்களுக்கும் உயிராய் நிற்பானும் எவன் ... அவனென்று கூறுவார்கள், அவன் அறிவார்க்கு அவ்கம் வாக்கு மனத்தால் உண்டாகிய பத்தி வழிவரும் என்ப-(அங்ஙனங்கொடுத்தருளும) அச்சிவபெருமானை ஆகமவழியாலுணர்ந்து வழிபடக்கருதினவர்க்கு மனம்வாக்குக் காயமென்னும் இவற்றால் வழிபடும் உண்மையாகிய மெய்பத்திநெறி முதிருமென்று கூறுவார்கள், அப்பத்திவழி நிற்பார்க்கு - (அவற்றால் முதிர்ந்த) அப்பத்தியின்வழி நிற்பவர்க்கு, வினைத்துயர் தீர்த்திட எடுத்த வடிவு என்பது அவன் அடியார் வேடம் அன்றோ-இருவினைகளால் வருந் துன்பங்களைத்தீர்க்க எடுத்த (திருவுருவென்பது) அச்சிவபெருமானுடைய அடியவர் திருவேடமல்லவா.

மலபந்தத்தையுடைய நரர்முதல் சுரரீறாகவுள்ள பசுவர்க்கங்கள் என்பார் எனைத்துயிர்க்கும்எனவும், அப்பசுவர்க்கங்களின் மலநோய் ஒழித்தற்கு இம்மைப்போகமு மறுமைப்போகமும் பரமௌடதம் என்பார் உறுதியிகபரமென்ப எனவும், அப்பரமௌடதங் கொடுக்கு மலவயித்தியன் இயல்பாகவே அம்மலங்களினீங்கிய பதியாவான் என்பார் அவை கொடுப்பான் அரன் எனவும், மாயையினின்று கலாதிமுதலாகத்தோன்றிய காரியப்பிரபஞ்சத்திற்கும், அதன் தோற்றரவாகிய ஆண் பெண் அலியென்னும் பரிணமத்திற்கும் நிமித்தகாரணனாய் அநந்தர் சீகண்டர் முகத்தால் அவற்றைக் காரியப்படுத்துங்கால் கலந்து ஒன்றாய் நிற்பான் என்பார் எல்லாந்தானுய் எனவும், அவற்றைச் செலுத்துங் காலுடனாய் நிற்பான் எனபாா அனைத்துயிர்க்குமுயிராகும் எனவும், ஞானநூல்களைக் கற்றுங் கேட்டும் சிந்தித்தும் பசுவையும் பாசத்தையுங்கூட்டிச் சேட்டிப்பவன் பரமபதியே எனத் தெளிந்தவர் என்பார் அவனறிவார்க்கு எனவும், அவ்வாறறிந்தவர்க்கு அவன் திருவடியைக் கூடுகைக்கு மனத்தாற் சிந்தித்தலும், வாக்காற்றுதித்தலும், காயத்தால் வழிபடுதலுமாகிய சார்புபற்றிய மெய்ப்பத்தி தோன்றும் என்பார் அங்கம் வாக்கு மனத்தறு மெய்ப்பத்தி வழிவரும் என்ப எனவும், நல்வினையால்வருஞ் சுவர்க்காதிபோகங்களும் பொன்விலங்குபோலும் என்பார் அதனையும் அடக்கிப் பொதுப்பட வினைத்துயர் எனவும், அம்மெய்ப்பத்தியில் வழுவாது நிற்பவர்க்கு அப்பத்தியையேற்றுப் பரமுதநியருள அவனுறைவிடமாகக்கொண் டெழுந்தருளியிருக்குமிடம் அடியவர் திருவேடம என்பார் அப்பத்திவழி நிற்பார்க்கு வினைத்துயர்தீர்த்திட வெடுத்தவடிவெனப தவனடியார் வேடமன்றோ எனவுங் கூறினர். (௧௮)

என்னவிருந்தலமருவாளிருக்குமிடத்தவளுள்ளத்தெண்ணியாங்கே
தென்னவனாயிருந்தரசுசெய்தபிரானவட்கருளுஞ்செவ்விநோக்கிக்
கன்னமுரங்கரஞ்சிரந்தோள்கண்டமுங்கண்டிகைபூண்டுகையிற்றம்போற்
பன்னெடுநாட்பழகியதோர்தனிப்பெரியபுத்தகமும்பக்கஞ்சேர்த்தி.

(இ-ள்.) என்ன இருந்து அலமருவாள் இருக்குமிடத்து - என்று இவ்வாறு கருதி வருந்தும் கௌரி இருக்குமிடததில், அவள் உள்ளத்து எண்ணிய ஆங்கு-அக்கௌரி மனத்திற்கருதியபடி, தென்னவன் ஆய் இருந்து அரசுசெய்த பிரான்-சௌந்தரபாண்டியனாயிருந்து அரசுசெய்த சோமசுந்தரக்கடவுள், அவட்கு அருளும் செவ்விநோக்கி - அக்கௌரிக்கு அனுக்கிரகம் செய்யும் அமையம் கருதி, கன்னம் உரம் கரம் சிரம் தோள் கண்டமும் கண்டிகை பூண்டு-காதிலும் மார்பிலும் கையிலும் தலையிலும் தோளிலும் கழுத்திலும் உருத்திராட்சக் கண்டிகையைத்தரித்து, கையில் தம்போல் பல் நெடு நாள் பழகியது ஓர் தனிப் பெரிய புத்தகமும் பக்கம் சேர்த்

து திருக்கரத்தில் தம்மைப்போலப் பலநாளும் நீங்காதிருக்கும் ஒப்பில்லாத புத்தகத்தையும் அத்திருக்கரத்தின்கண்தரித்து.

பராசத்தியை வழிபட்டொழுகினமையால் பாகம்வாய்ந்ததென்பார் உள்ள தண்ணியாங்கே - அவட்கருளுஞ் செவ்விநோக்கினவும், சிவபெருமானைப்போல் என்றும் உள்ளது என்பார் தம்போற் பன்னெடுநாட்பழகியதோர் தனிப்பெரிய புத்தகமும் எனவும், ஆசிரியத்திருக்கோலங் கொண்டுவந்தனர் என்பார் கன்னமூங்காஞ்சிரந்தோள் கண்டமுங்கண்டிகைபூண்டு எனவுங்கூறினார். (சகூ)

கரிந்தநீள்கயன் முள்ளினரையுமுதுதிரைகவுளுங்கனைக்குநெஞ்சுஞ்
சரிந்தகோவணவுடையுந்தலைப்பனிப்புமுத்தரியந்தாங்குதோளும்
புரிந்தநூல்கிடந்தலையும்புண்ணியநீறணிமார்பும்பொலியநீழல்
விரிந்ததோர்தனிக்குடையுந்தண்டூன்றிக்கவிழ்ந்தசையுமெய்யுந்தாங்கி.

(இ-ள்.) கரிந்த நீள் கயல் முள்ளின் நரையும் - கருநிறம்வாய்ந்த நீண்டகயலினது முள்ளை யொத்த நரையும், முது திரை கவுளும் - மிகவும் திரைத்த கபோலமும், கனைக்கும் நெஞ்சும் - அடிக்கடிகனைக்கும் மார்பும், சரிந்த கோவண உடையும் - சரிந்தகோவணம்போக்கிய ஆடையும், தலைப்பனிப்பும் - தலைநடுக்கமும், உத்தரியம் தாங்கு தோளும் - உத்தரியந்தாங்கிய திருத்தோளும்; புரிந்த நூல் கிடந்து அலையும் புண்ணியநீறு அணி மார்பும் - முப்புரியாகச்செய்த உபவீதம் கிடந்தசையும் விபூதியணிந்த திருமார்பும், நீழல் பொலிய ஓர் விரிந்தது தனிக்குடையும்-நிழல்விளங்க விரிந்த ஒப்பில்லாதகுடையும், தண்டு ஊன்றிக்கவிழ்ந்து அசையும் மெய்யும் தாங்கி-தண்டினையூன்றி அதனோடுகவிழ்ந்து அசையும் திருமேனியும் ஆகிய இவைகளைக்கொண்டருளி. (உ0)

ஒருத்தராயுண்டிபலபகல்கழிந்தபசியினர்போலுயங்கிவாடி
விருத்தவேதியராய்வந்தகம்புகுதக்கண்டெழுந்துமீதூரன்பின்
கருத்தளாய்த்தவிசிருத்திக்கைதொழுதுசிவனையிங்குக்காணவென்ன
வருத்தமாதவமுடையேனெனமுனிவர்பசித்துன்பால்வந்தேமென்றார்.

(இ-ள்.) ஒருத்தர் ஆய் பலபகல் உண்டிகழிந்த பசியினர்போல் உயங்கி வாடி விருத்தவேதியர் ஆய்வந்து அகம் புகுத - (தனக்கோர்பற்றுக்கோடாயுள்ளவர் இல்லாத)ஒருவராய்ப் பலநாள் உணவையொழிந்த பசியையுடையவர்போலமயங்கிவாடி முதுமூப்பைஉடைய அந்தணர்திருக்கோலம் உடையவராய்வந்து தனது இல்லிற்புக, கண்டு எழுந்து மீதூர் அன்பின் கருத்தளாய் - கண்டுவிரைந்தெழுந்து மேலெழுந்தோங்கிய அன்பினையுடைய மனத்தையுடையவளாய், தவிசு இருத்தி கைதொழுது சிவனை இங்குகாண என்ன வருத்தம் மாதவம் உடையேன் என - ஆசனத்தில் எழுந்தருளி இருக்கச்செய்து கைகூப்பிச் சிவபெருமானை இவ்விடத்திற்காண என்னவருந்திச்செய்த பெரியதவத்தையுடையேன் என்றுசொல்ல, முனிவர் பசித்து உன்பால் வந்தேம் என்றார் - (வந்த) முனிவர் மிகவும்பசித்தலால் உன்னிடத்துவந்தேனென்று கூறியருளினார்.

பசித்து என்னும் வினையெச்சம் காரணகாரியப் பொருள்மேல் நிற்றலால் பசித்தலாலென்றும். (உக)

இற்பூட்டிப்போயினுரொமரங்களெனக்கெளிரியம்பமேரு
விற்பூட்டிப்புரம்பொடித்தவேதியர்நின்கைதொட்டுவிடுமுன்யாத்த

கொற்பூட்டுவிடுந்திறந்துகடிதடிசில்சமைத்தியெனக்குமரிதாளி
லற்பூட்டுமடவாளுமவ்வாறேயட்டில்புகுந்தடிசிலாக்கி.

(இ-ள்.) இல்பூட்டி எமரங்கள் போயினர் என கௌரி இயம்ப - இல்லினைப்பூட்டி எம்முடைய மாமிமுதலானவர்கள் வேற்றூர்க்குப்போனார்களென்று கௌரிகூற, மேருவில் பூட்டி புரம்பொடித்த வேதியர் - மேருவில்லில் சேடனாகிய நாணைப்பூட்டித் திரிபுரத்தை நீறுபடுத்திய அந்தணராய்வந்த சோமசுந்தரக்கடவுள், நின்கை தொட்டுவிடுமுன் யாத்தகொல் பூட்டு திறந்துவிடும் - உனதுகையால் பரிசித்தற்குமுன் பந்தித்தகொல்லனால்செய்த பூட்டுத்திறக்கும், கடிது அடிசில் சமைத்தி என - விரைந்துபுகுந்து திருவமுதமைப்பாயென்றருள, குமரிதாளில் அன்பு ஊட்டு மடவாளும் அ ஆறே அட்டில் புகுந்து அடிசில் ஆக்கி - அங்கயற்கண்ணியார் திருவடியில் அன்புசெலுத்தும் அக்கௌரியும் அவ்வண்ணமேசெய்து சமையல்வீட்டிற்சென்று திருவமுதமைத்து.

கொல் என்னும் சாதிப்பண்பு கொல்லன்மேல் நிற்றலால் பண்பாகுபெயர். ஈறுதொக்கு நின்றதெனினும் அமையும். (உஉ)

தையன்மாதவக்கொழுந்துபுறம்போந்துசிரகநீர்தளிர்க்கைதாங்கி
யையனேயமுதுசெயவெழுந்தருளுமெனவெழுந்தவடிகள்பாதச்
செய்யதாமரைவிளக்கியந்நீர்தன்சென்னியின்மேற்றெளித்துப்பாச
மையன்மாசிருள்கழுவியகம்புகுவித்தாசனமேல்வைத்துப்பின்னர்.

(இ-ள்.) தையல் மா தவக்கொழுந்து புறம்போந்து-பெண்களுள் பெரியதவக்கொழுந்துபோன்ற அக்கௌரி அட்டிலினின்று புறத்துவந்து, சிரக நீர் தளிர் கை தாங்கி - கரகநீரைத் தனது தளிர்போன்ற மெல்லியகைகளிலேந்தி, ஐயனே அமுது செய எழுந்தருளும் என்ன - ஐயனே திருவமுதுசெய்ய எழுந்தருளுமென்றிரக்க, எழுந்த அடிகள் பாதம் செய்ய தாமரை விளக்கி - எழுந்தருளிவந்த சிவவேடம்பூண்ட அந்தணருடையதிருவடியாகியசெவந்ததாமரைகளை (அக்கரகநீரால்)விளக்கி, அந் நீர் தன் சென்னியின்மேல் தெளித்து - அந்தநீரைத் தனது சிரசின்மேல் புரோக்ஷித்து, பாசம் மையல் மாசு இருள் கழுவி அகம்புகுவித்து ஆசனமேல்வைத்து - பாசமாகிய மயக்கத்தைவிளைக்கும் மல இருளைக்கழுவித் தனது இல்லினுட் புகுவித்து ஆசனத்தின்மேலெழுந்தருளி யிருக்கச்செய்து, பின்னர்-பின்பு. (உ௩)

நகைமலரிட்டருச்சித்துநல்லபரிகலந்திருத்திநறுவீமுல்லை
முகையனையபாலடிசில்வெள்ளிமலையெனப்பருப்புமுதுகிற்செம்பொற்
சிகரமெனப்பல்வேறுகருனைபுறந்தழீஇக்கிடந்தசிறுகுன்றீட்ட
வகையெனநெய்யருவியெனப்படைத்தனையசிற்றுண்டிவகையும்பெய்து.

(இ-ள்.) நகைமலர் இட்டு அருச்சித்து நல்ல பரிகலம் திருத்தி - விளக்கமுடையமலர்கொண் டருச்சனைசெய்து ஒளிவாய்ந்த உண்கலத்தைத்திருத்திவைத்து, நறுவீ முல்லை முகை அனையபால் அடிசில் வெள்ளிமலை என - நறுமணங்கமழும் மணமிக்க முல்லையரும்பையொத்த பால்வார்த்துச்சமைத்த திருவமுது கைலைமலையைப்போலவும், பருப்பு - அதன்புறத்திட்டபருப்பு, முதுகில் செம்பொன் சிகரம் என - அக்கைலையின்புறத்திலுள்ள மகமேருவைப்போலவும், பல்வேறு கருனை - (அதனைச்சூழப்படைத்த பலவேறுவகைப்பட்ட பொரிக்கறியின்வகைகள், புறம் தழுவி கிடந்த சிறுகுன்று ஈட்டவகை என்ன-(அம்மகமேருவின்)புறத்தைத் தழுவிக்கிடந்த

ஷதமலைமுதலியவற்றின கூட்டத்தை வேரோடுபறித்துவைத்த வகையைப்போல யும், செய் அருவி என படைத்து - அத்திருவமுதில்வாக்கிய செய் அத்திருக்கைகலையி னின்றிழியும் அருவியைப்போலவும்படைத்து, அலைய சிற்றுண்டி வகையும்பெய்து- துபோலவே யேனைச்சிற்றுண்டிவகைகளையுஞ் சூழவைத்து.

திருத்தி மங்கலவழக்கு. (உச)

செய்யவாயிடையிடையேமுகமனுரையின்னமுதுசெவியிலூட்டத்
தையலாள்வளைக்கையறுசுவையமுதுவாயூட்டத்தளர்ந்தயாக்கை
யையர்தாந்திருவமுதுசெய்தமுதுண்டவரொனமூப்பகன்றுபூவிற்
கையதேமலர்வாளிக்காளைவடிவாயிருந்தார்கன்னிகாண.

(இ-ள்.) செய்யவாய் இடை இடையே முகமன் உரை இன் அமுது செவியி ல் ஊட்ட - செவந்த தனதுவாயால் இடைக்கிடையே உபசாரவார்த்தையாகிய இ னியவமுதமைத்து (விருந்தாகவந்த) முதுவேதியர் திருச்செவியில் உண்பிக்கவும், தையலாள்வளைக்கை அறுசுவை அமுதுவாய் ஊட்ட - கௌரி தனது வளையலணிந் தகையால் அறுசுவையமைந்த அன்னத்தையும அவர்திருவாயிலுண்பிக்கவும, தளர் ந்த யாக்கை ஐயர் தாம் - முதுமூப்பால் தளர்ச்சியடைந்த திருமேனியையுடைய அ வ்வேதியர், திரு அமுது செய்து அமுது உண்டவர் என மூப்பு அகன்று - திருவமு துசெய்தருளித் தேவாமிர்தம் உண்டவரைப்போலத் தமது மூப்பினைநீங்கி, பூ வில் கையதே மலர்வாளி காளைவடிவாய் கன்னிகாண இருந்தார் - மலர்வில்லையேந் திய கையிலுள்ள தேன்சிந்தும மலர்க்கணையையுடைய மன்மதன்வடிவமாகி அங் கௌரிகாண இருந்தனர்.

அமுதபானஞ்செய்தவர் மூப்பகலுதலால் அமுதுண்டவரென மூப்பகன்று எனவும், தேவர்மேலெய்யும்வில் மலர்வில்லாதலால் மூப்பகன்று எனவுங்கூறினார். முதுமை முதியோர்மேல்நிற்றலால் பண்பாகுபெயர். (உரு)

பூசியவெண்ணீறுபோய்க்கலவையாய்க்கண்டிகைபோய்ப் பொன்செய்பூ
காசணிபொற்குண்டலமுங்கடகமாயமூப்புப்போய்க்காளையான [றுங்
தேசுருவங்கண்டுநடுநடுங்கிவளைக்கரநெரிததுத்திகைத்துவேர்த்துக்
கூசியொருபுறத்தொதுங்கிநின்றாளக்கற்புமலர்க்கொம்பரன்னாள்.

(இ-ள்.) பூசிய வெள் நீறுபோய் கலவை ஆய் - திருமேனியிற்பூசிய வெள் ளிய திருநீறு உருமாறிக் கலவைச்சந்தனமாகியும், கண்டிகைபோய் - உருத்திராட்ச கண்டிகை உருமாறி, பொன்செய் பூணும காசு அணிபொன் குண்டலமும் கடகமும் ஆய்-பசும்பொன்னாற்செய்த ஆபரணங்களும் இரத்தினமிழைத்த பொன்னாலாகியகு ண்டலங்களும கடகமுமாகி, மூப்புப்போய் காளையான தேசு உருவம்- முதுமூப்புமா றிக் காளைப்பருவமானவிளக்கமு அமைந்தவேதியரது திருவுருவத்தை, அ கற்பு மலர் கொம்பர் அன்னாள் - அந்தக்கற்பாகியமலர்களையுடைய பூங்கொம்புபோன்ற கௌரி யானவள், கண்டு நடுநடுங்கி வளைக்கரம் நெரித்து திகைத்து வேர்த்துகூசி ஒருபு றத்து ஒதுங்கி நின்றாள் - பார்த்து நடுநடுக்கமுற்று வளையலணிந்த தனதுகைகளைநெ ரித்து மயங்கி வேர்வரும்பிக்கூசி ஒருபால் அஞ்சி ஒதுங்கிநின்றனள்.

வெண்ணிறவிபூதியளவில்லாத புண்ணியத்தைவிளைத்தலால் வெண்ணீறு என் றார். கருநிறவிபூதி நோயையுண்டாக்குதலும், செந்நிறவிபூதி கீர்த்தியைப்போக்குத லும், புகைநிறவிபூதி ஆயுளைக்குறைத்தலும், பொன்னிறவிபூதி சம்பத்தைக்கெடுத்

தலு முடைமையால் அவற்றைக்களையவேண்டும் என்பது ஆகமவிதி "கறப்புச்செவப்புக்கடியதொருநாமம் - வெறுப்புடனேபீதம்விடு" எனச்சைவசமயநெறியின் பொதுவிலக்கணத்தில் உணர்க. (௨௬)

ஆனபொழுதருங்கடிநன்மணங்குறித்துமனையிற்றீர்ந்தயலூர்புக்க
தேனொழுகுதுழாயலங்கற்றீர்த்தனுக்கன்புடையார்போற்றிரியும்வஞ்ச
மானமுடையார்மீண்டுமனைபுகலும்பதினாறுவயதின்மேய [ன்.
பானன்மணிகண்டனுதற்காப்பணிந்தோர்பசுங்குழவிப்படிவங்கொண்டா

(இ-ள்.) ஆன பொழுது - இத்திருவுருவம் கொண்டருளிய காலையில், அருங்கடி நல் மணம் குறித்து மனையில் தீர்ந்து - மிக்கவிளக்கம் அமைந்த நல்லவிவாகத்தைக்குறித்துத் தனது வீட்டினின்றும் நீங்கி, அயலூர் புக்கு தேன் ஒழுகு துழாய் அலங்கல் தீர்த்தனுக்கு அன்பு உடையார்போல் திரியும் வஞ்சம் மானம் உடையார் மீண்டு மனைபுகலும் - வேற்றூர்க்குச்சென்ற தேன்சிந்தும் துழாய்மாலையையணிந்த திருமாலுக்கு மெய்யன்புடையவர்போல் நடித்துத்திரியும் வஞ்சத்தையும் சமயமானத்தையுமுடைய மாமிமுதலியோர் திரும்பித் தமதுமனையில்வர, பதினாறுவயதில் மேய பானல் மணி கண்டன் நுதல் காப்பணிந்து ஓர் பசுங்குழவி படிவம் கொண்டான் - பதினாறுவயதினையுடைய நீலோற்பலம்போன்ற கரிய ஸ்ரீகண்டத்தையுடைய வேதியராகிய சோமசுந்தரக்கடவுள் நெற்றியில் நிலப்பொட்டணிந்த ஒப்பில்லாத பச்சைக்குழந்தையின் உருவத்தைக் கொண்டருளினார்.

திருமாலுக்கு மெய்யன்புடையவரல்லர் என்பார் அன்புடையார் போற்றிரியும் வஞ்ச மானமுடையார் எனக்கூறினார். பசுமை என்னும் பண்பு அருமைமேல் நின்றது. (௨௭)

எழுதரியமறைச்சிலம்புகிடந்துபுறத்தலம்பவன்பரிதயமென்னுஞ்
செழுமலரோடையின்மலர்ந்துசிவானந்தத்தேன்றதும்புதெய்வக்கஞ்சத்
தொழுதகுசிற்றடிப்பெரியவிரல்சுவைத்துமைக்கணீர்துளும்பவாய்விட்
டழுதணையாடையிற்கிடந்தானனைத்துயிருமீன்றுகாத்தழிக்குமப்பன்.

(இ-ள்.) எழுது அரிய மறை சிலம்பு கிடந்து புறத்து அலம்ப-எழுதுதற்கரிய வேதமாகிய சிலம்புகள் சூழ்ந்துகிடந்து புறத்தில்ஒலிக்க, அன்பர் இதயம் என்னும் செழுமலர் ஓடையில் மலர்ந்து சிவானந்தத்தேன் ததும்பு தெய்வம் கஞ்சம் தொழுதகு சிற்றடி பெரியவிரல் - அடியாருடைய இருதயமென்கின்ற அன்றலர்ந்த மலர்களையுடைய ஓடையில் மலர்ந்து சிவானந்தமாகிய தேன்ததும்பும் தெய்வத்தன்மையையுடைய தாமரைபோன்ற துதிக்கத்தக்க சிற்றடியிலுள்ள பெருவிரலை, அனைத்து உயிரும் ஈன்று காத்து அழிக்கும் அப்பன் - எல்லாஉயிர்களையும் படைத்தும் காத்தும் ஒடுக்கியும் அருளும் அப்பனாகிய சோமசுந்தரக்கடவுள், சுவைத்துமைக் கணீர் துளும்ப வாய்விட்டு அழுது அணை ஆடையில் கிடந்தான் - சுவைத்துமையெழுதியகண்களில் நீர்ததும்பவாய் திறந்தழுது அணையாகப்பரப்பிய ஆடையின் மேல் கிடந்தருளினான்.

ஓடைக்குரிய அடைதந்து செழுமலர் ஓடையெனக் கூறினார். (௨அ)

தாய்விட்டுப்போனதொருதனிக்குழவியெனக்கலங்கித்தாங்கித்தேடி
யாய்விட்டுப்பிரமனழமறைகளழவன்புடையாளன்பிற்பட்டு

வாய்விட்டுக்கிடந்தழுதமகவினைக்கண்டணங்கனையாண்மாமியென்னுங்
காய்விட்டுமதக்கொடியாளிம்மகவேதெனக்கேட்டாள்கௌரிதன்னை.

(இ-ள்.) தாய் விட்டு போனது ஒரு தனிக்குழவி என கலங்கி - தாய்கைவி ட்டுப்போன ஒப்பில்லாத ஒருகுழந்தையைப்போல அறிவுகலங்கி, தாங்கி தேடி ஆய் விட்டு பிரமன் அழ மறைகள் அழ - சிரத்தில் தாங்கித்தேடி ஆராய்ந்து பிரமனும் வேதங்களும் ஒருபால்அலற, அன்புடையாள் அன்பில் பட்டு வாய் விட்டு கிடந்து அழுத மகவினை கண்டு - அன்புமிக்க கௌரியினுடைய அன்பிலகப்பட்டு வாய் திறந்து அணையின்மேற்கிடந்து அலறுங் குழந்தையைக்கண்டு, அணங்கு அனையாள் மாமி என்னும் காய் விட்டு மதக்கொடியாள் - இலட்சுமியையொத்த அக்கௌரியினது மாமியாகிய கோபமிக்க வைணவமதக்கொடியவள், கௌரி தன்னை இம்மகவு ஏது எனக்கேட்டாள் - கௌரியைநோக்கி இக்குழந்தை யேதென்றுகேட்டனள்.

ஆய்விட்டு ஒருசொல்லாதலால் ஆராய்ந்து என்றும். ஆய்விடு என்பது காறு முதனிலை. விட்டு ஆரியச்சிதைவு. (உகூ)

நத்தனயன்றனக்கரியநாயகனுக்கன்புடையாணவில்வாடேவ
தத்தனயந்தருமனைவியொடுபோந்துசிறுபோதுதையலாயீண்
டித்தனையன்றனைப்பார்த்துக்கோடியெனவைத்தகன்றுளென்னுமுன்னஞ்
சித்தநயனங்கலங்கச்சீறிமணவாட்டிதன்மேற்செற்றங்கொண்டாள்.

(இ-ள்.) நத்தன் அயன் தனக்கு அரிய நாயகனுக்கு - சங்கினையேந்திய திருமாலுக்கும் பிரமனுக்கும் தேடுதற்கரிய சிவபெருமானுக்கு, அன்பு உடையாள் நவில்வாள் - பேரன்பினையுடைய கௌரிகூறுகின்றாள், தேவ தத்தன் நயம் தரு மனைவியொடு போந்து-தேவதத்தனென்னு மந்தணன் தனக்கு இன்பந்தரும் மனைவியாகிய சிதேவியோடுமிங்குவந்து, சிறுபோது-சற்றுநேரம், தையலாய்-பெண்ணே, ஈண்டு இத்தனையன் தனைபார்த்து கோடிஎன வைத்து அகன்றுள் என்னுமுன்னம்- இப்பொழு திக்குழந்தையைப் பார்த்துக்கொள்ளாயென்று வைத்து நீங்கினான் என் றுசொல்லுமுன்னமே, சித்தம் நயனம் கலங்க சீறி - தனதுமனமும் கண்களும் கலங்கக்கோபித்து, மணவாட்டி தன்மேல் செற்றம் கொண்டாள் - தன்மணவாட்டியாகிய மருகியின்மேற் கோபங்கொண்டாள்.

குறிப்பில்லாத ஒருவரைக் குறிப்படக் கூறவேண்டின் தேவத்தன் எனவும் சிதேவியெனவுங் கூறுதல வழக்காதலால் தேவதத்தன் என்று கூறினுேனும் நயந் தருமனைவி என்றது சிதேவியை யாதலால் சிதேவி என்றும். (௩0)

என்புபூண்டிடுகொட்டிற்பொடியாடுமுருத்திரனுக்கிடையறாத
வன்புபூண்டான்மகவுக்கன்புடையாய்நீயுமெமக்காகாயென்று
துன்புபூண்டயர்வாளைமகவையுங்கொண்டகத்தைவிடத்துரத்தினார்கள்
வன்புபூண்டொழுகுவைணவம்பூண்டுபொறையிரக்கமானதீத்தார்.

(இ-ள்.) என்பு பூண்டு இடுகொட்டில் பொடியாடும் உருத்திரனுக்கு - எலும் பினைப்பூண்டு சுடுகொட்டிலுள்ள நீறுபூசியாடிய வுருத்திரமூர்த்திக்கு, இடையறாத அன்பு பூண்டான் மகவுக்கு அன்பு உடையாய் - நீங்காதஅன்புபூண்ட அத்தேவதத் தன் குழந்தைபா லன்பினையுடையாய், நீயும் எமக்கு ஆகாய் என்று - (அவன் எமக்

கு ஆகாதவாறுபோல) நீயுமெங்களுக்காகாய் என்றுசொல்லி, ஒழுகு வன்பு பூண்டு- இடையறாது நிகழும் கொடுஞ்சீலத்தை மேற்கொண்டு, வைணவம் பூண்டு - வைணவநெறியைக்கைக்கொண்டு, பொறை இரக்கம் மானம் நீத்தார் - பொறுமையையும் இரக்கத்தையும் மானத்தையும் பற்றறநீங்கிய மாமிமுதலியோர், துன்பு பூண்டு அயர்வானை - துன்பமுற்று வருந்துங் கௌரியை, மகவையும் கொண்டு அகத்தைவிடத் துரத்தினார்கள் - அப்பிள்ளையையுமேந்தித் தமது இல்லினின்றும் நீங்க வோட்டினார்கள்.

ஆன்மாக்களைப் பாதுகாத்தற்பொருட்டு, பிரமனையுந் திருமாலையும்படைத்து அவர்களாற் சிருட்டித்துங் காத்தும் இறுதியில் அவைகளை யெல்லாம் இளைப்பு நீங்க வொடுக்கி யப்பிரமன்முதலியோரையுமழித்து மீளவும் அவர்களையுண்டாக்கும்பெருமான், தானிறைவனெனவுணர்த்துதற்கு அவர்களெலும்பைப்பூண்டும் அவர்களை நீறுபடுத்தியும் அந்நீற்றைப்பூசிச் சர்வசங்காரகாலத்தில் யாவுமயானம் ஆதலாதலால தனின்று ஆடியருளியது அவர்கள்மேற்கொண்ட திருவருளாயிருக்க, என்புபூண்டிடுகாட்டிற்பொடியாடும் என இழித்துக்கூறுதலால் வன்புபூண்டு எனவும், குழந்தை முகத்தையேனும் பாராது துரத்தினமையால் பொறை யிரக்க மான நீத்தார் எனவுங்கூறினார் "நிலவுகின்றதன்னருளுருக்கொண்டிடுநிமலன்-தலைமைபெற்றிடுபுங்கவர் தம்மைமுன்றந்தே - உலகம்யாவையுமளித்தருள்செய்திடவுதவி - அலகிலாவுயிர்யாவையுமயன்கணின்றளிப்பான்" "மாயவன்கணின்றவையெலாம்போற்றிமற்றவைக்குத் - தூயதுப்புரவருத்தியேமேல்வினைதொலைச்சி - யாயிரத்திலோர்பற்பலவீடுறவருளி - மேயவாருயிருலகெலாம்பின்னரோவீட்டும்" "அன்னவேலையிலவையெலாமழித்தபினளிப்போர் - என்னநின்றவர்தம்மையு மொடுக்குறுமிதற்பின் - முன்னருள்ளதோரேகமாயுறையுமெம்மூர்த்தி - பின்னுமிம்முறைபுரிந்திடுமென்னுமிப்பெற்றி" "பரமனிவ்வகையடுந்தொறுமடுந்தொறும்படலவாம் - பிரமனாதியோரென்பினைத்தரிக்கும்" "அல்லதங்கவர்தங்களைமுத்தலையயிலான் - மெல்லவேயெடுத்தேந்திடுமவர்தமைவிழியாற் - றொல்லைநாளினீறாக்கியும்புனைந்திடும்" "ஆதலாற்றனைவியப்பதற்கன்றவையணிதல் - ஈதலாதொருதிறமுளதியாவர்க்குமெவர்க்கும்-நாதனேயிவனென்றுதன்பாங்கரோரெண்ணித் - தீதெலாமொரீஇமுத்திபெற்றுய்ந்திடுஞ்செயலே" எனக்காந்தம் தக்ஷகாண்டம் ததீசியுத்தரப்படலத்தில் வருதல்காண்க. (௫௧)

தாயிலாப்பிள்ளைமுகந்தனைநோக்கித்தெருவினிடைத்தளர்வாளுள்ளங்
கோயிலாக்கொண்டுறையுங்கூடனாயகனைமனக்குறிப்பிற்கண்டு
வேயிலாக்கியதடந்தோட்கௌரிதிருமந்திரத்தைவிளம்பலோடுஞ்
சேயிலாக்கிடந்தழுதகுழவிவிசும்பிடைவிடைமேற்றெரியக்கண்டாள்.

(இ-ள்.) தாய் இல்லாத பிள்ளை முகம் தனை நோக்கி - தாயில்லாத பிள்ளையின்முகத்தைப்பார்த்து, தெருவின் இடை தளர்வாள் - தெருவினின்றுமபரிதவிக்கும் கௌரி, உள்ளம் கோயிலாக கொண்டு உறையும் கூடல் நாயகனை - தனதுமனத்தைத் திருக்கோயிலாகக்கொண்டெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளை, மனக் குறிப்பில் கண்டு - மனக்கண்ணாற்றரிசித்து, வேயில் ஆக்கிய தடம் தோள் கௌரி திரு மந்திரத்தை விளம்பலோடும் - மூங்கிலாலமைத்தாலொத்த பெரிய திருத்தோளையுடையயுமாதேவியார்திருமந்திரத்தை யுச்சரித்தலோடும், சேய்மை இல்லாமல் கிடந்து அழுத குழவி - தனக்கு அண்மையிற்கிடந்து வாய்திறந்தழுத இளம்பிள்ளை, விசும்பு இடை விடைமேல் தெரிய கண்டாள் - ஆகாயத்தினிடத்து இடபவாகனத்தின்மேற்றோன்றியருளத் தரிசித்தாள்.

சேய்மை இல்லாமல் என்றமையால் அணுமையென்றும். சேய்மையில்லாமல் - தூரமில்லாமல் என்பதுபொருள். அண்மை - சமீபம். மனக்குறிப்பால் என்றமையால் மனக்கண் என்றும். (கஉ)

மழவுருநீத்தடலேற்றின்வருவார்தம்மிடத்தணங்கின்மனுவையோதிப்
பழகியபார்ப்பனமகளைப்பார்ப்பதியின்வடிவாக்கிப்பலருங்கண்டு
தொழவிடைமேலேற்றிவிசும்பாறுகமலர்மாரிசுரர்கதூற்ற
வழகரெழுந்தருளினார்களிதூங்கியதிசயித்தாரவனிமாக்கள்.

(இ-ள்.) மழ உரு நீத்து அடல் ஏற்றின் வருவார் தம் இடத்து அணங்கின் மனுவை ஓதி பழகிய பார்ப்பன மகளை - குழந்தைத்திருவுருவத்தை நீக்கியருளிவெற்றியையுடைய இடபவாகனத்தின்மேல் வந்தருளிய சிவபெருமானார் தமது இடப்பாகத்திலமர்ந்த வுமாதேவியார்திருமந்திரத்தை யுச்சரித்துக் கைவந்தகௌரியை, பார்ப்பதியின் வடிவாக்கி - உமாதேவியார் சாரூபந்தந்தருளி, பலரும் கண்டுதொழ விடைமேல் ஏற்றி - பலருங் கண்டுவணங்கத் தமது இடபத்தின்மே லிருக்கச்செய்தருளி, விசும்பு ஆறுக - ககனமார்க்கமாக, சுரர்கள் மலர் மாரி தூற்ற அழகர் எழுந்தருளினார் - தேவர்கள் புட்பமாரிபெய்த அப்பெருமானார் எழுந்தருளினார், அவனி மாக்கள் களி தூங்கி அதிசயித்தார் - (அதனைக்கண்ட) நிலவுலகினிலுள்ள மக்கள் யாவரும் பெருமகிழ்ச்சியிலழுந்தி என்றுங்கூறாத அதிசயங்கூர்ந்தார்கள்.

சாரூபத்தை விரும்பித் தன்பிதாவினிடத்திற்பெற்ற பராசத்தி திருமந்திரத்தை மூன்றிலட்சம்செபித்தவளாதலால் மனுவை யோதிப் பழகிய பார்ப்பனமகளைப் பார்ப்பதியின்வடிவாக்கி என்றார். ஒருலட்சஞ்செபித்தால் சாமீபமுத்தியும், இரண்டிலட்சஞ்செபித்தால் சாலோகமுத்தியும், மூன்றிலட்சஞ் செபித்தால் சாரூபமுத்தியும், நான்கிலட்சஞ்செபித்தால் சாயுச்சியமுத்தியுமாம். (கங)

விருத்தகுமார பாலரானபடல முற்றிற்று.

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - கசகo.

## இருபத்துநான்காவது

# கான்மாறியாடினபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருத்தராய்மதுராபுரிமேவியசித்தராகியசெல்வர்
விருத்தராயிளையவருமாய்மழவுமாய்வேடங்கொண்டடலேற்றி
னெருத்தராய்விளையாடியவாடலையுரைத்தனமினிமன்று
ணிருத்தராயவர்மாறிநின்றாடியநிலைசிறிதுரைசெய்வாம்.

(இ-ள்.) திருத்தர் ஆய் மதுராபுரி மேவிய சித்தர் ஆகிய செல்வர் - களங்கமில்லாதவராய் மதுரையிலெழுந்தருளிய சித்தமூர்த்திகளாய்வந்த அருட்செல்வத்தையுடைய சோமசுந்தரக்கடவுள், விருத்தர் ஆய் இளையவரும் ஆய் மழவும்

பாதுகாக்கப்பட்ட என்னருமைப்புதல்வனுக்குப் பெருந்துன்பம்வந்ததென நிகழுஞ் செய்தியைக்கூறலும், அம்முனிவர் கேட்டு அன்னாய் நின் புதல்வனுக்குப் பெருவாழ்வுவந்தது அஞ்சற்க அம்மகவின் காலில் கரிக்கோடிடுகவென விடுக்க, அவ்வாறேயிடவலிகுன்றினமையால் அந்த யானை யெடுத்துச் சிங்காதனத்தில் வைத்தது. அக்காரணம்பற்றிக் கரிகால்வளவன் எனக் காரணப்பெயராய் நின்றது. இதனைச் செவ்வந்திபுராணத்திலுங் காண்க. வளவன் என்னும் பதம் வளத்தவன் எனவந்தது. வளமையையுடையானென்னும் பொருளின்மேற்று. செழுமையையுடைமையாற் செழியன் எனப் பாண்டியனுக்குக்காரணப்பெயர்போந்ததும்வருமிடங்களிற்காண்க. ௪

பொன்னிநாடவன்வாயிலுள்ளானொருபுலவன்வந்தலர்வேம்பின்
கன்னிநாடனைக்கண்டுமுன்பரவுவான்கனைகழற்கரிகாலெம்
மன்னவற்கறுபத்துநாற்கலைகளும்வரும்வராதுனக்கொன்று
தென்னரேறனையாயதுபரதநூறெரிந்திலையெனச்சொன்னான்.

(இ-ள்.) பொன்னி நாடவன் வாயில் உள்ளான் ஒரு புலவன் வந்து - சோழநாட்டரசனாகிய அக்கரிகாற்பெருவளவனுடைய வாயிலிலுள்ள வொரு கவிஞன் பாண்டிநாடுவந்து, அலர் வேம்பின் கன்னிநாடனை கண்டு முன் பரவுவான் - வேப்பமலர்மாலையையணிந்த பாண்டிநாடனாகிய இராஜசேகரபாண்டியனைப்பார்த்து முன்னேநின்று புகழ்கின்றவன், கனை கழல் கரி கால் எம் மன்னவற்கு அறு பத்து நாற் கலைகளும் வரும் - ஒலிக்கும் வீரகண்டையையுடைய எமது கரிகாற்பெருவளவனுக்கு அறுபத்துநான்கு கலைகளும் கைவரும், தென்னர் ஏறு அனையாய் உனக்கு ஒன்றுவராது - பாண்டியருள் ஆண்சிங்கம் ஒத்தவனே உனக்கு அக்கலைகளுள் ஒன்று கைவராது, அது பரத நூல் - (அக்கலை யெதுவென்னில்) பரதநூல், தெரிந்திலை என சொன்னான் - (அதனைக்) கற்றுணர்ந்திலை யென்று கூறினான்.

பொன்னி - பொன்னையுடையது என்னும் பொருளின்மேற்று. (ரு)

கேட்டமீனவன்மறுபுலவிஞ்சையன்கிளத்துசொல்லிகன்மான
மூட்டவாகுலமூழ்கியமனத்தனாய்முதுமறைச்சிரமன்று
ணாட்டமூன்றுடைநாயகனாடலைநானுமாடுதற்குள்ளம்
வேட்டதேகொலாமிதுவுமெம்பிரானருள்விதியெனவதுகற்பான்.

(இ-ள்.) கேட்ட மீனவன் - அதனைக்கேட்ட பாண்டியன், மறு புலம் விஞ்சையன் கிளத்து சொல் - மறுநாட்டிலுள்ள கவிஞன் சொல்லியவார்த்தை, இகல் மானம் மூட்ட - பகைமையையும் மானத்தையும் மூள்விக்க, ஆகுலம் மூழ்கிய மனத்தன் ஆய் - துன்பத்திலழுந்திய மனத்தையுடையவனாகி, முது மறை சிரம் மன்றுள் நாட்ட மூன்று உடை நாயகன் ஆடலை நானும் ஆடுதற்கு உள்ளம் வேட்டதே கொலாம் - தொன்றுதொட்டுள்ள வேதசிரசாகிய பிரபல சுருதியின் வடிவாயுள்ள வெள்ளியம்பலத்தில் மூன்றுகண்களையுடைய சிவபெருமான் திருநடனத்தை நானுமாடிக்கற்றற்கு எனது மனம்விரும்பியதேயாம், இதுவும் எம்பிரான் அருள் விதி என இவ்வாறுதோன்றிய வெண்ணமும் எமது பெருமானுடைய திருவருளின் விதிப்பே என்று, அது கற்பான் - அந்நூலைக் கற்கும் பாண்டியன்.

சோழர்கள் தமக்குப் பகைவராயுள்ளாராதலால் அச்சோழன் வாயில் வித்துவான் அவனைப்புகழ்ந்து பேசியவார்த்தை தனக்குத் துன்பத்தைவிளைக்கும் ஆதலால் மறுபுலவிஞ்சையன்கிளத்துசொல்லிகன்மானம் மூட்டவாகுலமூழ்கிய மனத்தனா

ய் எனவும், அந்நூல்கற்க மனமில்லானுயினும் யாவும் சிவபெருமான் திருவருள்வசத்தன என்றுணர்ந்தவனுதலால் எம்பிரானருள் விதியெனவுங்கூறினன். (௬)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

ஆடனூல்வரம்புகண்டவராகியவ்வழியாடலும்பயின்ற
நாடகநடைதேர்புலவரைத்துருவிநண்ணியவவர்க்கெலாமகிழ்ச்சி
வீடருஞ்சிறப்பாலறுவையும்பூணும் வெறுக்கையும்வெறுத்திடக்கொடுத்துப், பாடல்வண்டரற்றுந்தாரினன்பரதப்பனுவலுங்கசடறப்பயில்வான்.

(இ-ள்.) ஆடல் நூல் வரம்பு கண்டவர் ஆகி - பரதநூலின் எல்லையைக்கண்டவர்களாகி, அவ்வழி ஆடலும்பயின்ற நாடகநடைதேர் புலவரை துருவி - அந்நூலின்வழியே யாடலையுங்கற்றுவல்ல நாடகநடையின்தேர்ச்சியையுடைய அறிஞரைத் தேடி, நண்ணிய அவர்க்கு எல்லாம் மகிழ்ச்சிவீடு அரும் சிறப்பால் - வந்தவர்களுக்கு எல்லாம்மகிழ்ச்சியொழியாதவரிசையால், அறுவையும் பூணும் வெறுக்கையும் வெறுத்திட கொடுத்து - ஆடையும் ஆபரணமும் பொன்னும் அவர்களாசை மிதப்பக் கொடுத்து, பாடல் வண்டு அரற்றும் தாரினன் - பாடலையுடைய வண்டுகளொலிக்கும்மாலையையுடைய இராசசேகரபாண்டியன், பரதப்பனுவலும கசடு அற பயில்வான் - பரதநூலையுங் குற்றமறக்கற்பானாயினன.

ஆடல்நூலைக்கற்றல்மாத்திரம் அமையாதென்பார் ஆடலும் பயின்றஎனவும், அவர்கள் கரவாது பயிற்றுவிக்கக்கருதினன் என்பார் வெறுத்திடக்கொடுத்து எனவுங்கூறினர். (எ)

பாவமோடராகந்தாளமிம்மூன்றும்பகர்ந்திடுமுறையினற்பரத
மாவயினங்கமுபாங்கமேபிரத்தியாங்கமேயலர்முகராக
மோவறுசீர்சால்கரப்பிரசாரமுவமையில்சிரக்கரகருமந்
தாவறுகரகேத்திரங்கரகரணந்தானகமேசுத்தசாரி.

(இ-ள்.) பாவமோடு - பாவகத்தோடு, அராகம் தாளம் இம் மூன்றும் - அராகமும் தாளமுமாகிய விந்தமூன்றையும், பரதம் முறையினால் பகர்ந்திடும்-பரதநூலானது முறைப்படி கூறுநிற்கும், ஆவயின் - அந்நூலினிடத்து, அங்கம் உபாங்கம் பிரத்தியாங்கம் - அங்கமும் உபாங்கமும் பிரத்தியாங்கமும், அலர் முகராகம் - தன்மைமிக்க முகராகமும், ஓவு அறு சீர் சால் கரப் பிரசாரம் - ஒழிதலில்லாத சிறப்பமைந்த கரப்பிரசாரமும், உவமை இல் சிரக்கர கருமம் - ஒப்பில்லாத சிரக்கரகருமமும், தாவு அறு கரகேதத்திரம் கரகரணம - கெடுதலில்லாத கரகேத்திரமும் கரகரணமும், தானகம் சுத்த சாரி - தானகமும் சுத்தசாரியும.

பரதநூல் தாண்டவம், நிருத்தம், நாட்டியம் என மூவகைகூறும், அவற்றுள் தாண்டவமும் நிருத்தமும் அகக்கூத்து எனவும், நாட்டியம் புறக்கூத்து எனவும் கூறப்படும், ஆயினும் ஒவ்வொன்றுட் கூறப்படும் அங்கமும் உபாங்கமும் பிரத்தியாங்கமும் ஏனையவற்றுள் விரவியும் வரும். பரதம் என நூற்குப் பெயர் வந்தது பாவம், அராகம், தாளம் என இம்மூன்றையுமுணர்த்துங்காரணத்தால். பாவம் என்பது சத்துவம் பத்துளடங்கும். அது வெகுண்டோன விநயமுதலாக இருபத்துநான்குவகைத்து. அவையாவன வெகுண்டோனவிநயம், ஐயமுற்ரேனவிநயம், சோம்பினேன், களித்தோன், உவந்தோன், அழுக்காறுடையோன், இன்பமுற்ரேன், தெய்வமுற்ரேன், அஞ்ஞையுற்ரேன், உடன்பட்டோன், உறங்கினேன், துயிலுணர்

ந்தோன், செத்தோன், வருத்தமுற்றோன், கண்ணோவுற்றோன், தலைநோயுற்றோன், அழற்றிறம்பட்டோன், சீதமுற்றோன், மழைபெய்யப்பட்டோன், பனித்தலைப்பட்டோன், வெயிற்றலைப்பட்டோன், நாணமுற்றோன், நஞ்சுண்போன், வெப்பினன். "வெகுண்டோனவிநயமவிளம்புங்காலை - மடித்தவாயுமலர்ந்தமார்பும் - துடித்தபுருவமுஞ்சுட்டியவிரலும் - கன்றினவுள்ளமொடுகைபுடைத்திடுதலும் - அன்னநோக்கமோடாய்ந்தனர்கொளலே" என முதலியவாக வரூஉஞ் சூத்திரங்களால் இருபத்துநான்கையுமுணர்க. சத்துவம் பத்தாவன மெய்ம்மயிர் சிலிர்த்தல், கண்ணீர்வார்தல், நடுக்கமடுத்தல், வியர்த்தல், தேற்றம், களித்தல், விளித்தல், வெம்பல், சாக்காடு, குரற்சிதைவு. பாவகம், அவிநயம், அராகம், பைரவிமுதல் குறிஞ்சியீறாகவுள்ள முப்பத்திரண்டென வரையறைப்படினும இவ்வரையறையுளடங்காது நெஞ்சு, மிடறு, நாக்கு, மூக்கு, அண்ணம், உதடு, பல், தலை யென்னும் எட்டுத் தானங்களினின்று, எடுத்தல், படுத்தல், நலிதல், கும்பித்தல், குடிலம், ஒலி, உருடு, தாக்கு என்னும் எட்டுக்கிரியைகளால் பதினோராயிரத்துத் தொள்ளாயிரத்துத் தொண்ணூறு வகைப்படும். இவையெல்லாங் காட்டாளத்தி, நிறவாளத்தி, பண்ணாளத்தியுளடங்கும்- அவற்றுள் காட்டாளத்தி யச்சுடனிகழும், நிறவாளத்தி நிறங்குலையாமற்பாரணையுடனிகழும், பண்ணாளத்தி பண்ணையே கருதி வைக்கப்படும். ஆளத்தி ஆவது "குன்றாக்குறிலைந்துங்கோடாநெடிலைந்தும் - நின்றார்தமநவமெய்யொடு - நன்றாக, நீளத்தாலேழுநிதானத்தானின்றியங்க - ஆளத்தியாமென்றறி." என்பதனு லறிக. தாளம்-பாணியெனினுந் தாளம் எனினும் தம்முளொக்கும் "கொட்டுமசையுந்தூக்குமளவும் - ஒட்டப்புணர்ப்பதுபாணியாகும்" என்பதனாலறிக. கொட்டு அரைமாத்திரை அதற்கு வடிவு (௧) அசை ஒருமாத்திரை அதற்குவடிவு (ஓ) தூக்கு இரண்டுமாத்திரை அதற்கு வடிவு (உ) அளவு மூன்றுமாத்திரை அதற்கு வடிவு (ஃ) "ககரங்கொட்டொகரமசையே - உகரந்தூககேயளவேயாய்தம்" என்பதனாலறிக. கொட்டாவது - அமுக்குதல், அசையாவது - தாக்கியெழுதல், தூக்காவது - தாக்கித்தூக்குதல், அளவாவது தாக்கினவோசை நேரே மூன்றுமாத்திரை பெறுமளவும் வருதல். அரைமாத்திரையுடைய வேகதாளமுதலாகப் பதினாறு மாத்திரையுடைய பார்வதிலோசனமீறாகக்கூறும் நாற்பத்தொருதாளங்களும் புறக்கூத்திற்குரியன. ஆறன்மட்டம் என்பனவும், எட்டன்மட்டம் என்பனவும், தாளவோரியலென்பனவும், அதனிலையோரியலென்பனவும், ஒன்றன்பாணி முதலாக வெண்கூப்பாணி யீறாகக்கிடந்த பதினொருபாணி விகற்பங்களும் இவைமுதல் நடைவார முதலாயின அகக்கூத்திற்குரியன. இத்தாளங்களின்வழி வருவன தூக்குகள் அவை செந்தூக்கு, மதலைத்தூக்கு, துணிபுதூக்கு, கோயிற்றூக்கு, நிவப்புத்தூக்கு, கழாற்றூக்கு, நெடுந்தூக்கு என எழுவகைப்படும் "ஒருசீர்செந்தூக்கிருசீர்மதலை, முச்சீர்துணிபுநாற்சீர்கோயில்-ஐஞ்சீர்நிவப்பேயறுசீர்கழாலே - எழுசீர்நெடுந்தூக்கென்மனார்புலவர்" என்பதனாலுணர்க. அங்கம், கீதாங்கம், நிருத்தாங்கம், உபயாங்கம் எனப்படும். அவற்றுள் கீதாங்கம் கீதத்துக்கு வாசிப்பது, நிருத்தாங்கம் நிருத்தத்துக்கு வாசிப்பது, உபயாங்கம் இரண்டிற்கும் வாசிப்பது. தனித்தனி யொவ்வொன்றிற்கும் எழுதப்புகில் விரியும் ஆதலால் வேண்டும் இடங்களில்மட்டும் எடுத்துக்காட்டுகின்றாம். (அ)

விண்டிடாத்தேசிசாரிபேடியாயம்விருத்தியேபிரவிசாரம்பூ
மண்டலமுடனாகாசமண்டலமேமாசில்சுத்தக்கரணஞ்சீர்
கண்டவுற்புவிதகரணமேயங்ககாரமேயிரேசிதமென்னக்
கொண்டகாலைந்துபேதமுங்கற்றுக்கோதறப்பயின்றபினவற்றுள்.

(இ-ள்.) விண்டிடாத தேசிசாரியே - நீங்காத தேசிசாரியும், நியாயம் விருத்தி பிரவிசாரம் - நியாயமும் விருத்தியும் பிரவிசாரமும், பூ மண்டலம் உடன் ஆகாச மண்டலம் - பூமண்டலத்தோடு ஆகாசமண்டலமும், மாசு இல் சுத்தக் கரணம்-குற்றமில்லாத சுத்தக்கரணமும், சீர் கண்ட உற்புலித கரணம் - சிறப்பமைந்த வுற்புலிதகரணமும், அங்ககாரம் இரேசிதம் என்ன - அங்ககாரமும் இரேசிதமும் என்று, கொண்ட நால் ஐந்து பேதமும் கற்று - கூறுநின்ற இருபதுபேதங்களாகிய பொது விலக்கணங்களையுங் கற்று, கோது அற பயின்ற பின் - குற்றமறத் தெரிந்தபின்பு, அவற்றுள் - அவைகளுள். (கூ)

வருத்தமின்மனோபாவாதியாமெட்டுவகைநிருத்தங்களிற்சாரி
நிருத்தமாகியதாண்டவமகமார்க்கநிகழ்த்திடுந்தேசியேவடுகே
யருத்தமாகியசிங்களமெனமூன்றுமதுநிலையாறுமூவிரண்டு
திருத்தமாம்பதமுந்திகழிரேகாதிசெப்பியவங்கமீரெட்டும்.

(இ-ள்.) வருத்தம் இல் மனோபாவ ஆதியாம் எட்டு வகை நிருத்தங்களில்-(சிறப்பிலக்கணங்களாகிய) வருத்தமில்லாத மனோபாவமுதலாகிய வெட்டுவகைநடனங்களில், சாரி நிருத்தமாகிய தாண்டவம் அகமார்க்கம் - சாரிநடனமாகியதாண்டவமானது அகமார்க்கமாம், நிகழ்த்திடும் தேசியே வடுகே அருத்தம் ஆகிய சிங்களம் என மூன்றும் - சொல்லாநின்ற தேசிக்கூத்தெனவும் வடுகக்கூத்தெனவும் பொருளமைந்த சிங்களக்கூத்தெனவும் மூன்றுவகைப்படும், அது நிலை ஆறு மூவிரண்டு-அதன்பேதங்கள் பன்னிரண்டுவகையாம், திருத்தமாம் பதமும் - திருத்தமாகியபதங்களும், திகழ் இரேகை ஆதி செப்பிய அங்கம் ஈர் எட்டும் - விளங்காநின்ற இரேகைமுதலாகக் கூறுநின்ற பதினாறு அங்கங்களும்.

தாண்டவம், நிருத்தம் அகக்கூத்து என முன்னர்க்கூறியிருக்கின்றும், அகமார்க்கம் என்பதும் அது. இந்த அகக்கூத்து அல்லியமுதல் கொடுகொட்டியீறாகப் பதினொருவகைப்படும் அல்லியம், கடையம், பேடு, மரக்கால், குடை, குடம், துடி, மல்லாடல், பாவை, பாண்டரங்கம், கொடுகொட்டி. கஞ்சனனுப்பிய யானையின் கொம்பைமுறித்தற்குக் கண்ணமூர்த்தியாடிய ஆட்டம் அல்லியம். இந்திராணி வாணனகரின் வடக்குவாயிலினின்று ஆடிய ஆட்டம் கடையம். தன்மகனை வாணன் சிறையிட்டதை மீட்கக் காமன் பெண்கோலத்தோடு ஆடியகூத்து பேடு. அசுரர்கள் போர்செய்ய ஆற்றாது வஞ்சத்தால் வெல்லக்கருதிப் பாம்பு தேள் முதலியனவாகவர, அவற்றைத் துற்கையுணர்ந்து மரக்கால்கொண்டு ஆடியஆட்டம் மரக்கால். முருகக்கடவுள் அசுரர் புறங்காட்டியோடத் தன் குடையைச் சாய்த்து ஆடிய ஆட்டம் குடை. காமன்மகனாகிய அநிருத்தனைத் தன்மகள்நிமித்தமாக வாணன் சிறையிட்டபோது திருமால் குடத்தின்மேலாடிய ஆட்டம் குடம். சூரன் வேற்றுருவாகிக் கடலில் நின்றகாலையில் அவ்வஞ்சனையைக்கடந்ததற்கு அக்கடலின் அலையில் நின்று துடிகொட்டி ஆடிய ஆட்டம் துடி. வாணாசுரனை வெல்லுதற்குத் திருமால் மல்லனாய்ச் சென் றறைகூவியெதிர்த் தவனுடலைநெரித்துத் தொலைக்க ஆடிய ஆட்டம் மல்லாடல், அசுரர்கள் போர்க்கோலத்தை யொழிந்து மோகிக்க இலக்குமி மோகினிவடிவங் கொண்டாடிய ஆட்டம் பாவை. திரிபுரதகனத்திற்குச் செல்லுங்காலையில் தேர்நடத்திய பிரமன், கலைமகள் பிரிவாற்றாது வருந்துதலைநோக்கி இறைவன் வெண்ணீறணிந்து அவன்முன்னின்றாடிய ஆட்டம் பாண்டரங்கம். திரிபுரதகனஞ்செய்த ஞான்றத்தில் உமையவள் தாளஞ்செலுத்த இறைவன் கைகொட்டி யாடிய ஆட்டம் கொடுகொட்டி., அல்லியம் ஆறங்கமுடையது, கடையம் ஆறங்கமுடையது, பேடு நான்கங்கமு

டையது, மரக்கால் நான்கங்கமுடையது, குடை நான்கங்கமுடையது, குடம் ஐந்தங்கமுடையது, துடி ஐந்தங்கமுடையது, மல்லாடல் ஐந்தங்கமுடையது, பாவை இரண்டங்கமுடையது, பாண்டரங்கம் ஆறங்கமுடையது, கொடுகொட்டி நான்கங்கமுடையது. இவைகளை விரிப்பிற் பெருகும். புறக்கூத்து புறமார்க்கமெனப்படும். அது பெருநடை, பிரமரி முதலியவாகப் பலவகைப்படும். இருவகைக்கூத்துள் சாந்திக்கூத்தில் தேசி, வடுகு, சிங்களம் என்னு மூன்றுகூத்துகளும் அடங்கும், இருவகைக்கூத்துகளாவன சாந்திக்கூத்து விநோதக்கூத்து "அவைதாம்சாந்திக்கூத்தும் விநோதக்கூத்துமென் - றாய்ந்தறவகுத்தனனகத்தியன்றனே" என்னுஞ் சூத்திரத்தாலுணர்க. அவற்றுள் சாந்திக்கூத்து சொக்கம், மெய், அவிநயம், நாடகம் என நான்குவகைப்படும் "சாந்திக்கூததேகலைவனவிநயம் - ஏந்தினின்றுடியவீரிருநடமவை - சொக்கமெய்யேயவிநயநாடகம் - என்றிப்பாற்படுமென்மனார்புலவர்" என்பதனாலுணர்க. அவற்றுள் சொக்கம் என்பது சுத்தநிருத்தம் அது நூற்றெட்டுக்கரணமுடையது. தேசி, வடுகு, சிங்களம் இம்மூன்றும் மெய்ததொழிற்கூத்துகளாதலால் மெய்த்தொழிற்கூத்து. இவை அகசசுவைபற்றிநிற்றலால் அகமார்க்கம் எனப்படும், அகச்சுவையாவன இராசதம், தாமதம், சாத்துவிதமாம் "குணத்தின்வழியகக் கூத்தெனப்படுமே" எனக் குணநூலுட்கூறப்படும் "அகத்தெழுசுவையாலகமெனப்படுமே" எனச் சயந்தநூலுட்கூறப்படும். அவிநயக்கூத்து நிருத்தக்கைகரமுவாது பாட்டினதபொருளுக்குக் கைகாட்டி வல்லபஞ்செய்யும் பலவகைக்கூத்து. நாடகம் கைதழுவிவருங்கூத்து. விநோதக்கூத்து "குரவைகலிநடங்குடக்கூதது - கரணம் நோக்குத்தோற்பாவையென்ப" இவைகளை விரிக்கிற்பெருகும். தேசி, வடுகு, சிங்களம் கூறுகின்றும். தேசியாவது தேத்துக்கு அடிசாரிமுதலாகக் காற்சுற்றுதல் எறிதல் முதலியன. வடுகுகால்களும் உடற்றாக்குமுதலிய வுடல்வர்த்தனையுமுடையது. சிங்களம் இவ்விரண்டிலக்கணங்களையுமுடையது. இவற்றை மெய்த்தொழிற்கூத்து என்றது கரகரணமுங் காற்புரிகையு முடைமையால் அப்பெயர்த்தாயிற்று. கரகரணம்-பதாகை, திரிபதாகை, கத்திரிகை, தூபம், அராளம், இளம்பிறை, சுகதுண்டம், முஷ்டி, கடகம், பத்மகோசம், சூசி, காங்கூலம், கபித்தம், விற்பிடி, குடங்கை, அலாபத்திரம், பிரமரம், தாம்பிரசூடம், பசாசம் (முகநிலைப்பசாசம, அகநிலைப்பசாசம், உகிர்நிலைப்பசாசம் என அடங்கும்.) முகுளம், பிண்டி, தெரிநிலை, மெய்ந்நிலை, உன்னதம், மண்டிலம், சதுரம், மான்றலை, சங்கு, வண்டு, கபோதம், இலத்தை, மகரமுகம், வலம்புரி யெனமுப்பத்துமூன்றுவகைப்படும். இவற்றை "பதாகை யென்பது பகருங்காலை - பெருவிரல்குஞ்சித்தல்லாநான்கும் - மருவிநிமிருமரபினவென்ப" முதலிய சூத்திரங்களாலுணர்க. காற்புரிகை காற்சுற்று, காலெதல்முதலியனவாகப் பதினறுவகைப்படும். இவைகளை விரிக்கிற் பெருகும். (சo)

நால்வகைத்தாருங்கரணமுமேலோர்நாட்டியவிருவகைக்கரமுங்
கால்வகைபுரிகைமுதற்பதினறுங்கவான்மனையாதியாமிரண்டும்
பாலதுமடிப்புவகையெழுநான்கும்பழிப்பறுசுத்தசாரியெனு
மேலுறுபூசாரிகள்பதினறுமித்துணைக்ககனசாரிகளும்.

(இ-ள்.) நால் வகைத்து ஆகும் கரணமும் - நால்வகைப்படுவதாகிய கரணமும், மேலோர் நாட்டிய இரு வகை கரமும் - மேலோர் வரையறுத்த விருவகைப்பட்ட கரங்களும், கால் வகை புரி கை முதல் பதினறும் - கால்களாற்செய்கைமுதலிய பதினறுவகைகளும், கவான் மனை ஆகியாம் இரண்டு - கவான் மனை முதலாகியவிரண்டும், பாலது மடிப்பு வகை எழுநான்கும் - பகுப்பினையுடைய விருபத்தெட்

டு மடிப்புவகைகளும், பழிப்பு அறு சுத்த சாரி எனும் ஏல் உறு பூசாரிகள் பதினாறும் - நிந்தையில்லாத சுத்தசாரியென்னும் மேன்மைமிக்க பூசாரிகள் பதினாறுவகைகளும், இத்துணை ககன சாரிகளும் - இப்பதினாறுவகையினையுடைய ககனசாரிகளும்.
இருவகைக்கரம் எழிற்கை, தொழிற்கை. (கக)

ஏற்றதிக்கிராந்தமாதியாமுப்பத்திருவகைத்தேசிசாரிகளுங்
காற்றினுங்கடுந்தேர்ச்சக்கரமுதலாங்ககனசாரிகைகளேழைந்துஞ்
சாற்றுவித்துவற்பிராந்தமாதியவாஞ்சாரிபத்தொன்பதுமாகப்
போற்றிவையனைத்துமுட்படப்புட்பபுடத்திலக்கணமுதற்பொருள்கள்.

(இ-ள்.) ஏற்ற திக்கிராந்தம் ஆதியாம் முப்பத்திருவகை தேசிசாரிகளும் - பொருந்திய திக்கிராந்தமுதலிய முப்பத்திரண்டுவகைப்பட்ட தேசிசாரிகளும், காற்றினும் கடுந்தேர் சக்கர முதலாம் ககன சாரிகைகள் ஏழைந்தும் - காற்றினும் கடிய வேகத்தையுடைய தேர்ச்சக்கரம் முதலிய ககனசாரிகைகள் முப்பத்தஞ்சும், சாற்று வித்து வற்பிராந்தம் ஆதிய ஆம் சாரி பத்தொன்பதும் ஆக - சொல்லாநின்ற வித்து வறபிராந்த முதலாகிய சாரி பத்தொன்பதுமாக, போற்று இவை அனைத்தும் - முன்னர்க்கூறிய இப்பன்னிரண்டும், உட்பட புட்ப புடத்து இலக்கணம் முதல் பொருள்கள் - தன்னுட்படப் புட்பபுடத்தி னிலக்கணங்களாகிய முதன்மையாயுள்ள பொருள்களாம். (கஉ)

ஆசவாத்தியமுன்பொருண்முதல்களாசமாதியாம்பாடபேதங்கள்
பேசியபதினாறொன்பதும்படகபேதமொன்றொழிந்தநாலைந்து
மாசறுமளகமாதியாம்பாடவகைகளேழுமற்றவற்றிற்
பூசல்வார்த்திகந்தொட்டைவகைச்சச்சபுடாதியாந்தாளமாத்திரையும்.

(இ-ள்.) ஆசவாத்திய முன் பொருள் முதல் களாசம் ஆதியாம் பாடபேதங்கள் - ஆசவாத்தியமும் முன்பொருளும் முதலிய களாசம் முதலாகிய பாடபேதங்களென, பேசிய பதினாறு ஒன்பதும் - பரதநூலுட்கூறப்பட்ட விருபத்தைந்தும், படகபேதம் ஒன்று ஒழிந்த நால் ஐந்தும்-படகபேதங்கள் பத்தொன்பதும், மாசு அறும் அளகம் ஆதியாம் பாட வகைகள் நால் ஏழும் - குற்றமற்ற அளகம் முதலாகிய பாடவகைக ளிருபத்தெட்டும், அவற்றில் - அவைகளுள், பூசல் வார்த்திகம் தொட்டு ஐவகை சச்ச புடம் ஆதியாம் தாளம மாத்திரையும் - பூசல்வார்த்திகந்தொட் டைந்தவகைப்பட்ட சச்சபுட முதலாகிய தாளமாத்திரைகளும். (கங)

கிளந்தமாத்திரையின்கதிகளுஞ்சொல்லுங்கீதமும்பாடமுமெழுத்தும்
வளந்தருமணிபந்தாதிகீதத்தின்வகுத்தகட்டளையெழுநான்கு
மளந்திடுசரளையாதிகட்டளையேழைந்துநன்கமைந்தபாவாதி
விளம்பியமூன்றுகலப்புமீருகவிளைத்திடுங்கூத்தகமார்க்கம்.

(இ-ள்.) கிளந்த மாத்திரையின் கதிகளும் - சொல்லப்பட்ட மாத்திரையின் கதிகளும், சொல்லும் கீதமும் பாடமும் எழுத்தும்-சொற்களும் கீதங்களும் பாடங்களும் எழுத்துகளும், வளம் தரு மணி பந்தம் ஆதி கீதத்தின் வகுத்த கட்டளை எழு நான்கும் - வளமிக்க மணிபந்தம் முதலிய கீதத்தின்கண் வகுத்த கட்டளைகளிருபத்தெட்டும், அளந்திடு சரளை யாதி கட்டளை ஏழைந்தும் - அளவறுக்கப்பட்ட சரளைகள் முதலிய கட்டளைகள் முப்பத்தைந்தும், நன்கு அமைந்த பாவாதி விளம்பிய மூன்று கலப்பும் ஈருக - நன்ருக வமைவுபெற்ற பாவமுதலாகக்கூறிய மூன்றுகலப்பு

மிறுதியாக, விளைத்திடும் கூத்து அகமார்க்கம் - செய்யுங்கூத்து அகமார்க்கமெனப் படும்.

மாத்திரை யென்றது தாளமாத்திரைகளை. எழுத்து ஆளத்திக்குக்கூறிய எழுத்துகள். இவை முன்னர்க் கூறியிருக்கின்றும். சொல உட்சொல், புறச்சொல், ஆகாயச்சொல். அவற்றுள் உட்சொல் நெஞ்சொடு கூறல், புறச்சொல் கேட்போர்க் குரைத்தல், ஆகாயச்சொல் தானே கூறல். "நெஞ்சொடுகூறல் கேட்போர்க்குரைத்தல் - தஞ்சம்வரவறிவு தானேகூறலென் - றம்மூன்றென்ப செம்மைச்சொல்லே" என்பதனுல் உணர்க. இது விலக்குறுப்புப் பதின்ஞன்கனுளொன்று. கீதம் யாழ், வங்கிய முதலாகக் கூறப்படும். ஏனையவை வருமிடங்களிற் காண்க. (சந)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

உரைத்தவிக்கூத்துக்கற்கும்போதுதன்னுடம்பிற்சால
வருத்தநோயெய்தியிந்தவருத்தநான்மறையுந்தேறு
வருத்தமாயறிவாய்வெள்ளியம்பலத்தாடிநின்ற
நிருத்தனுர்தமக்குமுண்டேயென்பதுநினைவிற்கொண்டான்.

(இ-ள்.) உரைத்த இக்கூத்து கற்கும்போது - இங்குக்கூறிய இந்த அகமார்க்கக்கூத்தினைக் கற்குங்காலையில், தன் உடம்பில் சால வருத்தம் நோய் எய்தி-தன்னுடம்பில் மிகவும் வருத்தங்கூர்ந்து, இந்த வருத்தம - இந்த ஆடல்நோய் வருத்தம், நான்மறையும் தேறு அருத்தம் ஆய் - நான்கு வேதங்களுந் தெளிதற்கரிய பொருளாய், அறிவு ஆய் வெள்ளியம்பலத்து ஆடிநின்ற நிருத்தனுர் தமக்கும் உண்டே என்பது - ஞானவடிவாய் வெள்ளியம்பலத்துளாடி நின்றருளிய திருக்கூத்தினர்க்கு முளதே என்பதை, நினைவில் கொண்டான் - எண்ணங்கூர்ந்தான்.

சத்தத்தையுணர்ந்த வழிப்பொருள் வேறாய் நில்லாமல் விந்துசத்தியின்காரியமாகிய சொற்பிரபஞ்சத்தா லளத்தற்கரியவன் என்பார் நான்மறையுந் தேறு அருத்தமாய் எனவும், அவ்வாறு நின்ற தன்னைத் தன்னருளாலுணர்ந்தோர் உணர்வாய் நின்றுன் என்பார் அறிவாய் எனவும் கூறினர். (சரு)

கரியதாமரைக்கண்ணனுங்கமலநான்முகனுங்காண்டற்
கரியதாளொன்றேநோவவாற்றநாணிற்பதந்தோ
வுரியதாமிதனைக்கற்றுவருத்தமுற்றோர்ந்துமீது
தெரியநானிருப்பதேயோவறனெனச்சிந்தைநோவான்.

(இ-ள்.) கரிய தாமரை கண்ணனும் - கருநிறம் வாய்ந்த தாமரைமலர்போலும் கண்களையுடைய திருமாலும், கமலம் நான்முகனும் - தாமரையில் வசிக்கும் பிரமனும், காண்டற்கு அரிய தாள் ஒன்றே நோவ - காணுதற்கரிய வொரு திருவடியே வருந்த, அந்தோ ஆற்ற நாள் நிற்பது - ஐயோ அநேகநாளாடி நிற்கின்றது, உரியது ஆம் இதனை கற்று வருத்தம் உற்று ஓர்ந்தும் - (அவ்வருத்தத்தை யறிதற்கு) உரிய இப்பரதநூலைக்கற்று வருத்தமுற்று ஆராய்ந்தும, ஈது தெரிய நானிருப்பதேயோ அறன் என - இது தெரிந்து நான் வாளாவிருப்பதோ தருமமென்று, சிந்தை நோவான் - மனம் வருந்தத் தொடங்கினான்.

பரதநூல் கற்றதுஞ் சிவபெருமான் திருவருளேயென்னுங் கருத்தினனுதலால் கற்றுத்தான் வருத்தமுற்றவழி திருவடிநோமே யென்றெழுந்த பேராத்துன்பமும் அவனருளே யென்பார் ஈது தெரிய நானிருப்பதேயோ வறனெனச் சிந்தைநோவான் என்றுர். தெரிய தெரிந்து என்னும் வினையெச்சத்திரிபு. (சசு)

வடுப்படுபிறவிப்பௌவவரம்புகாண்கின்றநாள்வந்
தடுப்பவர்யாவரேனுமவர்க்கெலாம்போகம்வீடு
கொடுப்பவர்செய்யுமிந்தக்கூத்தையெப்படிநாஞ்சென்று
தடுப்பதுதகாதன்றேனும்வருந்துமேசரணமென்னா.

(இ-ள்.) வடுப்படு பிறவி பௌவம் வரம்பு காண்கின்ற நாள் வந்து அடுப்பவர் யாவர் ஏனும் - குற்றம் மிக்க பிறவிக்கடலின் வரம்பினைக் காணுநாள் வரப்பெற்றவர் யாவராயினும், அவர்க்கு எல்லாம் போகம் வீடு கொடுப்பவர் செய்யும் இந்த கூத்தை - அவர்களுக்கெல்லாம் பந்தத்தையும் மோக்ஷத்தையுங் கொடுக்கும் பெருமானார் செய்தருளு மிந்தத் திருக்கூத்தை, எப்படி நாம் சென்று தடுப்பது - எவ்வாறு நாஞ்சென்று தடுக்கக்கூடும், தகாது அன்று ஏனும் - தடுக்கத் தகாதல்லதாயினும், சரணம் வருந்துமே என்னா - திருவடி வருந்துமே என்று கருதி.

அழுக்காலழுக்கை யொழித்தல்போலப் பசுக்கள் பிறவிநோய் ஒழித்தற்குப் பந்தமருந்தாதலாலும், அது தேய்ந்து தூயனுயவழி வீடாதலாலும் போகம் வீடு கொடுப்பவர் எனவும், அப்பசுக்களுள் நாமொருவனாதலால் அப்பதிசெய்யுந் திருக்கூத்தைத் தடுத்தற்கரிதென்று கருதினனாதலால் தகாதெனவும், ஆயினும் அன்பின் மேலீட்டால் தடுக்கக்கருதினனாதலால் அன்றேனும் வருந்துமே சரணம் எனவுங் கூறினார். அழுக்காலழுக்கை யொழித்தல் என்றது "எழுமுடல்கரணமாதியிவைமலமலமலத்தாற் - கழுவுவனென்றுசொன்ன காரணமென்னையென்னிற் - செழுமவவறுவைசாணி யுவர்செறிவித்தழுக்கை - முழுவதுங்கழிப்பன்மாயை கொடுமலமழிப்பன்முன்னோன" எனவரும் உண்மைத்திருவாக்கானுணர்க. (கஎ)

இதற்கிது துணிவென்றுன்னியெழுந்துபோய்ச்சிவனிராவிற்
கதக்களிற்றொருத்தலேந்துங்கதிர்மணிக்குடுமிக்கோயின்
மதக்கரியுரியினாற்குவரம்பறச்சிறந்தபூசை
விதப்படயாமநான்கும்விதிவழியியற்றல்செய்யா.

(இ-ள்.) இதற்கு இது துணிபு என்று உன்னி எழுந்து போய் - இதற்கிதுதான் துணிபென்று எழுந்துசென்று, சிவன் இராவில் - சிவராத்திரியில், கதம் களிறு ஒருத்தல் ஏந்தும் கதிர் மணி குடுமிக்கோயில் - கோபத்தையுடைய அஷ்டகசங்கள் தாங்கும் விளக்கமமைந்த இரத்தினமழுத்தியசிகரத்தையுடைய திருக்கோயிலிலெழுந்தருளிய, மதம் கரி உரியினாற்கு - மதஞ்சிந்தும் யானைத்தோற்போர்வையையுடைய சோமசுந்தரக்கடவுளுக்கு, வரம்பு அற சிறந்த பூசை-அளவில்லாமற் சிறந்தபூசையை, விதப்பட யாமம் நான்கும் விதிவழி இயற்றல் செய்யா - முறைப்பட நான்கு சாமங்களிலும் ஆகம விதிவழியே செய்து.

பாண்டியன் கொண்ட கருத்து முற்றுதற்குக் காலம்வாய்ந்ததென்பார் இதற்கிது துணிபென்றுன்னி சிவனிரா சிறந்த பூசை. விதப்பட யாமநான்கும் விதிவழியியற்றல் செய்யா என்றார். (கஅ)

விண்டகமலர்க்காளேத்திவெள்ளியம்பலத்துளன்பர்
தொண்டகமலர்நின்றசோதிமெய்ஞ்ஞானக்கூத்தைக்
கண்டகமகிழ்ந்துதாழ்ந்துகட்புனல்சோரச்செங்கை
முண்டகமுடிமேலேற்றிமுகிழ்த்துநின்றிதனைவேண்டும்.

(இ-ள்.) அகம் விண்ட மலர்த்தாள் ஏத்தி - தனது இதயத்தில் மலர்ந்த தாமரைமலர்போன்ற திருவடிகளை வணங்கி, வெள்ளியம்பலத்து உள் அன்பர் தொண்டு அகம் மலர நின்ற சோதி - வெள்ளியம்பலத்தின்கண் அடியாருடைய தொண்டு பூண்ட இதயத்தின்கண் விளங்கநின்ற பேரொளியாகிய பரமபதியினுடைய, மெய்ஞ்ஞானக்கூத்தை - உண்மைஞானமாகிய திருக்கூத்தினை, கண்டு - தரிசித்து, அகம் மகிழ்ந்து தாழ்ந்து - மனமகிழ்ந்து வணங்கி, கண் புனல் சோர - கண்களினின்று மானந்தபாஷ்பஞ்சிந்த, செம் கை முண்டக முடிமேல் ஏற்றி முகிழ்த்து நின்று இதனை வேண்டும் - செவந்த கைத்தாமரைகளைத் தனது தலைமேலேற்றிக் குவித்து நின்று இதனை வேண்டாநின்றான்.

மெய்ஞ்ஞானக்கூத்தென்றது முத்தியருளு ஞானநடனத்தை "ஊனநடன மொருபாலொருபாலாம்-ஞானநடந்தானடுவேநாடு" என்ற திருவருட்பயனாலுணர்க.

நின்றதாளெடுத்துவீசியெடுத்ததாணிலமீதூன்றி
யின்றுநான்காணமாறியாடியென்வருத்தமெல்லாம்
பொன்றுமாசெய்தியன்றேற்பொன்றுவலென்னுவன்பிற்
குன்றனான்சுரிகைவாண்மேற்குப்புறவீழ்வேனென்னா.

(இ-ள்.) நின்றதாள் எடுத்துவீசி - ஊன்றியதிருவடியை மேலெடுத்துவீசி, எடுத்ததாள் நிலமீது ஊன்றி - எடுத்தருளிய திருவடியை நிலத்தின்மீதூன்றியருளி, இன்று நான் காண - இன்று நான்கண்டு தரிசிக்க, மாறி ஆடி என்வருத்தம் எல்லாம் பொன்றும் ஆறுசெய்தி - கான்மாறி நடித்தருளி யடியேன்கொண்ட வருத்தங்களியாவு மழியும்வண்ணஞ் செய்தருள்வாய், அன்றேல்-செய்தருளாதுவிடில், பொன்றுவல் என்னா - இறப்பேனென்று, அன்பில் குன்று அன்னான் - அன்பில்மலையையொத்த இராசசேகரபாண்டியன், சுரிகை வாள்மேல் குப்புற வீழ்வேன் என்னா- உடைவாள்மேற் குப்புறவீழ்ந்து இறப்பேனென்றுகூறி.

தான்கொண்ட உறுவலன்பில் ஊழிபெயரினுஞ் சிறிது நிலைகலங்கானென்பார் அன்பிற்குன்றனான் எனவும், அவ்வன்பால் தான்கொண்டகருத்தை முற்றுவிப்பான் என்பார் அன்றேல் சுரிகைவாண்மேற் குப்புறவீழ்வே னென்னாவெனவுங் கூறினார். (உ0)

நாட்டினான்குறித்துப்பாயநண்ணுமுன்னிடத்தாளூன்றி
நீட்டினான்வலத்தாள்வீசிநிமலன்மாறியாடிக்
காட்டினான்கன்னிநாடன்கவலையும்பாசமூன்றும்
வீட்டினான்பரமானந்தவேலையுள்வீட்டினானே.

(இ-ள்.) நாட்டினான் குறித்து பாய நண்ணுமுன் - உடைவாளை நாட்டியதன்மேற்பாயச்செல்லுமுன், நிமலன் இடத்தாள் ஊன்றி - சிவபெருமான் எடுத்தருளிய இடக்காலையூன்றியருளி, வலத்தாள் நீட்டினான் வீசி - ஊன்றியருளியவலக்காலை எடுத்துவீசி, மாறி ஆடி காட்டினான் - (இவ்வாறு) கான்மாறியாடிக்காட்டியருளினான், கன்னிநாடன் - பாண்டிநாடன், கவலையும் பாசம் மூன்றும் வீட்டினான்-திருவடிநோமே என்றுகொண்ட வருத்தமும் ஆணவமாயை காமியமென்னு மும்மலங்களையுமொழித்து, பரமானந்தவேலையுள்-வீட்டினான் - பேரின்பக்கடலுள் தன்னை அழுத்தினான்.

ஊனநடனத்தாற் பாசத்தைவீட்டி ஞானநடனத்தால் பேரின்பத்திலழுந்தினுதலால் பாசமூன்றும் வீட்டினான் பரமானந்தவேலையுள் வீட்டினானே என்றார்.

விளைகள்வாய்வீழ்ந்தவண்டின்மெய்யறிவின்பமென்னு
மளவிலாமூந்நீர்வெள்ளத்தாழ்ந்தவனெழுந்துபின்னு
முளமும்வாசகமுமெய்யுமுடையவனதுவேயாகப்
பளகிலாவன்புதானேபடிவமாய்ப்பழிச்சலுற்றான்.

(இ-ள்.) விளைகள் வாய் வீழ்ந்தவண்டின் - இனிமைமிக்க மதுவில்விழுந்த வண்டைப்போல, மெய் அறிவு இன்பம் என்னும் அளவு இல்லாத மூந்நீர் வெள்ளத்து ஆழ்ந்தவன் - உண்மையறிவானந்தமென்னுந் தனக்கோர் வரம்பில்லாத முத்திறப்பட்ட வெள்ளத்திலழுந்திய இராசசேகரபாண்டியன், எழுந்து பின்னும் - (அவ்வெள்ளத்தினின்று) மேலெழுந்துமீளவும், உளமும் வாசகமும் மெய்யும் - மனமும் வாக்கும் காயமும், உடையவ னதுவே ஆக - தன்னையாளாக வுடையவ னுடைமைப்பொருளாக, பளகு இல்லாத அன்புதானே - குற்றமில்லாத அன்பே, படிவம் ஆய் பழிச்சல் உற்றான் - தனக்கோருருவாகத்துதிக்கத்தொடங்கினான்.

மதுவில்வீழ்ந்தவண்டு தன்வசமிழந்திருத்தல்போலச் சிவபோகத்திலழுந்திய பாண்டியன் தன்வசமிழந்திருந்தானென்பார் விளைகள்வாய்வீழ்ந்தவண்டின் வெள்ளத்தாழ்ந்தவன் எனவும், உண்மையறிவானந்தமே திருவுருவாகவமைந்த ஒருபொருள் என்பார் மூந்நீர் வெள்ளம் எனவும், இவனது மனவாக்குக்காயங்கண்மூன்றும் அவற்றையருளியபெருமான் திருநடனத்தின் வசத்தவாயினவென்பார் உளமும் வாசகமு மெய்யுமுடையவனதுவேயாகவெனவும், அவற்றைக்கைவிட்டோனுக்கு ஓர் வடிவம வேண்டிதலால் பளகிலாவன்புதானே படிவமாய் எனவுங்கூறினார். (உ௨)

கலிவிருத்தம்.

பெரியாய்சரணஞ்சிறியாய்சரணங்
கரியாகியவங்கணனேசரண
மரியாயெளியாயடிமாறிநடம்
புரிவாய்சரணம்புனிதாசரணம்.

(இ-ள்.) பெரியாய் சரணம் சிறியாய் சரணம - மகத்திலும் மகத்தாயுள்ளாயுனக்கு அடைக்கலம் அணுவிலும் அணுவாயுள்ளா யுனக்கடைக்கலம, கரி ஆகிய அங்கணனே சரணம - சாட்சியாயுள்ள அழகியதிருக்கண்களை யுடையவனேசரணம், அரியாய் எளியாய் - பிரமன்முதலிய தேவர்க்கரியவனே அடியவருக்கெளியவனே, அடிமாறி நடம்புரிவாய் சரணம் - கான்மாறித் திருநடனஞ்செய்கின்றவனேசரணம், புனிதாசரணம் - புனிதனேசரணம்.

பெரியதினும் பெரியதுமாய் எனவந்த செய்யுளுக்குக்கூறியகருத்துகளை யிங்குக்கொள்க. பிரமன்மார்கரியனாய் நின்றான் தனக்கெளியனாய்க் கான்மாறியாடியருளினமையால் அரியாயெளியாய் என்றான். (உ௩)

நதியாடியசெஞ்சடையாய்நகைவெண்
மதியாய்மதியாதவர்தம்மதியிற்
பதியாய்பதினெண்கணமும்பரவுந்
துதியாய்சரணஞ்சுடரேசரணம்.

(இ-ள்.) நதி ஆடிய செம் சடையாய் - கங்கைவிளையாடுஞ் செவந்தசடையையுடையவனே, நகைவெண்மதியாய் - விளங்கும்பிறையையுடையவனே, மதி

யாதவர்தம் மதியில்பதியாய் - தன்னைக்கருதாதவர்கள் எண்ணத்திற் பொருந்ாதவனே, பதினெண்கணமும் பரவும் துதியாய் - பதினெட்டுச்செவகணங்களும் துதிக்குந்துதியையுடையவனேசரணம், சுடரேசரணம் - பேரொளியாயுள்ளவனேசரணம்.

மகத்தாயுள்ள வெவற்றையும தன் திருவருளாற்சுருக்கும் வன்மையையுடையாய் என்பான் உலகமுற்றையுமழிக்கப்பரந்த கங்கையைச்சுருக்க அணிதலால் நதியரடிய செஞ்சடையாய் எனவும், அணுவாயுள்ளவற்றையு மகத்தாக்கும் வன்மையையுடையாய் என்பான் கலைகள்யாவுமிழந்து ஓர்கலையோடுகூடிநின்ற சந்திரன் அக்கலைகள்முற்றும் அடைய அணிதலால் நகைவெண்மதியாய் எனவும், சுருக்கவும் பெருக்கவும் வன்மையையுடைய இறைவன் தான் என்பதை யான்மாக்களுணர்ந்துய்ய அறிகுறியாக அவற்றைக்கொண்டருளியும் உணரார்பாலடையாய் என்பான் மதியாதவர்தம் மதியிற்பதியாய் எனவுங்கூறினன். (உச)

பழையாய்புதியாய்சரணம்பணிலக்
குழையாய்சரணங்கொடுவெண்மழுவா
ளுழையாய்சரணம்முருகாதவர்பால்
விழையாய்சரணம்விகிர்தாசரணம்.

(இ-ள்.) பழையாய் புதியாய்சரணம் - முன்னைப்பழம்பொருட்கும் முன்னைப்பழம்பொருளாயுள்ளவனே பின்னைப்புதுமைக்கும் பின்னைப்புதியவனுயுள்ளாய்சரணம், பணிலம் குழையாய் சரணம - சங்ககுண்டலத்தையுடையவனேசரணம், கொடுவெண்மழுவாள் உழையாய்சரணம் - கொடியகிணந்தோய்ந்த மழுவையுமமானையுமுடையவனேசரணம், உருகாதவர்பால் விழையாய் - கல்லினும் வல்லென்றமனமுடையவரிடத்து இரங்காதவனேசரணம், விகிர்தாசரணம் - விகிர்தனேசரணம்.

யாவுந் தன்சந்நிதிமாத்திரையிற்றோன்றுதற்குமுன் உள்ளானுதலால் பழையாய் எனவும், தனதுசத்தியால்தோன்றிய திருமால்முதலியோர் மூப்பவும் தான் ஒருபெற்றியனுய் என்று மிருத்தலால் புதியாய் எனவும், உலகமீன்றகன்னியைத்தான் ஒருபால்மணந்தும் சற்றுங்கலங்காத மாதவனுதலால் பணிலக்குழையாய் எனவும், தன்னைப்பொருளெனக்கருதாது வேள்வியே பொருளெனக்கருதிய தாருகவனத்துமுனிவர் கொல்லவேவிய மழுவையு மானையுமேந்தியவர்கள் தன்னைப்பொருளெனக்கருதி வழிபடக்கொண்டோனுதலால் மழுவாளுழையாய் எனவும், பல வதுக்களால் தான் பொருளெனவுணர்ந்தும் தன்னைவழிபடாரிடத்து விருப்பமிலனுதலால் உருகாதவர்பால் விழையாய் எனவும், தன்னை வழிபடுவோரிடத்து உவப்பும் தன்னைவழிபடாரிடத்து வெறுப்புமுடைய வேறுபாடுடையனுதலால் விகிர்தாசரணம் எனவுங்கூறினன். விகிர்தன் வேறுபாடுடையவன். "முன்னைப்பழம்பொருட்குமுன்னைப்பழம்பொருளே- பின்னைப்புதுமைக்கும்பேர்த்துமப்பெற்றியனே" எனவும் "மூப்பானிளையவன்முன்னவன்பின்னவன்" எனவும்வரும் உண்மைத்திருவாக்குகளா லுணர்க. (உரு)

இருளாய்வெளியாய்சரணம்மெனையும்
பொருளாகநினைந்துபுரந்தான்மா
றெருளாதகடக்கெரிவித்தெனையா
ளருளாய்சரணம்மழகாசரணம்.

(இ-ள்.) இருளாய் வெளியாய் சரணம் - இருளாயுள்ளவனே வெளியாயுள்ளவனேசரணம, எனையும் பொருளாகநினைந்து - புல்லியனுக நாயினுங்கடைப்பட்ட

என்னையு மொருபொருளாகக்கருதி, புரந்தரன்மால் தெருளாத நடம்தெரிவித்து-இந்திரனும் திருமாலும் தெளிந்துணர்தற்கரிய திருநடனத்தைத் தரிசிப்பித்தது, எனையாள் அருளாய்சரணம் - என்னையடிமைகொண்டருளும் பேரருளாளனேசரணம், அழகாசரணம் - பேரழகையுடையவனேசரணம்.

பிரகிருதிதத்துவமுடம்பாக மூலாதாரத்திற்சென்றொடுங்கி யாணவமலமறைப்பால் தன்னிச்சாஞானக்கிரியைகளி னிகழ்ச்சி சிறிதுமின்றி யான்மா தான்மாத்திரையாய் நிற்கும் இருளாகிய கேவல அவதரத்தில் தானு மவ்வாறு நின்றருளுதலால் இருளாய் எனவும், ஆன்மா தனுகரணாதியோடுங்கூடி யவையொருபுடை விளங்கும் சகல அவதரத்தில் தானுமவ்வாறு நின்றருளுதலால் வெளியாய் எனவும், சத்தாதிவிடயங்களை விரும்புதல் கழிதற்கேதுவாகு மிருவினையொப்பும்,போகபோக்கியத்தின்செறிவு கழிதற்கேதுவாகுஞ் சத்திநிபாதமுமுடைமையுந்தோன்ற எனையும் பொருளாகநினைந்து எனவும், உருக்கழிதற்கேதுவாகும் குருவருளும் எல்லாயோனிகளிலுஞ்சென்றுழலுதல் கழிதற்கேதுவாகும் ஞானசாதனமும்,சென்றுதிரிதரலாகிய ஏகதேசத்தன்மைகழிதற்கேதுவாகு மும்மலநீக்கமும் சத்தாதிவிடயத்தினுகர்ச்சி கழிதற்கேதுவாகும் வாதனைநீக்கமும் பாசவறிவிச்சைசெயல்கழிதற்கேதுவாகும் ஞானப்பெருக்கமும் கிடைத்தவைதோன்றப் புரந்தரன்மால் தெருளாதநடந்தெரிவித்தெனையாள் எனவுங்கூறினான். இவற்றால் கேவலசகலசுத்தம் என்னுங்காரணாவத்தை மூன்றுங்காண்க. "அறிவிலனமூர்த்தனித்தனராகாதிகுணங்களோடுஞ், செறிவிலன்கலாதியோடுஞ்சேர்விலன்செயல்களில்லான், குறியிலன்கருத்தாவல்லன்போகத்திற்கொள்கையில்லான், பிறிவிலன்மலத்தினோடும்வியாபிகேவலத்திலான்மா. "உருவினைக்கொண்டுபோகபோக்கியத்துன்னல்செய்பல், வருசெயன்மருவிச்சத்தமாதியாம்விடயந்தன்னிற், புரிவதுஞ்செய்திங்கெல்லாயோனியும்புக்குழன்று, திரிதருஞ்சகலமானவவத்தையிற்சீவன்சென்றே" "இருவினைச்செயல்களொப்பினீசன்றன் சத்திதோயக், குருவருள்பெற்றுஞானயோகத்தைக்குறுகிமுன்னைத், திரிமலமறுத்துப்பண்டைச்சிற்றறிவொழிந்துஞானம், பெருகிநாயகன்றன்பாதம் பெறுவதுசுத்தமாமே" எனவரும் ஏதுக்களால் அவ்வவத்தைகளின் முறையைக்காண்க. (உசு)

அயனத்தனெனப்படுமோடரவச்
சயனத்தவனைத்தருதத்துவநால்
வயனத்தவவானவர்வானவசே
னயனத்தவனாயகனேசரணம்.

(இ-ள்.) அயனை-பிரமனையும், நத்தன் எனப்படும் - சங்கேந்தினவனென்று சொல்லப்படும், ஆடு அரவச் சயனத்தவனை தருதத்துவ - ஆடாநின்ற சர்ப்பசயனத்தையுடைய திருமாலையும் தந்தருளும் தத்துவசொரூபத்தனே, நால் வயனத்தவ - நான்கு வேதங்களாகிய திருவாக்குகளையுடையவனே, வானவர் வானவ - தேவர்களுக்குத் தேவனே, சேல் நயனத்தவள் நாயகனே சரணம்-அங்கயற்கண்ணியம்மையா ரிறைவனே சரணம்.

ஆன்மாக்களுக்கு மலபாகம் வருவித்தற்பொருட்டுத் தனது அதிகாரசத்திகளாற் சிருட்டியாதித்தொழில்களை யியற்றப் பிரமனையுந் திருமாலையுந் தந்தருளினவனென்பார் அயனத்தனெனப்படுமோடரவச் - சயனத்தவனைத்தரு எனவும், சுத்தவித்தை முதலிய ஐந்து தத்துவங்களும் அநந்ததேவர் முதலியோர் வாயிலாக அன்றி

த் தன்னாலதிட்டிக்கப்படுதலால் அவை அவனது வடிவமென்பார் தத்துவ எனவுங் கூறினர் "வித்தையோடீசர்சாதாக்கியஞ்சத்திசிவங்களைந்தும் - சுத்ததத்துவஞ்சிவன்றன்சுதந்திரவடிவமாகும்" எனவரும் ஏதுவால் உணர்க. (உஎ)

கதவெங்கரியின்னுரியாய்சரண
முதலந்தமிலாமுதலேசரணென்
றதிர்பைங்கழனூபுரவண்டலறும்
பதபங்கயமுன்புபணிந்தரசன்.

(இ-ள்.) கதம் வெம் கரியின் உரியாய் சரணம் - கோபத்தையுடைய கொடிய யானையின் தோற்போர்வையையுடையவனே சரணம், முதல் அந்தம் இல்லாத முதலே சரண் என்று - ஆதியும் அந்தமுமில்லாத முதல்வனே யடைக்கலமென்று, அதிர் பைங்கழல் நூபுர வண்டு அலறும் பதபங்கய முன்பு அரசன் பணிந்து - ஒலிக்கும் பசிய வீரகண்டையுஞ் சிலம்புமாகிய வண்டுகள் ஒலிக்கும் திருவடித்தாமரையின் முன்னே நின்று பாண்டியன் வணங்கி.

அருவம் உருவமாய்த் தோன்றலும் உருவம் அருவமாயொழிதலுமுடைமையால் அருவம், உருவம், அருவுருவம் என முத்திறப்படும் விருத்தி, பரிணமம், விவர்த்தன மென்பவற்றுள் ஒன்றன்பாலும் படாதவனாதலால் முதலந்தமிலா முதலே என்றான். "பந்தமும்வீடுமாய பதபதார்த்தங்களல்லான் - அந்தமுமாதியில்லான்" எனவரும் சித்தியாராலுணர்க. (கஅ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

என்றுமிப்படியேயிந்தத்திருநடம்யாருங்காண
நின்றருள்செய்யவேண்டுநிருமலமானவெள்ளி
மன்றவவடியேன்வேண்டும்வரமிதுவென்றுதாழ்ந்தா
னன்றுதொட்டின்றுமெங்கோனந்நடநிலையாய்நின்றான்.

(இ-ள்.) என்றும் இப்படியே இந்த திருநடம் யாரும் காண நின்று அருள் செய்ய வேண்டும் - எக்காலத்து மிந்தப்படியே எவருங்கண்டு தரிசிக்க நின்று அருள்செய்யவேண்டும், நிருமலம் ஆன வெள்ளி மன்றவ - மலரகிதமான வெள்ளியம்பலத்தையுடையவனே, அடியேன் வேண்டும் வரம் இது என்று தாழ்ந்தான் - அடியேன் வேண்டிய வரமிதுதானென்று பணிந்தான், அன்று தொட்டு இன்றும் - அக்காலந்தொட்டு இக்காலங்காறும், எங்கோன் அந்நடம் நிலையாய் நின்றான் - எமது பெருமான் அத்திருநடன நிலையனாகி நின்றருளினான்.

தன்னைப்போல் எவரும் இப்பேறு பெறுங்கருத்தினனாதலால் யாருங்காண நின்றருள்செய்யவேண்டும் எனக் கூறினான். (உகூ)

கான்மாறியாடினபடலம் முற்றிற்று.

---

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - கஉஅகூ.

பழியஞ்சின திருவிளையாடல்.



## இருபத்தைந்தாவது.

# பழியஞ்சினபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

ஈறிலான்செழியனன்புக்கெளியவனாகிமன்றுண்
மாறியாடியகூத்தென்சொல்வரம்பினதாமேகங்கை
யாறுசேர்சடையான்றானோரரும்பழியஞ்சித்தென்னன்
றேறலாமனத்தைத்தேற்றுந்திருவிளையாடல்சொல்வாம்.

(இ-ள்.) ஈறு இல்லான் - தனக்கோர் இறுதியில்லாத சோமசுந்தரக்கடவுள், செழியன் அன்புக்கு எளியவன் ஆகி - இராசசேகரபாண்டியன் உழுவலன்பின் வசத்தனாகி, மன்றுள் மாறி யாடிய கூத்து என் சொல் வரம்பினது ஆமே - வெள்ளியம்பலத்துள் கான்மாறி யாடியருளிய திருக்கூத்து என் சொல்லி னெல்லையிற்பட்டதா, கங்கை ஆறு சேர் சடையான் தான் - கங்காநதியையணிந்த சடையையுடைய அக்கடவுள், ஓர் அரும் பழி அஞ்சி - ஒரு கொடும்பழியை யஞ்சி, தென்னன் தேறலாத மனத்தை தேற்றும் திருவிளையாடல் சொல்வாம் - குலோத்துங்கபாண்டியனுடைய தெளியாத மனத்தினைத் தெளிவித்த திருவிளையாடலைக் கூறுவாம்.

இறைவனென்னும் பொருளாற்றல் தோன்ற ஈறிலான் எனவும், அன்புக்கெளியவனாகியென்னுஞ் சொல்லாற்றலுக் கியைபுதோன்ற மாறியாடிய கூத்து எனவும், அன்புக்கெளியனாதல் சொல்லினெல்லை கடந்ததென்பதுதோன்ற என் சொல் வரம்பினதாமே யெனவும், ஆன்மாக்களிடத் தென்றும் இரக்கமுள்ளவனென்பது தோன்றப் பழியஞ்சித்தென்னன்றேறலா மனத்தைத் தேற்றும் எனவும் கூறினார்.()

இனையநாள்சிறிதுசெல்லவிராசசேகரன்றன்காதற்
றனையனுங்குலோத்துங்கற்குத்தன்னரசிருக்கைநல்கி
வினையெலாம்வென்றுஞானவெள்ளியம்பலத்துளாடுங்
கனைகழனிழலிற்பின்னிக்கலந்துபேரின்பமுற்றான்.

(இ-ள்.) இனைய நாள் சிறிது செல்ல - இப்படி சிலநாள் கழிய, இராசசேகரன் தன் காதல் தனையனும் குலோத்துங்கற்கு - இராசசேகரபாண்டியன் தனது காதற்புதல்வனாகிய குலோத்துங்கபாண்டியனுக்கு, தன் அரசு இருக்கை நல்கி - தனது அரசியலைத்தந்து, வினை எல்லாம் வென்று - இருவினையொப்பும் மலபரிபாகமும் வாய்ந்து, ஞான வெள்ளி அம்பலத்துள் ஆடும் கனை கழல் நிழலில் பின்னிக் கலந்து பேரின்பம் உற்றான் - ஞானவடிவாயுள்ள வெள்ளியம்பலத்துள் நடித்தருளும் ஒலிக்கும் வீரகண்டையையணிந்த திருவடிநிழலி லிரண்டறக்கலந்து பேரின்பத்திலழுந்தினான்.

வினையெனப் பொதுப்படக் கூறினமையால் இருவினையொப்பும் மலபாகமும் என்றும், வினை கன்மமலத்துளடங்குதலின். உடலும் உயிருந் தம்முளொன்றுபட்டறியும் அறிவும், கண்ணொளியும் ஆதித்தனொளியும் தம்முளொன்றுபட்டு நிற்குந் தன்மையும் பிரிக்கவொண்ணாவாறுபோலக் கலந்தான் என்பார் பின்னிக்கலந்து என்றார். (உ)

குரவன்செங்கோல்கைக்கொண்டகுலோத்துங்கவழுதிசெங்க
ணரவங்கம்பூண்டகூடலாதிநாயகனைநித்தம்

பரவன்பின்வழிபாடாறுப்பத்திமைநியமம்பூண்டா
னிரவஞ்சுங்கதுப்பினல்லாரீரையாயிரவருள்ளான்.

(இ-ள்.) குரவன் செங்கோல் கைக்கொண்ட குலோத்துங்க வழுதி - தனது பிதாவின் செங்கோலைத் தன் கையிற்கொண்ட குலோத்துங்கபாண்டியன், செம் கண் அரவு அங்கம் பூண்ட கூடல் ஆதிநாயகனை - சிவந்த கண்களையுடைய சர்ப்பத்தைத் தனது திருமேனியி லாபரணமாகப்பூண்ட மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளை, நித்தம் அன்பின் பரவு வழி பாடு ஆறுத பத்திமை நியமம் பூண்டான் - நித்தமும் அன்பாற்றுதிக்கும் வழிபாட்டையும் நீங்காத பத்தித்திறமையையும் கடனாகப் பூண்டுள்ளான், இரவு அஞ்சும் கதுப்பின் நல்லார் ஈரையாயிரவர் உள்ளான் - இருளஞ்சுங் கூந்தலையுடைய பதினாயிரம் பெண்களை மனைக்கிழத்தியாக வுடையவன். (ங)

கொச்சகக்கலிப்பா.

அப்பதினாயிரவர்க்குமொவ்வொருத்திக்கவ்வாறு
யொப்பரியவறுபதினாயிரங்குமரருளரவருட்
செப்பரியவல்லாண்மைச்சிங்கவிளவேறனையான்
வைப்பனையான்முதற்பிறந்தமைந்தன்பேரனந்தகுணன்.

(இ-ள்.) அப்பதினாயிரவர்க்கும் - அந்தப் பதினாயிரம் பெண்களுள்ளும், ஒவ்வொருத்திக்கு அவ்வாறு ஆய் ஒப்பு அரிய அறுபதினாயிரம் குமரர் உளர்-ஒவ்வொருத்திக்கு மவ்வாறாக ஒப்பில்லாத அறுபதினாயிரம் புதல்வர் உளர், அவருள் - அவ்வறுபதினாயிரம் புதல்வருள், செப்பு அரிய வல்லாண்மை சிங்க விள ஏறு அனையான் - சொல்லுதற்கரிய வலிமையையும் ஆண்மைத்தன்மையையுமுடைய இளஞ்சிங்க வேற்றை யொத்தவன், வைப்பு அனையான் - வைப்புநிதியைப் (பெற்றோர்க்கு) ஒத்தவன், முதல் பிறந்த மைந்தன் - (அவன் யாரென்னில்) அப்புதல்வருள் முதற்பிறந்த புதல்வன், பேர் அனந்தகுணன் - அவன்பெயர் அனந்தகுணனென்போன்.

ஏழனுருபு நிற்கவேண்டியவிடத்து நான்கனுருபு வந்தது உருபுமயக்கம். (ச)

கலைபயின்றுபரிநெடுந்தேர்கரிபயின்றுபலகைவாள்
சிலைபயின்றுவருகுமரர்திறநோக்கிமகிழ்வேந்த
னலைபயின்றகடலாடைநிலமகளையடலணிதோண்
மலைபயின்றுகுளிர்தூங்கமகிழ்வித்துவாழுநாள்.

(இ-ள்.) கலை பயின்று - மனுநூல் முதலிய நூல்களைக்கற்று, பரிநெடும் தேர் கரி பயின்று - குதிரையேற்றமும் நெடிய தேரோற்றமும் யானையேற்றமுங் கற்று, பலகை வாள் சிலை பயின்று வரு குமரர் திறம் நோக்கி - கேடகவரிசையையும் வாள் வரிசையையும் வில் வரிசையையும் கற்றுவாராநின்ற வறுபதினாயிரம் புதல்வரது திறங்களைப்பார்த்து, மகிழ் வேந்தன் - மகிழ்ச்சி கூரும் குலோத்துங்கபாண்டியன், அலை பயின்ற கடல் ஆடை நிலமகளை - அலைகள் போக்குவரவு செய்கின்ற கடலையாடையாக வுடுத்த பூதேவியை, அடல் அணி தோள் மலை பயின்று குளிர் தூங்க மகிழ்வித்து வாழும் நாள் - வீரத்தையே ஆபரணமாகவணிந்த தனது தோளாகிய மலையில் இடைவிடாது சஞ்சரித்து வெம்மை நீங்க மகிழச்செய்து வாழுங்காலையில்.

தன்னோடெதிர்ப்பாரொருவரு மிலனென்பார் நிலமகளையடலணிதோள்-மலைபயின்றுகுளிர்தூங்க மகிழ்வித்து வாழுநாள் எனக் கூறினர். (ரு

செய்யேந்துதிருப்புத்தூர்நின்றுமொருசெழுமறையோன்
பையேந்துமரவல்குன்மனைவியொடும்பானல்வாய்க்
கையேந்துகுழவியொடுங்கடம்புகுந்துமாதுலன்பால்
மையேந்துபொழின்மதுரைநகர்நோக்கிவருகின்றான்.

(இ-ள்.) ஒரு செழுமறையோன் - ஒரு அந்தணன், செய் ஏந்து திருப்புத்தூர் நின்றும் - (தான வசிக்கும்) வயல் சூழ்ந்த திருப்புத்தூரினின்றும், அரவு ஏந்தும் பை அல்குல் மனைவியொடும் - பாம்புவிரிக்கும் படத்தையொத்த வல்குலையுடைய தனது மனைவியோடும், பால் நல் வாய் கை ஏந்து குழவியொடும் கடம் புகுந்து - பால்மணக்கும் நல்ல வாயையுடைய கையிலேந்து மிளம்பிள்ளையோடும் காட்டுவழிச்சென்று, மாதுலன் பால் - தனது மாமன் வீட்டிற்கு, மை ஏந்து பொழில் மதுரை நகர் நோக்கி வருகின்றான் - மேகந்தவழுஞ் சோலைசூழ்ந்த மதுரைத்திருநகரை நோக்கி வராநின்றான். (சு)

வருவானுண்ணீர்வேட்டுவருவாளைவழிநிற்கும்
பெருவானந்தடவுமொருபேராலினீழலின்கீ
ழொருவாதபசுங்குழவியுடனிருத்திநீர்தேடித்
தருவான்போய்மீண்டுமனையிருக்குமிடந்தலைப்படுமுன்.

(இ-ள்.) வருவான் - காட்டுவழிவருமந்தணன், உண் நீர் வேட்டு வருவாளை - உண்ணும் நீரைவிரும்பிவருந் தன்மனைவியை, வழி நிற்கும் பெரு வானம் தடவும் ஒரு பேர் ஆலின் நீழலின் கீழ் - அக்காட்டுவழியில் நிற்கும் பெரியவிண்ணுலகத்தை ததோயு மொரு பெரியஆலமரத்தின்கீழ், ஒரு வாத பசும் குழவி உடன் இருத்தி - தன்னையினின்றும் நீங்காத இளமபிள்ளையோடு இருக்கச்செய்து, நீர் தேடி தருவான் போய் மீண்டு மனை இருக்கும் இடம் தலைப்படு முன் - நீரைத்தேடிக்கொண்டுவரச்சென்று அந்நீரைக்கொண்டு திரும்பித் தன்மனையாளிருக்குமிடத்தை அடைதற்கு முன். (எ)

இலைத்தலையபழுமரத்தின்மிசைமுன்னாளெய்ததொரு
கொலைத்தலையகூர்வாளிகோப்புண்டுகிடந்ததுகா
லலைத்தலையவீழ்ந்தும்மைவினையுலப்பவாங்கிருந்த
வலைத்தலையமானோக்கிவயிறுருவத்தைத்தன்றால்.

(இ-ள்.) இலை தலைய பழுமரத்தின் மிசை - இலைகளை யிடங்கள்தோறுமுடைய வாலமரத்தின்மேல், முன் நாள் எய்தது கொலை தலைய ஒரு கூர் வாளி கோப்புண்டு கிடந்தது - (கிளியை இலக்காகக்கொண்டு ஒருவேடன்) முன்னாளிலெய்த கொலையைத் தலையிலுடைய ஒரு கூரிய அம்பு சிக்கிக்கிடந்தது, கால் அலைத்து அலைய வீழ்ந்து - காற்று அசைத்து அலைக்க அந்த அம்பு கீழேவீழ்ந்து, உம்மை வினை உலப்ப - முற்பிறப்பிற்றேடிய வினைப்பயன்முடிய, ஆங்கு இருந்த வலை தலைய மான் நோக்கி வயிறு உருவ தைத் தன்று - அவ்விடத்திருந்த வலையினிடத் தகப்பட்ட மான் போலும் பார்வையையுடைய அப்பார்ப்பனியினுடைய வயிறுருவும்படி தைத்தது.

தன்னுடம்பிற் சிறிதும் நோயில்லாளாதலால் அவளுயிரைக்கவர யமபடரோ காற்றுவடிவாய்ச்சென்றலைத்தலால் பிறவினைப்பொருள்பட அலைய எனவும், வினைப்பயனளவுந் தேகநிற்றலால் வினையுலப்ப வயிறுருவத்தைத்தன்று எனவுங் கூறினர். (அ)

அவ்வாறவ்வணங்கனையாளுயிரிழந்தாளவ்வேலைச்
செவ்வாளியேறிட்டசிலையுடையானொருவேடன்
வெவ்வாளியேறனையான்வெயிற்கொதுங்குநிழறேடி
யவ்வாலநிழலெய்தியயனின்றானிளைப்பாற.

(இ-ள்.) அ ஆறு அ அணங்கு அனையாள் உயிர் இழந்தாள் - அவ்வகையாக அந்தக் கொல்லியம்பாவையையொத்த பார்ப்பனி தன்னுயிர் நீங்கினாள், அ வேலை - அக்காலையில், ஒரு வேடன் செவ் வாளி ஏறிட்ட சிலையுடையான் - ஒருவேடனானவன் உதிரந்தோய்தலால் செந்நிறம்வாய்ந்த அம்பினை யேறிட்டவில்லினை யுடையவனாகி, வெம்மை ஆளி ஏறு அனையான் - கொடிய யாளியேற்றை யொத்தவன், இளைப்பு ஆற வெயிற்கு ஒதுங்கும் நிழல் தேடி - இளைப்பாறும்படி வெயிலிற்கொதுங்கும் நிழலைத்தேடிச் (செல்வான்,) அ ஆல நிழல் எய்தி அயல் நின்றான் - அங்குள்ள ஆலமரத்தினிழலையடைந்து அம்மரத்தின்பக்கல் நின்றான். (௯)

தண்ணீர்க்குப்போயாவிதலைப்பட்டமறையவனு
முண்ணீர்கைக்கொண்டுமீண்டொருங்கிருந்தகுழவியொடும்
புண்ணீர்வெள்ளத்துக்காறாழ்ந்துயிரைப்புறங்கொடுத்த
பண்ணீரமழலைமொழிப்பார்ப்பனியைக்கண்ணுற்றான்.

(இ-ள்.) தண்ணீர்க்கு போய் ஆவி தலைப்பட்ட மறையவனும் - தண்ணீர்க்குச்சென்று நீரோடையை யடைந்த வந்தணனும், உண் நீர் கை கொண்டு மீண்டு - உண்ணும்நீரைக் கைக்கொண்டு திரும்பி, ஒருங்கு இருந்த குழவி யொடும் புண் நீர் வெள்ளத்து கால் தாழ்ந்து - ஒருசேரத் தன்னோடு இருந்த பிள்ளையோடும் உதிரவெள்ளக் காலிலழுந்தி, உயிரை புறம் கொடுத்த பண் ஈர மழலை மொழி பார்ப்பனியை கண்ணுற்றான் - உயிரையிழந்த பண்ணைப்போலும் இனிமைத்தன்மையையுடைய மழலைச்சொல்லையுடைய தனதுமனைவியைப் பார்த்தான். (௧0)

அயில்போலுங்கணையேறுண்டவ்வழிபுண்ணீர்சோர
மயில்போலவுயிர்போகிக்கிடக்கின்றாண்மருங்கணைந்தென்
னுயிர்போல்வாயுனக்கிதுவென்னுற்றதெனமத்தெறிதண்
டயிர்போலக்கலங்கியறிவழிந்துமனஞ்சாம்பினான்.

(இ-ள்.) அயில் போலும் கணை ஏறுண்டு - வேல்போலுங் கூர்மைவாய்ந்த அம்பு தைத்து, அவ் வழி புண் நீர் சோர மயில் போல உயிர் போகி கிடக்கின்றாள் மருங்கு அணைந்து - அவ்விடத்தில் உதிரநீர்சோர மயிலைப்போல உயிர்போய்க்கிடக்கின்ற தன்மனைவிபக்கல்சேர்ந்து, என் உயிர் போல்வாய் உனக்கு இது என் உற்றது என - என்னுயிரையொப்பாய் உனக்கு இது என்ன வந்தடைந்ததென்று திடுக்கிட்டு, மத்து எறி தண் தயிர்போல கலங்கி - மத்தாலுடைந்த தண்ணிய தயிரைப்போல மனநிலையுடைந்து கலங்கி, அறிவு அழிந்து மனம் சாம்பினான் - உணர்வழிந்து மனமடிந்தான்.

அறிவழிதற்கு மனங்கலங்கல் காரணமாதலாலும், மனமடிதற்கு அறிவழிதல் காரணமாதலாலும் காரணகாரியப் பொருள்பட முறையே வைத்தலால் காரணமாலையணி. (௧௧)

இனையதோர்பெண்பழியையாரேற்றுரெனத்தேர்வா
னனையதோர்பழுமரத்தின்புறத்தொருசாரழல்காலு
முனையதோர்கணையோடுமுடக்கியகைச்சிலையேந்தி
வினையதோர்ந்தெதிர்நின்றவிறல்வேடன்றனைக்கண்டான்.

(இ-ள்.) இனை யது ஓர் பெண் பழியை ஏற்றார் யார் என தேர்வான் - இப்ப டிப்பட்டவொருபெண்பழியை ஏற்றவர் யார் எனறு ஆராய்கின்ற அந்தணன், அனை யது ஓர் பழு மரத்தின் புறத்து ஒரு சார் - அந்த ஆலமரத்தின்புறத்து ஒருபக்கத்தி ல், அழல் காலும் முனையது ஓர் கணையோடு கை முடக்கிய சிலை ஏந்தி-அழலைக் கக்கு ம் முனையையுடைய வொருபாணத்தோடு கையில் வளைந்த வில்லையேந்தி, வினை யது ஓர்ந்து எதிர் நின்ற விறல் வேடன் தனை கண்டான் - மிருகங்களைக் கொல்லுதலை யா ராய்ந்து தன்னெதிர்நின்ற வெற்றியையுடைய வேடனைப்பார்த்தான்.

அது பகுதிப்பொருள் விகுதி. எல்லாப்பழிகளுள்ளும் பெண்பழிபெரிதாத லால் இனையதோர்பெண்பழியையாரேற்றார் என்றான். (கஉ)

கலிநிலைத்துறை.

காப்பணிதாளன்வாளொடுவீக்கியகச்சாளன்
கூர்ப்பகழிக்கோலேறிடுவில்லன்கொலைசெய்வா
னேற்பனகைக்கொண்டிவ்விடைநின்றானிவனேயென்
பார்ப்பனியைக்கொன்றின்னுயிருண்டுபழிபூண்டான்.

(இ-ள்.) காப்பு அணி தாளன் வாள் ஒடு வீக்கிய கச்சாளன்-தொடுதோலணி ந்த காலையுடையவனுகி வாளொடுகட்டிய கச்சையையுடையவனுகி, கூர் பகழி கோ ல் ஏறிடு வில்லன் - கூரினையுடைய அம்பை ஏறிட்ட வில்லையுடையவனுகி, கொலை செய்வான் ஏற்பன கைக்கொண்டு இவ்விடை நின்றான் - கொலைசெய்தற்கேற்ற கரு விகளைக் கையிற்கொண் டிவ்விடத்தினின்றான், இவனே என் பார்ப்பனியை கொன் று இன் உயிர் உண்டு பழி பூண்டான் - இவனே என்னுடைய மனைவியைக்கொன்று இனியவுயிரைக்குடித்துப் பழிபூண்டவன்.

கொலைசெய்தற்குரிய சன்னத்தனய்நிற்றலால் இவனே யென்பார்ப்பனியை க்கொன்று எனத் தேற்றேகாரந்தந்துகூறினன், தாளன், கச்சாளன், வில்லன் என் னுங் குறிப்புவினைமுற்றுகள் எச்சங்களாய் வான் இறுதியைப்பெற்றுவந்த செய்வா ன் என்னும் எச்சத்தைத் தனித்தனி கொண்டன. (கஈ

என்னமதித்தேயேடாவேடாவென்னேழை
தன்னைவதைத்தாய்நீயேயென்றுத்தழல்கால்கண்
மின்னலெயிற்றுக்கூற்றெனவல்வாய்விட்டார்த்து
மன்னவனுணைப்பாசமெறிந்துவலித்தேகும்.

(இ-ள்.) என்ன மதித்தே - என்று கருதி, ஏடா வேடா - ஏண்டாவேடனே, என் ஏழை தன்னை வதைத்தாய் - என்னுடைய மனைவியைக் கொன்றாய், நீயே எ ன்று-கொன்றவனீயேயன்றி மற்றொருவ னல்லனென்று, தழல் கால் கண் மின்னல் எயிறு கூற்று என - அக்கினியைக் கக்குங் கண்களையும் மின்னைப்போன்ற பற்களையு முடைய இயமனைப்போல, வல் வாய் விட்டு ஆர்த்து - வலியவாய்பிளந்து கோஷி த்து, மன்னவன் ஆணை பாசம் எறிந்து வலித்து ஏகும்-அரசனது ஆணையாகிய கயி ற்றைவீசி இழுத்துச் செல்லுவான்.

அரசனாணையி லெவ்வுயிருங் கட்டுப்பட்டொழுகுதலால் மன்னவனாணைப் பாசமெறிந்து வலித்து என்றார். (கச)

மாண்டவளைத்தன்வெந்நிடையிட்டான்மகவொக்கற்
றாண்டவணைத்தான்றாய்முலைவேட்டழுதன்சேயைக்
காண்டொறும்விம்மாக்கண்புனல்சோரக்கடிதேகா
வாண்டகைமாறன்கூடலணைந்தானளியன்றான்,

(இ-ள்.) மாண்டவளை தன் வெந் இடை இட்டான் - இறந்ததன்மனைவியைத் தனது முதுகின்மேலிட்டு, மகவு ஒக்கல் தாண்ட அணைத்தான்-தன்பிள்ளையைப்பக்கத்திற்பொருந்த வணைத்து, தாய்முலைவேட்டு அழுதன்சேயை காண் தொறும் கண் புனல் சோர விம்மா - தாய்முலைப்பாலைவிரும்பியழாநின்ற தனது பிள்ளையைப்பார்க்குந்தோறும் கண்களினின்று நீர்சோரவழுது, கடிது ஏகா - விரைந்துசென்று, அளியன் தான் - அந்த அந்தணன் - ஆண்டகைமாறன் கூடல் அணைந்தான் - ஆண்டன்மையையுடைய பாண்டியனது மதுரைநகரத்தையடைந்தான்.

இட்டான், அணைந்தான், முற்றெச்சங்கள். (கரு)

மட்டவிழ்தாரான்வாயின்மருங்கேவந்தெய்தா
வுட்டுகளில்லாவேடனைமுன்விட்டுயிரன்னாள்
சட்டகநேரேவிட்டெதிர்மாறன்றமர்கேட்பக்
கட்டுளிசிந்தாமுறையிடுகின்றான்கையோச்சா.

(இ-ள்.) மட்டு அவிழ்தாரான் வாயில் மருங்குவந்து எய்தா - வாசம்பரந்த மாலையையுடைய பாண்டியனது கோயில்வாயிலின்பக்கத்துவந்து அடைந்து, உள் துகள் இல்லாத வேடனை முன்விட்டு - மனத்தில் சிறிதுங் களங்கமில்லாத வேடனை முன்னேவிட்டு, உயிர் அன்னாள் சட்டகம் நேரேவிட்டு - தன் உயிரையொத்த மனைவியினது சரீரத்தை நேரேபோட்டு, எதிர் மாறன் தமர்கேட்ப - எதிரேபாண்டியன் உறவினராகிய மந்திரிமுதலியோர்கேட்க, கை ஓச்சா - கையைமேலேயோக்கி, கண் துளிசிந்தா முறையிடுகின்றான்-கண்ணினின்றும் நீர்சிந்தி முறையிடாநின்றான்.

கோமுறைகோடாக்கொற்றவரேறேமுறையேயோ
தாமரையாள்வாழ்தண்கடிமார்பாமுறையேயோ
மாமதிவானோன்வழிவருமைந்தாமுறையேயோ
தீமைசெய்தாய்போற்செங்கைகுறைத்தாய்முறையேயோ.

(இ-ள்.) கோமுறை கோடாத கொற்றவர் ஏறே - மனுநீதிமுறைமை சிறிதுஞ்சாயாத பாண்டியருள் ஆண்சிங்கம்போல்வாய், முறையேயோ - (உன்னாட்டில் இவ்வாறு நடந்தது) முறையோ, தாமரையாள் வாழ் தண் கடி மார்பா முறையேயோ - தாமரைமலரின் வாழ்க்கையளாகிய இலட்சுமி வசிக்கும் தண்ணிய விளக்கமமைந்த மார்பையுடையவனே முறையோ, மாமதி வானோன் வழிவரு மைந்தா முறையேயோ - பெருமையமைந்த சந்திரன் மரபிற்றோன்றிய மைந்தனே முறையோ, தீமை செய்தாய் போல் செங்கை குறைத்தாய் முறையேயோ - கொடுமைசெய்தவனைப்போலத் தனது சிவந்த கையைத் தறித்தவனே முறையோ.

மநுநூன்முறை சிறிதுங்கோடாத அரசர்களுள் மிக்கோய் என்பான் கோமுறைகோடாக் கொற்றவரேறே எனவும், அதனால் எல்லாவுலகமுந் தன்னடிக்கீழ்ப்படு

த்தினாய் என்பான் தாமரையாள்வாழ் தண்கடிமார்பா எனவும், தன்குடைக்கீழ்த்தங்கிய எல்லாவுயிரிடத்தும் ஒருபெற்றித்தாய தண்ணளியையுடையா யென்பான் மாமதிவானோன் வழிவருமைந்தா எனவும், ஓர் பாண்டியன் நகரி காவற்பொருட்டு இரவிற் காவலாளர் சோராது காக்கின்றாரோவென்பதை யறிதற்பொருட்டு அவரறியாமலுருக்கரந்து சோதித்துச் செல்லுவான் ஓர்காலையில், மறையவர் வீதியில் வருங்கால் அன்றிரவில் ஓரந்தணன் தன் மனைவியைநோக்கி நான் காசிக்குச்சென்று நீராடிவருங்காறும் நின்னைப் பாதுகாத்தொழுகுவாயெனக் கூற, அதைக்கேட்ட அவன் மனைவி யெவ்வாறு என்னைக் காத்தொழுகல் கூடுமென்ற தன் மனைவியை நோக்கிச் சிறிதும் அஞ்சற்க பாண்டியன் செங்கோல் உன் கற்பைக்காக்குமென அவள் மனத்தைத்தேற்றிக் காசிக்குச்சென்றனன், அவன் வருங்காறும் இரவில் நகரிசோதனைசெய்து அம்மறையவன் மனைவியைக் காத்தற்பொருட்டு அம்மனையின்புறத்திற்றங்கி விடியளவுங் காத்துத் தன்னரசிருக்கைக்கு மீள்வோன், ஓர்நாளிரவில் காசிக்குச்சென்ற மறையவன் தன்னில்லிற்கு வந்து மனையாளோடு நிகழ்ந்த செய்திகளைப்பேசி மகிழ்கூர்ந்திருக்குங்காலையில், அவ்வழிவந்த பாண்டியன் அவ்வில்லில் நிகழும் அரவத்தைக்கேட்டு என்றும் நிகழாத புதுமை யின்று கண்டோமெனச் சிறிது கவலைகூர்ந்து ஒருவாறு தன் மனத்தைத்தேற்றி யுண்மை யறிதற்பொருட்டு அவ்வீட்டின் கதவைத்தட்ட, அம்மறையோன் அவ்வில்லிற்றுரியனாதலால் யாரவன் என்று வினவியபோது சோரபுருடனல்லனெனப் பாண்டியனறிந்து காசிக்குச்சென்றுவந்த மறையவனுக்குத் தினந்தோறும் இந்நாள்போல நம்மனையவள் பக்கல் சோரபுருடன் வருகின்றான் என அவனுக்கு ஐயம் விளைத்தோமே இதென்ன பெரும்பாவம் எனப் பெருங்கவலைகூர்ந்து, அம்மறையவன் அவ்வையத்தை யொழிப்பான் அவ்வீதியிலுள்ள அந்தணரில்லத்தின் கதவங்களையெல்லாம் அன்றிரவில் தட்டித் தன்னரசிருக்கைக்குச்சென்றான், அன்றே மறையவரெல்லாம் ஒருசேரக்கூடி என்றும் நிகழாத ஓரற்புதம் இன்று நிகழ்ந்த காரணம்யாதோ, இதை நம்மிறைவனுக்கு அறிவிப்பாமென ஒருங்கேகூடி வைகறையில் தங்கள் கடன்களையொழித்து அரசன் பக்கல் வந்து குறைகூறினார்கள், அதுகேட்ட பாண்டியன் உங்களுக்கெல்லாம் ஒருசேரத் தீமைசெய்தது என் கையேயென்று அதனைத்தறித்தனன் அவன் மரபில்வந்த நீதியையுடையாயென்பான் தீமைசெய்தாய்போற் செங்கைகுறைத்தாய் எனவுங் கூறினான்.

பிறங்குங்கோலான்மாறடுகொற்றம்பெறுவேந்த
னுறங்கும்போதுந்தன்னருளாணையுலகெங்கு
மறங்குன்றாவாக்காப்பதையென்பவஃதியாதிம்
மறங்குன்றாதான்செய்கொலைகாவாவழியென்றான்.

(இ-ள்.) பிறங்கும் கோலான் மாறு அடு கொற்றம் பெறுவேந்தன்-விளங்கும் செங்கோலையுடையவனாகிப் பகைவரைக்கொல்லும் வெற்றிவாய்ந்த பாண்டியன், உறங்கும்போதும் தன் அருள் ஆணை - உறங்குங்காலத்தும் அவனது அருளாணையானது, உலகு எங்கும் அறம் குன்றாவாக காப்பது என்ப - (உலகமுற்றும்) தருமங்குன்றாமல் காப்பதென்று அறிவுடையோர் கூறுவர், அஃது - அந்த அருளாணை, இம்மறம் குன்றாதான் செய் கொலை காவாத வழி - இக்கொலைத்தொழில் சிறிதுங் குறையாத வேடன்செய்த கொலைத்தொழிலைச் சிறிதுங் காக்காதவகை, யாது என்றான் - யாதுகாரணமோ வென்று முறையிட்டான்.

ஐ சாரியை. (௧௮)

வாயிலுளார்தமன்னவன்முன்போய்மன்னநங்
கோயிலின்மாடோர்வேதியன்மாதைக்கொலைசெய்தா
னாயினனென்றோர்வேடனைமுன்விட்டவிந்தாளைத்
தாயினன்வந்திங்கிட்டயர்கின்றான்றமியென்றார்.

(இ-ள்.) வாயில் உளார் தம் மன்னவன் முன் போய் - வாயில் காப்பே தம்மரசன் முன் சென்று, மன்ன - பாண்டியனே, நம் கோயிலின் மாடு ஓர் வே ன - நமது கோயிலின் பக்கலில் ஓர் அந்தணன், மாதை கொலை செய்தானயின என்று ஓர் வேடனை முன்விட்டு - தன்னுடைய மனைவியைக் கொலைசெய்தான் ற ஒரு வேடனை முன்னே விட்டு, அவிந்தாளை தாயினன் வந்து இங்கு இட்டு, அயர்கின்றான் என்றார் - இழந்த தன் மனைவியை யெடுத்துவந்து இங்கே போட் தனியனாய் வருந்துகின்றானென்று கூறினார்கள்.

செய்தானாயினன் ஒருசொல், தாயினன் முற்றெச்சம். (

இறைமகனஞ்சாவென்குடைநன்றாலென்காவ
லறமலிசெங்கோலஞ்சுபயந்தீர்த்தரசாளு
முறைமையுநன்றான்மண்கலிமூழ்காமுயன்றேந்தும்
பொறைமையுநன்றாலென்றுபுலந்துபுறம்போந்தான்.

(இ-ள்.) இறைமகன் அஞ்சா - பாண்டியனது கேட்டஞ்சி, என் குடை று-(உயிர்களுக்கு நிழல்செய்யும்) எனது தவளவட்டக்குடை நன்றாய் இருந்தது, ன் காவல் அற மலி செங்கோல் - எனது காப்பாகிய தருமமிக்க செங்கோலான அஞ்சு பயம் தீர்த்து - (குடிகளுக்கு நேரிடும்) ஐந்துபயங்களையுந் தீர்த்து, அர ளும் முறைமையும் நன்று-அரசியல் நடத்தும் முறைமையும் நன்றாயிருந்தது, ம க்லி மூழ்கா முயன்று ஏந்தும் பொறைமையும் நன்று என்று - நிலவுலகம் கலி மூழ்காமல் தளர்ச்சியின்றி நான் தாங்கும் பொறுமைத்தன்மையும் நன்றாயிரு தென்று, புலந்து புறம் போந்தான் - மனம் புலர்ந்து அரசிருக்கையினின்று ப தில் வந்தான்.

நன்றென்றது - இழிப்புமேற் போந்தது குறிப்பெச்சம். ஐந்துபயங் வன குடிகளுக்குத் தன்னாலும், தன் பரிசனத்தாராலும், பகைவராலும், கள் லும், ஏனை விலங்கு முதலிய உயிர்களாலும் வருங்கெடுதிகள் " மாநிலங்காவ வான் மன்னுயிர்காக்குங்காலைத் - தானதனுக்கிடையூறுதன்னாற் றன்பரிசனத்த லூனமிகுபகைத்திறத்தாற் கள்வராலுயிர்தம்மால் - ஆனபயமைந்துந்தீர்த் தறங் பானல்லனோ" என்ற திருவிருத்தத்தால் உணர்க. (

வேதியனிற்குந்தன்மைதெரிந்தான்மெலிவுற்றான்
சாதியின்மிக்காய்வந்ததுனக்கென்றளர்கின்றா
யோதுதியென்னக்காவலனைப்பார்த்துரைசான்ற
நீதியுளாய்கேளென்றுரைசெய்வானிகழ்செய்தி.

(இ-ள்.) வேதியன் நிற்கும் தன்மை தெரிந்தான் மெலிவு உற்றான் - ணன் மெலிந்து நிற்கும் தன்மைதெரிந்து மெலிந்து, சாதியில் மிக்காய் உனக் ந்தது என் - நான்கு வருணங்களுள் மேம்பட்டோய் உனக்கு வந்தது யாது, கின்றாய் ஓதுதி என்ன-(நீ யாதுகருதி) வருந்துகின்றாய் அது கூறாய் என்று வி காவலனைப்பார்த்து - அந்தணன் பாண்டியனைப்பார்த்து, உரை சான்ற நீதியு

கேள் என்று நிகழ்செய்தி உரை செய்வான் - புகழ் அமைந்த நீதியுள்ளவனே கேளாய் என்று நடந்த செய்தியைச்சொல்லுவான்.

தெரிந்தான், மெலிவுற்றான் முற்றெச்சங்கள். (௨௧)

இன்றிவளைக்கொண்டோர்வடநீழலிடையிட்டுச்
சென்றுதணீர்கொண்டியான்வருமுன்னிச்சிலைவேடன்
கொன்றயனின்றானென்றுலையூட்டுங்கொலைவேல்போல்
வன்றிறன்மாறன்செவிநுழைவித்தான்மறையோனால்.

(இ-ள்.) இன்று இவளை கொண்டு ஓர் வடநிழல் இடை இட்டு சென்று - இப்பொழுது இந்த இறந்த வென்மனைய வளைக்கைகொண்டு ஒரு பெரிய ஆலமரத்தின் நீழலில் இருக்கச்செய்து இவள் தாகவேட்கை தீரப்போய், யான் தண் நீர் கொண்டு வருமுன் இச்சிலைவேடன் கொன்று அயல்நின்றான் என்று - யான தண்ணீரைக் கொண்டுவருவதற்குமுன் இந்த வில்லையேந்திய வேடன் கொலைசெய்து அந்த ஆலமரத்தின் பக்கல் நின்றான் என்று, உலை ஊட்டும் கொலைவேல்போல் - உலையிற்காய்ச்சிய கொலைத்தொழிலையுடைய வேலைச் செவியில் நுழைவிப்பதுபோல, மறையோன் - அந்தணன், வன் திறல் மாறன் செவி நுழைவித்தான் - வன்மையையுடைய பாண்டியன் காதிற் செலுத்தினான்.

மிகவும் கொடியது என்பார் நுழைவித்தான் என்றார். (௨௨)

அந்தணன்மாற்றந்தன்னையுமுட்கொண்டறநோக்குஞ்
சந்தனவெற்பன்மறவனைநோக்கத்தாழ்ந்தன்னா
னெந்தைபிரானேநாயடியேனின்றெய்ப்பாற
வந்துபுகுந்தேனந்தமரத்தின்மருங்கோர்சார்.

(இ-ள்.) அந்தணன் மாற்றம் தன்னையும் உட்கொண்டு - மறையவன் கூறிய வார்த்தையையும் தன்னுட்கொண்டு, அறம் நோக்கும் சந்தன வெற்பன் - தருமநெறியையுங் கூர்ந்துபார்க்கும் பொதியமலையையுடைய பாண்டியன், மறவனை நோக்க - வேடனைப்பார்க்க, அன்னான் தாழ்ந்து - அந்தவேடன் வணங்கி, எந்தை பிரானே - எனது தந்தையாகிய விறைவனே, நாய் அடியேன் - நாயினுங் கடைப்பட்டவடியேன், இன்று எய்ப்பு ஆற - இப்பொழுது இளைப்பாறும்படி, அந்த மரத்தின் மருங்கு ஓர் சார வந்து புகுந்தேன் - அந்த ஆலமரத்தின் ஓர்பக்கல்வந்து புகுந்து நின்றேன்.

ஓர்பால் நின்று மற்றொருபாற்கோடி அந்தணன்வார்த்தையைக் கேட்டவுடனே வேடனை யொறுத்திலனென்பார் அறநோக்கும் சந்தனவெற்பன்மறவனைநோக்க என்றார். (௨௩)

ஐயேநானுங்கொன்றவனல்லேன்கொன்றானைக்
கையேன்வேறுங்கண்டிலனென்றானிவளாகத்
தெய்யேறுண்டவாறெவனென்றாரெதிர்நின்றார்
மெய்யேயையாயானறியேனிவ்வினையென்றான்.

(இ-ள்.) ஐயே நானும் கொன்றவன் அல்லேன் - ஐயே நானுங் கொலைசெய்தவனல்லேன், கொன்றானை கையேன் வேறும் கண்டிலன் என்றான் - கொலைசெய்தவனைக் கீழ்மகனாகிய யானும் வேறுகாணேன் என்று கூறினான், எதிர் நின்றார் இவள் ஆகத்து எய் ஏறுண்ட ஆறு எவன் என்றார் - எதிரே நின்றவர்கள் இவளது சரீரத்தி

ல் கூமபுதைத்தருவியவனையாத என்று வினவிஞர், ஐயா மெய்யே யான் அ
ன் இ விளைவு என்முன் - ஐயனே சத்தியமாகவே இச்செய்தியையானறியேன்
று கூறிஞன்.

ஐய - என்றது அச்சாதியிற்கூறும் மரியாதை வார்த்தை. எய் என்று
னிலைத்தொழிற்பெயர் அம்பின்மேல் நின்றது தொழிலாகுபெயர்.

இக்கொலைசெய்தான்யானலலென்றுதுளனென்னத்
தக்கவனேயோதறுகண்மறவனுனைமெய்யோ
சிக்கவொறுத்தாலல்லதையுண்மைசெப்பானென்
ஞெகவுரைத்தார்மந்திரருள்ளார்பிறரெல்லாம்.

(இ-ள்.) இக் கொலை செய்தான் யான் அலன் என்றது உளன் என்ன
வனேயோ - இந்தக் கொலையைச்செய்தவன் நான் அல்லேன் என்று பொய்கூ
செய்தேன் என்று மெய்கூறத்தக்க மாபிற் ஞேன்றினவனே, தறு கண் மறவ
னை மெய்யோ-(இவன இயற்கையாகவே) கொலைத்தொழிலையுடையவேடன இ
கூறும்வார்த்தை யுண்மையோ, சிக்க ஒறுத்தால் அல்லது உண்மை செப்பான்
று - கடினமாகத் தண்டித்தாலன்றி யுண்மைகூருனென்று, மந்திரர் உள்ளார்
எல்லாம் ஒக்க உரைத்தார் - அமைச்சரும் மற்றையாவரும் பொருந்தக் கூறினார்

மன்னன்ருனுமற்றதுசெய்மின்னெனமள்ளர்
பின்னந்தண்டஞ்செய்தனர்கேட்கப்பிழையில்லான்
முன்னஞ்சொன்னசொற்பெயராஞய்மொழியாநின்
றின்னந்தேருமினென்ருனென்செய்வான்.

(இ-ள்.) மன்னன் தானும் மற்றது செய்மின் என - அரசனும அதைச்செ
யுங்கள் என்று கூற, மள்ளர் பின்னம் தண்டம் செய்தனர் கேட்க - ஒறுப்பவரு
ன்பு ஒறுத்துக்கேட்க, பிழையில்லான் முன்னம் சொன்ன சொல் பெயராஞய் மெ
ழியாநின்ருன் - குற்றமில்லாத அவ்வேடன் முன்புசொல்லிய சொல்லினின்றும்
காதவனுகி நான் கொன்றேன் அல்லேன் என்றுகூறுகின்ருன், இன்னம் தேரு
மின் என்ருன் என்செய்வான் - இன்னமும் முற்றும் பார்த்தறியுங்கள் என்று பா
டியன் கூறிஞன் (இதுவன்றியாதுசெய்யவல்லான்.)

தண்டித்தற்கு உடன்படான் என்பான் மற்றதுசெய்மின் என்ருன். மெ
யாநின்று என ஈறுதொக்கு நின்றது "நட்டில்வழிச்சேறனல்கூர்ந்தன்று" எ
முதுமொழிக்காஞ்சியால் உணர்க. (உ

ஆற்றவொறுக்குந்தண்டமுமஞ்சானறைகின்ற
கூற்றமுமொன்றேகொன்றகுறிப்புமுகந்தோற்ருன்
மாற்றவரோயோமாவோபுள்ளோவழிவந்த
கோறமேருடியைக்கொன்றெனபெறவல்லான்கொலைசெய்வான்

(இ-ள்.) ஆற்ற ஒறுக்கும் தண்டமும் அஞ்சான் - மிகவும் தண்டிக்கும் த
டத்தையுஞ் சிறிதுமஞ்சான், அறைகின்ற கூற்றமும் ஒன்றே - (தண்டத்திற்கஞ்
சிறிதும் பிறழாது) இவன் கூறுகின்ற வார்த்தையுமொன்றே, கொன்ற குறிப்பும்
கம் தோற்ருன் - கொலைசெய்த குறிப்பினையும் சிறிதும் தன்முகத்திற் காட்டா
(ஆதலால்) மாற்றவரோயோ- (அர்தணன்வழிவந்த) பகைவரோ மாவோ புள்ளே

அன்றிமிருகமோ பறவையோ, கொலை செய்வான் - கொலைசெய்யுமிவ்வேடன், வழிவந்த கோல் தொடியை கொன்று என் பெற வல்லான் - வழியில்வந்த இப்பெண்ணைக்கொன்று யாதுபயன்பெறவல்லான் (ஒன்றுமில்லையே.)

கோற்றொடி - கோல்போலத் திரண்ட வளையலையணிந்த முன்கையை யுடையாள் என நிற்றலால் விட்ட அன்மொழித்தொகை. (உஎ)

கைதவனுமிக்கானவனேயோபிறரோயோ
செய்தவர்யாரோயிக்கொலைவேட்டஞ்செய்தோர்மா
வெய்தவிலக்கிற்றப்பியகோறுனேறுண்டிம்
மைதவழ்கண்ணுண்மாய்ந்தனளேயோவறியேனால்.

(இ-ள்.) இக் கொலை செய்தவர்-இந்தக்கொலைசெய்து முடித்தவர், கைதவன் ஆம் இ கானவனேயோ-வஞ்சகனாகிய இவ்வேடனோ, பிறரோயோ-பிறரோ, யாரோ-எவரோ, வேட்டஞ் செய்தோர் மா எய்த இலக்கில் தப்பிய கோல் தான் ஏறுண்டு-வேட்டையாடினவர்கள் மிருகத்தைக் குறியாகக்கொண்டெய்த குறியினின்றும் தப்பிய அம்பானது தைத்தருவுதலால், இ மை தவழ் கண்ணாள் மாய்ந்தனளேயோ - இந்தமையெழுதிய கண்களையுடைய பார்ப்பனி இறந்தாளோ, அறியேன்-(யான்) ஒன்றுமறியேன். (உஅ)

என்றுமுன்னித்தென்னவனின்னமிதுமுன்னூ
றன்றூயத்தக்கதையென்றுன்றகவிற்றம்
மன்றூரந்நூலாய்ந்திதுநூலாலமையாதான்
மன்றுதெய்வத்தாலேதேறும்வழியென்றூர்.

(இ-ள்.) என்று முன்னி - என்றுகருதி, தென்னவன் - குலோத்துங்கபாண்டியன், இன்னம் இது முன் நூல் தன்னால் ஆய தக்கது என்றான் - இன்னமுமிதனை முதனூலால் ஆராய்ந்தறியத்தக்கது என்றுகூறினான், தகவில் தம் அன்னார் அந்நூல் ஆய்ந்து - தகுதியினால் தம்மையொத்த மூதறிவுடையோர் அந்த முதனூலை யாராய்ந்து, இது நூலால் அமையாது-இதனை அம்முதனூலால் ஆராய்ந்தமைதல்முடியாது, மன்று தெய்வத்தாலே தேறும் வழி என்றூர் - பாண்டியனே தெய்வத்தாலாராய்ந்தறியும் வழி இதுவென்று கூறினார்கள்.

முன்னூல் - வேதத்தைத்தழுவிய சோதிடநூல். அதனைப் பிறழ வுணர்ந்தார் என்பார் ஆய்ந்திதுநூலாலமையாது என்றூர். ஐ சாரியை. (உகூ)

வேந்தர்கள்சிங்கம்வேதியனைப்பார்த்திதுதீர
வாய்ந்துனதுள்ளக்கவலையொழிப்பேனஞ்சேனின்
னேந்திழையீமக்கடனிறுவிப்போதென்றேவித்
தேங்கைத்தார்மறவோனைசசிறைசெய்தான்.

(இ-ள்.) வேந்தர்கள் சிங்கம் வேதியனை பார்த்து - அரசர்களுள் ஆண்சிங்கம் போன்ற பாண்டியன் அந்தணனைப் பார்த்து, இது தீர ஆய்ந்து உனது உள்ளம் கவலை ஒழிப்பேன் - இந்தச்செய்தியைத் தீரவாராய்ந்து உனது மனக்கவலையையொழிப்பேன், அஞ்சேல் - (நீசிறிதும்) அஞ்சாதே, இப்போது நின் ஏந்திழை ஈமம் கடன் நிறுவு என்று ஏவி - இப்போது உன்மனைவிக்குச்செய்யும் தகனமுதலிய ஈமக்கட

ன்களை நடத்தென்று ஏவி, வேங்கை'தேம் துணர் தார்மறவோனை சிறை செய்தான் - வேங்கைமரத்தின் தேன்சிந்தும் பூங்கொத்தாலாகிய மாலையையணிந்த வேடனைச் சிறைச்சாலையில் அடைவித்தான். (கூo)

மின்னனையாடன்செய்கடன்முற்றுமீண்டோனைத்
தன்னமர்கோயிற்கடைவயின்வைத்துத்தானேகித்
கொன்னவிலவேலான்றங்கள்குடிக்கோர்குலதெய்வ
மென்னவிருந்தாரடிகள்பணிந்தானிதுகூறும்.

(இ-ள்.) மின் அனையாள் தன் செய் கடன் முற்று மீண்டோனை - மின்னலையொத்த தன்மனைவிக்குச் செய்தற்குரிய கடன்களைச் செய்துமுடித்துத் திரும்பியவந்தணனை, தன் அமர் கோயில் கடை வயின் வைத்து - தன்னால் விரும்பப்பட்டகோயிலின் கடைவாயிலில்வைத்து, கொல் நவில் வேலான் தான் ஏகி - கொலைத்தொழில்செய்யும் வேலையேந்தியபாண்டியன் தான்சென்று, தங்கள் குடிக்கு ஓர் குலதெய்வம் என்ன இருந்தார் அடிகள் பணிந்தான் இது கூறும் - தமதுகுடிக்கு ஒருகுலதெய்வமாகவிருந்த சோமசுந்தரக் கடவுளுடைய திருவடிகளைவணங்கி இது கூறுகின்றான்.

பாண்டியர்களுக்கு ஓரிடையூறுவரின் முன்சென்றுதவிர்க்குங் கடவுள் சோமசுந்தரக்கடவுள் ஆதலால் தங்கள்குடிக் கோர் குலதெய்வமென்ன இருந்தார் என்றார். அதனை முன்னும் பின்னுங் கூறியிருத்தலைக்காண்க. (கூக)

கொச்சகக்கலிப்பா.

மன்றுடுமணியேயிம்மறவன்றான்பார்ப்பனியைக்
கொன்றானோபிறர்பிறிதாற்கொன்றதோவிதுவறநூ
லொன்றாலுமளப்பரிதாக்கிடந்ததாலுன்னருளா
லென்றாழ்வுகெடத்தேற்றாயென்றிரந்தானவ்வேலை.

(இ-ள்.) மன்று ஆடும் மணியே - வெள்ளியம்பலத்துள் திருத்தஞ்செய்யும் மாணிக்கமே, இ மறவன் தான் பார்ப்பனியை கொன்றானோ - இந்தவேடன்தான் பார்ப்பனியைக் கொலைசெய்தவனோ, பிறர் பிறிது ஆல் கொன்றதோ-(இவனன்றிப்) பிறர் வேறுகாரணங்கருதிக் கொலைசெய்ததோ, இது அற நூல் ஒன்றாலும் அளப்பு அரிதாக கிடந்தது - இச்செய்தி மிகவும் சோதி—நூலுள் ஒருநூலாலாகிலும் அளந்தறிதற்கரியதாக விருந்தது, உன் அருளால் என் தாழ்வுகெட தேற்றாய் என்று இரந்தான் - உனது திருவருளாலே எனது குறைவுதீரத் தெளிவிப்பாய் என்று குறையிரந்தான், அவ் வேலை - அக்காலையில்.

இம்மறையவனுக்கு வழிப்பகையாயுள்ளவன் அதுவாயிலாகவந்து தனித்தவழிக் கொலைசெய்தானோவென் றையங்கொண்டான் என்பார் பிறர்பிறிதாற்கொன்றதோ எனவும், உபாய நான்கனுள் தண்டங் கொடிதாதலால் என்றாழ்வுகெட எனவுங்கூறினான். (கூஉ)

திருநகரின்புறம்பொருசார்குலவணிகத்தெருவின்க
ணொருமனையின்மணமுளதங்கந்தணனோடொருங்குநீ
வருதியுனதுளந்தேறுமாற்றமெலாந்தேற்றுதுமென்
றிருவிசும்பினகடுகிழித்தெழுந்ததாலொருவாக்கு.

(இ-ள்.) திரு நகரின் புறம்பு ஒரு சார் வணிகர் குலம் தெருவின் கண்-இந்த மதுரைமாநகரின் புறம்பே யொருபக்கத்தில் வணிகர்குலத்தெருவில், ஒரு மனையில் மணம் உளது - ஒருவீட்டில் கல்லியாணம் நடக்கின்றது, அங்கு அந்தணன் ஒடு ஒருங்கு நீ வருதி - அங்கு மறையவனோடு ஒருசேர நீவருவாய், உனது உளம் தேறாத மாற்றம் எல்லாம் தேற்றுதும் என்று - உன்மனந்தெளியாத செய்தியையெல்லாம் தெளிவிப்பேமென்று, இரு விசும்பின் அகடு கிழித்து ஒரு வாக்கு எழுந்தது - பெரியஆகாயத்தின் வயிற்றைக் கிழித்து ஒரு அசரீரி எழுந்தது. (௩௩)

திருவாக்குச்செவிமடுத்துச்செழியன்றன்புறங்கடையிற்
பெருவாக்குமறையவனோடொருங்கெய்திப்பெரும்பகல்போய்க்
கருவாக்குமருண்மாலைக்கங்குல்வாய்த்தன்னைவேற்
றுருவாக்கிக்கடிமனைபோயொருசிறைபுக்கினிதிருந்தான்.

(இ-ள்.) செழியன் திரு வாக்கு செவி மடுத்து - பாண்டியன் அந்த அசரீரியைத் தனது செவிநிரம்பக்கேட்டு, தன் புறம் கடையில் பெரு வாக்கு மறையவனோடு ஒருங்கு எய்தி-தனது கடைவாயிலிலுள்ள (சிவபெருமான்) பெருவாக்காகிய வேதத்தையுணர்ந்த அந்தணனோடு ஒருசேர விருந்து, பெரும் பகல் போய் - பெரிய பகற்பொழுது கழிந்து, கருவாக்கும் மருள் மாலை கங்குல் வாய் - கருநிறத்தைப்பெருக்கும் மயங்கும் மாலைக்காலத்தில்வந்த இராப்போதில், தன்னை வேறு உருவாக்கி கடி மனை போய் - தன்னை வேற்றுவடிவஞ்செய்து வணிகத்தெருவிலுள்ள கல்லியாணவீட்டிற்சென்று, ஒரு சிறை புக்கு இனிது இருந்தான் - ஒருபக்கத்தில் மறைந்து புகுந்து இடையூறின்றி யிருந்தான்.

அரசனமையத்தை மாற்றவர்மறைந்தொழுகி நாடித்திரிவாராதலால் தன்னை வேற்றுருவாக்கி என்றார். (௩௪)

அன்றிறைவனருளாலங்கவர்கேட்கவம்மனையின்
மன்றன்மகன்றனக்களந்தநாளுலப்பமறலியிருட்
குன்றமிரண்டெனவிடுத்தகொடும்பாசக்கையினர்வாய்
மென்றுவருஞ்சினத்தவரிலொருவனிதுவினவுமால.

(இ-ள்.) அன்று இறைவன் அருளால் - அக்காலையில் சோமசுந்தரக்கடவுள் திருவருளால், அங்கு அவர் கேட்க - அவ்விடத்திற் பாண்டியனும் மறையவனுங்கேட்கும்படி, அ மனையில் மன்றல் மகன் தனக்கு அளந்த நாள் உலப்ப - அந்தக்கல்லியாணவீட்டில் மணமகனுக்கு வரையறுத்த ஆயுள்நாள்முடிய, மறலி-இயமனானவன், இருள் குன்றம் இரண்டு என்ன விடுத்த - கரிய விரண்டுமலைகளை யேவியதுபோலேவிய, கொடும் பாசம் கையினர் - கொடியபாசத்தை யேந்திய கையினரும், வாய் மென்று வரும் சினத்தவரில்-வாயைமென்றுவரும் கோபமுமுடைய காலபடர்களுள், ஒருவன் இது வினவும் - ஒருவனிது வினவுகின்றான்.

வினைப்பயன் தொலைந்ததென்பார் அளந்தநாளுலப்ப எனவும், கன்றிய கோபமுடையவர் என்பார் வாய் மென்றுவருஞ் சினத்தவர் எனவுங்கூறினார். (௩௫)

இன்றேயிங்கிவனுயிரைத்தருதியொனுமிரும்பகட்டுக்
குன்றேறுங்கோனுரையாற்கொள்வதெவன்பிணியுடம்பி

லொன்றேனுமிலனொருகாரணமின்றியுயிர்கொள்வ
தன்றேயென்செய்துமெனமற்றவனீதறைகிற்பான்.

(இ-ள்.) இன்றே இங்கு இவன் உயிரை தருதிர் என்னும் - இப்பொழுதே இம்மதுரையில் ஒரு குரோசத்துக்கப்பாலுள்ள இம்மணமகனுடைய வுயிரைக் கொடுப்பீர் என்று எவும், இரும் பகடு குனறு ஏறும் கோன் உரையால் கொள்வது எவன் - பெரிய வெருமைக்கடாவாகிய மலையின்மேல் ஏறிவரும் தமது அரசனுடைய அனுஞையால் கவர்வது எவ்வாறு, பிணி உடம்பில் ஒன்றேனும் இலன்-இவனோ நோய் தன்னுடம்பில் சிறிதேனும் இல்லான், ஒரு காரணம் இன்றி உயிர் கொள்வது அன்றே - ஒருகாரணமுமில்லாமலொருவனுயிரைக் கவர்வதல்லவே, என் செய்தும் என - நாம் யாதுசெய்வோமென்றுகூற, மற்றவன - வேறொருபடன், ஈது அறைகிற்பான் - இதனைக் கூறுகின்றான்.

காசியில் சிவசந்நிதிக்கு ஐந்துகுரோசத்துக்கப்பாலும், காளாஸ்திரியில் அவ்வாறும், சிதம்பரத்தில் இரண்டுகாதவழிக்கப்பாலும், மதுரையில் ஒரு குரோசத்துக்கப்பாலும் இயமன் சஞ்சரிக்கக்கூடுமாதலால் ஒரு குரோசத்துக்கப்பால் என்றும்.()

ஆற்றாலேறுண்டகணையருகொதுங்கும்பார்ப்பனியைக்
காற்றால்வீழ்த்தெவ்வாறுகவர்ந்தேமப்படியிந்தச
சாற்றாரவாரத்திற்றாம்பறுத்துப்புறநின்ற
வீற்றாவைவெருளவிடுத்திவனாவிகவர்கென்றான்.

(இ-ள்.) ஆறு ஆல் எறுண்ட கணை - வழியில் நின்ற ஆலமரத்திற் சிக்குண்ட அம்பினை, அருகு ஒதுங்கும் பார்ப்பனியை - அவ்வாலமரத்தின் அருகில் நிழலிற்கொதுங்கிய பாரப்பனப்பெண்ணை, காற்றால் வீழ்த்து எ ஆறு கவர்ந்தேம் - நாம் கொண்ட காற்றுவடிவால் அலைத்து வீழ்தது எப்படி உயிர் கவர்ந்தோம், அப்படி - அப்படியே, புறம் நின்ற ஈற்று ஆவை - புறத்திற் கட்டுண்டுநின்ற ஈற்றுப்பசுவை, இந்த சாறு ஆர வாரத்தில் தாம்பு அறுத்து - இந்தக்கல்லியாண ஆரவாரத்திஞல் சிக்கெனக்கட்டிய தாம்பினையறுத்து, வெருள விடுத்து இவன் ஆவி கவாக என்றான் - அது வெருண்டோடத் துரத்தி இவனுடைய உயிரைக் கொள்ளை கொள்ளக்கடவோமென்று கூறினன்.

காற்றுக் காலபடர்வழியா மியங்குதலின்மையால் நாம்கொண்ட காற்றுவடிவால் எனப் பொருள்கூறினும். (௩௭)

அந்தமொழிகேட்டரசனருமறையோய்கேட்டனையோ
விந்தமொழியெனப்பனவனிவனிவ்வாறிறந்தாலென்
பைந்தொடியாளிறந்ததுமப்படியேயென்மனக்கவலை
சிந்தவிதுகாண்பேனென்றொருங்கிருந்தான்றென்னனொடும்.

(இ-ள்.) அரசன் அந்த மொழி கேட்டு - பாண்டியன் யமபடர் தம்முட்கூறிய அந்தவார்த்தையைக்கேட்டு, அரு மறையோய் இந்த மொழி கேட்டனையோ என - அரியவேதங்களையுணர்ந்த வந்தணனே யிந்தவார்த்தையைக் கேட்டாயா வென்றுகூற, பனவன் இவன் இவ்வாறு இறந்தால் - கேட்டவந்தணன் இந்த மணமகன் இந்த வகையால் செத்தால், என் பைந்தொடியாள் இறந்ததும் அப்படியே - என் மனைவி செத்ததுவுமவ்வகையே, என் மனம் கவலை சிந்த இது காண்பேன் என்று - என்ம

ணவருத்தங்கெட இக்காட்சியையும் நான் காண்பேனென்றுகூறி, தென்னன் ஓடும் ஒருங்கு இருந்தான் - பாண்டியனோடும் அவ்விடத்திலொருசேரவிருந்தான்.

அசரீரியி னுண்மையை யறியானாதலால் என் மனக்கவலைசிந்த விதுகாண்பேன் என்றான். (௩௮)

ஓட்டியபல்கிளை துவன்றியொல்லொலிமங்கலந்தொடங்கக்
கொட்டியபல்லியமுழங்கக்குழுமியவோசையின்வெருண்டு
கட்டியதாம்பிறப்புனிற்றுக்கற்றாவொன்றெதிர்ந்தோடி
முட்டியதான்மணமகனைமுடிந்ததாலவனாவி.

(இ-ள்.) ஓட்டிய பல் கிளை துவன்றி ஒல்லொலி மங்கலம் தொடங்க - விடாது தொடர்ந்துவந்த பலசுற்றத்தாரும் தம்முள் நெருங்கி ஒல்லென்னுமொலியோடு மங்கலச்செயல்களை ஒருபால் தொடங்கவும், கொட்டியபல் இயம் முழங்க-தாக்கிய பலவாச்சியங்கள் ஒருபால்முழங்கவும், குழுமிய ஓசையின் வெருண்டு - (இவ்வாறு) ஒருசேரத்திரண்ட வோசையால் பயந்து, கட்டிய தாம்பு இற - பிணித்தகயிறு அற, புனிறு கன்று ஆ ஒன்று எதிர்ந்து ஓடி மணமகனை முட்டியது - இளமையையுடைய கன்றையுடைய பசுவொன்று எதிர்ந்துசென்றோடி மணமகனை முட்டியது, அவன் ஆவி முடிந்தது - அம்மணமகன் பிராணன் ஒழிந்தது.

என்றுங் கேட்டறியாத முழக்கமாதலால் குழுமிய வோசையின் வெருண்டு என்றார். (௩௯)

மணமகனேபிணமகனாய்மணப்பறையேபிணப்பறையா
யணியிழையார்வாழ்த்தொலிபோயழுகையொலியாய்க்கழியக்
கணமதனிற்பிறந்திறுமிக்காயத்தின்வரும்பயனை
யுணர்வுடையார்பெறுவருணர்வொன்றுமிலார்க்கொன்றுமிலை.

(இ-ள்.) மண மகனே பிண மகனாய் - மணமகனே உயிர்கழிந்த பிணமாய் மணப்பறையே பிணப்பறை ஆய் - மணத்திற்குரிய வாச்சியமே சாக்காட்டுப்பறையாய், அணி இழை யார் வாழ்த்தொலி போய் - அணிந்த வாபரணங்களையுடைய சுபமங்கலிகள் வாழ்த்தொலி கழிந்து, அழுகை ஒலி ஆய் கழிய - அந்த மணமனை முற்றும் அழுகை யொலி யாய் முடிய, கணம் அதனில் பிறந்து இறும் இக்காயத்தின் வரும் பயனை-ஒருகணப்பொழுதில் (நீரிற்குமிழிபோற்) றோன்றி அழியும் இந்தச் சரீரத்தால்வரு பிரயோசனத்தை, உணர்வு உடையார் பெறுவர் - அறிவுடையவர் அடைவார், உணர்வு ஒன்றும் இல்லார்க்கு ஒன்றும் இல்லை - அறிவுசிறிதும் இல்லார்க்குச் சிறிதும் பெறுதலில்லை.

கணமதனிற் பிறந்திறுமிக்காயம் என்றமையால் நீரிற் குமிழிபோற் றோன்றியழியும் என்றும். "மன்றங்கறங்க மணப்பறையாயின - அன்றவர்க்காங்கே பிணப்பறையாய்ப்-பின்றையொலித்தலு முண்டாமென்று" என்ற மூதுரையை இது புதுக்கியதாதலால் அதனிற் கூறியபொருளை இங்கு விரித்தும் "உய்ந்துபோமாறே-வலிக்குமாமாண்டார்மனம்" என்பதின பொருள்தோன்ற இக்காயத்தின் வரும்பயனை உணர்வுடையார்பெறுவருணர் வொன்றுமிலார்க்கொன்றுமிலை என்பதனால் விரித்துங் கூறினார். உயிர்கழிந்த வுடம்பைப் "படுமகன்கிடக்கைகாணூஉ" என்றாற்போலப் பிணமகனாய் என்றார். (௪௦)

கண்டானந்தணனென்னகாரியஞ்செய்தேனெனத்தன்
வண்டார்பூங்குழன்மனைவிமாட்சியினுங்கழிதுன்பங்
கொண்டான்மற்றவனொடுந்தன்கோயில்புகுந்தலர்வேப்பந்
தண்டாரானமைச்சர்க்கும்பிறர்க்குமிதுசாற்றினான்.

(இ-ள்.) அந்தணன் கண்டான் - மறையவன் பார்த்தான், என்னகாரியம் செய்தேன் என்ன - நானென்ன காரியஞ்செய்து முடித்தேனென்று, தன் வண்டு ஆர் பூங்குழல் மனைவி மாட்சியினும் - தனது வண்டுகள் மொய்த்த மலரையணிந்த கூந்தலையுடைய மனைவிமாண்டதிலும், கழி துன்பம் கொண்டான் - மிக்க துன்பத்தையடைந்தான், அலர் வேப்பம் தண் தாரான் - வேப்பமலரால் ஆகிய தண்ணிய மாலையையணிந்த பாண்டியன், மற்று அவன் ஒடும் தன் கோயில் புகுந்து - அக்கவலைகொண்ட அந்தணனோடுந் தனது கோயிலுட்சென்று, அமைச்சர்க்கும் பிறர்க்கும் இது சாற்றினான் - மந்திரிகளுக்கும் அவரொழிந்த ஏனையோர்க்கும் இந்த வியப்பினையெடுத்துக் கூறினான்.

மாட்சி - மாட்சியென்னுந் தொழிற்பெயரின் முதனிலை மாள் ஆதலால் - மாண்டதிலும் என்று பொருள் கூறினும். ஒன்று முணராத வேடனுக்குத் தான் பெருந்துன்புறுத்தியது பேரபராதமாதலால் மனைவிமாட்சியினுங்கழி துன்பங்கொண்டான் என்றார். (சக)

மறையவனையின்னுமொருமணமுடித்துக்கோடியென
நிறையவரும்பொருளீந்துநீபோதியெனவிடுத்துச்
சிறையழுவத்திடைக்கிடந்தசெடித்தலையவிடிக்குரல
கறையுடல்வேடனைத்தொடுத்தகால்யாப்புக்கழல்வித்து.

(இ-ள்.) மறை யவனை இன்னும் ஒரு மணம் முடித்துக் கோடி என - அந்தணனைநோக்கி யின்னுமொரு விவாகத்தை முடித்துக்கொள்வாய் என்று, அருமபொருள் நிறைய ஈந்து - அரியபொருளை நிறையத்தந்து, நீ போதி என விடுத்து - நீ போவாய் என்று விடைகொடுத்து, சிறை அழு வத்து இடை கிடந்த - சிறைக்கூடமாகிய கொடியநிலத்தில் அழுந்திக்கிடந்த, செடி தலைய விடி குரல - முடை நாற்றம்பொருந்திய தலையையுடைய இடிபோன்ற குரலையுடைய, கறை உடல் வேடனை - கரியசரீரத்தையுடைய வேட்டுவனை, தொடுத்தகால் யாப்பு கழல் வித்து - பூட்டிய கால் விலங்கைத்தறித்து.

வேறு பலவடுக்கிய தலைய, குரல என்னும் சினையடியாகப் பிறந்த குறிப்பு வினைப் பெயரெச்சங்கள் வேடன் என்னும் பெயரைத் தனித்தனி கொண்டன. கறையுடல் என்பது இடைப்பிறவரல். (சஉ)

தெளியாதேயாமிழைத்ததீத்தண்டம்பொறுத்தியென
விளியாவின்னருள்சுரந்துவேண்டுவனநனிநல்கி
யளியானுமனத்தரசனவனையவனிடைச்செலுத்திக்
களியானைவிழவெய்தகௌரியனைப்போய்ப்பணிவான்.

(இ-ள்.) யாம் தெளியாதே இழைத்த தீதண்டம் பொறுத்தி யென - யாம் அறியாமற்செய்த கொடுந்தண்டத்தைப் பொறுப்பாய் என்று, விளியா இன் அருள் சுரந்து - அருகில்அழைத்து இனியவருள்செய்து, வேண்டுவன நனி நல்கி - அவன் வே

ண்டுவனவற்றை நிரமபத்தந்து, அளி ஆனத மனத்து அரசன் - தண்ணளிநீங்காத மனத்தையுடைய பாண்டியன், அவனை அவன் இடை செலுத்தி-அந்தவேடனை அவனிருக்குமிடத்திற் செலுத்தி - களியானைவிழ எய்த கௌரியனை போய் பணிவான்-சமணரேவிய மதமயக்கத்தையுடைய யானைபட அம்புதொட்ட சௌந்தரபாண்டியராகிய சோமசுந்தரக்கடவுளைத் திருக்கோயிலுட்சென்று வணங்குவான்.

மநுநீதி கோடாத அரசனாதலால் அளியாரு மனத்தரசன் எனவும், அத்தண்ணளியுடையோ னாதலால் யாமிழைத்த நீத்தண்டம் பொறுத்தியென இன்சொற்கூறியும், அவனுக்குத் தீத்தண்டத்தால் வந்தகவலையாற வேண்டுவன கொடுத்தலால் கனி நல்கி எனவும், இவற்றாற் சாமதானோபாயங்கள் பயனாதலை தோன்ற அவனை யவனிடைச் செலுத்தியெனவுங் கூறினார். (௪௩.)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

ஆதரம்பெருகப்பாவியேன்பொருட்டெம்மடிகணீரரும்பழியஞ்சு
நாதராயிருந்தீரெந்தையார்க்குண்டோநான்செயத்தக்கதொன்றென்றுக்
காதலிற்புகழ்ந்துபன்முறைபழிச்சிக்கரையின்மாபூசனைசிறப்பித்
தேதமதகற்றியுலகினுக்குயிராயிருந்தனனிறைகுலோத்துங்கன்.

(இ-ள்.) எம் அடிகள் நீர்-எமது அடிகளே நீவிர், ஆதரம் பெருக பாவியேன் பொருட்டு-அன்புமீக்கூரப் பாவியேனாகிய என் நிமித்தமாக, அரும்பழி அஞ்சு நாதர் ஆய் இருந்தீர் - அரியபழி யஞ்சிய நாதராய் இருந்தீர், எந்தை யார்க்கு நான் செயத் தக்கது ஒன்று உண்டோ என்று - என் தந்தையாராகிய தேவரீர்க்கு என்னாற் செய்யத்தக்கது ஒரு கைமாறுளதோவென்று, காதலிலபுகழ்ந்து - பேரன்பால்புகழ்ந்து, பல் முறை பழிச்சி கரையில் மாபூசனை சிறப்பிதது - பலதரம்துதித்து அளவிறந்த மகாபூசனையை ஆதி மறையவர்களால் சிறக்கச்செய்து, உலகினுக்கு ஏதம அது அகற்றி உயிராய்-குடிகளுக்குவரும் ஐந்துகுறறங்களையுமொழித்துத் தானொரு உயிராய், இறை குலோத்துங்கன் இருந்தனன்-அரசனாகிய குலோத்துங்கபாண்டியன் களிகூர்ந்திருந்தான.

பாண்டியன் யாதோர் குற்றமுமில்லாத வேடனைத் தேறாது கடுந்தண்டஞ் செய்தமையால், அவனுக்கு அறியாமையால வரும் அரும்பழியை யஞ்சி யோம்பினமையின் இத்திருவிளையாடலால் அரும்பழி யஞ்சுநாதர் என ஒரு திருப்பெயர் போந்தமையின் அரும்பழி யஞ்சுநாதராயிருந்தீர் எனவும், என்னைப்பழிக்கடலினின்று கரையேற்றிய தேவரீருக்கு என்னாற்செய்யுங் கைம்மாறு சிறிதுமின்மையால் எந்தையார்க்குண்டோ நான் செயத்தக்கதொன்றென்று என அவன் கூற்றாகவும் சிவபிரானு வப்பச்செய்யும் பணி துதித்தலும் பூசனையுமாதலாற் புகழ்ந்து பன்முறை பழிச்சிக் கரையின் மாபூசனை சிறப்பித்து எனவுங் கூறினார். (௪௪)

பழியஞ்சினபடலம் முற்றிற்று.

---

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - கருௗ.

# இருபத்தாறாவது.

# மாபாதகந்தீர்த்தபடலம்.

கலிவிருத்தம்.

வேதநாயகன்வெம்பழியஞ்சிய
நாதனானநலனிதுநல்கிய
தாதையைக்கொலைசெய்ததனயன்மா
பாதகந்தனைத்தீர்த்தமைபாடுவாம்.

(இ-ள்.) வேதம் நாயகன் - வேதங்கட்கிறைவனாகிய சோமசுந்தரக்கடவுள், வெம்பழி அஞ்சிய நாதன் ஆன நலன் இது - அரும்பழிக்கஞ்சிய நாதனாகிய திருவிளையாடலிது, நல்கிய தாதையை கொலை செய்த தனயன் - தன்னைப்பெற்றபிதாவைக் கொலைசெய்த வந்தணனுடைய. மாபாதகந்தனை தீர்த்தமைபாடுவாம் - மகாபாதகத்தைத்தீர்த்த திருவிளையாடலை இனிக்கூறுவாம்.

விதிவிலக்கமைந்த வேதத்துக்கு இறைவனாதலால் வெம்பழியஞ்சிய நாதனானார் என்பார் வேதநாயகன் எனவும், ஏனைத்தலங்களிலொழித்தற்கரிய மாபாதகம் இத்தலத்தி லொழியுமென்பார் மாபாதகந்தனைத் தீர்த்தமை யெனவுங் கூறினார். (க)

விரைசெய்மாலைக்குலோத்துங்கமீனவன்
றிரைசெய்நீர்நிலஞ்செங்கோல்செலத்தனி
யரசுசெய்யுமந்நாளிலவந்தியென்
றுரைசெய்மாநகரானொருபூசுரன்

(இ-ள்.) விரை செய் மாலை குலோத்துங்க மீனவன் - வாசம் வீசும் மலர் மாலையை யணிந்த குலோத்துங்க பாண்டியன், திரை செய் நீர் நிலம் செங்கோல் செல்ல-அலைவீசும் கடல்சூழ்ந்த நிலவுலகமுற்றும் தனது செங்கோல் செல்ல, தனி அரசு செய்யும் அந்நாளில்-ஒப்பில்லா வரசியலை நடாத்துமக்காலையில், அவந்தி என்று உரைசெய்மாநகரான் - அவந்தியென்று கூறும் பெரிய நகரிலுள்ளான், ஒரு பூசுரன் - ஒருவந்தணன். (உ)

வெருவுங்காய்சினமாறியவேதியன்
மருவுங்காதன்மனையெனுமபேரினா
டிருவுங்காமன்றன்றேவியுமண்புனை
யுருவுங்காமுறுமொப்பில்வனப்பினாள்.

(இ-ள்.) வெருவும் காய் சினம் மாறிய வேதியன் - கண்டோர் அஞ்சுங்கடிய கோபம் நீங்கிய அந்த அந்தணனால், காதல் மருவும் மனை என்னும் பேரினாள் - விரும்பப்பட்ட மனைவியென்பவள், திருவும் காமன் தன் தேவியும்-இலட்சுமியும் மன்மதன் மனையாளாகிய இரதியும், மண் புனை உருவும் காமுறும் ஒப்பு இல் வனப்பினாள்-கதையாற்செய்த பதுமையும் தனக்கு ஒப்பில்லாத அழகினையுடையவள்.

தன்புதல்வன் செய்த ஆற்றுதற்கரிய பேரபராதத்தையும் அடக்கியொழுகிய பெருஞ்சாந்த சீலன் என்பார் காய் சினமாறிய வேதியன் எனவும், அவன் எல்லையில்லாத சாந்தகுணம்போல் அவன் மனையாளும் நிலையியற்பொருளும் விரும்பும்

மகாபாதகம் தீர்த்த திருவிளையாடல்.



எல்லையில்லாத அழகுடையவள் என்பார் மண்புனையுருவுங்காமுறும்ஒப்பில்வனப்பினாள் எனவுங் கூறினர் "மண்மாண்புனைபாவையற்று" என்னுந் திருக்குறளுக்குப் பரிமேலழகர் சுதையால் மாட்சிமைப்படப்புனைந்த எனப் பொருள்கூறியிருத்தல் காண்க. (௩)

படியிலோவியப்பாவையொப்பாகிய
வடிவினாளவள்பான்மகனென்றொரு
கொடியபாவிபிறந்துகொலைமுதல்
கடியபாவக்கலன்போல்வளருநாள்.

(இ-ள்.) படியில் ஓவியம் பாவை ஒப்பாகிய வடிவினாள் - நிலவுலகில் சித்திரித்த பதுமையையொத்த வடிவினையுடையவள், அவள் பால்-அவ்வடிவுவாய்ந்த பார்ப்பனியிடத்து, மகன் என்று ஒரு கொடிய பாவி பிறந்து - மகனென்று ஒரு கொடும்பாவிபிறந்து, கொலை முதல் கடிய பாவம் கலன் போல் வளரும் நாள் - கொலைமுதலிய கடும்பாவங்கள் கொள் கலன்போல அவன்வளருங்காலையில்.

கொலை, களவு, கள், காமம், குருத்துரோகம் என்னும் பஞ்சமாபாதகங்கள் என்பார் கொலைமுதல் கடியபாவம் என்றார். (௪)

கோடிகோடியடுஞ்சிலைகோட்டியே
கோடிகோடிகொடுங்கணைபூட்டியே
கோடிகோடிவிகாரமுங்கூட்டியே
கோடிகோடியனங்கரெய்தார்கொலோ.

(இ-ள்.) அடும் சிலை கோடி கோடி கோட்டி - கொல்லும்வில்லை அநேகங்கோடிவளைத்து, கொடுங்கணை கோடி கோடி பூட்டி-கொடியபாணங்களை அநேகங் கோடியவற்றிலேறிட்டு, கோடி கோடி விகாரமும் கூட்டியே - அநேகங்கோடி சுப்பிரயோகமுதலிய விகாரங்களையு மப்பாணங்களோடுசேர்த்து, கோடி கோடி அனங்கர் எய்தார் கொலோ - அநேகங்கோடி மன்மதர்கள் அப்பாதகன்மேற் பிரயோகஞ்செய்தார்களோ (யாம் அறியோம்.)

விகாரங்களாவன - சுப்பிரயோகம், விப்பிரயோகம், சோகம், மோகம், மரணம்; சுப்பிரயோகமாவது - சொல்லுநினைவும் மாறுபடுதல், விப்பிரயோகமாவது - பெருமூச்செறிந்துவருந்துதல், சோகமாவது - வெதும்புதல், உண்பன தெவிட்டல், மோகமாவது - வருந்துதல், சொற்பலபிதற்றல்; மரணமாவது - அயர்த்தல், மயங்கல்; இவைமுறையே தாமரை, மாம்பூ, அசோகு, முல்லை, நீலோற்பலம் என்னும் ஐந்துபாணங்களாலவருவன. (௫)

இளமைச்செவ்வியயாக்கையன்மையல்கூர்
வளமைக்காமமும்வல்வினையுந்நிறைத்
தளைவிட்டீர்த்தலிற்றன்னைவயிற்றிடை
விளைவித்தீன்றவடன்னைவிரும்பினான்

(இ-ள்.) இளமை செவ்விய யாக்கையன்-இளமைப்பருவத்தையுடைய சரீரமுடையபாதகன், மையல்கூர் வளமை காமமும் வல்வினையும்-மயக்கமிக்க குறைவில்லாத காமமும் தீவினையும், நிறை தளைவிட்டு ஈர்த்தலின் - நிறையாகியபாசத்தை

விட்டு இழுத்தலால், தன்னை வயிறு இடை விளைவித்து ஈன்றவள் தன்னை விரும்பி னான் - தன்னைத் தனவயிற்றிலதோன்றச்செய்து பெற்றதாயைவிரும்பினன.
நிறையாவது-காமமும் தீவினையும் தததமவழி யவன்மனத்தை நிறுத்துதல்.

அன்னையென்னுமழிதகையாளகக்
தின்னுயிர்த்துணையுமனக்காவலாய
மன்னுநாணமடமுதனால்வருந
தன்னைநீங்கவிறந்துமொத்தாளரோ.

(இ-ள்.) அன்னை என்னும் அழிதகையாள - தாயென்றுசொல்லப்படும் அழி கறபுடையவள், அகத்து - தனமனத்தில, இன் உயிர் துணையும் - தனது இனிய உயி ர்க்கோர்துணையாயும, மனககாவலாய மன்னும நாணம மடம் முதல நால்வரும- தன்மனததுககோர காவலாயும நிலைபெறற நாணம மடம அச்சம பயிர்ப்பு என்னும் நான்குகாவறகாரரும, தன்னை நீங்கலில தானும ஒத்தாள - தன்னினின்று நீங்குத லால் தானுமதறருடனபட்டாள.

நாணம ஆவது - தனகணவனையன்றி மறறேருவனைககாணவும் நாணல், மடம் ஆவது-தன்கணவனகுணததையன்றி மறறையோர்குணத்தை அறியாமை, அச்சமா வது - ஆமைபோலத் தனகணவனமுன்னன்றி யேனையோர்சாயைதோன்றினும கர சரணாதிகளொடுக்கிப் பதுஙகல, பயிர்ப்பு ஆவது - தனகணவன்சுகத்தையன்றியே னையோர்சுகததை மலத்தைககணடேனுணணுமவணடுபோல அருவருத்தல். (எ)

இன்பமோசிறிதாகுமிதில்வருந்
துன்பமோகரையிலலாதுதொடுகட
லென்பதாருமிவனாலறியவிவ
வன்பதானவினையாலவருந்துவான.

(இ-ள) இன்பமோ சிறிதாகும - காமததாலவரும இன்பமோ அற்பமாகும், இதில் வரும துன்பமோ கரை இலலாத தொடுகடல என்பது - இதனாலவருந்துன்ப மோ கரையில்லாதசமுத்திரமாமெனனுமபழமொழியை, ஆரும இவனால் அறிய-எவ ரும் இவனால் அறிய, இ வன்பு ஆன வினையால வருந்துவான - இந்தககொடியதீவி னையால் வருந்ததொடங்கினன.

வன்பது அது பகுதிபபொருளவிகுதி (அ)

மையனாகமதியைவிழுங்கவக
கையனாயைக்கலந்தொழுகுஞ்செய
லையன்றான்குறிப்பாற்கணடயற்செவிக்
குய்யாவண்ணமுளளத்தடக்கினான்.

(இ-ள்.) மையல் நாகம் - காமமயக்கமென்னும் இராகுவென்னும்பாம்பான து, மதியை விழுங்க - தனது அறிவாகிய சந்திரனைவிழுங்க, அ கையன் - அந்தச் சண்டாளன், ஆயை கலந்து ஒழுகும செயல் - தனதுதாயைப்புணர்ந்து நடக்கும் செய்தியை, ஐயன் தான் குறிப்பால் கண்டு - அவனதுபிதா குறிப்பாலுணர்ந்து, அ யல் செவிக்கு உய்யலாத வண்ணம - பிறர்செவியிலேறுதவண்ணம், உள்ளத்து அட க்கினான் - தனதுமனததிலடக்கியொழுகினன்.

அடிபெயர்த்துவைக்கலாற்றாத மானக்கேடு என்பார் அயற்செவிக்குய்யலா வண்ண முள்ளத்தடக்கினான் என்றார். (க)

வேற்றோர்வைகல்வெளிப்படக்கண்டறந்
சாற்றுநாவினன்வேறொன்றுஞ்சாற்றிலன்
சீற்றமேல்கொடுசெல்வன்கொல்வேனென
வேற்றெழுந்தனனீன்றாளவிலக்குவாள்.

(இ-ள்.) அறம் சாற்று நாவினன - தருமவொழுக்கைவிதந்து கூறும்நாவை யுடையவந்தணன், வேறு ஓர் வைகல் வெளிப்பட கண்டு - (குறிப்பாகவுணர்ந்தது மன்றி) வேறொருதினம் வெளியாகக்கண்டு, வேறொன்றும் சாற்றிலன் - வேறொன் றுங்கூறாது வாளாவிருந்தனன, செல்வன் சீற்றம் மேல் கொடு - (கொடும்பாவியா கிய) புத்திரன்கோபத்தைமேற்கொண்டு, கொல்வேன்என ஏற்று எழுந்தனன் - (பி தாவைக்) கொலைசெய்வேனென்று கொலைமேற்கொண்டு எழுந்தான், ஈன்றாள் வி லக்குவாள் - பெற்றவள்விலக்குகின்றாள்.

தீராப்பாவியென்னும் இழிபுதோன்றச் செல்வன் என்னும் சொல்லாற்றல் படக்கூறினார். (உo)

தாயினின்பநுகர்ந்தனைதந்தையைக்
காயிலென்பெறுவாயெனக்காமுகர்க்
காயிலன்னையிலப்பனிலென்பய
னேயிலின்னருளென்னறமென்னென்றான்.

(இ-ள்.) தாயில் இன்பம் நுகர்ந்தனை - தாயினிடத்து இன்பமநுபவித்தாய், தந்தையை காயில் என்பெறுவாய் என - பிதாவைக்கொன்றால் யாது பயன்பெறு வாய் என்றுகூற, காமுகர்க்கு ஆயில் அன்னையில் அப்பன் இல் பயன் என் - காமிக ளுக்காராய்ந்துபார்க்கில் தாயாற்பயன் என்ன தந்தையாற்பயன் என்ன, நேயில் என் - அன்பால்விளையும்பயன் என்ன, இன் அருளில் என் - இனியசிவகருணையால் விளையும் பயனென்ன, அறத்தில் என என்றான் - தருமத்தால்விளையும் பயனென்ன என்று கூறினான்.

ஏதுப்பொருளில்வந்த இல்லென்னும் ஐந்தனுருபை அருள் அறம் என்பவற் றோடும், என் என்னும் வினாவினைக் குறிப்புமுற்றை அன்னையில் நேயில் என்பவற் றோடும் கூட்டுக. நே-அன்பு. (உக)

மண்டொடுங்கருவிப்படைவன்கையிற்
கொண்டுதாதைகுரவனென்றோர்கிலான்
துண்டமாகத்துணித்தானுய்வாய்முகந்
துண்டகாமநறவாலுணர்விலான்.

(இ-ள்.) மண் தொடும் கருவி படை-மண்வெட்டுங்கருவியை, வன் கையில் கொண்டு - தனது முருட்டுக்கையிற்கொண்டு, தாதை குரவன் என்று ஓர்கிலான்- தனதுபிதாவை ஐந்துகுரவருள் ஒருகுரவனென் றுணராது, ஆய் வாய் முகந்து உண் ட காமநறவால் உணர்வு இல்லான் - தனதுதாயின்வாயில் முகந்துண்ட காமமென் னுமதுவால் அறிவிழந்தபாவி, துண்டமாக துணித்தான் - துண்டுபடவெட்டினான்.

ஐங்குரவராவார் - அரசன், உபாத்தியாயன், பிதா, தமையன், ஆசாரியன். இவர்கட்குத் தவறுசெய்தல் மாபாதகம் என்பார். தாதை குரவனென்றோர்கிலான் என்றார். "ஐங்குரவராணைமறுத்தலும்" எனப்பிறர்கூறுதல்காண்க. (கஉ)

மைக்கருங்கங்குல்வாய்க்கொன்றதாதைக்குத்
தக்கதீத்தவிசிட்டன்னைதன்னொடுங்
கைக்கடங்குபொருளொடுங்கன்னெறி
புக்கனன்புடைசூழ்ந்தார்புளிஞரே.

(இ-ள்.) மைக்கரும் கங்குல்வாய்-மைபோலும் கருநிறம்வாய்ந்தஇராப்போதில், கொன்றதாதைக்கு - தன்னால்கொல்லப்பட்ட பிதாவுக்கு, தக்கதீ தவிசு இட்டு-(அவ்விராப்போதிலேயே) பொருந்திய தீக்கடன்முடித்து, அன்னை தன் ஒடும் கைக்கு அடங்கு பொருளொடும் - தனதுதாயோடும் தான்சுமத்தற்கமைந்த திரவியத்தோடும், கல் நெறி புக்கனன் - பாலைவழியாகச்சென்றனன். புளிஞர் புடைசூழ்ந்தார் - ஆறலைக்கும்வேடர் அவன்புறத்தில்வந்து சூழ்ந்தார்கள்.

பருக்கைக்கல்நெருங்கியநிலம் பாலையாதலால் கன்னெறியென்பதற்குப் பாலைவழியாக என்றும். (கங)

எய்யுங்கோறொடுவில்லரிடிக்குநேர்
செய்யுஞ்சொல்லினர்செல்லலைநில்லெனக்
கையிலுள்ளவுங்கைக்கொண்டுகாரிகைத்
தையறன்னையுந்தாங்கொடுபோயினார்.

(இ-ள்.) எய்யும் கோல்தொடு வில்லர் - எய்யுமம்பினை யேறிட்டவில்லையும், இடிக்கு நேர்செய்யும் சொல்லினர் - இடியையொத்த சொல்லையுமுடையவராகி, செல்லலை நில் என - செல்லுதல் ஒழிக என்றதட்டி, கையில் உள்ளவும் கைக்கொண்டு - அவன்கையிலுள்ள பொருள்முற்றும் கொள்ளைகொண்டு, காரிகை தையல் தன்னையும் தாம் கொடுபோயினார் - அவனன்னையாகிய பார்ப்பனியையும் தாம் கவர்ந்துசென்றார்கள்.

ஐ விகுதி-வியங்கோட்பொருட்டாதலால் செல்லலை எதிர்மறை வியங்கோள் வினைமுற்று காரிகை தையல் ஒருபொருட்கிளவி. (கச)

சென்றுசேணிடைச்சிக்கறவாழலா
மென்றவெண்ணமொன்றெய்தியவண்ணமோ
ன்றொன்றுநாமெண்ணத்தெய்வமொன்றெண்ணிய
தென்றவார்த்தையிவனிடைப்பட்டதால்.

(இ-ள்.) சேண் இடை சென்று-தூரநாட்டிற் சென்று, சிக்கு அற வாழலாம் என்ற எண்ணம் ஒன்று - சிக்கில்லாமல் வாழலாமென்று மாபாதகன்கருதிய வெண்ணமொன்று, எய்தியவண்ணம் ஒன்று - அவனுக்கிடையில்வந்தவகையொன்று, (ஆதலால்) நாம் ஒன்று எண்ண தெய்வம் ஒன்று எண்ணியது என்றவார்த்தை-நாமொன்றுகருதத் தெய்வமொன்றுகருதியதென்றபழமொழி, இவன் இடைபட்டது-இந்த மகாபாதகனிடத்திற் புலப்பட்டது.

தொடங்கியவொருபொருளைமுடித்தற்கு உலகவழக்கைவிதந்து கூறினமையால் வேற்றுப்பொருள்வைப்பணி. (கரு)

தாதைதன்றனையற்கினியார் துணை
மாதர்யாயைமறவர்கைக்கொள்ளவிப்
போதுதான்றுணையென்பவன்போன்றுமா
பாதகத்துருவாய்வந்துபற்றினான்.

(இ-ள்.) தாதை தன் தனையற்கு துணை இனியார் - (தன்மகனால் வெட்டுப்பட்ட)அந்தணன்தனதுபுத்திரனுக்குத்துணையினியார், மாதர் யாயை மறவர்கைக்கொள்ள-(துணையாய் இருந்த) அழகிய அவனதுதாயை ஆறலைக்கும் வேடர்கைக்கொள்ளுதலால், இ போதுதான் துணை என்பவன் போன்று-துணை இழந்தவிக்காலையில் தானேதுணை என்று தொடர்ந்தவனையொத்து, மாபாதகத்து உருவாய் வந்து பற்றினான்-அவன்செய்த பிரமபாவத்தால் பிரமகத்திசாயையாய் அவனைவந்துபிடித்தாள்.

யாய்தாய் இதுபுணர்ச்சியில் விகாரமாய் யகரங்கெட்டு ஆய் எனவும் வழங்கும்.

ஆவவென்னுமழுஞ்சிவதாவென்னும்
பாவம்பாவம்பழியிதுவோவைய
கோவெனுங்கைகுலைத்தெறியுங்நிழற்
பாவைபோலவிடாதுபின்பற்றுமால்.

(இ-ள்.) ஆவ என்னும் - அய்யோவென்று அலறும், அழும் - அழாநிற்கும், சிவதா என்னும் - நீ எனக்கபயமென்று கூறும், பழி இதுவோ பாவம் பாவம் - பிரமகத்தியாகிய விதுவோ பெரும்பாவம், ஐயகோ என்னும் - ஐயகோவென்று முறையிடும், கை குலைத்து எறியும்-கையசைத்து நிலத்தில் மோதும், நிழல் பாவைபோல விடாது பின்பற்றும் - அவனது தேகசாயையைப்போலச் சிறிதும் விடாது பின்பற்றிச்செல்லும். (கஎ)

வேறு.

நல்லதீர்த்தஞ்சிவதலநலோர்பக்கமுஞ்
செல்லவொட்டாதரன்சீர்த்திநாமஞ்செவிப்
புல்லவொட்டாதுளம்புகுதவொட்டாதுநாச
சொல்லவொட்டாதுகண்டுயிலவொட்டாதரோ.

(இ-ள்.) நல்ல தீர்த்தம் சிவதலம் நல்லோர் பக்கமும் செல்ல ஒட்டாது - (இப்பிரமபாவம்கழிய) நல்ல தீர்த்தமாடவும் நல்ல சிவதலம் தரிசிக்கவும் நல்லோர் பக்கஞ்சென்று சேவிக்கவும் (அவன் கருதி அடிபெயர்க்கிலிடையிற்புகுந்து) செல்லவொட்டாது தடுக்கும், அரன் சீர்த்தி நாமம் செவி புல்ல ஒட்டாது - சிவசரிதையும் சிவன் திருநாமமும் (கேட்கப்புகில் செவியிலேறவொட்டாமல்) தடுக்கும், உளம் புகுத ஒட்டாது - (ஒருவாறு கேட்பினும்) அவன் மனத்திலிறங்கவொட்டாமல் தடுக்கும்,நா சொல்லவொட்டாது- (ஒருவாறுஇறங்கினும்) நாச்சொல்லவெழுந்தால் சொல்லவொட்டாமற் றடுக்கும், கண் துயில ஒட்டாது - (அதற்கஞ்சிக்) கண்மூடித் துயிலினும் நித்திரை செய்யவொட்டாமல் தடுக்கும். (கஅ)

சுற்றுமுன்பின்புறச்சூழ்ந்துதன்கொடுக்கிறப்
பற்றிநின்றீர்க்குமாபாதகத்தாலலைந்
தெற்றினிச்செய்வதென்றுற்றலாநிடருழந்
துற்றுவேறுலகெலாமச்சமுற்றுழலுமால்.

(இ-ள்.) சுற்றுமுன் பின்பு உற சூழ்ந்து - எப்பக்கஞ்செல்லினு மப்பக்கத்தில் முன்னும் பின்னும் விடாது சூழ்ந்து, தன் கொடுக்கு இறப்பற்றி நின்று ஈர்க்கும் - (நீயவழியிற்செல்லத) தனது கொய்சகமானது அவிழ்ந்து அலையப்பற்றி நின்று இழுக்காநின்ற, மா பாதகத்தால் அலைந்து - மகாபாதகத்தாலலைந்து திரிந்து, இனி என்று செய்வது என்று ஆற்றலாது - இனி யாதுசெய்வதென்று சிறிதுமாற்றுது, இடர் உழந்து-துன்பத்தில் அவன் வருந்தி, வேறு உலகு எல்லாம் அச்சம் உற்று உழலும்-தன்னைப்பற்றிய பிரமகத்திக்கஞ்சிச் சுழலாநிற்பான். (கக)

உறுகணோயாற்றநாளுற்றுழன்றுலகெலா
மறுகவேதிரியுமாபாதகன்வலியெலாஞ்
சிறுகுவான்சிவனருட்செயலினிப்பாதகங்
குறுகுநாள்குறுகுநாள்கூடலைக்குறுகினன்.

(இ-ள்.) ஆற்ற நாள் உறுகண் நோய் உற்று உழன்று - (இவ்வாறு) அநேக நாள் துன்பநோய் அடைந்து சுழன்று, உலகு எல்லாம் மறுகவே திரியும் மாபாதகன் வலி எல்லாம் சிறுகுவான் - உலகில் கண்டோர் எல்லாம் வருந்தத் திரிந்தலையாநின்ற மகாபாதகன் வலிமை முற்றும் தேய்ந்து சிறுகலால், சிவன் அருள் செயல்-சிவபெருமான் திருவருட்செயலால், இனி பாதகம் குறுகுநாள் குறுகுநாள் கூடலை குறுகினன் - இனிப் பாதகங்குறுகி யொழியுநாள் வருங்காலையில் மதுரையை யடைந்தான்.

குறுகல் என்றதில் முன்னது குறைதல் மேலும் பின்னது அடைதல் மேலும் நின்றன. சிறுகுவான் காரணப்பொருளில்வந்த எதிர்காலவினையெச்சம். (உ0)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அழிதகன்குறுகுவான்முன்னங்கயற்கண்ணிதந்தக்
குழையிருகாதுங்கோத்தக்கொலைகெழுபுலிப்பற்றாலி
நுழைமயிர்நெடுநாண்பின்னனோன்பிடரலைப்பப்பூண்டோர்
பழிதகையாதவேடப்பாவையாய்ப்படிவங்கொள்ள.

(இ-ள்.) அழிதகன் குறுகுவான் முன் - அழிதகையுடையோன் வருவதற்கு முன், அங்கயற்கண்ணி - அங்கயற்கண்ணியம்மையார், தந்தம குழை இருகாதும் கோத்து - தந்தத்தாலாகிய குண்டலங்களை இரண்டுகாதிலும் நுழைவித்து, கொலை கெழு புலி பல் தாலி நுழை - கொலைத்தொழிலில் மேம்பட்ட புலியின் பல்லாகிய தாலிகோத்த, மயிர் பின்னல் நெடு நாண் - மயிராற்பின்னிய நெடிய மங்கலசூத்திரம், நோன்பிடர் அலைப்ப பூண்டு - வலியபிடரில் அசைந்தலையத்தரித்து, ஓர் பழி தகையாத வேடப்பாவையாய் படிவம் கொள்ள - குலத்திற்குரிய பழித்தொழில் சிறிதுந் தடுத்தலில்லாத ஒரு வேட்டுவப்பெண்ணுப் திருவுருவங்கொள்ள.

வேட்டுவவுருவங்கொள்ளினும் அக்குலத்திற்குரிய கொடுந்தொழில் சிறிதுமில்லையென்பார் பழிதகையாத என்றார். (உக)

கொலையிரும்பழிக்கன்றஞ்சுங்கூடலெம்பெருமான்கொன்றை
மிலையிருங்குஞ்சிவேங்கைமெல்லிணர்க்கண்ணிவேய்ந்து
கலையிருமருப்பிற்கோடிக்காதளவோடுந்தாடி
சிலையிருந்தடக்கைவேடத்திருவுருக்கொண்டுதோன்றி.

(இ-ள்.) கொலை இரும் பழிக்கு அன்று அஞ்சும கூடல் எம்பெருமான் - தைவீகமாய் நேரிட்ட கொலைத்தொழிலால் வந்த பெரும்பழிக்கு அப்பொழுதஞ்சிய எமது பெருமானாராகிய சோமசுந்தரக்கடவுள், கொன்றை மிலை இரும் குஞ்சி வேங்கை மெல் இணர் கண்ணி வேய்ந்து - கொன்றைமலர்மாலையையணிந்த பெரிய சிகையில் வேங்கையினது மெல்லிய பூங்கொத்தாலாகிய மாலையைச்சூடி, கலை இரு மருப்பில் கோடி காதளவு ஓடும் தாடி - கலைமானினது முறுக்கினையுடைய இரண்டு கொம்பின் வளைவுபோல முறுக்குள்ளதாய் வளைந்து காதுமட்டுஞ் சென்ற மீசையையும், சிலை இரும் தடக்கை - வில்லையேந்திய நீண்ட பெரிய கையையுமுடைய, வேடத்திரு உருக்கொண்டு தோன்றி - வேடத்திருவுருவந் தான் கொண்டெழுந்தருளி.

பழிக்கஞ்சிய நாதராதலால் இப்பெருமபாதகத்துக்கும் அஞ்சினார் என்பார் வேடத்திருவுருக்கொண்டு தோன்றி என்றார். (உஉ)

கொண்டல்கண்படுக்குமாடக்கோபுரமருங்கிற்போந்தின்
கண்டகக்கருக்குவாய்குரைக்குநாய் காவிக்காப்பப்
புண்டலைவாளிவில்லோர்புறங்கிடந்திமைப்பத்திங்க
டுண்டவாணுதலாளோடுஞ்சூதுபோராடல்செய்வான்.

(இ-ள்.) கொண்டல் கண் படுக்கும் மாடம் கோபுரம் மருங்கில் - மேகங்கள் கண் துயிலும் மாடங்கள் நெருங்கிய கோபுரவாயிலின் பக்கத்தில், போந்தின் கண்டகம் கருக்குவாய குரைக்கு நாய் காவிகாப்ப - பனையினது முள்வாய்ந்த கருக்கினையொத்த வாயையுடைய குலைக்காநின்ற நாயானது புறத்திற் சிறிதும் நீங்காது ஒருபாற்காத்து நிற்கவும், புண் தலை வாளி வில் ஓர்புறங் கிடந்து இமைப்ப - மாமிசத்தை நுனியிலுடைய அம்பும் வில்லும் ஓர்பால் கிடந்து விளங்கவும், திங்கள் துண்டம் வாள் நுதலாள் ஒடும்-(தம்மைப்போல வேட்டுருவங்கொண்ட) அர்த்தசந்திரனையொத்த நெற்றியையுடைய உமாதேவியாரோடும், சூது போர் ஆடல் செய்வான்-சூதாடலாகிய போர்த்தொழிலைச் செயவாராயினார். (உங)

வெருவருவேழமுண்டவெள்ளில்போல்வறியனாகிப்
பருவரலுடனாங்கெய்துமபாதகன்வரவுநோக்கி
யொருவருமுள்ளத்தாலுமுன்னருங்கொடியபாவி
வருவதுகாண்டியென்னுமாதரைநோக்கிக்கூறும்.

(இ-ள்.) வெருவு அரு வேழம் உண்ட வெள்ளில் போல் வறியன் ஆகி - அச்சமில்லாத யானை யுண்ட விளங்கனிபோலச் சிறிதும் உள்ளீடு இல்லாதவனாகி, பருவரல் உடன் ஆங்கு எய்தும் பாதகன் வரவுநோக்கி - துன்பத்தோடு அவ்விடத்து வரும் மகாபாதகன் வருகையைப் பார்த்து, ஒருவரும உள்ளத்தாலும் உன்னருங் கொடிய பாவி - ஒருவரும் தமது மனத்தாலும் நினைத்தற்கரிய கொடிய மகாபாவி, வருவது காண்டி என்னு மாதரை நோக்கி கூறும் - வருதலைக்காண்பாய் என்று உமாதேவியாரைப் பார்த்துக் கூறுகின்றார்.

யானையுண்ட விளங்கனியென்பது யானை நோய்விழுந்த விளங்கனியென்பதுபொருள், அந்நோய்விழுந்தால் அம்மரக்கனி சிறிதும் உள்ளீடின்றியிருத்தலால்.

அணங்குநோயெவர்க்குஞ்செய்யுமனங்கனலைப்புண்டாவி
யுணங்கினருள்ளஞ்செல்லுமிடனறிந்தோடிச்செல்லா

குணங்குலனொழுக்கங்குன்றல்கொலைபழிபாவம்பாரா
விணங்குமின்னுயிர்க்குமாங்கேயிறுதிவந்துறுவதெண்ணா.

(இ-ள்.) அணங்கு நோய் எவர்க்கும் செய்யும் அனங்கன் ஆல் அலைப்புண்டு - காமநோயையெவர்க்குஞ்செய்யு மன்மதனால் அலைக்கப்பட்டு, ஆவி உணங்கினோர் உள்ளம்-உயிர்சோர்ந்தவர்கள் மனமானவை, செல்லும் இடன் அறிந்து ஓடிச் செல்லா - தாம் செல்லுமிடமறிந்து சென்றுசாரா, குணம் குன்றல் - குணத்தின்குறைபாட்டையும், குலம் குன்றல் - குலத்தின்குறைபாட்டையும், ஒழுக்கம் குன்றல்-ஒழுக்கத்தின்குறைபாட்டையும், கொலை பழி பாவம் பாரா - கொலைத்தொழிலையும் அதனால்விளையும் பழியையும் பாவத்தையும்பாரா, இணங்கும் இன் உயிர்க்கும் ஆங்கே இறுதிவந்து உறுவது எண்ணா - பொருந்தியதமது இனிய உயிர்க்கும் அவ்விடத்தழிவுவருதலைச் சிறிதுங்கருதா.

உள்ளம் என்னும் எழுவாய் செல்லா, பாரா, எண்ணா என்னும் பயனிலைகளைக்கொண்டது. (உரு)

கள்ளுண்டல்காமமென்பகருத்தறைபோக்குச்செய்வ
தெள்ளுண்டகாமம்போலவெண்ணினிற்காணிற்கேட்கிற்
றள்ளுண்டவிடத்தினஞ்சந்தலைக்கொண்டாலென்னவாங்கே
யுள்ளுண்டவுணர்வுபோக்காதுண்டபோதழிக்குங்கள்ளுண்.

(இ-ள்.) கள் உண்டல் காமம் என்ப - கள்ளுண்ணுதலும காமங்கொள்ளுதலும் என்றுசொல்லுமிருதொழிலும், கருத்து அறை போக்கு செய்வது-(உண்டோர் காமங்கொண்டார்) கருத்துகளைபோட்டைசெய்தலுடைமையால் (தம்முளொத்திருப்பினும்) எள் உண்டகாமம்போல - நிந்தித்துவிலக்கப்பட்டகாமத்தைப்போல, எண்ணினில் காணில் கேட்கில் தள்ளுண்ட இடத்தில் - கள்ளானது தனையொருவன்கருதினும் காணினும் தனதுதன்மையைக்கேட்பினும் தாமிருக்குமிடத்திற்செலினும், நஞ்சம் தலைகொண்டால் என்ன - நஞ்சுதலைக்கேறியதுபோல, ஆங்கே - அப்பொழுதே (காமம்போல) உள் உண்ட வுணர்வுபோக்காது - அகத்திலுள்ள அறிவைச்சிதைக்காது, கள் ஊண் உண்டபோது அழிக்கும்-அம்மதுவானது தன்னையுண்டால்மட்டுமறிவைச்சிதைக்கும் (ஆதலால் காமமபெரிது)

ஒருசொற்றன்மைப்பட்டுநின்ற தள்ளுண்டவினைப்பகுதி, இடத்து எதிர்காலத்தின்மேல்நின்ற எச்சவிகுதி, வகரமெய்சந்தி, எண்ணினின், இடதின் என்ற இடங்களில் இன்வேண்டா வழிச்சாரியை. கள்ளையுங் காமத்தையும் ஒருபொருளாக வைத்துப் பின்னர்க் கள்ளைவிலக்கிக் காமத்தை மேம்படக்கூறுதலால் விலக்கியல் வேற்றுமையணி. (உசு)

காமமேகொலைகட்கெல்லாங்காரணங்கண்ணோடாத
காமமேகளவுக்கெல்லாங்காரணங்கூற்றமஞ்சுங்
காமமேகள்ளுண்டற்குங்காரணமாதலாலே
காமமேநரகபூமிகாணியாக்கொடுப்பதென்றான்.

(இ-ள்.) காமமே கொலைகட்கு எல்லாம் காரணம் - காமமேகொலைத்தொழில்களுக்கெல்லாங்காரணமாம், கண்ணோடாத காமமே - தாக்ஷிணியமில்லாதகாமமே, களவுக்கு எல்லாம் காரணம் - களவுகளுக்கெல்லாங்காரணமாம், கூற்றம்

அஞ்சும் காமமே கள் உண்டற்கும் காரணம்-இயமனஞ்சுங்காமமே கள்ளுண்டற்கு ங்காரணமாம், ஆதலால் - ஆகையால், காமமே-காமமொன்றே, நரகபூமி காணியாக்கொடுப்பது எனுரன் - அவைகள்தரும்பயன்கள் எல்லாமொருசேர நரகபூமியையே யுரிமையாகக்கொடுப்பது என்றுகூறினர்.

பஞ்சமாபாதகங்களுள் காமம் பெரும்பாதகம் ஆதலால் பிரிநிலை ஏகாரந்தந்துகூறினர். (உஎ)

கொலைப்பழிகோட்பட்டாங்கேகுறுகியான்முகங்கண்டேட
வலைப்படருழந்துசாம்பியழிவதென்பார்ப்பானென்னக்
கலைப்படுதிங்கள்வேணிக்கானவனருட்கணோக்கந்
தலைப்படச்சிறிதுபாவந்தணிந்துதன்னறிவுதோன்ற.

(இ-ள்.) கொலைபழி கோட்பட்டு ஆங்கேகுறுகியான் முகம் கண்டு - பிதாவைக்கொன்ற பிரமகத்தியால் விழுங்கப்பட்டுத் தம்சன்னிதியில் எதிர்ந்த மகாபாதகனுடையமுகத்தைநோக்கி, ஏட அலைபடர் உழந்து சாம்பி அழிவது என் பார்ப்பான் எனன - ஏடா அலைத்தலையுடைய பெருந்துன்பத்தால் வருந்திச்சோர்ந்து அழிவது யாது பார்ப்பானே என்றுவினவியருள, கலைப்படு திங்கள் வேணி கானவன் அருள் கண் நோக்கம் சிறிது தலைப்பட - ஒருகலைபொருந்திய சந்திரனையணிந்த சடாமுடியையுடைய வேட்டுவவடிவாய்வந்த சோமசுந்தரக்கடவுளுடைய திருவருட்பார்வை சிறிதுதாக்குதலால், பாவம் தணிந்து தன் அறிவுதோன்ற - மகாபாதகங்குறைந்து தன்னியற்கையறிவுதோன்ற.

ஏட என்பது இக்காலத்து ஏண்டா என மருவியது. (உஅ)

முற்பகலிழைத்தபாவமுதிர்ச்சியாற்பிறந்துதந்தை
தற்பகையானவாறுந்தாதையைவதைத்தவாறும்
பிற்பகலந்தப்பாவம்பிடித்தலைத்தெங்குந்தீரா
திப்பதிபுகுந்தவாறுமெடுத்துரைத்திரங்கிநின்றான்.

(இ-ள்.) முன் பகல் இழைத்த பாவமுதிர்ச்சியால பிறந்து - முன்னாள் செய்த பாவமுதிர்ச்சியால் மைந்தனாகப்பிறந்து, தந்தை தற்பகை ஆன ஆறும் - தனது பிதாவிற்குத் தான் பகைவனான வகையையும், தாதையை வதைத்த ஆறும-அதனால் தனது பிதாவைக்கொன்ற வகையையும், பின் பகல் அந்த பாவம் பிடித்து அலைத்து எங்கும் தீராது இப்பதி புகுந்த ஆறும் - பின்னாளில் அந்தப்பாவமானது பிரமகத்தி வடிவாய்ப்பிடித்து வருத்துதலால் எங்கும் தீராமல் இத்தலத்தையடைந்த வகையையும், எடுத்து உரைத்து இரங்கி நின்றான் - எடுத்துச்சொல்லி வருந்திநின்றான்.

தல்பகன் என்னும் வடசொற்றிரிபாகிய தற்பகன் எனப் பாடங்கொள்வாருமுளர். அதற்குத் தந்தை சயனத்திற்குரியவன் எனப் பொருள்கொள்க. (உகூ)

மறப்பெரும்படிவங்கொண்டுமனத்தருள்சுரந்துநின்ற
வறப்பெருங்கருணைமூர்த்தியழிதகையவனைப்பார்த்தித்
திறப்பழியாங்குச்சென்றுமீங்கன்றித்தீராதென்றக்
கறைப்பழிதீரும்வண்ணங்கருதியோருறுதிகூறும்.

(இ-ள்.) பெருமறம் படிவம் கொண்டு - (புறத்தில்) பெரிய பாவத்தொழிலையுடைய வேட்டுவவடிங்கொண்டு, மனத்து அருள் சுரந்து நின்ற அறப்பெரும் கருணை

மூர்த்தி-உள்ளே யருள்கூர்ந்து நின்ற தருமவடிவாயுள்ள பெரிய தயாமூர்த்தி, அழி தகை அவனை பார்த்து - அழிதகைமையையுடைய மகாபாதகனைப்பார்த்து, இ திறம் பழி ஆங்கு சென்றும் ஈங்கு அன்றி தீராது என்று-இந்தப் பெரும்பாதகம் எத்தலத் துச்சென்றாலும் இத்தலத்தன்றித் தீராதென்று கூறி, அக்கறை பழி தீரும் வண்ணம் கருதி ஓர் உறுதி கூறும் - அந்தக் கரிய பெரும்பழி தீரும்படி திருவுளங்கொண்டு ஒ ரு பெரும்பயன் தருவனவற்றை யெடுத்துக் கூறுகின்றார். (௩0)

வருதிநின்னாமஞ்சொன்னோர்வருக்கமுநரகில்வீழக்
கருதிநீசெய்தபாவங்கழிப்பவரெவர்யாநோக்கந்
தருதலாலெளிதிற்றீரச்சாற்றுதுமையங்கையேற்
றொருபொழுதுண்டியீசனுறுதவரேவல்செய்தி.

(இ-ள்.) வருதி - இங்கு வருவாய், நின் நாமம் சொன்னோர் வருக்கமும் நர கில் வீழ - உன்னுடைய பெயரைக் கூறினோர் தம்மட்டன்றி யவரது மரபிலுள்ளோ ரும் நரகில் விழும்படி, நீ கருதிச்செய்த பாவம் கழிப்பவர் எவர் - நீ புத்திபூர்வமா கச் செய்துமுடித்த மாபாதகத்தைத் தொலைப்பவர் யார், யாம் நோக்கம் தருதலால் எளிதில் தீரச் சாற்றுதும் - யாம் திருவருள் நோக்கஞ்செய்தமையால் அப்பாதகம் எளிதிற்றொலையக் கூறுகின்றோம், ஐயம் கை ஏற்று ஒரு பொழுது உண்டி - கையே யுண்கலமாகப் பிச்சைவாங்கி ஒருபொழுதுண்பாய், ஈசன் உறுதவர் ஏவல் செய்தி - சிவபெருமான் விரும்பும் தவவேடத்தையுடைய வடியாரது ஏவலைச்செய்வாய்.

சுத்ததத்துவ புவனத்தில் வசிக்குந் தம்மை யான்மாக்கள் கண்டு பூசனை செய் துய்தலரிதாதலின் எளிதிற்கண்டு பூசனைசெய்துய்ய அடியார் திருவேடத்திலமர்தலா ல் ஈசனுறுதவரேவல் செய்தி என்றார். "தாவரசங்கமங்க ளென்றிரண்டுருவினின் று - மாபரன்பூசைகொண்டு மன்னுயிர்க்கருளைவைப்பன்" எனவும் "அறுதிமலமு த்தனவன்சிவனுயிர்கட்குயிராயகலாதே வினைப்பயன்களருத்திமலமறுப்பன் - மறு தியினுக்கெட்டாதானெனமதித்துத்தம்முண் மனோலயவாழ்வுறவவன்றாள்கண்டவர் தாள்வணங்கி - எனுதியிவரெனவெண்ணியொருபகற்பூசனையை யியற்றினர்களொரு திங்களுறவியற்றினர்கள் - முன்னோதியவாறுழிந்தோர்தாமுற்றியமாபாவமுட்டாம லியற்றினர்கள்விட்டார்தீமுழுதும்" என்ற ஏதுக்களாலுணர்க.

செங்கதிர்க்கடவுள்வானந்தீண்டுமுன்னெழுந்துதீந்தண்
பைங்கதிரறுகுகொய்துபசுக்களையருத்தியார்வம்
பொங்கமுப்போதுங்கோயிற்புறத்தொட்டித்தீர்த்தமாடிச்
சங்கரன்றனைநூற்றெட்டுமெய்வலஞ்சாரச்செய்தி.

(இ-ள்.) செங்கதிர்க் கடவுள் வானம் தீண்டு முன் எழுந்து-சூரியன் உதை யஞ்செய்தற்கு முன்னெழுந்து, தீந் தண் பைங்கதிர் அறுகு கொய்து பசுக்களை அருத்தி - இனிய தண்ணிய பசிய கிரணத்தையுடைய அறுகினைக்கொய்து பசுக்க ளை (வணங்கி) உண்பிப்பாய், ஆர்வம் பொங்க முப்போதும் கோயில் புறத்தொட் டி தீர்த்தம் ஆடி-அன்புமூளக் காலை யுச்சிமாலை என்னு முப்பொழுதிலும் திருக்கோ யிலின் புறத்துள்ள தீர்த்தத்தொட்டியிலுள்ள தீர்த்தமாடி, சங்கரன் தன்னை நூற்றெ ட்டு மெய் வலம் சார செய்தி - சிவபெருமானை நூற்றெட்டுத்தரம் அங்கபிரதக்ஷி ணம் பொருந்தச்செய்வாய்.

பசுக்களைப் பிரதக்ஷிணஞ்செய்து வணங்கிப் புல்லருந்துவோர் இருவினைத் தளைகழன்று சிவபுரத்தில் தமது சுற்றத்தாரோடு வசித்தலால் அறுகுகொய்து பசுக்களை யருத்தியெனவும், திருக்கோயிற் புறத்தொட்டித்தீர்த்தம் கங்காதீர்த்தமாதலால் கோயிற்புறத்தொட்டித் தீர்த்தமாடியெனவும், தாம் ஆன்மாக்களுய்யத் திருக்கோயிலுள் திருமேனிகொண்டமர்ந்தருளுதலால் சங்கரன்றனை நூற்றெட்டு மெய் வலஞ்சாரச் செய்தியெனவுங் கூறினார். "வலஞ்செய்தாக்களைவாழ்த்திவணங்கியே- நலஞ்செய்தார் புல்லுணாவிற்கொடுத்துடல் - விலங்கைவிட்டுவிமலன்புரத்துளே - யிலங்கிச்சுற்றத்தொடுமிருப்பார்களே" எனவும் மேற்காட்டிய "தாபரசங்கமங்கள்" என்ற எதுக்களாலும் அறிக. (கூ௨)

இத்தவநெறியினின்றாலிப்பழிகழியுமென்னச்
சித்தவன்புடையவேடத்திருவுருக்கொண்டகொன்றைக்
கொத்தவனுரைத்தான்கேட்டுக்கொடிச்சியாயிருந்தவம்மை
மத்தவன்கரித்தோல்போர்த்தமறவனைவினவுகின்றாள்.

(இ-ள்.) இத்தவ நெறியில் நின்றால் - இந்தத்தவநெறியில் நீ நிற்கில், இப்பழி கழியும் என்ன - இந்த மகாபாதகந் தொலையுமென்று, சித்தம் அன்பு உடைய வேடத் திருவுருகொண்ட கொன்றை கொத்தவன் உரைத்தான் - திரு உளத்தில் ஆன்மகோடிகளிடத்தி லன்புமிக்க வேடத்திருவுருவங்கொண்ட கொன்றையின் பூங்கொத்தினையணிந்த சோமசுந்தரக்கடவுள் கூறியருளினார், கேட்டு கொடிச்சியாய் இருந்த அம்மை - அதனைக் கேட்டருளி வேட்டுவச்சித் திருவுருவங்கொண்ட வங்கயற்கண்ணியம்மையார், மத்தம் வல் கரித்தோல் போர்த்த மறவனை வினவுகின்றாள் - மதமயக்கத்தையுடைய வலிய யானையின் றோற்போர்வையைப் போர்த்தருளிய வேட்டுவத்திருவுருவங்கொண்ட சோமசுந்தரக்கடவுளை வினவி யருளுகின்றார்.

வேட்டுவவடிவுக்கேற்ப இரக்கமில்லாத சிந்தையையுடையவரல்லர் என்பார் சித்தவன்புடைய என்றார். (கூகூ)

ஐயவிக்கொடியோன்செய்தபாவத்துக்களவில்காலம்
வெய்யநாலேழுகோடிநரகிடைவிழ்ந்தானேனு
முய்வகையிலாதபாவியிவனுக்கென்னுய்யுந்தேற்றஞ்
செய்வகையென்றுகேட்பச்செங்கண்மால்விடையோன்செப்பும்.

(இ-ள்.) ஐய இக்கொடியோன் செய்த பாவத்துக்கு அளவில்காலம்-ஐயனே இந்த மாபாதகன் செய்த பெரும்பாதகத்துக்கு எல்லையில்லாத காலங்காறும், வெய்ய நாலேழு கோடி நரகு இடை வீழ்ந்தான் எனும் - கொடிய விருபத்தெட்டுக்கோடி நரகத்தில் வீழ்ந்து அழுந்தினனாயினும், உய்வகை இலாத பாவி - பிழைக்கும் வகையில்லாத மகாபாவி, இவனுக்கு உய்யும் தேற்றம் செய்வகை என் என்றுகேட்ப - இப்படிப்பட்டவனுக்குக் கடைத்தேறும் தேர்ச்சிசெய்யும் வகை யாது என்று வினவ, செம் கண்மால் விடையோன் செப்பும் - செவந்த திருக்கண்களையுடைய திருமாலாகிய விடபவூர்தியையுடைய பெருமானார் கூறுகின்றார். (கூச)

அடுபழியஞ்சாநீசராயினுநினைக்கினச்சம்
படுபழியஞ்சான்செய்தபாதகத்தொடக்குண்டெய்கும்
விடுவதையின்றிவேறுகளைகணுமின்றிவீயக்
கடவனைக்காப்பதன்றோகாப்பென்றான்கருணைமூர்த்தி.

(இ-ள்.) அடுபழி யஞ்சா நீசர் ஆயினும் - கொல்லும் பழித்தொழிலுக்குச் சிறிதுமஞ்சாத நீசராயிருப்பினும், நினைக்கின் அச்சம் படுபழி அஞ்சான் செய்த பாதகத்தொடக்கு உண்டு - நினைக்கினும் அவர்களுக்கும் அச்சமுறுத்தும் பழிக்கஞ்சானுகிச்செய்த மாபாதகத்திற் கட்டுண்டு, எங்கும் விடுவது இன்றி உம் வேறு களைகண் இன்றி உம் வீய கடவனை காப்பது அன்றோ - எத்தலத்திற்செல்லினும் அப்பாதகம் தன்னை விடுதலில்லாமலும் வேறு பற்றுக்கோடு இல்லாமலும் அழியக்கடவோனைப் பாதுகாப்பதல்லவா, கருணை மூர்த்தி காப்பு என்ருன் - கிருபாமூர்த்தியாகிய சோமசுந்தரக்கடவுள் பாதுகாப்பு என்று கூறியருளினர்.

களைகண் என்பதனிறுதியிலுள்ள உம்மையைப்பிரித்து இன்றியென்பதனேடு கூட்டிப் பொருள்கொள்க. (ருரு)

நெய்தற்போதனையவுண்கணேரிழைநீயாதொன்று
செய்தற்குஞ்செய்யாமைக்கும்வேருென்றுசெயற்குமாற்றன்
மெய்தக்ககருணைவள்ளல்வேண்டினெவ்வினைஞரேனு
முய்தக்கோராதல்செய்கையுன்னருள்விளையாட்டன்றே.

(இ-ள்.) நெய்தல் போது அனைய உண் கண் நேரிழை - குவளைமலரையொத்த மையெழுதிய கண்களையுடைய வங்கயற்கண்ணியார், நீ யாது ஒன்று செய்தற்கும் செய்யாமைக்கும் - நீ யாதொரு கருமத்தைச் செய்தற்கும் அதனைச் செய்யாமைக்கும், வேறு ஒன்று செயற்கும் ஆற்றல் மெய் தக்க கருணை வள்ளல் - அதைவிட்டு மற்றொன்று செய்தற்கும் வன்மையின் உண்மை மிக்க கிருபாவள்ளல், வேண்டின் எவ்வினைஞர் ஏனும் உய்தக்கோர் ஆதல் செய்கை - நீ திருவுள்ளங்கொள்ளில எவ்வகைத் தீத்தொழிலராயினும் பிழைக்கும் வகை யோராகச்செய்கை, உன் அருள் விளையாட்டு அன்றே - உனது திருவருளின் திருவிளையாட்டல்லவா.

ஆன்மாக்களுய்தற்பொருட்டுக்கொண்டருளிய கர்த்தத்துவம், அகர்த்தத்துவம், அந்நியதாகர்த்தத்துவம் என்னு மூன்றிறைமைக்குணங்களுள். அந்நியதாகர்த்தத்துவம் அணுவை மேருவாகவும் மேருவை யணுவாகவும் செய்யுங் கர்த்தத்துவமாதலால் பாதகனைப் புண்ணியவடிவனுகவுஞ் செய்யவல்லீர் என்பார் வேண்டினெவ்வினைஞரேனும் - உய்தக்கோராதல் செய்கையுன்னருள்விளையாட்டன்றே என்று கூறினர். (ருசு)

என்றகமகிழ்ச்சிபொங்கவியம்பினுளியம்பலோடுங்
குன்றகநாட்டவேடக்குழகனுமறைந்துவெள்ளி
மன்றகநிறைந்தான்மேகமறைந்திடமறைந்துசெல்லு
மின்றகவிடாதுபின்போம்விளங்கிழைமடந்தையோடும்.

(இ-ள்.) என்று அகம் மகிழ்ச்சி பொங்க இயம்பினுள் - என்று மனமகிழ்ச்சி மீதூரக்கூறி யருளினர், இயம்பல் ஓடும் - அவ்வாறு கூறியருள, குன்று அகம் நாட்ட வேடக்குழகனும் மறைந்து வெள்ளிமன்று அகம்-மலைநாட்டிலுள்ள வேட்டுவத்திருவுருவங்கொண்ட சோமசுந்தரக்கடவுளுந் திருவுருவங்கரந்து, வெள்ளியம்பலத்தில், மேகம் மறைந்திட மறைந்து செல்லும் மின்தக - மேகம் மறையத்தானும் மறைந்துசெல்லும் மின்னலைப்போல, விடாது பின் போம் விளங்கிழை மடந்தையோடும் நிறைந்தான் - தன்னைவிடாது பின்றொடர்ந்துவரும் விளங்குமாபரணத்தை

யணிந்த வேட்டுவத் திருவுருவங்கொண்ட வங்கயற்கண்ணியாரோடும் நிறைந்தருளினார்.

இது தொழிலுவமையணியாதலால் மேகமறைந்திட மறைந்துசெல்லும் மின்றகவிடாது பின் போமென்றார். (௩௭)

ஆதனுங்கதுகண்டாறுவற்புதமடைந்துகூட
னாதனார்நவின்றவாற்றானன்னெறிவிரதச்செய்கை
மாதவவொழுக்கந்தாங்கிவருமுறைமதியமூன்றிற்
பாதகங்கழிந்துதெய்வப்பார்ப்பனவடிவமானான்.

(இ-ள்.) ஆதன் - அறிவில்லானாகிய அந்தணன், ஆங்கு - அவ்விடத்தில், அதுகண்டு ஆறாத அற்புதம் அடைந்து - தனக்குப் புலப்பட்டு மறைந்தருளியதைக்கண்டு நீங்காத ஆச்சரியத்தையடைந்து, கூடல் நாதனார் நவின்ற ஆறு ஆல் - மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுள் கூறியருளிய முறைமையால், நல் நெறி விரதம் செய்கை மாதவம் ஒழுக்கம் தாங்கி - (சுதியடையும்) நன்னெறிக்கேதுவாகிய நோன்பினையும் பெரிய தவவொழுக்கத்தையு மேற்கொண்டு, வருமுறை - செய்தொழுகுமுறையால், மதியம் மூன்று இல் - மூன்றுமாதத்தில், பாதகம் கழிந்து தெய்வம் பார்ப்பன வடிவம் ஆனான்-தனது மகாபாதகத்தினின்று நீங்கித் தெய்வத்தன்மையையுடைய முன்னுள்ள பார்ப்பன வடிவமாயினான்.

ஐயங்கையேற்றொருபொழுதுண்டலும் பசுக்களுக்குப் புல்லருத்துதலும் நோன்பாதலாலும், ஈசனுறுதவரேவல்செய்தலும் கோயிற்புறத்தொட்டித் தீர்த்தமாடுதலும் மாதவமாதலாலும் நன்னெறிவிரதச்செய்கை மாதவவொழுக்கம் எனவும், நீசத்தன்மையொழிந்தமையால் தெய்வப்பார்ப்பன வடிவமானான் எனவுங்கூறினார்.

சொற்பதங்கடந்தவெந்தைச்சுந்தரநாதன்றாளிற்
பற்பலவடசொன்மாலைபத்தியிற்றொடுத்துச்சாத்தித்
தற்பரவறிவானந்தத்தனியுருவுடையசோதி
பொற்பதமருங்கிற்புக்கான்புண்ணியமறையோனம்மா.

(இ-ள்.) சொல் பதம் கடந்த எந்தை சுந்தரநாதன் தாளில் - சொல்லளவையைக்கடந்த வெனது பிதாவாகிய சோமசுந்தரக்கடவுளின் திருவடியில், பல் பல வட சொல் மாலை பத்தியில் தொடுத்து சாத்தி-பற்பல வடசொற்களாகிய மலர்களாகிய மாலையைப் பத்திபடத்தொடுத்துச்சாத்தி, தற்பரம் அறிவு ஆனந்தம் தனி உருவுடைய சோதி-உண்மையறிவானந்தமென்னு மொப்பில்லாத திருவுருவத்தையுடைய சோமசுந்தரக்கடவுளுடைய, பொன் பதம் மருங்கில் புண்ணிய மறையோன் புக்கான் - பொன்போலுமரிய திருவடிநிழற் சார்பில் (திருவருள்நோக்கால் மகாபாதம் தொலைந்து) சிவபுண்ணிய வடிவான அந்தணன் அடைந்தான்.

சிவபெருமான் அருளிய சிவபுண்ணியவழியில் நின்றமையால் புண்ணியமறையோன் என்றார். அறிவு ஆனந்தம் என்றமையால் தத்பரம் என்னும் வடமொழித்திரிபாகிய தற்பரம் என்னுஞ் சொற்கு உண்மையென்றும். (௩௮)

அன்னையைப்புணர்ந்துதாதைகுரவனுமந்தணாளன்
றன்னையுங்கொன்றபாவந்தணித்துவீடளித்ததென்றாற்

பின்னைநீரிழிநோய்குட்டம்பெருவயிறீளைவெப்பென்
றின்னநோய்தீர்க்குந்தீர்த்தமென்பதோவிதற்குமேன்மை.

(இ-ள்.) அன்னையை புணர்ந்து - தாயைப்புணர்ந்து (அதுமட்டும் அமையாது,) தாதை குரவனும் அந்தணன் தன்னையும் கொன்ற பாவம்தணித்து - தனக்குப் பிதாவும் குருவுமாகிய மறையவனைக் கொலைசெய்த பாவத்தைத்தொலைத்து, வீடு அளித்தது என்றால் - (அத்திருத்தொட்டித் தீர்த்தம்) மோக்ஷத்தையுந் தந்ததென்று சொன்னால், பின்னை நீர் இழி நோய் குட்டம் பெருவயிறு ஈளை வெப்பு என்று - பின்பு நீரிழிநோய் குட்டநோய் பெரியவயிற்றுநோய் இருமல் சுரம என்று சொல்லப்பட்ட, இன்ன நோய் தீர்க்கும் தீர்த்தம் என்பதோ இதற்கு மேன்மை - இவைபோன்ற நோய்களையுந்தீர்க்கும் தீர்த்தமென்று கூறுவதோ இந்தத் தீர்த்தத்திற்கோர் மேம்பாடு (இல்லை யென்றபடி.)

ஈளை ஒருவித இருமல். (சு0)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

அழிந்தவேதியன்மாபாதகந்தீர்த்ததறிந்துவேந்தமைச்சருருள்ளா
ரொழிந்தபாருள்ளார்வானுளார்வியப்பமுற்றுநல்லுரையுணர்வெல்லாங்
கழிந்தபேரருளிக்கயவன்மேல்வைத்தகாரணம்யாதெனக்கண்ணீர்
வழிந்துநான்மாடக்கூடனாயகனைவழுத்தினர்மகிழ்ச்சியுட்டிளைத்தார்.

(இ-ள்.) அழிந்த வேதியன்மாபாதகம் தீர்த்தது அறிந்து - வேதியத்தன்மையழிந்தவனுடைய மாபாதகத்தைத் தீர்த்தருளியதை யுணர்ந்து, வேந்து அமைச்சர் ஊர் உள்ளார் ஒழிந்தபார் உள்ளார் வான் உள்ளார் முற்றும் வியப்ப - அரசனும் மந்திரிகளும் மதுரையிலுள்ளவர்களும் ஏனைநாட்டிலுள்ளவர்களும் விண்ணுலகிலுள்ளவர்களும் ஒருசேர அதிசயிப்ப, நல் உரை உணர்வு எல்லாம் கழிந்த பேர் அருள் - நல்லசொல்லளவைக்கும் அவ்வளவையால் உணரும் உணர்ச்சிக்கும் அப்பாற்பட்ட பெரிய திருவருளை, இக்கயவன்மேல்வைத்த காரணம் யாது என - இந்தப் பாதகன்மேல் வைத்தருளிய காரணம் யாதோவென்று, கண் நீர்வழிந்து நான்மாடக்கூடல் நாயகனை வழுத்தினர் - ஆனந்தக்கண்ணீர்வார நான்மாடக்கூடலில் எழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளைத் துதித்தார்கள், மகிழ்ச்சியுள் திளைத்தார் - இன்பக்கடலுள் அழுந்தினார்கள்.

எந்தக் கழுவாயாலும் ஒழித்தற்கரிய மகாபாதகத்தை ஒழிக்கப், பக்குவர்க்கருளு மனவாக்கிறந்த திருவருளை அந்த அந்தணன்மேல் வைத்தற்குத் தமக்குக்காரணம் புலப்படாமையால் யாவரும் பரவசத்தராயினர் என்பார் வழுத்தினர் மகிழ்ச்சியுட்டிளைத்தார் என்றார். வழிந்து செயவெனெச்சத்திரிபு. (சுக)

மாபாதகந்தீர்த்தபடலம் முற்றிற்று.

---

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம - கருஎசு.



அங்கம்வெட்டின திருவிளையாடல்.

# இருபத்தேழாவது.

# அங்கம்வெட்டின படலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

வேதகந்தரித்தமுக்கண்வேதியன்மறையோன்செய்த
பாதகந்தவிர்த்தவாறுபகர்ந்தனம்விஞ்சையீந்த
போதகன்மனைக்குத்தீங்குபுந்திமுன்னாகச்செய்த
சாதகன்றனைப்போராற்றித்தண்டித்ததண்டஞ்சொல்வாம்.

(இ-ள்.) வேதகம் தரித்த முக்கண் வேதியன் - வேதித்தலைக் கைக்கொண்டருளிய திரிநேத்திரங்களையுடைய சோமசுந்தரக்கடவுள், மறையோன் செய்தபாதகம் தவிர்த்த ஆறு பகர்ந்தனம் - அந்தணன்செய்த மகாபாதகத்தைத் தீர்த்தருளிய திருவிளையாடலைக்கூறினேம், விஞ்சை ஈந்த போதகன் மனைக்கு - வாட்போர் கற்பித்த ஆசிரியன் மனைவிக்கு, தீங்கு புந்தி முன் ஆகச்செய்த சாதகன் தன்னை - தீமையைப் புத்திபூர்வமாகச்செய்த மாணாக்கனை, போர் ஆற்றி தண்டித்ததண்டம் சொல்வாம், போர்செய்து ஒறுத்ததண்டமாகிய திருவிளையாடலை இனிக் கூறுவாம்.

வேதகம் என்றது இரதகுளிகை. அது செம்பினையுருக்கித் தன்னோடுகூட்டி வேதித்துப் பொன்னாக்கியும் தான் பொன்னியல்பைக் காட்டாது தன்னுளடக்கி நிற்கும் வகைபோல, தான் பசுக்களை யவ்வாறுசெய்தும் அவற்றினியல்பு சிறிதுந் தோன்றாது அறிவுதன்றாநிற்கும் வண்ணந் தன்வியாபகத்துளடக்கி நிற்றலால் வேதகந் தரித்த என்றார். (௧)

கூர்த்தவெண்கோட்டியானைக்குலோத்துங்கவழுதிஞாலங்
காத்தரசளிக்குநாளிற்கடிமதிலுடுத்தகூடன்
மாத்தனிநகருள்வந்துமறுபுலத்தவனாயாக்கை
மூத்தவனொருவன்வைகிமுனையவாள்பயிற்றிவாழ்வான்.

(இ-ள்.) கூர்த்த வெள் கோடு யானை குலோத்துங்க வழுதி - கூரியவெள்ளியகொம்பினையுடைய யானைச்சேனையையுடைய குலோத்துங்கபாண்டியன், ஞாலம் காத்து அரசு அளிக்கும் நாளில் - நிலவுலகத்தையோம்பி அரசுசெய்து வருங்காலையில், கடி மதில் உடுத்த கூடல் மாதனி நகர் உள் - காவலமைந்த மதில்சூழ்ந்த மதுரையாகிய பெரியவொப்பில்லாத திருநகரத்தில், மறு புலத்தவன் ஆய் யாக்கை மூத்தவன் ஒருவன்வந்து வைகி - அயல்நாட்டில் உள்ளவனாய் மூப்பால்முதிர்ந்த சரீரத்தையுடைய ஒருவிஞ்சையன் வந்து குடியேறி, முனைய வாள் பயிற்றி வாழ்வான் - கூர்மைவாய்ந்த வாள்வித்தையைக் கற்பித்து வாழ்வானாயினான். (௨)

வாள்வினைக்குரவனன்னான்வல்லமண்விடுத்தவேழந்
தோள்வினைவலியாலட்டசுந்தரவிடங்கன்றன்னை
யாள்வினையன்புதானும்வைகலுமடைந்துதாழ்ந்து
மூள்வினைவலியைவெல்லுமுதறிவுடையனம்மா.

(இ-ள்.) வாள் வினை குரவன் அன்னான் - வாள்வித்தையைக் கற்பிக்கும் ஆசிரியனாகிய அம்முதியோன், வல் அமண் விடுத்த வேழம் - வலியசமணர் ஏவிய யானையை, தோள் வினை வலியால் அட்ட சுந்தரவிடங்கன் தன்னை - தமது திருத்

தோளின் போர்த்தொழிலின் வன்மையால் வென்றருளிய சோமசுந்தரக்கடவுளை, ஆள்வினையும் அன்பும் தானும் ஆக-சிவபணிவிடையும் சிவநேயமும் தானுமாக, வைகலும் அடைந்து தாழ்ந்து-நாள்தோறும் அடைந்து சென்றுவணங்கி, மூள் வினை வலியை வெல்லும் மூதறிவு உடையன் - இடையில் ஏறும் ஆகாமிய வினையின்றன்மையை வெல்லும் பேரறிவுடையோன்.

தாருகவனத்து முனிவரேவிய யானையினுங் கொடியதென்பதுதோன்ற, தோள்வினைவலியால் எனவும், பராரத்துவம் புசிக்கச்சே யிடையிலேறும் வினையென்பதுதோன்ற மூள்வினையெனவும், அதனை வெல்லுதற்குச் சாதனமாகிய தாழ்தல் இரங்குவான் பணியறம் என்பதுதோன்ற வைகலுமடைந்து தாழ்ந்து எனவுங் கூறினர்.

கைவினைமறவாள்விஞ்சைக்காவலனவனைத்தாழ்ந்து
தெவ்வினைவெல்வான்கற்குஞ்சிங்கவேறனையார்தம்மு
ளுய்வினையுணராப்பாவிசித்தனென்றொருவனுள்ளா
னவ்வினைநிரம்பக்கற்றானாகலூழ்வலியாலன்னான்.

(இ-ள்.) மறம் வாள் கைவினை விஞ்சை காவலன் அவனை தாழ்ந்து - கொலைத்தொழில்வாய்ந்த வாளேந்திவீசுங் கைத்தொழில் வித்தையில் வல்லோனாகிய முதியோனை வணங்கி, தெவ்வினை வெல்வான் கற்கும் சிங்க ஏறு அனையார் தம்முள் - பகைவர் செய்யும் போர்த்தொழிலை வெல்ல வாள்வித்தை கற்கும் ஆண்சிங்கத்தையொத்த மாணாக்கருள், உய்வினை உணராத பாவி சித்தன் என்று ஒருவன் உள்ளான் - பாபத்தினின்று தப்புதலையறியாத மகாபாவியாகிய சித்தனென்னும் பேரை உடைய ஒருவனுளன், அன்னான் - அச்சித்தன், ஆகலூழ் வலியால் அவ்வினை நிரம்ப கற்றான் - ஆகூழ்வன்மையால் அசிதேனு முதலிய அந்த வித்தைகளைக் குறைவின்றிக் கற்றான்.

அசிதேனு வாளைப்பற்றி வீசுதலில் ஒருவகை. (ச)

மானவாள்விஞ்சையாலேதனைநன்குமதிக்கத்தக்க
தானதோர்செருக்கினாற்றன்னாசிரியற்குமாறாய்த்
தானுமோர்விஞ்சைக்கூடஞ்சமைத்துவாள்பலருங்கற்க
வூனுலாம்படைவல்லானிலூதியமிதப்பக்கொள்வான்.

(இ-ள்.) மானம் வாள் விஞ்சையாலே-மானம்வாய்ந்த வாள்வித்தையாலே, தன்னை நன்கு மதிக்க தக்க தானது ஓர் செருக்கினால் - தன்னைப் பலரும் மெச்சத்தக்கதான இறுமாப்பினால், தானும் தன் ஆசிரியற்கு மாறாய் ஓர் விஞ்சைக் கூடம் சமைத்து - தானும் தன்னாசிரியனுக்கு விருத்தமாய் ஒரு வித்தை கற்பிக்கும் விந்தைக் கூடத்தை ஏற்படுத்தி, வாள் பலரும் கற்க - வாள்வித்தையைப் பலரும் தன்னிடத்தில் வந்து கற்க, ஊன் உலாம் படை வல்லானில் - நிணம்நெருங்கிய ஆயுதவரிசையில் வல்ல தன்னாசிரியனிலும், ஊதியம் மிதப்பக் கொள்வான் - வருவாய் அதிகமாகப் பெறுவான் ஆயினான்.

ஒருத்தனேயிருவர்வாளின் விருத்தியுமொருங்குகொள்ளுங்
கருத்தனாய்விருத்தனூரிற்கழிவதுகருதியன்னான்
வருத்துவாளிளைஞர்தன்பால்வரமனந்திரித்துநாளும்
விருத்தமேசெய்வான்றாயைவிரும்பினேற்கிளையோனன்னான்.

(இ-ள்.) ஒருத்தனே - சித்தன் தானொருவனுமே, இருவர் வாளின் விருத்தியும் - தன்னாசிரியனும் தானும் அடைந்துவரும் வாட்பயிற்சியின் வூதியத்தையும், ஒருங்கு கொள்ளும் கருத்தனாய்-ஒருசேர அடையும் கருத்தையுடையவனாய், விருத்தன் ஊரில் கழிவது கருதி - தன்னாசிரியனாகியமுதியோன் மதுரையினின்றும் தன்னூர்க்குச்செல்லுதலை எண்ணி, அன்னான் வருத்து வாள் இளைஞர் - அம்முதியோன் கற்பிக்கும் வாள்வித்தையைக் கற்கும் இளையர்கள், தன்பால் வர மனந்திரித்து நாளும் விருத்தமே செய்வான் - தன்னிடத்திற் கற்கும்படிவர அவர்கள் மனத்தை வேறுபடுத்தி எந்நாளும் வேறுபாடு செய்யும் சித்தன், தாயை விரும்பினோற்கு இளையோன் அன்னான் - தாயைவிரும்பித் தந்தையைக் கொலைசெய்த மாபாதகனுக்குக் கொடுந்தொழிலாற் சகோதரனை யொத்தவனாயினான்.

வருவாயில்லாது செய்யில் ஊரினின்றுங் கழிவானாதலால் தன்பால்வர மனந்திரித்து நாளும் விருத்தமே செய்வான் எனவும், மகாபாதகத்தில் தாயைவிரும்பிய அந்தணனுக்கு மேற்பட்டாரின்மையால் தாயை விரும்பினோற் கிளையோனன்னான் எனவுங் கூறினார். (சு)

தொடத்தொடப்பொறுக்குந்திண்மைத்தொன்னிலமனையானில்லா
விடத்தவன்றேவிபாற்போயிடனுண்டேயிடனுண்டேயென்
றடுத்தடுத்தஞ்சாதென்றுங்கேட்டுக்கேட்டகல்வானாக
நடைத்தொழிற்பாவையன்னநங்கைவாளாவிருந்தாள்.

(இ-ள்.) தொட தொட பொறுக்கும் திண்மை தொல்நிலம் அனையான்-தோண்டத்தோண்டப் பொறுத்து இடம் கொடுக்கும் திண்ணிய தொன்றுதொட்டுள்ள பூமியைப்பொறுமையில் ஒத்த முதியோன், இல்லாத இடத்து அவன் தேவிபால் போய்- இல்லாத இடத்தில் அவன் மனைவியாகிய மாணிக்கமாலையிடத்துச்சென்று, இடன் உண்டே இடன் உண்டே என்று அடுத்து அடுத்து அஞ்சாது என்றும்கேட்டு கேட்டு அகல்வானாக - சமயமுண்டா சமயமுண்டாவென்று நாள்தோறும அடுத்துச் சிறிதும் அஞ்சாமல் கேட்டுக்கேட்டுப் போக, நடை தொழில் பாவை அன்ன நங்கை வாளா இருந்தாள் - நடக்கும் தொழிலையுடைய ஒரு பதுமையை ஒத்த அம்மாணிக்கமாலை ஒன்றும்பேசாமல் மவுனமாயிருந்தாள்.

தன்னைப் பலகாலும் சித்தன் நிந்தித்தொழுகுதலைக்கேட்டும் பொறுத்திருத்தலால் தொடத்தொடப் பொறுக்குந் திண்மைத்தொன்னிலமனையான் எனவும், உருவத்திற் பதுமையொப்பாதலால் இல்பொருளுவமையணிபட நடைத்தொழிற்பாவையன்ன எனவுங் கூறினார். இடனுண்டே இடனுண்டே, அடுத்தடுத்து, கேட்டுக் கேட்டு பன்மைப்பொருளில்வந்த அடுக்குத்தொடர்கள். "அகழ்வாரைத்தாங்குநிலம் போலத்தம்மை - இகழ்வார்ப்பொறுத்தல்" என்றார். (எ)

பின்னொருபகல்போய்ச்செங்கைபிடித்தனன்வலிப்பத்தள்ளி
வன்னிலைக்கதவநூக்கித்தாழக்கோல்வலித்துமாண்ட
தன்னிலைக்காப்புச்செய்தாடனிமனக்காவல்பூண்டா
ளந்நிலைபிழைத்ததீயோனனங்கத்தீவெதுப்பப்போனான்.

(இ-ள்.) பின் ஒரு பகல் போய் செங்கை பிடித்தனன் வலிப்ப - பின்பு ஒருநாள் சென்று குருபத்தினியின் செவந்த கையைத் தொட்டிழுக்க, தனி மனம் காவல் பூண்டாள்-ஒப்பில்லாத தனது மனத்தைக் கற்புக்கு அரணாகக்கொண்ட மாணிக்

கமாலை, தள்ளி வல் நிலை கதவம் நூக்கி தாழக்கோல் வலித்து - அவனைத்தள்ளி வலி ய நிலையில் பூட்டிய கதவைச்சாத்தித் தாழ்போட்டு, மாண்ட தன் நிலை காப்பு செய்தாள்-மாட்சிமைப்பட்ட தனது கற்பினைக் காத்துக்கொண்டாள், அ நிலை பிழைத்த தீயோன் அனங்கத்தீ வெதுப்ப போனான் - (அதனால்) அப்பொழுது தவறுசெய்த கொடியசித்தன் காமாக்கினி சுட்டு வருத்தச்சென்றான்.

அந்நிலை பிழைத்த என்றதற்கு அச்சமயந்தவறிய எனப் பொருள் கொள்ளுதலும் ஒன்று. மனத்தைப் பொறிவழிப்போக்காதவள் என்பார் தனிமனக்காவல் பூண்டாள் எனவும், புறத்துங்காவல் செய்தாள் என்பார் வன்னிலைக்கதவநூக்கித் தாழகக்கோல்வலித்து எனவுங் கூறினார். (எ)

அறங்கடைநின்றாருள்ளுமாற்றவுங்கடையனாகிப்
புறங்கடைநின்றான்செய்தபுலைமைதன்பதிக்குந்தேற்றாள்
மறந்தவிர்கற்பினாடன்மனம்பொதிந்துயிர்கடோறு
நிறைந்தநான்மாடக்கூடனிமலனைநினைந்துநொந்தாள்.

(இ-ள்.) அறங்கடை நின்றாருள்ளும் ஆற்றவும் கடையனாகி புறங்கடை நின்றான் செய்த புலைமை - பாபத்தில் நின்ற மகாபாதகருள்ளும் மிகவும் கடைப்பட்டவனாகிப் புறம்பாய் நின்ற சித்தன்செய்த நீசத்தன்மையை, மறம் தவிர் கற்பினாள் - அறக்கற்பினை உடைய மாணிக்கமாலை, தன் பதிக்கும் தேற்றாள் மனம் பொதிந்து - தன்னுடைய நாயகனுக்கும் தெரிவியாது தன் மனத்தில் வைத்து, உயிர்கள் தோறும் நிறைந்த நான்மாடக் கூடல் நிமலனை நினைந்து நொந்தாள் - உயிர்கள்தோறும் வியாபித்த மதுரையில் எழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளைச் சிந்தித்து வருந்தினாள்.

உயிர்கட்கறிவிப்போனாதலால் உயிர்கடோறு நிறைந்த எனவும், அவன் முற்றுமுணர்வோனாதலால் நிமலனைநினைந்து எனவும், கற்பு-அறக்கற்பு, மறக்கற்பு என விருவகை. அறக்கற்பு தன்னை வழிபடுவோரைப் பரிக்கிரகிக்குங்கற்பும். மறக்கற்பு தனக்குத் தீங்குசெய்வோரை நிக்கிரகிக்குங் கற்பும் ஆதலால் மறந்தவிர்கற்பினாள் எனவுங் கூறினார். (அ)

தாதகநிறைந்தகொன்றைச்சடையவன்புறம்புசெய்த
பாதகமறுக்குங்கூடற்பகவனெவ்வுயிர்க்குந்தானே
போதகனாகித்தேற்றும்புண்ணியன்புலைஞன்செய்த
தீதகமுணர்ந்துதண்டஞ்செய்வதற்குள்ளங்கொண்டான்.

(இ-ள்.) அகந்தாது நிறைந்த கொன்றை சடையவன் - உள்ளே மகரந்தம் நிறைந்த கொன்றைமாலையையணிந்த சடையையுடையவனும், புறம்பு செய்த பாதகம் அறுக்கும் கூடல் பகவன் - அயல்நாட்டில் செய்த மாபாதகத்தையுந் தொலைத்தருளிய மதுரையில் எழுந்தருளிய பகவனும், எவ்வுயிர்க்கும் தானே போதகனாகி தேற்றும் புண்ணியன் - எவ்வகைப்பட்ட உயிர்களுக்கும் தானே யுணர்த்துவோனாகி உணர்த்தும் புண்ணிய சொரூபியும் ஆகிய சோமசுந்தரக்கடவுள், புலைஞன் செய்த தீது அகம் உணர்ந்து - நீசனாகிய சித்தன் செய்த கொடுமையைத் தனது திருவுளத்தில் அறிந்து, தண்டம் செய்வதற்கு உள்ளங்கொண்டான் - அவனை ஒறுத்தற்குத் திருவுளம் கொண்டருளினார்.

எல்லாவற்றிற்கும் இறைவன் என்பதை யுணர்த்தற்குக் கொன்றைமாலை ஓர் திருவடையாளம் என்பார் தாதகம்நிறைந்த கொன்றைத்தாரினான் எனவும், அவ்வி

றைமைக்குணங்கள் முற்றுமுடையோன் என்பார் ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியமென்னும்]பொருள்மேல் நின்ற பகவன் எனவும், பிரமமே யுயிரொன்றுகூறும் மாயாவாதமறுதலையென்ப ர் எவ்வுயிர்க்குந்தானே போதகனுகித் தேற்றும் புண்ணியனெனவும், எல்லா புண்ணிய தலங்களிலுஞ் சிறந்த தலம் இது என்பார் புறம்புசெய்த பாதகமறுக்குங் கூடல் எனவுங் கூறினர். (௧0)

கோளுடைக்குரவனேபோற்சித்தனைக்குறுகிச்சித்தா
காளையாநீயுஞ்சாலக்கழியமூப்படைந்தயாமும்
வாளமராடிநந்தம்வலிகளுமளந்துகாண்டு
நாளைவாவருதுநாமுநகர்ப்புறத்தொருசாரொன்ருன்.

(இ-ள்.) கோள் உடைய குரவனே போல் சித்தனை குறுகி - வலிமையை உடைய ஆசிரியனைப்போலத் திருஉருவங்கொண்டு சித்தனை அடைந்து, சித்தா - சித்தனே, காளையாம் நீயும் சால கழிய மூப்பு அடைந்த யாமும் - காளைப்பருவத்தை உடைய நீயும் மிக்க முதுமைப்பருவத்தை உடைய நாமும், வாள் அமர் ஆடி - வாட்போர் செய்து, நம் தம் வலிகளும் அளந்து காண்டும் - நமக்குள்ள வலிமைகளையும் வரைசெய்து காண்போம், நகர் புறத்து ஒரு சார் நாளை வா நாமும் வருதும் என்ருன் - நகரின்புறத்து ஒருபக்கத்தில் நாளைக்குப் போர்க்குவா நாமும் வருவோம் என்று கூறி அருளினர். (௧௧)

நாதனுங்குரவன்கூறநன்றெனவுவந்துநாலாம்
பாதகனதற்குநேர்ந்தான்படைக்கலக்குரவன்மீண்டு
போதருமளவில்வையம்புதையிருள்வெள்ளத்தாழ
வாதவன்வையமுந்நீர்வெள்ளத்துளாழ்ந்ததம்மா.

(இ-ள்.) நாதன் ஆம் குரவன் கூற நன்று என உவந்து - இறைவனுகிய ஆசிரியன் கூறியருள ஓம் என்று விரும்பி, நாலாம் பாதகன் அதற்கு நேர்ந்தான் - நான்காம்பாதகமாகிய காமத்திற்கு ஓர் கொள்கலமாகிய சித்தன் அதற்கு உடன்பட்டான், படைக்கலம் குரவன் மீண்டுபோதருமளவில் - ஆயுதங்கள் ஏந்திய ஆசிரியன் திரும்பிவருமளவில், வையம் புதை இருள் வெள்ளத்து ஆழ - நில உலகமானது நிறைந்த அந்தகாரமாகிய வெள்ளத்தில் அழுந்த, ஆதவன் வையம் முந்நீர் வெள்ளத்துள் ஆழ்ந்தது - சூரியனுடைய தேரானது கடலாகிய வெள்ளத்தில் அழுந்தியது.

சூரியன் தேர் கடலிலாழ்தலால் நிலவுலகிருளிலாழ்ந்தது என்றமையால் செம்மொழிச்சிலேடையில் வந்த காரகவேதுவணி. (௧௨)

ஆசினன்குரவற்கின்னுவாற்றினேன்பாவம்போல
மாசிருடணிந்தகங்குல்வலிகெடவடிவாள்விஞ்சைத்
தேசிகனொருவனன்னுன்பிணியுடல்சிதைப்பத்தீட்டுங்
காய்சினவாள்போற்கிழைக்கல்லிடைமுளைத்தான்வெய்யோன்.

(இ-ள்.) ஆசு இல் நன் குரவற்கு இன்னு ஆற்றினேன் பாவம்போல - குற்றமில்லாத தனது நல்ல ஆசிரியனுக்குத் துன்பம் செய்த சித்தனுடைய பாவத்தின் வலிமை கெடுதல்போல, மாசு இருள் திணிந்த கங்குல் வலிகெட - கரிய இருள்மிக்க இரவின் வலிமைகெட, வடிவாள் விஞ்சை தேசிகன் ஒருவன்-வடித்த வாள்வித்தையில்வல்ல ஆசிரியனுகிய முதியோன், அன்னுன் பிணி உடல் சிதைப்ப தீட்டும் காய்

சினம் வாள்போல் - அச்சித்தனுடைய வலிய சரீரத்தை யழிக்கத் தீட்டிய கொல்லு ம் கோபமிக்க வாளைப்போல, வெய்யோன் கீழை கல் இடை முளைத்தான் - சூரியன் உதயகிரியில் உதயம் செய்தான்.

உவமையும் பொருளும் ஒற்றுமையுண்மையால் பொருளின்றொழிலே யுவமைக்கேற்றிப் பாவத்தின் வலிமைகெட என்றும். முன்னது தொழிலும் பின்னது பயனும் ஆதலால் தொழிலும் பண்பும் விரவிவந்த வுவமையணி. (௪௩)

நன்றியைக்கொன்றுதின்றோனாயகனாணைக்கஞ்சும்
வன்றிறலரிமானூர்தித்தெய்வதம்வழிபட்டேத்தி
வென்றிவாள்பரவிக்கச்சுவீக்கிவாள்பலகையேந்திச்
சென்றுவாளுழவன்சொன்னசெருக்களங்குறுகினானே.

(இ-ள்.) நன்றியை கொன்று தின்றோன் - ஆசிரியன் செய்த நன்றியைச் சிதைத்த சித்தன், நாயகன் ஆணைக்கு அஞ்சும் வல் திறல் அரிமான் ஊர்தி தெய்வதம் வழிபட்டு ஏத்தி - சோமசுந்தரக்கடவுளுடைய ஆணைக்கு அஞ்சி வழிபட்டொழுகும் வலிமையையுடைய சிங்கவாகனத்தை உடைய துர்க்கையை வழிபட்டு வணங்கி, வென்றி வாள் பரவி - வெற்றியை உடைய வாளினை வணங்கி, கச்சு வீக்கி வாள் பலகை ஏந்தி சென்று-கச்சினைக்கட்டி வாளையும் கேடகத்தையும் ஏந்திப்போய், வாள் உழவன் சொன்ன செருக்களம் குறுகினான் - வாளையேந்திய தனது ஆசிரியன் வடிவங்கொண்ட சோமசுந்தரக்கடவுள் கூறிய போர்க்களத்தை யடைந்தான்.

செய்நன்றிசிதைத்தோன் பெருஞ்சாதனங்களுடையானாயினும் அவை பலியா என்பார் நாயகனாணைக்கஞ்சும் தெய்வதம் எனக்கூறினார். (௪௪)

மதுகைவாளமர்க்குநென்னல்வந்தறைகூவிப்போன
முதுகடும்புலியேறன்னமுடங்குடற்குரவன்றானு
மதிர்கழல்வீக்கிக்கச்சுமசைத்துவெண்ணீறுஞ்சாத்திக்
கதிர்கொள்வாள்பலகைதாங்கிக்கயவனுக்கெதிரேவந்தான்.

(இ-ள்.) மதுகை வாள் அமர்க்கு - வலிய வாள் ஏந்திச்செய்யும் போர்க்கு, நென்னல் வந்து அறை கூவி போன - நேற்றைப்போதில் வந்து போர்க்கு அழைத்துப்போன, முதுகடும் புலி ஏறு அன்ன முடங்கு உடல் குரவன் தானும் - முதிய கடிய புலியேற்றை ஒத்த கூனிய சரீரத்தை உடைய முதிய ஆசிரியன் வடிவமாகவந்த சோமசுந்தரக்கடவுளும், அதிர் கழல் வீக்கி கச்சும் அசைத்து - ஒலிக்கும் வீரகண்டையைக்கட்டிக் கச்சினையும் அரையிற்கட்டி, வெள் நீறும் சாத்தி - வெள்ளிய திருநீற்றையும் திருநுதலில் புண்டரித்து, கதிர்கொள் வாள் பலகை தாங்கி - ஒளிவீசும் வாளையும் கேடகத்தையும் திருக்கரத்தில் ஏந்தி, கயவனுக்கு எதிரே வந்தான் - கீழ்மகனாகிய சித்தனுக்கு எதிரே போர்க்கு வந்தருளினார். (௪௫)

மடங்கலேறொன்றும்பைங்கணரியொன்றுமலைந்தாலென்ன
முடங்கல்வான்றிங்களொன்றுமுக்கணுநான்குதோளும்
விடங்கலுழ்மிடறுந்தோற்றாவென்றிவாள்விஞ்சைவேந்து
மடங்கலன்றானுநேரிட்டாடமராடல்செய்வார்.

(இ-ள்.) மடங்கல் ஏறு ஒன்றும் பைங்கண் நரி ஒன்றும் மலைந்தால் என்ன-ஆண்சிங்கமொன்றும் பசிய கண்களையுடைய நரி ஒன்றும் தம்முள் போர்செய்தாற்

போல, யான் முட்ங்கல் திங்கள் ஒன்றும் - ஆகாயத்தில் சஞ்சரிக்கும் வளைந்த இளம்பிறை ஒன்றும், முக்கண்ணும் நான்கு தோளும் - திரிநேத்திரங்களும் நான்கு திருத்தோள்களும், விடம் கலுழ் மிடறும் தோற்று வென்றி வாள் விஞ்சை வேந்தும் - விஷம் விளங்கும் திருமிடறும் புலப்படுத்தாது வந்தருளிய வெற்றியை உடைய வாள்வித்தையில் வல்ல அரசாகிய சோமசுந்தரக்கடவுளும், அடங்கலன் தானும் நேரிட்டு - பகைவனாகிய சித்தனும் தம்முள் எதிர்ந்து, ஆடு அமர் ஆடல் செய்வார் - வெற்றியோடு தம்முள் போர்செய்யத் தொடங்கினார்கள். (கசு)

எதிர்ப்பர்பின்பறிவர்நேர்போயெழுந்துவானேறுபோல
வதிர்ப்பர்கேடகத்துட்டாழ்வுற்றடங்குவர்முளைப்பர்வாளை
விதிர்ப்பர்சாரிகைபோய்வீசிவெட்டுவர்விலக்கிமீள்வர்
கொதிப்பர்போய்நகைப்பராண்மைகூறுவர்மாறிநேர்வர்.

(இ-ள்.) எதிர்ப்பர் பின் பறிவர் - ஒருவனை ஒருவர் எதிர்ந்து பின் போவார்கள், நேர் போய் எழுந்து வானேறு போல அதிர்ப்பர் - தம்முள் எழுந்து துள்ளி இடியேறுபோலக்கோஷிப்பார், கேடகத்துள் தாழ் வுற்று அடங்குவர் - கேடகத்துள் மறைந்து அடங்குவார்கள், முளைப்பர் - பின்பு வெளிப்படுவர், வாளை விதிர்ப்பர் - ஏந்தியவாளை யசைப்பர்கள், சாரிகை போய் வீசி வெட்டுவர் - இடசாரி வலசாரியாகச்சென்று வாள்வீசி ஒருவனை ஒருவர் வெட்டுவார்கள், விலக்கி மீள்வர் - அவ்வாள்வெட்டை விலக்கித் திரும்புவார்கள், கொதிப்பர் போய் நகைப்பர் - கோபிப்பார் பின்பு சென்று அட்டகாசம் செய்வார்கள், ஆண்மை கூறுவர் - நெடுமொழி கூறுவார்கள், மாறி நேர்வர் - தம்முள் இடசாரி வலசாரியாக மாறியெதிப்பார்கள். கஎ

வெந்நிடுவார்போற்போவர்வட்டித்துவிளித்துமீள்வர்
கொன்னிடுவாண்மார்பேற்பர்குறிவழிபிழைத்துநிற்ப
ரிந்நிலைநாலைங்கன்னலெல்லைநின்றாடல்செய்தா
ரந்நிலையடுபோர்காண்பாரனைவருங்கேட்கவையன்.

(இ-ள்.) வெந் இடுவார் போல் போவர் - புறங்காட்டிச் செல்வார்போலப் போவார்கள், வட்டித்து விளித்து மீள்வர் - சுழன்றுவந்து ஒருவனை யொருவர் போர்க்கழைத்துத் திரும்புவார்கள், கொன் இடுவாள் மார்பு ஏற்பர் - கூர்மைவாய்ந்த வாள்வெட்டைத் தமது மார்பின்மேல் ஏற்பார்கள், குறி வழி பிழைத்து நிற்பர்- தாம்கொண்ட இலக்கின் நெறியைத்தப்பி நிற்பார்கள், இந்நிலை - இவ்வாறு, நாலைங் கன்னல் எல்லை நின்று ஆடல் செய்தார் - இருபதுநாழிகைகாறும் நின்று போர்செய்தார்கள், அந்நிலை அடு போர் காண்பார் அனைவரும் கேட்க - அப்பொழுது போர்த்தொழிலைக் காணவந்தவர் எவரும்கேட்க, ஐயன் - சோமசுந்தரக்கடவுள்.

வாட்போரிலக்கணங்களாதலால் அவைமுறைபட எதிர்ப்பர் என்பது முதல் குறிவழிபிழைத்து நிற்பர் எனவும், தாம் முநியோன்பொருட்டு வந்தவர் ஆதலால் அவைபலர்க்கும்விளங்க நாலைங்கன்னலெல்லைநின்றாடல்செய்தார் எனவுங்கூறினார்.

குரத்தியைநினைத்தநெஞ்சைக்குறித்துநாநாவைத்தொட்ட
கரத்தினைப்பார்த்தகண்ணைக்காத்தனைகோடியென்றென்
றுரைத்துரைத்தவற்றுக்கெல்லாமுறுமுறைதண்டஞ்செய்து
சிரத்தினைத்தடிந்துவீட்டித்திருவுருமறைந்துநின்றான்.

(இ-ள்.) குரத்தியை நினைத்த நெஞ்சை - ஆசிரியன் மனைவியை விரும்பிக் கருதியமனத்தையும், குறித்து உரை நாவை - குறித்துக் காமமிக்க கழிபடர்கிளவி கூறிய நாவினையும், தொட்ட கரத்தினை - பிடித்தகையையும், பார்த்த கண்ணை - குறித்துப்பார்த்த கண்ணையும், காத்தனை கோடி என்று என்று உரைத்து உரைத்து - இவைகள் எல்லாம் தீத்தொழிலுக் குடன்பட்டமையால் அவைகளைக் காத்துக்கொள்ளாய் காத்துக்கொள்ளாய் என்று அடுத்தடுத்துக்கூறி, அவற்றுக்கு எல்லாம் உறு முறை தண்டம் செய்து-அவ்வவையவங்களுக்கெல்லாம் தருமநூலிற் கூறிய முறைப்படி தண்டித்து, சிரத்தினை தடிந்து வீட்டி திரு உரு மறைந்து நின்றான்-அவனது தலையைப் பின் துண்டித்து வீழ்த்துத் திருவுருமறைந்தருளினார்.

முற்றுமுணர்தற்றன்மையால் யாவுமுணர்ந்தான் என்பார் உரைத்துரைத்து எனவும், தீதொழிலுக்குடன் பட்டனவற்றை யொறுத்தல் அறநூல் முறைஎன்பார் நெஞ்சை, நாவை, கரத்தினை, கண்ணையுறுமுறைதண்டஞ்செய்து எனவும், நிக்கிரகஞ்செய்வதுபோலப் பரிக்கிரகஞ் செய்தார் என்பார் சிரத்தினைத்தடிந்து வீட்டியெனவுங் கூறினார். (கக)

போர்கெழுகளங்கண்டாருட்பொருபடைக்கேள்விச்செல்வர்
வார்கெழுகழற்காலானைக்கண்டிலர்மனையிற்றேடி
யேர்கெழுகற்பினாளையெங்குற்றான்குரவனென்னக்
கூர்கெழுவடிவேற்கண்ணாள்போயினார்கோயிற்கென்றாள்.

(இ-ள்.) போர் கெழு களம் கண்டார் உள் - போர்த்தொழில் நடக்கும் போர்க்களத்துள்பார்த்தவருள், பொரு படை கேள்வி செல்வர் வார் கெழுகழல் காலானை கண்டிலர் - போர்செய்யும் ஆயுதப்பயிற்சிநூலின் ஆராய்ச்சியையுடைய மாணாக்கர்கள் வாரிற்கோத்த வீரகண்டையைக்கட்டிய காலையுடைய தமது ஆசிரியனைக்காணாராகி, மனையில் தேடி - வீட்டிற்குத் தேடிச்சென்று, ஏர் கெழு கற்பினாளை குரவன் எங்கு உற்றான் என்ன-அழகுமிக்க கற்பினையுடைய மாணிக்கமாலையை நோக்கி ஆசிரியர் எங்குச்சென்றார் என்று வினவ, கூர் கெழு வடி வேல் கண்ணாள் கோயிற்கு போயினார் என்றாள் - கூர்மைவாய்ந்த வடித்தவேல்போன்ற கண்களையுடைய அம் மாணிக்கமாலை கோயிற்குச் சென்றார் என்று கூறினாள்.

முதியோன்பாற்கற்ற மாணாக்கர் என்பார் வார்கெழுகழற்காலானைக் கண்டிலர் என்றார். (உ0)

என்றவப்போதேகோயிற்கேகினான்மீண்டான்றேடிச்
சென்றவர்சித்தன்றன்னைசெருக்களத்தடுபோர்செய்து
வென்றனையேபின்னந்தவெங்களத்தெங்குந்தேடி
நின்றனைக்காணாதிங்குநேர்ந்தனம்யாங்களென்றார்.

(இ-ள்.) என்ற அப்போதே - என்றுகூறிய வப்பொழுதே, கோயிற்கு ஏகினான் மீண்டான் - கோயிற்குச்சென்ற முதியோன் தன்வீட்டுக்குத் திரும்பினான், தேடி சென்றவர் சித்தன் தன்னை செருக்களத்து அடு போர் செய்து வென்றனையே - தேடிச்சென்ற மாணாக்கர்கள் சித்தனைப் போர்க்களத்தில் கொலைத்தொழிற்குரிய போர்த்தொழில் செய்து வென்றாயே, பின் அந்த வெம் களத்து எங்கும் தேடி நின்தன்னை காணாது இங்கு யாங்கள் நேர்ந்தனம் என்றார் - பின்பு அந்தப் போர்க்களத்தில் எவ்விடத்தும் தேடிக் காணாமல் இவ்விடத்தில் நாங்கள் தேடிவந்தோமென்றார்கள். (உக)

விளைசெய்தாரவன்யானங்கம்வெட்டினேனல்லேனீங்க
ளுளைசெய்வதெவன்யாரென்போற்சித்தனையுடன்றுமாய்த்து
வளைசெய்தோள்விந்தைக்கீந்தார்மற்றிதுசுற்றும்வைகைத்
திளைசெய்நீர்க்கூடலெந்தைதிருவுளச்செயல்கொலென்றான்.

(இ-ள்.) யான் விளை செய்தா ரவன் அங்கம் வெட்டினேன் அல்லேன் - நான்வாசம்வீசும் மாலையையணிந்த சித்தனுடைய சரீரத்தைத் துண்டித்தேனல்லேன், நீங்கள் உளை செய்வது எவன் - நீங்கள் இவ்வாறு சொல்லுவது யாது; யார் என்போல் சித்தனை உடன்று மாய்த்து வளை செய்தோள் விந்தைக்கு ஈந்தார் - யார் என்னைப்போல வந்து சித்தனைக் கோபித்துக்கொன்று மலையையொத்த அவனது தோளைத்தறித்துத் துர்க்கைக்குக் கொடுத்தவர், இது சுற்றும் திளை செய் நீர் வைகை கூடல் எந்தை திரு உளம் செயல் கொல் என்றான - இச்செயல்சூழ்ந்த அலைவீசும் நீர்மயமாகிய வைகையையுடைய மதுரையில் எழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளுடைய திருவுளச்செயலோ என்று கூறினன்.

சித்தன் தன்னை யிகழ்ந்தொழுகுதலைத் தன்னை யாளாகவுடைய பெருமானார் பொறுத்திலரோவென்று கருதினனாதலால் எந்தை திருவுளச்செயல்கொல் என்றான் எனக் கூறினார். (உஉ)

மட்டித்தகலவைக்கொங்கைமனைவியுஞ்சித்தன்றன்னைக்
கிட்டிப்பல்காலும்வந்துகேட்டதுநெருநல்வாய்வந்
தொட்டித்தன்கையைப்பற்றியீர்த்ததுமுள்ளம்வெந்து
தட்டிப்போய்க்கதவந்தாழிட்டிருந்ததுஞ்சாற்றினாளே.

(இ-ள்.) மட்டித்த கலவை கொங்கை மனைவியும் - பூசிய கலவையையுடைய கொங்கையையுடைய மாணிக்கமாலையும், சித்தன் தன்னை கிட்டி பல் காலும் வந்து கேட்டதும் - சித்தனானவன் தன்னை நெருங்கிப் பலதரமும் வந்து இடமுண்டாவென்றுகேட்டுச்சென்றதும், நெரு நல் வாய் வந்து ஒட்டி தன்கையை பற்றி ஈர்த்ததும் - நேற்றைப்பொழுதுவந்து நெருங்கித் தனதுகையைப்பிடித்து இழுத்ததும், உள்ளம் வெந்து தட்டிப்போய் கதவம் தாழ் இட்டு இருந்ததும் சாற்றினாள் - மனம்வெதும்பி அவனினின்று நீங்கிக் கதவினைத்தாழ்போட்டிருந்ததுங் கூறினாள்.

தனதுள்ளக்கருத்தை வள்ளலுக்கொப்புவித்தவளாதலால் தன்பொருட்டு இறைவர் ஒறுத்தனர் என்று கருதினாள் என்பார் நிகழ்ந்த செய்தி முறைப்படச் சாற்றினாள் என்றார். (உ௩)

அம்மனையருளிச்சொன்னபடியெலாமருளிச்செய்து
தெம்முனையடுவாள்வீரர்சித்தனைமாய்த்தாரீது
மெய்மையாமென்றுகண்டமைந்தரும்விளம்பக்கேட்டா
னெம்மையாளுடையகூடலிறைவிளையாட்டேயென்றான்.

(இ-ள்.) அம்மனை அருளிச் சொன்னபடி எல்லாம் - தமது தாயாகிய மாணிக்கமாலை யார்வாய்மலர்ந்து கூறிய அவையெல்லாம், அருளி செய்து தெவ் முனை அடு வாள் வீரர் சித்தனை மாய்த்தார் - திருவாய்மலர்ந்தருளிப் பகைவர்முனையை மாய்க்கும்வாள் ஏந்திவந்த வீரர்சித்தனைக் கொலைசெய்தார், ஈது மெய்மை யாம் என்று கண்ட மைந்தரும் விளம்பக் கேட்டான் - இதுஉண்மை யாமென்று பார்த்த

தன்மாணுக்கருஞ் சொல்லக்கேட்டமுநியோன், எம்மை ஆள் உடைய கூடல் இறை விளையாட்டே என்றான் - எம்மை யாளாகவுடைய மதுரையிலெழுந்தருளிய சோம சுந்தரககடவுளின் திருவிளையாடலே இது என்று கூறினன்.

ஆசிரியன் மனைவி தாய் ஆதலால் அம்மனையெனவும், மனைவியன்றிக் கண்டு கேட்ட மாணுக்கருங் கூறினமையால் இறந்தது தழீஇய எச்சவும்மை ஈது மைந்தரும் எனவுங்கூறினர். தெவ் முனை நிலைமொழி ஈற்றிலுள்ள வகரமெய் வருமொழி முதலெழுத்தாகத் திரிந்தது. (உச)

கொடியைநேரிடையாளோடுங்கொற்றவாளிளைஞரோடுங்
கடியநான்மாடக்கூடற்கண்ணுதலடிக்கீழ்த்தாழ்ந்து
நெடியநான்முகனுந்தேறநெறியதுசிறியவேழை
யடியனேனளவிற்றேநின்னருள்விளையாடலென்றான்.

(இ-ள்.) கொடியை நேர் இடையாள் ஓடும்-பூங்கொடியை யொத்த இடையையுடைய தனது மனைவியோடும், கொற்றவாள் இளைஞர் ஓடும் - தன்னிடத்தில் வெற்றியையுடைய வாள்பயிலும் மாணுக்கரோடும், கடியநான் மாடக்கூடல் கண்ணுதல் அடிக்கீழ் தாழ்ந்து - காவல்பூண்ட மதுரையில் எழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளின் திருவடிக்கீழ்வணங்கி, நெடியனும் நான்முகனும் தேறநெறியது - திருமாலும் பிரமனும் தெளிந்துணராத நெறியதாகிய, நின் அருள்விளையாடல் - உனது அருள் விளையாட்டு, சிறிய ஏழை அடியனேன் அளவிற்றே - சிறியவேழை யடியேனது அளவினதோ, என்றான் - என்று கூறித்துதித்தான்.

மலச்சிமிழ்ப்புண்டோராதலால் நெடியனுநான்முகனுந்தேற எனவும், சுட்டுணர்விற்கெட்டாததாதலால் நின் அருள்விளையாடல் அடியனேனளவிற்றேயெனவுங்கூறினன். (உடு)

தண்மதிவழிவந்தோனுநகருளார்தாமும்பாதி
விண்மதிமிலைந்தவேணிவிடையவனாடனோக்கிக்
கண்மலர்வெள்ளத்தாழ்ந்துகனைகழலடியிற்றாழ்ந்து
பண்மலர்கீதம்பாடியாடினார்பழிச்சினின்றார்.

(இ-ள்.) தண்மதி வழிவந்தோனும் நகர் உள்ளோர் தாமும் - தண்ணியசந்திரன்மரபில்வந்த குலோத்துங்கபாண்டியனும் மதுராநகரிலுள்ளவரும், பாதி விண்மதி மிலைந்தவேணி விடையவன் ஆடல் நோக்கி - அர்த்தசந்திரனையணிந்த சடாமுடியையுடைய இடபவாகனத்தையுடைய சோமசுந்தரக்கடவுளின் திருவிளையாடலைத்தமது மனத்தில் ஆராய்ந்து கண்ணுற்று, கண்மலர் வெள்ளத்து ஆழ்ந்து - தமது கண்கள்சிந்தும் ஆனந்தக்கண்ணீர்வெள்ளத்திலழுந்தி, கனைகழல் அடியின் தாழ்ந்து - ஒலிக்கும் வீரகண்டைகட்டிய திருவடியினைவணங்கி, பண்மலர் கீதம்பாடி ஆடினார் பழிச்சி நின்றார் - இசைநிறைந்த கீதங்கள்பாடியாடி வணங்கிநின்றார்கள்.

தமது அடியார்க்கெளியார் என்பது இதனால்விளக்கினார் என்னும் ஆரா அன்பால் நகரிலுள்ளார்யாவரும் அவசமாயினர் என்பார் கண்மலர்வெள்ளத்தாழ்ந்து கனைகழலடியிற்றாழ்ந்து-பண்மலர்கீதம்பாடி யாடினார் என்றார். உசு)

அடியவருக்கெளியரிவர்பரதேசிகாவலலொன்றடிவீழ்ந்தேத்தி
வடியயில்வேற்குலோத்துங்கன்மாணிக்கமாலையெனுமனையாளோடுந்
தொடியணிதோண்முதுமகனைக்களிறேற்றி நகரைவலஞ்சூழ்வித்திப்பான்
முடியணிவித்தனந்தகுணபாண்டியற்குத்தன்னிறைமைமுழுதுமீந்தான்.

(இ-ள்.) அடியவருக்கு எளியர் இவர் - அடியவருக்கெளியராகிய இச்சோம சுந்தரக்கடவுள், பரதேசிகாவலர் என்று அடிவீழ்ந்து ஏத்தி - தமக்கோர்களைகணில் லாதவரைக் காத்தலில் வல்லோர் என்று திருவடியில் விழுந்தவணங்கி, வடி அயில் வேல் குலோத்துங்கன் - வடித்த கூரியவேலையேந்திய குலோத்துங்கபாண்டியன், மாணிக்கமாலை என்னும் மனையாள் ஓடும்-மாணிக்கமாலை என்னும் நாமத்தையுடைய அவன்மனைவியோடும், தொடியணிதோள் முதுமகனை களிறு ஏற்றி - வாகுவலைய மணிந்த தோளையுடைய முதுமகனை யானையின்மேலேற்றி, நகர வலம் சூழ்வித்து-மதுரைநகரைப் பிரதக்ஷிணஞ்செய்வித்து, இப்பால்—இப்புறம், அனந்தகுணபாண்டியற்கு முடியணிவித்து தன் இறைமை முழுதும் ஈந்தான் - அனந்தகுணபாண்டியனுக்கு மகுடஞ்சூட்டித் தனது அரசியல்முற்றுங்கொடுத்தான்.

பரதேசி - ஓர் இடத்து நிலையில்லாமல் சஞ்சரிப்போர் மேற்றுதலால், தமக்கோர் களைகணில்லாதவர் என்றும். அரசுள்ளபொழுதேயுள்ள இளவரசு அன்றென்பார் தன்னிறைமைமுற்றுமீந்தான் எனவும். தமக்கெழுந்த ஆராக்காதலால் அம்மையப்பரென அவரைக்கருதி யவர்க்குச்செய்யும் சிறப்பினையவர்கட்குச்செய்தான் என்பார் மாணிக்கமாலையெனு மனையாளோடுந்தொடியணிதோண்முதுமகனைக் களிறேற்றி நகரைவலஞ்சூழ்வித்து எனவுங்கூறினர். (உஎ)

நிலைநிலையாப்பொருளுணர்ந்துபற்றிகந்துகரணமொருநெறியேசெல்லப்
புலனெறிநீத்தருள்வழிபோய்ப்போதமாந்தன்வலியைப்பொத்திநின்ற
மலவலிவிட்டகலவராவுமிழ்ந்தமதிபோல்விளங்கிமாறியாடுந்
தலைவனடிநிழற்பிரியாப்பேரின்பக்கதியடைந்தான்றமிழர்கோமான்.

(இ-ள்.) நிலைநிலையா பொருள் உணர்ந்து - நிலைப்பொருளையும் நிலையில்லாப் பொருளையுமுணர்ந்து, பற்று இகந்து கரணம் ஒருநெறியே செல்ல - இருவகைப்பற்றினின்றும் நீங்கி அந்தக்கரணங்களொருவழிப்பட்டேசெல்ல, புலன் நெறி நீத்து அருள்வழிபோய் - ஐம்புலன்களின் நெறிநின்றுநீங்கித் திருவருள்வழிச்சென்று, போதம் ஆம் தன்வலியை பொத்திநின்ற மலம் வலிவிட்டகல-போதமாகிய தனது வலியை மறைத்துநின்ற ஆணவமலவலிகழன்றொழிய, அரா உமிழ்ந்த மதிபோல் விளங்கி - விழுங்கிய இராகுவென்னும் பாம்புமிழ்ந்த சந்திரனைப்போலவிளங்கி, மாறி ஆடும் தலைவன் அடிநிழல் பிரியாத பேர் இன்பம் கதி-கான்மாறியாடிய சோமசுந்தரக்கடவுளின் திருவடிநிழலாகிய விரவிய பேரின்பந்தருஞ் சிவகதியை, தமிழர்கோமான் அடைந்தான் - குலோத்துங்கபாண்டியன் அடைந்தான்.

சுட்டறிவாலுணரப்படாது திருவருளாலுணரப்படுஞ் சிவம் என்பார் நிலைப்பொருள் எனவும், தோன்றும்பொழுதே யில்லையாய்த்தோன்றி வேறாகும் இந்திரசாலம்போலவும், முற்றும் நிகழாது இடையிலழியுங் கனக்காட்சிபோலவும், ஒரு காரணங்காட்டி யழியும் பேய்த்தேர்போலவும் நிலவுலகவாழ்வும் இந்திரன்முதலியோர் பதவிவாழ்வும் உள்ளன என்பார் நிலையாப்பொருள் எனவும், இதுநித்தியம் இது அநித்தியம் என்னும் மெய்யுணர்வு நிகழ்ந்தவழி யிகபரபோகவிச்சை கழலுதற்கேதுவாகும் யானெனது என்னும் இருவகைப்பற்றுங் கழலும் எனபார் பற்றிகந்து எனவும், இவைகழன்றமையால் தான்செல்லும் திருவருளின்வழித்தாய் உட்கருவிகளாகிய அந்தக்கரணங்களும் புறக்கருவிகளாகிய இந்திரியங்களுந் தத்தமக்குரிய செயல்களையொழிந்துசெல்லும் என்பார் கரணமொருநெறியேசெல்லப்புலனெறிநீத்துஎனவும், அத்திருவருளால் செம்பிற்காளிதம்போல ஆன்மாவோடு விரவி யவ்வான்மபோதத்

தைமறைத்த ஆணவமலவலி அகலும் என்பார் போதமார்தன் வலியைப் பொத்திநின்ற மலவலிவிட்டகல எனவும், அதுகழிந்தவழி அத்திருவருண்ஞானம் விளங்கும் என்பார் அராவுமிழ்ந்தமதிபோல்விளங்கி எனவும், அதனாற் சிவாநுபவம்கூடும் என்பார் மாறியாடுந் தலைவனடிநிழல் பிரியாப் பேரின்பக்கதியடைந்தான் எனவுங் கூறினார். "சென்றுசென்றணுவாய்த்தேய்ந்துதேய்ந்தொன்றாந்திருப்பெருந்துறையுறைசிவனே" எனவரும் உண்மைததிருவாக்கா லுணாக. (உஅ)

அங்கம்வெட்டினபடலம் முற்றிற்று.

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம - கஙOஉ.

## இருபத்தெட்டாவது.

# நாகமெய்தபடலம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

செங்கண்மால்விடைமேல்விடங்கர்செருக்களத்திடைவாளெடுத்
தங்கம்வெட்டியசேவகத்தையறைந்தனந்தமிழ்மாறன்மேற்
சங்கையிட்டமணீசராற்றியதறுகண்வேள்விமுளைத்ததோர்
வெங்கண்வாளரவைத்துணித்துவிளித்தவாறும்விளம்புவாம்.

(இ-ள்.) செம் கண் மால் விடைமேல் விடங்கர் - செவந்த கண்களை திருமால் ஆகிய இடப ஊர்திமேல் ஆரோகணித்தருளிய பேரழகை உடைய சோமசுந்தரக்கடவுள், செருக்களத்து இடைவாளெடுத்து - போர்க்களத்திடத்துவாளேந்தி, அங்கம் வெட்டிய சேவகத்தை அறைந்தனம் - (சித்தனுடைய) உடம்பைத் துண்டுபடுத்திய திருவிளையாடலைக் கூறினோம், தமிழ் மாறன் மேல் - தமிழ்வளர்த்தபாண்டியன்மேல், சங்கை யிட்டு அமண் ஈசர் ஆற்றிய தறுகண் வேள்வி முளைத்தது - பகைகொண்டு சமணராகிய கொடியோர்செய்த நியயாகத்தில் தோன்றிய, ஓர் வெங் கண் வாள் அரவைத் துணித்துவிளித்த ஆறும் விளம்புவாம் - ஒரு கொடிய கண்களை உடைய ஒளிபொருந்திய பாம்பினைத் துண்டுசெய்து கொன்றருளிய திருவிளையாடலையும் இனிக்கூறுவாம்.

முளைத்தது என்னும் வினைமுற்றுப் பெயரொச்சத்தில் வந்தது. (க)

கோதிலாதகுணத்தனந்தகுணப்பெருந்தகைமீனவ
னாதிநாயகனுருவமாகியவைந்தெழுத்தொடுகண்டிவெண்
பூதிசாதனமாவதேபொருளென்றுபத்திமைபூண்டுதன்
றாதையேமுதலாயமன்னவர்தம்மினுந்தலையாயினான்.

(இ-ள்.) கோது இல்லாத குணத்து அனந்த குணப் பெருந்தகை மீனவன் - குற்றமில்லாத குணத்தை உடைய அனந்தகுணன் என்னும் பெருந்தன்மையை உடைய பாண்டியன், ஆதி நாயகன் உருவமாகிய ஐந்தெழுத்தொடு - சோமசுந்தரக் கடவுளுடைய திருவுருவமாகிய ஸ்ரீபஞ்சாட்சரத்தோடு, கண்டி வெண் பூதி சாத



நாகமெய்த திருவிளையாடல்.

ணம் ஆவதே - உருத்திராட்சகண்டிகையும் வெள்ளியவிபூதியும் ஆகிய சிவசாதனமாவதே, பொருளென்று பத்திமை பூண்டு - உண்மைப் பொருளென்று சிவநேயம் பூண்டு, தன் தாதையே முதலாய மன்னவர் தம்மினும் தலையாயினன் - தனது பிதாவே முதலாகிய பாண்டியர்களினும் அப்பத்திமையிற் சிறந்தவனாயினன்.

அனந்தகுணன் என்னும் பெயர்க் காரணத்தாற் குற்றமின்மை விளங்குதலால் கோதிலாத குணத்து எனவும், சிவபெருமான் திருவுருவம் ஸ்ரீபஞ்சாக்கரமாதலால் ஆதிநாயகனுருவமாகிய வைந்தெழுத்தெனவும், இம்மூன்றுஞ் சிவசாதனமாதலால் ஒருமையீறுதந்து சாதனமாவது எனவும், அது முத்திக்கரையை யடைதற்கு ஓர் புணையாதலால் பொருளென்று பத்திமைபூண்டு எனவும், அதனிற் சிறிதும் வழுவாதொழுகினனாதலால் தன்தாதையே முதலாய மன்னவர்தம்மினுந் தலையாயினன் எனவுங்கூறினர். பத்திமை எனக் குணியைக் குணமாகக்கூறியது ஓர்மரபு வழுவமைதி. (உ)

இத்தகைச்சிவசாதனந்தனிலன்புமிக்கவனொழுகலா
லத்தன்மெய்த்திருவைந்தெழுத்தொலியாலுநீறொளியாலுமுட்
பைத்தவல்லிருளும்புறத்திருளுஞ்சிதைந்துபராபரன்
வித்தகத்திருவேடமாயினமீனவன்றிருநாடெலாம்.

(இ-ள்.) இத்தகை சிவ சாதனம் தன்னில் அன்பு மிக்கு அவன் ஒழுகலால் - இத்தன்மையையுடைய சிவசாதனத்தில் அன்புகூர்ந்து அநந்தகுணபாண்டியன் நடத்தலால், அத்தன் மெய் திரு ஐந் தெழுத்து ஒலியாலும் - சிவபெருமானுடைய உண்மை ஆகிய ஸ்ரீபஞ்சாட்சரத்தின் ஓசையாலும், நீறு ஒளியாலும் - திருநீற்றின்விளக்கத்தாலும், உள் பைத்தவல் இருளும் புறத்து இருளும் சிதைந்து - உயிர்களின் அகத்தில் பரந்த வலிய அஞ்ஞான இருளும் புறம்பே உள்ள பூதஇருளும் கெட்டு, மீனவன் திருநாடு எல்லாம் பராபரன் வித்தகம் திருவேடம் ஆயின - அப்பாண்டியனுடைய அழகிய பாண்டிநாடெல்லாம் சிவபெருமானுடைய ஞானப்பெருக்கையுடைய திருவேடமாகப் பொலிந்தன.

ஐந்தெழுத்தொலியால் அகவிருளும் நீற்றொளியால் புறவிருளுஞ் சிதைந்து என முறைநிரனிறையாகக்கொள்க. (௩)

நாயினுங்கடையானமாசுடனள்ளிருட்புரைநெஞ்சரெண்
ணாயிரஞ்சமண்வேடரன்னதறிந்துகொண்டுவெகுண்டழற்
றோயிரும்பெனமானவெங்கனல்சுட்டிடத்தரியார்களாய்
மாயிருந்தமிழ்மாறனைத்தெறவஞ்சவேள்வியியற்றுவார்.

(இ-ள்.) நாயினும் கடையான மாசு உடல் நள் இருள் புரை நெஞ்சர் - நாயினுங்கடைப்பட்ட கரியசரீரத்தை உடைய மிக்க விருளையொத்த மனத்தையுடைய, எண்ணாயிரம் சமண் வேடர் அன்னது அறிந்து கொண்டு வெகுண்டு - எண்ணாயிரம் சமணகுரவர்களும் அதனையறிந்து கோபித்து, அழல் தோய் இரும்பு என மானம் வெங் கனல் சுட்டிட தரியார்கள் ஆய் - நெருப்பிற் காய்ச்சிய இரும்புபோல மானமாகிய கொடியநெருப்புச் சுட்டுவருத்தப் பொறாதவர்களாய், மாயிரும் தமிழ் மாறனைத்தெற - பெரிய தமிழ்வளர்க்கும் பாண்டியனைக் கொலைசெய்ய, வஞ்சம் வேள்வி இயற்றுவார் - ஆபிசாரயாகம் ஒன்றுசெய்யத்தொடங்கினார்கள்.

பொய் யொழுக்கினர் என்பார் சமண் வேடர் எனவும், சிவசாதனப்பேரொளியால் தமது சமயவொளி குன்றியதறிந்தார் என்பார் வெகுண்டழற்றே யிரும்பெனமானவெங்கனல்சுட்டிடத்தரியார்களாய் எனவுங்கூறினார். அறிந்துகொண்டு தற்பொருட்டுப் பொருளில்வந்த வினையெச்சம். (௪)

எல்லைகாதமளந்துசாலையெடுத்தழற்படுகுண்டமுங்
கல்வியாரழலிட்டெழும்புகைகௌவியெண்டிசைகளுமுறச்
செல்லவானவுடுக்களும்பொரியிற்பொரிந்தனசிதறநீண்
டொல்லைதாவிவிசும்புதைவரவோட்டிவெங்கனன்மூட்டினார்.

(இ-ள்.) காதம் எல்லை அளந்து சாலை எடுத்து-ஒருகாத எல்லைகாறும் வரையறுத்துச் சாலைகோலி, அழல் படு குண்டமும் கல்லி - தீவளர்க்கும் யாககுண்டமும் தோண்டி, ஆர் அழல் இட்டு - நிறைந்த தீயை அக்குண்டத்திலிட்டு, எழும் புகை கௌவி எண் திசைகளும் உற செல்ல - அக்குண்டத்தினின்று மெழுந்த புகையானது விடாது பரந்து எட்டுத்திசைகளிலும் பொருந்தச் செல்லவும், வானம் உடுக்களும் பொரியில் பொரிந்தன சிதற - ஆகாயத்திற்பூத்த நக்ஷத்திரங்களும் பொரிபோலப் பொரிந்து சிதறவும், நீண்டு ஒல்லை தாவி விசும்புதை வர - ஓங்கி விரைந்துதாண்டி விண்ணுலகத்தைத் தடவவும், ஓட்டி வெம் கனல் மூட்டினார் - இடைவிடாமல் நின்று யாகாக்கினியை மூளச்செய்தார்கள்.

பொரிந்தன முற்றெச்சம். (௫)

அத்தழன்றெரிகுண்டநின்றுமகன்பிலத்தெழுவானெனப்
பைத்ததுஞ்சிருள்வாயும்வாயிருபாலும்வாலியபகிர்மதிக்
கொத்தடுஞ்சினமொழுகுபற்களுமூழியாரல்விழிகளும்
வைத்தசைந்தொருவெற்புவந்தெனவந்துளானொருதானவன்.

(இ-ள்.) அதழன்று எரி குண்டம் நின்றும் - அந்தக் கொதித்து எரியாநின்ற யாககுண்டத்தினின்றும், அகன் பிலத்து எழுவான் என - இடமகன்றபூதலத்தினின்றெழுவானைப்போலவும், பைத்த துஞ்சு இருள் வாயும் - பரந்த நிலைபெற்ற இருள்நிறைந்தவாயையும், வாய் இரு பாலும்-வாயின் இரண்டு பக்கங்களிலும், வாலிய பகிர் மதி கொத்து அடும் சினம் ஒழுகு பற்களும் - வெள்ளிய அர்த்தசந்திரர்களைவென்ற கோபமிக்க வக்கிரதந்தங்களையும், ஆர் ஊழி அழல் விழிகளும்-நிறைந்த ஊழித்தீச்சிந்துங்கண்களையும், வைத்து அசைந்து ஒரு வெற்பு வந்தால் என்ன - கொண்டு அசைந்து ஒருமலைவந்தால்போலவும், ஒரு தானவன் வந்து உள்ளான் - ஒரு அசுரன் தோன்றினான்.

குண்டம் நின்றும் வந்துளானெனமுடிக்க. நின்றும் ஐந்தாம் வேற்றுமைச் சொல்லுருபு. என என்னும் உவமைவுருபிடைச் சொல்லடியாகப்பிறந்த வினையெச்சத்தினிறுதியில் எண்ணும்மைதொகுத்தல், இது பலபொருளுவமையணி. (௬)

உதித்தசெங்கணரக்கவஞ்சனுருத்தெழுந்தெரிவடவையிற்
கொதித்தடும்பசிதாகமுங்கொடிதாலெனக்கொடியோனைநீர்
விதித்தடும்பணியாதெனக்கெனமீனவன்றன்மதுரையோ
டெதிர்த்தெடுத்துவிழுங்கிவாவெனவேவினருடனேகினான்.

(இ-ள்.) உதித்த செம் கண் அரக்க வஞ்சன் உருத்து எழுந்து - தோன்றிய சிவந்தகண்களையுடைய இராக்ஷதன் கோபித்தெழுந்து, எரி வடவையில் கொதித்து - எரியும் ஊழித்தீயைப்போலப் பொங்கி, அடும் பசி தாகமும் கொடிது என - கொல்லாநின்ற பசியோடு தாகமும் கொடிதாயுள்ளதென்று, கொடியோரை - கொடியசமணர்களை (நோக்கி,) நீர் விதித்திடும் பணி யாது எனக்கு என - நீங்கள்விதிக்கும்பணி எனக்கு யாதென்று வினவ, மீனவன் தன்னை மதுரையோடு எதிர்த்து எடுத்து விழுங்கிவா என ஏவினர் - பாண்டியனை மதுரையோடு எதிர்த்து எடுத்து விழுங்கிவாவென்று ஏவினார்கள், உடன் ஏகினன் - அவ்வசுரன் விரைந்துசென்றான். (எ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பாயுடையவர்விடவிடநாகப்படிவுகொணிசிசரனிலனண்டந்
தோயுடலினனுடல்விடமுறிச்சொரிதுளையெயிறினன்வடவைச்செந்
தீயுடையனவெனவெரிகண்ணன்றிணியிருள்வரைமுழையெனவிண்ட
வாயுடையவனெடுநெறிமுன்னிமழைநுழைவரையெனவருகின்றான்.

(இ-ள். பாயுடை யவர்விட - பாயை யுடையாக உடைய சமணர்கள் ஏவ, விடம் நாகம் படிவுகொள் நிசிசரன் - விஷத்தையுடைய சர்ப்பத்தின்வடிவங்கொண்ட இராக்ஷதன், நிலன் அண்டம் தோய் உடலினன் - நிலவுலகினின்று விண்ணுலகு காறும் அளாவும் சரீரமுடையவனாகி, உடல் விடம ஊறி சொரி துளை எயிறினன் - வருத்தும் விடஞ் சுரந்து சிந்தும் துளைபொருந்திய வக்கிரதந்தங்களை யுடையவனாகி, வடவை செம் தீ உடையன என எரிகண்ணன் - செவந்தவடவாநலமுடையனவென்று சொல்லும்படி தீக்கொப்புளிக்குங் கண்களையுடையவனாகி, திணி இருள் வரை முழை என விண்ட வாய் உடையவன் - திணிந்த விருள்நிறைந்த மலையின் குகையைப் போலப் பிளந்தவாயையுடையவனாகி, நெடு நெறி முன்னி மழை நுழை வரை என வருகின்றான் - நீண்டவழியில் முற்பட்டு மேகங்கள் சஞ்சரிக்கு மலையைப்போலவருகின்றவனாயினான்.

கச்சினன் கழலினன் செச்சைக்கண்ணியன் என்றாற்போல உடலினன், எயிறினன், கண்ணன், உடையவன் என்னுங் குறிப்புவினைமுற்றுகள் வேறுபல அடுக்கிய எச்சங்களாய்த் தனித்தனிவருகின்றான் என்னும் வினைமுற்றின் முதனிலைகொண்டன. (அ)

அரவிறையுறைபிலம்வெளிகாணவரையுடல்புதைபடநிலம்விள்ளா
வருவிழியழலெழவுயிர்கான்முன்வளியுளர்கிளர்வலிவிளிவெய்தப்
பொருசினவிழியெதிர்படுபைங்கூழ்புகையெழவனமனைபொரிபொங்கர்
கருகிடமுதுசினையிறைகொள்ளுங்ககநிரைசிறைசுருள்படவீழ.

(இ-ள்.) அரவு இறை உறை பிலம் வெளி காண - பாம்புகளுக்கு அரசனாகிய ஆதிசேடன்வசிக்கும் பாதலம்பிளவுபடும்படி, வரை உடல் புதை பட - மலைபோன்ற தனது சரீரம்புதைதலால், நிலம் விள்ளா - நிலஉலகம் பிளவுபடவும், வரு விழி அழல் எழ - தீப்பொருந்திய கண்களினின்றுங் கோபாக்கினி யெழும்படி, உயிர் கால் முன் - உயிர்க்கும் பெருமூச்சின்முன், உளர் வளி கிளர் வலி விளிவு எய்த - சஞ்சரிக்குங் காற்றினது விளங்கும் வன்மைகெடவும், பொரு சினம் விழி எதிர் படு பைங் கூழ் புகை எழ - போர்த்தொழிற்குரிய கோபம் மிக்க கண்களுக்கெதிர்ப்பட்ட பசியபயிர்கள் புகைந்துவாடவும், வனம் பொரி அரை பொங்கர் கருகிட -

காடும்பொருக்கைப் பொருந்திய தூறையுடைய மரச்செறிவுகளுங் கருகவும், முது சினை இறை கொளும் ககநிரை சிறை கருள் பட வீழ - பெரிய மரக்கிளைகளில் வசிக்கும் பக்ஷிசாலங்கள் சிறை கருகிச்சுருண்டு நிலத்தின்மீது விழவும்.

விள்ளா செயவெனெச்சத்திரிபு. அளை பொரி இரண்டாம்வேற்றுமைப்பொருள்படச்சொல் பின்னு முன்னுமாகமாறித் தொக்கதொடர். (௯)

அகனிலம்வெருவுறநிலனேந்துமரவிறைவெருவுறவெயில்காலும்
பகன்மதிவெருவுறவிவைகௌவும்பணிகளும்வெருவுறவகறிக்கின்
புகர்மலைவெருவுறவடுதண்டப்புரவலன்வெருவுறவருசெங்கண்
ணகைமதிபுரையெயிறவன்மாடநகரெதிர்குடவயின்வருமெல்லை.

(இ-ள்.) அகல் நிலம் வெருவுற - அகன்ற நிலஉலகம் அஞ்சவும், நிலன் ஏந்தும் அரவு இறை வெருவுற - அந்நிலஉலகைச் சுமக்கும் ஆதிசேடன் அஞ்சவும், வெயில் காலும் பகல் மதி வெருவுற - கிரணத்தைவீசும் சூரியனும் சந்திரனும் அஞ்சவும், இவை கௌவும் பணிகளும் வெருவுற - இச்சூரிய சந்திரர்களைப் பற்றும் இராகு கேதுக்களும் அஞ்சவும், அகல் திக்கின் புகர் மலை வெருவுற - அகன்றதிக்குகளில் உள்ள புள்ளிதங்கிய அட்டபருவதங்கள் அஞ்சவும், அடு தண்டம் புரவலன் வெருவுற - கொல்லாநின்ற தண்டாயுதத்தையேந்திய இயமன் அஞ்சவும், வரு செங்கண் நகை மதி புரை எயிறவன் - வராநின்ற சிவந்தகண்களையும் விளங்கும் அர்த்தசந்திரனைஒத்த பற்களையும்உடைய இராட்சதன், மாடம் நகர் எதிர் குடவயின் வரும் எல்லை - மாடங்கள் நெருங்கிய மதுரைத் திருநகரின்எதிரே மேலைத்திசையை நோக்கிவருங்காலையில். (௧௦)

கண்டவர்கடிநகர்கடிதோடிக்கௌரியனடிதொழுதடிகேணங்
கொண்டல்கண்வளர்மதில்வளைகூடற்குடவயினொருபெருவிடநாக
மண்டமுமகிலமுமொருவாயிட்டயிறரவருவதையெனநீள்வாய்
விண்டுகொண்டணைவதையெனவோடும்வெருவலன்மதிகுலமறவீரன்.

(இ-ள்.) கண்டவர் கடி நகர் கடிது ஓடி - பார்த்தவர்கள் காவல்பூண்ட மதுரைத்திருநகரில் விரைந்துசென்று, கௌரியன் அடி தொழுது - பாண்டியனுடைய பாதங்களைவணங்கி, அடி கேள் - அடிகளே, நம் கொண்டல் கண் வளர் மதில் வளை கூடல் குட வயின் - நமதுமேகங்கள் கண்படுக்கும் மதில்சூழ்ந்த மதுரையின் மேலைத்திசை(நோக்கி,) ஒரு பெரு விடம் நாகம்-ஒருபெரியவிஷத்தையுடைய சர்ப்பமானது, அண்டமும் அகிலமும் ஒருவா யிட்டு அயில் தர வருவது என - அண்டங்களையும் நிலஉலகங்களையும் ஒருவாயிற்போட்டுண்ண வருவதுபோல, நீள் வாய் விண்டு கொண்டு அணைவது எனவோடும் - நீண்டவாய்பிளந்து வருகின்றதென்று கூறவும், மதி குலம் மற வீரன் வெருவலன் - சந்திரன் மரபிற்றோன்றிய பாண்டியன் அது கேட்டுச் சற்றுமஞ்சானாயினான்.

சிவநேயம் பெரிதுமுடையானாகலின் அதுபற்றித் தன்தாதைமுதலியோர்போல அச்சஞ் சிறிதுமிலன்என்பார் மறவீரன் வெருவலன் என்றார். (௧௧)

மற்றிதுமுனமதகரிவிட்டோர்வரவிடவருவதையெனவெண்ணா
முற்றிதுதனையும்விளிதற்கெம்முடையவர்விடையவர்விடநாகஞ்
சுற்றியசடையினருளன்றோச்சுரருலகிழிசுடரொணிற்குங்
கற்றளியிடையுறையிறைமுன்போய்க்கனைகழலடிதொழுதறைகிற்பான்.

(இ-ள்.) இது முன்னம் மத கரி விட்டோர் வர விட வருவது என எண்ணம் உற்று - இந்தச் சர்ப்பம்முன்னே யானையையேவிய சமணர்கள் ஏவவருவது என்று எண்ணங்கொண்டு, இது தனையும் விளித்தற்கு - இச்சர்ப்பத்தையுங் கொல்லுதற்கு, எம்முடையவர் விடையவர்விட நாகமசுற்றிய சடையினர் உளர் என்று - எம்மை யாளாகவுடையவரும் இடபவூர்தியையுடையவரும் விஷமபொருந்திய சர்ப்பஞ்சூழ்ந்த சடையையுடையவருமாகிய சோமசுந்தரக்கடவுள் துணையாயுள்ளாரென்று, சுரர் உலகு இழி சுடர் என நிற்கும் கல் தளி இடை உறை இறை முன் போய் - தேவருலகினின்று மிறங்கிய சூரியனைப்போல விளங்கிநிற்கும் மாணிக்கத்தாலமைந்த விமானத்தில்எழுந்தருளிய இறைவர்சந்நிதிசென்று, கழல் அடி தொழுது அறைகிற்பான் - ஒலிக்கும் வீரகண்டையையணிந்த திருவடியைவணங்கிக் கூறுகின்றான்.

சுடரெனநிற்கும் என்ற குறிப்பால் கற்றளி என்றதற்கு மாணிக்கத்தாலமைந்ததளி என்றும். (கஉ)

வழிவழியடிமைசெய்தொருபோதுமறவலன்வழிபடுமடியேனின்
மொழிவழிமுறைசெய்துவருவேனிம்மூதுநகரடையவுமமணீச
ரழிவதுகருதினர்விடுநாகமடைவதுனருள்வழியதனாவி
கழிவதுகருதியவடியேனைக்கருணைசெய்தருளிதுகடனென்றான்.

(இ-ள்.) வழி வழி அடிமை செய்து ஒரு போதும் மற வலன் வழி படும் அடியேன் - எனது மரபின் வழியேநின்று அடிமைசெய்து ஒருபோது மறவாது தொண்டுபட்டொழுகும் அடியேன், நின் மொழி வழி முறை செய்து வருவேன் - உனது திருவார்த்தைகளாகிய வேதாகமங்களின் வழியே யரசியல் செய்துவரா நின்றேன், அமண் நீசர் இம்முது நகர் அடையவும் அழிவது கருதினர் விடு நாகம் அடைவது - சமணர்களாகிய சண்டாளர்கள் இந்தத் தொன்றுதொட்டுள்ள மதுரைத்திருநகர் முற்றும் அழிதலைக்கருதி ஏவியசர்ப்பம் வராநின்றது, உன் அருள் வழி - உனது திருவருளின்வழியே, அதன் ஆவி கழிவது கருதிய அடியேனை - அந்தச் சர்ப்பத்தின் உயிர்கழிதலைக்கருதிய அடியேனாகிய எனக்கு, கருணைசெய்தருள்- திருவருள் செய்தருளாய், இது கடன் என்றான் - இதுதான் உனதுகடனென்று குறையிரந்து தொழுதான்.

எனது மரபிலுள்ளார் உனது கொத்தடிமையாயுள்ளார் என்பான் வழிவழியெனவும், உனது திருவாக்குகளாகிய வேதாகமங்களிற்சிறிதும் பிறழ்ந்திலேனென்பான் நின்மொழி வழியெனவும், யான்வெல்லக் கருதியது உன் திருவருட்டிறத்தாலென்பான் அருள்வழியெனவும், அதுமுடிதல் எளிதென்பான் இது கடனெனவுங் கூறினான். நான்காம்வேற்றுமை யுருபுநிற்கும் நிலைக்களத்து இரண்டனுருபுநிற்றலால் உருபுமயக்கம். (கக)

அனுமதிகொடுதொழுதிறைபாதமகமதிகொடுபுறனடைகின்ற
பனிமதிவழிவருதமிழ்மாறன்பகழியொடுசிலையினனேகிக்
குனிமதிதவழ்தருமதினீடுங்கொடியணிகுடகடைகுறுகாமுன்
றனிவளையெனநிகர்தருகோபத்தழல்விழியரவினையெதிர்கண்டான்.

(இ-ள்.) அனு மதி கொடு தொழுது - விடைபெற்று மீளவும் வணங்கி, இறை பாதம் அகமதி கொடு புறன் அடைகின்ற பனி மதி வழி வரு தமிழ் மாறன் -

சோமசுந்தரக்கடவுளினுடைய திருவடிகளைத் தனதுமனத்திற் கருதிக்கொண்டு புறத்திற் செல்கின்ற குளிர்ந்தசந்திரன் மரபில்வந்த அனந்தகுணபாண்டியன், பகழியொடு அடு சிலையினன் ஏகி - பாணத்தோடு கொலைத்தொழிற்குரிய வில்லையேந்திய யுத்தசன்னத்தனாய்ச் சென்று, குனி மதி தவழ் தரு மதில் நீடும் கொடி அணி குட கடை குறுகா முன் - வளைந்த அர்த்தசந்திரன தவழாநின்ற மதிலில் ஓங்கியதுவசங்கட்டிய மேற்றிசைவாயிலை அடைதற்குமுன், தனி வரை என நிகர் தரு கோபம் தழல் விழி அரவினை எதிர் கண்டான் - ஒப்பற்ற மலையென்றுசொல்ல ஒத்த கோபாக்கினிசிந்தும் கண்களையுடைய சர்ப்பத்தை எதிரே பார்த்தான்.

மதிஎன்னுமுதனிலை வினையெச்சப் பொருள்மேல் நிற்றலால் மதி கொடுதற் பொருட்டில்வந்த வினையெச்சம். (கஎ)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

பல்பொறிப்பருவாய்ப்படம்புடைபரப்பிப்பக்கமெண்டிசையொடுவிசும்பிற்
செல்கதிர்புதைத்துத்திணியிருள்பரப்பித்திங்களின்பகிர்புரைநஞ்சம்
பில்கெயிறதுக்கிப்பெரிதுயிர்த்தகல்வாய்பிளந்துமாநகரெலாமொருங்கே
யொல்லெனக்கௌவிவிழுங்குவான்சீறியுருத்தனனுரகவாளவுணன்.

(இ-ள்.) பல் பொறி பரு வாய் படம் புடை பரப்பி - பலபுள்ளிகளமைந்த பிளந்தவாயையுடைய படங்களைப்பரப்பி, பக்கம் எண் திசையொடு விசும்பில் செல் கதிர் புதைத்து - பக்கங்களிலுள்ள எட்டுத்திக்குகளோடு ஆகாயத்திற்செல்லுஞ் சூரியனையுமறைத்து, திணி இருள்பரப்பி-நெருங்கிய இருளைப்பரப்பி, திங்களின்பகிர் புரை நஞ்சம் பில்கு எயிறு அதுக்கி பெரிது உயிர்த்து - அர்த்தசந்திரனையொத்த நஞ்சுசிந்தும் வக்கிரதந்தங்களை அதுக்கிப் பெருமூச்செறிந்து, அகல் வாய்பிளந்து மாநகர் எல்லாம ஒருங்கே ஒல்லென கௌவி விழுங்குவான் - அகன்றவாயைப்பிளந்து பெரியநகரையெல்லாம் ஒருசேரக்கௌவிவிழுங்க, வாள் உரக அவுணன் சீறி உருத்தனன் - ஒள்ளியசர்ப்பவடிவாய்வந்த இராக்ஷதன்சீறிக் கோபித்தான்.

விசும்பினிறுதியில் எதிரது தழீஇய எச்சவுமமை விகாரத்தாற்றொக்கது. கறு

அடுத்தனனரசசிங்கவேறிடியேறஞ்சவார்த்தங்கையிற்சாப
மெடுத்தனனெடுநாணிருதலைவணக்கியெரிமுகக்கூர்ங்கணைதொடுத்து
விடுத்தனன்விடுத்தசரமெலாமுரகன்வெறுந்துகள்படக்கறித்துமிழ்ந்து
படுத்தனன்பொருதுபஞ்சவன்புராரிபங்கயச்சேவடிநினையா.

(இ-ள்.) அரசசிங்க ஏறு அடுத்தனன் - அரசருள் ஆண்சிங்கம்போன்ற அனந்தகுணபாண்டியன் அடுத்து, இடி ஏறு அஞ்ச ஆர்த்து—இடியேறு அஞ்சும்படிகோஷித்து, அங்கையில் சாபம் எடுத்தனன் - அழகியதனதுகையில் வில்லையேந்தி, நெடு நாண் இருதலைவணக்கி - வில்லிற்பூட்டியநாணைச் செவ்வேவளைத்து, எரிமுகம் கூர் கணைதொடுத்து விடுத்தனன் - தீக்கொப்புளிக்கும் முகத்தையுடைய கூரிய அம்பைத் தொடுத்துவிடுத்தான், விடுத்தசரம் எல்லாம் உரகன் வெறுந்துகள்பட கறித்து உமிழ்ந்து படுத்தனன் - விடுத்த அம்புகளையெல்லாம் பாம்பின்வடிவாகவந்த இராக்ஷதன் வெறுந்தூளாகக்கடித்து உமிழ்ந்து சிதைத்தான், பஞ்சவன் பொருது புராரிபங்கயம் சேவடி நினையா - பாண்டியன் அதுகண்டு மனம்பொறுமல் சோமசுந்தரக்கடவுளினுடைய தாமரைமலர்போன்ற செவ்விந்ததிருவடிகளைச்சிந்தித்து. (கசு)

கொடியதோர்பிறைவாயம்பினைவிடுத்துக்கோளராவளையுடற்றுணித்தா
னிடியதோவெனவார்த்தெரிநிறக்குருதியிரங்கிவீழருவியிற்கவிழ
நெடியதோருடலம்புரள்படக்கூர்வானெளிதரவிளிபவன்மேலைக்
கடியதோராலாகலவெள்ளம்போலக்கக்கினான்கறையிருணஞ்சம்.

(இ-ள்.) கொடியது ஓர்பிறைவாய் அம்பினைவிடுத்து - கொடியவொரு அர்த்தசந்திரபாணத்தையேவி, கோள் அராவளை உடல் துணித்தான் - வலியபாம்பினது வளைந்தசரீரத்தைத் துண்டுபடுத்தினான், இடியோ என ஆர்த்து எரிநிறம் குருதி-இடியோவென்று சொல்லக்கோஷித்துத் தீப்போலுஞ் செந்நிறம்வாய்ந்த உதிரம், இரங்கிவீழ் அருவியில் கவிழ - ஒலித்துவீழும் அருவியைப்போலக்கவிழவும், நெடியது ஓர் உடலம் புரள்பட கூர்வால் நெளிதர விளிபவன் - நெடியவொப்பில்லாத சரீரம் புரளவும் கூரியவால் நெளியவும் இறக்கும் இராக்ஷதன், மேலை கடியது ஓர் ஆலாகல வெள்ளம்போல கறை இருள் நஞ்சம் கக்கினான்-முன்னாளிற்றோன்றிய கடிய ஒப்பில்லாத விஷப்பிரவாகம்போலக் கரிய இருள்போன்ற நஞ்சினைக்கக்கினான்.

பாற்கடலிற்றோன்றிய நஞ்சம்போல என்பார் மேலைக்கடியதோராலாகல வெள்ளம்போல என்றார். அது பகுதிப்பொருள்விகுதி. (௧௭)

தீவிடமுருத்துத்திணியிருள்கடுப்பத்திருநகரெங்கணுஞ்செறிந்த
காவிடங்கூவல்கயந்தலைசதுக்கங்கழகமாவணமகழிஞ்சி
கோவிடமாடமுபரிகைமேடைகோபுரமரங்கெலாம்பரந்து
தாவிடமயங்கியுறங்கினார்போலச்சாம்பினார்தனிநகர்மாக்கள்.

(இ-ள்.) தீவிடம் உருத்து திணி இருள் கடுப்ப திருநகர் எங்கணும்-தீப்போன்றவிஷங்கோபித்து எழுந்துதிணிந்த இருளை ஒப்ப மதுரைத்திருநகர்முற்றிலும், செறிந்தகா இடம் கூவல் கயந்தலை சதுக்கம் கழகம் ஆவணம் அகழ் இஞ்சி - நெருங்கியசோலையும் கிணறும குளமும் நாற்றெருக்கூடுமிடமும் கல்விச்சாலையுங் கடைவீதியும் அகழியும்மதிலும், கோ இடம் மாடம் உபரி கைமேடை கோபுரம் அரங்கு எல்லாம் பரந்து தாவிட - அரசன்கோயிலும் மாடமும் உபரிகையும் மேடையும் கோபுரமும் நாடகசாலையுமாகிய எல்லாவற்றிலும் பரந்துதாவ, தனிநகர் மாக்கள் மயங்கி உறங்கினார் போல சாம்பினார் - ஒப்பில்லாத நகரிலுள்ள மக்கட்கூட்டங்கள் விடத்தால் மயங்கி உறங்கின அயன்முதலியதேவர்போல வாடினார்கள்.

மேலைக் கடியதோராலாகலவெள்ளம்போல என முன்னர்க்கூறினமையால் மயங்கியுறங்கினார்போல என்றதற்கு விடத்தால் மயங்கியுறங்கிய அயன்முதலியோர்போல என்றாம். (௧௮)

நிலைதளர்ந்துடலந்திமிர்ந்துவேர்வரும்பிநிறைபுலன்பொறிகரணங்க
டலைதடுமாறியுரைமொழிகுழறித்தழுதழுப்படைந்துநாவுணங்கி
மலைதருகபமேனிமிர்ந்துணர்வழிந்துமயங்கிமூச்சொடுங்கியுள்ளாவி
யலைதராவூசலாடினார்கிடந்தாரன்னதொன்னகருளாரெல்லாம்.

(இ-ள்.) நிலைதளர்ந்து உடலந்திமிர்ந்து வேர்வு அரும்பி - நிலைகெட்டு உடல் கம்பித்து வேர்வையெழுந்து, நிறைபுலன் பொறி கரணங்கள் தலைதடுமாறி உரைமொழிகுழறி தழுதழுப்பு அடைந்து நா உணங்கி - குறைவின்றிநிறைந்த புலன்க

ளும் இந்திரியங்களும் அந்தக்கரணங்களுந் தத்தமக்குரிய இடம் தடுமாறுதலாற் சொற்கள்குழறித் தழுதழுப்பேறி காப்புலர்ந்து, மலைதருகபம் மேல் நிமிர்ந்து உண ர்வு அழிந்து மயங்கி மூச்சு ஒடுங்கி - பொருந்தியகபம் மேல் எழுந்து அறிவழிந்து மயங்கிப் பெருமூச்சுவிட்டு, அன்னதொல் நகர் உள்ளார் எல்லாம் உள் ஆவி அலை தர ஊசலாடினார் கிடந்தார் - அந்தத்தொன்றுதொட்டுள்ள நகரிலுள்ளாரெல்லாரு ம் உள்ளேயுள்ளபிராணன் ஊசல்போலலைந் தாடிக்கிடந்தார்கள்.

அன்னசுட்டுத்திரிபு. (கக)

தென்னவன்விடங்கண்டஞ்சுமால்போலச்சினகரமடைந்துதாழ்ந்தெந்தா
முன்னவவாதிமுதல்வவித்தின்றிமுளைத்தவமுடிவிலாமுனிவ [ய்
வென்னவவன்பர்க்கெளியவயார்க்குமிறையவவிந்நகர்க்கென்று·
மன்னவவநாதிமறையவமுக்கண்வானவநினைச்சரணடைந்தேன்.

(இ-ள்.) தென்னவன் - அனந்தகுணபாண்டியன், விடம் கண்டு அஞ்சுமால் போல சினகரம் அடைந்து தாழ்ந்து - விடத்தைக்கண்டஞ்சிக் கைலையைச்சரண் அடைந்த திருமால்போலத் திருக்கோயிலையடைந்து வணங்கி, எந்தாய் - என்தந்தை யே, முன்னவ-யாவர்க்கு முற்பட்டவனே, ஆதிமுதல்வ - ஆதியாகியமுதல்வனே, வித்து இன்றிமுளைதத்வ - மூலமில்லாமல் தோன்றினவனே, முடிவு இல்லா மு னிவ-தனக்கோர் இறுதியில்லாதமுனிவனே, என் நவ-எனக்குப்புதுமையைவிளைப் பவனே, அன்பர்க்கு எளியவ-அடியார்கெளியவனே, யார்க்கும் இறையவ-அயன் முதலிய எல்லாத்தேவர்களுக்குந்தலைவனே, இந்நகர்க்கு என்று உம் மன்னவ - இம் மதுரைத்திருநகர்க்கு எப்பொழுதும் அரசாயுள்ளவனே, அநாதி மறையவ - அநாதி யாயுள்ளமறையவனே, முக்கண்வானவ - திரிநேத்திரங்களையுடையதேவனே, நினை சரண் அடைந்தேன் - உன்னைப்புகலடைந்தேன.

எல்லையில்லாத தன் சந்நிதியில் யாவுந்தோன்றநின்றவனே என்பான் முன் னவ ஆதிமுதல்வ எனவும், ஆன்மாக்களுக்கு மலபாகம்வருவித்து முத்தியிற்கூட்டு தற்பொருட்டுத் தனது திருவருளையே திருமேனியாகக்கொண்டவனே என்பான் வி த்தின்றி முளைத்தவ எனவும, இயல்பாகவே பாசங்களினின்று நீங்கினவனே என் பான் முடிவிலா முனிவ எனவும், எனக்கு நவநவமான இன்பத்தைவிளைப்பவனே என்பான் என்னவ எனவும், பிரமன்மாற்கரியோனே என்பான் அன்பர்க்கெளியவ எனவும், அனைத்தையும் தன்னாணைவழிநடாததுவோனே என்பான் யார்க்குமிறையவ எனவும், தனது தாதை முதலியோர்க்குவந்த இடையூறுகளைத்தவிர்த்து முன்னின் றுகாத்தவனே என்பான், இந்நகர்க்கென்று மன்னவ எனவும், குருபரம்பரைவிள ங்க வேதங்களைத் தந்தருளினவனே என்பான் அநாதிமறையவ எனவும், சூரியன் முதலிய முச்சுடர்களுக்கும் ஒளியைத்தரும் திரிநேத்திரங்களையுடையவனே என் பான் முக்கண்வானவ எனவும், அடைந்தோர் துன்பங்களை நீயொழிப்போனியாதலி ன் நின்னைப்புகலடைந்தேனென்பான் நின்னைச்சரணடைந்தேன் எனவுங்கூறினன்.

அடுத்துவந்தலைக்குமாழியைத்துரந்துமாழியுண்டேழுமொன்றாகத்,
தொடுத்துவந்தலைக்கும்பெருமழைதடுத்துந் துளைக்கைவிண்டுழாயவெ
ண்பிறைக்கோ, டெடுத்துவந்தலைக்குங்களிற்றினைவிளித்துமிந்நகர்புரந்த
னையின்று, மடுத்துவந்தலைக்கும்விடத்தினான்மயங்கும்வருத்தமுங்களைதி
யென்றிரந்தான்.

(இ-ள்.) அடுத்துவந்து அலைக்கும்ஆழியை தூர்ந்தும்-அடுத்துவந்துவருத்துங் கடலைச் சுவறச்செய்தும், ஆழி உண்டு எழும் ஒன்று ஆக தொடுத்துவந்து அலைக்கும பெருமழை தடுத்தும் - கடல்பருகி எழுமேகங்களும் ஒன்றாகததிரண்டுவந்து பெய்துவருத்தும் பெருமழையைததடுத்தும, துளைக்கை விண்துழாவ வெண்பிறை கோடு எடுத்துவந்து அலைக்கும் களிற்றினைவிளிததும் - துதிக்கையை விண்ணுலகைத்துழாவ வெள்ளிய அர்ததசந்திரனையொத்த கொமபினிடையே மேலெடுததுவந்துவருத்தும் யானையைகொன்றும், இந்நகர் புரந்தனை - இந்தமதுரைத்திருநகரைப் பாதுகாத்தாய், இன்றும் அடுத்துவந்து அலைக்கும்விடத்தினால் மயங்கும் வருத்தமும் களைதி என்று இரந்தான் -(அவைபோல) இக்காலத்தும் அடுத்துவந்து வருத்தும் விஷத்தினால் மயங்கும் வருத்ததையும் களைவாய் என்றுயாசித்தான்.

ஒன்று குறையிரப்போன் தனக்காயினும் தன்மரபினுள்ளோர்க்காயினும் உபகரித்தமைகூறிப் பழமைபாராட்டல் வழக்காதலால் அடுததுவந்தலைக்கும் ஆதியீறாக இந்நகர்புரந்தனையெனவும், அவ்வாறுகூறித் தன்குறையையுங்கூறுதல் முறையாதலால் விடத்தினால்மயங்கும் வருத்தமுங் களைதியெனவுங்கூறினான். (உக)

அருட்கடலனையவாதிநாயகன்றனவிர்சடையணிமதிக்கொழுந்தின்
பெருக்கடையமுதத்தண்டுளிசிறிதுபிலிற்றினான்பிலிற்றிடலோடும்
பொருக்கெனவெங்கும்பாலினிற்பிணாபோற்புரையறக்கலந்துபண்டுள்ள
திருக்கிளர்மதுராநகரமாப்புனிதஞ்செய்ததச்சிறுதுளியம்மா.

(இ-ள்.) அருள் கடல் அனைய ஆதிநாயகன் - சித்தமூர்த்தியாய்வந்தருளிய கருணைக்கடலையொதத சோமசுந்தரக்கடவுள், தன் அவிர்சடை அணிமதி கொழுந்தின் பெருக்கு அடையமுதம தண் துளிசிறிது பிலிற்றினான் - தனதுவிளங்குஞ் சடையிலணிந்த சந்திரனது பெருக்கமைந்த அமுதத்தின் தண்ணியதிவலை சிறிதுசிந்தினார், பிலிற்றிடலோடும - அவ்வாறுசிந்த, பொருக்கென எங்கும் பாலினில் பிணாபோல் புரை அற கலந்து - விரைந்து எவ்விடத்தும் பாலிற்பிணாபோலக்குற்றமறக் கலந்து, பண்டு உள்ள திருகிளர் மதுராநகரம் ஆக - முன்னமைந்த செல்வமிக்கமதுராநகரமாக, அச்சிறுதுளி புனிதம செய்தது-அந்தச்சிறிய அமுததிவலை புனிதஞ்செய்தது.

சிவபெருமான அவனிரக்குங் குறைபாட்டிற்கு அருள்கூர்ந்தான் ஆதலால் அருட்கடலனைய எனவும், கூர்ந்த அருளுக்கு ஒப்புயர்வில்லையாதலால் ஆதிநாயகன் எனவும், முன்னர் அமுதத்தால் மதுரமாகிய மதுராநகரமானது இன்றுவிடத்தின்மயமானமையால் அதுநீங்கி முன்னுள்ளபடி இப்போது சிந்திய அமுதாக்கியதாதலின் பண்டுள்ள திருக்கிளர் மதுராநகரமாப் புனிதஞ்செய்ததெனவுங்கூறினார். உஉ

இரவிமுன்னிருளதெனவிறையருண்முன்னிருண்மலவலியெனவெங்கும்
பரவியவமுதால்விடமகன்றவசப்படிவொழிந்தியாவருமின்பம்
விரவியகளிப்பின்மேவினாரிருந்தாரீனவர்பெருந்தகைவேந்த
னரவணிசடையார்க்கன்பூருத்தானேயாகிமண்காவல்செய்திருந்தான்.

(இ-ள்.) இரவிமுன் இருளது என்ன - சூரியன்முன்னிருள் ஓடுதல்போலவும், இறை அருள்முன் இருள் மலவலி என - சிவபெருமான் திருவருளின்முன் ஆணவமலத்தின்வலிமை சிதைதல்போலவும், எங்கும் பரவிய அமுதால் விடம் அக

ன்று - எவ்விடத்தும்பரவிய வமுதால் விஷத்தினின்றும்நீங்கி, யாவரும் அவசம்ப டிவம் ஒழிந்து - எவரும் துக்கசொரூபம்நீங்கி, இன்பம்விரவிய களிப்பின் மேவினர் இருந்தார் - இன்பங்கலந்தசந்தோஷத்தில் பொருந்தி இருந்தார்கள், மீனவர் பெருந் தகைவேந்தன் - பாண்டியருள் பெருந்தகைமையமைந்த அனந்தகுணபாண்டியன், அரவு அணி சடையார்க்கு அன்பு உருதானே ஆகிமண் காவல்செய்து இருந்தான் - சர்ப்பத்தையணிந்த சடாமுடியையுடைய சோமசுந்தரக்கடவுள்பாற்கொண்ட அன்பே ஒருவடிவமாகி நிலவுலகைப் பாதுகாத்திருந்தான்.

அமுதத்தின்முன் விடத்தின்வலிமைகெடுதற்குச் சூரியன் சந்நிதியில் இருள் வலிகெடுதலையும் சிவபெருமான் சந்நிதியில் ஆணவமலிவலிகெடுதலையும் எடுத்துக் கூறினமையால் எடுத்துக்காட்டுவமையணி. (உக)

நாகமெய்தபடலம் முற்றிற்று.

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - கசஉ0.

பத்தொன்பதாவது.

# மாயப்பசுவைவதைத்தபடலம்.

கலிநிலைத்துறை.

சுருதியின்புறத்தவர்விடுமராவினைச்சுருதி
கருதரும்பரனருளுடைக்கௌரியன்றுணித்த
பரிசிதங்கதுபொருதமண்படிறர்பின்விடுப்ப
வருபெரும்பசுவிடையினன்மாய்த்ததும்பகர்வாம்.

(இ-ள்.) சுருதியின் புறத்தவர் விடும் அரவினை - வேதவொழுக்கத்தின்புறத்தினராகிய சமணர்களேவியசர்ப்பத்தை, சுருதி கருதரும் பரன் அருள் உடைய கௌரியன் துணித்தபரிசு இது - அவ்வேதஞ் சிந்தித்தற்கரிய சோமசுந்தரக்கடவுளின் திருவருளையுடைய வனந்தகுணபாண்டியன் துண்டுபடுத்தின தன்மை யித்திருவிளையாடல், அங்கு அது பொருத அமண் படிறர் - அங்கு அச்செயலைக்கண்டு மனம்பொருத சமணர்களாகியவஞ்சகர், பின்விடுப்பவரு பெரும்பசு-பின்னேவந்த பெரியபசுவை, விடையினல் மாய்த்ததும் பகர்வாம்-அதிகாரநந்திநாயனுரால் (சோமசுந்தரக்கடவுள்) அதனது வலிமை சிதைத்தருளிய திருவிளையாடலையு மினிக்கூறுவாம்.

புறச்சமயத்தருள் ஒருதிறத்தினர் என்பார் சுருதியின்புறத்தவர் என்றார்.(க)

பணப்பெரும்பருவாயுடைப்பாந்தளையனந்த
குணப்பெருந்தகைதுணித்தபின்பின்வருகுண்டர்
தணப்பருங்குழாங்காலினுற்றள்ளுண்டுசெல்லுங்
கணப்பெரும்புயல்போலுடைந்தோடினகலங்கி.

(இ-ள்.) பணம் பெரும் பருவாய் உடைய பாந்தளை - படம்பொருந்திய பெரியபிளந்தவாயையுடைய சர்ப்பத்தை, அனந்தகுணன் பெருந்தகை துணித்தபின்- அனந்தகுணபாண்டியன் துண்டுசெய்து சிதைத்தபின்பு, பின்வரும் தணப்பு அரும் குண்டர் குழாம் - சர்ப்பத்தின்பின்னேவந்த நீங்குதலில்லாத சமணக்கூட்டம், காலின் ஆல் தள்ளுண்டு செல்லும் பெரும்புயல் கணம்போல் - காற்றினால் கலக்குண்டு சிதைந்தோடும் பெரியமேகபடலம்போல, உடைந்து கலங்கி ஓடின-புறகிட்டு நிலை கலங்கியோடின. (உ)

உடைந்துபோனவரனைவருமோரிடத்திருள்போ
லடைந்துநாமுன்புவிடுத்தமால்யானைபோலின்று
தொடர்ந்தபாம்பையுந்தொலைத்தனர்மேலினிச்சூழ்ச்சி
மிடைந்துசெய்வதையாதெனவினையமொன்றோர்வார்.

(இ-ள்.) உடைந்து போனவர் அனைவரும் ஓர் இடத்து இருள்போல் அடைந்து - புறங்காட்டியோடிய சமணர்களெல்லோரும ஓரிடத்தி லிருள்செறிந்ததுபோலச் செறிந்து, நாம் முன்பு விடுத்தமால் யானைபோல் இன்றுதொடர்ந்த பாம்பையும் தொலைத்தனர் - நாம் முன்பு ஏவிய மதமயக்கத்தையுடைய யானையைச்சிதைத்ததுபோல இப்பொழுதேவியபாம்பையும் சிதைத்தார்கள், இனிமேல் மிடைந்து சூழ்ச்சிசெய்வது யாது என வினையம் ஒன்று ஓர்வார் - இனிமேல் நாம் ஒருசேரநெருங்கி யாலோசனைசெய்வது யாதுளதென்று ஒருவினையத்தை யாலோசிக்கத்தொடங்கினார்கள்.

முன்னர்ச்சூழ்ந்தசூழ்ச்சிகள் பயனின்றிமுடிந்தன இன்று சூழுஞ்சூழ்ச்சியாவது பயன்படக்கருதவேண்டும் எனக்கருதினாரென்பார் இனிச்சூழ்ச்சி மிடைந்து செய்வதையாதென வினையமொன்றோர்வார் என்றார். (ங)

ஆவையூறுசெய்யார்பழியஞ்சுவாரதனை
யேவுவாமிதுவேபுணர்ப்பென்றுசூழ்ந்திசைந்து
பாவகாரிகளபண்டுபோற்பழிதழல்வளர்த்தார்
தாவிலாவுருவாகியோர்தானவன்முளைத்தான்.

(இ-ள்.) ஆவை ஊறுசெய்யார் பழி அஞ்சுவார் - நாம் ஒருபசுவையே வின் அதற்கு இடையூறு செய்யார் செய்யக்கருதும் பழிக்குமஞ்சுவார், அதனை ஏவுவாம் இதுவே புணர்ப்பு என்று சூழ்ந்து இசைந்து - இதுவே யாலோசனையென்று சூழ்ச்சிசெய்து யாவருமனமொத்து, பாவகாரிகள் பண்டுபோல் பழிதழல் வளர்த்தார்- பாவகாரிகளாகிய சமணர்கள் முன்போல ஆபிசாரயாகஞ்செய்தார்கள், தாவில் ஆ உரு ஆகி ஓர் தானவன் முளைத்தான் - கெடுதலில்லாத பசுவின்வடிவாகி ஒரு அசுரன்தோன்றினான்.

தேவர்வடிவாய்ப் பசுவிருத்தலால் அதனைக்கொல்லச் சிறிதுங்கருதார் எனக் கருதினாராதலால் இதுவே புணர்ப்பென்று சூழ்ந்து என்றார். அதனை முன்னர்க்கூறியிருத்தலுணர்க. (ச)

குண்டழற்கணின்றெழுந்தவக்கொடியவெம்பசுவைப்
பண்டுபோலவர்விடுத்தனர்கூடலம்பதிமே
லுண்டுமில்லையுமெனத்தடுமாற்றநூலுரைத்த
பிண்டியானுரைகொண்டுழல்பேயமண்குண்டர்.

(இ-ள்.) குண்டு அழல் கண் நின்று எழுந்த அ கொடியவெம் பசுவை-யாகத்தீயினின்றுமெழுந்த அக்கொடியபசுவினை, உண்டு எனவும் இல்லை எனவும் தடுமாற்ற நூல் உரைத்த பிண்டியான் உரைகொண்டு உழல் பேய் அமண் குண்டர்-அஸ்தி எனவும் நாஸ்தி எனவுங் கூறுந்தடுமாற்றத்தையுடைய பூர்வாகமமுதலியநூலைக்கூறிய அசோகநிழலில்வசிக்கும் அருகனுடையபொய்யுரையை மெய்யுரையாகக்கொண்டு திரியும் பேய்க்குணமமைந்த சமணராகிய கீழ்மக்கள், கூடல் பதிமேல் பண்டுபோல் அவர் விடுத்தனர் - மதுரைத்திருநகரின்மேல் முன்போல அக்கீழ்மக்கள் ஏவினார்கள்.

அம் சாரியையிடைச்சொல், பூர்வாகமமுதலியநூல் பூர்வாகமம், அங்காகமம், வெகுசுருதிமுதலியநூல். அஸ்திதான் கூறிய துள்ளதெனவும், நாஸ்தி நரகம், சுவர்க்கம், கர்த்தா இல்லையெனவுங்கூறல். அதனால்வேதநெறியோடு முரணுதலால் தடுமாற்ற நூலுரைத்த என்றார். (ரு)

கலிவிருத்தம்.

மாடமலிமாளிகையிலாடுகொடிமானக்
கோடுகளினோடுமுகில்குத்திமிசைகோத்துச்
சேடன்முடியுங்கதிர்கொள்சென்னிவரையுந்தா
ளாடவடியிட்டுலவையஞ்சிடவுயிர்த்தே.

(இ-ள்.) மாடம் மலிமாளிகையில் ஆடுகொடிமான - மேன்மாடம் நிறைந்த மாளிகையி லாடுந்துவசத்தையொப்ப, கோடுகளின் ஓடுமுகில் குத்திமிசைகோத்து-தனது கொம்புகளினால் ஆகாயத்திலோடும் மேகங்களைக்குத்தி அவற்றின்மேற்கோத்து, சேடன் முடியும் கதிர்கொள் சென்னிவரையும் - ஆதிசேடன்முடியும் விளக்கமமைந்த சிகரத்தையுடைய மகமேருவும், தாள் ஆட அடி இட்டு - தாள்படக்கால் வைத்து, உலவை அஞ்சிட உயிர்த்து - காற்றஞ்சப்பெருமூச்செறிந்து. (சு)

விடுத்திடுமுயிர்ப்பினெதிர்பூளைநறைவீபோ
லடுத்திடுசராசரமனைத்துமிரிவெய்தக்
கடுத்திடுசினக்கனலினுக்குலகமெல்லா
மடுத்திடுதழற்கடவுள்வார்புனலைமான.

(இ-ள்.) விடுத்திடும் உயிர்ப்பின் எதிர் அடுத்திடு சராசரம் அனைத்தும்-விடும்பெருமூச்சுக்கெதிர்ப்பட்ட நிலையியற்பொருளும் இயங்கியற்பொருளுமாகியஉயிர்யாவும், பூளை நறைவீபோல் இரிவெய்த-பூளையினது தேன்சிந்தும் பூவைப்போலப் பறக்கவும், கடுத்திடுசினக் கனலினுக்கு-மிக்ககோபாக்கினிக்கு, உலகம் எல்லாம் மடுத்திடுதழல் கடவுள் - உலகம்யாவையும் அழிக்கப்பரந்த தீக்கடவுள், வார் புனலைமான-வெப்பங்குறைந்துபெருகிய நீர்வெள்ளத்தையொப்பத் தண்ணிதாகவும்.

இதனதுகோபாக்கினிக்கு வடவாநலங்குளிர்ந்ததென்பார் உலகமெல்லாமடுத்திடு தழற்கடவுள் வார்புனலை மான என்றார். (எ)

உடன்றிறைகொள்புள்ளொடுவிலங்கலறியோட
மிடைந்தபழுவத்தொடுவிலங்கலைமருப்பா
லிடக்கெறிமருத்தெனவெறிந்தளவிலோரைத்
தொடர்ந்துடல்சிதைத்துயிர்தொலைத்திடியினார்த்தே.

(இ-ள்.) உடன்று இறைகொள் புள்ளொடு - தம்முள்போர்செய்து வசிக்கும்பறவைகளோடு, விலங்கு அலறி ஓடமிடைந்த பழுவத்தொடு விலங்கலை - மிருகங்களும் கதறியோட நெருங்கிய சோலையோடு மலைகளையும, மருப்பால் இடந்து-கொம்பினால் வேரோடுபறித்து, எறி மருதது என எறிந்து - வீசுஞ்சண்டமாருதத்தைப் போல எங்குஞ்சிதறவீசி, அளவிலோரை தொடர்ந்து உடல் சிதைத்து உயிர்தொலைத்து இடியின் ஆர்த்து - அநேகரையெதிர்ந்து சரீரத்தையழித்து உயிர்போக்கி யிடிபோலக்கோஷித்து. (அ)

மறலிவருமாறெனமறப்பசுவழிக்கொண்
டறலிவர்தடம்பொருநையாறுடையமாறன்
றிறலிமலர்மங்கையுறைதென்மதுரைமுன்னு
விறலிவருகின்றததுமீனவனறிந்தான்.

(இ-ள்.) மறலிவரும் ஆறு என மறப்பசு வழிக்கொண்டு - இயமன் வரும் வகைபோலக் கொலைததொழிலையுடைய பசுவழிக்கொண்டு, அறல் இவர் தடம் பொருநை ஆறு உடைய மாறன் - கருமணல்பரந்த விசாலித்த தாமிரபர்ணியையுடைய அனந்தகுணபாண்டியனுடைய, திறலி மலர்மங்கை உறை தென்மதுரை - வறுமையோடுபகைத்து வென்று இலட்சுமிவசிக்குந் தென்திசையிலுள்ள மதுரையை, முன்னுவிறலி வருகின்றது - முற்பட்டு எதிர்ப்பட்ட யாவரையும் வெற்றிகொண்டுவராநின்றது, அது மீனவன் அறிந்தான் - அதனைப்பாண்டியனுணர்ந்தான்.

திறலி பெயரடியாகப்பிறந்த வினையெச்சம் ஆதலால் வறுமையொடுபகைத்து எனப்பொருள்கூறினும். "சுரும்பிவர்" கோவைத் திருவாசகததில் இவர் என்பதற்கு நச்சினார்க்கினியர் எழுதியதுகாண்க. (கூ)

மீனவனுமாநகருண்மிக்கவருமுக்கண்
வானவனைமாமதுரைமன்னவனைமுன்னோர்
தானவனையாழிகொடுசாய்த்தவனையேத்தா
வானதுரைசெய்துமெனவாலயமடைந்தார்.

(இ-ள்.) மீனவனும் மாநகருள் மிக்கவரும் - பாண்டியனும் பெரியமதுரைநகரிலுள்ள பெரியோரும், முக்கண் வானவனை - திரிநேத்திரத்தையுடைய தேவதேவனை, மாமதுரை மன்னவனை - பெரியமதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளை, முன் ஓர் தானவனை ஆழிகொடு சாய்த்தவனை ஏத்தா - முற்காலத்தோர் அசுரனைச் சக்கரங்கொணடு கொன்றவனைத்துதித்து, ஆனது உரைசெய்தும் என ஆலயம் அடைந்தார் - நிகழ்ந்தசெய்தியைக்கூறுவோமென்று திருக்கோயிலையடைந்தார்.

சலந்தராசுரனென்னும் ஓரசுரன் சிவபெருமானிடத்து வரம்பெற்றுப் பிரமன்முதலியோரைவென்று திருமாலைச்சிறையிலிட்டுச் சிவபெருமானிடத்துப்போர்க்குச்சென்று, அவன் திருவடியுகிரால்வகுத்தசக்கரததால் உயிர்மாண்டானென்பது புராணவரலாறு. "பரிதிமண்டலமாயிரமெனக்கதிர்பரப்பும், உருவவாழியொன்றுக்கினனொளிருமப்படையாற், பொருவலித்திறற்சலந்தரன்பொன்றினனதனை, வெருவிநீளிடைக்கண்டுமீண்டித்தலைப்போந்தேன்" எனக்காஞ்சிப்புராணம் சலந்தரீசப் படலத்திற்காண்க. (௧௦)

நாதமுறையோபொதுவின்மாறிநடமாடும்
பாதமுறையோபலவுயிர்க்குமறிவிக்கும்
போதமுறையோபுனிதபூரணபுராண
வேதமுறையோவெனவிளித்துமுறையிட்டார்.

(இ-ள்.) நாதமுறையோ - நாதனேயபயம், பொதுவில் மாறி நடம் ஆடும் பாதமுறையோ - வெள்ளியம்பலத்துள் கான்மாறிநடித்தருளிய திருவடியையுடையாய் அபயம், பல உயிர்க்கும் அறிவிக்கும் போத முறையோ - பல ஆன்மகோடிகளுக்கும் உணர்த்தும்போதனே யபயம், புனிதபூரண புராணவேத முறையோ என விளித்து முறை இட்டார் - மாசில்லாதவனே எங்கும்நிறைந்தவனே எப்பொழுதும் பழம்பொருளாயுள்ளவனே வேதசொரூபியே என்று கூவிக்குறை இரந்தார்கள்.

அடியர்வேண்டுகோளுக்கிரங்கி யருள்செய்பவனே என்பார் பொதுவில்மாறிநடமாடும்எனவும், எல்லாவுயிர்க்கும் இறைவனுதலால் எங்களைச்சந்தவிர்த்தருளுவது உன்திருவடியையன்றி வேறில்லையென்பார பாதமுறையோ எனவும், நீயுணர்த்தவுணரும் சிற்றறிவுடையோமாய் நின்னுனை வழிப்பட்டொழுகும் எங்கட்கு நின்னையன்றி யொருபற்றுக்கோடு மில்லையென்பார் பலவுயிர்க்கு மறிவிக்கும் போதமுறையோவெனவுங்கூறினர். (கக)

நின்றுமுறையிட்டவரைநித்தனருணோக்கா
னன்றருள்சுரந்திடபநந்தியைவிளித்துச
சென்றமணரேவவருநீபபசுவைநீபோய்
வென்றுவருவாயெனவிளம்பினன்விடுத்தான்.

(இ-ள்.) நின்று முறை இட்டவரை நித்தன் அருள் நோக்கால் நன்று அருள் சுரந்து - நின்றுகுறை யிரந்தவர்களுக்குச் சோமசுந்தரக்கடவுள் திருவருட்பார்வையால் மிகவுங்கருணைசெய்து, இடபநந்தியை விளித்து - தன்னருகிலுள்ள அதிகார நந்திநாயனுரை யழைத்து, அமணர் ஏவ சென்று வருநீ பசுவை - சமணர்கள் ஏவ வாநின்ற கொடியபசுவினை, நீபோய் வென்று வருவாய் என விளம்பினன் விடுத்தான் - நீபோயவென்று வருவாய என்றுகூறி ஏவியருளினர்.

நானகனுருபு நிற்குமிடத்து இரண்டனுருபுநிற்றலால் உருபுமயக்கம். (கஉ)

கலிநிலைத்துறை.

தண்டங்கெழுகூற்றமுமஞ்சத்தறுகட்செங்கட்
குண்டந்தழன்றுகொதிப்பக்கொடுநாக்கெறிந்து
துண்டந்துழாவக்கடைவாய்நுரைசோர்ந்துசென்னி
யண்டந்துழாவவெழுந்தன்றடலேறுமாதோ.

(இ-ள்.) தண்டம் கெழு கூற்றமும் அஞ்ச - தண்டாயுதத்தையேந்திய இயமனுமஞ்சும்படி, தறுகண் செங்கண்குண்டம் தழன்று கொதிப்ப - கொடுமையையுடைய சிவந்தகண்களாகிய குழிகள் சுவாலித்துக்கொதிக்கவும், கொடுநாக்கு எறிந்து துண்டம் துழாவ - வளைந்தநாவினையெறிந்து மூக்கினைத்துழாவவும், கடைவாய் நுரைசோர்ந்து - கடைவாயில் நுரைசோரவும், சென்னி அண்டம் துழாவ - சிரசானது வானுலகத்தைத்தடவவும், அடல் ஏறு எழுந்தன்று - வெற்றியையுடைய அதிகார நந்திநாயனுர் எழுந்தருளினுர்.

சோர்ந்து செயவெனெச்சத்திரிபு. (கஙு)

நெற்றித்தனியோடைநிமிர்ந்துமறிந்தகோட்டிற்
பற்றிச்சுடர்செம்மணிப்பூண்பிறைபையநாகஞ்
சுற்றிக்கிடந்தாலெனத்தோன்றவெள்ளாழியீன்ற
கற்றைக்கதிர்போற்பருமம்புறங்கௌவிமின்ன.

(இ-ள்.) நெற்றி தனி ஓடை நிமிர்ந்து - நெற்றியிற்கட்டிய ஒப்பற்றபட்டமானது மேற்பட்டுவிளங்கவும், மறிந்தகோட்டில் பற்றி சுடர் செம்மணி பூண் - வளைந்த கொம்பினைப்பொருந்தி விளங்காநின்ற செவந்தமாணிக்கத்தாலாகிய பூணானது, பிறைபைய நாகம் சுற்றிகிடந்தால் என தோன்ற - மூன்றாம்பிறையைப் படத்தையுடைய கேதுவென்னும் பாம்பானது சுற்றிக்கிடந்தாற்போலத் தோன்றவும், வெள் ஆழி ஈன்ற கற்றை கதிர்போல் பருமம் புறம் கௌவிமின்ன - வெள்ளியபாற்கடல் பெற்ற நெருங்கிய கிரணத்தையுடைய சூரியனைப்போலப் பொன்னாற்செய்தகவசமானது உடம்பின்புறத்துவிடாது பொருந்திவிளங்கவும்.

கேது செம்பாம்பு ஆதலால் செம்மணிப்பூண்பிறை பையநாகஞ்சுற்றிக்கிடந்தாலென என இல்பொருளுவமையணிதந்துகூறினார். பூண் சாதியொருமை. பைய சினையடியாகப்பிறந்த குறிப்புவினைப்பெயரெச்சம். விடை வெண்ணிறமுடையது. ஆதலால் வெள்ளாழியீன்ற கற்றைக்கதிர்போற்பருமம் என்றது பண்பு பண்புபற்றி வந்த வுவமை. நிமிர்ந்து செயவெனெச்சத்திரிபு. (கச)

கோட்டுப்பிறைகால்குளிர்வெண்கதிர்க்கற்றைபோலச்
சூட்டுக்கவரித்தொடைத்தொங்கலுநெற்றிமுன்னாப்
பூட்டுத்தாளமுகவட்டும்பொலியப்பின்னன்
மாட்டுச்சதங்கைத்தொடைகல்லெனவாய்விட்டார்ப்ப.

(இ-ள்.) கோடு பிறை கால் குளிர் வெண்கதிர் கற்றைபோல - கொம்பாகிய மூன்றாம்பிறை கக்குங்குளிர்ந்த வெள்ளியகிரணத்திரட்சிபோல, சூட்டு கவரி தொடை தொங்கலும் - உச்சியிற்சூட்டிய கவரியின் மயிராற்றொடுக்கப்பட்ட தொங்கணியும், நெற்றி முன்னா பூட்டு தாளமுகவட்டும் பொலிய - நெற்றிக்கு முற்படப்பூட்டுதலையுடைய முத்தாலாகிய முகவட்டும்பொலிந்து விளங்கவும், பின்னல் மாட்டுச் சதங்கைதொடை கல்லென வாய்விட்டு ஆர்ப்ப - வெள்ளியபின்னலிற்கோத்த மாட்டுச்சதங்கைமாலை கல்லென்று வாய்விட்டுக்கோஷிக்கவும்.

பூட்டுத்தாளமாவது பருத்தமுத்து முற்படப்புனைதல். காட்டரண் என்றாற்போலக் கோட்டுப்பிறையெனப் பண்புத்தொகையில் நிலைமொழி இரட்டியது. (கரு)

பணிநாவசைக்கும்படியென்னக்கழுத்தில்வீர
மணிநாவசைப்பநகைமுத்தின்வகுத்ததண்டை
பிணிநாண்சிறுகிண்கிணிபிப்பலமாலைத்தொங்க
லணிநாணலம்பசிலம்பார்ப்பவடிகணான்கும்.

(இ-ள்.) பணிநா அசைக்கும்படி என்ன - பாம்பு நாவசைக்கும்வகைபோல, கழுத்தில் வீரமணி நா அசைப்ப - கழுத்தில் வீரகண்டை நாவசைத்துக்கோஷிக்கவும், நகைமுத்தின் வகுத்ததண்டை - விளங்குமுத்தினைப் பருக்கைக்கல்லாகவுடைய தண்டையும், நாண் பிணி சிறுகிண்கிணி - கயிற்றிற்கோத்த சிறுசதங்கைகளும், பிப்

பலம் மாலை தொங்கல்-அரசிலைவடிவாக மாலைநிரைபடச்செய்த ஆபரணமும், அணி நாண் அலம்ப - ஒருவகையணியாக முறுக்கமைந்த கயிறும் ஒலிக்கவும், அடிகள் நானகும் சிலம்பு ஆர்ப்ப - நான்குகால்களிலுமுள்ள சிலம்புகள்முழங்கவும்.

அரசிலை வடிவமாகச்செய்த மாலையோடு முறுக்கமைந்த கயிறுகளும் அமைந்திருத்தலால் அதன்பின்னர் அணிநாண் என்றார். (கசு)

அடியிட்டுநிலங்கிளைத்தண்டமெண்டிக்கும்போர்ப்பப்
பொடியிட்டுயிர்த்துப்பொருகோட்டினிற்குத்திக்கோத்திட்
டிடியிட்டதிர்காரெதிரேற்றெழுந்தாங்குநோக்கிச
செடியிட்டிருகண்ணழல்சிந்தநடந்ததன்றே.

(இ-ள்.) அடியிட்டு நிலம் கிளைத்து - காலிட்டுப் பூமியைக்கிளைத்து, அண்டம் எண்டிக்கும் போர்ப்ப பொடி யிட்டு - அண்டமும் எட்டுத்திக்கும் புதைபடத் தூளியாடி, உயிர்த்து - பெருமூச்செறிந்து, பொரு கோட்டினில் குத்தி கோத்திட்டு- போர்செய்யும் தனது கொம்புகளால் அந்நிலவுலகைக் குத்திக் கோத்து, இடி யிட்டு அதிர் கார் எதிர் ஏற்று எழுந்தால் ஆங்கு நோக்கி - முழங்கிக் கோஷிக்கும் மேகத்தோடு எதிர்த்து எழுந்தாற்போலப் பார்த்து, செடி யிட்ட இரு கண் அழல் சிந்த நடந்தது - ஒளிமிக்க இரண்டுகண்களுங் கோபாக்கினி சிந்த நடந்தது.

போர்க்கெழுந்த இடபம் மேகத்தைத் தலையெடுத்துநோக்கித் துள்ளிச்செல்லுதல் இயல்பாதலால் காரெதிரேற்றெழுந்தாங்குநோக்கி நடந்தது என்றார். செடியிட்ட பெயரெச்சத்தின் அகரவீறு தொக்குநின்றது. (கஎ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பால்கொண்டநிழல்வெண்டிங்கட்பகிர்கொண்டமருப்பிற்கொண்மூச
சூல்கொண்டவயிற்றைக்கீண்டுதுள்ளியோர்வெள்ளிக்குன்றங்
கால்கொண்டுநடந்தாலென்னக்கடிந்துடன்றுவைசீற்ற
மேல்கொண்டுநாற்றம்பற்றிவீங்குயிர்ப்பெறிந்துகிட்டா.

(இ-ள்.) பால் கொண்ட நிழல் வெள் திங்கள் பகிர் கொண்ட மருப்பில்-வெள்ளிய ஒளிமிக்க அர்த்தசந்திரனை யொத்த கொம்பினால், சூல் கொண்ட வயிற்றை கீண்டு துள்ளி - சூல்கொண்ட மேகத்தினது வயிற்றைக்கிழித்து மேலே எழுந்து துள்ளி, ஓர் வெள்ளிக் குன்றம் கால் கொண்டு நடந்தால் என்ன கடிந்து - ஒரு வெள்ளியமலை கால்கொண்டு நடந்தாற்போல விரைந்து சென்று, உடன்று - பகைத்து, ஆவை சீற்றம் மேல் கொண்டு நாற்றம் பற்றி வீங்கு உயிர்ப்பு எறிந்து கிட்டா - பசுவினைக் கோபித்து நாற்றம்பற்றி நெட்டுயிர்ப்பெறிந்து கிட்டி.

வெள்ளிக்குன்றம் கால்கொண்டு நடந்தால் என்ன இல்பொருளுவமையணி.

குடக்கதுகுணக்கதென்னக்குணக்கதுகுடக்கதென்ன
வடக்கதுதெற்கதென்னத்தெற்கதுவடக்கதென்ன
முடுக்குறுமருப்பிற்கோத்துமுதுகுகீழாகத்தள்ளு
மெடுக்குறுமலையைக்கால்பேர்த்தெனத்திசைப்புறத்துவீசும்.

(இ-ள்.) குடக்கது குணக்கது என்ன குணக்கது குடக்கது என்ன - மேலைத்திசையில் உள்ள பசு அன்றே கீழைத்திசையில் உள்ளதென்றுசொல்லவும் கீழைத்

திசையில் உள்ளது அன்றே மேலைத்திசையில் உள்ளதென்று சொல்லவும், வடக்கது தெற்கது என்ன தெற்கது வடக்கது என்ன முடுக்குறும் - வடக்கில் உள்ளது அன்றே தெற்கில் உள்ளதென்று சொல்லவும் தெற்கில் உள்ளது அன்றே வடக்கில் உள்ளது என்றுசொல்லவு முடுக்கும், மருப்பில் கோத்து முதுகு கீழாகதள்ளும் எடுக்குறும் - கொம்பினால் கோத்து முதுகு கீழாகத் தள்ளும் எடுக்கும், மலையை கால் பேர்த்தால் என்ன - மலையைக் காற்றுப் பேர்த்துவீசினாற்போல, திசைப் புறத்து வீசும் - திசைகளின் புறத்தில்வீசும்.

குடக்கது, குணக்கது, வடக்கது, தெற்கது குறிப்பு வினைமுற்றுப்பெயர்கள்.

கொழுமணிச்சிகரகோடிசிதைபடக்குவட்டில்வீசும்
பழுமரச்செறிவில்வான்றோய்பணையிறவெறியும்வானின்
விழுமறப்பசுப்போல்வீழவேலைவாய்வீசுமிங்ஙன்
செழுமதிக்கோட்டுநந்தித்தேவிளையாடல்செய்து.

(இ-ள்.) கொழு மணி சிகர கோடி சிதை பட குவட்டில் வீசும் - உருவமுதிர்ந்த இரத்தினங்கள் நிறைந்த சிகரபந்திகள் தூள்பட எடுத்து மலையின்மேல் வீசும், பழு மரம் செறிவில் வான் தோய் பணை இற எறியும் - ஆலமரங்களின் நெருக்கினுள்ள வானுலகத்தை அளாவிய கொம்புகள் முறிய அவற்றின்மேல் வீசும், வானின் விழும் அறம் பசு போல் - விண்ணுலகினின்று கடலில் விழுந்து மறைந்தகாமதேனுவைப்போல, வேலை வாய் வீசும் - கடலில் வீழ எடுத்துவீசும், இங்ஙன் செழு மதி கோடு நந்திதே விளை யாடல் செய்து - இவ்வாறு அர்த்தசந்திரனையொத்தகொம்பினையுடைய நந்திநாயனார் போர்விளையாட்டுச்செய்து.

துருவாசமுனிவன் கோபத்தால் இந்திரனுடைய செல்வங்கள் முற்றுங் கடலிலொளித்தமையால் வானின்விழு மறப்பசுப்போல் வீழ என்றார். இங்ஙனம் ஈறு தொகுத்தல். கொழுமணி என்றமையால் உருவமுதிர்ந்த என்றார். (உ०)

பூரியரெண்ணியாங்கேபொருதுயிரூற்றஞ்செய்யா
தாரியவிடைதன்மாண்டவழகினைக்காட்டக்காமுற்
றீரியநறும்பூவாளியேறுபட்டாவியோடும்
வீரியம்விடுத்துவீழ்ந்துவெற்புருவாயிற்றன்றே.

(இ-ள்.) பூரியர் எண்ணிய ஆங்கே பொருது உயிர் ஊற்றம் செய்யாது - சமணர்களாகிய கீழ்மக்கள்எண்ணியபடியேபோர்செய்துஉயிர்கவராது, ஆரியம் விடை தன் மாண்ட அழகினை காட்ட காமுற்று - அழகிய இடபமானது தனது மாட்சிமைப்பட்ட வழகினைக்காட்ட அப்பசுவிரும்பி, ஈரிய நறும் பூவாளி ஏறு பட்டு - குளிர்ந்த நல்ல மலர்ப்பாணம் பாய்தலால், ஆவியோடும் வீரியம் விடுத்து வீழ்ந்து வெற்பு உரு ஆயிற்று - பிராணனோடு வீரியம்விட்டு நிலத்தின்மீதுவிழுந்து (வடபக்கத்தில்) ஒருமலையின்வடிவாய் விளங்கியது.

எண்ணிய ஈறுதொகுத்தல். வஞ்சனையால் வெல்லக்கருதினவராதலால் பூரியர் என்றார். (உக)

வாங்கினபுரிசைமாடமாநகரானுவின்பக்
தூங்கினவரவாய்வேம்பின்றேடவிழ்தாரான்றிண்டோள்

வீங்கினவிரவிதோன்றவீங்கிருளுடைந்ததென்ன
நீங்கினாணமோடுநிரையமண்குழாங்களெல்லாம்.

(இ-ள்.) வாங்கின புரிசை மாடம் மா நகர் ஆறாத இன்பம் தூங்கின - வளைந்த மதில்சூழ்ந்த மாடங்கள் நெருங்கிய பெரியநகரிலுள்ளோர் நீங்காதவின்பத்தி லழுந்தினார்கள், அரம் வாய் வேம்பின் தோடு அவிழ் தாரான் திண் தோள் வீங்கின - அரம்போல இருபக்கங்களிலும் வாயுள்ள இலைகள்நெருங்கிய வேம்பினது பூவிதழவிழ்ந்த மாலையையுடைய அனந்தகுணபாண்டியனுடைய திண்ணியதோள்கள் பருத்தன, இரவி தோன்ற வீங்கு இருள் உடைந்தது என்ன - சூரியனுதயஞ் செய்ய மிக்கவிருள் புறங்கொடுத்ததுபோல, நாணம் ஓடு நிரை அமண் குழாங்கள் எல்லாம் நீங்கின - நாணத்தோடு பந்திபந்தியாயுள்ள சமணக் கூட்டங்களெல்லாம புறங்கொடுத்தோடின.

அமண்குழாங்களெல்லாம் என வினைமுதலாக்கி நீங்கின என்னும் பயனிலையைக்கூட்டி முடிக்க. சினைக்குமுதலுக்கும் ஒற்றுமையுண்மையால் சினையின்வடிவை முதல்மேலேற்றி அரவாய்வேம்பு என்றார். (உஉ)

உலகறிகரியாத்தன்பேருருவினையிடபக்குன்றாக்
குலவுறநிறுவிச்சூக்கவடிவினாற்குறுகிக்கூடற்
றலைவனைவணங்கவீசன்றண்ணருள்சுரந்துபண்டை
யிலகுருவாகியிங்ஙனிருக்கெனவிருத்தினானே.

(இ-ள்.) உலகு அறி கரியாக தன்பேர் உரு வினை இடபக் குன்றாக குலவுற நிறுவி - உலகினரறிதற்குச் சாட்சியாகத் தனது பெரிய நூலவடிவத்தை அவ்விடபக்கத்தில் இடபமலையாக விளங்கநிறுத்தி, சூக்க வடிவினால் குறுகி கூடல் தலைவனை வணங்க - சூக்குமவடிவத்தோடுஞ் சென்று மதுரையி லெழுந்தருளிய இறைவனை வணங்க, ஈசன் தண் அருள் சுரந்து பண்டை இலகு உருவாகி இங்ஙன் இருக்க என இருத்தினான் - அவ்விறைவன் தண்ணிய திருவருள்சுரந்து முன்னுள்ள விளங்கும் உருவத்தையடைந்து இவ்விடத்தி லிருக்கவென இருக்கச்செய்தருளினான்.

யோர்செய்தற் கெடுத்துச்சென்ற வுருவாதலால் பேருருவினை நிறுவி யெனவும், இயற்கைவடிவு சூக்குமவடிவாதலால் சூக்கவடிவினிற் குறுகியெனவும், சிலைவடிவாகவென அருளுதலால் பண்டை எனவுங்கூறினார். இருக்க என்னும் வியங்கோளீறுதொக்கது. சூக்குமம் சூக்கம் பிராகிருதச் சிதைவு. (உ௩)

அங்கிலைநகருளாருமரசனுமகிழ்ச்சிதூங்கிச
சன்னிதியிருந்தநந்திதாளடைந்திறைஞ்சிப்போக
மின்னவிர்சடையானந்திவென்றிசால்வீறுநோக்கி
யின்னமுதனையாளோடுங்களிசிறந்திருக்குநாளில்.

(இ-ள்.) அங்கிலை நகர் உள்ளாரும் அரசனும் மகிழ்ச்சி தூங்கி - அப்பொழுது நகரிலுள்ளவர்களும் அனந்தகுண பாண்டியனும் களிப்பிலாழ்ந்து, சன்னிதி இருந்த நந்தி தாள் அடைந்து இறைஞ்சி போக - அருகிலிருந்த அதிகாரநந்திநாயனாருடைய திருவடியையடைந்து வணங்கிச்செல்ல, மின் அவிர் சடையான் நந்தி வென்றி சால் வீறு நோக்கி - மின்னல்போலும் விளங்குஞ்சடையையுடைய சோமசுந்தரக்கடவுள்

அந்தநாயகனுருடைய வெற்றியின் மிக்க இறுமாப்பைநோக்கி, இன் அமுது அனையாள் ஓடும் களி சிறந்து இருக்கும் நாளில் - இனியவமுதினை யொத்த அங்கயற்கண்ணியாரோடுங் களிகூர்ந்திருக்குங்காலையில்.

உமையார் ஓடுங் கலந்து நோக்கி என்றமையால் காவல் நந்திநாயனார் என்றது அதிகாரநந்திநாயனார் என்றும். வென்றி தனது பராசத்தியின் திறங்களுளொன்றாதலால் வென்றிசால்வீறுநோக்கி இன்னமுதனையாளோடுங் களிசிறந்தென்றார்.

அவ்விடைவரைமேன்முந்நீரார்கலியிலங்கைக்கேகுந்
தெவ்வடுசிலையிராமன்வானரசேனைசூழ
மைவரையனையதம்பிமாருதிசுக்கிரீவ
னிவ்வடல்வீரரோடுமெய்தியங்கிறுத்தான்மன்றே.

(இ-ள்.) அ விடை வரை மேல் முந் நீர் ஆர் கலி இலங்கைக்கு ஏகும் தெவ் அடு சிலை இராமன் - அந்த இடபமலையினமேல் கடல்சூழ்ந்த விலங்கைக்குச்செல்லும் பகைவரைவென்ற வில்லையேந்திய இராமமூர்த்தி, வானர சேனை சூழ - வானரப் படை புடைசூழ, மை வரை அனைய தம்பி மாருதி சுக்கிரீவன் - நீலமலையையொத்த இலட்சுமணனும் அநுமனும் சுக்கிரீவனுமாகிய, இ அடல் வீரர் ஓடும் எய்தி அங்கு இறுத்தான் - இந்த வெற்றியையுடைய வீரர்களோடுமடைந்து வசித்தான்.

கடலிடைக் குறையாதலால் முந்நீர் ஆர்கலி என்றதற்குக் கடல்சூழ்ந்த இலங்கையென்றும். வானரசேனை இரண்டும் வடசொல் ஆதலால் வருமொழிமுதல் வல்லெழுத்து இயல்பாயிற்று. (உரு)

அன்னதுதெரிந்துவிந்தமடக்கியமுனியங்கெய்தி
மன்னவற்காக்கங்கூறிமழவிடைக்கொடியோன்கூடற்
பன்னரும்புகழ்மையோதுபனுவலையருளிச்செய்ய
முன்னவன்பெருமைகேட்டுமுகிழ்த்தகைமுடியோனாகி.

(இ-ள்.) அன்னது தெரிந்து விந்தம் அடக்கிய முனி அங்கு எய்தி - அதனைத்தெரிந்து விந்தமலையை யடக்கிய அகத்தியமுனிவர் அவ்விடபமலையை யடைந்து, மன்னவன் கு ஆக்கம் கூறி - இராமமூர்த்திக்கு ஆசிவசனங்கூறி, மழவிடை கொடியோன் கூடல் பன் அரும் புகழ்மை ஓதும் பனுவலை அருளிச் செய்ய - இளமைபொருந்திய இடபக்கொடியையுடைய சோமசுந்தரக் கடவுளுடைய திருவாலவாயின் சொல்லுதற்கரிய மான்மியத்தைக்கூறும நூலினைத் திருவாய்மலர்ந்தருள, முன்னவன் பெருமை கேட்டு முகிழ்த்த கை முடியோன் ஆகி - அவ்விறைவனது பெருமையைக் கேட்டுக் கூப்பியகரங்களேறிய முடியையுடையவனாகி.

தருமசொரூபி என்பார் மழவிடைக்கொடியோன் என்றார். (உகூ)

முனியொடுகுறுகிச்செம்பொன்முளரியுண்மூழ்கியாதித்
தனிமுதலடியைவேணிமுடியுறத்தாழ்ந்துவேத
மனுமுறைசிவாகமத்தின்வழிவழாதருச்சித்தேத்திக்
கனிவுறுமன்பிலாழ்ந்துமுடிமிசைக்கரங்கள்கூப்பி.

(இ-ள்.) முனி ஒடு குறுகி செம் பொன் முளரி உள் மூழ்கி - அகத்தியமுனிவரோடுசென்று பொற்றாமரைத்தீர்த்தத்தில் நீராடி, ஆதி தனி முதல் அடியை வே

ணி முடி உற தாழ்ந்து - ஆதியாகிய ஒப்பற்ற முதல்வனுடைய திருவடியைத் தனது சடாமுடிபொருந்தவணங்கி, வேத மனு முறை சிவாகமத்தின்வழி வழாது - வேதமந்திரத்தின்முறையும் சிவாகமத்தின் நெறியும் வழுவாமல, அருச்சித்து ஏத்தி - அருச்சனைசெய்து வணங்கி, கனிவுறும் அன்பில் ஆழ்ந்து - கனிந்தபேரன்பில்மூழ்கி, முடிமிசை கரங்கள் கூப்பி - தனது தலையின்மேல் கைகளைக்குவித்து.

வேதம் உடலும் ஆகமம் உயிரும் ஆதலால் வேதமனுமுறை சிவாகமத்தின்வழி வழாது என்றார். (உஎ)

புங்கவசிவன் முத்திபுராதிபபுனிதபோக
மங்கலமெவற்றினுக்குங்காரணவடிவமான
சங்கரநினதுதெய்வத்தானங்களனந்தமிந்த
வங்கண்மாஞாலவட்டத்துள்ளனவவைகடம்மில்.

(இ-ள்.) புங்கவ - பிரமன்முதலிய எல்லாத் தேவர்களுக்கும் மேற்பட்டவனே, சிவன் முத்தி புராதிப - சிவன்முத்திபுரத்திற்கு அதிபனே, புனித போகம் மங்கலம் எவற்றினுக்கும் காரணவடிவம் ஆன சங்கர - (ஆன்மாக்களையும்) மாசில்லாத எல்லாப்போகங்களுக்கும் காரணவடிவாயுள்ளசங்கரனே, நினது தெய்வம் தானங்கள் அனந்தம் - உனது தெய்வததன்மையையுடைய தலங்க ளளவுபடாமல், இந்த அம் கண் மாஞாலம் வட்டத்து உள்ளன - இந்தஅழகிய இடமபரந்த பெரியநிலவுலகிலுள்ளன, அவைகள் தம்மில் - அத்தலங்களுள்.

ஆன்மாக்களுக்குப் போகமருளுதற்பொருட்டுத் திருவருளையே திருவுருவமாகக்கொண்டருளுதலால் புனிதபோக - மங்கலமெவற்றினுக்குங் காரணவடிவமான சங்கர என்றார். சங்கரன் என்னும்பதம் சுபந்தருவோன் என்னும்பொருட்டு "உருவருள் குணங்களோடு முணர்வருளுருவிற்றோன்றுங் - கருமமுமருளரன்றன்கர சரணுதிசாங்கந்-தருமருளுபாங்கமெல்லாந் தானருடனக்கொன்றின்றி-அருளுருவுயிருக்கென்றே யாக்கினனசிந்தனன்றே" என்னும் ஏதுவாலு முணர்க. (உஅ)

கலிநிலைத்துறை.

அற்புதப்பெரும்பதியிந்தமதுரையீதாற்றப்
பொற்புடைத்தென்பதெவன்பலபுவனமுநின்பாற்
கற்புவைத்துயநீசெய்தகருமத்தின்விருத்தம்
வெற்புருக்களாய்ப்புடைநின்றுவிளங்கலான்மன்னோ.

(இ-ள்.) அற்புதம் பெரும்பதி இந்த மதுரை ஈது ஆற்ற பொற்பு உடைத்து என்பது - ஞானவடிவமாய்ப் பெரியதலமாயுள்ள இந்தமதுரையாகியவிது மிகவுஞ் சிறந்ததென்று கூறுதல், எவன் - யாதுகாரணமென்று வினவில், பல புவனமும் நின்பால் கற்புவைத்து உய்ய - பலவுலகங்களு முன்னிடத்து உறுதிவைத்துப்பிழைக்க, நீசெய்த கருமத்தின் விருத்தம் - நீசெய்த திருவிளையாடலின் சரித்திரம், வெற்பு உருக்களாய் புடை நின்று விளங்கலால் - மலைகளின் உருவங்களாய்ப் பக்கங்களினின்று விளங்குதலால்.

இத்தலம் எல்லாத்தலங்களினு மிகவுஞ்சிறந்ததென்பது காட்சிப்பிரமாணத்தால் விளங்கியதென்பான் நீசெய்த கருமத்தின்விருத்தம் வெற்புருக்களாய்ப் புடைநின்று விளங்கலால் என்றார். (உக)

கண்டவெல்லையிற்றுன்பங்கள்களைதற்குமளவைக்
கண்டரும்பெருஞ்செல்வங்களளித்தற்குங்கருணை
கொண்டுநீயுறைசிறப்பினுற்குளிர்மதிக்கண்ணி
யண்டவாணவிவ்விலிங்கத்துக்கொப்புவேருமோ.

(இ-ள்.) கண்ட எல்லை இல் துன்பங்கள் களைதற்கும் - தெரிசித்தவப்பொழுதே துன்பங்களைக் களைதற்கும், அளவைக்கு அண்ட அரும் பெரும் செல்வங்கள் அளித்தற்கும் - அளததற்கரிய இந்திரன்முதலியோர் பெருஞ்செல்வங்களைத் தந்தருளுதற்கும, கருணை கொண்டு நீ உறை சிறப்பினுல்-திருவருள்கொண்டு நீஇடைவிடாது வசித்தருளுஞ் சிறப்பினுல், குளிர் மதி கண்ணி அண்ட வாண - குளிர்ந்த மூன்றும் பிறையை மாலையாகவணிந்த தேவதேவனே, இ இலிங்கததுக்கு ஒப்புவேருமோ - இந்த இலிங்கமூர்த்தத்துக்கு வேருக வேரர்இலிங்கமூர்த்த முளதோ.

தனதுமனைவியைப்பிரிந்த பெருந்துன்பத்தாலாற்றுது நிலைகலங்கிய இராமமூர்த்தி அத்துன்பம் தெரிசித்தபொழுதே பொழிந்தனனென்பான் கண்டவெல்லையிற் றுன்பங்கள் களைதற்கும் எனவும், பிரிந்தமனைவியை இன்றேபெற்றேன் என்பான் அளவைக்கண்டரும் பெருஞ்செல்வங்களளித்தற்கும் எனவும், இவ்வாறுஅடியார் வேண்டியாங்கே பெறுதல் இம்மூர்த்தத்தனறி வேறுமூர்த்தத்தில்லையென்பான் இவ்விலிங்கத்துக் கொப்புவேருமோ எனவுங் கூறினன். (௩௦)

தோய்ந்திடும்பொழுதீட்டியதொல்வினைப்படல
மாய்ந்திடும்படிமாய்த்துநின்மங்கலபோக
மீந்திடும்படிக்கிருந்தமாதீர்த்ததினியல்பை
யாய்ந்திடும்பொழுததற்கொருதீர்த்தமொப்பாமோ.

(இ-ள்.) தோய்ந்திடும் பொழுது - நீராடுங்காலையில், ஈட்டிய தொல்வினை படலம மாய்ந்திடும்படி மாய்த்து - பிறவிகள்தோறுஞ் சேகரித்த தொன்றுதொட்டுள்ள சஞ்சிதவினையின் திரட்சிகெடும்படி சிதைத்து, நின் மங்கலபோகம் ஈந்திடும்படிக்கு இருந்தமாதீர்த்தத்தின் இயல்பை - உனது மங்கலகரமாகிய சிவபோகத்தைக் கொடுக்கும்படிக்கு அமைந்த பொற்றாமரைத்தீர்த்தத்தின் இலக்கணத்தை, ஆய்ந்திடும் பொழுது அதற்கு ஒரு தீர்த்தம ஒப்பாமோ - ஆராய்ந்து நோக்குங்காலையில் அத்தீர்த்தத்துக்கொத்த வொருதீர்த்தமும் நிலவுலகில் உள்ளதோ (இல்லையென்றபடி.)

சிவஞானப்பேற்றுற்கழியும் சஞ்சிதமும், திருவருளாலடையுஞ் சிவபோகமும் எளிதிற்றருவது இத்தீர்த்தம் என்பான் தோய்ந்திடும்பொழுதீட்டிய தொல்வினைப்படலம் - மாய்ந்திடும்படிமாய்த்துநின் மங்கலபோகம் ஈந்திடும்படிக்கிருந்தமாதீர்த்தம் எனவும், அந்தத் தீர்த்தத்தின்மாணமியத்தை நுண்ணியஅறிவால் நோக்குவார்க்கு ஒப்புயர்விகந்தது என்பான் இயல்பை ஆய்ந்திடும்பொழுததற்கொரு தீர்த்தமொப்பாமோ எனவுங்கூறினன். (௩௧)

எத்தலத்தினுமொவ்வொன்றுவிழுமிதாமிந்த
மெய்த்தலத்திலிம்மூவகைவிழுப்பமும்விளங்கு
மத்தவாதலாலித்தலமடைந்தவரொவர்க்குஞ்
சித்தசுத்தியும்பல்வகைச்சித்தியும்பயக்கும்.

(இ-ள்.) எத்தலத்திலும் ஒவ்வொன்று விழுமிது ஆம்-எந்தச் சிவதலங்களிலும் மூர்த்தி தலம் தீர்த்தமென்னு மூன்றினுள், ஒவ்வொன்று மேலாய்விளங்கும், இந்த மெய்த்தலத்தில் இ மூவகைவிழுப்பமும் விளங்கும் - இந்தவுண்மையாகியதலத்தில் இம்மூவகைச்சிறப்பும் மேம்பட்டுவிளங்கும், அந்த - இறைவனே, ஆதலால் இத்தலம்-ஆலவாயாலிந்தத தலமானது, அடைந்தவர் எவர்க்கும் சித்தசுத்தியும் பலவகை சித்தியும் பயக்கும் - தன்னையடைந்தோ ரெவர்க்கும் சித்தசுத்தியையும் அணிமாமுதலிய பலவகைச்சித்திகளையுங் கொடுக்காநிற்கும்.

சித்தசுத்தியாவது - நித்தநைமித்திககருமங்களைச் செளர்ப்பணமாகச்செய்தலால்வரும்பேறு. பலவகைச்சித்திகளாவன - அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம, ஈசத்துவம், வசித்துவம். இவற்றின் செயல்களை அட்டமாசித்தியுபதேசித்த படலத்திற்காண்க. (கூஉ)

அடியனேனெண்ணுங்கருமமுஞ்சாதமேயாக
முடியுமாவரிதச்செயன்முடியுமெப்படியப்
படிபுரிந்தருள்கடிதெனப்பணிந்தனன்பரனு
நெடியவான்படுமமுதெனவெதிர்மொழிநிகழ்த்தும்.

(இ-ள்.) அடியனேன் எண்ணும் கருமமும் சாதமே ஆக முடியுமாறு அரிது- அடியேனெண்ணியடைந்த கருமமும் உண்மையாகமுடியும் வண்ணமரியதோ, அச்செயல்முடியும - அந்தசகருமம் எளிதாகமுடியும், எப்படி அப்படி கடிது புரிந்தருள் என பணிந்தனன்-(உனது திருவருள்) எவ்வாறோ அவவாறு செய்தருளாய் என்று வணங்கினன், பரனும் நெடிய வான் படும் அமுது என எதிர்மொழி நிகழ்த்தும் - சோமசுந்தரக்கடவுளும்பரநத வாகாயத்திற்றேன்று மமுதம்போல ஓர் அசரீரிகூறியருளுகின்றார்.

உனது திருவருளுக்கிற் கிலக்காகிய எனது செயல் முடிவது எளிதென்பான் அச்செயல்முடியும எனவும, உனது அருளாணையின் வழிப்பட்டேன என்பான் எப்படியப்படி புரிந்தருள் கடிதெனப்பணிந்தனன எனவுங்கூறினன். (கூகூ)

அறுசீரடியாசிரியவிருத்தம.

இரவிதன்மரபின்வந்தவிராமகேளெமக்குத்தென்கீழ்
விரவியதிசையிற்போகிவிரிகடற்சேதுகட்டிக
கரவியவுள்ளக்கள்வன்கதிர்முடிப்பத்துஞ்சிந்தி
யரவமேகலையினளையருஞ்சிறையழுவநீக்கி.

(இ-ள்.) இரவி தன் மரபில் வந்த இராம கேள் - சூரியனுடைய மரபில்வந்த இராமனேகேளாய், எமக்கு தென் கீழ் விரவிய திசையில் போகி - எமக்குத் தெற்குங் கிழக்குமாய்க்கலந்த தென்கிழ்த்திசையிற்சென்று, விரி கடல் சேது கட்டி - விரிந்த கடலில் சேதுபந்தனஞ்செய்து, கரவிய உள்ளம் கள்வன் கதிர் முடி பத்தும் சிந்தி-கள்ளமமைந்த மனத்தையுடைய இராவணனது விளக்கமமைந்த பத்துத்தலைகளையுந் துணித்து, அரவம் மேகலையினளை அரும் சிறை அழுவம் நீக்கி - ஒலிக்கு மேகலையையுடைய சானகியை அடைதற்கரிய சிறைக்கூடமாகிய நடுங்குமிடத்தினின்றும் நீக்கி.

தென்கிழக்கு தெற்குங் கிழக்கும் விரவிய ஒரு கோணமாதலால் தெற்குங் கிழக்குமாய்க் கலந்ததென் கீழ்த்திசையென்றும். (கூச)

மீண்டுநின்னயோத்தியெய்திவிரிகடலுலகம்பன்
னாண்டினிதிருந்துமேனாள்வைகுண்டமடைவாயாக
வீண்டுநீகவலைகொள்ளேலெனுமசரீரிகேட்டு
நீண்டவன்மகிழ்ந்துதாழ்ந்துநிருத்தனைவிடைகொண்டேகி.

(இ-ள்.) மீண்டும் நின் அயோத்தி எய்தி-மீளவு முனது அயோத்தியை யடைந்து, விரி கடல் உலகம் பல் நாள் ஆண்டு இனிது இருந்து - விரிந்த கடல்சூழ்ந்த உலகினைப் பலநாளும் அரசியளடத்தி இடையூறின்றி யிருந்து, மேல் நாள் வைகுண்டம் அடைவாய் ஆக - அதன்மேல் நீ வைகுண்டத்தை யடைவாயாக, ஈண்டு நீ கவலை கொள்ளேல் எனும் அசரீரி கேட்டு-இவ்விடத்தில் நீ கவலைகொள்ளாதே என்றுகூறு மசரீரியைக்கேட்டு, நீண்டவன் மகிழ்ந்து தாழ்ந்து நிருத்தனை விடைகொண்டு ஏகி - இராமமூர்த்தி மகிழ்கூர்ந்துவணங்கிச் சோமசுந்தரக்கடவுளினிடத்து விடைபெற்றுச்சென்று.

பதினோராயிரம் வருடம் என்பார் பன்னாளாண்டு எனக்கூறினார். (கரு)

மறைப்பொருளுரைத்தோன்சொன்னவண்ணமேயிலங்கையெய்தி
யறத்தினைத்தின்றபாவியாவிதின்றனையான்செல்வத்
திறத்தினையிளவற்கீந்துதிருவிராமேசங்கண்டு
கறைப்படுமிடற்றினானையருச்சித்துக்கருணைவாங்கி.

(இ-ள்.) மறைப் பொருள் உரைத்தோன் சொன்னவண்ணமே இலங்கை எய்தி - வேதத்திற்குப் பொருள்கூறியருளிய சோமசுந்தரக்கடவுள் சொன்னபடியே இலங்கையையடைந்து, அறத்தினை தின்ற பாவி ஆவி தின்று - தருமத்தை வேரோடு களைந்த பாவியாகிய இராவணனுடைய உயிர்குடித்து, அனையான் செல்வம் திறத்தினை இளவற்கு ஈந்து - அவ்விராவணனுடைய செல்வப்பகுதியை அவன்தம்பியாகிய விபீஷணனுக்குக்கொடுத்து, திரு இராமேசம் கண்டு கறை படு மிடற்றினானை அருச்சித்து கருணை வாங்கி-இராமேச்சரமென்னுந்திருப்பதியைக் கந்தமாதனத்தினருகே பிரதிட்டைசெய்து விஷம்பொருந்திய ஸ்ரீகண்டத்தையுடைய சிவபெருமானை நிறுவி அருச்சனைசெய்து அவர்திருவருளைப்பெற்று.

இராவண னுயிர்வாங்கிய பிரமகத்தியைப் போக்கக் கந்தமாதனத்தினெல்லையில் இராமேச்சரம் என்னும் ஓர் திருப்பதியாக்கி ஓர் சிவலிங்கதாபனஞ் செய்து, இராமமூர்த்தி யருச்சித்துப் பேறுபெற்றான் என்பது புராணவரலாறு. "ஏர்பயிலிராமனன்றிராமநாதனும், பேர்பயிலீசனைப்பிரதிட்டையாற்றியே, சீர்பயிலருச்சனைசெய்தவெல்லையாங், கார்பயில்சாரல்சூழ்கந்தமாதனம்" எனவருதல் சேதுபுராணத்திற் காண்க. (கசா)

பற்றியபழியினீங்கியிந்திரன்பழியைத்தீர்த்த
வெற்றிகொள்விடையினானைமீளவும்வந்துபோற்றி
யற்றிரளனையகோதைக்கற்பினுக்கரசியோடுஞ்
சுற்றியசடையிராமன்றென்னகரடைந்தானிப்பால்.

(இ-ள்.) பற்றிய பழியின் நீங்கி - தன்னைப்பற்றிய பிரமகத்தியினின்றுநீங்கி, இந்திரன் பழியை தீர்த்த வெற்றி கொள் விடையினானை மீளவும் வந்து போற்றி-தே

வேந்திரனுடைய பிரமகத்தியையொழித்த வெற்றிமிக்க இடபவூர்தியையுடையசோமசுந்தரக்கடவுளை மீளவும் வந்து வணங்கி, அல் திரள் அனைய கோதை கற்பினுக்கு அரசியோடும் - இருளின் திரட்சியையொத்த கூந்தலையுடைய கற்புக்கரசியாகிய சீதையோடும், சுற்றிய சடை இராமன் தொல் நகர் அடைந்தான் - வட்டமாகச்சுற்றிய சடையையுடைய இராமமூர்த்தி தொன்றுதொட்டுள்ள அயோத்தியை யடைந்தான், இப்பால் - இப்புறம்.

சோமசுந்தரக்கடவு ளருளியவண்ணமே பேறுபெற்றமையால் மீளவும் வந்து போற்றி யென்றார். (கஎ)

கலிநிலைத்துறை.

செங்கோலனந்தகுணமீனவன்றேயங்காப்பக்
கொங்கோடவிழ்தார்க்குலபூடணன்றன்னையீன்று
பொங்கோதைஞாலப்பொறைமற்றவன்பாலிறக்கி
யெங்கோனருளாற்சிவமாநகரேறினானே.

(இ-ள்.) செங்கோல் அனந்தகுண மீனவன் - செங்கோலையேந்திய அனந்தகுணபாண்டியன், தேயம் காப்ப கொங்கு ஓடு அவிழ்தார் குலபூடணன் தன்னை ஈன்று - நிலவுலகைக்காக்க மகரந்தத்தோடு அவிழ்ந்தமாலையையணிந்தகுலபூடணனைப் பெற்று, பொங்கு ஓதை ஞாலம் பொறை அவன் பால் இறக்கி - தான்சுமந்தவீங்கும் கடல்சூழ்ந்த பூபாரத்தை அக்குலபூடணன்இடத்து இறக்கி, எங்கோன் அருளால் சிவமாநகர் ஏறினான் - சோமசுந்தரக்கடவுளின் திருவருளால் சிவபுரத்திற் குடியேறினான்.

அரசன்கண்ணை யிமைகாத்தல்போல உயிர்களைச் சோராது காக்கவேண்டுதலின் ஞாலப்பொறையெனவும், இறக்கியெனவுங் கூறினார். (கஅ)

மாயப்பசுவைவதைத்தபடலம் முற்றிற்று.

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - கசுசுங.

## முப்பதாவது

# மெய்க்காட்டிட்டபடலம்.

கொச்சகக்கலிப்பா.

பாவமெனவடிவெடுத்தபடிற்றமணர்பழித்தழல்செய்
தேவவருமறப்பசுவையேறுயர்த்தோன்விடைநந்திக்
காவலனைவிடுத்தழித்தகதையுரைத்துமட்டாலைச்
சேவகன்மெய்க்காட்டிட்டுவிளையாடுந்திறமுரைப்பாம்.

(இ-ள்.) பாவம் என வடிவு எடுத்த படிறு அமணர் பழி தழல் செய்து ஏவ வரும் மறப்பசுவை - பாவமேவடிவெடுத்தாலொத்த வஞ்சனையையுடைய சமணர்க

ன் ஆபிசாரயாகஞ்செய்து ஏவவந்த கொலைத்தொழிலையுடைய பசுவை, ஏறு உயர்த்தோன் விடை நந்தி காவலனை விடுத்து அழித்த கதை உரைத்தும் - இடபக்கொடியையுயர்த்திய சோமசுந்தரக்கடவுள் இடபவடிவாயுள்ள அதிகார நந்திநாயனாரை ஏவிஅழித்த திருவிளையாடலைக் கூறினோம், அட்டாலை சேவகன் மெய்காட்டிட்டு விளையாடும் திறம் உரைப்பாம் - அட்டாலைச்சேவகனாய்வந்த சோமசுந்தரக்கடவுள் திருமேனிகாட்டியருளிய திருவிளையாடலைக் கூறுவாம்.

இங்குக்குதிரைவீரராக எழுந்தருளினமையால் அட்டாலை' சேவகன் என்றார். அதனை முன்னர்க்காண்க. (க)

வெவ்வியமும்மதயானைவிறற்குலபூடணன்சமண
ரவ்வியவஞ்சனைகடந்தவனந்தகுணச்செழியன்பாற்
செவ்வியசெங்கோல்வாங்கித்திகிரிதிசைசெலவுருட்டி
வவ்வியவெங்கலிதுரந்துமண்காத்துவருகின்றான்.

(இ-ள்.) வெவ்விய மும்மதம் யானை விறல் குலபூடணன் - கொடிய மும்மதங்களையுடைய யானைச்சேனையின் வெற்றிமிக்க குலபூடணபாண்டியன், சமணர் அவ்வியம் வஞ்சனை கடந்த அனந்தகுணம் செழியன் பால் - சமணர்களதுபொறாமையால் விளைந்த வஞ்சத்தைக் கடந்த அனந்தகுண பாண்டியனிடத்து, செவ்விய செங்கோல் வாங்கி திகிரி திசை[illegible]ருட்டி - கோடாத செங்கோலைத் தனது கையில் வாங்கித் தனது ஆணையாகிய சக்கரத்தைத் திசைகள்தோறுஞ் செல்லச் செலுத்தி, வவ்விய வெம் கலி துரந்து மண் காத்து வருகின்றான் - உலகினைத் தன்வசப்படுத்திய கொடிய கலியினையோட்டி நிலவுலகைக் காத்துவருகின்றவனாயினான்.

பாண்டிநாட்டை யழிக்கப் பசுவையேவியது பொறாமையால் விளைந்ததாதலால் காரியத்தைக் காரணமாக உபசரித்து அவ்விய வஞ்சனையெனவும், கோடாத செங்கோலால் கலியொழிதல் சரதமாதலால் வெங்கலிதுரந்து எனவுங்கூறினார். (உ)

சவுந்தரசாமந்தனெனத்தானைகாவலனொருவன்
செவந்தசடைமுடியண்ணலடியவரேசிவமாகக்
கவர்ந்தொழுகியருச்சிக்குங்கடப்பாட்டினெறிநின்றா
னுவந்தரசற்கிருமைக்குந்துணையாகியொழுகுநாள்.

(இ-ள்.) சவுந்தர சாமந்தன் என தானை காவலன் ஒருவன் - சுந்தரசாமந்தர் என ஒரு சேனாபதி யொருவர், செவந்த சடை முடி அண்ணல் அடியவரே சிவமாக கவர்ந்து ஒழுகி - செவந்த சடாமுடியை யுடைய சிவபெருமான் அடியவரையே அச்சிவபெருமானாகத் தனது இருதயத்தில் இடைவிடாதுகொண்டு அக்கொள்கைக்கேற்கப் பத்திமைபூண்டு, அருச்சிக்கும் கடப்பாட்டின் நெறி நின்றான் - அருச்சித்து வழிபடும் உறுதியின் வழியினின்றவராய், உவந்து அரசற்கு இருமைக்கும் துணை ஆகி ஒழுகுநாள் - விரும்பிக் குலபூடணபாண்டியனுக்கு இகபோகத்துக்கும் பரபோகத்துக்கும் துணைவனாய் நடக்குங்காலையில்.

பாண்டியன் பொருளைப் பலவழியாலும் சிவபெருமான் திருப்பணிக்கும், அவனடியவரை யுபசரித்தற்கும் பயன்படுத்தினமையால் உவந்தரசற்கிருமைக்குந் துணையாகி யொழுகுநாள் எனக்கூறினார். (௩)

வல்வேடர்க்கதிபதியாய்வருசேதிராயனெனும்
வில்வேடனொருவனவன்விறல்வலியான்மேலிட்டுப்
பல்வேறுபரிமான்றேர்ப்பஞ்சவன்மேற்படையெடுத்துச்
செல்வேனென்றுறவலித்தான்றென்னர்பிரானதறிந்தான்.

(இ-ள்.) வல் வேடர்க்கு அதிபதியாய் வரு சேதிராயன் என்னும் வில்வேடன் ஒருவன் - வலியவேடர்களுக் கரசனுயுள்ள சேதிராயனென்னும் பெயரையுடைய வில்லையேந்திய வேடனொருவனுள்ளான், அவன் விறல் வலியால் மேலிட்டு - அச்சேதிராயன் வெற்றியின்வலிமையால் இறுமாப்படைந்து, பல் வேறு பரி மான் தேர் பஞ்சவன் மேல் படை எடுத்து செல்வேன் என்று உறவலித்தான் - பலவேறுவகைப்பட்ட குதிரைகள் பூண்டதேரையுடைய குலபூடணபாண்டியன்மேல் தண்டெடுத்துச் செல்வேன் என்று மிகவும் மனவூக்கங்கொண்டு எழுந்தான், தென்னர் பிரான் அதை அறிந்தான் - அப்பாண்டிய னதனையுணர்ந்து.

பாண்டியன் சேனையின் சிறுமையைநோக்கிப் போர்க்கெழுந்தான் என்பார படையெடுத்துச்செல்வேனென்றுறவலித்தான் என்றார். அடியில்வரும் செய்யுளில் என்றான் என்று முற்றொடுமுடிதலின் அறிந்தான் முற்றெச்சம். (௪)

தன்னதுதாணிழலின்றசாமந்தன்றனைப்பார்த்தெம்
பொன்னறைதாழ்திறந்துநிதிமுகந்தளித்துப்புதிதாக
வின்னமுநீசிலசேனையெடுத்தெழுதிக்கொள்கென்று
னன்னதுகேட்டீசனடிக்கன்புளானென்செய்வான்.

(இ-ள்.) தன்னது தாள நிழல் நின்ற சாமந்தன் தனைப் பார்த்து - தனதுகால்நிழலின்கீழ் நின்ற சுந்தரசாமந்தனைப் பார்த்து, எம் பொன் அறை தாழ் திறந்து நிதி முகந்து அளித்து - எமது கருவூலத்தின் தாழைத்திறந்து பொருளை வேண்டியவாறு எடுத்துச் செலவுசெய்து, இன்னமும் புதிதாக நீ சில சேனை எடுத்து எழுதி கொள்க என்றான் - இன்னமும் புதிதாக நீ சிலசேனைகளை யீட்டி நமக்கு உரிமையாகப் பதிவுசெய்துகொள்ளக்கடவாய் என்றுகூறினான், அன்னது கேட்டு ஈசன் அடிக்கு அன்புள்ளான் என் செய்வான் - அதனைக்கேட்டுச் சிவபெருமான் திருவடிக்கு அன்பு பூண்ட அச்சுந்தரசாமந்தர் என்னசெய்வார் எனனில்.

அவனதருகில் நிற்பவர் ஆதலால் தாணிழனின்றசாமந்தன் என்றார். (௫)

தென்னவர்கோன்பணித்தபணிபின்றள்ளச்சிந்தையிலன்
புன்னவரனருள்வந்துமுன்னீர்ப்பவொல்லைபோய்ப்
பொன்னறைதாழ்திறந்தறத்தாறீட்டியிடும்பொற்குவையுட்
டன்னதுளத்தவாவமையத்தக்கநிதிகைக்கவரா.

(இ-ள்.) தென்னவர் கோன் பணித்த பணி பின் தள்ள - குலபூடணபாண்டியன் ஏவிய ஏவல்பின்னேநின்று தள்ளுதலால், சிந்தையில் அன்பு அரன் அருள் வந்து உன்ன முன் ஈர்ப்ப - தனதுமனத்திலுள்ள சிவநேயமும் சிவபெருமான் திருவருளும்வந்து யாவரும் கருதும்படி முன்னின்றுஇழுக்க, ஒல்லை போய் பொன் அறை தாழ்திறந்து அறத்து ஆறு ஈட்டி இடும் பொற்குவையுள் - விரைந்துசென்று கருவூலத்தின்தாழைத்திறந்து தருமத்தின்வழி தேடியதிரவியக்குப்பலுள், தன்னது உ

ளத்து அவா அகமைய தக்க நிதிகை கவரா - தனதுமனத்திலெழுந்த ஆசைக்கமைய அளவிறந்தபொருளைக் கொள்ளைகொண்டு.

அரசனுக்கு உறுதிபயக்குங் காரியங்களில்சிறிதும் வேசறுது நின்று அதனை முட்டின்றிமுடிப்போன் ஆதலால்பின் தள்ளவெனவும, அவ்வரசன் பொருள்முறம் இரங்குவான் பணியறங்களிற் செலுத்தினமையால் அரனருள்வந்து முன்னிப்பனவும்,ஆறிலொருகூறு,அரசன் குடிகள்பாற்பெற்றோங்கியசெல்வமாதலால் அறத்தாறீட்டியபிடும் பொற்குவையுமெனவுங் கூறினர். (கூ)

எண்ணிறந்தகளிப்பினேடுந்திருக்கோயிலிடத்தணைந்து
கண்ணிறைந்தபொன்முளரிக்கயந்தலைநீர்படிந்துதன
துண்ணிறைந்தமெய்யன்பினெளியுருவாய்முளைத்தெழுந்த
பண்ணிறைந்தமறைப்பொருளைப் பணிந்திறைஞ்சியிதுவேண்டும்

(இ-ள்.) எண் இறந்த களிப்பின் ஒடும் திருக்கோயில் இடத்து அணைந்து - எல்லையில்லாத மகிழ்ச்சியோடும் திருக்கோயிலையடைந்து, கள் நிறைந்த பொன் முளரி கயந்தலை நீர்படிந்து - தேன்நிறைந்த பொற்றாமரைத்தீர்த்தத்தில் நீராடி, தனது உள்நிறைந்த மெய் அன்பின் ஒளி உருவாய் முளைத்து எழுந்த - தனது மனத்தில்நிறைந்த மெய்யன்பின் ஒளிவடிவமாய் முளைத்துததோன்றிய, பண் நிறைந்த மறை பொருளை பணிந்து இறைஞ்சி இது வேண்டும் - இசைநிறைந்த வேதத்தின்பொருளாயுள்ள சோமசுந்தரக்கடவுளை வணங்கி இதனை வேண்டாநின்றர்.

வாக்குமனதீத கோசரருகிந திருவருளையே திருமேனியாகக்கொண்டு சுத்ததத்துவபுவனத்தில்வசிக்கும இறைவன், தனைவழிப்படும் ஆன்மாக்களுக்கு அருளுதற்பொருட்டுப்புறத்தே திருக்கோயிலுள்ளிருக்கும் திருமேனியையே ஆதாரமாகக்கொண்டமர்ந்தருளுதலால் உண்ணிறைந்த மெய்யன்பினெளியுருவாய் முளைத்தெழுந்த என்றர். (எ)

பண்ணியலுனமறைவிரித்தபரமேட்டியெங்கோமா
னெண்ணியகாரியமுடிப்பாயிவையுனக்குமுன்னடிக்கி
ழண்ணியமெய்யடியவர்க்குமாதக்கவெனவிரந்தப்
புண்ணியமாநிதிமுழுதுமவ்வழியேபுலப்படுப்பான்.

(இ-ள்.) பண் இயல் நால் மறை விரித்த பரமேட்டி - இசைமயமாகிய நான்குவேதத்தின் பொருள்களையும் சனகாதிமுதலிய முனிவர்களுக்கு விரித்தருளிய பரமேட்டியே, எம் கோமான் எண்ணியகாரியம் முடிப்பாய் - எமது கோமானுகிய குலபூடணபாண்டியன் எண்ணியகாரியங்களை யிடையூறின்றி முடிப்பாய், இவை உனக்கும் உன் அடிக்கீழ் அண்ணிய மெய் அடியவர்கரும் ஆதக்க என இரந்து - இப்பொருள்கள் உனக்கும் உனது திருவடிக்கீழ்க்கலந்த மெய்யன்பினையுடைய அடியவர்க்கும் ஆகக்கடவனவென்று குறைஇரந்து, அப்புண்ணிய மாநிதி முழுதும் அவ்வழியே புலப்படுப்பான் - அந்தப்புண்ணிய வழியால் ஈட்டிய பெரியபொருள் முற்றும் தான்குறையிரந்தவழியே செலுத்துவானுயினன்.

பரமேட்டி உயர்ந்தநிலையிலுள்ளவன். திருக்கோயிலுள்ளிருக்குந் திருமேனியை ஆதாரமாகக் கொண்டமர்ந்தருளுதலுமன்றி அடியார் திருவேடத்தையும் ஆதாரமாகக் கொண்டமர்ந்தருளுதலால் உன்னடிக்கீழண்ணிய மெய்யடியவர்க்கும் ஆதக்

கவென்றார் "தாமரசங்கடங்களென்றிரண்டுருவினின்று-மாபரன்பூசைகொண்டு மன்னுயிர்க்கருளை வைப்பன்" என்ற வதுவாலுணர்க. (அ)

அண்டமுகடுரிஞ்சிநிமிர்கோபுரமுமாயிரக்கான்
மண்டபமுங்கண்டிகையும்வயிரமணிக்கோளகையுங்
குண்டலமுந்தண்டரளக்குடைநிரையுங்கொடிநிரையுங்
கண்டனன்முன்னவனருளாற்பிறப்பேழுங்களைகண்டோன்.

(இ-ள்.) அண்டம் முகடு உரிஞ்சி நிமிர் கோபுரமும் - வானின்முகட்டையுரிஞ்சி நிமிர்ந்தகோபுரத்தையும், ஆயிரக்கால் மண்டபமும்-ஆயிரக்கால் மண்டபத்தையும், கண்டிகையும் வயிரமணி கோளகையும்-கண்டிகைகளையும் வைரத்தாற்செய்த வாகுவலயத்தையும், குண்டலமும் தண் தரளம் குடைநிரையும் கொடி நிரையும் - குண்டலங்களையும்தண்ணிய முத்தால்சமைந்த குடையின் பந்திகளையும் துவசபந்திகளையும், முன்னவன் அருளால் பிறப்பு எழும் களை கண்டோன் கண்டனன்- சோமசுந்தரக்கடவுளின் திருவருளால் எழுபிறப்பாகிய எழுகடலையுங்களைகண்ட சுந்தர சாமந்தர்செய்தமைத்தார்.

இரங்குவான் பணியறங்கள் பிறவிக் கடலைக்கடப்போர்செயல்கள் ஆதலால் முன்னவனருளாற் பிறப்பேழுங்களை கண்டோன் கண்டனனென்றார். (௯)

வானாடாககவியுணவின்வகைமுந்நூன்மன்றன்முத
னானாஞ்சிறுவேள்விநான்மறையோர்க்கறுசுவையி
னானதபேருண்டிதுறவடைந்தோர்க்கருத்துபலி
தானாதிபலவேறுதருமநனிதழைவித்தான்.

(இ-ள்.) வானாடர்க்கு அவி உணவின் வகை - தேவர்களுக்கு அவியுணவு உண்பிக்கும் பெரியயாகங்களையும், முந்நூல் மன்றல் முதல் நானா ஆம் சிறு வேள்வி-உபவீதகல்யாணமுதலிய பலவகைப்பட்ட சிறியவேள்விகளையும், நான் மறையோர்க்கு அறு சுவை யின் ஆனதபேர் உண்டி-அந்தணருக்கு அறுசுவையமைந்தகறியினின்றும் நீங்காத பெரியவுணவுகளையும், துறவடைந்தோர்க்கு அருத்து பலி தானம் ஆதி வேறு பல தருமம்-துறவிகளுக்கு உண்பிக்கும் பிச்சையையும் பூதானமுதலாகப் பலவகைப்பட்ட தருமங்களையும், நனி தழை வித்தான் - மிகவும் பெருகச்செய்துவந்தார்.

உபவீத கல்யாண முதலியன வேள்விக்கு அருகராக்குதலின் முந்நூல்மன்றன் முதல் நானாஞ் சிறுவேள்வி என்றார். (௧௦)

எவரேனுமுருத்திரசாதனங்கண்டாலெதிர்வணங்கி
யவரேநம்பிறப்பறுக்கவடிவெடுத்தவரனென்று
கவராதவன்புள்ளங்கசிந்தொழுகவருச்சித்துச்
சுவையாறினமுதருத்தியெஞ்சியவின்சுவைதெரிவான்.

(இ-ள்.) எவரேனும் உருத்திர சாதனம் கண்டால் எதிர் வணங்கி - யாவராயினும் சிவசாதனம் தாங்கினார்ஆயின் அவரை யெதிரேவணங்கி, அவரே நம் பிறப்பு அறுக்க வடிவு எடுத்த அரனென்று - அவரே நம்முடையபிறப்பினை வேரோடறுக்கத் திருவுருவெடுத்தருளிவந்த சிவபெருமானென்று, கவராத அன்பு உள்ளம்

கசிந்து ஒழுக அருச்சித்து - பிளவுபடாத அன்பால் மனம்நெக்குவிட்டுருக வழிப ட்டருச்சித்து, சுவை ஆறின் அமுது அருத்தி எஞ்சிய இன்சுவை தெரிவான் - அறு சுவையமைந்த திருவமுது உண்பித்துப் பரிகலத்திலெஞ்சிய இனியசுவையமைந்த சேடத்தை உண்பாராயினர்.

எக்குலத்தராயிருப்பினும் என்பார் எவரேனும் எனவும், அவர்கள் விபூதிமு தலிய சிவசாதனங்களுடையராயின் என்பார் உருத்திரசாதனங்கண்டால் எனவும், அவரே சிவபெருமானார் என்பார் அவரே நம்பிறப்பறுக்கவடிவெடுத்த வரன்எனவு ம், அவரை யருச்சித்தல் சிவபெருமானை யருச்சித்தலை யொக்குமென்பார் கவராத அன்புள்ளங் கசிந்தொழுக வருச்சித்து எனவும், அவரையுண்பித்தல் சிவபெருமானு க்குண்பித்தலை யொக்கும் என்பார் சுவை யாறி னமுதருத்தியெனவும், கன்மமலத் தைக்கெடுத்துப் பாகம்வருவிக்கும் என்பார் எஞ்சிய இன்சுவை தெரிவான்எனவுங் கூறினர். எவரேனும் உருத்திரசாதனங்கண்டால் என்பதற்கு "சங்கநிதிபதுமநிதி யிரண்டுந்தந்து தரணியொடுவானாளத்தருவரேனும் - மங்குவாரவர்செல்வமதிப்போ மல்லோ மாதேவர்க்கேகாந்தரல்லராகில் - அங்கமெல்லாங்குறைந்தழுகுதொழுநோ யாரா யாவுரித்துத்தின்றுழலும்புலையரேனும்-கங்கைவார்சடைகரந்தார்க்கன்பராகி லவர்கண்டீர்நாம்வணங்குங்கடவுளாரே" எனவரும் ஆளுடையரசுகள் திருப்பாசுர த்தாலும், அவரையருச்சித்தலும் அவரையுண்பித்தலும் சிவபெருமானை யருச்சித்த லையும் உண்பித்தலையும் ஒக்கும் என்றதற்கு "அருத்துகவமலன்றன்னை யகத்துணர் ந்தவரையன்னங் - கருத்திருந்தவர்க்குச்செய்த பூசனைகடவுள்கொள்வன் - ஒருத்த னுக்குபசாரங்க ளுடலிடையுலகர்செய்வர் - பிரித்துடலுயிரைப்பேணும் பெற்றியை யாரேபெற்றார்" எனவரும் சிவதருமோத்தரத்தாலும் உணர்க. (கக)

இன்றைக்காயிரநாளைக்கிருமடங்குவருநாட்கு
மன்றைக்கன்றிருமடங்காவரசனதுபொருளெல்லாங்
கொன்றைச்செஞ்சடையார்க்குமடியார்க்குங்கொடுப்பதனைத்
தென்றற்கோன்செவிமடுத்தான்சேனைக்கோனிதுசெய்வான்.

(இ-ள்.) இன்றைக்கு ஆயிரம் நாளைக்கு இருமடங்கு - இன்றைக்கு ஆயிரம் பொன் நாளைக்கிரண்டாயிரம்பொன், வருநாட்கும் அன்றைக்கு அன்று இருமடங் கு ஆக - இனிவரும் நாள்களுக்கும் அன்றைக்கன்று இவ்விருமடங்காக, அரசனது பொருள் எல்லாம் - பாண்டியனது பொருள்களையெல்லாம், கொன்றை செஞ்ச டை யார்க்கும் அடியார்க்கும் கொடுப்பதனை - கொன்றைமாலையை அணிந்த செவ ந்தசடையையுடைய சிவபெருமானார்க்கும் அவரது அடியார்க்கும் மாறுதுகொடுத் துவருதலை, தென்றல் கோன்செவி மடுத்தான் - தென்றற்காற்றுத்தோன்றும் பொ தியமலைக்கு அரசனாகிய பாண்டியன் கேள்விப்பட்டான், சேனைக்கோன் இது செ ய்வான் - சேனாபதியாகிய சுந்தரசாமந்தர் பின்வருங் காரியங்களைச் செய்யத்தொ டங்கினார்.

ஒவ்வொருநாளும் இவ்விருமடங்காகச் செய்துவந்தாராதலால் அன்றைக்கன் றிருமடங்கா எனவும், தென்றல், தானமாகிய பொதியமலையையுணர்த்தி நிற்றலால் தென்றற்கோன் எனவுங் கூறினர். (கஉ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

காவலனவையத்தெய்திக்காரியஞ்செய்வாரோடு
மேவினன்பிறநாட்டுள்ளவீரர்க்குவெறுக்கைபோக்கிச்

சேவகம்பதியவோலைசெலவிடுத்தழைப்பான்போலப்
பாவகஞ்செய்துதீட்டிப்பட்டிமையோலையுய்ப்பான்.

(இ-ள்.) காவலன் அவையத்து எய்தி காரியம் செய்வாரோடு மேவினன் - பாண்டியனுடைய சபையையடைந்து அரசகாரியம் செய்வாரோடு கலந்து, பிற நாடு உள்ள வீரர்க்கு வெறுக்கை போக்கி - பிறதேசங்களிலுள்ள சேனைவீரர்க்குப் பொருள் அனுப்பி, சேவகம் பதிய ஓலை செலவிடுத்து அழைப்பான் போல - சேவகத்திற் பதிவுசெய்யத் திருமுகம் அனுப்பிஅழைப்பார்போல, பாவகஞ் செய்து - பாவனைகாட்டி, பட்டிமை ஓலை தீட்டி உய்ப்பான் - வஞ்சனையாகத் திருமுகமெழுதி அனுப்புவார் ஆயினார்.

சிவபெருமானே எடுத்தகாரியத்தை முடிக்கவல்லார் எனத்துணிந்து கவர்ந்தபொருள் முற்றும் அவர் வழிச்செலவிட்டவராதலால் அரசனுக்குத்திண்ணணைந்தான்றச்செய்தார் என்பார் பாவகஞ்செய்து தீட்டிப் பட்டிமையோலையுய்ப்பான் என்றார். (௧௩)

எழுதுகதெலுங்கர்க்கோலையெழுதுககலிங்கர்க்கோலை
யெழுதுகவிராடர்க்கோலையெழுதுகமாராடர்க்கோலை
யெழுதுககொங்கர்க்கோலையெழுதுகவங்கர்க்கோலை
யெழுதுகதுருக்கர்க்கோலையென்றுபொய்யோலைவிட்டான்.

(இ-ள்.) தெலுங்கர்க்கு ஓலை எழுதுக - தெலுங்குநாட்டிலுள்ள சேனைவீரர்க்கு ஓலையெழுதக்கடவீர், கலிங்கர்க்கு ஓலை எழுதுக - கலிங்கநாட்டிலுள்ள சேனைவீரர்க்கு ஓலையெழுதக்கடவீர், விராடர்க்கு ஓலைஎழுதுக - விராடதேசத்துச் சேனைவீரர்க்கு ஓலையெழுதக்கடவீர், மாராடர்க்கு ஓலைஎழுதுக-மாராடநாட்டில்உள்ள சேனைவீரர்க்கு ஓலையெழுதக்கடவீர், கொங்கர்க்கு ஓலைஎழுதுக - கொங்கநாட்டில்உள்ள சேனைவீரர்க்கு ஓலையெழுதக்கடவீர், அங்கர்க்குஓலை துருக்கர்க்கு ஓலை எழுதுக என்று - அங்கநாட்டில்உள்ள வீரர்க்குந் துருக்கநாட்டில்உள்ள வீரர்க்கும் ஓலையெழுதக்கடவீர் என்று, பொய் ஓலை விட்டான் - பொய்த்திருமுகம் அனுப்பினார். (௧௪)

எங்குமிப்படியேயோலைசெலவிடுத்திருப்பவாறு
திங்களினளவுமந்தச்சேவகர்வரவுகாணா
தங்கதிர்வேலான்சேனைக்கரசனையழைத்துநாளை
வெங்கதிர்படுமுன்சேனையாவையும்விளித்தியென்றான்.

(இ-ள்.) எங்கும் இப்படியே ஓலை செலவிடுத்து இருப்ப - எவ்விடத்தும் இவ்வாறே திருமுகம்அனுப்பி வாளாஇருக்க, ஆறு திங்களின் அளவும் அந்த சேவகர் வரவு காணாது - ஆறுமாதம்காறும் அவ்வத்தேயத்துச் சேனைவீரர்கள் வருகையைக் காணாமல், அம் கதிர் வேலான் சேனைக்கு அரசனை யழைத்து - அழகிய ஒளிவாய்ந்த வேலையேந்தியபாண்டியன் சேனைபதியாகிய சுந்தர சாமந்தனை அழைத்து, நாளை வெங்கதிர் படு முன் சேனை யாவையும் விளித்தி என்றான் - நாளைத்தினம் சூரியன் அத்தமித்தற்குமுன் சேனைவீரர்களெல்லோரையும் அழைப்பாயென்று கட்டளையிட்டான்.

காலந்தாழ்த்தலால்தான் கேள்வியுற்றது திண்ணம் எனத்தேர்ந்தானாதலால் நாளைவெங்கதிர்படுமுன் சேனையாவையும் விளித்தியென்றான் என்றார். (௧௫)

என்றமன்னவனுக்கேற்கச்சாமந்தனிசைந்துவெள்ளி
மன்றவனடிக்கீழ்வீழ்ந்துவள்ளலேயரசனீந்த
குன்றுறழ்நிதியமெல்லாங்கொண்டெனைப்பணிகொண்டாயே
வன்றிறற்சேனையீட்டும்வண்ணம்யாதென்னநின்றான்.

(இ-ள்.) என்ற மன்னவனுக்கு ஏற்க - என்றுகூறிய குலபூடணபாண்டியனுக்குப் பொருந்த, சாமந்தன் இசைந்து - சுந்தரசாமந்தர் உடன்பட்டு, வெள்ளி மன்றவன் அடிக்கீழ் வீழ்ந்து-வெள்ளியம்பலத்தில் நடித்தருளும இறைவனது திருவடிக்கீழ்வீழ்ந்து, வள்ளலே அரசன் ஈந்த குன்று உறழ் நிதியம் எல்லாம் கொண்டு என்னை பணிகொண்டாயே-எனதுவள்ளலே சேனையீட்டுதற்கு அவ்வரசன் கொடுத்த மலையை ஒத்த பொருளையெல்லாம் கொள்ளைகொண்டு என்னைக் குற்றேவலனாகக்கொண்டாயே, வன்திறல் சேனை ஈட்டும் வண்ணம் யாது என்ன நின்றான் - வலியசேனையைச்சேகரிக்கும் வகையாதென்று குறையிரந்துநின்றார்.

எனதுடல்பொருளாவிமுற்றும் நின்னவேயென்பார் நிதியமெல்லாங்கொண்டெனைப்பணிகொண்டாயே எனவும், அதையீட்டுதற்கு ஓர் இடையூறுவரின் அது நின்னதேயென்பார் சேனையீட்டும்வண்ணம் யாதென்னநின்றான் எனவுங்கூறினார். (கசு)

அடியவர்குறைவுதீர்த்தாண்டருள்வதேவிரதம்பூண்ட
கொடியணிமாடக்கூடற்கோமகன்காமற்காய்ந்த
பொடியணிபுராணப்புத்தேட்புண்ணியனருளினாலே
யிடியதிர்விசும்புகீறியெழுந்ததோர்தெய்வவாக்கு.

(இ-ள்.) அடியவர் குறைவுதீர்த்து ஆண்டு அருள்வதே விரதம்பூண்ட கொடி அணி மாடம் கூடல் கோமகன் - தனது அடியவர்குறைவைத்தவிர்த்து அடிமைகொண்டருள்செய்தலையே விரதமாகக்கொண்டருளிய துவசம்கட்டிய மாடங்கள் நெருங்கிய மதுரையில் எழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளும், காமன் காய்ந்தபொடி அணி புராணம் புத்தேள் புண்ணியன் அருளினால்-மன்மதனை நீறுக்கிய விபூதியையணிந்த பழம்பொருளாகிய தெய்வத்தன்மைபொருந்திய தருமக்கடலாகிய இறைவனுடைய திருவருளினால், ஓர் தெய்வவாக்கு-ஒரு அசரீரி, இடி அதிர் விசும்பு கீறி எழுந்தது - இடிமுழங்கும் ஆகாயத்தின் வயிறுகிழித்து எழுந்தது.

பக்தவற்சலனுதலால் அடியவர்குறைவுதீர்த்தாண்டருள்வதே விரதம்பூண்ட என்றார். (கஎ)

சூழ்ந்தெழுசேனையோடுந்தோற்றுதுநாளைநீயும்
வீழ்ந்தரசவையத்தெய்திமேவுதியென்னவிண்ணம்
போழ்ந்தெழுமாற்றங்கேட்டுப்பொருநரேறுவகைவெள்ளத்
தாழ்ந்தனன்முந்நீர்வெள்ளத்தலர்கதிரவனுமாழ்ந்தான்.

(இ-ள்.) சூழ்ந்து எழு சேனையோடும் நாளைதோற்றுதும் - நம்மைச்சூழ்ந்தெழுந்த சேனாவீரர்களோடு நாளைக்குவருகின்றோம், நீயும் அரசு அவையத்து வீழ்ந்து எய்தி மேவுதி என்ன - நீயும் அரசனுடைய சபையைவிரும்பி அடைய நாளைக்குவருவாயென்று, விண்ணம் போழ்ந்து எழும் மாற்றம் கேட்டு-ஆகாயத்தின் வயிற்றைக்கிழித்து எழுந்த அசரீரியைக்கேட்டு, பொருநர் ஏறு உவகைவெள்ளத்து ஆழ்ந்தனன் - போர்வீரராகிய யானைகளுக்கு ஆண்சிங்கம்போன்ற சுந்தர சாமந்தர் சந்

தோஷக்கடலில் அழுந்தினர், மூந்நீர் வெள்ளத்து அலர்கதிரவனும் ஆழ்ந்தான்-கடற்பெருக்கில் பரந்தகிரணத்தை உடைய சூரியனும் அழுந்தினன் (அத்தமித்தான்) என்றபடி.

எய்தி செயவெனெச்சத்திரிபு. (கஅ)

மீனவன்காணமேருவில்லிதன்றமரைவன்கண்
மானவேன்மறவராக்கிவாம்பரிவீரனாகத்
தானுமோர்கூத்துக்கோலஞ்சமைந்துவந்தாடவிட்ட
நீனிறவெழினிபோலக்காரிருணிவந்ததெங்கும்.

(இ-ள்.) மீனவன் காண - கயற்கொடியையுடைய குலபூடணபாண்டியன்காண, மேரு வில்லி தன் தமரை வன்கண் மானம் வேல் மறவர் ஆக்கி - மகாமேருவை வில்லாக உடைய சோமசுந்தரக்கடவுள் தனது பிரமதகணங்களை அஞ்சாமையையுடைய மானமிக்கவேலையேந்திய வீரராக்கி, தானும் ஒர்வாம்பரிவீரன் ஆக-தானும் ஒருதாவும்குதிரைச்சேவகனாக, கூத்துக்கோலம் சமைந்து வந்து ஆட இட்ட-திருக்கூத்துசெய்யும் திருக்கோலம்பூண்டுவந்து ஆடப்போட்ட, நீல் நிறம் எழினி போல எங்கும் கார் இருள் நிவந்தது - நீலநிறத்தையுடைய கரந்துவரல் எழினியைப்போல எவ்விடத்தும் கரிய இருள் நிரம்பியது.

பிரமன்முதலியோர் தலைப்பெய்துசெய்யும் போர்முகத்தும் அஞ்சாவீரர் என்பார் வன்கண்மறவர் எனவும், சிறந்தவீரர் என்பார் உடையவர்தொழிலே யுடைமைமேலேற்றி மானவேல் எனவும், அடியர்க்கெளியர் என்பர் வாம்பரிவீரனாகத் தானும் ஓர் கூத்துக்கோலஞ்சமைந்து எனவும், ஆன்மாக்களுய்தற்பொருட்டு என்பார் உவந்தாட எனவும் கூறினர். எழினி மூன்றனுள் கரந்துவரலெழினி என்றது கோலமறைத்து வருமிடத்திடுந் திரைச்சீலை. எழினி மூன்று என்றது ஒருமுகவெழினி, பொருமுக எழினி, கரந்துவரலெழினியை. எழினி திரைச்சீலை. சூரியனுதயாத்தமனங்கூறுதல் பெருங்காப்பியத்தினிலக்கணமாதலால் இதனுற் சூரியனத்தமனங்கூறப்பட்டது. கவி இருள் பரவியதைச் சிவபெருமானுர் தாமோர் குதிரைவீரராகத் திருக்கோலஞ்சமைந்து திருவிளையாடல்செய்ய முன்யிட்ட நீலத்திரைச்சீலையாகப்பெயர்ச்சியில் பொருள்மேலேற்றிக்கூறினமையால் தற்குறிப்பேற்றவணி. (கக)

புண்ணியமனையிற்போகிப்புலர்வதெப்போழ்தென்றெண்ணி
யண்ணல்சாமந்தன்றுஞ்சானடிக்கடியெழுந்துவானத்
தெண்ணிறைமீனநோக்கிநாழிகையெண்ணியெண்ணிக்
கண்ணுதலெழுச்சிகாண்பானளந்தனன்கங்குலெல்லாம்.

(இ-ள்.) புண்ணிய மனையில்போகி - சிவபுண்ணிய நிலைபெற்ற தன்து இல்லில் சென்று, எப்பொழுது புலர்வது என்று எண்ணி - எப்பொழுது விடியும் என்று கருதி, அண்ணல் சாமந்தன் துஞ்சான் அடிக்கடி எழுந்து - பெருமையிற்சிறந்த சுந்தரசாமந்தர்கண் டுயில்கூராமல் அடிக்கடி நித்திரையில் நின்றுமெழுந்து, வானத்து எண் நிறை மீனம் நோக்கி நாழிகை எண்ணி எண்ணி-வானத்திற்பூத்த அளவில்லாத நட்சத்திரங்களைப்பார்த்து கழியும் நாழிகையை வரையறுத்து, கண்ணுதல் எழுச்சி காண்பான் கங்குல் எல்லாம் அளந்தனன் - சிவபெருமான் எழுந்தருளும் திருக்கோலத்தைக்கண்டு களிகூர இராமுற்றும் அளவுசெய்தனர்.

என்றுஞ் சிவனடியார்களை உபசரித்துப் பூசித்தவருதற்கோர் தானமாயிருத்தலில் புண்ணியமனையெனவும், அரசன்கடமையை முற்றச்செலுத்துங் கருத்தின

ரும் சிவபெருமான் திருவருள்வடிவைக்கண்டு தரிசிக்கும் பேரவாவுடையவரும் ஆதலில் கந்குலெல்லாம் அளந்தனன் எனவுங்கூறினார். (உ0)

தெருட்டருமறைகடேருச்சிவபராஞ்சுடரோனன்பன்
பொருட்டொருவடிவங்கொண்டுபுரவிமேற்கொண்டுபோது
மருட்படையெழுச்சிகாண்பான்போலவார்கலியின்மூழ்கி
யிருட்டுகள்கழுவித்தூயவிரவிவந்துதயஞ்செய்தான்.

(இ-ள்.) தெருள் தரும் மறைகள் தேருச் சிவபராஞ்சுடரோன் - தெளிவுமிக்க வேதங்கள் தெளிந்துணராத சிவபராஞ்சுடராகிய சோமசுந்தரக்கடவுள், அன்பன் பொருட்டு ஒருவடிவங்கொண்டு புரவிமேல்கொண்டுபோதும் அருள்படை எழுச்சி காண்பான்போல - தனதன்பராகிய சுந்தரசாமந்தர்பொருட்டு ஒருதிருவுருவங்கொண்டு குதிரைமேல் எழுந்துவரும் திருவருட்படை எழுச்சியைக்காண்பவனைப்போல, ஆர்கலியில் மூழ்கி - கடலில்மூழ்கி, இருள் துகள் கழுவிதூய இரவிவந்து உதயம் செய்தான் - இருளாகிய அழுக்கினைப்போக்கிப் புனிதமாகியசூரியன் கீழைக்கடலில் வந்து உதயஞ்செய்தான்.

ஆன்மாக்கள் விதிவிலக்குகளை யையந்திரிபறவுணர்ந்துய்ய அறியாமையைப் போக்குதலால் தெருட்டருமறைகள் எனவும், இவை பாசஞானமாகிய சொற்பிரபஞ்சம் ஆதலால் தேரு எனவும், இறைவனைத்தரிசிப்போர்க்கு அகத்தூய்மையுமின்றிப் புறத்தூய்மையும் வேண்டும் ஆதலால் ஆர்கலியின்மூழ்கி யிருட்டுகள் கழுவியெனவுங்கூறினார். இதுவும் பெருங்காப்பியத்தின் ஒருறுப்பு. இதுபெயர்பொருட்டற்குறிப்பேற்றவணி.

பொருநரேறனையானேர்ந்துபோந்துநான்மாடக்கூடற்
கருணைநாயகனைத்தாழ்ந்துகைதொழுதிரந்துவேண்டிப்
பரவிமீண்டொளிவெண்டிங்கட்பன்மணிக்குடைக்கீழேகிக்
குருமதிமருமான்கோயில்குறுகுவான்குறுகுமெல்லை.

(இ-ள்.) பொருநர் ஏறு அனையான் நேர்ந்து போந்து-வீரர்களுள் ஆண்சிங்கம்போன்ற சுந்தரசாமந்தர் மனமிசைந்துசென்று, நான்மாடக்கூடல் கருணைநாயகனை தாழ்ந்து கைதொழுது இரந்துவேண்டி பரவிமீண்டு - நான்மாடக்கூடலாகிய மதுரையில் எழுந்தருளிய கிருபாமூர்த்தியாகிய சோமசுந்தரக்கடவுளைப்பணிந்து கைகூப்பிக் குறைகூறிவேண்டித் துதித்துத்திரும்பி, ஒளிவெண் திங்கள் பல்மணி குடைக்கீழ் ஏகி - விளங்கும் வெள்ளியசந்திரனை ஒத்த அளவில்லாத விலையையுடைய முத்துகளை வரிசைபட விளிம்பிற்கோத்த தவளவட்டக்குடை நிழற்கீழ்ச்சென்று, குருமதிமருமான்கோயில் குறுகுவான் - நிறந்தங்கிய சந்திரன்மரபிற்றோன்றிய பாண்டியனது கோயிலுக்குச்செல்லுவானாயினன், குறுகும் எல்லை - அவ்வாறுசெல்லுங்காலையில்.

சிவபெருமான் திருவாக்கால் மனந்தெளிந்தவராதலால் நேர்ந்து எனவும், தமக்குரியவரிசையோடுஞ் சென்றனராதலால் வெண்டிங்கட் பன்மணிக்குடைக்கீழேகியெனவுங் கூறினார். (உஉ)

கரைமதியெயிற்றுச்சங்குகன்னன்முன்னனவென்றிப்
பிரமதகணமுங்குண்டப்பெருவயிற்றொருவனுதி

வரைபுரைகுறுந்தாட்பூதமறவருங்குழுமிவீக்கு
குரைகழல்வலியநோன்றாட்கேளுடைவயவராகி.

(இ-ள்.) கரைமதி எயிறு சங்கு கன்னன்முன் ஆனவென்றி பிரமதகணமும் - பலருங்கூறும் அர்த்தசந்திரனையொத்த வக்கிரதந்தங்களையுடைய சங்குகன்னன் முதலாகிய வெற்றியையுடைய பரிசனமாயுள்ள சிவகணங்களும், குண்டம் பெருவயிறு ஒருவன் ஆதி - ஆழ்ந்தபெரியவயிற்றினையுடைய குண்டோதரன்முதலாகிய, வரை புரை குறும் தாள் பூத மறவரும் குழுமி - மலையையொத்த சிறியகால்களையுடைய பூதவீரர்களுந் தம்முள்நெருங்கி, வீக்கு குரைகழல வலிய நோன் தாள் கேள் உடைவயவராகி - கட்டிய ஒலிக்கும் வீரகண்டையையுடைய வலியகாலையும் வன்மையையுமுடைய வீரர்களாகி. (உ௩)

நெட்டிலைவடிவாள்குந்தந்தோமரநேமிநெய்த்தோ
ரொட்டியகணிச்சிசாபமுடம்பிடிமுதலாவெண்ணப்
பட்டவெம்படைமூவாறும்பரித்தசெங்கையர்காலிற்
கட்டியகழலர்காலிற்கடியராய்ப்புறம்புகாப்ப.

(இ-ள்.) நெடு இலை வடிவாள் குந்தம் தோமரம் நேமி - நெடிய தகட்டுவடிவாகிய வடித்தவாளும் பெருஞ்சவளமும் எறியாயுதமும் சக்கரமும், நெய்த்தோர் ஒட்டிய கணிச்சிசாபம் உடம்பிடிமுதலாக - உதிரம்பொருந்திய மழுவும் வில்லும் வேலும் முதலாக, எண்ணப்பட்ட வெம்படை மூ ஆறும் பரித்தசெங்கையர்-வரையறுத்தெண்ணப்பட்ட கொடிய பதினெட்டாயுதங்களையும் ஏந்திய செவந்தகையையுடையவரும், காலில்கட்டிய கழலர் - காலிற்கட்டிய வீரகண்டையையுடையவரும், காலில் கடியர் ஆய் புறம்பு காப்ப - காற்றினும் விரைந்துசெல்லும் நடையையுடையவருமாய்ப் புறம்பிற்காத்துச் சூழ்ந்துவரவும். (உ௪)

வார்கெழுகழற்கானந்திமாகாளன்பிருங்கிவென்றித்
தார்கெழுநிகும்பன்கும்போதரன்முதற்றலைவர்யாரும்
போர்கெழுகவசந்தொட்டுப்புண்டரநுதலிற்றீட்டிக்
கூர்கெழுவடிவாளேந்திக்குதிரைச்சேவகராய்ச்சூழ.

(இ-ள்.) வார்கெழு கழல் கால் நந்தி மாகாளன் பிருங்கி வென்றி தார்கெழு நிகும்பன் கும்போதரன் முதல் தலைவர் யாரும் - வாரிற்கோத்த வீரகண்டைகட்டிய காலையுடைய நந்தியும் மாகாளனும் பிருங்கியும் வெற்றிமாலையையணிந்த நிகும்பனும் கும்போதரனு முதலிய சிவகணத்தலைவரெல்லாம், போர்கெழு கவசம் தொட்டு - போரிற்குரிய கவசம்பூண்டு, புண்டரம் நுதலில் தீட்டி - திரிபுண்டரத்தை நெற்றியிலணிந்து, கூர்கெழு வடிவாள் ஏந்தி - கூர்மைமிக்க வடித்தவாளினையேந்தி, குதிரைசேவகராய் சூழ - குதிரைவீரராய்ச்சூழ்ந்துவரவும். (உ௫)

கற்றைச்சாமரைகள்பிச்சங்கவிகைபூங்கொடிக்காடெங்கு
முற்றக்காரொலியுநாணத்தூரியமுழுதுமேங்கக்
கொற்றப்போர்விடையைத்தானேகுரங்குளைப்பரியாமேற்கொண்
டொற்றைச்சேவகராய்மாறியாடியவொருவர்வந்தார்.

(இ-ள்.) கற்றை சாமரைகள் பிச்சம் கவிகை பூம் கொடிக்காடு எங்கும் முற்ற - நெருங்கிய சாமரைகளும் பீலிக்குடைகளுந் தவளக்குடைகளும் பொலிவையுடைய துவசக்காடுகளும் எங்கும் சூழ்ந்துவரவும், கார் ஒலியும் நாண தூரியம் முழு

தும் ஏங்க - மேகத்தின் முழக்கமும் நாண வாச்சியமுற்றும் ஒலிக்கவும், கொற்றம் போர்விடையை தானே - வெற்றியையுடைய போர்க்குரிய இடபவூர்தியையே, குரங்கு உளைபரியா மேற்கொண்டு - வளைந்த புறமயிரையுடைய குதிரையாக ஆரோகணித்தருளி, ஒற்றைச்சேவகராய் மாறியாடிய ஒருவர்வந்தார் - ஒப்பில்லாதவீரராய்க் கால்மாறியாடிய பெருமானார்வந்தருளினார்.

தமக்குத்தருமமே யூர்தியாதலால் விடையைத்தானே குரங்குளைப்பரியா மேற்கொண்டு எனவும், ஒப்புயர்விகந்தோராதலால் ஒற்றைச்சேவகராய் எனவுங் கூறினார். (உசு)

பல்லியமொலிக்குமார்ப்பும்பாய்பரிகலிக்குமார்ப்புஞ்
செல்லொலிமழுங்கமள்ளர்தெழித்திடுமார்ப்புமொன்றிக்
கல்லெனுஞ்சும்மைத்தாகிக்கலந்தெழுசேனைமேனாண்
மல்லன்மாநகர்மேற்சீறிவருகடல்போன்றதன்றே.

(இ-ள்.) பல் இயம் ஒலிக்கும் ஆர்ப்பும் - பலவாச்சியங்கள் ஒலிக்குங்கோஷமும், பாய்பரி கலிக்கும் ஆர்ப்பும் - பாய்ந்துசெல்லுங்குதிரைகள் கோஷிக்குமுழக்கமும், செல் ஒலி மழுங்க மள்ளர் தெழித்திடும் ஆர்ப்பும் ஒன்றி - மேகத்தின் ஒலிமழுங்க வீரர்பேரொலிசெய்யும் அரவமும் தம்முட்பொருந்தி, கல்லெனும் சும்மைத்து ஆகி கலந்து எழுசேனை - கல்லெனும் ஆரவாரத்தையுடையதாகிக் கலந்தெழுந்தசேனைவருகை, மேல் நாள் மல்லல் மாநகர்மேல் சீறி வருகடல் போன்றது - (வருணனேவ) முன்னாள் வளப்பந்தங்கிய பெரியமதுரைநகர்மேற்கோபித்து வராநின்ற கடலையொத்தது.

சேனைபெருக்கினும் விரைவினுஞ் சிறந்ததென்பார் மல்லன் மாநகர்மேற்சீறி வருகடல்போன்ற தன்றேயென்றார். (உஎ)

சேனையின்வரவுநோக்கித்திருமகன்றிருமுன்னெருந்
தானையர்தலைவன்றென்னன்றாணிழல்குறுகிக்கூற
மீனவனுவகைபூத்துவெயின்மணிக்கடையிற்போந்தங்
கானமண்டபத்திற்செம்பொனரியணைமீதுவைகி.

(இ-ள்.) சேனையின் வரவுநோக்கி திருமகன் திருமுன் ஏகும் தானையர் தலைவன் - சேனையின்வருகையை நோக்கிக் குலபூடணன் திருமுன்சென்ற சேனைத்தலைவர்கட்குத் தலைவராகிய சுந்தரசாமந்தர், தென்னன் தாள் நிழல் குறுகி கூற-அப்பாண்டியனது பாதநிழலையடைந்து சேனையின்வரவை எடுத்துக்கூற, மீனவன் உவகை பூத்து வெயில்மணி கடையில் போந்து - பாண்டியன் மகிழ்கூர்ந்து விளக்கமமைந்த இரத்தினமழுத்திய கடைவாயிலில்வந்து, அங்கு ஆன மண்டபத்தில் செம்பொன் அரி அணைமீது வைகி - அவ்விடத்தமைந்த மண்டபத்தில் செவந்தபொன்னாலாகிய சிம்மாசனத்தின்மேல்தங்கி.

மணி பொன்முதலிய பெருஞ்செல்வத்தினனாதலால் அரசனைத் திருமகன் என்றார். (உஅ)

தெவ்வடுமகிழ்ச்சிபொங்கச்சேனையின்செல்வநோக்கி
யெவ்வெத்தேயத்திலுள்ளாரிவரொனவெதிரேநின்று
கௌவையின்மனச்சாமந்தன்கையிற்பொற்பிரம்புநீட்டி
யவ்வவர்தொகுதியெல்லாமணியணிசிறுவிக்கூறும்.

(இ-ள்.) தெவ் அடு மகிழ்ச்சிபொங்க சேனையின் செல்வம் நோக்கி - சேதிராயனுகிய பகைவனைக்கொல்லும் மகிழ்ச்சிமீக்கூரச் சேனையின்பெருக்கத்தைப்பார்த்து, இவர் எவ்வெத்தேயத்தில் உள்ளார் என - இவர்கள் எந்தெந்தத்தேசத்திலுள்ள சேனுவீரர்களென்றுவினவ, கௌவை இல் மனச்சாமந்தன் எதிரேநின்று-வருத்தமில்லாத மனத்தையுடைய சுந்தரசாமந்தர் பாண்டியன் எதிரேநின்று, கையில் பொன் பிரம்பு நீட்டி அவ்வவர் தொகுதி எல்லாம் அணி அணி நிறுவிகூறும் - கையிலேந்திய பொற்கட்டமைந்த பிரம்பினைநீட்டி அச்சேனுவீரர்கள் கூட்டங்களை எல்லாம் வரிசை வரிசையாக நிறுத்திக்கூறுகின்றார்.

அரசனுக்குச் சேனையையென்றிறப்போம என்னுங் கவலையொழிந்தனராதலால் கௌவையின் மனச்சாமந்தன் என்றார். (உக)

கலிவிருத்தம்.

கொங்கரிவரையகுருநாடரிவரைய
கங்கரிவரையகருநாடரிவரைய
வங்கரிவரையவிவராரியர்களைய
வங்கரிவரையவிவர்மாளவர்களைய.

(இ-ள்.) ஐய இவர் கொங்கர் - ஐயனே இவர்கள் கொங்குநாட்டினர், ஐய இவர் குருநாடர் - ஐயனே இவர்கள் குருநாட்டினர், ஐய இவர் கங்கர்-ஐயனே இவர்கள் கங்கர்கள், ஐய இவர் கருநாடர் - ஐயனே இவாகள கருநாடர், ஐய இவர் அங்கர் - ஐயனே இவர்கள் அங்கநாட்டினர், ஐய இவர் ஆரியர்கள் - ஐயனே இவர்கள் ஆரியநாட்டினர், ஐய இவர் வங்கர் - ஐயனே இவர்கள் வங்கநாட்டினர், ஐய இவர் மாளவர்கள் - ஐயனே இவர்கள் மாளவநாட்டினர்கள். (ஙo)

குலிங்கரிவரையவிவர்கொங்கணர்களைய
தெலுங்கரிவரையவிவர்சிங்களர்களைய
கலிங்கரிவரையகௌடத்தரிவரைய
வுலங்கெழுபுயத்திவர்களொட்டியர்களைய.

(இ-ள்.) ஐய இவர் குலிங்கர் - ஐயனே இவர்கள் குலிங்கர்கள், ஐய இவர் கொங்கணர்கள் - ஐயனே இவர்கள் கொங்கணநாட்டினர்கள், ஐய இவர் தெலுங்கர் - ஐயனே இவர்கள் தெலுங்கநாட்டினர்கள், ஐய இவர் சிங்களர்கள் - ஐயனே இவர்கள் சிங்களநாட்டினர்கள், ஐய இவர் கலிங்கர் - ஐயனே இவர்கள் கலிங்கநாட்டினர்கள், ஐய இவர் கௌடத்தர் - ஐயனே இவர்கள் கௌடநாட்டினர்கள், ஐய உலம் கெழுபுயத்து இவர்கள் ஒட்டியர்கள் - ஐயனே திரண்டகல்லையொத்த புயத்தையுடைய இவர்கள் ஒட்டியநாட்டினர்கள். (ஙக)

கொல்லரிவரையவிவர்கூச்சரர்களைய
பல்லரிவரையவிவர்பப்பரர்களைய
வில்லரிவரையவிவர்விதேகரிவரைய
கல்லொலிகழற்புனைகடாரரிவரைய.

(இ-ள்.) ஐய இவர் கொல்லர் - ஐயனே இவர்கள் கொல்லர்கள், ஐய இவர் கூச்சரர்கள் - ஐயனே இவர்கள் கூச்சரர்கள், ஐய இவர் பல்லர்-ஐயனே இவர்கள் பல்லர்கள், ஐய இவர் பப்பரர்கள் - ஐயனே இவர்கள் பப்பரநாட்டினர்கள், ஐய

இவர் வில்லர் - ஐயனே இவர்கள் வில்லர்கள், ஐய இவர் இவர் விதேகர் - ஐயனே இவர்கள் பார்ந்த விதேகநாட்டினர்கள், ஐய இவர் கல் ஒலி கழல் புனை கடாரர்- ஐயனே இவர்கள் கல்லென்னு மொலியையுடைய வீரகண்டையை யணிந்த கடாரர்கள். (௩௨)

கேகயர்களாலிவர்கள்கேழ்கிளர்மணிப்பூண்
மாகதர்களாலிவர்மராடரிவர்காஞ்சி
நாகரிகராலிவர்கணம்முடையநாட்டோ
ராருமிவர்தாமெனமெய்க்காட்டியறிவித்தான்.

(இ-ள்.) இவர்கள் கேகயர்கள் - இவர்கள் கேகயநாட்டினர்கள், இவர் கேழ் கிளர் மணி பூண் மாகதர்கள் - இவர்கள் நிறங்கொண்டுவிளங்கும் இரத்தினமழுத்திய ஆபரணத்தையணிந்த மாகதநாட்டினர்கள், இவர் மராடர் - இவர்கள் மராடநாட்டினர்கள், இவர்கள் காஞ்சி நாகரிகர் - இவர்கள் காஞ்சி நாட்டிலுள்ள நாகரிகத்தையுடையவர்கள், இவர்தாம் நம்முடைய நாட்டோர் ஆகும் என - இவர்கள் தாம் நம்முடைய நாட்டினராவாரென்று, மெய்க் காட்டி அறிவித்தான்-அவரவர்களுடைய உருவத்தைக்காட்டி அறிவித்தான். (௩௩)

இத்தகையசேட்புலனுளாரையிவனுய்த்த
வித்தகமையென்னெனவினுவியருள்செய்யே
லத்தநினரும்பொருளனைத்தும்வரையாதே
யுய்த்தலினடைந்தனர்களாலெனவுரைத்தான்.

(இ-ள்.) இத்தகைய சேண் புலன் உள்ளாரை - இத்தன்மையுள்ள தூரநாட்டிலுள்ளவர்களை, இவன் உய்த்த வித்தகமை என் என வினுவி அருள் செய்யேல் - இவ்விடத்து வருவித்த சதுரப்பாட்டை யாதென்று வினவியருளவேண்டாம், அத்த நின் அரும் பொருள் அனைத்தும் வரையாதே உய்த்தலின் அடைந்தனர்கள் என உரைத்தான் - எமதுபெருமானே உனது பெறுதற்கரிய பொருள்முற்றும் வரை அறை செய்யாது செலவிட்டதினுல் வந்தார்கள் என்று கூறினுன்.

அரன்பணிக்கீழ்த் தாம் அடங்கிநிற்றலும், சேனையீட்டுதற்கு அவன் பொருண்முற்றும் வரையாதுகொண்டமையுந் தோன்ற இவனுய்த்தவித்தகமையென்னெனவினுவியருள்செய்யேல் என்றார். (௩௪)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அந்நெடுஞ்சேனைதன்னுட்சேணிடையடன்மாவூர்ந்து
பின்னுறநிற்குமொற்றைச்சேவகபிரானைநோக்கி
மன்னவனிவர்யாரென்னச்சாமந்தன்வணங்கியைய
வின்னவர்சேனைவெள்ளத்தியாரையென்றறிவதென்றான்.

(இ-ள்) அ நெடும் சேனை தன்னுள் சேண் இடை - அந்த நெடிய சேனையுள் தூரத்தில், அடல் மா ஊர்ந்து பின் உற நிற்கும் ஒற்றைச் சேவகப் பிரானை மன்னவன் நோக்கி - வெற்றியையுடைய குதிரையைச்செலுத்திப் பின்னே பொருந்தநிற்கும் ஒப்பில்லாத வீரத்தையுடைய சோமசுந்தரக்கடவுளைக் குலபூடணபாண்டியன் பார்த்து, இவர் யார் என்ன - இவர் யாரென்று வினவ, சாமந்தன் வணங்கி - அந்த

ரசாமந்தர்வணங்கி, ஐய இன்னவர் சேனைவெள்ளத்து யாரை என்று அறிவது என்றான் - ஐயனே இவர் இந்தச்சேனைப்பெருக்கில் யாரென்று நான் தெரிந்து கூறுவது என்று கூறினர்.

சிவபெருமான் அளத்தற்கரிய பெருமையும் தமது பணிவுந் தோன்ற அன்னவர்சேனைவெள்ளத்தியாரையென்றறிவது என்றுகூறினர். (௩௫)

அவரையிங்கழைத்தியென்றானரசன்றன்வழிச்செல்வார்போற்
கவயமிட்டவரும்போந்தார்காவலன்களிகூர்ந்தம்பொன்
னவமணிக்கலன்பொன்னாடைநல்கினனுள்ளத்தன்பு
தவறிலான்பொருட்டுவாங்கித்தரித்துத்தன்றமர்க்குமீந்தார்.

(இ-ள்.) அவரை இங்கு அழைத்தி என்றான் - அவரை இவ்விடத்தில் அழைப்பாயென்று பாண்டியன் கூறினன், அரசன் தன் வழி செல்வார் போல் கவயம் இட்டவரும் போந்தார் - அப்பாண்டியனுடைய வழிப்பட்டுச் செல்வார்போலப் போர்க்குரிய கவசஞ்சாத்திவந்த பெருமானாரும் சென்றார், காவலன் களி கூர்ந்து அம பொன் நவமணிக் கலன் பொன் ஆடை நல்கினன் - பாண்டியன் மகிழ்ச்சி கூர்ந்து அழகிய பொன்னாலாகிய நவமணிகளழுத்திய ஆபரணங்களையும் பீதாம்பரத்தையுங்கொடுத்தான், உள்ளத்து அன்பு தவறிலான் பொருட்டு வாங்கி தரித்து தன் தமர்க்கும் ஈந்தார் - தமது மனத்தில் அன்பிற்குரிய வழிபாட்டினின்று பிறிதுந் தவறுபடாத சுந்தரசாமந்தர்பொருட்டு அவற்றை வாங்கித் தரித்துத் தன்பரிசனமாயுள்ளவர்களுக்குங் கொடுத்தருளினர்.

அரசன்வழிச்செல்லுதலும், அவன் பரிசாகத்தந்த ஆபரண முதலியவற்றைப்பெற்றமையும் தமது அடியார்நிமித்தம் என்பார் போந்தார் எனவும், உள்ளத்தன்பு தவறிலான்பொருட்டு வாங்கித்தரித்துத் தன்றமர்க்குமீந்தார் எனவுங்கூறினர் (௩௬)

ஆய்ந்தவெம்பரிமாத்தூண்டியைங்கதிநடத்திக்காட்டி
யேய்ந்ததஞ்சேனைவெள்ளத்தெய்தினரெய்துமெல்லை
வேய்ந்ததார்ச்சேதிராயன்வேட்டைபோய்ப்புலிகோட்பட்டு
மாய்ந்தனனென்றோரொற்றன்வேந்தன்முன்வந்துசொன்னான்.

(இ-ள்.) ஆய்ந்த வெம் பரி மா தூண்டி ஐங்கதி நடத்தி காட்டி - அசுவசாத்திரங்களுள் ஆராய்ந்தெடுத்த உத்தம அசுவத்தைச்செலுத்தி ஐந்துகதிகளையுநடத்திக்காண்பித்து, எய்ந்த தம் சேனை வெள்ளத்து எய்தினர் - பொருந்திய தமதுசேனைவெள்ளத்திற்சென்றருளினர், எய்தும் எல்லை - அவ்வாறு சென்றருளுஞ் சமயத்தில், தார் வேய்ந்த சேதிராயன் வேட்டைபோய் புலி கோட்பட்டு மாய்ந்தனன்என்று - வெற்றிமாலையை அணிந்த சேதிராயன் வேட்டைமேற்சென்று புலியினாற் கவ்வப்பட்டு இறந்தானென்று, ஓர் ஒற்றன் வேந்தன் முன் வந்து சொன்னான் - ஒருதூதுவன் பாண்டியன்முன்வந்து கூறினன். (௩௭)

மூரசதிரன்கணோக்கிமுகமலாந்துவகைபூத்த
வரசனுமனிகவேந்தற்களவில்சீர்த்தலைமையோடும்
வரிசைகண்மிதப்பநல்கிவந்துமெய்க்காட்டுத்தந்து
பாசியபதாதிதத்தம்பதிபுகச்செலுத்துகென்றான்.

(இ-ள்.) முரசு அதிர் அனிகம் நோக்கி முகமலர்ந்து உவகை பூத்த அரசனும்-முரசொலிக்குஞ்சேனையைப்பார்த்து முகமலர்ச்சிகொண்டு மகிழ்பூத்த பாண்டியனும், அனிகம் வேந்தற்கு அளவு இல் சீர் தலைமை யோடும் வரிசைகள் மிதப்ப நல்கி-சேனைத்தலைவராகிய சுந்தரசாமந்தர்க்கு அளவில்லாத சிறப்பமைந்தசேனைத்தலைமையின்றி ஏனைவினைகளுக்குரிய தலைமையோடும் வரிசைகளை மனம்வெறுப்பக் கொடுத்து, வந்து மெய்க்காட்டு தந்து பரசிய பதாதி தத்தம் பதிபுகச் செலுத்துக என்றான்-வந்து மெய்க்காட்டுக் கொடுத்து யாவருந் துதிக்கநின்ற சேனைகள் தத்தம் ஊர்க்குச்செல்ல விடைகொடுக்க என்று பாண்டியன் கூற

அளவில்சீர்த்தலைமையோடும் என்றமையால் சேனைத்தலைமையின்றி யேனை வினைகளுக்குரிய தலைமையோடும் என்றாம். (௬௮)

அறைந்தவார்கழற்காற்சேனைக்காவலனனிகந்தத்தஞ்
சிறந்தசேணாட்டிற்செல்லச்செலுத்துவான்போன்றுநிற்ப
நிறைந்தநான்மாடக்கூடனிருத்தனங்கிலைநின்றாங்கே
மறைந்தனன்மனிதவேடங்காட்டியமறவரோடும்.

(இ-ள்.) அறைந்த வார் கழல் கால் சேனை காவலன் - ஒலிக்கும் நீண்ட வீர கண்டை கட்டிய காலையுடைய சேனைத் தலைவராகிய சுந்தரசாமந்தர், அனிகம் தத்தம் சிறந்த சேண் நாட்டில் செல்ல செலுத்துவான் போன்று நிற்ப - சேனை தத்தமக்குரிய சிறந்த தூரதேசத்துக்குச் செல்ல விடைகொடுப்பவர்போன்று வாளாநிற்ப, நிறைந்த நான்மாடக் கூடல் நிருத்தன் - வளப்பம்நிறைந்த நான்மாடக்கூடலாகிய மதுரைத்திருப்பதியி லெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுள், மனித வேடம் காட்டிய மறவரோடும் அங்கிலை நின்றால் ஆங்கே மறைந்தனன் - மனிதவேடங்கொண்டு வந்த சிவகணங்களோடும் அப்பொழுதே அவ்விடத்தி னின்றருளினாற்போலவே மறைந்தருளினார்.

இந்திரசாலம்போல என்பார் அங்கிலைநின்றாங்கே என்றார். நின்றாங்குதொகுத்தல். (௬௯)

கண்டனன்பொருநைநாடன்வியந்தனன்கருத்தாசங்கை
கொண்டனன்குறித்துநோக்கியீதுநங்கூடன்மேய
வண்டர்தம்பெருமான்செய்தவாடலென்றெண்ணிக்கண்ணீர்
விண்டனன்புளகம்போர்ப்பமெய்யன்புவடிவமானான்.

(இ-ள்.) பொருநை நாடன் கண்டனன் வியந்தனன் கருத்து ஆசங்கை கொண்டனன் - தாமிரபர்ணிசூழ்ந்த பாண்டிநாட்டையுடைய குலபூடணன் கண்டு அதிசயித்து மனத்தில் ஐயங்கொண்டு, குறித்து நோக்கி - ஆராய்ந்து பார்த்து, ஈது நங் கூடல் மேய அண்டர்தம் பெருமான் செய்த ஆடல் என்று எண்ணி- இது நம்முடைய மதுரையில் எழுந்தருளிய சிவபெருமான் செய்தருளிய திருவிளையாடல் என்று கருதி, கண் நீர் விண்டனன் புளகம் போர்ப்ப மெய் அன்பு வடிவம் ஆனான் - ஆனந்த பாஷ்பஞ்சிந்தி மயிர்க்கூச்செறிய மெய்யன்பே ஓர்வடிவமாகிநின்றான்.

ஐயங்கொண்டவன் ஒருவழித்துணிந்தான் என்பார் குறித்துநோக்கியெனவும், துணிந்தவழி ஆராமைமேலிட்டதென்பார் கண்ணீர்விண்டனன் புளகம்போர்ப்ப எனவும், அவ்வாராமை மேலீட்டால் பசுகரணமொழிந்து சிவகரணம் ஆயினான் எ

ன்பார் மெய்யன்புவடிவமானுன் எனவுங் கூறினர். கண்டனன், வியந்தனன், விண்டனன் முற்றெச்சங்கள். (சO)

தனக்குயிர்த்துணையாநின்றசாமந்தன்றன்னைநோக்கி
யுனக்கெளிவந்தார்கூடலுடையநாயகரேயென்று
லெனக்கவராவார்நீயேயென்றவற்கியாவுநல்கி
மனக்கவல்பின்றிவாழ்ந்தான்மதிவழிவந்தமைந்தன்.

(இ-ள்.) தனக்கு உயிர்த் துணையா நின்ற சாமந்தன் தன்னை நோக்கி - தனக்கு உயிர்த்துணைவராயிருந்த சுந்தரசாமந்தரைப் பார்த்து, கூடல் உடைய நாயகரே உனக்கு எளிவந்தார் என்றால் - மதுரைத் திருப்பதியையுடைய சோமசுந்தரக்கடவுளே உமக்கு எளிதில்வந்தருளினுரென்றால், நீயே எனக்கு அவர் ஆவார் என்று - நீரே எனக்கு அச்சோமசுந்தரக்கடவுள் என்று, மதி வழி வந்த மைந்தன் அவற்கு யாவும் நல்கி மனக்கவல்பு இன்றி வாழ்ந்தான் - சந்திரன்மரபில் வந்த பாண்டியன் அச்சுந்தரசாமந்தர்க்கு வேண்டுவனவெல்லாந் தந்து மனத்திற் சிறிதுங் கவலையில்லாமல் அரசியல்நடத்திவந்தான்.

சிவபெருமானுர் அடியவரிடத்து வசித்தலால் அவ்வடியவரை யுபசரித்தலே யவரை யுபசரித்தலாமெனக் கருதினனென்பார் எனக்கவராவார் நீயேயென்றவற்கியாவுநல்கி யென்றார். "தாவரசங்கமங்களென்றிரண்டுருவினின்று - மாபரன்பூசைகொண்டுமன்னுயிர்க்கருளைவைப்பன்" என்ற திருவாக்கால் உணர்க. (சக)

மெய்க்காட்டிட்டபடலம் முற்றிற்று.

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - களOச.

முப்பத்தொன்றுவது

## உலவாக்கிழியருளியபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அடியார்பொருட்டுப்பரிவயவராகிச்செழியன்காணவிடைக்
கொடியார்வந்துமெய்க்காட்டுக்கொடுத்தவண்ணமெடுத்துரைத்துங்
கடியார்கொன்றைமுடியாரக்கன்னிநாடன்றனக்கிசைந்த
படியாலுலவாக்கிழிகொடுத்தபடியையறிந்தபடிபகர்வாம்.

(இ-ள்.) அடியார் பொருட்டு பரிவயவர் ஆகி - சுந்தரசாமந்தர் பொருட்டுக் குதிரைச்சேவகராகி, செழியன் காண - குலபூடணன் தரிசிக்க, விடை கொடியார் வந்து மெய்க்காட்டு கொடுத்த வண்ணம் எடுத்து உரைத்தும் - இடபதுவசத்தை யுடைய சோமசுந்தரக்கடவுள் வந்தருளி மெய்க்காட்டுக் கொடுத்தருளிய வகையை யெடுத்துக்கூறினும், கடியார் கொன்றை முடியார் - வாச நிறைந்த கொன்றை மாலையையணிந்த சடாமுடியையுடைய அக்கடவுள், அக் கன்னி நாடன் தனக்கு இசை

உலவாக்கிழியருளியதிருவிளையாடல்.



ந்த படியால் - அப்பாண்டியன் தமக்கு மனமொத்த அன்பனனபடியால், உலவாக் கிழி கொடுத்தபடியை - உலவாக்கிழி யருளிய திருவிளையாடலை, அறிந்தபடி பகர்வாம் - தெரிந்த வண்ணம் எடுத்துக் கூறுவாம். (க)

வள்ளல்குலபூடணன்றிங்கள்வாரந்தொடுத்துச்சிவதரும
முள்ளவெல்லாம்வழாதுநோற்றொழுகும்வலியாற்றன்னாட்டி
லெள்ளலில்லாவேதியரையிகழ்ந்தானதனான்மழைமறுத்து
வெள்ளமருகவளங்குன்றிவிளைவஃகியதுநாடெல்லாம்.

(இ-ள்.) வள்ளல் குலபூடணன் - கொடுத்தலிற்சிறந்த குலபூடண பாண்டியன், திங்கள் வாரம் தொடுத்து சிவதருமம் உள்ள எல்லாம் வழாது நோற்று ஒழுகும் வலியால் - சோமவாரவிரதந் தொடுத்துச் சிவதருமமாகஉள்ள விரதங்களை யெல்லாம் தவறாது நோற்று நடக்கும்வன்மையால், தன் நாட்டில் எள்ளல் இல்லாத வேதியரை இகழ்ந்தான்-தன்னுடைய பாண்டிநாட்டிலுள்ள நிந்தையில்லாத அந்தணர்களை இகழ்ந்தொழுகினன், அதனால் - அக்காரணத்தினால், மழை மறுத்து வெள்ளம் அருக - மழைவளங்குன்றியதால் இடை அறாது ஒழுகும் நீர்வெள்ளம்குன்ற, நாடு எல்லாம் வளம் குன்றி விளைவு அஃகியது - பாண்டிநாடெல்லாம் வளங் குறைந்து விளைவுசுருங்கியது.

அட்டமி, சதுர்த்தசிவிரத முதலியவற்றையடக்கிச் சிவதருமமெல்லாம் என்றார். (உ)

அறவோரெல்லாநிரப்பெய்தியாகங்கிடந்தநூலன்றி
மறைநூலிழந்துமுனிவேள்விவானோர்வேள்விதென்புலத்தி
னுறைவோர்வேள்வியிழந்திழிந்ததொழில்செய்தாற்றாதுயிர்வளர்ப்பான்
புறநாடணைந்தார்பசியாலேபுழுங்கியொழிந்தகுடியெல்லாம்.

(இ-ள்.) அறவோர் எல்லாம் நிரப்பு எய்தி - அந்தணரெல்லாம் வறுமையடைந்து, ஆகம் கிடந்த நூல் அன்றி மறைநூல் இழந்து - மார்பிற்கிடந்த உபவீத நூலன்றி வேதமாகிய பெருநூலை இழந்து, முனி வேள்வி வானோர் வேள்வி தென்புலத்தின் உறைவோர் வேள்வி இழந்து - முனிவர்யாகம் தேவர்யாகம் பிதிரர்யாகம் ஆகிய இவ்வேள்விகளையிழந்து, இழிந்த தொழில்செய்து ஆற்றாது - விலக்கியதொழிலைச்செய்து அத்தொழிலால் உய்தியறியாது, உயிர்வளர்ப்பான் புறநாடு அணைந்தார் - (தமக்குவிதித்த தொழில் அல்லாதனவற்றைச் செய்து) தமது உயிரையோம்பப்புறநாட்டிற்சென்றார்கள், ஒழிந்த குடி எல்லாம் பசியாலே புழுங்கி - அந்தணரொழிந்த குடிகளெல்லாங் கொடியபசியினாலே மனம்புழுங்கி.

மறைநூல் ஓதுதலின்மையால் முனிவர்வேள்வியும், ஓமம்வளர்த்தலின்மையால் வானோர்வேள்வியும், நீர்க்கடனாற்றலின்மையால் தென்புலத்தினுறைவோர் வேள்வியும் இழந்தென்றார். ஆகங்கிடந்தநூலன்றி மறைநூலிழந்து என்றது தத்தம் நிலைக்குரிய ஒழுக்கத்தையிழத்தலை யுணர்த்தினமையாற் குறிப்பணி. (௩)

எந்நாடணைவோமெனவிரங்கவிரங்கிமதிக்கோன்மதிநாளிற்
பொன்னாண்முளரித்தடங்குடைந்துசித்திக்களிற்றைப்பூசித்துத்
தன்னாதரவாற்கயற்கண்ணிதலைவன்றன்னையருச்சித்து
முன்னாவீழ்ந்துகாமுகிழ்த்துப்பழிச்சிமகிழ்ந்துமொழிகின்றான்.

(இ-ள்.) எந்நாடு அணைவோம் என இரங்க-எத்தேசத்திற்குச் செல்வோமென் றுவருந்த, மதிக்கோன் இரங்கி - (அதுநோக்கி) சந்திரன் மரபிற்றோன்றிய குலபூட ணன் மனம்வருந்தி, மதிநாளில் நாள் பொன் முளரிதடம் குடைந்து சித்திக்களிற் றை பூசித்து - சோமவாரத்தில் அன்றலர்ந்த பொற்றாமரைத்தீர்த்தத்தில் நீராடிச் சித்திவிநாயகரைப்பூசித்து, தன் ஆதரவால் கயல்கண்ணி தலைவன்தன்னை அருச்சித்து - தன்னுடையபேரன்பால் அங்கயற்கண்ணியார் தலைவராகிய சோமசுந்தரக்கட வுளை ஆகமவிதியால் அருச்சனைசெய்து, முன்னு வீழ்ந்து காம் முகிழ்த்து பழிச்சி மகிழ்ந்து மொழிகின்றான் - சந்நிதிமுன்வீழ்ந்து கைகூப்பித்துதித்து மகிழ்கூர்ந்து கூறுகின்றான்.

தம்மக்கள்நோய்க்குப் பரிவுகூருந்தாயர்போலத் தன்கோற்கீழ்வாழுங் குடி கள்வருத்தத்திற்கு அரசன் பரிவுகூர்தல் கடனாதலால் இரங்கியெனவும், தான்கொ ண்டகருமம் முட்டின்றிமுடிதற்கு மூத்தபிள்ளையாரை முன்பு பூசித்தல் முறையாத லால் சித்திக்களிற்றைப்பூசித்து எனவும், வழிபாட்டினின்ற தனக்கோர்குறைவுவ ரின் அக்குறைபாடுகளை யொழிப்பார் சோமசுந்தரக்கடவுளேயாதலால் கரமுகிழ்த் துப் பழிச்சி மகிழ்ந்து மொழிகின்றான் எனவுங்கூறினார். (௪)

அத்தவுலகினுயிர்க்குயிர்நீயல்லையோவவ்வுயிர்பசியா
லெய்த்தவருத்தமடியேனைவருத்துமாறென்யானீட்டி
வைத்தபொருளுந்தருமத்தின்வழியேசென்றதினியடிகள்
சித்தமலர்ந்தென்னிடும்பைவினைதீரவருட்கண்செய்கவென.

(இ-ள்.) அத்த-இறைவனே, உலகில் உயிர்க்கு உயிர்நீ அல்லையோ - உலகி லுள்ள உயிர்களுக்கு உயிர்நீ அல்லையோ, அவ்வுயிர் பசியால் எய்த்த வருத்தம் அடி யேனை வருத்தும் ஆறு என்-அந்தவுயிர்கள் பசியால்வருந்திய வருத்தம் (தேவரீரைச் சாராது) அடியேனை வருத்துங்காரணம் யாது, யான் ஈட்டிவைத்த பொருளும் தரும த்தின்வழியேசென்றது - யான்தேடிவைத்தபொருளுஞ் சிவதருமத்தின்வழியேசெ ன்றது, இனி அடிகள் சித்தம்மலர்ந்து என் இடும்பை வினைதீர அருள்கண்செய்க என்ன-இனித்தேவரீர் திருவுளமிரங்கி எனது துன்பநோய் தீரும்வண்ணம் திருவரு ட்கண் செய்தருளுகவென்று இரக்க.

உயிர்க்குயிராய் நின்று அறிவிக்குஞ் சூக்குமவைந்தொழிலு முடையாய் என் பான் உயிர்க்குயிர் நீயல்லையோவெனவும், அவ்வுயிர்கள்வருந்தும் வருத்தத்தை யுண ர்ந்தொழித்தல் தேவரீர் கடனாயிருக்க என்னைவருத்துவது யாதுகாரணம் என்பான் அவ்வுயிர் பசியாலெய்த்தவருத்த மடியேனைவருத்துமாறென்னெனவுங்கூறினான்.(ரு)

கோளாடரவமரைக்கசைத்தகூடற்பெருமான்குறையிரக்கு
மாளாமரசன்றவறுசிறிதகங்கொண்டதனைத்திருச்செவியிற்
கேளார்போலவாளாதேயிருப்பமனையிற்கிடைத்தமலன்
றாளாதரவுபெறநினைந்துதரையிற்கிடந்துதுயில்கின்றான்.

(இ-ள்.) கோள் ஆடு அரவம் அரைக்கு அசைத்த கூடல் பெருமான் - வன் மையோடு ஆடாநின்றசர்ப்பத்தை இடையிற் கட்டியருளிய சோமசுந்தரக்கடவுள், குறை இரக்கும் ஆளாம் அரசன் தவறு சிறிது அகம் கொண்டு - தனது குறைகூறி இரக்குந் தமதுதொண்டனாகிய பாண்டியன் தவறுபாட்டைச் சிறிது திருவுள்ளத்தி

ற்கொண்டு, அதனை திரு செவியில் கேளார் போல வாளாதே இருப்ப - அதனைத் த மது திருச்செவியில் கேளாதவர்போல வாளாவிருப்ப, மனையில் கிடைத்து அமலன் தாள் ஆதரவு பெற நினைந்து தரையில் கிடந்து துயில்கின்றான் - தனது கோயிலிற் சென்று சிவபெருமான்திருவடியை அன்புமிகச் சிந்தித்து நிலமீதுகிடந்து நித்திரை செய்கின்றவனாயினான்.

பாம்பின்குற்றத்தைநோக்காது குணமாகக்கொண்ட பெருமானார் அரசன்கு ற்றத்தை நோக்கிலர் என்பார் தவறு சிறிதகங்கொண்டு எனவும், கேளார்போலஎன வுங்கூறினார். (௬)

அங்கண்வெள்ளியம்பலத்துளாடுமடிகளவன்கனவிற்
சங்கக்குழையும்வெண்ணீறுஞ்சரிகோவணமுந்தயங்கவுரன்
சிங்கநாதங்கிடந்தசையச்சித்தவடிவாயெழுந்தருளி
வெங்கண்யானைத்தென்னவர்கோன்முன்னின்றிதனை விளம்புவார்.

(இ-ள்.) அங்கண் - அப்பொழுது, வெள்ளி அம்பலத்துள் ஆடும் அடிகள் அ வன் கனவில் - வெள்ளியம்பலத்திலாடியருளிய சோமசுந்தரக்கடவுள் அப்பாண்டி யன் சொப்பனத்தில், சங்கக் குழையும் வெள் நீறும் சரி கோவணமும் தயங்க-சங் சகுண்டலமும் வெள்ளிய திருநீறும் சரிந்தகோவணவுடையும் விளங்கவும், உரன் சி ங்கநாதம் கிடந்து அசைய - திருமார்பில் சிங்கநாதமென்னும் வாச்சியம் ஒருபாற்கி டந்து அசையவும், சித்த வடிவாய் எழுந்தருளி வெம் கண் யானை தென்னவர் கோ ன் முன் நின்று இதனை விளம்புவார் - சித்தமூர்த்தியாய் எழுந்தருளி அஞ்சாமையை யுடைய யானைச்சேனையையுடைய குலபூடணன்முன்னின்று இதனைக் கூறியருளுகி ன்றார்.

சிங்கநாதம் கொம்பினாற்செய்த ஒருவகை வாச்சியம். (எ)

ஏடாரலங்கல்வரைமார்பவெம்பாலென்றுமன்புடைமை
வாடாவிரதவிழுச்செல்வமுடையாய்வையமறங்கடிந்து
கோடாதளிக்குஞ்செங்கோன்மையுடையாயுனக்கோர்குறையுளதுன்
வீடாவளஞ்சேர்நாட்டிந்நாள்வேள்விச்செல்வமருகியதால்.

(இ-ள்.) ஏடு ஆர் அலங்கல் வரை மார்ப - இதழ்நிறைந்த மாலையையணிந்த மலைபோன்ற மார்பினையுடையவனே, எம் பால் என்றும் அன்பு உடைமை வாடா விரதம் விழு செல்வம் உடையாய் - எம்மிடத்தில் எப்பொழுதும் அன்புடைமையும் கெடாத சிவவிரதமுமாகிய பெருஞ்செல்வத்தையுடையாய், வையம் மறம் கடிந்து கோடாது அளிக்கும் செங்கோன்மை உடையாய் - நிலவுலகைக் கலிதுரந்து நடுநிலை மையினின்றோம்பும் செங்கோலினையுடையாய், உனக்கு ஓர் குறை உள்ளது - உன் னிடத்திலோர்குறையுண்டு, உன் வீடாத வளம் சேர் நாடு இந்நாள் வேள்விச் செல் வம் அருகியது - (அதனால்) உனது கெடாதவளமிக்க பாண்டிநாட்டில் இப்பொழு து வேள்விச்செல்வங் குறைந்தது.

குடிகள் உய்தற்கு மழைகாரணமும், அம்மழைபெய்தற்கு வேள்விகாரண மும், அவ்வேள்வியை நடத்தற்கு அரசன் செங்கோல்காரணமும் ஆதலால் அரசன் அதனைக் குறியாதிருந்ததே குறையாதலால் உனக்கோர் குறையுளதென்றார். (அ)

மறையேநமதுபீடிகையாமறையேநமதுபாதுகையா
மறையேநமதுவாகனமாமறையேநமதுநூபுரமா

மறையேநமதுகோவணமாமறையேநமதுவிழியாகு
மறையேநமதுமொழியாகுமறையேநமதுவடிவாகும்.

(இ-ள்.) மறையே நமது பீடிகை ஆம் - வேதமே நமது ஆசனமாம், மறையே நமது பாதுகையாம் - வேதமே நமது திருவடிநிலையாம், மறையே நமது வாகனம் ஆம் - வேதமே நமது ஊர்தியாம், மறையே நமது நூபுரம் ஆம் - வேதமே நமது சிலம்பாம், மறையே நமது கோவணம் ஆம் - வேதமே நமது கோவணவுடையாம், மறையே நமது விழி ஆகும் - வேதமே நமது திருக்கண்ணும், மறையே நமது மொழி ஆகும் - வேதமே நமது திருவாக்காம், மறையே நமது வடிவு ஆகும்-வேதமே நமது திருவுருவமாகும்.

ஆன்மாக்கள் தம்மை யுணர்ந்துய்யக் கூட்டுங் கருவிநூலாதல் அவையே நமக்குப் பீடிகைமுதலாக வெல்லாமுடையோம் என்பார் இவ்வாறுகூறினர். "அவன்றன்வடிவிலாவடிவினையுணர்த்தும்" என முன்னர்க்கூறியிருத்தல் உணர்க. (கூ)

வேதந்தானேநமதாணைச்சத்திவடிவாய்விதிவிலக்காய்ப்
போதங்கொளுத்திநிலைநிறுத்திப்போகங்கொடுத்துப்பலவுயிர்க்கும்
பேதஞ்செய்யும்பிணியவிழ்த்தெம்பிரியாவீடுதருவதுதே
னாதஞ்செய்யுந்தார்வேந்தேநமதுசெங்கோலதுவாகும்.

(இ-ள்.) வேதம் தானே நமது ஆணை சத்தி வடிவாய் விதி விலக்கு ஆய்-வேதமே நமது ஆணையாகிய சத்திவடிவாகியும் விதிவிலக்குகளாகியும், பல் உயிர்க்கும் போதம் கொளுத்தி நிலை நிறுத்தி போகம் கொடுத்து - பல ஆன்மகோடிகளுக்கும் அறிவுகொளுத்தி நன்னிலையினிறுத்திப் போகமுந்தந்து, பேதம் செய்யும் பிணி அவிழ்த்து எம் பிரியாவீடு தருவது - ஐயந்திரிபுகளை விளைவிக்கும் பந்தங்களைக் கெடுத்து எம்மினின்றும் பிரியாமையாகிய மோக்ஷத்தைத்தருவது, தேன் நாதம் செய்யும் தார்வேந்தே நமது செங்கோல் அது ஆகும் - (அதனால்) வண்டுகள் தேனுண்டொலிக்கும் மாலையையணிந்த பாண்டியனே நமதுசெங்கோலும் அவ்வேதமாம்.

வேதம் தமது திருவாக்கு ஆதலால் நமதாணைச்சத்திவடிவாய் எனவும், அது ஆன்மாக்களுய்தற்கு விதிவிலக்குகளா யிருத்தலால் விதிவிலக்காய் எனவும், அவ்விதிவிலக்குகள் அறிவினைப் பெருக்குதலால் போதங்கொளுத்தி யெனவும், அவ்வறிவின்மேலீடு தத்தமக்குரிய நிலையினிறுத்துதலால் நிலைநிறுத்தியெனவும், அந்நிலைநிற்றல் இருவகைப்போகமுந் தருதலால் போகங்கொடுத்து எனவும், அப்போகம் மலத்துக்கு மருந்தாதலால் அதனில் உவர்ப்பு வந்தவழி அவிச்சை கெடுத்தலால் பேதஞ்செய்யும் பிணியவிழ்த்து எனவும், அவ்வவிச்சைகெடுதலே திருவருண்மேலீடாதலால் எம்பிரியாவீடு தருவது எனவும், உயிர்க்குறுதிதரும் அப்பெரும்பேறே தமதுநீதியாதலால் நமது செங்கோலதுவாகும் எனவுங்கூறினர் "மறைப்பொருளறிதரூனோ-நந்தலில்லாதபோகப்பயனுக்குமலியும்பாச, பந்தனைகழிக்கும்வீட்டின்பயனுக்குங்கருவியாகும்" என முன்னர் வருதல்காண்க. (௰)

அந்தமறைகடமக்குறுதியாவாரந்நூல்வழிகளிநோய்
சிந்தமகத்தீவளர்த்தெம்பாற்சிந்தைசெலுத்துமந்தணரா
மிந்தமறையோர்வேள்விமழைக்கேதுவாகுமிவர்தம்மை
மைந்தவிகழ்ந்துகைவிட்டாயதனுன்மாரிமறுத்தன்றால்.

(இ-ள்.) அந்த மறைகள் தமக்கு உறுதி ஆவார் - அந்த வேதங்களுக்கு உறுதியாயுள்ளோர், அந்நூல் வழி கலி நோய் சிந்த மகம் தீவளர்த்து எம்பால் சிந்தை செலுத்தும் அந்தணர் - அந்த வேதநூல்வழியே கலிநோய்கெட யாகாக்கினியோம்பி எம்மிடத்தில் மனஞ்செலுத்தும் மறையவராம், இந்த மறையோர் வேள்வி மழைக்கு ஏது ஆகும் - இவ்வாறுள்ள இந்த அந்தணர்செய்யும் யாகம் மழைக்குக் காரணமாம், மைந்த இவர் தம்மை இகழ்ந்து கைவிட்டாய் அதனால் மாரி மறுத்தன்று-மைந்தபுத்திரனே இவர்களை அவமதித்துக் கைவிட்டாய் அக்காரணத்தினால் மழைவளங் குன்றியது.

வேதங்கள் ஆன்மாக்களுக்குப் பயன்தருதல் மறையோராலாதலால் அந்தமறைகள் தமக்குறுதியாவார் எனவும், அம்மறையவர்செய்யும் வேள்விக்குத் தாமிறைவராதலால் மகத்தீவளர்த்தெம்பாற்சிந்தைசெலுத்துமந்தணர் எனவும், அவரை யிகழ்ந்தமை யெம்மை யிகழ்ந்தமையோடொக்குமாதலால் அதனால் மாரி மறுத்தன்று எனவுங் கூறினார். "புங்கவரெவர்க்குநல்கும்புவிபுகழவிகொள்வானும், அங்கியின் முதலும்வேள்விக்கதிபனுமளிக்கின்றானும், சங்கரன்றனேவேதஞ்சாற்றுமால்" எனக்காந்தம் ததீசியுத்தரப்படலத்தில் வருதல்காண்க. (கக)

மும்மைப்புவனங்களுமுய்யமுத்திவேட்குமிவர்தம்மை
நம்மைப்போலக்கண்டொழுகிநாளுநாளுமறம்பெருக்கிச்
செம்மைத்தருமக்கோலோச்சித்திகிரியுருட்டிவாழ்தியென
வும்மைப்பயன்போலெளிவந்தாருலவாக்கிழியொன்றுதவுவார்.

(இ-ள்.) மும்மை புவனங்களும் உய்ய முத்தீ வேட்கும் இவர் தம்மை - மூன்றுலகங்களும் பிழைக்க மூன்றக்கினியையும் வளர்க்கும் இந்த அந்தணர்களை, நம்மை போல கண்டு ஒழுகி நாளும் நாளு அறம் பெருக்கி - நம்மைப்போலச் சிந்தித்து நடந்து எந்நாளும் பலதருமங்களையும் பெருகச்செய்து, தருமம் செம்மை கோல் ஓச்சி திகிரி உருட்டி வாழ்தி என - தருமவடிவான செங்கோல் செலுத்தி யாணையாகியசக்கரத்தைச் செலுத்தி வாழ்வாயென்று, உம்மை பயன் போல் எளி வந்தார் உலவாக்கிழி ஒன்று உதவுவார் - முற்பிறப்பிற்செய்த நல்வினைப்பயன்போல எளிதில்வந்தருளிய பெருமானார் உலவாக்கிழி ஒன்று கொடுத்தருளுவார்.

மூன்றுலகங்களாவன பூமி அந்தர சுவர்க்கங்கள். (கஉ)

இந்தக்கிழியிலெத்துணைப்பொன்னெடுத்துவழங்குந்தொறுநாங்க
டந்தவளவிற்குறையாததன்மைத்தாருமதுகொண்டு
வந்தவிலம்பாடகற்றென்றுகொடுத்துவேந்தன்மனக்கவலை
சிந்தத்திருநீறதுசாத்திமறைந்தாரையர்திருவுருவம்.

(இ-ள்.) இந்த கிழியில் எத்துணை பொன் எடுத்து வழங்கும் தொறும் - இந்தவுலவாக்கிழியில் எவ்வளவு பொன்னாயினும் நீ எடுத்துக்கொடுக்குந்தோறும், நாங்கள் தந்த அளவில் குறையாத தன்மைத்து ஆகும் - அது நாம் கொடுத்த அளவினின்றுஞ் சுருங்காத தன்மையை யுடையதாகும், அது கொண்டு வந்த இலம்பாடு அகற்றுஎன்று கொடுத்து-அந்தப் பொருளைக்கொண்டு (அந்தணர்முதலியோர்க்கு) நேரிட்ட துன்பத்தை யொழிப்பாயென்று கொடுத்து, வேந்தன் மனக் கவலை சிந்த திருநீறுசாத்தி - பாண்டியனுடைய மனத்துன்பநீங்கத்திருநீறிட்டு, ஐயர் திரு உருவம் மறைந்தார் - சோமசுந்தரக்கடவுள் சித்தமூர்த்தமாகவந்த தமது திரு உருவமறைந்தருளினார்.

இந்தமுடிப்பினின்று எவ்வளவு பொனனை யெடுத்துச் செலவு செய்யினும் இம்முடிப்பு முன்னிருந்தபடித்தாயே யிருக்கும் என்பார் நாங்கள் தந்தவளவிற் குறையாததன்மைத்தாகும் என்றார். நாங்கள் கள பகுதிப்பொருள்விகுதி. இலம்பாடு இன்மைபடுதல் என்னும் பொருள்மேல் நிற்றலால் முதனிலைதிரிந்ததொழிற்பெயர்.

கண்டகனவுநனவாகத்தொழுதானெழுந்துகௌரியர்கோ
னண்டர்பெருமான்றிருவடிபோலம்பொற்கிழியைமுடித்தலைமேற்
கொண்டுமகிழ்ச்சிதலைசிறப்பநின்றோர்முகூர்த்தங்கூத்தாடித்
தண்டாவமைச்சர்படைத்தலைவர்தமக்குங்காட்டியறிவித்தான்.

(இ-ள்.) கௌரியர் கோன் கண்ட கனவு நனவு ஆக எழுந்து தொழுதான் - பாண்டியன் தான்கண்டசொப்பனம் நனவாகப் பயன்படத் துயிலுணர்ந்து வணங்கி, அண்டர் பெருமான் திரு அடிபோல் அம் பொற் கிழியை முடித்தலை மேல் கொண்டு - சோமசுந்தரக்கடவுளுடைய திருவடியைத் தனதுமுடியிற் சூடுவதுபோல அழகிய உலவாக்கிழியைத் தனதுமுடிமேற்சூடி, மகிழ்ச்சி தலை சிறப்ப நின்று ஓர் முகூர்த்தம் கூத்து ஆடி - களிப்பு மேலோங்க நின்று ஒருமுகூர்த்தம் ஆனந்தக்கூத்தாடி, தண்டாத அமைச்சர் படைத்தலைவர் தமக்கும் காட்டி அறிவித்தான் - நீங்காத மந்திரிகளுக்குஞ் சேனைத்தலைவர்க்குங் காட்டி நிகழ்ந்தசெய்தியைத தெரிவித்தான்.

கனவு நனவுபோலப் பயன்படுதலின் கனவு நனவாக எனவும், மனால் துயிலெழுங்காலத்தாகலின் எழுந்து தொழுதான் எனவும், சிவபெருமான் திருவருள் கிடைத்ததுபோலக் கிடைத்தமையால் அண்டர்பெருமான்றிருவடிபோலம்பொற்கிழியை முடித்தலைமேற்கொண்டு எனவுங்கூறினார் "கொழுநற்றொழுதெழுவாள்" என்பது எழுந்து கொழுநற்றொழுவாள் என முன்பின்னாகப் பொருள்படும் எனப்பிரயோகவிவேகநூலார் கூறியிருத்தலால் எழுந்து தொழுது என்றும். தொழுதான் முற்றெச்சம். கரு)

செங்கணரிமான்பிடர்சுமந்ததெய்வமணிப்பூந்தவிசேற்றிச்
சங்கமுழங்கமறைமுழங்கச்சாந்தந்திமிர்ந்துதாதொழுகத்
தொங்கலணிந்துதசாங்கவிரைத்தூபநறுநெய்ச்சுடர்வளைத்துக்
கங்கைமிலைந்தகடவுளெனக்கருதிப்பூசைவினைமுடித்தான்.

(இ-ள்.) செம் கண் அரிமான் பிடர் சுமந்த தெய்வ மணி பூம் தவிசு ஏற்றி - சிவந்தகண்களையுடைய சிங்கத்தின் பிடர்சுமந்த தெய்வத்தன்மையையுடைய இரத்தினத்தின் பொலிவையுடைய ஆசனத்திலேற்றி, சங்கம் முழங்க மறை முழங்க சாந்தம் திமிர்ந்து தாது ஒழுக தொங்கல் அணிந்து - சங்கமொருபால்முழங்கவும் வேதகோஷமொருபால் முழங்கவும் சந்தனக்குழம்பு அப்பி மகரந்தஞ்சிந்த மாலைசூட்டி, தசாங்கம் விரை தூபம் நறும் நெய் சுடர் வளைத்து - தசாங்கோபசாரத்தோடு வாசனைத்தூபமும் நறுமணங்கமழும் நெய்த்தீபமும் வளைத்து, கங்கை மிலைந்த கடவுள் என கருதி பூசை வினை முடித்தான் - கங்கைசூடிய சடாமகுடத்தையுடைய சோமசுந்தரக்கடவுளைப்போல உலவாக்கிழியைச் சிந்தித்துப் பூசனைசெய்து முடித்தான்.

தசாங்கோபசாரமாவன ஆவாகனம், தாபனம், சந்நிதானம், சந்நிரோதனம், அவகுண்டனம், தேனுமுத்திரை, பாத்தியம், ஆசமனீயம், அர்க்கியம், புட்பதானம்

ஐந்துவிரைத்தூபமாவன குந்துருக்கம், பச்சைக்கருப்பூரம், காரகில், வெண்சந்தனம், கருஞ்சிதாரி. நறுநெய் என்றமையால் கபிலைப்பசுநெய் எனக்கொள்க. (கரு)

அடுத்துவணங்கிவலஞ்செய்திட்டம்பொற்கிழியைப்பொதிநீக்கி
யெடுத்துமுத்தீவினைஞர்க்கும்யாகங்களுக்கும்யாவர்க்கு
மடுத்துநாளும்வரையாதுவழங்கவழங்கவடியார்க்குக்
கொடுக்கக்குறையாவீட்டின்பமாயிற்றையர்கொடுத்தகிழி.

(இ-ள்.) அடுத்து வணங்கி வலம் செய்திட்டு - சமீபித்து வணங்கிப் பிரதக்ஷிணஞ்செய்து, அம் பொற் கிழியை பொதி நீக்கி எடுத்து - அழகிய உலவாக்கிழியை முடிப்பினின்று நீக்கிப் பொன்னையள்ளி, முத்தீ வினைஞர்க்கும் யாகங்களுக்கும் யாவர்க்கும் மடுத்து நாளும் வரையாது வழங்க வழங்க - முத்தீ யோம்பும் அந்தணர்களுக்கும் யாகங்களுக்கும் ஏனையோர்க்கும் அவர்களோடளவளாவி எந்நாளும் வரையாது கொடுக்கக்கொடுக்க, ஐயா கொடுத்த கிழி - சோமசுந்தரக்கடவுள் கொடுத்தருளிய வுலவாக்கிழி, அடியார்க்கு கொடுக்க குறையாத வீடு இன்பம் ஆயிற்று - தமது அடியார்க்குக் கொடுக்கக் குன்றாத மோட்ச இன்பம்போல என்றுங்குறையாது ஒருபடித்தாயிருந்தது.

வழங்க வழங்க பன்மைப்பொருளில்வந்த வடுக்குத்தொடர். அடியார்க் கருளுந்தோறுங் குன்றுதொருபடித்தா யிருத்தலால் அடியார்க்குக் கொடுக்கக்குறையா வீட்டின்பம் என்றார். (கசு)

ஆயபொதியில்வளைபொன்னாலசும்புசெய்துவிசும்பிழிந்த
கோயிலதனையகம்புறமுங்குயின்றுஞானக்கொழுந்தனைய
தாயிலறுகாற்பீடிகைவான்றடவுகொடியநெடியபெரு
வாயில்பிறவுமழகெறிப்பவேய்ந்தான்மறையின்வரம்பறிந்தான்.

(இ-ள்.) மறையின் வரம்பு அறிந்தான் - வேதத்தின் எல்லையையறிந்த பாண்டியன், ஆயபொதியில் வளைபொன்னால் - உலவாக்கிழியினின்றுமெடுத்த வளைந்தபொன்னால், அசும்பு செய்து விசும்பு இழிந்தகோயில் அதனை - ஒளிவீசி விண்ணுலகினின்றுவந்த இந்திரவிமானத்தை, அகம் புறமும் குயின்று-அகத்தும் புறத்தும் இழைத்து, ஞானம் கொழுந்து அனைய தாய் இல் அறுகால் பீடிகை வான் தடவு கொடிய நெடிய பெருவாயில் பிறவும் அழகு எறிப்ப வேய்ந்தான் - ஞானக்கொழுந்தையொத்த அங்கயற்கண்ணியார் திருக்கோயிலும் அறுகாற்பீடிகையும் விண்அளாவுங் கொடியையுடைய நெடிய பெரியதிருக்கோபுரத்தின் வாயிலும் மற்றுள்ளனவும் அழகுவீசப் பொற்றகடுவேய்ந்தான்.

வளை பொன் ஓடுபொன். (கஎ)

முந்திக்குறையாநிதிக்கடலைமுகந்துமுகந்துநாடோறுஞ்
சிந்திக்குலபூடணக்கொண்டறெய்வதருமப்பயிர்வளர்ப்பப்
பந்தித்திரைமுந்நீர்மேகம்பருகிச்சொரியப்பல்வளனு
நந்திக்கன்னிநாடளகைநகர்போற்செல்வந்தழைத்தன்றே.

(இ-ள்.) குலபூடணக்கொண்டல் - குலபூஷணனாகியமேகம், குறையாநிதிகடலை முந்தி முகந்து முகந்து நாள்தோறும் சிந்தி - குறையாததிரவியமென்னுங்கடலை முற்பட்டு மொண்டுமொண்டு நாள்தோறும்பெய்து, தெய்வம் தருமம் பயிர்வளர்ப்ப - தெய்வத்தன்மையையுடைய தருமமாகிய பைங்கூழைவளர்த்துவர, பந்தி

திரை முந்நீர் மேகம் பருகிசொரிய பல்வளனும் நந்தி - வரிசைவரிசையாய்வரும் அலைகளையுடைய கடல்நீரை மேகம்பருகிச் சொரியப் பலவளங்களும் குறையாதோங்கி, கன்னிநாடு அளகைநகர்போல் செல்வம்தழைத்தன்று - பாண்டிநாடு குபேரன் அளகைநகரம்போலச் செல்வந்தழைத்தோங்கியது.

பல்வளனுவது நீருயர நெல்வளர்தல்முதலியன. முகந்து முகந்து மிகுதிப் பொருளில்வந்த அடுக்குத்தொடர். (கஅ)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

வையாகரணர்கணையாயிகர்மறைவல்லோர்மறைமுடிசொல்லாய்வோர்
மெய்யாமிருதிகள்பொய்யாவிரதிகள்வேள்வித்தழல்களைவாழ்விப்போர்
பையாடரவணிமையயானனனுரைபகர்வோருலகியலகல்வோர்க
ளெய்யாதுறைதலினையாதளகையதென்னப்பொலிவதுதென்னாடு.

(இ-ள்.) வையாகரணர்கள் நையாயிகர்மறை வல்லோர் மறைமுடி சொல் ஆய்வோர் - வியாகரணங்கற்றவர்களும் நியாயநூல்கற்றவர்களும் வேதநூலுணர்ந்தவர்களும் உபநிடதத்தின்பொருளை யாராய்வோரும், மெய் ஆம் மிருதிகள் பொய்யாவிரதிகள் வேள்வி தழல்களை வாழ்விப்போர் - உண்மையாகிய ஸ்மிருதிநூலுணர்ந்தவர்களும் பொய்க்காதவிரதிகளும் யாகாக்கினியை யோம்புவோர்களும், பை ஆடு அரவு அணி ஐயானனன் உரைபகர்வோர் உலகு இயல் அகல்வோர்கள் எய்யாது உறைதலின் - படம்விரித்தாடாநின்ற சர்ப்பத்தையணிந்த ஐந்துமுகங்களையுடைய சிவபெருமான் உரைத்தருளிய ஆகமநூலைக்கற்றுணர்ந்தவர்களும் பாசபந்தமொழிந்தவர்களும் வறுமையால் வருந்தாது வசித்தலால், தென் நாடு நையாத அளகை அது என்ன பொலிவது - பாண்டிநாடு வறுமையால்வருந்தாத அளகாபுரி போல் விளங்காநின்றது.

வையாகரணர் வியாகரணங்கற்றவர். நையாயிகர் நியாயநூல் கற்றோர் இவை தத்திதாந்தபதங்கள். சொல்பொருள்மேல் நிற்றலால் சொல்லாகுபெயர். வியாகரணமும் நியாயமும் வேதநூலுணர்தற்குக் கருவியாதலால் மறைவல்லோர் என்பதற்கு முன்னும், பிரபலசுருதியின்பொருளை யுணர்தற்குக் கருமகாண்டமும் ஞானகாண்டமும் கருவியாதலால் மறைமுடிசொல்லாய்வோர் என்பதற்கு முனனும், இதற்கு அனுகுணமாதலால் மிருதிகள் எனவும், இவற்றை யையந்திரிபற வுணர்ந்தோர் விரதம் ஓம்புதற்கு உரியராதலால் அதன்பின் பொய்யாவிரதிகள் எனவும், இந்நிலையில்நிற்போர் வேள்விசெய்தற் குரியராதலால் வேள்வித்தழல்களை வாழ்விப்போர் எனவும், வேதம் உடலும், ஆகமமுயிரும் ஆதலால் அவற்றிற்குப் பின் ஐயானனுரைபகர்வோர் எனவும், ஆகமத்தினுண்மையுணர்ந்தோர் எல்லாவற்றினுஞ் சிறந்தோர் ஆதலால் உலகியலகல்வோர்கள் என, அவற்றினிறுதியினும்நிற்ப முறைபடக்கூறினர். (கக)

உலவாக்கிழியருளியபடலம் முற்றிற்று.



ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - கஎஉகூ.



வளையல்விற்றதிருவிளையாடல்



முப்பத்திரண்டாவது

# வளையல்விற்றபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

வேதந்தனதுவடிவென்றுவிண்ணின்றிழிந்தவிமானமறைக்
கீதன்செழியன்றனக்குலவாக்கிழிதந்தளித்தவழியிதுவப்
போதங்கடந்தபொருள்வணிகப்புத்தேண்மாடமணிமறுகு
பாதந்தடவநடந்துவளைபகர்ந்தபரிசுபகர்கிற்பாம்.

(இ-ள்.) வேதம் தனது வடிவு என்று விண் நின்று இழிந்த விமானம் மறைகீதன் - வேதமே தனது திருவுருவமென்று கூறியருளி விண்ணுலகினின்றும்வந்த இந்திரவிமானத்தி லெழுந்தருளிய சாமவேதகீதனாகிய சோமசுந்தரக்கடவுள், செழியன் தனக்கு உலவாக்கிழிதந்து அளித்த வழி இது - குலபூடணபாண்டியனுக்கு உலவாக்கிழிகொடுத்தருளிய திருவிளையாடல் இது, அப்போதம் கடந்த பொருள் வணிகப்புத்தேள் - அந்தச்சுட்டறிவிற்கெட்டாத கடவுள்வணிகராய், மாடம் மணி மறுகு பாதம் தடவ நடந்து வளைபகர்ந்தபரிசு பகர்கிற்பாம் - மாடங்கள்நெருங்கிய அழகியவீதியில் தமதுதிருவடிதோயநடந்து வளையல்விற்ற திருவிளையாடலை யினிக் கூறுவாம்.

விமானத்துக்கு, வேதந்தனது வடிவென்று விண்ணின்றிழிந்த என்பதை அடையாக்கி, வேதமே தனதுவடிவமென்று விண்ணுலகினின்றும்வந்த விமானம் எனப் பொருள்கூறுதலும் ஒன்று. (க)

இறைவன்குலபூடணன்றிகிரியிவ்வாறுருட்டுநாண்முன்னாட்
சிறைவண்டறையுந்தாருவனதெய்வமுனிவர்பன்னியர்தந்
நிறையன்றளந்துகாட்டுகெனநெடியோன்மகனைப்பொடியாக்கு
மறவன்றானோர்காபாலியாகிப்பலிக்குவருகின்றான்.

(இ-ள்.) இறைவன் குலபூடணன் திகிரி இவ்வாறு உருட்டு நாள் - அரசனாகிய குலபூடணபாண்டியன் தனது ஆணையாகிய சக்கரத்தை யிவ்விதமாகச் செலுத்துங் காலையில், முன் நாள் சிறைவண்டு அறையும் தாருவன தெய்வ முனிவர் பன்னியர் தம் நிறை அன்று அளந்து காட்டுக என - முன்னாளில சிறைகளையுடைய வண்டுகளொலிக்கும் தாருகவனத்தில் வசிக்குந் தெய்வத்தன்மைபொருந்திய முனிவர்களது மனைவியர்களுடைய கற்புநிலையை அக்காலையில் அளந்துகாட்டக்கடவேனென்று நெடியோன்மகனை பொடியாக்கும் மறவன் தான் ஓர்காபாலி ஆகி பலிக்குவருகின்றான் - திருமால்மகனாகிய மன்மதனை நீறுக்கிய வீரனாகிய சிவபெருமான் ஒருகபாலத்தையேந்தினவனாகிப் பலிக்குவருகின்றவனாயினான்.

பிரமன்புதல்வராதலால் தெய்வமுனிவர் எனவும், அவர்கள் தமக்குநேர்ந்த சாபத்தால் பரசிவத்தைக்கைவிட்டு வேள்வியைப் பொருளெனக்கொண்டிறுமாக்குஞ்செருக்கையும், அவர்கள் மனைவியர்கள் தமதுகற்பைப்போல் இலக்குமிமுதலியோர்கற்புச் சிறந்ததின்றென இறுமாக்குஞ்செருக்கையும் ஒழிக்கப்போந்தமையால் பன்னியர்தம் நிறையன்றளந்து காட்டுகென எனவும், தான் ஓர்பால் உமாதேவியாரோடு கூடியிருந்தருளியுங் காமனைநீறுக்கிய பெருந்துறவினனாதலால் நெடியோன் மகனைப்பொடியாக்கு மறவன் எனவுங்கூறினார். கபாலம் ஏந்தினவன் காபாலி இது தத்திதாந்தபதம். (உ)

வேதமசைக்குங்கோவணமுமெய்யினீறுமுள்ளாளக்
கீதமிசைக்குங்கனிவாயுமுள்ளேநகையுங்கிண்கிணிசூழ்
பாதமலரும்பாதுகையும்பலிகொள்கலனுங்கொண்டிரதி
மாதுகணவன்றவவேடமெடுத்தாலொத்துவருமெல்லை.

(இ-ள்.) வேதம் அசைக்கும் கோவணமும் - வேதமாகியகட்டுக் கோவணமும், மெய்யில் நீறும் - திருமேனியில் வெண்ணீறும், உள்ளாளம் கீதம் இசைக்கும் கனிவாயும்-உள்ளாளமென்னுங்கீதத்தையிசைக்காநின்ற கோவைக்கனிபோன்ற திருவாயும், உள்ளே நகையும் - அத்திருவாயுள் அரும்பியபுன்னகையும், கிண்கிணிசூழ் பாதமலரும் பாதுகையும் பலிகொள்கலனும் கொண்டு - சதங்கையணிந்த பாததாமரையும் பாதுகையும் பலிவாங்குகலனுங்கொண்டு, இரதி மாது கணவன் தவவேடம் எடுத்தால் ஒத்துவரும் எல்லை - இரதிமாதுகணவனாகிய மன்மதன் ஒருதவவேடத்தை எடுத்துவந்தா லொத்துவந்தருளுங்காலையில்.

உள்ளாளக்கீதம் என்றது ஒற்றின்மாத்திரைதோன்ற உள்ளேயிசைக்கும் ஆளத்தி. அதனை வழக்கிற்கனம் என்பர். (கூ)

விள்ளுங்கமலச்சேவடிசூழ்சிலம்பினொலியுமிடறதிரத்
துள்ளுங்கீதவொலியுங்கைத்துடியினொலியுந்துளைச்செவிகீண்
டுள்ளம்பிளந்துநிறைகளைந்தீர்த்தொல்லைவருமுன்வல்லியர்கள்
பள்ளங்கண்டுவருபுனல்போற்பலிகொண்டில்லின்புறம்போந்தார்.

(இ-ள்.) விள்ளும் கமலம் சேவடிசூழ் சிலம்பின் ஒலியும் மிடறு அதிர துள்ளும் கீதம் ஒலியும் - மலர்ந்ததாமரைபோன்ற செவந்ததிருவடிமேற்சூழ்ந்த சிலம்பின் ஓசையும் கண்டத்தின்கண் அசையாது அதிரத்துள்ளாநின்ற கீதவோசையும், கைதுடியின் ஒலியும் - திருக்கரத்திலேந்திய தமருகத்தினோசையும், செவி துளை கீண்டு உள்ளம் பிளந்து நிறைகளைந்து ஈர்த்து ஒல்லைவருமுன்-செவித்துளையைப்பெருந்துளைசெய்து உள்ளேசென்று மனத்தைவெளியாக்கிக் கற்பினைக்களைகொண்டு இழுத்து விரைந்து வருதற்குமுன், வல்லியர்கள் பள்ளம் கண்டு வருபுனல் போல் பலிகொண்டு இல்லின்புறம்போந்தார் - தாருகவனமுனிவர் பன்னியர்கள் பள்ளத்தைக்கண்டு மேட்டினின்றுவரும் வெள்ளம்போலப் பலியையேந்தி வீட்டினின்று புறம்பேவந்தார்கள்.

ஒலி காதின்வழிசெல்லுதற்குரியதாதலால் துளைச்செவிகீண்டெனவும், அது மனத்தைக்கிழறுத்துச்செல்லுதலால் உள்ளம்பிளந்து எனவும், அது அங்குள்ளபொருள்களைப் பற்றறக்களைந்தமையால் நிறைகளைந்திர்த்து எனவும், மேட்டினின்றுவரும்பெருக்குப் பள்ளத்தைக் காணின் ஞெரேலென விரைந்துபாய்தல்போல மனம் வெளியானமையின் விரைந்துவந்தனராதலால் பள்ளங்கண்டு வருபுனல்போற் பலிகொண்டு எனவுங்கூறினர். (ல)

ஷை வேறு.

ஐயங்கொண்டணைவாரையர்பரிகலத்தையமன்றிக்
கையம்பொன்வளையும்பெய்வார்கருத்துநாணன்றிக்காசு
செய்யும்பொன்மருங்குநாணுமிழப்பர்வேள்சிலையம்பன்றிக்
கொய்யுந்தண்மலர்க்கணம்புங்கொங்கையிற்சொரியச்சோர்வார்.

(இ-ள்.) ஐயம் கொண்டு அணைவார் ஐயர் பரிகலத்து ஐயம் அன்றி கை அம் பொன் வளையும் பெய்வார் - பலிகொண்டுவரூமுனிவர் பன்னியர் ஐயரது பரிகலத்தில் ஐயமல்லாமலும் கையில் அணிந்த அழகிய பொன்னாலாகிய வளையலையுமிடுவார், கருத்து நாண் அன்றி காசு செய்யும் பொன் மருங்குல் நாணும் இழப்பர் - மனத்திலுள்ள நாணல்லாமலும் இரத்தினமிழைத்த பொன்னாலாகிய இடையிலணிந்த நாணையுமிழப்பர், வேள் சிலை அம்பு அன்றி கொய்யும் தண்மலர்க்கண் அம்பும் கொங்கையில் சொரிய சோர்வார் - மன்மதன் தனது வில்லிடுலேறிட்ட மலரம்பல்லாமல் கொய்யாநின்ற தண்ணிய தாமரைமலர்போன்ற தமது கண்களம்பினையுந் தனத்தின்மேற்சிந்த நிலைதளர்வார்கள்.

நாண் முன்னது நாற்குணங்களுள் சிறந்தநாண். பின்னது மேகலை. சிலையம்பு வில்லிலேறிட்டபாணம். கண்ணம்பு கண்ணீர். இவை செம்மொழிச்சிலேடைகள். பெய்தல், இழத்தல், சொரிதல் இவை தம்முள் விரோதமின்றிக் கூடத்தக்கவைகளாயிருத்தலால் கூட்டவணி. சிறந்தநாண் என்றது மடம், அச்சம், பயிர்ப்பு என்னு முக்குணங்களும் அதன்வழித்தாதலால் "தாயிற்சிறந்தன்றுநாண்" என்னுந் திருக்கோவையாரில் உணர்க. (ரு)

மடமயிலனையாரெங்கள்வளையினைதருதிரென்றார
கடல்விடமயின்றானுங்கள்கந்தரத்துள்ளதென்றான்
றடமதிக்கொம்பனாரெங்கலையினைத்தருதிரென்றார்
முடமதிமிலைந்தானுங்கண்முகமதியிடத்ததென்றான்.

(இ-ள்.) மடமயில் அனையார் எங்கள் வளையினை தருதிர் என்றார் - இளமைதங்கிய மயிலினையொத்த பெண்கள் எங்கள்வளையைக்கொடுங்களென்றார்கள், கடல் விடம் அயின்றான் நுங்கள் கந்தரத்து உள்ளது என்றான் - கடலிற்றோன்றிய விடத்தையுண்டருளிய பெருமானார் உங்கள்கண்டத்தில் உள்ளதென்று விடையருளினார், தடம் மதி கொம்பு அன்னார் எம் கலையினை தருதிர் என்றார் - பூரணசந்திரனுதயஞ்செய்த பூங்கொம்புபோன்ற பெண்கள் எமது கலையைக்கொடுங்களென்று வினவினார்கள், முடம் மதி மிலைந்தான் நுங்கள் முகம் மதி இடத்தது என்றான் - வளைந்தபிறையையணிந்த பெருமானார் உங்கள் முகமாகிய சந்திரனிடத்துள்ளதென்று பணித்தருளினார்.

வளைமுன்னது வளையல், பின்னது சங்கு, கலைமுன்னது ஆடை, பின்னது சந்திரன்கலை. உம்மிடத்துக்கொண்ட காமவேட்கையால்மெலிந்து வளையுங்கலையுஞ் சோர்ந்தோமென்று கூறியமுனிவர் பன்னியர்கருத்துணர்ந்து உம்மிடத்து அக்காமவேட்கை,யாம்சிறிதுமில்லேமென்பது புலப்பட உங்கள் கந்தரத்துள்ளது உங்கள் முகமதியிடத்ததென எதிர்மொழிகொடுத்தலால் நுட்பவணி. (சு)

இடையறிந்தெம்மைச்சேர்மினென்றனரிளையரெங்கோன்
கடலமுதனையீர்நுங்கட்கிடையினிக்காணாதென்றான்
மடநலாரீதேற்பண்டைவண்ணமீந்தில்லிற்செல்ல
விடையளித்தருண்மினென்றார்வேலைபுக்குறங்குமென்றான்.

(இ-ள்.) இளையர் இடை அறிந்து எம்மை சேர்மின் என்றனர் - மங்கைப்பருவத்தையுடைய முனிவர் பன்னியர் இடையறிந்து எங்களைச் சேருங்களென்றுகூறினர், எம் கோன் கடல் அமுது அனையீர் நுங்கட்கு இடை இனி காணாது என்றான் -

எமதுபெருமானார் கடலிற்றோன்றிய அமுதினையொத்தபெண்களே உங்களுக்கு இடை இப்பொழுது தோன்றாதென்று பணித்தார், மடம் நல்லார். அஃதேல் பண்டை வண்ணம் ஈந்து இல்லில் செல்ல விடை அளித் தருண்மின் என்றார் - இளமைப்பருவத்தையுடைய பெண்கள் அஃதாயில் முன்னுள்ள நிறத்தைத்தந்து எமது இல்லிற்கு நாங்கள்செல்ல விடைகொடுத்தருளுமென்று கூறினார், வேலைபுக்கு உறங்கும் என்றான் - கடலிற்புகுந்து அறிதுயில்கொள்ளுமென்று பணித்தருளினார்.

இடைமுன்னது சமையம், பின்னது மருங்குல், விடைமுன்னது உத்தரம், பின்னது திருமால். தமக்குத்திருமாலே விடையூர்தியாதலால் வேலைபுக்குறங்கும என்றருளினார். இப்போது பெண்கள் பசலைபூத்திருத்தலால் இவ்வண்ணத்தோடுசெல்லின் எமதுகணவர் கோபிப்பார் என்பார் பண்டைவண்ணமீந் தில்லிற்செல்ல விடையளித்தருண்மின் என்றார். இப்போதியாங்கள் உயிரிழக்கும் சமையத்தினராயிருத்தலால் சேர்ந்துயிர்தரவேண்டுமெனவும், எங்கள் தேகநிறம் வேறுபட்டமையால் அவ்வேறுபாடொழியப் புணரவேண்டும் என்னுமுனிவர் பன்னியர்கருத்துணர்ந்து முன்னர்க்கூறியது புலப்பட எதிர்மொழிகொடுத்தலால் இதுவும் அவ்வணி. (எ)

நங்கையர்கபாலிக்கென்றுநடுவிலைபோலுமென்றா
ரங்கணனடுவிலாமைநும்மனோர்க்கடுத்ததென்றான்
மங்கையரடிகணெஞ்சம்வலியகற்போலுமென்றார்
கொங்கலர்கொன்றையானுங்கொங்கையேவன்கலென்றான்.

(இ-ள்.) நங்கையர் கபாலிக்கு என்றும் நடு இலை போலும் என்றார்-முனிவர் பன்னியர் கபாலியாகிய உமக்கு ஒருக்காலும் நடுவில்லைபோலுமென்று கூறினார், அங்கணன் நடு இலாமை நும்மனோர்க்கு அடுத்தது என்றான்-சிவபெருமான் நடுவில்லாத்தன்மை நும்போலியர்க்கேயன்றி எம்போலியர்க்கு அடுத்ததன்று என்று விடையருளினார், மங்கையர் அடிகள் நெஞ்சம் வலியகல் போலும் என்றார்-அம்முனிவர் பன்னியர் அடிகளுடைய நெஞ்சம் வலிய கல்லையொக்குமென்று கூறினார், கொங்கு அலர் கொன்றையான் நுங்கொங்கையே வன்கல் என்றான் - மகரந்தத்தோடு மலர்ந்த கொன்றைமாலையையணிந்த சிவபெருமான் உமது தனமே வலியகல்லென்று பணித்தருளினார்.

நடு முன்னது நடுவுநிலைமை, பின்னது இடை. மன்மதன் எங்களிடத்துச் சலஞ்சாதித்தலை யுணர்ந்தும் உணராதவர்போலத் துன்பமொழிக்காது நிற்கின்றீர் எனவும், அதனால் உமதுமனம் கல்லெனவும் கூறிய முனிவர் பன்னியர்கருத்துணர்ந்து முன்னர்க்கூறியது புலப்பட எதிர்மொழிகொடுத்தலால் இதுவும்அவ்வணி. (அ)

காதுவேலன்னகண்ணார்கங்கைநீர்சுமந்ததேதுக்
கோதுமினென்றார்நும்பாலுண்பலியேற்கவென்றா
னேதுபோலிருந்ததையனிசைத்தசெப்பென்றாரீசன்
கோதுறுவமுதன்னீர்நுங்கொங்கைபோலிருந்ததென்றான்.

(இ-ள்.) காது வேல் அன்ன கண்ணார் கங்கைநீர் சுமந்தது எதுக்கு ஓதுமின் என்றார் - கொல்லும்வேலை ஒத்த கண்ணையுடைய முனிவர் பன்னியர் கங்கையை நீர் சுமந்திருப்பது யாதுநிமித்தஞ் சொல்லும் என்று வினவினார், நும்பால் உண்பலி ஏற்க என்றார் - உம்மிடத்திலுண்ணும்பலி ஏற்கச்சுமந்தோமென்று விடையருளினார், ஐயன் இசைத்த செப்பு எதுபோல் இருந்தது என்றார் - பெருமானார்கூறிய செப்பு

யாதுபோலிருந்ததென்று அதிசயித்துக்கூறினார், ஈசன் கோது உறு அமுது அன்னீர் நும்கொங்கைபோல் இருந்தது என்றான் - பெருமானார் குற்றமில்லாத அமுதத்தை யொத்த பெண்களே அச்செப்பு உமது தனத்தைப்போலிருந்ததென்று பணித்தருளினார்.

கங்கைநீர் முன்னது கங்காநீர், பின்னது கம்-பிரமகபாலம், கை-கரம் எனச் சொல்வகைசெய்து நீர் கபாலத்தைக் கையில் எனவும், செப்பு முன்னது விடை, பின்னது சரண்டகம் எனவும் பொருள்கொள்க. காமவெப்பத்தை யாற்றுதற்கன்றோ கங்கைநீர் சுமந்தீர் என்னுங் கருத்தினராய்க் கங்கைநீர்சுமந்த தேதுக்கோதுமினெனவினவத் தமக்கு அது இல்லாமைதோன்ற நும்பாலும்பலியேற்க வெனவும், நாம்கூறின வினாவிற்கு விடையில்லையேயென்னுங் கருத்தினராய் எதுபோலிருந்ததுதையனிசைத்த செப்பென்றதற்குக் காமமயக்குடையவர்க்கு விடைகொடுப்பது தமக்குக் கருத்தின்மைதோன்ற நுங்கொங்கைபோலிருந்தது எனவுங்கூறினார். இதுவும் அவ்வணி. (கூ)

கறுத்ததையெவன்கொலையகந்தரமென்றார்வேளை
வெறுத்தவன்மாரிபெய்தற்கென்றனன்விழியால்வேலை
யொறுத்தவர்யாவதென்றீருத்தரமென்றார்கூற்றைச்
செறுத்தவன்றென்பானின்றுநோக்கினாற்றெரிவதென்றான்.

(இ-ள்.) ஐய கந்தரம் கறுத்தது எவன்கொல் என்றார் - ஐயனே யுமது கந்தரங்கறுத்தது யாதுகாரணமென்று வினவினார், வேளை வெறுத்தவன் மாரிபெய்தற்கு என்றனன் - மன்மதனை நீறுக்கிய பெருமானார் மழைபெய்தற்கென்று விடையருளினார், விழியால்வேலை ஒறுத்தவர் யாவது என்றீர் உத்தரம் என்றார்-தமதுகண்களால் வேலைவென்ற முனிவர் பன்னியர் எங்கள் வினாவுக்கு யாதென்றுகூறினீர் உத்தரமென்று கேட்டார், கூற்றை செறுத்தவன் தென்பால் நின்றுநோக்கினால் தெரிவது என்றான் - இயமனையுதைத்தருளிய அப்பெருமானார் தென்றிசைக்கணின்றுநோக்கினால் நீங்கள்கூறிய உத்தரம் தெரியுமென்று பணித்தருளினார்.

கந்தரம் முன்னது கண்டம், பின்னது மேகம், உத்தரம் முன்னது விடை, பின்னது வடதிசை, தம்பால் இரக்கமிலராதலால் கறுத்தநெஞ்சினரென்று முட்கோளினராய்க் கறுத்ததை யெவன் கொலைய கந்தர மென்று முனிவர் பன்னியர் வினவத் தமது ஸ்ரீகண்டம் கறுத்தது பிரமன் முதலியோரைக் காத்தற்பொருட்டாதலால் மேகத்தின்மேலேற்றி மாரிபெய்தற்கெனவும், தாம் கூறியதற்கு உத்தரமில்லையேயென்னுங் கருத்தினராய் உத்தரம் யாதென்றார்க்குத் தென்பால்நின்று நோக்கில் உத்தரம் தெரியும் எனவுங்கூறினார். (கo)

செக்கரஞ்சடையான்கண்ணிற்றம்முருத்தெரியநோக்கி
யிக்கொடியார்போற்கண்ணுளெம்மையுமிருத்திரென்றார்
நக்கனுந்தனையன்னார்கண்ணிடைக்கண்டுநகைத்துநம்மின்
மிக்கவர்நுங்கணுள்ளார்விழித்தவர்க்காண்மினென்றான்.

(இ-ள்.) செக்கர் அம் சடையான் கண்ணில் தம் உரு தெரியநோக்கி-சிவந்த அழகிய சடாமுடியையுடைய சிவபெருமான் திருக்கண்ணிற் றமதுருவம் புலப்படப்பார்த்து, இக்கொடியார்போல் கண்ணுள் எம்மையும் இருத்திர் என்றார் - இந்தக் கொடிபோன்ற இடையையுடைய பெண்களையிருத்தியதுபோல உமது திருக்கண்

ணுள் எம்மையு மிருக்கச்செய்யும் என்றிரந்தார், நக்கனும் தன்னை அன்னோர் கண்ணிலிட கண்டு நகைத்து - அச்சிவபெருமானுந் தன்னை அப்பெண்கள் கண்ணிடத்து ப்புலப்படக்கண்டு நகைத்து, நம்மின மிக்கவர் நும் கண் உள்ளார் விழித்து அவர் காண்மின் என்றான் - நம்மினும் பேரழகையுடையவர் உமது கண்களிலிருக்கின்றார் சரிவரவிழித்து அவரைவிளங்கக் காணுங்களென்று பணித்தருளினார்.

காமமயக்கினராதலால் சிவபெருமான் திருக்கண்ணிற் றம்முருப்பிரதி பிம்பித்தலைநோக்கி வேற்றுமகளிரை யிருத்தியதுபோல எம்மையிருத்துதல் ஓர்பாரமோ வென்ற முனிவர் பன்னியர்க்குத்தாம் இயல்பாகவே காமமயக்கங் கழன்றோர் ஆதலால் நகைத்து எனவும், நம்மின்மிக்கவர் நுங்கணுள்ளார் விழித்தவர்க்காண்மின் எனவுங் கூறினார். இருத்திர் முன்னிலைப்பன்மை யேவற்பிறவினைமுற்று. (கக)

அஞ்சலிப்போதுபெய்வார்சரணமென்றடியில்வீழ்வார்
தஞ்செனத்தளிர்க்கைநீட்டித்தழுவியகிடைக்குந்தோறு
மெஞ்சுவானெஞ்சாதேத்தியெதிர்மறையெட்டுந்தோறும்
வஞ்சனுயகல்வானமையல்வஞ்சியர்க்கணியனாமோ.

(இ-ள்.) அஞ்சலி போதுபெய்வார் - அஞ்சலித்து மலரைச்சூட்டுவார், சரணம் என்று அடியில் வீழ்வார் - அடைக்கலமென்று திருவடியின்மேல்வீழ்வார்கள், தஞ்சம் என தளிர்கை நீட்டி தழுவிய கிடைக்குந்தோறும் எஞ்சுவான் - நீரே எமக்கோர் பற்றுக்கோடென்று தளிர்போன்ற மெல்லிய கைகளைநீட்டித்தழுவ அவர்களுக்குக் கிட்டுந்தோறும் கிட்டாது அப்பாற்படுவான், எதிர் எஞ்சாது ஏத்தி மறை எட்டுந்தோறும் வஞ்சனாய் அகல்வான்-எதிர்நின்று குறைபடாதுவணங்கி வேதங்கள் தொடுந்தோறும் அணுதற்கரியனாய் நீங்கும்பெருமான், மையல் வஞ்சியர்க்கு அணியன் ஆமோ - மயக்கவலையிற்பட்ட பெண்களுக்குச் சமீபித்தவனாவானோ.

தஞ்சம் ஈறுதொகுத்தல். அஞ்சலித்து மலர்சூட்டினும் அடைக்கலமென்று திருவடிமேல்விழினும் மையல்வஞ்சியர் ஆதலால் தழுவியகிடைக்குந்தோறும் எஞ்சுவான் எனவும், பதிஞானமுணர்தற்குக் கருவியாகியவேதம் பாசஞானமாயிருத்தலால் அதற்கு அணியனாகாதவன் இவர்க்கு அணியனாதல் கூடாமையின்,மையல் வஞ்சியர்க்கணியனாமோ எனவுங்கூறினார் " புறத்தார்க்குச்சேயோன் " எனவரும் பெரியோர்திருவாக்காலுணர்க. அஞ்சலி என்னு முதனிலை இறந்தகால வினையெச்சத்தின்மேல் நின்றது. எஞ்சாதேத்தி யெதிர்மறையெட்டுந்தோறும் - வஞ்சனாயகலவான் மையல்வஞ்சியர்க்கணியனாமோ என்றது வேற்றுப்பொருள் வைப்பணி. (கஉ)

அடுத்தெமைத்தழாதிரேனீரவிழ்ந்தபூங்கலையைமீள
வுடுத்துமினும்பால்யாங்கண்மையனோயுழப்பநோக்கிக்
கடுத்தெமர்முனியாமுன்னங்கழற்றியவளையுங்கையி
லெடுத்திடுமென்றார்நாளையிடுதுமென்றேகினானே.

(இ-ள்.) நீர் அடுத்து எமை தழாதிரேல் - நீர் அடுத்து எம்மைத் தழுவாதிருப்பீராகில், அவிழ்ந்த பூ கலையை மீள உடுத்துமின் - சரிந்த அழகிய வுடையையாயினு மீள எடுத்து உடுத்தும், நும் பால் யாங்கள் மையல் நோய் உழப்ப நோக்கி - உம்மிடத்தில் நாங்கள் மயக்கநோயில்வருந்த அதனைப்பார்த்து, எமர் கடுத்து முனியா முன்னம் - எம்முடையகணவர் கோபித்து வெறுக்காததற்குமுன்னம், கழற்றிய வளையும் கையில் எடுத்து இடும் என்றார் - முன்பு கழற்றிய வளையலையாயினும் எம

து கையில் எடுத்திடுங்களென்முர், நாளை இடுதும் என்று ஏகினுன் - நாளைக்கிடுவோ மென்று சென்றருளினூர்.

வளைகழலுதல் சிவபெருமானைக்கருதியதன்மேல் நிகழ்ந்தசெய லாதலால் அச்சிவபெருமான்மேல் ஏற்றிக் கழற்றியவளையெனவும், இப்பெண்கள் சாபத்தால் வணிகருலக் கன்னியராயவதரித்தலால் நாளையிடுதுமென்றேகினுன் எனவும், பரிசித்தலாலாயினும் மயக்கொழிவாமென்னுங் கருத்தினராதலால் உடுத்துமின் எனவும், எடுத்திடும் எனவுங் கூறினூர். (கங)

பிள்ளைவெண்டிங்கள்வேய்ந்தபிரான்கொண்டுபோனநாணு
முள்ளமுமீட்கலாற்ரு துயங்கினுர்கலையுஞ்சங்குந்
துள்ளவைங்கணையான்வாளிதுளைப்பவெம்பசலையாகங்
கொள்ளைகொண்டுண்ணநின்ருரந்நிலைகொழுநர்கண்டார்.

(இ-ள்.) பிள்ளை வெண் திங்கள் வேய்ந்த பிரான் கொண்டு போன நாணும் உள்ளமும் மீட்கல் ஆற்ருது உயங்கினுர் - இளமைத்தன்மையையுடைய வெள்ளிய பிறையையணிந்த சிவபிரான் கைக்கொண்டுசென்ற நாணத்தையும் தமதுமனத்தையும் மீட்கமுடியாது மயங்கியமுனிவர் பன்னியர், கலையும் சங்கும் துள்ள - ஆடையும் வளையுஞ் சோரவும், ஐங்கணையான் வாளி துளைப்ப - பஞ்சபாணங்களையேந்திய மன்மதன்பாணங்கள் துளைக்கவும், வெம் பசலை ஆகம் கொள்ளை கொண்டு உண்ண நின்ருர் - காமவிருப்பாலாகிய பசலை தமதுமார்பைக்கவர்ந்து படரவும் நின்ருர்கள், அந்நிலை கொழுநர் கண்டார் - அவ்வாறு நின்ற நிலைமையைத் தாருகவன முனிவர் பார்த்தார்கள். (கச)

பொய்தவவடிவாய்வந்துநம்மனைப்பொன்னின்னுர்
மெய்தழைகற்பைநாணைவேரொடுங்களைந்துபோன
கைதவன்மாடக்கூடற்கடவுளென்றெண்ணித்தேர்ந்தார்
செய்தவவலியாற்காலமூன்றையுந்தெரியவல்லார்.

(இ-ள்.) செய் தவம் வலியால் காலம் மூன்றையும் தெரிய வல்லார் - செய்யுந்தவவன்மையால் திரிகாலங்களில் நிகழுஞ்செய்திகளையும் அளந்தறியவல்ல முனிவர்கள், பொய் தவம் வடிவாய் வந்து- பொய்த்ததவவடிவாய்வந்து, நம் மனை பொன்னின் அன்னுர் மெய் தழை கற்பை நாணை வேரொடும் களைந்துபோன கைதவன்- நமது இல்வாழ்க்கைக் குரிய பன்னியரது உடலோடு வளர்ந்த கற்பையு நாணையும் வேரோடுங் களைந்துசென்ற வஞ்சகன், மாடம் கூடல் கடவுள் என்று எண்ணி தேர்ந்தார் - மாடங்கணெருங்கி யோங்கிய மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளே என்று சிந்தித்துணர்ந்தார்கள்.

முனிவர் பன்னியர் கற்பினிலையளந் தறிதற்பொருட்டே தவவடிவினராய்வருதலின் பொய்தவவடிவாய் எனவும், உயிர்க்குயிராய்க் கரந்துறைதலிற் கைதவன் எனவுங்கூறினூர். (கரு)

மேற்படி வேறு.

கற்புத்திரிந்தார்தமைநோக்கிக்கருத்துத்திரிந்தீர்நீராழி
வெற்புத்திரிந்தமதிற்கூடன்மேயவணிகர்கன்னியராய்ப்

பொற்புத்திரியாதவதரிப்பீர்போமென்றிட்டசாபங்கேட்
டற்புத்திரிந்தாரெங்களுக்கீதகல்வதெப்போதெனமுனிவர்.

(இ-ள்.) கற்பு திரிந்தார் தமை நோக்கி கருத்து திரிந்தீர் - கற்பினின்றுவேறுபட்ட தமது பன்னியரைப்பார்த்து நீங்களோ மனவேறுபட்டீர்கள், நீள் ஆழி வெற்பு திரிந்த மதில் கூடல் மேய வணிகர் கன்னியராய் - நீண்ட சக்கரவாளகிரி தனதுருத்திரிந்துவந்த மதில்சூழ்ந்த மதுரையில்வசிக்கும் வணிகப் பெண்களாய், பொற்பு திரியாது அவதரிப்பீர் போம் என்று இட்ட சாபம் கேட்டு - இப்போதுள்ள அழகிற் சிறிதுங்குறைபடாது பிறக்கக்கடவீர் இங்குநின்று போமென்று இட்ட சாபத்தைக்கேட்டு அஞ்சி, அற்பு திரிந்தார் எங்களுக்கு ஈது அகல்வது எப்போது என - இல்வாழ்க்கைக்குரிய அன்பினின்று வேறுபட்ட பெண்கள் எங்களுக்கு இச்சாபம் நீங்குவது எப்போதென்றுவினவ, முனிவர் - தாருகவனத்துமுனிவர்கள். (கரு)

அந்தமாடமதுரைநகர்க்கரசாகியசுந்தரக்கடவுள்
வந்துநும்மைக்கைதீண்டும்வழியிச்சாபங்கழியுமெனச்
சிந்தைதளர்ந்தபன்னியருந்தென்னர்மதுரைத்தொன்னகரிற்
கந்தமுல்லைத்தார்வணிகர்காதன்மகளிராய்ப்பிறந்தார்.

(இ-ள்.) அந்த மாடம் மதுரைநகர்க்கு அரசாகிய சுந்தரக்கடவுள் வந்து-மாடங்கணெருங்கிய அந்தமதுரைத் திருநகர்க்கு அரசாயிருந்த சோமசுந்தரக்கடவுள் மானிடத்திருவுருவங்கொண்டுவந்து, நும்மை கை தீண்டும் வழி இச்சாபம் கழியும் என - உங்களைக் கைதீண்டுமளவில் இந்தச்சாபம் கழியுமென்றனுக்கிரகிக்க, சிந்தை தளர்ந்த பன்னியரும் - அதுகேட்டு மனந்தளர்ந்த முனிவர்பன்னிமாரும், தென்னர் மதுரை தொல் நகரில் கந்தம் முல்லை தார் வணிகர் காதல் மகளிராய் பிறந்தார்- அச்சோமசுந்தரக்கடவுளுடைய மதுரையாகிய தொன்றுதொட்டுள்ள திருநகரத்திலுள்ள வாசனைநிறைந்த முல்லைமாலையையணிந்த வணிகர்க்கு விருப்பமிக்க புத்திரிகளாய்ப் பிறந்தார்கள்.

தென்னர் என்பதின் முதலில் அகரச்சுட்டுத் தொகுத்தல். (கசு)

வளர்ந்துபேதையிளம்பருவமாறியல்குற்புடையகன்று
தளர்ந்துகாஞ்சிமருங்கொசியத்ததும்பியண்ணாந்தரும்புமுலை
கிளர்ந்துசெல்லும்பருவத்திற்கிடைத்தாராகவிப்பான்மண்
ணளந்தவிடையான்வந்துவளைபகரும்வண்ணமறைகிற்பாம்.

(இ-ள்.) வளர்ந்து பேதை இளம் பருவம் மாறி - (அப்பெண்கள்) வளர்ந்து பேதைப்பருவமாறி, அல்குல் புடை அகன்று தளர்ந்து காஞ்சி மருங்கு ஒசிய ததும்பி அண்ணாந்து அரும்பு முலை கிளர்ந்து செல்லும் பருவத்தில் கிடைத்தார் ஆக - அல்குல் புடைபரவக்காஞ்சியென்னும் ஆபரணத்தைத்தரித்த இடைதளர்ந்து ஒசியமுகங்கொண்டு மேலெழுந்தண்ணாந்துதோன்றிய முலைபருத்தோங்கு மங்கைப்பருவத்தில்வர, இப்பால் மண் அளந்த விடையான் வந்து வளை பகரும் வண்ணம் அறைகிற்பாம் - இப்புறம் நிலவுலகையளந்த இடபவூர்தியையுடைய சோமசுந்தரக்கடவுள் மானிடத்திருவுருவங்கொண்டுவந்து வளையல்விற்ற திருவிளையாடலைக் கூறுவாம்.

மங்கைப்பருவத்திற்குரிய குறிகளாதலால் அல்குற்புடையகன்று மருங்கொசியத்ததும்பி யண்ணாந்தரும்புமுலை கிளர்ந்துசெல்லும் எனக்கூறினார். (கஎ)

கங்கைகரந்துமணிகண்டங்கரந்துநுதற்கண்கரந்தொருபான்
மங்கைவடிவுங்கரந்துழையுமழுவுங்கரந்துமழவிடையூ
ரங்கணழகர்வளைவணிகராகியேனமளந்தறியாச்
செங்கமலச்சேவடியிரண்டுந்திரைநீர்ஞாலமகள்சூட.

(இ-ள்.) கங்கை கரந்து மணி கண்டம் கரந்து நுதல் கண் கரந்து ஒருபால் மங்கை வடிவும் கரந்து உழையும் மழுவும் கரந்து - முடியிற்சூடிய கங்கையையும் ஸ்ரீகண்டத்தையும் நெற்றிக்கண்ணையும் இடப்பாலுள்ள உமாதேவியார் திருவுருவத்தையும் ஏந்திய மானையு மழுவையும் ஒளித்து, மழவிடை ஊர் அங்கண் அழகர் வளை வணிகர் ஆகி - இளமைதங்கிய விடையை நடத்தும் சோமசுந்தரக்கடவுள் வளையல்பகரும்வணிகராய், ஏனம் அளந்து அறியாத செம் கமலம் சேவடி இரண்டும் திரை நீர் ஞாலம் மகள் சூட - திருமால்வராக மூர்த்தமாய் நிலவுலகம்கிண்டு சென்றுமுணராத செந்தாமரைபோன்ற சிவந்த திருவடிகளிரண்டையும் கடலையாடையாகச்சூழ்ந்த நிலமகள் சூடும்பொருட்டு.

பிரமன்முதலிய ஆன்மாக்க ளுய்தற்பொருட்டுத் தாம்கொண்ட திருவுருக்கரந்துவந்தனர் என்பார் கங்கைகரந்து உழையுமழுவுங் கரந்தெனவும், வந்த திருக்கோலமும் அருளுதற்பொருட்டாதலால் வளைவணிகராகி யெனவுங் கூறினர். (கக)

பண்டுமுனிவர்பன்னியர்பாற்கவர்ந்தவளையேபட்டுவடங்
கொண்டுதொடுத்துமீண்டவர்க்கேயிடுவேமெனுமுட்கோளினர்போற்
றொண்டர்தொடுத்தவைவண்ணத்துணர்த்தார்போலத்தோள்சுமந்து
மண்டுவளையைவிலைபகர்ந்துவணிகமறுகில்வருகின்றார்.

(இ-ள்.) பண்டு முனிவர் பன்னியர் பால் கவர்ந்த வளையே பட்டு வடம் கொண்டு தொடுத்து - முன்பு முனிவர் பன்னியரிடத்துக் கொள்ளைகொண்ட வளையலையே பட்டுவடத்திற கோவைசெய்து, மீண்டு அவர்க்கே இடுவோம் என்னும் உட்கோளினர் போல் - மீளவும் அவர்க்கே தொடுப்போமென்னும் உட்கருத்தினர்போலவும், தொண்டர் தொடுத்த ஐவண்ணம் துணர் தார்போல தோள் சுமந்து - தமது அடியார்சாத்திய ஐந்துநிறங்களையுடைய பூங்கொத்தாலமைத்த மாலைபோலவும் தமது திருத்தோளிற்சுமந்து, மண்டு வளையை விலை பகர்ந்து வணிக மறுகில் வருகின்றார் - அடுக்காய் நெருங்கிய வளையலை விலைகூறி வணிகர்வீதியில் வருவாராயினர். ()

மன்னுமறையின்பொருளுரைத்தமணிவாய்திறந்துவளைகொண்மி
னென்னுமளவிற்பருவமுகிலிமிழின்னிசைகேட்டெழுமயில்போற்
றுன்னுமணிமேகலையிழற்றத்தூயவணிகர்குலமகளிர்
மின்னுமணிமாளிகைநின்றும்வீதிவாயிற்புறப்பட்டார்.

(இ-ள்.) மன்னும் மறையின் பொருள் உரைத்த மணிவாய் திறந்து வளை கொண்மின் என்னும் அளவில் - நிலைபெற்றவேதத்தின்பொருளைக் (கண்ணுவர்முதலிய முனிவர்களுக்குக்) கூறியருளிய அழகிய திருவாய்மலர்ந்தருளி வளைவாங்குமின் என்றுகூறும் அளவில், பருவம் முகில் இமிழ் இன் இசை கேட்டு எழும் மயில் போல் - கார்காலத்திற் சூற்கொண்ட மேகம் ஒலிக்குமினிய ஒலியினைக்கேட்டு ஆடச் சிறைவிரித்தெழு மயில்போல, துன்னும் மணி மேகலை இழற்ற - நெருங்கிய இரத்தினமிழை

த்த மேகலையொலிக்க, தூய வணிகர் குலமகளிர் - களங்கமில்லாத வணிகர் குலப் பெண்கள், மின்னும் மணி மாளிகை நின்றும் வீதி வாயில் புறப்பட்டார் - விளங்கா நின்ற இரத்தினமழுதிய மாளிகையினின்றும் வீதியிற் புறப்பட்டார்கள்.

வலைகொண்மீனென்ற திருவாய் வேதத்தின்பொருளுரைத்த அருமைத் திருவாயென்பார் மன்னுமறையின் பொருளுரைத்த மணிவாய் என்றார். (உக)

வளைகளிடுவாரெனத்தங்கண்மனமெல்லாந்தம்புடையொதுங்கத்
தளைகளிடுவார்வருகின்றார்தம்மைக்கொம்மைவெம்முலையார்
துளைகளிடுதீங்குழலிசைபோற்சுரும்புபாடக்கருங்குழன்மேல்
விளைகளொழுகநுடங்கிவருமின்போலடைந்துசண்டார்கள்.

(இ-ள்.) வளைகள் இடுவார் என தங்கள் மனம் எல்லாம் தம்புடை ஒதுங்க தளைகள் இடுவார் வருகின்றார் தம்மை-வளைகளைத்தொடுப்பவரைப்போலத் தங்களுடைய மனமெல்லாம் தம்பாலொதுங்க விலங்கிடுவாராகி வருஞ் சோமசுந்தரக்கடவுளை, கொம்மை வெம் முலையார் துளைகள் இடு தீம் குழல் இசை போல் சுரும்பு பாட கரும் குழல் மேல் விளைகள் ஒழுக- திரண்ட விருப்பத்தைத் தருமுலைகளையுடைய வணிககுலப்பெண்கள் துளைகள்பொருந்திய இனிய வேய்ங்குழலி னிசையைப் போல வண்டுகள்பாடவும் கரியகூந்தலினின்றுஞ் சுரக்குமதுச்சிந்தவும், நுடங்கிவரும் மின் போல் அடைந்து கண்டார்கள் - (நிலவுலகின்மேல்) துவண்டுவரு மின்னலைப்போலச் சென்று தரிசித்தார்கள்.

எழுதற்கரிய நல்லெழில் வாய்ந்தபெண்கள் என்பார்பாட, ஒழுக நுடங்கிவருமின்போலென இல் பொருளுவமையணிதந்து கூறினார். (உஉ)

கண்டவடிவாற்றிளைப்பதற்குக்கழிபேரன்புகாதல்வழிக்
கொண்டுசெல்லவொருசார்தங்குணனாநாணமுதனான்கு
மண்டியொருசார்மறுதலைப்பமனமுமுழன்றுதடுமாற
வண்டர்பெருமான்விளையாடற்கமையச்சூழ்ந்தாரமுதனையார்.

(இ-ள்.) கண்ட வடி வால் திளைப்பதற்கு - அவரைத் தரிசித்த திருவுருவத் தோடுகூடி அனுபவித்தற்கு, கழி பேர் அன்பு - எழுந்தமிக்க பெரியஅன்பு, காதல் வழிக்கொண்டு ஒருசார் செல்ல -(தமது மனத்தை) காமவிருப்பத்தின் வழியேகொண்டு ஒருபக்கம் செலுத்தவும், ஒரு சார் தம் குணன் ஆம் நாணமுதல்நான்கும் மண்டி மறுதலைப்ப-ஒருபக்கம் தமது குணமாகிய நாணமுதலியநான்கும் தம்முள் நிலைகலங்கி முரணவும், மனமும் உழன்று தடுமாற-காதல்வழிச்சென்ற அம்மனமும் நிலைதிரிந்துதடுமாறவும், அண்டர் பெருமான் விளையாடற்கு அமுது அனையார் அமைய சூழ்ந்தார் - தேவர்பிரானாகிய அச்சோமசுந்தரக்கடவுள் திருவிளையாடல் செய்தற்குக்கடலிற்றோன்றிய அமுதுபோன்ற வணிகர்குலப்பெண்கள்பொருந்தப் புறம்பில் மொய்த்தார்கள்.

ஆசைக்குக்காரணம் அன்பாதலால் அன்புகாதல் வழிக்கொண்டு செல்லவெனவும், காமமேலீட்டால் நாணமுதலிய நாற்குணமும் நிலைகலங்கும் ஆதலால் மறுதலைப்பஎனவும்,அவைகலங்கியவழிமனம் ஒருவழிப்பட்டு நில்லாதாதலால் மனமுழு

மூன்று தடமோற எனவுங் கூறினர். நாற்குணங்களாவன நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு. (உ௩)

இரங்குமேகலைசிலம்பன்றியேனைய
விரும்பியகுழைதொடிமின்செய்கண்டிகை
மருங்கிறச்சுமப்பினும்வளைகைக்கில்லெனி
னரும்பியமுலையினர்க்கழகுண்டாகுமோ.

(இ-ள்.) இரங்கு மேகலை சிலம்பு அன்றி - ஒலிக்குமேகலையுஞ் சிலம்புமல்லாமல், ஏனைய விரும்பிய குழை தொடி மின் செய் கண்டிகை மருங்கு இற சுமப்பினும் - அவையொழிந்த விரும்பப்பட்ட குண்டலமும் சூடகமும் விளங்குங் கண்டிகையும் ஆகிய இந்த வாபரணங்களை யிடைமுறியச் சுமந்தாலும், அரும்பிய முலையினர்க்கு - தாமரை அரும்புபோல முகிழ்த்த தனங்களையுடைய பெண்களுக்கு, வளை கைக்கு இல்லெனின் அழகு உண்டாகுமோ - வளையல் கைகளுக்கு இல்லையாயின் அழகுண்டாகுமோ (இல்லையென்றபடி.)

மங்கலஞ் செய்தற்குரியது வளையன்றி யேனையணியன்மையால் வளைகைக்கில்லெனில் - அரும்பிய முலையினர்க் கழகுண்டாகுமோ என்றார். (உ௪)

செல்வநல்வணிகிரொஞ்செங்கைக்கேற்பன
நல்வளைதெரிந்திடுமென்றுநாய்கர்முன்
வல்வளரிளமுலைமகளிர்மின்னுமிழ்
கல்வளர்கடகமென்காந்தணீட்டினர்.

(இ-ள்.) செல்வம் நல்வணிகிர் - செல்வத்தையுடைய நல்லவணிகரே, எம் செம் கைக்கு ஏற்பன நல்வளை தெரிந்து இடும் என்று - எமது செவந்தகைகளுக்குப் பொருந்தும் வளையல்களுள் நல்ல வளையல்களைத் தெரிந்து தொடுங்களென்று, நாய்கர் முன் வல் வளர் இள முலை மகளிர்-வணிகத் திருக்கோலங் கொண்டுவந்த அச்சோமசுந்தரக்கடவுள்முன் சூதாடு கருவியைப்போல் குவிந்துவளர்ந்த இளமைதங்கிய தனத்தையுடைய பெண்கள், மின் உமிழ் கல் வளர் கடகம் மென் காந்தள் நீட்டினர் - ஒளிவீசும் இரத்தினமமுத்திய கடகமணிந்த மெல்லிய காந்தண்மலர்போன்ற கைகளை நீட்டினார்கள்.

கணந்தோறுங் காமமேலீட்டாற் றமது தேகம் படிப்படி மெலிந்து வருதலையொழிப்பீரொன்னும் பொருள்தோன்ற எம்செங்கைக் கேற்பன நல்வளைதெரிந்திடும் எனப்பிறி தொருவகையாற் கூறுதலால் பிறிதினுவற்சியணி. (உ௫)

பண்டருகிளவியங்கயற்கட்பாவைகைத்
தண்டளிர்பற்றியதடக்கைமாதர்கைம்
முண்டகம்பற்றியேமுகிழ்த்துப்பல்வரி
வண்டுகளேற்றுவார்மையலேற்றுவார்.

(இ-ள்.) பண் தரு கிளவி அம் கயல் கண் பாவை கைதண் தளிர் பற்றிய தடக்கை - இசையையொத்த சொற்களையுடைய அங்கயற்கண்ணியம்மையார் திருக்காமாகிய தண்ணியதளிரைத்தொட்ட நீண்டதிருக்கரத்தால், மாதர் கை முண்டகம்

பற்றியே முகிழ்த்து - வணிககுலப்பெண்களின் கைத்தாமரைகளைப்பிடித்து முன்பு நெரித்து, பல் வரி வண்டுகள் ஏற்றுவார் மையல் ஏற்றுவார் - பலவரிகளையுடைய வளையல்களைச் செறிப்பவர்போலக் காமமயக்குத தலைக்கேறச் செய்வார்.

ஆன்மாக்கள் தத்தம் வினைப்பயன்களை நுகர்ந்து பரிபாகம் அடைதற்பொருட்டுப் பராசத்தி திருக்கரநதொட்ட திருக்கரமெனபார் அங்கயற்கட்பாவை கைத்தண்டளிர் பற்றிய தடக்கையெனவும், அத்திருக்கரங்களால் முனிவர் பன்னியர் நுகருஞ் சாபங்கழித்தருளுவர் என்பார் மாதர்கைம்முண்டகம் பற்றியேமுகிழ்த்து மையலேற்றுவார் எனவுங்கூறினர். (உசு)

புங்கவனிடுவளை புடைத்துமீளவந்
தெங்களுக்கிடவிலையிடுதிராலெனக்
கொங்கவிழ்பைங்குழலெருத்தங்கோட்டிநின்
றங்கரநீட்டுவாராசைநீட்டுவார்.

(இ-ள்.) புங்கவன் இடுவளை புடைத்து மீளவந்து - வணிகர்குலப்பெருமான் இட்ட வளையலைத் தகர்த்துத் திரும்பவந்து, எங்களுக்கு இட இலை இடுதிர் என-எங்களுக்குத் தொடுக்கவில்லை தொடுமென்று, கொங்கு அவிழ் பைங்குழல் எருத்தம் கோட்டி நின்று - மகரந்தம்பரந்த பசிய கூந்தல் சரிந்த பிடரை வளைத்து நின்று, அங்கரம் நீட்டுவார் ஆசை நீட்டுவார் - அழகிய கைகளை நீட்டுவார்போலத் தமது ஆசைப்பெருக்கினை நீட்டுவார்கள்.

முன்பு வளையல் தொடுக்கப்பட்ட பெண்களாதலால் பரிசவின்பங்கருதி வளையலைத்தகர்த்துத் தமதுருக்காட்டாது கரந்து கைநீட்டினராதலால் எருத்தங்கோட்டி நின்றங்கரநீட்டுவார் என்றார். (உஎ)

எமக்கிடுவெமக்கிடுமெனப்பின்பற்றியே
யமைத்தடந்தோளினாரனங்கன்பூங்கணை
தமைத்துளைபடுத்தவோர்சார்பிலாமையாற்
கமைப்புறுநாண்முதல்காப்புநீங்கினர்.

(இ-ள்.) அமை தடம் தோளினர் - மூங்கிலையொத்த பருத்த தோளையுடைய வணிககுலப்பெண்கள், எமக்கு இடும் எமக்கு இடும் என பின்பற்றி - எமக்குத்தொடும் எமக்குத்தொடும் என்று ஒருவர்பின் ஒருவர் வந்து, அனங்கன் பூம் கணை தமை துளைபடுத்த ஓர் சார்பு இல்லாமையால்-மன்மதனது மலர்ப்பாணம் தம்மைத்துளைக்க அதை நீக்குவதற்குத் தமக்கோர் பற்றுக்கோடில்லாமையால், கமைப்பு உறு நாண்முதல் காப்பு நீங்கினர் - தமக்குச்சார்பாயுள்ள நாணமுதலிய நாற்குணங்களின் காவலினின்றும் நீங்கினார்கள்.

வளைவணிகர் பற்றுக்கோடாருப்பில் நாணமுதலிய நாற்குணங்களின் காவலினின்றும் நீக்கார் என்னும் பொருள் போதரலாற் குறிப்பெச்சம். (உஅ)

முன்னிடுவளையெலாங்கழலமுன்புகும்
இன்னவைபெரியவேறிடுமென்றிட்டபி
னன்னவுமளையவேயாகமீளவந்
தின்னமுஞ்சிறியவாயிடுமென்றேந்துவார்.

(இ-ள்.) முன் இடுவளை எல்லாம் கழல - முன்பு தொடுத்த வளையலெல்லாஞ்சோர, முன்பு சூழ்ந்து இன்னவை பெரிய - முன்பு சென்று சூழ்ந்து இப்போது தொடுத்த வளையல்கள் அளவிற் பெரியனவாயிருத்தலினாற் (கழன்றன) வேறு இடும் என்று - கையளவிற்கேற்ப வேறு வளையல் தொடுமென்று கூறி, இட்டபின்-தொடுத்த பின்பு, அன்னவும் அனையவே ஆக - அவ்வளையலு மத்தன்மையனவாகவே சோர, மீளவந்து இன்னமும் சிறிய ஆக இடும் என்று ஏந்துவார் - மீளவும் வந்து இவ்வளையலினுஞ் சிறியனவாகத் தொடுமென்று கையை நீட்டுவார். (உக)

பின்னிடுவளைகளுஞ்சரியப்பேதுறு
முன்னெதிர்குறுகிநீர்செறித்தமொய்வளை
தன்னொடுகலைகளுஞ்சரிவதேயென
மின்னெனநுடங்கினர்வேனெடுங்கணார்.

(இ-ள்.) பின் இடும் வளைகளும் சரிய பேது உறு - பின்பு இட்ட வளையல்களும் அவ்வாறேசரியமயங்கி, முன் எதிர் குறுகி நீர் செறித்த மொய்வளை தன்னொடு-தம்முன்னே வந்து நீர் தொடுத்த நெருங்கிய வளையலோடு, கலைகளும் சரிவதே என - மேகலைகளுஞ் சரிகின்றதேயென்று, வேல் நெடும் கண்ணார் மின் என நுடங்கினார் - வேல்போன்ற நீண்ட கண்களையுடைய வணிகருலப்பெண்கள் மின்னலைப்போலத் துவண்டார்கள். (ஙo)

இவ்வளைபோல்வனயாமுன்கண்டிலே
மெய்வளைவணிகிரிவ்வரியவெள்வளை
யெவ்வயினுள்ளவின்றினியவாகியெம்
மெய்ம்மயிர்பொடிப்பெழுவீக்கஞ்செய்தவே.

(இ-ள்.) மெய்வளை வணிகிர் - கூனிய சரீரத்தையுடைய வணிகரே, இ அரிய வெள்வளை எவ்வயின் உள்ள - இந்தப் பெறுதற்கரிய வெள்ளிய வளையல்கள் எவ்விடத்துள்ளன, இன்று இனிய ஆகி எம் மெய் மயிர் பொடிப்பு எழ வீக்கம் செய்த - இன்று எங்கள் மனத்துக்கினியனவாகி எம்முடம்பிலுள்ள மயிர் முற்றும் புளகிக்கக் காமப்பெருக்கைச் செய்தன, (அதனால்) இவ்வளை போல்வன யாம் முன் கண்டிலேம் - இந்த வளையல்போன்ற வளையல்களை யாம் முன்பு ஒருபோதும் பார்த்திலேம்.

சிவபெருமான் பரிசிக்குந்தோறும் தமக்கு ஆராவின்பம் மேலிடுதலால் இவ்வளைபோல்வன யாமுன் கண்டிலேம் எனவும், வளையலுக்கு இக்குணமின்மையால் இவ்வரியவெள்ளை-எவ்வயினுள்ள எனவும் கூறினார்கள். (ஙக)

நாளையும்வளையிடநண்ணுமிங்கென்பார்
கோள்வளைவிலையிதுகொண்டுபோமென்பார்
வாள்விழியீர்பினுள்வாங்கிக்கோடுமென்
றுளரியேறனாரடிப்போயினார்.

(இ-ள்.) நாளையும் வளை இட இங்கு நண்ணும் என்பார்-நாளைக்கும் வளையல் தொடுக்க இங்குவாருமென்பார்கள், கோள் வளை விலை இதுகொண்டுபோம் என்பார்-நாங்கள் கொண்ட வளையலுக்குத் தருமிது விலைப்பொருள் அதனைப் பெற்றுப்போமென்று சிலர் கூறுவார், வாள் விழியீர் பின் நாள் வாங்கி கோடும் என்று - வாள்

போன்ற பிறழ்ச்சியையுடைய கண்களையுடைய பெண்காள் பின்னுளில் வாங்கிக் கொள்வோமென்று கூறி, ஆள் அரி ஏறு அன்னார் ஆடி போயினர் - நரசிங்கத்துக் கோர் ஆண்சிங்கமபோன்ற வணிகப்பெருமானுர் இவ்வாறு திருவிளையாடல் செய்து சென்றருளினர்.

பெருவிலைகொடுப்பின் நாளையும் வளையிடவருவர் என்னுங் கருத்தால் வளை விலை யிதுகொண்டுபோம் எனக்கூறினர்கள். (௩உ)

போயினவணிகர்தம்புடையின்மின்னெனப்
பாயினமகளிரும்பலருங்காணமுன்
மேயினவிண்ணிழிவிமானத்துள்ளொளி
யாயினதிருவுருவாகித்தோன்றினர்.

(இ-ள்-) போயின வணிகர் தம்புடையில் மின் என பாயின மகளிரும் பலரும் காண - சென்ற வணிகப்பெருமானும் தமது பக்கத்தில் மின்னலைப்போலப் பரவிய பெண்களு மேனையோரும் கண்டுவியக்க, முன் மேயின விண் இழி விமானத்துள் ஒளி ஆயின திரு உருவு ஆகி தோன்றினர்-முன்பு தாம் எழுந்தருளிய விண்ணுலகத்தினின்றுவந்த இந்திரவிமானத்துள் ஒளிமயமாகிய திருவுருவமாகித் தோன்றியருளினர். (௩௩)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

மட்டலம்புகோதையார்முன்வளைபகர்ந்தவணிகர்தாம்
பட்டிசைந்தவல்குனங்கைபாகராகுமெனவியந்
துட்டதும்புமுவகைவெள்ளமுற்றெழுந்தகுமிழிபோற்
கட்டதும்புபுனலிலாழ்ந்துகளியடைந்தநகரெலாம்.

(இ-ள்.) மட்டு அலம்பு கோதையார் முன் வளை பகர்ந்த வணிகர் தாம் - தேன் சிந்து மாலையை அணிந்த பெண்கள் முன் வளையல் பகர்ந்த வணிகத்திருவுருவினர், பட்டு இசைந்த அல்குல் நங்கை பாகர் ஆகும் என வியந்து - செம்பட்டணிந்த அல்குலையுடைய உமாதேவியாரை இடப்பாகத்திலுடைய சோமசுந்தரக்கடவுளாரமென்று அதிசயங்கூர்ந்து, உள் ததும்பும் உவகை வெள்ளம் உற்று எழுந்த குமிழிபோல்-மனத்துள் ததும்பிய ஆனந்தவெள்ளத்தில் பொருந்தி யெழுந்த குமிழியைப்போல, நகர் எல்லாம் கண் ததும்பு புனலில் ஆழ்ந்து களியடைந்த - நகரத்திலுள்ளோரெல்லாம் கண்களில் மொக்குளித்தெழுந்த ஆனந்தநீர் வெள்ளத்திலழுந்திக் களிப்படைந்தார்கள்.

வளைபகர்ந்த வணிகர் தமக்கென வோருருவிலரென்பார் பட்டிசைந்த வல்குல் நங்கை பாகராகும் எனவும், அவர் இவர்கள்பொருட்டு ஒருருக்கொடுவந்தனர் என்பார் வியந்து எனவும், அதனுற் பரவசமாயினர் என்பார் உட்டதும்பு முவகை வெள்ளமுற்றெழுந்த குமிழிபோற் கட்டதும்புபுனலிலாழ்ந்து எனவுங் கூறினர்.()

உருவிலாளியுடல்பொடித்தவொருவர்கூடவிருவரான்
மருவிலார்திருக்கைதொட்டுவளைசெறித்தநீர்மையாற்
கருவின்மாதராகிநாய்கர்கன்னிமார்கண்மின்னுவேற்
பொருவில்காளையெனவரம்பில்புதல்வரைப்பயந்தனர்.

(இ-ள்.) உருவிலாளி உடல் பொடித்த ஒருவர் - மன்மதனுடைய சரீரத்தை நீறுபடுத்திய ஒருவரும், கூடல் இருவரால் மருவிலார் - மதுரையி லெழுந்தருளிய பிரமவிஷ்ணுக்களால் தேடியறிதற்கரியவருமாகிய சோமசுந்தரக்கடவுள், திருக்கை தொட்டு வளை செறித்த நீர்மையால் - தமது திருக்கரங்களால் தொட்டு வளையல்தொடுத்த தன்மையால், நாய்கர் கன்னிமார்கள் கருவின் மாதர் ஆகி - வணிகர்குலப்பெண்கள் கருப்பம் வாய்ந்த பெண்களாய், மின்னு வேல் பொருவு இல் காளை என வரம்பு இல் புதல்வரை பயந்தனர் - விளங்காநின்ற வேலேந்திய ஒப்பில்லாத முருகக்கடவுளைப்போல அளவில்லாத அழகுவாய்ந்த புத்திரர்களைப் பெற்றார்கள்.

ஒருபாகம் பெண்ணுருவாய்ந்தும் காமனைவென்றோர் ஆதலால் ஒருவர் எனவும், இயற்கையிற்பற்றிகந்து சுட்டறிவிற்படாதவராதலால் காமவயத்தினராய்ச் சுட்டறிவிற்பட்ட பிரமவிஷ்ணுக்களால் அறிதற்கரியராதலால் இருவரால் மருவிலார் எனவும், ஆன்மாக்கள் கருதியாங்கருள்பவராதலால் திருக்கைதொட்டு வளைசெறித்தநீர்மையால் வரம்பில்புதல்வரைப்பயந்தனர் எனவுங் கூறினார். (௧௫)

பிறந்தமைந்தரளவிறந்தபெருமைகொண்டபெருமிதஞ்
சிறந்தவீரமாற்றலேற்றதிறல்புனைந்துவைகினார்
மறந்ததும்புவேனெடுங்கண்வணிகமாதர்சிறிதுநா
ளறந்தரன்றனருளடைந்துதுணையடிக்கண்வைகினார்.

(இ-ள்.) பிறந்த மைந்தர் அளவு இறந்த பெருமை கொண்ட பெருமிதம் சிறந்த வீரம் ஆற்றல் ஏற்ற திறல் புனைந்து வைகினார் - பிறந்த புத்திரர்கள் வரம்புகடந்த பெருமைமிக்க பெருமிதத்தையும் சிறந்த ஆண்மையையும் வன்மையையும் தக்க வெற்றியையும் சூடி வசித்தார்கள், மறம் ததும்பு வேல் நெடும் கண் வணிக மாதர் சிறிது நாள் துறந்து - கொலைத்தொழில்மிக்க வேல்போன்ற நீண்டகண்களையுடைய வணிககுலப்பெண்கள் சிறிதுநாள் கழித்து, அரன் தன் அருள் அடைந்து துணை அடிக்கண் வைகினார் - சிவபெருமானார்திருவருளைப்பெற்று அத்திருவருள்வழித்தாய் அவரது இரண்டுதிருவடிநிழற்சார்பில் கலந்தார்கள்.

அநாதிமுத்த சிவபெருமானார் திருவுருப்பொலிவில் காமமிக்க பெண்கள் பெற்ற புதல்வர்களாதலால் அளவிறந்த பெருமிதம் சிறந்த வீரமாற்றலேற்றதிறல்புனைந்துவைகினார் எனவும், அவர் தமதுகரந்தொட்ட பரிசதீக்கையால் திருவருளடைந்தனராதலால் அரன்றனருளடைந்து எனவும், அத்திருவருட்சார்பால் பரமுத்தியடைந்தனராதலால் துணையடிக்கண்வைகினார் எனவுங்கூறினார். (௧௬)

வளையல்விற்றபடலம் முற்றிற்று.



ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - ௧௭௬௧.

முப்பத்துமூன்றாவது

# அட்டமாசித்தியுபதேசித்தபடலம்.

---

எழுசீரடியாசிரியவிருத்தம்.

கொத்திலங்குகொன்றைவேய்ந்தகூடலாதிமாடநீள்
பத்தியம்பொன்மறுகணைந்துவளைபகர்ந்தபரிசுமுன்
வைத்தியம்பினுமியக்கமாதர்வேண்டவட்டமா
சித்திதந்ததிறமினித்தெரிந்தவாறுசெப்புவாம்.

(இ-ள்.) இலங்கு கொன்றை கொத்து வேய்ந்த கூடல் ஆதி - விளங்காநின்ற கொன்றையினது பூங்கொத்துச் சூடிய மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுள், நீள் மாடம் பத்தி அம் பொன் மறுகு அணைந்து - ஓங்கிய மாடபந்திகளையுடைய அழகிய பொற்பராகமமைந்த அம்மதுரைத் திருநகர்வீதியிற்சென்று, வளைபகர்ந்த பரிசு முன் வைத்து இயம்பினும் - வளையல்விற்ற திருவிளையாடலை முன்னெடுத்துக்கூறினும், இயக்க மாதர் வேண்ட - யக்ஷஸ்திரீகள் குறையிரக்க, அட்டமா சித்தி தந்த திறம் - அட்டமாசித்தியருளிய திருவிளையாடலை, இனி தெரிந்த ஆறு செப்புவாம் - இனித் தெரிந்த அளவிற் கூறுவாம்.

செல்வமலிந்த திருவீதியென்பார் அம்பொன்மறுகென்றார். (க)

மின்னலங்கல்வாகைவேல்விழுப்பெருங்குலத்தினிற்
றென்னவன்றனாணைநேமிதிசையெலாமுருட்டுநாண்
முன்னைவைகலூழிதோறுமோங்குமொய்வரைக்கணே
மன்னுதன்பராரையாலநிழன்மருங்குமறைமுதல்.

(இ-ள்.) மின் வாகை அலங்கல் வேல் - மின்னலையொத்த வெற்றிமாலையைச்சூடிய வேலையேந்திய, விழு பெரும் குலத்தினில் - மேன்மைமிக்க பாண்டியர்மரபிற்றோன்றிய, தென்னவன் தன் ஆணை நேமி திசை எல்லாம் உருட்டும் நாள் - குலபூடணபாண்டியன் தனது ஆக்கினைசக்கரத்தை எல்லாத்திசைகளிலுஞ் செல்லச்செலுத்துங்காலத்தில், முன்னை வைகல் ஊழி தோறும் - கழிந்த பொழுதாகிய ஊழிக்காலந்தோறும், ஓங்கும் மொய் வரைக் கண் - சிறிது சிறிது ஓங்கும் வலிய கயிலையின்கண், மன்னு தன் பராரை ஆலம் நிழல் மருங்கு - நிலைபெற்ற தமது பருத்த அரையுடைய கல்லாலமரத்தினிழலின்கீழ், மறை முதல் - வேதத்திற்கு முதல்வராகிய சிவபெருமானார்.

பிரமன் முதலியோர் பதங்கள் அழிதற்குரிய காலம் திருக்கயிலை வளர்ச்சிக்குரிய காலமாதலின் அக்காரணத்தால் கயிலையென்பார் முன்னைவைகலூழிதோறுமோங்குமொய்வரையென்றார் "ஊழிதோறூழி முற்றுமுயர் பொன்னொடித்தான்மலையே" என்ற ஆளுடையநம்பிகளருளிய திருப்பாசுரத்தாலுணர்க. (உ)

அடுப்பமாசில்வெள்ளிவெற்பருகிருக்குமரகதங்
கடுப்பவாமமிசையிருந்துகனகவெற்பன்மகளொடும்
வடுப்படாதகற்பினாண்மடித்துவெள்ளிலைச்சுருள்
கொடுப்பநேசமுறுபோககுரவனாகிவைகினான்.

அட்டமாசித்தியுபதேசித்ததிருவிளையாடல்,



(இ-ள்.) மாசு இல் வெள்ளி வெற்பு அருகு அடிப்ப - களங்கமில்லாத வெள்ளிமலையினருகில் பொருந்த, இருக்கும் மரகதம் கடுப்ப - இருக்கு மரகதத் திரட்சியையொப்ப, வாமம் மிசை இருந்து - இடப்பாகத்திலிருந்து, கனக வெற்பன் மகள் என்னும்-மலையரையன் புத்திரியாராகிய, வடுப்படாத கற்பினாள் - மறுவில்லாத கற்பையுடைய உமாதேவியார், வெள்ளிலை சுருள் மடித்து கொடுப்ப - வெற்றிலைச் சுருள் மடித்துக்கொடுக்க, நேசம் ஊறு போகம் குரவன் ஆகி வைகினான் - அன்புமிக்க போககுருமூர்த்தமாகி எழுந்தருளியிருந்தனர்.

இறைவன் கொண்டருளுந் திருவுருவங்களில் இந்திருவுருவம் போகவுருவம் ஆதலால் வடுப்படாதகற்பினாள் மடித்து வெள்ளிலைச் சுருள்கொடுப்ப எனவும், ஆன்மாக்களுக்குப் போகம் அருளுதலும் அநுக்கிரகமாதலால் போககுரவனாகி எனவுங்கூறினார். (ங)

பிருங்கிநந்தியேமுதல்பெருந்தகைக்கணத்தரு
மருங்கிருந்தசனகனாதிமாதவத்தர்நால்வரு
மொருங்கிறைஞ்சியுண்ணவுண்ணவமுதமூறுசிவகதைக்
கரும்பருந்தவாய்மலர்ந்துகருணைசெய்யுமெல்லைவாய்.

(இ-ள்.) பிருங்கி நந்தி முதல் பெருந்தகை கணத்தரும் - பிருங்கி நந்தி நாயனார்முதலிய பெருந்தன்மையையுடைய சிவகணத்தலைவரும், மருங்கு இருந்த சனகன் ஆதி மாதவத்தர் நால்வரும்-அருகிலிருந்த சனகர் முதலிய பெரிய நான்குதபோதனர்களும், ஒருங்கு இறைஞ்சி-ஒருசேர வணங்கி, உண்ண உண்ண அமுதம் ஊறு சிவகதை கரும்பு அருந்த (செவியென்னும் வாயால்) உண்ணுந்தோறும் அமுதமூற்றெடுக்கும் சிவகதையாகிய கரும்பினை தின்ன, வாய் மலர்ந்து கருணைசெய்யும் எல்லைவாய் - தமது திருவாய்மலர்ந்து திருவருள்செய்யுங் காலையில்.

பருகுந்தோறுந் தெவிட்டுதலின்மையால் உண்ண வுண்ண வெனவும், ஏனைக் கரும்புபோலன்றி முற்றும் ஆராவின்பஞ் சுரத்தலால் அமுதமூறும் எனவும், என அடைகொடுத்துச் சிவகதைக்கரும்பு என்றுருவகஞ்செய்தார். உண்ண வுண்ண பன்மைப்பொருளில் வந்த அடுக்கு. (ச)

பௌவமூழ்குசூர்தடிந்தபாலனுக்குமுலைகொடுத்
தெவ்வமாயவினைகடீரியக்கமாதராறுவருந்
தெய்வநீறுமுழுதணிந்துசெய்யவேணிகண்டிகைச்
சைவவேடமாதவந்தரித்துவந்துதோன்றினார்.

(இ-ள்.) பௌவம் மூழ்கு சூர் தடிந்த பாலனுக்கு - கடலிலொளித்த சூரபன்மனுயிர்வாங்கிய முருகக்கடவுளுக்கு, முலை கொடுத்து எவ்வம் ஆய வினைகள் தீர்-முலைப்பாலூட்டித் துன்பமாகிய இருவினைத்தொடக்கினின்று நீங்கிய, இயக்கமாதர் அறுவரும் - யக்ஷஸ்திரிகள் ஆறுபேரும், தெய்வம் நீறு முழுது அணிந்து - தெய்வத்தன்மையையுடைய திருநீற்றைத் தமதுமேனிமுற்றும் பூசி, செய்ய வேணி கண்டிகை - செவந்தசடையும் உருத்திராக்ஷகண்டிகையுமாகிய, சைவம் வேடம் - சைவவேடத்தையுடைய, மா தவம் தரித்து வந்து தோன்றினார் - பெரியதவத்தைமேற்கொண்டுவந்து தோன்றினார்கள்.

குறையிரந்த இந்திரன்முதலியோர் துன்பநீங்குதற்பொருட்டுத் தந்தருளிய மூர்த்தமாதலால் முலைகொடுத்தெவ்வ மாயவினைகடீர் என்றார். (ரு)

மந்திரச்சிலம்பலம்புமலரடிக்கண்வந்திசெய்
தெந்தையட்டசித்திவேண்டுமெங்களுக்கெனத்தொழா
வந்தளிர்க்கையவரிரப்பவண்ணறன்மடித்தலந்
தந்திருக்குமாதையங்கைசுட்டியீதுசாற்றுமால்.

(இ-ள்.) மந்திரம் சிலம்பு அலம்பு - வேதச்சிலம்பொலிக்கும், மலர் அடி க ண் வந்தி செய்து - தாமரைமலர்போன்ற திருவடியை வணங்கி, எந்தை - எமதுதந் தையே, எங்களுக்கு அட்ட சித்தி வேண்டும் என தொழா - எங்களுக்கு அட்டமாசி த்தி வேண்டுமென்று வணங்கி, அம் தளிர் கை யவர் இரப்ப - அழகிய தளிர்போன் ற கைகயையுடைய அம்மாதர்கள் குறையிரப்ப, அண்ணல் - சிவபெருமானர், தன்ம டித்தலம் தந்திருக்கும் மாதை - தமது மடித்தலத்தி லெழுந்தருளிய உமாதேவியா ரை, அம் கை சுட்டி ஈது சாற்றும் - அழகிய திருக்கரத்தினற்சுட்டி இதனைக்கூறிய ருள்கின்றார்.

வேதம் மந்திரவடிவாயிருத்தலால் மந்திரச்சிலம்பலம்பும் என்றார். இரண்ட னுருபு நிற்குமிடத்து ஏழனுருபு நின்றது உருபுமயக்கம். (சு)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அலர்பசும்பொலங்கொம்பன்னவணங்கிவணிறைவாலெங்கு
மலர்பராசத்தியாகிமகேசையாயணிமாவாதிப்
பலர்புகழ்சித்தியெட்டும்பணிந்துகுற்றேவல்செய்யுஞ்
சிலதியராகிச்சூழ்ந்துசேவகஞ்செய்யவைகும்.

(இ-ள்.) அலர் பசும் பொலம் கொம்பு அன்ன அணங்கு இவள் - மலர்ந்த பசிய பொற்கொம்பையொத்த இந்த உமாதேவி, நிறை வால் எங்கும் மலர் பராசத் தி யாகி மகேசை யாய் - எமது நிறைவால் எங்கும் வியாபித்த பராசத்தியாகியும் மகேசையாகியும், அணிமா ஆதி பலர் புகழ் சித்தி எட்டும் - அணிமாமுதலிய பலரு ம்புகழும் அட்டமாசித்திகளும், பணிந்து குற்றேவல் செய்யும் சிலதியர் ஆகி சூழ்ந் து சேவகம் செய்ய - வணங்கிக் குற்றேவல்செய்யும் தாதியராகி இடைவிடாதுசூழ் ந்து தமக்குரிய பணிகளைச் செய்யாநிற்க, வைகும் - இருக்கின்றனள்.

பராசத்தியுடம்பாகப் பரசிவநிற்கையால் அப்பரசிவத்தின்நிறைவே அச்சத் தியினிறைவாதலால் அணங்கிவணிறைவாலெங்கு மலர்பராசத்தியாகி யெனவும், அச்சத்தியே யான்மாக்களுக்குப் பாகம்வருவித்துத் தமதுதிருவடியிற் கூட்டுகைக்கு த் திரோதாயிசத்தியாய் நிற்கையால் மகேசையாய் எனவுங் கூறினார் "எத்திறனி ன்றானீசனத்திறமவளுநிற்பள்" எனவும் "அருபரிந்து - ஈகமாதிமதியம்பொதி ந்தடையானடியே - நணுகும்வகைகருணைமிகநயக்குந்தானே" எனவும் வரும் ஏதுக் களாலுணர்க. (எ)

இவளைநீர்சிந்தித்தான்முன்னிட்டதுபவினையைநீக்கித்
தவலருஞ்சித்தியெட்டுந்தருமெனக்கருணைபூத்துச்
சிவபரஞ்சோதியெட்டுச்சித்தியுந்தெளித்தல்செய்தா
னவரதுமறந்தாரும்மையாழ்வினைவலத்தான்மன்றே.

(இ-ள்.) இவளை நீர் சிந்தித்தால் - இவ்வுமாதேவியை நீர் சிந்திக்கில், மூண்டிய வினையை நீக்கி - முன்பு நீங்கள் தேடிய இருவினைத்தொடக்கையும் நீக்கி, தவல் அரும் சித்தி எட்டும் தரும் என - கெடுதலில்லாத அட்டமாசித்திகளையுந் தருவாளென்று, கருணை பூத்து - திருவருள்செய்தருளி, சிவபரம் சோதி - சிவபெருமானார், எட்டு சித்தியும் தெளித்தல் செய்தான் - அட்டமாசித்திகளையு முபதேசித்தருளினார், உம்மை ஆழ்வினை வலத்தால் - முற்பிறப்பிற்செய்த கடிய போகூழ்வன்மையால், அவர் அது மறந்தார் - அப்பெண்கள் அச்சித்திகளை மறந்தார்கள்.

முன்னீட்டியவினை என்றமையால் உம்மையாழ்வினைவலத்தால் என்றார். (அ)

செழுமதிப்பிளவுவேய்ந்ததேவுமக்குற்றநோக்கி
முழுமதிமுகத்தினாரைமுனிந்துநீர்பட்டமங்கைப்
பழுமரமுதலஞ்ஞானப்பாறையாய்க்கிடமினென்னக்
கழுமலுற்றவர்தாழ்ந்தென்றுகழிவதிச்சாபமென்றார்.

(இ-ள்.) செழுமதி பிளவு வேய்ந்த தேவும் - ஒளிவீசும்பிறையை அணிந்த சிவபெருமானாரும், அக்குற்றம் நோக்கி - அப்பிழையைநோக்கி, முழுமதி முகத்தினாரை முனிந்து - பூரணசந்திரனையொத்த முகத்தையுடைய பெண்களைக்கோபித்து, நீர்-நீங்கள், பட்டமங்கை பழுமரம் முதல் - பட்டமங்கையென்னுந்தலத்திலுள்ள ஆலமரத்தினடியில், அஞ்ஞானம் பாறையாய் கிடமின் என்ன - கருங்கற்பாறையாய்க்கிடங்களென்று சபிக்க, கழுமல் உற்றவர் தாழ்ந்து என்று கழிவது இச்சாபம் என்றார் - (சாபமேற்றுத்) துன்பமுற்ற அப்பெண்கள் அஞ்சிவணங்கி எப்பொழுது கழிவது இந்தச்சாபமென்று வினவினார்கள்.

நிக்கிரகித்தலுங் குற்றந்தீர்த்தற்பொருட்டாதலால் அக்குற்ற நோக்கி முனிந்து எனவும், அதன்றீர்வு பாறையாய்க்கிடத்தலாதலால் அஞ்ஞானப்பாறையாய்க்கிடமின் எனவுங்கூறினார். அஞ்ஞானம் ஒன்றும் அறியாமை யாதலால் கருங்கல்லென்றும் "நிக்கிரகங்கடானும் நேசத்தாலீசன்செய்வன், அக்கிரமத்தாற்குற்றமடித்துத் தீர்த்து" எனவரும் ஏதுவாலுணர்க. (கூ)

இப்படிக்கருங்கலாகிக்கிடத்திராயிரம்யாண்டெல்லைக்
கப்புறமதுரைநின்றுமடுத்துமைத்தொடுத்தசாபத்
துப்பறநோக்கிநுங்கடொல்லுருநல்கிச்சித்தி
கைப்படுகனிபோற்காணக்காட்டுதும்போதிரென்றான்.

(இ-ள்.) இப்படி கரும் கல் ஆகிக்கிடத்திர் - இவ்வாறு கருங்கற்பாறையாய்க்கிடமின்கள், ஆயிரம் யாண்டு எல்லைக்கு அப்புறம் - ஆயிரந்தேவவருடவளவுக்கப்பால், மதுரை நின்றும் அடுத்து-மதுரையினின்றும் நாம்வந்து, உம்மைதொடுத்த சாபத்துப்பு அறநோக்கி - உம்மைவிடாதுபற்றிய சாபத்தின்வன்மைகெடக் கடைக்கணித்து, நுங்கள் தொல் உரு நல்கி - உங்கள பண்டையவடிவத்தைக்கொடுத்து, சித்திகை படுகனிபோல் காண காட்டுதும் - அட்டமாசித்திகளை உள்ளங்கையிற்பொருந்திய நெல்லிக்கனிபோல ஐயமறத்தெளியத்தெளிவிப்போம், போதிர் என்றான் - போமின்களென்று விடையருளினார்.

தாம்வந்தருளும் பரிக்கிரகத்துக்குக் கருங்கலாய்க்கிடத்தல் காரணம் என்பார் ஆயிரம்யாண்டெல்லைக் கருங்கலாய்க்கிடத்திர் எனவும், அப்பால் யாம் வந்தரு

ளுவம் என்பார் தோல்லுருநல்கிச் சித்திகைப்படு கனிபோற் காணக்காட்டுதும் என வுங்கூறினர். கைப்படுகனியெனப் பொதுப்படக்கூறினரேனும் புறத்திலுள்ளவரை அகத்திலு முள்ளதெனவுணர்தற்கு உள்ளங்கை நெல்லிக்கனியாதலால் உள்ளங் கையிற்பொருந்திய நெல்லிக்கனியென்றும் "பட்டமங்கையிற்பாங்காயிருந்தங், கட் டமாசித்தியருளியவதுவும்" எனவரும் உண்மைத்திருவாக்காலுணர்க. (௧0)

வஞ்சிவிருத்தம்.

கொடியனார்களறுவரு, நெடியவானிமிர்ந்துகார்
படியும்பட்டமங்கையா, லடியிற்பாறையாயினர்.

(இ-ள்.) கொடி அன்னார்கள் அறுவரும்-பூங்கொடியையொத்த ஆறுபெண்க ளும், நெடியவான் நிமிர்ந்து - பரந்தவிண்ணுலகமட்டு முயர்ந்தோங்குதலால், கார் படியும் பட்ட மங்கை ஆல் அடியில் - மேகந்தவழும் பட்டமங்கையிலுள்ள ஆலம ரத்தினடியில், பாறையாயினர் - கருங்கற்பாறையாய்க்கிடந்தார்கள்.

நிமிர்ந்து காரணப்பொருளில்வந்த வினையெச்சம். (௧௧)

கதிர்கலம்பெய்காட்சிபோ, லுதிர்பழத்தினுடலெலாம்
புதைபடக்கிடந்தனர், மதரரிதடங்கணார்.

(இ-ள்.) மதர் அரி தடம் கணார் - மதர்த்த செவ்வரிபரந்த விசாலித்தகண்க ளையுடைய பெண்களறுவரும், கதிர் கலம் பெய் காட்சிபோல் - விளங்கும் ஆபரண த்தையணிந்த காட்சியைப்போல, உதிர் பழத்தின் - ஆலமரத்தினின்றும் உதிர்ந்த பழங்களால், உடல் எல்லாம் புதைபடக் கிடந்தனர்-தமது சரீரமுற்றும் புதைபடக் கருங்கற்பாறையாய்க் கிடந்தார்கள்.

ஆலம்பழம் செந்நிறமாதலால் பதுமராகமிழைத்த ஆபரணம் என்பார் கதிர் கலம்பெய் காட்சிபோல் என்றார். (௧௨)

பருவமாயிரங்கழிந், தொருவமாடமதுரையெங்
குரவனெண்குணத்தினன், றிருவுளந்திரும்பினன்.

(இ-ள்.) ஆயிரம் பருவம் கழிந்து ஒருவ - ஆயிரம்வருடஞ்சென்றொழிய, மா டம் மதுரை எம் குரவன் எண் குணத்தினன் - மாடங்களெருங்கிய மதுரையிலெ ழுந்தருளிய எமது ஆசிரியரும் எட்டுக்குணங்களையு முடையவருமாகிய சோமசுந் தரக்கடவுள், திரு உளம் திரும்பினன் - தமது திருவுளந்திரும்பியருளினர்.

எண்குணங்களாவன பரதந்திரனாகாது சுதந்திரனாயிருத்தலில் தன்வயத்த னாதலும், விசுத்ததேகியாதலில் தூயவுடம்பினனாதலும், நிராமயான்மா ஆதலால் இயற்கையுணர்வினனாதலும், சர்வஞ்ஞத்துவமுடைமையால் முற்றுமுணர்தலும், அ நாதிமுத்தத்தன்மையுடைமையால் இயல்பாகவே பாசங்களினீங்குதலும், அலுத்த சத்தியுடைமையால் பேரருளுடைமையும், அநந்தசத்திகளுடைமையால் முடிவிலா ற்றலுடைமையும், பூர்த்தியுடைமையால் வரம்பிலின்பமுடைமையுமாம். (௧௩)

தன்னதிச்சைகொண்டதோ, ரின்னருட்குரவனா
யந்நெடுங்கலாயினர், முன்னர்வந்துதோன்றினன்.

(இ-ள்.) தன்னது இச்சை கொண்டது - தமதிச்சையாற் கொண்டருளிய, ஓர் இன் அருள் குரவன் ஆய் - ஒப்பில்லாத இனிய ஞானசாரியராய், அ நெடும்

கல் ஆயினர் முன்னர்வந்து - அந்த நெடிய கருங்கற்பாறையாகிய பெண்கள்முன் வந்து, தோன்றினன் - திருவுருக்கொண்டு தோன்றியருளினர்.

சுதந்திரனாதலால் தன்னை திச்சைகொண்டது என்றார். (கச)

இருட்டதும்புகோதையார், மருட்டதும்புவினைகெட
வருட்டதும்புகண்ணினற், றெருட்டதும்பநோக்கினன்.

(இ-ள்.) இருள் ததும்பு கோதையார் - அந்தகாரத்தையொத்த கூந்தலையுடைய பெண்களது, மருள் ததும்பு வினைகெட - அவிச்சைநிறைந்த கன்மமலங்கெட, அருள் ததும்பு கண்ணினல் - திருவருணிறைந்த திருக்கண்களால், தெருள் ததும்ப நோக்கினன் - திருவருண்ஞானமேலிடப்பார்த்தருளினர்.

கன்மமலம்போக முறுத்ததற்கு முதற்காரணமாய் நிற்றலால் மருட்டதும்பு வினையெனவும், அவ்வினைக்கேடு அருணோக்காலாதலால் வினைகெடநோக்கினன் எனவுங்கூறினர். (கரு)

அடிகணோக்கவம்புயங், கடிகொணெய்தல்காந்தள்பைங்
கொடிகொண்முல்லைகுமுதமேற், படியப்பூத்தபாறையே.

(இ-ள்.) அடிகள் நோக்க - சிவபெருமான் பார்த்தருள. அம்புயம் கடிகொள் நெய்தல் காந்தள் - தாமரைமலரும் வாசமிக்க குவளைமலரும் காந்தள்மலரும், பைங்கொடிகொள் முல்லை குமுதம் - பசியகொடியாகப்படர்ந்த முல்லையரும்பும் ஆம்பல் மலரும், மேல்படிய - தம்மேற்பொருந்த, பாறை பூத்த - அக்கருங்கற்பாறைகள் பூத்தன.

அம்புயம் நெய்தல் காந்தள் முல்லை குமுதம் என்னும் உவமானச்சொற்களால் முகம் கண் கை பல் வாய் என்னும் உபமேயங்களை யிலக்கணையாகச்சொல்லுதலால் உருவகவுயர்வு நவிற்சியணி. (கசு)

தாக்கவேதகத்திரும், பாக்கமுற்றபொன்னென
நீக்கமற்றவிருண்மல, வீக்கமற்றுவிட்டதே.

(இ-ள்.) இரும்பு-இரும்பானது, தாக்கு அ வேதகத்து - தாக்கிய அவ்வேதகத்தினல், ஆக்கம் உற்ற பொன் என - ஆகிய பொன்னைப்போல, நீக்கம் அற்ற இருள் மலம் வீக்கம் - (நெல்லின் உமிபோல) நீங்குதலில்லாத ஆணவமலவீக்கம், அற்றுவிட்டது - கழன்றது.

அடிகணோக்க என்பது இங்குக்கூட்டப்படுதலால் அருணோக்கம் வேதகமாகவும், இரும்பு மாசுகழிந்து பொன்னாதல்போல் ஆணவமாசுகழிந்து ஆன்மா திருவருள்வசத்ததாகவும் நின்றவெனப்பொருள்கொள்க. (கஎ)

நிறையுமன்பெனுநதி, பொறையெனுங்கரைகடந்
திறைவனின்னருட்கடற், றுறையின்வாய்மடுப்பவே.

(இ-ள்.) நிறையும் அன்பு என்னும் நதி - நிறைந்த அன்பென்னுநதி (பெருகி) பொறை என்னும் கரை கடந்து - பொறுமையென்னுங் கரையைக்கடந்து, இறைவன் இன் அருள் கடல் துறையின்வாய்-சிவபெருமானுடைய இனியதிருவருளென்னும் கடற்றுறையில், மடுப்ப-கலந்தபாய.

நதிமுதலியவை மிகை குறைவின்றிச் சமனுகச்சொல்லுதலால் அவையி லொற்றுமையுருவகவணி. (கஅ)

எழுந்திறையடிக்கணே, யழுந்துநேசமொடுதவக்
கொழுந்தனர்களறுவரும், விழுந்திறைஞ்சினரரோ.

(இ-ள்.) தவம் கொழுந்து அன்னார்கள் அறுவரும் எழுந்து - தவக்கொழுந்தையொத்த ஆறுபெண்களும் எழுந்து, இறை அடி கண் அழுந்து நேசமொடு - சிவபெருமானார் திருவடியிலழுந்திய அன்போடு, விழுந்து இறைஞ்சினர் - தண்டாகாரமாக விழுந்துவணங்கினார்கள் (ககூ)

குமரற்கூட்டுமிளமுலை, யுமையொப்பார்கள்சென்னிமே
லமலச்சோதியங்கையாங், கமலப்போதுசூட்டினன்.

(இ-ள்.) குமரற்கு ஊட்டும் இளம் முலை உமை ஒப்பார்கள் - முருகக்கடவுளுக்கூட்டிய இளமைதங்கிய தனத்தையுடைய உமாதேவியாரையொத்த பெண்களுடைய, சென்னிமேல் - சிரத்தின்மேல், அமலம் சோதி - சிவபெருமானார், அம் கையாம் கமலம் போது சூட்டினன் - தமது திருக்கரமாகிய தாமரைமலரைச்சூட்டி அருளினார்.

சட்சுதீட்சையால் கன்மமலத்தினின்றுநீக்கிப் பாரரத்துவவாதனையையொழித் தற்பொருட்டுப் பரிசதீட்சைசெய்தாரென்பார் அங்கை யாங்கமலப்போது சூட்டினார் எனவும், சோதிமயமாக்குதற்பொருட்டுத் தாம் சோதியாயிருந்தார் என்பார் அமலச்சோதியெனவுங்கூறினார். (உ0)

சித்தியெட்டுமங்கலார், புத்தியிற்கொளுத்தவே
கைத்தலத்தில்வைத்ததோர், முத்தெனத்தெருட்டுவான்.

(இ-ள்.) சித்தி எட்டும் - அட்டமாசித்திகளையும், அங்கலார் புத்தியில் கொளுத்த - அப்பெண்களது அறிவிற்பொருந்த, கை தலத்தில் வைத்தது - உள்ளங்கையிலேந்திய, ஓர் முத்து என தெருட்டுவான் - ஒரு முத்தைப்போலத் தெளிவித்தருள்வார்.

முத்தின் விலை வரம்பறுக்கக் கையிலேந்துவதுபோல அட்டமாசித்திகளும் பதியத்தேற்றினார் என்பார் கொளுத்த கைத்தலத்தின் வைத்ததோர் முத்தெனத்தெருட்டுவான் என்றார். சித்தியெட்டு முன்பின்னாக மாறித்தொக்க பண்புத்தொகை யையரவல்குல் என்றாற்போலவந்தது. (உக)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அணிமாமகிமாவிலகிமாவரியகரிமாபிராத்திமலப்
பிணிமாசுடையோர்க்கடைவரியபிராகாமியமீசத்துவமெய்
துணிமாயோர்க்கெளியவசித்துவமென்றெட்டாமிவையுளக்கண்
மணிமாசறுத்தோர்விளையாட்டின்வகையாமவற்றின்மரபுரைப்பாம்.

(இ-ள்.) அணிமா மகிமா இலகிமா - அணிமாவும் மகிமாவும் இலகிமாவும், அரிய கரிமா பிராத்தி - பெறுதற்கரிய கரிமாவும் பிராத்தியும், மலம் பிணி மாசு உடையோர்க்கு அடைவு அரிய பிராகாமியம் ஈசத்துவம் - மலபந்தமாகிய களங்கத்

தையுடையவர்க்கு அடைதற்கரிய பிராகாமியமும் ஈசத்துவமும், மெய் துணிமா யோகர்க்கு எளிய வசித்துவம் என்று எட்டாம் - உண்மையைத்துணிந்த பெரிய யோகிகளுக்கு எளியவசித்துவமுமென்றுசித்தி எட்டுவகைப்படும், இவை - இவ்வெட்டும், உளம் கண் மணி மாசு அறுத்தோர் விளையாட்டின் வகையாம் - மனத்தில் கரியகளங்கத்தையறுத்த பெரியோர் திருவிளையாடலின்வகையாம், அவற்றின் மரபு உரைப்பாம் - அவ்வெட்டுச்சித்திகளின் முறைகளைக்கூறுவாம்.

ஈசத்துவம் என்பதற்கு ஈசிதையெனவும், வசித்துவம் என்பதற்கு வசிதையெனவுங்கூறுவர். (உஉ)

அறவுஞ்சிறியவுயிர்தொறுந்தான்பரமகாட்டையணுவாய்ச்சென்
றுறையுஞ்சிறுமையணிமாவாமுவரிஞாலமுதன்மேலென்
றறையுஞ்சிவாந்தமாறாறுமுள்ளும்புறனுமகலாதே
நிறையும்பெருமைதனையன்றேமகிமாவென்னுநிரம்பியநூல்.

(இ-ள்.) அறவும் சிறிய உயிர் தொறும் - மிகவுஞ்சிறிய வுயிர்கள்தோறும், தான் பரமகாட்டை அணுவாய் சென்று - தான் மிகவுநுண்ணிய அணு அளவாய்ச் சென்று, உறையும் சிறுமை அணிமா ஆம் - இருக்கும் அதிநுண்மை அணிமா என்னும் சித்தியாம், நிரம்பிய நூல் - பொருள் நிரம்பிய நூல்கள், உவரி ஞாலம் முதல் - கடல்சூழ்ந்த பிரிதிவிதத்துவமுதல், மேல் என்று அறையும் சிவாந்தம் ஆறு ஆறும் - அதன்மேலுள்ள தத்துவமென்றுகூறும் சிவதத்துவம் ஈறுகிய முப்பத்தாறு தத்துவங்களினும், உள்ளும் புறனும் அகலாதே - அகத்தும் புறத்தும் நீங்காது, நிறையும் பெருமைதனை அன்றே மகிமா என்னும் - வியாபித்திருக்கும் பெருமையையல்லவோ மகிமா என்று கூறும்.

மிகச்சிறிது என்பார் பரமகாட்டை என்றார். காட்டை பதினைந்துநிமிஷம், அக்காலவளவையினும் சிறிது பரமகாட்டை. (உ௩)

இலகுமேருபாரம்போலிருக்கும்யோகிதனையெடுத்தா
லிலகுவானபரவணுப்போலிருப்பதிலகிமாவாகு
மிலகுவானபரவணுப்போலிருக்கும்யோகிதனையெடுத்தா
லிலகுமேருபாரமெனவிருப்பதன்றேகரிமாவாம்.

(இ-ள்.) இலகு மேரு பாரம்போல் இருக்கும் யோகிதனை எடுத்தால் - விளங்காநின்ற மகமேருவின் பாரம்போலக் கனமாக இருக்கும் சிவயோகியை எடுத்தால், இலகுவான பர அணுப்போலிருப்பது - லகுவான பரவணுவைப்போல எடுத்தற்கெளிதாயிருத்தல், இலகிமா ஆகும் - இலகிமா என்னுஞ் சித்தியாம், இலகுவான பர அணுபோல் - லகுவாயுள்ள பரவணுவைப்போல, இருக்கும் யோகிதனை எடுத்தால்- இருக்குஞ்சிவயோகியை எடுத்தால், இலகு மேரு பாரம் என இருப்பது அன்றே கரிமா ஆம் - விளங்காநின்ற மகமேருவின் பாரம்போலக் கனத்திருத்தலல்லவா கரிமா என்னுஞ் சித்தியாம். (உ௪)

பிலத்திலிருந்தோனயனுலகிற்புகுதன்மீண்டும்பிலமடைதல்
பலத்தின்மிகுந்தபிராத்தியதாம்பரகாயத்தினண்ணுதல்வான்
புலத்தினியங்கலிச்சித்தபோகமனைத்துந்தானிருக்குந்
தலத்தினினைந்தபடிவருதல்பிராகாமியமாந்தவக்கொடியீர்.

(இ-ள்.) தவக்கொடியீர் - பெறுதற்கரியதவமாகிய கொடிபோன்றபெண்க ளே!, பிலத்தில் இருந்தோன் - பாதலத்திலிருந்த ஒருவன், அயன் உலகில் புகுதல்- பிரமனுலகிற்குச்செல்லுதலும், மீண்டும் பிலம் அடைதல் - மீளவும் பாதலத்திற்செல் லுதலும், பலத்தின் மிகுந்த பிராத்தி ஆம் - பயனின்மிக்க பிராத்தியாம், பரகாயத் தில் நண்ணுதல் - பரகாயத்திற் பிரவேசித்தலும், வான்புலத்தின் இயங்கல் - விண் ணுலகிற் சஞ்சரித்தலும், இச்சித்தபோகம் அனைத்தும் - விரும்பியபோகமுற்றும், தான் இருக்கும் தலத்தில் நினைந்தபடி வருதல் - தானிருக்கு மிடத்தில் நினைத்தவ ண்ணம் வருதலும், பிராகாமியம் ஆம் - பிராகாமியமென்னுஞ் சித்தியாம்.

அது பகுதிப்பொருள்விகுதி. (உரு)

விண்ணிலிரவிதன்னுடம்பின்வெயிலாலனைத்தும்விளக்குதல்போன்
மண்ணிலுளவாம்பொருள்பலவுங்காலமூன்றும்வானத்தின்
கண்ணிலுளவாம்பொருளுந்தன்காயத்தொளியாலிருந்தறித
லெண்ணிலிதுவுமறையொருசார்பிராகாமியமென்றியம்புமால்.

(இ-ள்.) விண்ணில் இரவி - ஆகாயத்திற் சஞ்சரிக்குஞ்சூரியன், தன் உடம் பின் வெயிலால் அனைத்தும் விளக்குதல் போல் - தன்சரீரத்திலுள்ள விளக்கத்தால் எப்பொருள்களுங் கட்புலங்களுக்குப் புலப்பட விளக்குதலுமன்றி அச்சூரியன் த ன்னையுமுணர்த்துதல்போல, மண்ணில் உள ஆம் பொருள் பலவும்-நிலவுலகிலுள்ள பொருள் முற்றும்,காலம் மூன்றும் வானத்தின் கண்ணில் உள ஆம் பொருளும் - திரி காலங்களும் விண்ணுலகிற்பொருந்திய பொருளுமாகிய இவைகளை, தன்காயத்து ஒ ளியால் இருந்து அறிதல்-தனது சரீரத்தினொளியினால் பிறர்க்கு விளக்குதலின்றித் தானும் இருந்த இடத்திலிருந்து அறிதலும், எண்ணில் இதுவும் - ஆலோசிக்கில் இத் தொழிலையும், மறை ஒருசார் பிராகாமியம் என்று இயம்பும் - வேதங்கள் ஒருபட் சம் பிராகாமியமென்று கூருகிற்கும். (உசு)

ஈசனெனமுத்தொழிலுந்தன்னிச்சைவழிசெய்தெழுபுரவித்
தேசன்முதல்கோள்பணிகேட்பத்திகழ்வதீசத்துவமாகும்
பூசலவுணர்புள்விலங்குபூதமனிதர்முதலுலகும்
வாசவாதியெண்மருந்தன்வசமாக்கொள்கைவசித்துவமாம்.

(இ-ள்.) ஈசன் என முத்தொழிலும் - உருத்திரமூர்த்தியைப்போலச் சிருட் டிமுதலிய முத்தொழில்களையும், தன் இச்சைவழிசெய்து - தனது இச்சையின்வழி யேசெய்து,எழு புரவி தேசன் முதல் கோள் பணிகேட்ப - ஏழுகுதிரைகளையுடைய சூரியன்முதலிய நவகோள்கள்தான் ஏவும்பணி கேட்டு ஒருபால் நிற்க, திகழ்வது ஈசத்துவம் ஆகும் - விளங்குதல் ஈசத்துவமென்னுஞ் சித்தியாம், பூசல் அவுணர்- போர்த்தொழிலையுடைய அசுரரையும், புள் விலங்கு பூதம் மனிதர் முதல் உலகும்- பறவைகளையும் மிருகங்களையும் பூதங்களையும மனிதர்முதலிய உலகிலுள்ள சீவகோ டிகளையும், வாசவன் ஆதி எண்மரும - இந்திரன்முதலிய திக்குப்பாலர்கள் எண்ம ரையும், தன் வசம் ஆககொள்கை வசித்துவம ஆம் - தன்வசமாகக்கொண்டாளுகை வசித்துவமென்னுஞ் சித்தியாம். (உஎ)

எம்மையுணர்ந்தயோகியர்களிவற்றைவிரும்பாரெனினுமவர்
தம்மைநிழல்போலடைந்துலகர்க்கனையார்பெருமைதனையுணர்த்துஞ்

செம்மையுடையவிவையென்னச்சித்தியெட்டுந்தெளிவெய்தக்
கொம்மைமுலையாரறுவருக்குங்கொளுத்தினானெண்குணச்செல்வன்.

(இ-ள்.) எம்மை உணர்ந்த யோகியர்கள் - எம்மையறிந்த சிவயோகியர்கள், இவற்றை விரும்பார் எனினும் - இச்சித்திகளை விரும்பாராயினும், அவர் தம்மை நிழல் போல் அடைந்து - அவரைத் தேகச்சாயல்போல் விடாது தொடர்ந்து, உலகர்க்கு - உலகிலுள்ளவர்களுக்கு, அனையார் பெருமை தனை உணர்த்தும் செம்மை உடைய - அவர்கள் பெருமையை அறிவிக்கும் நீதியையுடையன, இவை என்ன - இவைகளென்று, சித்தி எட்டும் - எட்டுச்சித்திகளையும், தெளிவு எய்த - ஐயமின்றித் தெளிந்துணர, எண் குணம் செல்வன் - எட்டுக்குணங்களையுடைய பெருமானார், கொம்மை முலையார் அறுவருக்கும் கொளுத்தினான் - திரண்ட தனங்களையுடைய பெண்களறுவருக்கும் உபதேசித்தருளினார்.

தம்மினின்றும் நீங்காத திருவருள்காட்டத் தம்மையுணர்ந்தோர் என்பார் எம்மையுணர்ந்த யோகியர்கள் எனவும், எம்மைத் தரிசித்துச் சிவபோகத்தழுந்தும் யோகியர் இச்சித்திகளை யோர்பொருளாகக் கருதார் என்பார் இவற்றை விரும்பார் எனவும், விரும்பாராயினும் அவை அவர்மகிமையை யேனையோருணர்ந்து வழிபட்டுய்ய அவர்களைவிடாது பின்றொடர்ந்துநிற்கும் என்பார் அவர்தம்மை நிழல்போலடைந்துலகர்க்கனையார்பெருமைதனையுணர்த்தும் எனவுங்கூறினார். (௨௮)

மேற்படி வேறு.

தேவதேவுபதேசித்தசித்தியைச்சிலம்பன்செல்வி
பாவனைவலத்தானன்குபயின்றுவான்வழிக்கொண்டேகிப்
பூவலர்கதுப்பினல்லாரறுவரும்புரமூன்றட்ட
காவலனிரம்பிவைகுங்கயிலைமால்வரையிற்புக்கார்.

(இ-ள்.) பூ அலர் கதுப்பின் நல்லார் அறுவரும் - பூக்களலர்ந்த கூந்தலையுடைய பெண்களறுவரும், தேவ தே உபதேசித்த சித்தியை - தேவதேவ னுபதேசித்தருளிய அட்டமாசித்திகளை, சிலம்பன் செல்வி பாவனை வலத்தால் - மலையரையன் புத்திரியாகிய உமாதேவியின் சிந்தனையின் வன்மையால், நன்கு பயின்று - மிகவும் பழகி, வான் வழி கொண்டு ஏகி - விண்ணின்வழிக்கொண்டு சென்று, புரம் மூன்றும் அட்ட காவலன் நிரம்பி வைகும் - திரிபுரங்களை நகைத்தெரித்த சிவபெருமான் அருள்வடிவங்கொண் டெழுந்தருளிய, கைலை மால் வரையில் புக்கார் - பெரிய கைலையங்கிரியிற் சென்றார்கள்.

சிவபெருமானார் அருட்சத்தியின் வழிப்பட்டு எண்சித்தியும் நிற்றலால் செல்வி பாவனைவலத்தா னன்குபயின்று என்றார். இவளை நீர் சிந்தித்தால் முன்னீட்டிய வினையைநீக்கித் - தவலருஞ் சித்தியெட்டுந் தருமென, முன்னர்க் கூறிப்போந்தது காண்க. (௨௯)

அட்டமாசித்தி யுபதேசித்தபடலம் முற்றிற்று.



ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - ௧௭௮௮.



முப்பத்துநான்காவது

## விடையிலச்சினையிட்டபடலம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

சந்துசூழ்மலயச்சிலம்பர்தவம்புரிந்தவியக்கிமார்க்
கந்தநாலிருசித்திதந்ததறைந்தனந்தனதடிதொழா
வந்துமீள்வளவன்பொருட்டுவடாதுவாயிறிறந்தழைத்
திந்துசேகரன்விடையிலச்சினையிட்டவாறுவிளம்புவாம்.

(இ-ள்.) சந்து சூழ் மலயம் சிலம்பர் - சந்தனவிருக்ஷஞ் சூழ்ந்த பொதியமலையையுடைய சவுந்தரபாண்டியராகிய சிவபெருமானார், தவம் புரிந்த இயக்கிமார்க்கு - தவஞ்செய்த யக்ஷஸ்திரிகளாகிய அறுவருக்கும், அந்த நாலிருசித்திதந்தது அறைந்தனம் - அந்த எட்டுச்சித்திகளையு மருளிய திருவிளையாடலைக்கூறினோம், தனது அடி தொழா - வந்து தமது திருவடியைவணங்கி, மீள்வளவன்பொருட்டு - தனது நாட்டிற்குச்செல்லுஞ்சோழன்பொருட்டு, வடாது வாயில் திறந்து அழைத்து-வடக்குவாசலைத்திறந்து அழைத்து, இந்து சேகரன் - சந்திரமௌலியாராகிய அப்பெருமானார், விடை இலச்சினை இட்ட ஆறு விளம்புவாம் - விடையிலச்சினையிட்டருளிய திருவிளையாடலை இனிக்கூறுவாம்.

வடக்குள்ளதுவடாது. (க)

தோடுவெட்டிமலைத்துவாள்விதிர்துணைவிழிக்குயிலிளமுலைக்
கோடுவெட்டியகுறிகொண்மேனியர்குடிகொண்மாநகர்கடிகொள்பைங்
காடுவெட்டியகாரணக்குறிகாடுவெட்டியசோழனென்
றேடுவெட்டியமண்டுசூழ்பொழிலெயில்கொள்கச்சியுளானவன்.

(இ-ள்.) தோடு வெட்டி மலைத்து - காதிலணிந்த தோட்டினைவெட்டிப்போர்செய்து, வாள் விதிர் துணை விழி குயில் - வாளையசைத்தலையொத்த கண்களையுடைய குயிலிசைபோன்ற சொல்லையுடைய உமாதேவியாரது, இளமை முலை கோடு வெட்டிய குறிகொள் மேனியர் - இளமைதங்கிய தனங்களாகிய கொம்பு உழுதகுறி பூண்டருளிய திருமேனியையுடைய பெருமானார், குடிகொள் மாநகர் - எழுந்தருளிய பெரியகாஞ்சியில், கடிகொள் பைம் காடு வெட்டிய காரணம் குறி - (கண்போர்க்கு) அச்சஞ்செய்யும் பசியகாட்டை வெட்டித் திருத்திய காரணக்குறியால், காடுவெட்டியசோழன் என்று - காடுவெட்டிய சோழனென்று, ஏடு எட்டிய மண்டு சூழ் பொழில் - மலரிதழ்பொருந்த நெருங்கிச்சூழ்ந்த சோலைகளையுடைய, எயில் கொள் கச்சி உளான் - மதில்சூழ்ந்த கச்சிநகரிலுள்ளவன், அவன்-அச்சோழன்.

உமாதேவியார் சிவபெருமானார் திருக்கண்புதைத்தருளிய காலையில் யாவுமிருண்டமையின் எவ்வுயிரும் துன்பத்திலழுந்தியதுதீர அச்சிவபெருமானார் அநுஞையால் காஞ்சித்திருநகரெய்தி யப்பெருமானாரை விதிப்படிபூசிக்க, அவர் அருள் செய்தற்பொருட்டு எல்லாத்தீர்த்தங்களும் ஒருசேரத்திரண்டு கம்பையாற்றொடு கலந்து பெருக்கெடுத்துவரச்செய்தருள, அவ்வுமாதேவியார் எமது கணவர்மேலுஞ்செல்லுமேயென்றஞ்சி யெழுந்து வலக்காலூன்றித் தழுவிக்கொள்ள, அச்சிவபெருமானார் தனக்குறியையும் திருவளைக்கைக்குறியையும் பூண்டருளினார் என்பது காஞ்

விடையிலச்சினையிட்ட திருவிளையாடல்.



சிப்புராணம் தழுவக்குழைந்த படலத்தில் "விழுமியவண்டத்துள்ளும் புறத்தினும் விரவுந்தீர்த்த, முழுவதுமொருங்குநண்ண முன்னினூர்முன்னலோடும், ஒழுகுநீர்க்கம்பையாற்றி னுடன்விராய்க்கடைக்கால்வெள்ளம், எழுவதுகடுப்பவெல்லாப்புனலும்வந்திறுத்தவன்றே." "துன்புறநோக்கிநெஞ்சந் துண்ணெனத்துளங்கியாவா, உம்பர்வான் நடவிச்செல்லு மொப்பரும்பெருநீர்வெள்ளம், எம்பிரான்மிசையேநண்ணுமினிச்செய்வதென்னேயென்று, தம்பிரானூர்பாலன்பு தழைத்தெழுமுள்ளத்தோடும்." "ஒருகொடியெழுந்துசெம்பொனுயர்வரைக்குவடுதன்னை, இருகொழுந்திருபாற்போக்கித் தழீஇயெனவெழுந்தவல்லே, முருகலர்வேதியும்பர்த் தன்வலமுழுந்தாளூன்றிக், கருமணிப்பாவையன்னாள் கணவரைத்தழுவிக்கொண்டாள்." "மணிமுலைக்குவட்டிஞேடு வளைக்கையானெருக்கிப்புல்லித், தணிவருங்காதல்விம்மக் காதலிதழுவலோடும், திணியிருளறுக்குஞ்சோதித் திருவுருக்குழைந்துகாட்டி, அணிவளைத்தழும்பினேடு முலைச்சுவடணிந்தாரையர்." எனவருஞ்செய்யுள்களாலுணர்க. (௨)

உத்தமச்சிவபத்தரிற்பெரிதுத்தமன்புதுவிரைகலன்
மித்தையென்றுவெணீறுகண்டிகையாரமென்றணிமெய்யினு
னித்தவேதபுராணமாதிநிகழ்த்திடும்பொருள்கண்ணுத
லத்தனேபரதத்துவப்பொருளென்றளந்தறிகேள்வியான்.

(இ-ள்.) உத்தமம் சிவபத்தரில் பெரிது உத்தமன் - உத்தமத்தன்மைவாய்ந்த சிவபத்தர்களுள் மிகவும் உத்தமத்தன்மைவாய்ந்த சிவபத்தன், புது விரை கலன் மித்தை என்று - வாசமிக்க சந்தனக்குழம்பும் ஆபரணங்களும் அநித்தியப்பொருளென்று கருதி, வெள் நீறு கண்டிகை - வெள்ளியதிருநீற்றையுங் கண்டிகையையும், ஆரம் என்று அணி மெய்யினன் - நித்தியமாகிய சந்தனக்குழம்பென்று முத்தாரமென்றுங் கருதிப்பூண்ட சரீரத்தையுடையவன், நித்த வேதம் புராணம் ஆதி நிகழ்த்திடும் பொருள்-அழியாதவேதமும் புராணமும் முதலியநூல்கள் கூறும்பொருள், கண்ணுதல் அத்தனே-சிவபெருமானே, பரதத்துவம் பொருள் என்று - (ஆதலால் அவனே) பரதத்துவப்பொருளாயுள்ளானென்று, அளந்து அறி கேள்வியான் - அவற்றால் அளந்தறிந்த நூற்கேள்வியையுடையவன்.

சிவனடியவரில் மிக்கோன் என்பார் உத்தமச்சிவபத்தரிற் பெரிதுத்தமனெனவும், புதுவிரையும் கலனும் அநித்தியபோகத்திற்குரியவென்பார் அவற்றை மித்தையெனவும், வெண்ணீறுங்கண்டிகையும் நித்தியமுத்திக்குரிய சாதனங்களென்பார் வெண்ணீறு கண்டிகை யாரமென்றணிமெய்யினன் எனவும், வேதமும் புராணமும் சிவபெருமானை யளந்துணர்தற்குரிய கருவிகளென்பார் நித்தவேதபுராணமாதி நிகழ்த்திடும்பொருள்கண்ணுத லத்தனேயெனவும், அக்கருவிகளால் ஏனைக்கடவுளர் கடவுளரல்லர் அச்சிவபெருமானே கடவுள் என்றுணர்ந்தோன் என்பார் பரதத்துவப்பொருளென் றளந்தறிகேள்வியான் எனவுங்கூறினார். ஆரம் சந்தனக்குழம்பு, முத்துவடம். (௩)

அங்கமாறொடுவேதநான்குமறிந்துமெய்ப்பொருளாய்ந்துளஞ்
சங்கைகொண்டனுதினமரன்புகழ்சாற்றுசைவபுராணநூல்
பொங்குமின்சுவையமுதுதன்செவிவாய்நிறைந்துபுகட்டவுண்
டெங்கணாயகனடியிணைக்கணிருத்துமன்புகருத்துளான்.

(இ-ள்.) அங்கம் ஆறு ஒடு வேதம் நான்கும் அறிந்து - ஆறு அங்கங்களோடு நான்குவேதங்களையும் ஐயந்திரிபற உணர்ந்து, மெய் பொருள் ஆய்ந்து - உண்மைப்

பொருளை ஆராய்ந்து, உளம் சங்கைகொண்டு - தனது மனம் அதன்மேற்செல்லுத லால், அனுதினம் அரன்புகழ் சாற்று சைவ புராணம் நூல் - எந்நாளும் சிவபெரு மான் கீர்த்தியைக்கூறும் சைவபுராணங்களாகிய நூல்களின், பொங்கும் இன்சுவை அமுது - விளங்கு மினியசுவையமைந்த அமுதினை, புகட்ட தன் செவிவாய் திறந்து உண்டு — (அறிவின்மிக்கோர்) ஊட்டத் தனது செவியாகிய வாய்திறந்துண்டு, எங்கள் நாயகன் அடி இணைக்கண் - எமது நாயகனாகிய அப்பெருமானது இரண்டுதிருவடியின்கண்ணும், இருத்தும அன்பு கருத்து உளான - நிலைபெறச்செய்யும் அன்புமிக்க இருதயமுடையவன்.

நான்குவேதங்களையு முணர்தற்கு ஆறங்கங்களுங் கருவியாதலால் அங்கமாறொடு வேதநான்கு மறிந்து எனவும், அவ்வேதங்களாலுணர்த்தும் பொருள் பரசிவமேயெனத்தெளிதலால் அறிந்து மெய்ப்பொருளாய்ந்து எனவும், ஆராய்ந்துணர்ந்த அப்பரசிவத்தையென்றுஞ் சிந்தித்தலால் உளஞ்சங்கைகொண்டு எனவும், அச்சிந்தனை வழுவாதிருக்க என்றுங்கேட்டலால் சைவபுராணநூல் அமுது தன்செவிவாய்திறந்துண்டு எனவும், அப்பாவனைவலத்தால் ஆன்மபோதஞ் சீவியாது திருவடிஞானங் கைகூடினமையால் எங்களுயக னடியிணைக்கணிருத்துமன்பு கருத்துளான் எனவுங்கூறினார். இச்செய்யுளால் கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டையென்னும் முத்திசாதனங்கள் கூறப்பட்டன. (ச)

முக்கணாயகன்முப்புரத்தைமுனிந்தநாயகன்மங்கையோர்
பக்கநாயகன்மிக்கவானவர்பரவுநாயகனரவணிச்
சொக்கநாயகனாடலுஞ்செவியான்முகந்துசுவைத்தருந்
தக்கபாலொடுதேன்கலந்துதருக்கியுண்பவனாயினான்.

(இ-ள்.) முக்கண் நாயகன் முப்புரத்தை முனிந்த நாயகன் - திரிநேத்திரத்தையுடைய இறைவனும் திரிபுரங்களைக் கோபித்தெரித்த இறைவனும், மங்கை ஓர் பக்கம் நாயகன் - உமாதேவியாரை இடப்பாகத்திலுள்ள இறைவனும், மிக்கவானவர்பரவு நாயகன் - மேம்பட்டபிரமன் முதலிய தேவர்கள் துதிக்குமிறைவனுமாகிய, அரவு அணி சொக்க நாயகன்-சர்ப்பாபரணத்தையுடைய சொக்கலிங்கப்பெருமானுடைய, ஆடலும் - திருவிளையாடலாகிய அமுதினையும், செவியால் முகந்து - தனது காதாகிய கருவியால் மொண்டு, சுவை தரும் தக்க பால் ஒடு தேன் கலந்து - (சிவநேசமாகிய) சுவைமிக்க பரிசுத்தமாகிய தேன்பாலொடுகூட்டி, தருக்கி உண்பவன் ஆயினான் - உண்டுகளிப்பவனாயினான்.

சிவபெருமான் திருவிளையாடலைக்கேட்டற்குச் சிவநேசம் வேண்டுகையால் சுவைத்தருந்தக்க பாலொடு தேன்கலந்து என்றார். சுவைத்தரும் எனச்செய்யுளின்பம் நோக்கி விரிக்கும்வழி விரித்தல் என்பதனால் வல்லெழுத்துமிக்கது. செவிமுதலியவற்றை யவடகளா துருவகஞ்செய்து திருவிளையாடலை யமுதென உருவகஞ்செய்யாமையால் அதனை யமுதென உருவகஞ்செய்தது சிறப்புருவகவணி. (ரு)

அங்கயற்கண்மடந்தைபாகனடித்தலந்தொழுமாசைமேற்
பொங்கிமிக்கெழுமன்பனுய்மதுரேசன்மின்னுபொலங்கழற்
பங்கயப்பதமென்றுநான்பணிவேனெனப்பரிவெய்தியே
கங்குலிற்றுயில்வான்கயற்புரைகண்ணிபங்கனையுன்னியே.

(இ-ள்.) அங் கயல் கண் மடந்தை பாகன் - அங்கயற்கண்ணம்மையை இடப்பாகத்திலுடைய சோமசுந்தரக்கடவுளது, அடி தலம் தொழும் ஆசை - திருவடியைவணங்கும் ஆசை, மேல் பொங்கி மிக்கு எழும் அன்பனாய் - மேலெழுதலால் அதிகரித்தெழும் அன்பனாகி, மதுரேசன் மின்னு பொலம் கழல் பங்கயம் பதம் - அச்சோமசுந்தரக்கடவுளினுடைய விளங்காநின்ற பொன்னாலாகிய வீரகண்டைகட்டிய தாமரைமலர்போன்ற திருவடிகளை, என்று நான் பணிவேன் என பரிவு எய்தி- எப்பொழுது நான் வணங்குவேனென்று வருத்தமடைந்து, கயல் புரை கண்ணி பங்கனை உன்னி - அந்த அங்கயற்கண்ணியாரை இடப்பாகத்திலுடைய அக்கடவுளைக் கருதி, கங்குலில் துயில்வான் - இரவில் நித்திரைசெய்வானாயினன். (சு)

அன்றுசெம்பியர்கோமகன்கனவின்கணேயருள்வெள்ளிமா
மன்றுணின்றவர்சித்தராயெதிர்வந்துமன்னவநின்னுளத்
தொன்றுமஞ்சலொருத்தனாகியுருத்திரிந்துதனித்துவந்
தின்றுவந்தனைசெய்துபோதியெனப்புகன்றனரேகினர்.

(இ-ள்.) அன்று - அக்காலையில், செம்பியர் கோமகன் கனவின் கண்ணே- சோழர்களுட்சிறந்த காடுவெட்டிய சோழனுடைய சொப்பனத்தினிடத்தே, அருள் வெள்ளி மா மன்றுள் நின்றவர் - அருள்மூர்த்தமாய்ப் பெரிய வெள்ளியம்பலத்தினின்றருளிய பெருமான், சித்தர் ஆய் எதிர் வந்து - சித்தமூர்த்தியா யெதிரே வந்தருளி, மன்னவ - சோழனே, நின் உளத்து ஒன்றும் அஞ்சல் - உனது மனத்திற் சிறிதுமஞ்சாதே, ஒருத்தன் ஆகி உரு திரிந்து-நீ ஒருவனாய் மாறுவேடங்கொண்டு, தனித்து வந்து இன்று வந்தனை செய்து போதி என - துணையின்றிவந்து இப்பொழுது வணங்கிப்போவாயென்று, புகன்றனர் ஏகினர் - கூறிச்சென்றருளினன்.

சோழன் என்றும் தனதுதிருவடிஞானநிட்டை யுடையவனாயிருத்தலால் கனவின்கண்ணே சித்தராயெதிர்வந்து எனவும், உனக்குத் துணையாய்வருவேனாதலால் நின்னுளத்தொன்றுமஞ்சல் எனவும், பாண்டியன்காணில் இடர்ப்படுப்பானாதலால் ஒருத்தனாகி யுருத்திரிந்து தனித்து எனவுங் கூறியருளினன். (எ)

கேட்டுவேந்தன்விழித்துணர்ந்துகிளர்ந்தவற்புதனாகியே
யீட்டுசேனையமைச்சுளார்பிறர்யாருமின்றிவழிக்கொளீஇ
நாட்டமூன்றவனாமவாள்கொடுநல்லருட்டுணையாய்வழி
காட்டவன்பெனுமிவுளிமேல்கொடுகங்குல்வாய்வருவானரோ.

(இ-ள்.) வேந்தன் கேட்டு விழித்து உணர்ந்து - சோழன்கேட்டு விழித்தறிந்து, கிளர்ந்த அற்புதன் ஆகி - மேலெழுந்த வியப்புடையவனாகி, ஈட்டு சேனை அமைச்சு உளார் பிறர் யாரும் இன்றி - நெருங்கிய சேனைகளும் மந்திரிகளும் அவரொழிந்த பிறரும் என்னும் இவருள் ஒருவருந்துணையின்றி, வழிக்கொளீஇ - வழிச்சென்று, நாட்டம் மூன்றவன் நாமம் வாள் கொடு - திரிநேத்திரங்களையுடைய சிவபெருமானது நாமத்தை வாளாகக்கொண்டு, நல் அருள் துணையாய் - அவனது நல்லதிருவருளே துணையாகி, வழி காட்ட - (தான் முன்னறியாதவனாதலால்) முன்னின்று வழியுணர்த்த, அன்பு எனும் இவுளி மேல் கொடு - அன்பென்னுங் குதிரைமேலேறி, கங்குல்வாய் வருவான் - இராப்போதில் வருவானாயினன்.

திருநாமத்தை வாளாகவும் திருவருளைத் துணையாகவும், அன்பினைக் குதிரையாகவும மிகைகுறைவின்றிச் சமனாக உருவகஞ்செய்தமையால் அவையிலியுருவகவணி. (அ)

கல்லுமாரழலத்தமும்பலகலுழியுங்குணகனைகடற்
செல்லுமாநதிபலவும்வானிமிர்கன்னலுஞ்செறிசெந்நெலும்
புல்லுமாநிலனுங்கழிந்துபுறங்கிடக்கநடந்துபோய்
வல்லுமாமுலையார்கணம்பயில்வையையந்துறையெய்தினான்.

(இ-ள்.) கல்லும் ஆர் அழல் அத்தமும் - மலைகளும் நிறைந்த நெருப்புமிழும் பாலைநிலங்களும், பல கலுழியும் - பலகாட்டாறுகளும், குணக்கு கனை கடல் செல்லும் மா நதி பலவும் - ஒலிக்கும் கீழைக்கடலிற்சென்று கலக்கும் பெரியநதிகள்பலவும், வான் நிமிர் கன்னலும் செறி செம் நெலும் - விண்ணுலகமட்டும் நிமிர்ந்து ஓங்கிய கரும்பும் நெருங்கிய செந்நெற்பயிரும், புல்லும் மா நிலனும் கழிந்து புறம் கிடக்க - பொருந்திய வளமிக்க மருதநிலமும் பிற்பட்டுப் புறத்திற்கழிய, நடந்துபோய் - நடந்துசென்று, வல்லு மா முலையார் கணம் பயில் வையை அம் துறை எய்தினான் - சூதாடு கருவியையொத்த பெரியமுலையையுடைய பெண்கள்கூட்டம் நீராடிச்சஞ்சரிக்கும் வையைநதியின்றுறையை அடைந்தான். (கூ)

குறுகுமுன்னரதிர்ந்துவையைகொதித்தகன்கரைகுத்திவேர்
பறியவன்சினைமுறியவிண்டொடுபைந்தருக்களையுந்தியே
மறுகிவெள்ளமெடுத்தலைத்தரமன்னவன்கரைதன்னினின்
றிறுதியில்லவனைத்தொழற்கிடையூறிதென்றழுதெய்துவான்.

(இ-ள்.) குறுகு முன்னர்-அடைதற்கு முன்னே, வையை கொதித்து அதிர்ந்து அகன் கரை குத்தி-வையைநதி பெருக்கெடுத்துக் கோஷித்துப் பொங்கி இடம் பரந்த கரைகளை அகழ்ந்து, வேர் பறிய வன் சினை முறிய - வேர்த்தொடக்கறவும் வலியகொம்புகள் முறியவும், விண் தொடு பைம் தருக்களை உந்தி - விண்ணுலகத்தையளாவிய பசியமரங்களைச் சாய்த்து, வெள்ளம் எடுத்து மறுகி அலைத்தர - அவ்வையையெடுத்துச் சுழன்றலைக்க, மன்னவன்-சோழன், கரை தன்னில் நின்று-கரையினின்று, இறுதி இல்லவனை தொழற்கு - தனக்கோரிறுதியில்லாத சோமசுந்தரக்கடவுளைவணங்க, இது இடையூறு என்று அழுது எய்துவான் - இது ஒரு பெருந்தடையென்று துன்பமடைவானாயினான். (கo)

இழுதொடுஞ்சுவையமுதுபொற்கலனிட்டுணாதிருகண்கணீர்
வழியவந்துவிலக்குவாரின்வளைந்ததாறுபகற்செயும்
பொழுதெழும்பொழுதோமறுக்கம்விளைக்குமேயிகல்பூழியன்
வழுதியன்றியும்வையையும்பகையானதென்றுவருந்தினான்.

(இ-ள்.) இழுது ஒடும் சுவை அமுது - தம்மிடத்துள்ள நெய்யோடும் சுவையமைந்த கறியையும் அமுதையும், பொன் கலன் இட்டு உணாது - பசிவந்தபோது பொற்பாத்திரத்தில் இட்டுண்ணாமல், இரு கண்கள் நீர் வழிய - இரண்டுகண்களினின்றும் நீர்சிந்த, வந்து விலக்குவாரின்-இடையேவந்து விலக்குங் கொடியவரைப்போல, ஆறு வளைந்தது - வையைநதி இடையே பெருக்கெடுத்து வளைந்து நம்மைத்தடைபடுத்தியது, பகல் செய்யும் பொழுது எழும் பொழுதோ - விளக்கஞ் செய்யும் சூரி

யன் உதயஞ்செய்யுங்காலத்திலோ, இகல் பூழியன் மறுக்கம் விளைக்கும் - போர் செய்யும் பாண்டியன் (காணின்) நமக்குப் பெருந்துன்பஞ்செய்வான், வழுதியும் அன்றி வையையும் பகை ஆனது என்று வருந்தினான் - பாண்டியனுமல்லாமல் வை யைநதியும் இப்பொழுது நமக்குப் பகையாய் முடிந்ததென்று வருத்தமுற்றான்.

வழுதியன்றியும் என இறுதியில் நின்ற வும்மையை வழுதி யென்பதனோடு கூட்டிப் பொருள்கொள்க "புனரியணிலையிடைக்குறுகலுமுரித்தே" உம்மையை இடையென்னுஞ்சொல்லொடுகூட்டிப் பொருள்கொள்ளுதல்காண்க. (கக)

வெள்ளநோக்கியழுங்குசெம்பியன்மெலிவுநோக்கிவிரைந்தெழீஇக்
கள்ளநோக்கிலகப்படாதவர்கனவுபோலவனனவில்வந்
துள்ளநோக்குடையன்பருக்கருளுருவமாகியசித்தர்தாம்
பள்ளநோக்கிவரும்பெரும்புனல்வற்றநோக்கினர்பார்த்தரோ.

(இ-ள்.) வெள்ளம் நோக்கி அழுங்கு செம்பியன் மெலிவு நோக்கி - வெள்ள த்தைப்பார்த்து மனம்வருந்துஞ் சோழனது மெலிவைப் பார்த்து, கள்ள நோக்கில் அகப்படாதவர் விரைந்து எழீஇ - வஞ்சித்தற் பொருட்டுப் புறத்தில் பொய்வேடமு டையவர்பால் அகப்படாத பெருமான் விரைந்து எழுந்து, கனவு போல் அவன் நன வில் வந்து - கனவுபோல அச்சோழன் நனவில்வந்தருளி, உள்ளம் நோக்கு உடை ய அன்பருக்கு - தமதகப்பார்வையாற் றரிசிக்கும் அடியார்களுக்கு, அருள் உருவம் ஆகிய சித்தர்தாம் - திருவருள்வடிவாய் வந்தருளுஞ் சித்தமூர்த்தி, பள்ளம் நோ க்கி வரும் பெரும் புனல் வற்ற - கடலைநோக்கிப் பெருக்கெடுத்துவரும் பெரிய வை யைநதிவற்ற, பார்த்து நோக்கினர் - பார்த்தருளினார்.

புறச்சமயிகளாதலால் பொய்வேடமுடையவர் என்றும். கனவில் சித்தமூர் த்தியாய் வந்தருளியதுபோலச் சோழன் மனவருத்தம் நீக்க நனவிலும்வந்தருளினா ர் என்பார் கனவுபோலவனனவில்வந்து என்றார் "புறத்தார்க்குச்சேயொன்றன்பூ ங்கழல்கள்வெல்க" என்ற உண்மைத்திருவாக்காலுணர்க. (கஉ)

வறந்தவாறுகடந்துவந்துவடக்குவாயிறிறந்துபோய்
நிறைந்தகாவல்கடந்துவீதிகணீந்திநேரியர்வேந்தனைச்
சிறந்தவாடகபுனிதபங்கயதிப்பியப்புனலாடுவித்
தறந்தவாதறைசாமகண்டர்தமாலயம்புகுவித்தரோ.

(இ-ள்.) வறந்த ஆறு கடந்து வந்து - (சோழனோடு) வற்றிய ஆற்றைக் கட ந்துவந்து, வடக்கு வாயில் திறந்து போய் - மதிலின் வடக்குவாயிற்கதவைத் திறந் துசென்று, நிறைந்த காவல் கடந்து - நிறைந்துள்ள போர்ச்சேவகர்கள் காவலைக்க டந்து, வீதிகள் நீந்தி - அந்தணர்முதலியோர் வீதிகளைக் கடந்து, நேரியர் வேந்தனை- சோழனை, சிறந்த புனித ஆடகம் பங்கயம் திப்பியப் புனல் ஆடுவித்து - மேம்பட்ட புனிதமாகிய பொற்றாமரையாகிய திவ்வியதீர்த்தத்தில் நீராடச்செய்து, அறம் தவா து அறை சாம கண்டர் தம் ஆலயம் புகுவித்து - சிவதருமங் கெடாமல் நிலைபெறக் கூறும் சாமகீத கண்டத்தையுடைய சிவபெருமான் தனது ஆலயத்திற் செல்லச் செய்து.

ஆன்மாக்கள் சிவபுண்ணியத்தைக் கடைப்பிடித்துய்யச் சாமகீதம் பாடுவோ னாதலால் அறந்தவாதறைசாமகண்டர் என்றார். திப்பியம் திவ்ய என்னும் வடசொற் றிரிபு. (கஙு)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

வெம்மைசெய்கதிர்கால்செம்பொன்விமானசேகரத்தின்மேய
தம்மையும்பணிவித்தெண்ணில்சராசரமனைத்துமீன்ற
வம்மையங்கயற்கண்ணாளாமணங்கையும்பணிவித்துள்ளஞ்
செம்மைசெய்தின்பவெள்ளத்தழுத்தினார்சித்தசாமி.

(இ-ள்.) சித்தசாமி - வந்தருளிய சித்தமூர்த்தி, வெம்மை செய் கதிர் கால் - வெப்பஞ்செய்யுங் கிரணத்தைவீசும், செம் பொன் விமான சேகரத்தில் மேய தம்மையும் பணிவித்து - செவந்த பொன்னாலாகிய ஏனைவிமானங்களுக்குக் கிரீடம்போன்ற இந்திரவிமானத்தில் எழுந்தருளிய தன்னையும் வணங்கச் செய்து, எண் இல் சராசரம் அனைத்தும ஈன்ற அம்மை - அளவில்லாத சராசரங்கள் யாவையும் பெற்றருளிய அம்மையாராகிய, அங் கயற கண்ணாள் ஆம் அணங்கையும் பணிவித்து - அங்கயற்கண்ணியாரையும் வணங்கச்செய்து, உள்ளம் செம்மை செய்து இன்ப வெள்ளதது அழுத்தினார் - ஆன்மாவை விடாது பற்றிய ஆணவமலத்தை யொழித்துப் பேரின்பப்பெருக்கில் அழச்செய்தருளினான்.

உள்ளம் என்றது ஆன்மாவை. "உளத்தறிவடங்க" என்பதனால் உணர்க. ()

எண்ணியவெண்ணியாங்கேயான்பெறமுடித்தாய்போற்றி
பண்ணியன்மறைகடேறாப்பான்மொழிமணாளபோற்றி
புண்ணியர்தமக்குவேதப்பொருளுரைபொருளேபோற்றி
விண்ணிழிவிமானமேயசுந்தரவிடங்கபோற்றி.

(இ-ள்.) எண்ணிய எண்ணிய ஆங்கு யான்பெற முடித்தாய் போற்றி - எண்ணினவற்றை எண்ணினபடியே யான்பெற்றுமகிழமுடித்தவனே உன்னைவந்திக்கக்கடவேன், பண் இயல் மறைகள் தேறா பால்மொழி மணாளபோற்றி - பண்ணமைந்த வேதங்களுணர்தற்கரிய பாலின்சுவைபோன்ற சொல்லினையுடைய அங்கயற்கண்ணியார் தலைவனேபோற்றி, புண்ணியர் தமக்கு வேதம் பொருள் உரை பொருளே போற்றி - கண்ணுவர்முதலிய முனிவர்களுக்கு வேதப்பொருளை விரித்துரைத்தருளிய மெய்ப்பொருளேபோற்றி, விண் இழி விமானம் மேய சுந்தர விடங்கபோற்றி - விண்ணுலகினின்றுவந்த இந்திரவிமானத்தி லெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளே யுன்னை வந்திக்கக்கடவேன்.

சிவபெருமானை வணங்கக்கருதியது, வையையைக் கடக்கக்கருதியது இவற்றை முடித்தருளினமையால் பன்மையீறுதந்து எண்ணிய எண்ணியாங்கே யான்பெறமுடித்தாய் எனவும், விந்துசத்தியின் காரியப்பாடாகிய பாசஞானமாதலால் பண்ணியன் மறைகடேறா எனவும், பாசஞானமாயினும் அது தன்னை யுணர்த்துதற்குக் கருவியாதலால் புண்ணியர் தமக்குவேதப் பொருளுரைபொருளே யெனவும், அக்கருவியால் தன்னையுணர்ந்து வழிபடுவார்க் கருள்செய்யக்கொண்டருளிய திருவுருவாதலால் விண்ணிழி விமானமேய சுந்தரவிடங்கபோற்றி யெனவுங்கூறினான். (கரு)

எவ்வுடலெடுத்தேன்மேனாளெண்ணிலாப்பிறவிதோறு
மவ்வுடலெல்லாம்பாவமறம்பொருட்டாகவன்றோ
தெவ்வுடல்பொடித்தாயுன்றன்சேவடிக்கடிமைபூண்ட
விவ்வுடலொன்றேயன்றோவெனக்குடலானதையா.

(இ-ள்.) மேல் நாள் எண் இல்லாத பிறவிதோறும் - முன்னாளில் அளவில்லாத சனனங்கடோறும், எ உடல் எடுத்தேன் - எந்தெந்தச்சரீரங்களை யெடுத்தேனோ, அ் உடல் எல்லாம் - அந்தந்தச்சரீரங்களெல்லாம், பாவம் அறம் பொருட்டு ஆக அன்றோ - புண்ணியபாவங்கள் பொருட்டாகவல்லவா, தெவ் உடல் பொடித்தாய் - மன்மதனுடைய உடலை நீறுக்கிய பெருமானே, உன் தன் சேவடிக்கு அடிமை பூண்ட இ உடல் ஒன்று அன்றோ - உனது திருவடிகட்கு ஆட்பட்ட இந்தச் சரீரமொன்றல்லவா, ஐயா எனக்கு உடல் ஆனது - ஐயனே எனக்குரிய சரீரமாயிருந்தது.

எண்ணிலாப்பிறவி என்றது எண்பத்துநான்கு நூறுயிரயோனிபேதங்களை "ஊர்வபதினொன்றுமொன்பதுமானுடம், நீர்பறவைநாற்காலோர்பப்பத்தாம்-சீரிய, பந்தமாந்தேவர்பதினாலயன்படைத்த, அந்தமில்சீர்த்தாவரநாலைந்து." எனவருஞ் செய்யுளால் அறிக. பிறவிக்குவித்துக் கன்மமலமாதலால் எண்ணிலாப்பிறவிதோறும் எவ்வுடலெடுத்தேன் எனவும், ஆன்மாக்களுள்ளவன்றே கன்மமலமுளதாதலால் மேனாள் எனவும், ஆன்மாக்கள் எடுத்ததேகந்தோறும் வடிவு, நிறம், சாதி, ஒழுக்கம், நெறி, உணவு, சுகம், துக்கம், ஆயுள் என அக்கன்மமலம் பலவகைப்படுதலால் பிறவிக்கும் இவற்றிற்கும் பொதுமையில் எண்ணிலா எனவும், அது புண்ணியபாவமென இருவகைப்படுதலால் பாவமறம் பொருட்டாக எனவும், அப்புண்ணியபாவங்களின்பயனை நுகர்தற்கு எடுத்ததேகங்கள் சுவர்க்கநரகங்களிற் செல்லுதற்குரிய தேகங்களாதலால் அவ்வுடலெல்லாம் எனவும், அக்கன்மமலம் வறுத்தநெல்லில் உமியிருந்தும் முளைபெழாததுபோலச் சிவபுண்ணியமேலீட்டால் விட்டு நீங்குவதாதலால் உன்றன்சேவடிக் கடிமைபூண்ட விவ்வுடலொன்றேயன்றோ வெனக்குடலானதை யாவெனவுங் கூறினான். "நண்ணியிடுமுருவதனுக்கேதுவாகி நானுபோகங்களாய் நாசோற்பத்தி, பண்ணிவருமாதலாலநாதியாகிப் பலவாகியணுக்கடொறும்படர்வதாகி, யெண்ணிவருமனவாசகன்மத்தா லியற்றுமியல்பினதாய்மதிசதமாயிருபயனும் பாவ, புண்ணியமாய்" எனவும் "விச்சுக்கேடுபொய்க்காகாதென்றிங்கெனைவைத்தாய்" எனவரும் ஏதுக்களாலுணர்க. (௧௬)

இன்னனபலவுமேத்தியிறைஞ்சிப்பல்வரமும்வேண்டு
மின்னருவேலினானைவேந்தநீபோந்தவண்ணந்
தென்னவனறிந்தாலேதஞ்செய்யுமென்றூர்த்தார்க்கண்ணி
மன்னனைச்சித்தசாமியுத்தரவழிக்கொண்டேகா.

(இ-ள்.) இன்னன பலவும் ஏத்தி இறைஞ்சி - இவைபோன்றன பலதுதிகளையுந்துதித்துவணங்கி, பல் வரமும் வேண்டும் மின் நருவேலினானை-பலவரங்களையுங் குறையிரக்கும் மின்னல்போல விளங்கும் வேலையேந்தியசோழனை, வேந்த - அரசனே, நீபோந்த வண்ணம் தென்னவன் அறிந்தால் ஏதம் செய்யும் என்று - நீவந்தவகையைப் பாண்டியன் அறிந்தால் துன்பஞ்செய்வானேயென்று, ஆர் தார் கண்ணி மன்னனை - ஆத்திமாலையை அணிந்த சோழனை, சித்தசாமி உத்தரம் வழி கொண்டு ஏகா - சித்தமூர்த்தி அந்த உத்தரவழிக்கொண்டு சென்று.

அவனுக்குவரும் இடையூறு தன்னதெனக்கருதினானாதலால் தென்னவனறிந்தாலேதஞ்செய்யும் எனவும், பாண்டியனும் தனது திருவடிக்கன்பனாதலால் உத்தரவழிக்கொண்டேகா எனவுங்கூறினார். (௧௭)

மண்ணினைவளர்க்கும்வையைவடகரையளவுநண்ணிப்
புண்ணியநீற்றுக்காப்புப்புண்டரநுதலிற்சாத்தி
யுண்ணிறைகருத்துக்கேற்பவுறுதுணையுனக்குண்டாகி
நண்ணுகவென்றுபொன்னிநாடனைவிடுத்துமீண்டு.

(இ-ள்.) மண்ணினை வளர்க்கும் வையை வடகரை அளவும் நண்ணி-நிலவுலகிலுள்ள உயிர்களையூட்டிவளர்க்கும் வையையினது வடபாலுள்ள கரைகாறும அவனோடுசென்று, காப்பு புண்ணியம் நீறு புண்டரம் நுதலில் சாத்தி - அவனுக்கோர் காவலாகப் புண்ணியவடிவாகிய திருநீற்றுப்புண்டரத்தை நெற்றியிலிட்டு, உள் நிறை கருத்துக்கு ஏற்ப உனக்கு உறுதுணை உண்டாகி நண்ணுக என்று - உனது மனத்தில் நிறைந்த சிவநேசத்துக்குப் பொருந்த இத்திருநீறே உனக்குமேம்பட்ட துணையாகிக் கூடச்செல்கவென்று, பொன்னி நாடனை விடுத்து - சோழனை யனுப்பி மீண்டு - மீள.

திருநீறு பாசத்தைப்போக்கும் பெருங்காப்பு ஆதலால் புண்ணியநீற்றுக்காப்பு எனவும், அதுவே புத்திமுத்திக்குரிய சாதனமாதலால் உறுதுணையுனக்குண்டாகி நண்ணுகவெனவுங் கூறினார் "ஆனநீற்றுக்கவசமடையப்புனைமின்கள்" எனவும், "அருத்தமதாவதுநீறு அவலமறுப்பதுநீறு - வருத்தந்தணிப்பதுநீறு" எனவும் "முத்திதருவதுநீறு" எனவும்வரும் வேதக்களாலுணர்க. (கஅ)

கலிவிருத்தம்.

காப்புச்செய்துகதவில்விடைக்குறி.
யாப்புச்செய்தமைத்தீர்ஞ்சடைச்சித்தர்போய்த்
தூப்புக்கைவரைசூழ்வடமேருவிற்
கோப்புச்செய்தபொற்கோயிலின்மேயினார்.

(இ-ள்.) காப்பு செய்து - (முன்னுள்ளபடி) திறந்த கதவத்தைச்சாத்தி, கதவில் விடைக் குறி யாப்பு செய்து அமைத்து-அக்கதவத்துத் தனது முத்திரையாகிய இடபமுத்திரையிட்டு, ஈர்ம் சடை சித்தர் போய் - குளிர்ந்த சடாமுடியை யுடைய சித்தமூர்த்தி சென்று, தூம்பு கைவரை சூழ் - துவாரம்பொருந்திய துதிக்கையையுடைய அஷ்டகஜங்கள் சூழ்ந்து சுமக்கும், வட மேருவின் - வடபாலுள்ள மேருவைப்போல, கோப்பு செய்த பொன் கோயிலில் மேயினார் - கோவைசெய்தமைத்த பொற்றகடுவேய்ந்த திருக்கோயிலையடைந்தருளினான்.

மேருவின் இன் ஒப்புப்பொருளில்வந்த ஐந்தனுருபு. தூம்பு துப்புவலிக்கும் வழிவலித்தல். (க௯)

கங்குலின்கருங்கைகுறைப்பானெனச்
செங்கைநீட்டித்தினகரன்றோன்றலு
மெங்கணாயகனிட்டகுறியறிந்
தங்கண்வாயிறிறப்பவரையுறு.

(இ-ள்.) கங்குலின் கருங்கை குறைப்பான் என - இரவின் கரியகையைத் தறிப்பவன்போல, செம் கை நீட்டி தினகரன் தோன்றலும் - செவந்த தனது கரங்களைநீட்டிச் சூரியன் உதயஞ்செய்ய, எங்கள் நாயகன் இட்ட குறி அறிந்து-எங்கள்

பெருமானாகிய சோமசுந்தரக்கடவுள் இட்டருளிய இடபமுத்திரையைத்தெரிந்து, அம் கண் வாயில் திறப்ப வர் ஐ யுற - அந்த வடக்குவாசற்கதவைத் திறப்பவர்கள்சந்தேகித்து.

கருங்கை - செங்கை சொன்முரணணி. சூரியன்கிரணத்துக்குக் கரம் என்பது ஓர்பரியாயநாமமாதலால் செங்கை யென்றார். (உ0)

மற்றைவாயில்கண் மூன்றினும்வல்லைபோ
யுற்றுநோக்கினர்தாநென்னலொற்றிய
கொற்றமீனக்குறிபிழையாமைகண்
டெற்றிதாங்கொலென்றேந்தன்முனெய்தினார்.

(இ-ள்.) மற்றை வாயில்கள் மூன்றினும் வல்லை போய் - மற்ற மூன்றுதிசைகளிலுமுள்ள வாசல்களிலும் விரைந்து சென்று, தாம் உற்று நோக்கினர் - தாம் உற்று நோக்கி, நென்னல் ஒற்றிய கொற்றம் மீனம் குறி பிழையாமை கண்டு - நேற்றிட்ட வெற்றியையுடைய கயன்முத்திரை பிறழாமலிருப்பதைப் பார்த்து, இது எற்றாம் கொல் என்று - இம்முத்திரை யாதாய்முடியுமோவென்று, ஏந்தல் முன் எய்தினார்-பாண்டியன்முன் வாயிற்காவலர் சென்றார்கள். (உக)

போற்றிமன்னநம்பொன்னங்கயற்குறி
மாற்றியுத்தரவாயிற்கதவதி
லேற்றிலச்சினையிட்டனர்யாரையென்
றாற்றல்வேந்தவறிகிலம்யாமென்றார்.

(இ-ள்.) மன்ன போற்றி - அரசனே யுன்னை வந்திக்கக்கடவேம், நம் பொன் அம் கயல் குறி மாற்றி - நமது அழகிய கயல்முத்திரையைமாற்றி, உத்தரம் வாயில் கதவு அதில் ஏற்று இலச்சினை இட்டனர் - உத்தரதிசைவாயிற் கதவில் இடபமுத்திரையிட்டவர், யாரை என்று - யாரென்று, ஆற்றல் வேந்த - வெற்றியையுடைய பாண்டியனே, யாம் அறிகிலம் என்றார் - யாமறியோமென்று கூறினார்கள்.

கண்ணிமைபோற் காத்தலில் வல்லோம் என்பார் யாரையென்றறிகிலம் யாமென்றார். ஐ தவிர்வழிவந்த சாரியை. அது பகுதிப்பொருள்விகுதி. (உஉ)

வையைநாடனும்வந்ததுநோக்குறீஇ
யையவின்னதோரற்புதமாயையைச்
செய்யவல்லவர்யாரெனத்தேர்கிலா
னையமெய்தியகன்மனைநண்ணினான்.

(இ-ள்.) வையை நாடனும் வந்து - வையைநாட்டையுடைய பாண்டியனும் வந்து, அது நோக்கு உறீஇ - அக்குறியைப்பார்த்து, இன்னது ஓர் அற்புதம் மாயையை செய்ய வல்லவர் யார் என தேர்கிலான் - இப்படிப்பட்ட ஓர் அதிசயம் விளைக்கும் மாயைத்திறத்தைச் செய்ய வல்லவர் யாரோ என்று சற்றுந்தெளியாது, ஐயம் எய்தி அகல் மனை நண்ணினான் - சந்தேகமடைந்து இடம்பரந்த தனது கோயிலை அடைந்தான்.

தேர்கிலான் முற்றெச்சம். ஐய அதிசயத்தையுணர்த்தும் ஓரிடைச்சொல்.()

மறுத்தவுண்டியன்மாமலர்ப்பாயலை
வெறுத்தகன்றரைமேற்பள்ளிகொள்ளவும்
பொறுத்தனன்றுயின்றானிருட்போழ்தினிற்
கறுத்தகண்டர்கனவினிற்கூறுவார்.

(இ-ள்.) மறுத்த உண்டியன் - உண்டி மறுத்து, மாமலர் பாயலை வெறுத்து - மணமிக்க மலர்பரப்பிய பாயலைவெறுத்து, அகன் தரை மேல் பள்ளி கொள்ளவும் - இடம்பரந்த நிலத்தின்மேற் பள்ளிகொள்ள, பொறுத்தனன் துயின்றான் - பரிசவின்பங் கருதாது நித்திரைசெய்தான், இருள் போழ்தினில் கறுத்த கண்டர் கனவினில் கூறுவார் - இருட்காலத்தில் கறுத்த சீகண்டத்தையுடைய பெருமான் கனவில்வந்து கூறியருளுகின்றான்.

தனதுமரபின்வழிவந்தோர்க் கோரிடையூறுவரி னவ்விடையூறு தவிர்ப்பவன் சோமசுந்தரக்கடவுளாதலால் அவனே நமக்குணர்த்துவன் என்னுந் துணிவினன் என்பார் மறுத்தவுண்டியன்மாமலர்ப்பாயலை - வெறுத்தகன்றரைமேற்பள்ளிகொள்ளவும் பொறுத்தனன்றுயின்றான் என்றார். பொறுத்தனன் முற்றெச்சம். (உ௪)

மட்டலம்பியதாதகிமாலையா
னுட்டதும்பியொழுகியவன்பினாற்
கட்டிலங்கெயிற்கச்சியிற்காடெலாம்
வெட்டிநம்புடைவித்தியபத்தியான்.

(இ-ள்.) மட்டு அலம்பிய தாதகி மாலையான் - தேன்சிந்தும் ஆத்திமலர்மாலையையணிந்த சோழன், உள் ததும்பி ஒழுகிய அன்பினால் - அகத்தினின்றுததும்பி வழிந்த சிவநேசத்தால், கட்டு இலங்கு எயில் கச்சியில் காடு எல்லாம் வெட்டி - காவலாகவிளங்கு மதில்சூழ்ந்த காஞ்சியிலுள்ள காடுகளையெல்லாம் வெட்டி, நம்புடை வித்திய பத்தியான் - நம்மிடத்துச்செலுத்தும் பத்தியாகிய விதையைவித்தினவன்.

கச்சியிலுள்ளகாடு நாடாக்கிச் சிவபோகம்விளையச் சிவநேசமென்னும் வித்து வித்தினான் என்பார் வித்தியபத்தியான் என்றார். (உ௫)

வந்துநம்மைவழிபடவேண்டினா
னிந்தவாயிறிறந்தழைத்தின்னரு
டந்துமீளவிடுத்துப்பின்றாட்கொளீஇ
நந்தமால்விடைநாம்பொறித்தேமென.

(இ-ள்.) வந்து நம்மை வழிபட வேண்டினான் - இங்குவந்து நம்மைத்துதிக்கவிரும்பினான், இந்த வாயில் திறந்து அழைத்து - இந்த வடக்குவாயிலைத்திறந்து அழைத்து, இன் அருள் தந்து - (நாம அவனுக்கு) இனிய அருள்செய்து, மீளவிடுத்து - திரும்பவும் அவன் தன்னாட்டுக்குச்செல்ல (அவ்வழியே) அனுப்பி, பின் தாழ் கொளீஇ - பின்பு தாழிறுக்கி, நம் தம் மால்விடை நாம்பொறித்தேம் என்று - நமது பெரிய இடபமுத்திரையை நாம் இட்டோமென்று.

வழிபடவேண்டி யடைந்தோர்க்குத் தான் முற்பட்டருள்சுரந்து நிற்றலால் இந்தவாயில்திறந்தழைத் தின்னருடந்து என்றார் "அடைந்தவர்க்கருளுமப்பாபோற்றி" என்ற உண்மைத்திருவாக்கால் உணர்க. (உ௬)

அருளினனையந்தேற்றியகன்றபின்
மருளினீங்கிமலர்க்கண்விழித்தெழீஇ
வெருளினன்வெயர்த்தான்விம்மினன்பல
பொருளினாற்றுதித்தான்குலபூடணன்.

(இ-ள்.) ஐயம் தேற்றி அருளினன் - சந்தேகத்தைத்துடைத்தருளி, அகன்ற பின்-நீங்கினபின், குலபூடணன் மருளின் நீங்கி - குலபூடணபாண்டியன் அவ்வைய த்து நின்று நீங்கி, மலர் கண் விழித்து எழுந்து - தாமரைமலர்போன்ற கண்டுயிலு ணர்ந்து, வெருளினன் வெயர்த்தான் விம்மினன் - அஞ்சிவெயர்த்து உடல்பூரித்து, பலபொருளினால் துதித்தான்-பலநுண்பொருளமைந்த பாடல்களால் துதித்தான்.

அருளினன், வெருளினன், வெயர்த்தான், விம்மினன் முற்றெச்சங்கள். ()

வள்ளலன்புக்கெளிவந்தமாண்புகண்
டுள்ளவுள்ளநின்றூற்றெழுமற்புத
வெள்ளமும்பரமானந்தவெள்ளமுங்
கொள்ளைகொண்டுதன்கோமனைநீங்கினான்.

(இ-ள்.) வள்ளல்-சிவபெருமான், அன்புக்கு எளிவந்த மாண்பு கண்டு-தன து அன்புக்கு எளியனாய்வந்த மாட்சிமையைநோக்கி, உள்ள உள்ள-நினைக்குந்தோ றும், நின்று ஊற்று எழும் - இடைவிடாது நின்று சுரந்து எழாநின்ற, அற்புதம் வெள்ளமும் பரமானந்த வெள்ளமும் - சிவஞானப்பெருக்கையும் சிவபோகப்பெ ருக்கையும், கொள்ளைகொண்டு தன்கோமனை நீங்கினான் - கவர்ந்துகொண்டு தன் அ ரண்மனையினின்று நீங்கினான்.

பத்திவலையிற் படுவோனாதலால் அன்புக்கெளிவந்த மாண்புகண்டு எனவும், கன்விலுந்தேவர்க் கரியவன் கருணைத்திறம் அளத்தற்கரிய பெருமையதாதலால் உள்ள உள்ள எனவும், அக்கருணையால்விளைந்த சிவஞானமும் சிவபோகமும் எல்லை யில்லனவாதலால் ஊற்றெழு மற்புதவெள்ளம் எனவும், பரமானந்தவெள்ளம் என வும், அவற்றி லழுந்தினனாதலால் கொள்ளைகொண்டு எனவுங்கூறினார். உள்ள வுள் ள மிகுதிப்பொருளில்வந்த அடுக்குத்தொடர். (உஅ)

அளியருமனத்தன்புடையன்பருக்
கெளியராடலையார்க்கும்வெளிப்படத்
தெளியுமாறுதெளிவித்துத்தன்னைப்போல்
விளிவிலாவின்பவெள்ளத்தழுத்தினான்.

(இ-ள்.) அளி அருத மனத்து அன்பு உடைய அன்பருக்கு-சாந்தத்தினின்று நீங்காதமனத்தில் சிவநேசத்தையுடைய அடியவர்களுக்கு, எளியர் ஆடலை-எளியவ ராகிய சோமசுந்தரக்கடவுளுடைய திருவிளையாடலை, யார்க்கும் வெளிபட தெளியு ம் ஆறு தெளிவித்து-எவர்க்கும் புலப்படத் தெளியும்வண்ணம் தெளிவித்து, தன்னை போல்-இன்பத்திலழுந்திய தன்னைப்போல, விளிவு இல்லாத இன்பம் வெள்ளத்து அழுத்தினான் - அழிதலில்லாத பேரின்பவெள்ளத்தில் (பிறரும்) ஆழச்செய்தான்.

ஒடுங்கியமனம் என்பார் அளியருமனம் எனவும், அடியார்க்கெளியர் என் பார் அன்பருக்கெளியர் எனவுங்கூறினார் "அடியார்க்கெளியன் சிற்றம்பலவன்" எனவரும் இறைவன் திருவாக்காலுணர்க. (உகூ)

கொச்சகக்கலிப்பா.

கோடாதசெங்கோலும்வெண்குடையுங்கோமுடியு
மேடாரலங்கலிராசேந்திரற்களித்துத்
தோடாரிதழியான்றாட்கமலஞ்சூடிவா
னாடாளரசுரிமைபெற்றானரபதியே.

(இ-ள்.) நரபதி - குலபூடணபாண்டியன், கோடாத செம் கோலும்-கோணுதல் இல்லாத செங்கோலையும், வெண்குடையும் கோமுடியும் - தவளவட்டக்குடையையும் அரசிலக்கணத்துக்குரிய கிரீடத்தையும், ஏடு ஆர் அலங்கல் இராசேந்திரற்கு அளித்து - இதழ்நிறைந்த வெற்றிமாலையையணிந்த இராசேந்திரபாண்டியனுக்குக்கொடுத்து, தோடு ஆர் இதழியான் தாள் கமலம் சூடி-இதழ்நிறைந்த கொன்றைமலர்மாலையையணிந்த சோமசுந்தரக்கடவுளுடைய திருவடித்தாமரையைச்சூடி, வான் நாடு ஆள் அரசு உரிமை பெற்றான் - விண்ணுலகத்தையாளும் இந்திரபட்டத்தைப்பெற்றான்.

செங்கோல் வெண்குடையெனப் பிறிதோடியைபு நீக்கிய விசேடணங்களாலும், கோமுடியெனத் தன்னோடியையின்மை நீக்கியவிசேடணத்தாலும் விசேடித்தக்கூறியது பாண்டியன் பகைப்புலங்கடிந்து நிலவுலகைப்பொதுநீக்கித் தனதடிக்கீழ்ப்படுத்தியதன்மேல் நின்றது. (௩௰)

விடையிலச்சினையிட்டபடலம் முற்றிற்று.

---

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - ௧௮௬௮.

---

முப்பத்தைந்தாவது

# தண்ணீர்ப்பந்தல்வைத்தபடலம்.

---

அறுசீரடியாசிரியவிருத்தம்.

சம்புமதுரைப்பரனிரவுதனியேவந்துதனைப்பணிந்த
வெம்புகதிரோன்மருமானைவிடுத்துமீண்டுதாழிறுக்கி
யம்பொற்கதவின்விடைபொறித்ததறைந்துந்தென்னனடுபடைக்கு
வம்புமலர்தோய்புனற்பந்தர்வைத்துக்காத்தவகைசொல்வாம்.

(இ-ள்.) சம்பு மதுரை பரன் - சம்புவாகிய மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுள், இரவு தனியே வந்து தனை பணிந்த - இரவில் துணையின்றிவந்து தன்னைவணங்கிய, வெம்பு கதிரோன் மருமானை விடுத்து - சூரியன் மரபில்வந்த சோழனை அவனூட்டிற்கனுப்பி, மீண்டு தாழ் இறுக்கி - மீளவுந் தாழ்கொளுவி, அம்பொன் கதவின் விடைபொறித்தது அறைந்தும் - அழகிய பொற்றகடுவேய்ந்த கதவத்தில் இடபமுத்திரையிட்ட திருவிளையாடலைக்கூறினும், தென்னன் அடுபடைட்

கு - இராசேந்திரபாண்டியனுடைய கொலைத்தொழிற்குரிய சேனைக்கு, வம்பு மலர் தோய் புனல் பந்தர்வைத்து - வாசமிக்க மலரளாவிய தண்ணீர்ப்பந்தல்வைத்து, காத்தவகை சொல்வாம் - காத்தருளிய திருவிளையாடலை இனிக்கூறுவாம்.

பாண்டியன் சேனை அளவிற் சிறியதேனும் மடங்காவீர முடையதென்பார் அடுபடை யெனவும், வாசமூட்டிய நீர் என்பார் வம்புமலர்தோய் எனவுங்கூறினர்.

தென்னனரசபுரந்தரன்கோல்செலுத்துநாளிற்காடெறிந்த
மன்னன்பின்னர்வெளிப்படையாப்போந்துபோந்துமதுரேசன்
பொன்னங்கமலத்தாள்வணங்கிப்போவான்முன்னிப்பொரும்பொருநைக்
கன்னிநாடன்கேண்மைபெறவிடுத்தான்வரிசைக்கையுறையே.

(இ-ள்.) தென்னன் அரசன் புரந்தரன் கோல் செலுத்தும் நாளில்-பாண்டியனாகிய இராசேந்திரன் செங்கோலைச்செலுத்திவருங்காலையில், காடு எறிந்த மன்னன் - காடுவெட்டியசோழன், பின்னர் வெளிப்படை யாக போந்து போந்து - பின்பு யாவருங்காண வந்துவந்து, மதுரேசன் பொன் அம் கமலம் தாள்வணங்கி போவான் முன்னி - மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளின் பொன்போலும் அரிய அழகிய தாமரைபோன்ற திருவடிகளைவணங்கிச் செல்லக்கருதி, பொரும் பொருநை கன்னிநாடன் கேண்மைபெற - கரையொடுமோதும் தாமரபர்ணிசூழ்ந்த பாண்டிநாட்டையுடைய இராசேந்திரனது நட்பினைவிரும்பி, வரிசை கையுறை விடுத்தான் - வரிசையாகக் கையுறையனுப்பினான்.

செலுத்து நாள் என்றமையால் கோல் என்றது செங்கோல் எனவும், சிவ பெருமானை நாடோறும் இடையூறின்றி வந்து வணங்கிச்செல்லக் கருதினானாதலால் கேண்மைபெறவிடுத்தான் வரிசைக்கையுறை யெனவுங் கூறினர். (உ)

பொன்னிநாடன்வரவிடுத்தபொலம்பூணுடைமுதல்பிறவுங்
கன்னிநாடன்கைகவர்ந்துதானுங்கலக்குந்தொடர்பினு
லுன்னிவேறுகையுறையுய்த்துறவுசெய்யவுவப்பெய்திச்
சென்னிகாதன்மகட்கொடுப்பானிசைந்தானந்தச்செழியற்கு.

(இ-ள்.) பொன்னி நாடன் வர விடுத்த - காவிரிநாடனாகிய சோழன் அனுப்பிய, பொலம் பூண் ஆடைமுதல் பிறவும் - பொன்னாலமைந்த ஆபரணமும் ஆடையு முதலிய பிறபொருளையும், கன்னிநாடன் கைகவர்ந்து - இராசேந்திரபாண்டியன் கைக்கொண்டு, தானும் கலக்கும் தொடர்பினால் உன்னி - தானுமவனோடு அளவளாவும் தொடர்ச்சியால் நட்பைக்கருதி, வேறு கையுறை உய்த்து உறவுசெய்ய - வேறுகையுறை அனுப்பி அவனோடுறவுகொள்ள, சென்னி உவப்பு எய்தி-சோழன் மகிழ்கூர்ந்து, காதல் மகள் அந்த செழியற்குக் கொடுப்பான் இசைந்தான்-விருப்பமிக்க தனது புத்திரியை அந்த இராசேந்திரபாண்டியனுக்குக்கொடுக்க வுடன்பட்டான்.

சிவபெருமான் கனவில் வந்தருளும் மெய்யன்பினனாதல் அச்சோழன் நட்பைத் தானும் பெறவிரும்பினான் என்பார் வேறுகையுறையுய்த்துறவுசெய்ய எனவும், உரிமைச்சுற்றங்கொள்ளக்கருதினான் என்பார் மகட்கொடுப்பானிசைந்தான் எனவுங்கூறினர். (௩)

செழியன்றனக்குவளையறுத்தசெய்திகேட்டுச்செம்பியர்கோன்
கழியன்புடையகுலமகளைத்தான்போய்க்கொள்வான்கருதிமதி
வழிவந்தவற்குத்தம்பியெனவந்தவரசசிங்கமெனும்
பழியஞ்சாதான்வஞ்சித்துப்பழனக்காஞ்சிப்பதிபுகுவான்.

(இ-ள்.) செழியன் தனக்கு வளை அறுத்த செய்தி கேட்டு - தனக்குமூத்தோனாகிய இராசேந்திரனுக்கு மகட்கொடைநேர்ந்து வளையறைசெய்த செய்தியைக்கேட்டு, செம்பியர் கோன் கழி அன்பு உடைய குலமகளை - சோழனது மிக்க அன்புடைய குலகன்னிகையை, தான்போய் கொள்வான் கருதி - தான்சென்று மணமுடிக்கநினைத்து, மதிவழிவந்தவற்கு தம்பி எனவந்த - சந்திரன் மரபில்வந்த அவ்விராசேந்திரனுக்குத் தம்பியாகப் பின்வந்த, அரச சிங்கம் என்னும் - அரசசிங்கபாண்டியனென்னும் பெயரையுடைய, பழி அஞ்சாதான் வஞ்சித்து - பழிக்கஞ்சாதவன் தன் மூத்தோனைவஞ்சித்து, பழனம் காஞ்சி பதிபுகுவான் - வயல்சூழ்ந்த காஞ்சிநகர்க்குச்செல்வானாயினன்.

தன்மூத்தோனுக்குத் தெரியாது சென்றமையால் வஞ்சித்து எனவும், மூத்தோன்மனைவி தனக்கு அன்னையெனக் கருதிலனாதலால் பழியஞ்சாதான் எனவுங் கூறினார். (அ)

காஞ்சிப்பதிமுன்குறுகுமிளங்காவலோனைக்கடற்சேனை
தாஞ்சுற்றியவந்தெதிர்கொடுபோய்த்தன்மூன்றனக்கென்றிருந்தமக
ளாஞ்சிற்றிடையைமணம்புணர்த்தியந்தமருகற்கரசுநிலை
வாஞ்சித்தரசபுரந்தரனைப்பிடிக்கமதித்தான்வனமெறிந்தான்.

(இ-ள்.) காஞ்சி பதிமுன் குறுகும் இளமை காவலோனை - காஞ்சிநாட்டுக்குமுற்பட்டுச் செல்லும் இளவரசாகிய அரசசிங்கபாண்டியனை, கடல் சேனை தாஞ்சுற்றியவந்து - கடல்போன்றசேனை தன்னைச்சூழவர, எதிர்கொடுபோய் - எதிர்கொண்டுசென்று, தன்முன் தனக்கு என்று இருந்த மகளாம் சிற்றிடையை - அவன் மூத்தோனுக்கென்று வளையறுத்திருந்த தனதுபுத்திரியை, மணம் புணர்த்தி - கல்யாணமுடித்து, அந்த மருகற்கு - அந்த அரசசிங்கபாண்டியனுக்கு, அரசுநிலைவாஞ்சித்து - அவன்மூத்தோன் அரசியலை (கவர) விரும்பி, அரச புரந்தரனை பிடிக்க - அவ்விராசேந்திரபாண்டியனைப்பிடிக்க, வனம் எறிந்தான் மதித்தான் - காடுவெட்டிய சோழன்கருதினன்.

தான் வளையறுத்த செய்கையினின்று முறைபிறழ்ந்தானாதலால் அரசபுரந்தரனைப் பிடிக்கமதித்தான் என்றார். வந்து செயவெனெச்சத்திரிபு. (௬)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

மருமகன்றனுடனெழுந்துமாமனானவளவர்கோன்
பொருமகன்றசேனையானைபுடைநெருங்கமதிவழித்
திருமகன்றன்மேலடர்த்திறங்குறித்துமுரசறைந்
தருமகன்றபல்லியம்மொலிப்பவந்துளானரோ.

(இ-ள்.) மருமகன் தன் உடன் எழுந்து - மருகனாகிய இராசேந்திரனோடு போர்க்கெழுந்து, மாமன் ஆன வளவர்கோன் - மாமனாகிய காடுவெட்டியசோழன்

பொரும் அகன்ற சேனை யானை புடை நெருங்க-போர்செய்யும் பரந்தசேனையோடு யானையுந் தனதுபக்கம் நெருங்கிவரவும், மதிவழி திருமகன் தன்மேல் அமர் திறம் குறித்து - சந்திரன் மரபிற்றோன்றிய அந்த இராசேந்திரபாண்டியன் மேற்போர்த்திறங்குறித்து, முரசு அறைந்து - முரசுகொட்டி, உரும் அகன்ற பல் இயம் ஒலிப்பவந்து உள்ளான் - இடிபோலப் பலவாத்தியங்கள் ஒலிக்கவும்வந்தான்.

சேனையுட்சிறந்தது யானைச்சேனையாதலால் சேனையென்றமையாது யானையெனவும், பாண்டியன் சேனையின் சிறுமையைக்கருதி வெல்லத் துணிந்தனனாதல் புடைநெருங்கமுரசறைந்துவந்துளான் எனவுங் கூறினர். (௬)

திரண்டதிர்ந்தெழுந்துவந்தசென்னிசேனைதன்னகர்க்
கிரண்டுயோசனைப்புறத்திறுக்குமுன்னரொற்றராற்
றெருண்டுதென்னன்மாடநீடுகூடன்மேயசிவனதாள்
சரண்புகுந்துவேண்டுகென்றுசார்ந்துதாழ்ந்துகூறுவான்.

(இ-ள்.) திரண்டு அதிர்ந்து எழுந்து வந்த சென்னி சேனை - நெருங்கிக்கோஷித்துப் போர்க்கு எழுந்துவந்த சோழனுடையசேனை, தன் நகர்க்கு இரண்டு யோசனை புறத்து இறுக்கு முன்னர் - தன்னகரத்திற்கு இரண்டுயோசனைத் தூரத்திற்கு அப்பால பாடிவீடுகொண்டு வசிப்பதற்குமுன், ஒற்றரால் தென்னன் தெருண்டு-வேவுகாரரால் பாண்டியனுணர்ந்து, மாடம நீடு கூடல் மேய சிவன தாள் சரண் புகுந்து - மாடங்கள் நெருங்கிய மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளின் திருவடியில் அடைக்கலம் புகுந்து, வேண்டுக என்று சார்ந்து தாழ்ந்து கூறுவான் - குறையிரக்கக்கடவேனென்று வந்து பணிந்து கூறுவானாயினன்.

சோழன் தனது வழிபாட்டைச் சிறிதுங் கருதாதெழுந்தான் என்பார் அதிர்ந்தெழுந்துவந்த எனவும், தன்பகையைத் தனக்கோர் கிளையாகக் கூட்டி முடித்தவர் சோமசுந்தரக்கடவுளாதலால் அவர்பாற்சென்று குறையிரக்க எழுந்தான் என்பார் சிவனதாள் சரண்புகுந்து வேண்டுகென்று சார்ந்து எனவுங்கூறினர். (எ)

அன்றுபாதிிரவில்வந்துனடிபணிந்துதமியனாய்ச்
சென்றசென்னியென்னுநின்னதிருவடிக்கணன்பினா
னென்றுமந்நிலையனாயெனக்குவேண்டுவனவிடுத்
தொன்றுகேண்மைபுரிகுவானுளத்திலொன்றையுன்னினான்.

(இ-ள்.) அன்று பாதி இரவில் வந்து - அக்காலையில் பாதிராத்திரியில்வந்து, உன் அடி பணிந்து தமியனாய் சென்ற - உனது திருவடியைப்பணிந்து தனியனாய்ப் போன, சென்னி என்னும் நின்ன திரு அடிகண் அன்பினான் - காடுவெட்டியசோழனென்னும் உன்னுடைய திருவடியிலன்புடையோன், என்றும் அ நிலையனாய் எனக்கு வேண்டுவன விடுத்து - எப்பொழுதும் அந்நிலையை யுடையவனாக எனக்குவேண்டும் வரிசைகளையனுப்பி, ஒன்று கேண்மை புரிகுவான் - மனமொத்த நட்பை விரும்பினவன், உளத்தில் ஒன்றை உன்னினான்-(இப்பொழுது) மனத்தில் வேறொன்றைக்கருதினான்.

உனது திருவருளால் எனது நாட்டுக்குளஞ்சாது வந்துசென்றான் என்பான்-அன்று பாதியிரவில் வந்து தமியனுய் எனவும், அவனுனது திருவடிக்கண் மூந்திய நேயன் என்பான் நின்னதிருவடிக்கணன்பினுன் எனவும், அந்நேயம் என்றும் நிலை பெற்று ஒல்காதிருத்தற்கு வேண்டிறுன் என்பான் என்று மந்நிலையனு யெனக்குவே ண்டுவனவிடுத்தொன்றுகேண்மைபுரிகுவான் எனவும், இன்று உன்திருவடிக்குப் பி ழைத்தான் என்பான் உளத்திலொன்றையுன்னினுன் எனவுங்கூறினுர். (அ)

அறத்தினுக்குளாகியன்றுநின்றநீயவன்செயு
மறத்தினுக்குளாகியின்றுவன்மைசெய்வதேயறப்
புறத்திஞர்புரம்பொடித்தபுண்ணியாவெனக்கரைந்
துறைத்துவேண்டினனவேலையும்பர்நாதனருளினுல்.

(இ-ள்.) அறத்தினுக்கு உள் ஆகி அன்று நின்ற நீ - தருமத்துக்குட்பட்டு அக்காலையில் அவனுக்குத் துணையாய்நின்ற நீ, அவன் செயும் மறத்தினுக்கு உள்ளாகி இன்று வன்மை செய்வதே-அவன்செய்யுங் கொடுந்தொழிலுக்கு இணங்கி இப்பொழுது அவனுக்குத் துணைசெய்வதோ, அறம் புறத்திஞர் புரம் பொடித்த புண்ணியா என கரைந்து - பாவத்தின்வழிநின்ற திரிபுராதிகளின் திரிபுரங்களை நீறுபடுத்திய புண்ணியனல்லவோ நீ என்றுகூறி, உறைத்து வேண்டினன்-வலிந்துகுறையிரந்தான், அவ்வேலை உம்பர் நாதன் அருளினுல் - அக்காலையில் சோமசுந்தரக்கடவுளின் திருவருளினுல்.

சிவபுண்ணியத்தின்வழி நின்ரூர்க்கு நீ யண்மையனென்பான் அறத்தினுக்குளாகி யெனவும், அப்புண்ணியத்தின் புறத்து நின்ரூர்க்கு நீ சேயனென்பான் விறுப்பொருள்பட அவன்செயுமறத்தினுக்குளாகி யின்றுவன்மைசெய்வதே எனவும், தனதுட்கருத்துப்புலப்படச் சிவபுண்ணிய நிலைபெறுத்தற்கு அப்புண்ணியத்தினின்றுவழுவினேர்புரத்தை நீறுசெய்தவன் நீயன்ரூ என்பான் அறப்புறத்திஞர் புரம் பொடித்தபுண்ணியா எனவுங்கூறினுன். அறப்புறத்திஞர்புரம்பொடித்தபுண்ணியா என அபிப்பிராயத்தோடுகூடிய விசேடணத்தைக் கூறுதலால் கருத்துடையடையணி. (கூ)

மெய்துறந்தவாய்மையொன்றுவிண்ணினின்றுமண்ணலே
யைதுநுங்கள்சேனையோடுமாகவத்துநாளைநீ
யெய்திவந்ததெவ்வரோடெதிர்ந்துருத்துநின்றுபோர்
செய்திவென்றிநின்னதாதல்செய்துமென்றெழுந்ததால்.

(இ-ள்.) விண்ணின் நின்றும் மெய் துறந்த வாய்மை ஒன்று-ஆகாயத்தினின்றும் அசரீரியொன்று, அண்ணலே - பாண்டியனே, ஐது நுங்கள் சேனையோடும்-அழகிதாக உங்கள்சேனையோடும், ஆகவத்து - போர்க்களத்தில், எய்தி வந்த தெவ்வரோடு நாளை நீ எதிர்ந்து உருத்து நின்று போர் செய்தி - அடைந்துவந்தபகைவரோடு நாளைக்கு நீ எதிர்த்துக்கோபித்துநின்று போர்த்தொழில்செய்வாய், வென்றி நின்னது ஆதல் செய்தும் என்று எழுந்தது - வெற்றி யுன்னுடையதாகச் செய்வோமென்று எழுந்தது.

பாண்டியன் வேண்டுகோளுக்கு உடன்பட்டாராதலால் நாளை போர்செய்தி யெனவும், உனக்குத் துணையாய்நிற்போம் அஞ்சற்க என்றனராதலால் வென்றி நின்னதாதல் எனவுங் கூறினர். மெய்துறந்தவாய்மை என்றமையால் அசரீரியென்றும். மெய் சரீரம். (௧௦)

காயவாணிசெவிநுழைந்தகாலைவேந்தரிந்திர
னயனாரடிக்கணேயந்தவன்புமுவகையாய
மாயவேலைவீழ்ந்துதாழ்ந்தகன்றுதன்னிருக்கைபோய்
மேயினனிமிர்ந்தகங்குல்விடியுமெல்லைநோக்குவான்.

(இ-ள்.) காயம் வாணி செவி நுழைந்த காலை - ஆகாசவாணி செவியில் நுழைந்தகாலத்தில், வேந்தர் இந்திரன் - இராசேந்திரன், நாயனார் அடிகண்ணே நயந்த அன்பும் உவகையும் ஆய வேலை - சோமசுந்தரக்கடவுள் திருவடியில் எழுந்தநேயமும் அதனாலெழுந்த களிப்பும் ஆகியகடலில், வீழ்ந்து தாழ்ந்து அகன்று - விழுந்து மூழ்கி அதனினின்றுநீங்கி, தன் இருக்கை போய் மேயினன் - தன்கோயிலில் சென்று அடைந்து, நிமிர்ந்த கங்குல் விடியும் எல்லை நோக்குவான் - எழுச்தோங்கிய இராப்போது விடியுமளவைப் பார்ப்பவனாயினன்.

சிவபெருமான் திருவடியிற்கொண்ட நேயம் பிழையாமையாலும் தன்கருத்து முற்றினமையாலும் துன்பங் கழிந்து பேரின்பம்பெற்றான் என்பார் அன்புமுவகையுமாயவேலைவீழ்ந்துதாழ்ந்து என்றார். (௧௧)

கழித்தகங்குலிறவிசும்புகண்விழிக்குமுன்னரே
விழித்தெழுந்துசந்தியாதிவினைமுடித்துவானநீர்
சுழித்தலம்புவேணியண்ணலாயபூசைசெய்தெழீஇத்
தெழித்தெழுந்தசேனையோடுசெருநிலத்தைநண்ணினன்.

(இ-ள்.) கழித்த கங்குல் இற - மிக்க இராப்போது கெட, விசும்பு கண் விழிக்கும் முன்னர் - ஆகாயங் கண்திறக்குமுன், விழித்து எழுந்து - தான்துயிலுணர்ந்து, சந்தி ஆதி வினை முடித்து - நித்தியகடன்முதலிய கருமங்களைச் செய்துமுடித்து, வானம் நீர் சுழித்து அலம்பு வேணி அண்ணல் - கங்கை சுழித்து ஒலிக்குஞ் சடாமுடியையுடைய சிவபெருமானாரது, தூய பூசை செய்து எழீஇ - பரிசுத்தமாகிய பூசையைச்செய்து எழுந்து, தெழித்து எழுந்த சேனை ஓடு செரு நிலத்தை நண்ணினன் - அதட்டிப் போர்க்கெழுந்த சேனையோடு போர்க்களத்தை அடைந்தான்.

தான் கருதிய கரும முற்றியதாதலால் துணிந்தானென்பார் சேனையோடுசெருநிலத்தைநண்ணினான் என்றார். உலகிற்குக் கண்ணாதலால் கண் என்றது உவமையாகுபெயராய்ச் சூரியன்மேல் நின்றது "வான்கண்விழியாவைகறையாமத்து" என வருதல்காண்க. (௧௨)

அலைசிறந்தசலதிமீதொராறுசெல்லுமாறுபோன்
மலைசிறந்தநேரிவெற்பன்மள்ளர்சேனைவெள்ளமேற்
கலைசிறந்தமதிநிறைந்தகன்னிநாடுகாவலான்
சிலைசிறந்தசிறியசேனைசென்றலைந்துநின்றதே.

(இ-ள்.) அலை சிறந்த சலதி மீது - அலைமிக்க கடலின்மேல், ஓர் ஆறு செல்லும் ஆறு போல் - ஓர்நதிசெல்லும் வகையைப்போல, மலை சிறந்த நேரி வெற்பன் - மலைகளிற்சிறந்த நேரிமலையையுடைய சோழனது, மள்ளர் சேனை வெள்ளம் மேல் - வீரர்சேனாசமுத்திரத்தின்மேல், கலை சிறந்த மதி நிறைந்த - அறுபத்துநான்கு கலைகளின் றேர்ச்சியில் மேம்பட்ட, கன்னி நாடு காவலான் - பாண்டிநாட்டரசனாகிய இராசேந்திரன், சிலை சிறந்த சிறிய சேனை சென்று அலைத்து நின்றது - வில்லிற் சிறந்த சிறியசேனையானது போரிற்சென்று வருத்திநின்றது.

சோழன்சேனையின் பெருமையையும், பாண்டியன்சேனையின் சிறுமையையு முணர்த்துதற்குக் கூறிய உவமையாதலால் பண்புபற்றிவந்த வுவமையணி. சிறிய சேனை என்றமையால் பெரியசேனையெனக்கொள்க. (௧௩)

உருமுவன்னகுரலினருலவையன்னசெலவினர்
வெருவுதீயின்வெகுளியார்வெடித்தவீரநகையினர்
செருவின்மானவணியினர்சினைஇமடித்தவாயின
ரிருவர்சேனைமள்ளரும்மெதிர்ந்துகைகலந்தனர்.

(இ-ள்.) உருமு அன்ன குரலினர் - இடியையொத்த குரலையுடையவரும், உலவை அன்ன செலவினர் - காற்றையொத்த நடையையுடையவரும், வெருவு தீயின் வெகுளியார் - அஞ்சுந் தீயையொத்த கோபமுடையவரும், வெடித்த வீர நகையினர் - தம்மை அறியாது எழுந்த வீரநகையையுடையவரும், செருவில் மான அணியினர் - போரில் புறங்கொடாமையாகிய மானாபரணத்தையுடையவரும், சினைஇ மடித்த வாயினர் - கோபித்து மடித்த வாயினையுடையவருமாகி, இருவர் சேனை மள்ளரும் எதிர்ந்து கை கலந்தனர் - சோழபாண்டியர்களுடைய சேனாவீரரும் தம்முள் எதிர்ந்து கைகலந்தார்கள்.

இருவருந் தம்முளொத்த ஆற்றலும் புறங்காட்டாத தறுகண்மையுமுடையவர் என்பார் இவ்வாறுகூறினர். (௧௪)

மன்றலந்தெரியனேரிமலயவன்றமர்க்கெலாந்
தென்றலம்பொருப்பினன்றிரண்டநான்குகருவியு
மின்றயங்குசெய்யவேணிவிடையவன்றனருளினா
லொன்றனந்தமாகவந்துருத்தெதிர்ந்துதோன்றுமால்.

(இ-ள்.) மன்றல் அம் தெரியல் நேரி மலையவன் தமர்க்கு எல்லாம் - வாசமிக்க மாலையை அணிந்த நேரிமலையையுடைய சோழனது சேனாவீரர்களுக்கெல்லாம், தென்றல் அம்பொருப்பினன் திரண்ட நான்கு கருவியும் - பொதியமலையையுடைய பாண்டியனது திரண்ட நான்குசேனையும், மின் தயங்கு செய்யவேணி விடையவன் தன் அருளினால் - மின்னல்போல்விளங்குஞ் செவ்வந்தசடையையுடைய சோமசுந்தரக்கடவுளின் திருவருளினால், ஒன்று உரு அனந்தம் உரு ஆகவந்து தெரிந்து தோன்றும் - ஓர் உரு அனந்த உருவாகவந்து புலப்பட்டுத் தோன்றுநிற்கும்.

சிவபெருமான் திருவருளால் ஒன்றனந்தமாகப் பல்கியதென்பார் தோன்றும் என்றார். (கரு)

தேரினோதைகந்துகஞ்சிரிக்குமோதைசொரிமதக்
காரினோதைபேரியங்கறங்குமோதைமறவர்தம்
போரினோதைவீரர்தோள்புடைக்குமோதையோடுமுந்
நீரினோதையொன்றெனக்கலந்தொதுங்கநின்றதே.

(இ-ள்.) தேரின் ஓதை - தேரின்கம்பலையும், கந்துகம் சிரிக்கும் ஓதை - குதிரைகள் கனைக்குமோதையும், சொரிமதம் காரின் ஓதை - மதத்தைப்பொழியும் யானையின் அரவமும், பேர் இயம் கறங்கும் ஓதை - பெரிய வாச்சியங்கள் ஒலிக்குங்கோஷமும், மறவர் தம் போரின் ஓதை - இரண்டுசேனைவீரர்களும் தம்முள் போர் செய்யும் ஆரவாரமும், வீரர்தோள் புடைக்கும் ஓதை ஒடு - அவ்வீரர்கள் தமது தோளைக்கொட்டி ஒலிக்கும் முழக்கத்தோடு, முந்நீரின் ஓதை ஒன்று என கலந்து ஒடுங்க நின்றது - கடலொலியோடொன்றென்று சொல்லத் தம்முளகலந்து அடங்கநின்றது.

அளவிறந்த சேனையாயிற்றென்பார் முந்நீரினோதை யொனறெனக்கலந்தொடுங்க நின்றதே என்றார். (கசு)

சிலைபயின்றவீரரோடுசிலைபயின்றவீரரோ
கலைபயின்றவாளரோடுகலைபயின்றவாளரோ
கொலைபயின்றவேலரோடுகொலைபயின்றவேலரோ
மலைபயின்றமல்லரோடுமலைபயின்றமல்லரோ.

(இ-ள்.) சிலைபயின்ற வீரர் ஒடு சிலைபயின்ற வீரரோ - விற்றொழிற்பயிற்சியையுடைய வீரர்களோடு விற்றொழிற்பயிற்சியையுடையவீரர்களோ, கலைபயின்றவாளர் ஒடு கலைபயின்றவாளரோ - சஸ்திரநூல்வழிபயின்ற வாள்வீரரோடு சஸ்திரநூல்வழி பயின்ற வாள்வீரர்களோ, கொலைபயின்ற வேலர் ஒடு கொலைபயின்றவேலரோ - கொலைத்தொழில்பயின்ற வேல்வீரரோடு கொலைத்தொழில்பயின்ற வேல்வீரர்களோ, மலைபயின்ற மல்லர் ஒடு மலைபயின்ற மல்லரோ - மற்போரிற்பயின்ற மல்லர்களோடு மற்போரிற்பயின்ற மல்லர்களோ.

மல் பகுதிப்பொருள்விகுதி யேற்றுத்தொகுக்கும் வழித்தொகுத்தலாய் மலையென நின்றது. (கஎ)

கரியுகைத்தபாகரோடுகரியுகைத்தபாகரோ
பரியுகைத்தமறவரோடுபரியுகைத்தமறவரோ
கிரியுகைத்தவலவரோடுகிரியுகைத்தவலவரோ
யெரியுகைத்தெதிர்ந்தகாலெனக்கலந்துமலைவரால்.

(இ-ள்.) கரி உகைத்தபாகர் ஒடு கரி உகைத்தபாகரோ - யானையைச்செலுத்திய பாகரோடு யானையைச்செலுத்தியபாகர்களோ, பரி உகைத்த மறவர் ஒடு பரி உகைத்த மறவரோ - குதிரையைச்செலுத்தும் வீரர்களோடு குதிரையைச்செலுத்தும்வீரர்களோ, கிரி யுகைத்த வலவர் ஒடு கிரி உகைத்தவலவரோ - தேராகிய மலையைச்

செலுத்திய பாகரோடு தோரகியமலைகளைச்செலுத்தியபாகர்களை, எரி உகைத்து. எதிர்ந்த கால் என கலந்து மலைவர் - (இவ்வாறு), வடவாமுகாக்கினியை மூட்டியெ ழுந்த சண்டமாருதம்போலத் தம்முட்கலந்து போர்செய்வார்கள்.

போர்வீரர் தம்முளொத்த போர்வீரரோடு போர்செய்தல் போர்த்தொழில் முறையாதலால் சிலைபயின்றவீரரோ வென்பது முதல்கிரியுகைத்த வலவரோயென மு றைபடக்கூறினர். இரி உவமையாகுபெயர். (கரு)

விடுக்கும்வாளியெதிர்பிழைப்பர்வெய்யவாளியெய்துபின்
றொடுக்கும்வாளிவில்லொடுந்துணிப்பர்பின்கணிப்பற
மடுக்கும்வாளிமார்புதைப்பவாங்கிமற்றைவாளிகொண்
டடுக்குமேவலாரையெய்தடர்ப்பர்கிள்ளிமள்ளரே.

(இ-ள்.) கிள்ளி மள்ளர் - சோழனுடைய சேனைவீரர்கள், விடுக்கும் வாளி எதிர்பிழைப்பர் - (பாண்டியன் சேனைவீரர்கள்) தொடுக்கும் பாணங்களுக்கு எதிர் நின்று தப்பி, வெய்ய வாளி எய்து-கொடிய அம்புகளைத் தாம்தொடுத்து, பின் தொ டுக்கும் வாளி வில் ஒடும் துணிப்பர் - பின்பு அவர்கள் தொடுக்கும் அம்புகளை வில் லோடும் துண்டுபடுத்துவர், பின் கணிப்பு அற மடுக்கும் வாளிமார்பு தைப்பவாங்கி- பின்பு அளவில்லாமல் அவர்கள்தொடுக்கும்பாணங்கள் தமது மார்பில்தைத்துருவ அவற்றைவாங்கி, வாளி கொண்டு அடுக்கும் ஏவலாரை எய்து அடர்ப்பர் - மீளவும் அம்புகொண்டு போர்க்குவரும் பகைவர்மேலேவிக்கொல்லுவார்கள்.

தமது மார்பிற்றைத்த அம்புகளைப்பிடுங்கி மீளவும் எய்தனர். எனக்கூறியது தாழிலாட்டு என்னுந்துறை "களங்கழுமியபடையிரிய, உளங்கழிந்தவேல்பறித்தோ ச்சின்று" என்பதனாலுணர்க. (கசு)

சோனைமாரியிற்சரஞ்சொரிந்துநின்றுதுள்ளுவா
ரானவாளியெதிர்பிழைந்தொதுங்கிநின்றழற்சரங்
கூனல்வாளிசிலையிறத்தொடுத்தெறிந்துகூவுவார்
மீனகேதனத்துவேந்தன்வீரர்சென்னிவீரர்மேல்.

(இ-ள்.) மீனம் கேதனத்து வேந்தன் வீரர்-கயற்கொடியையுடைய பாண்டி யன்சேனைவீரர்கள், சென்னி வீரர்மேல்-சோழன்சேனைவீரர்கள்மேல், சோனைமாரியில் சரம் சொரிந்து நின்று துள்ளுவார்- சோனைமழையைப்போலப் பாணங்களைச்சொரி ந்துநின்று துள்ளுவார்கள், ஆன வாளி எதிர்பிழைத்து ஒதுங்கி நின்று - பகைவர்க ள் எய்யும் பாணங்களுக்கு எதிரேதப்பி யொதுங்கிநின்று, அழல் சரம் - நெருப்பு உமிழும் தமதுபாணங்களை, வாளி கூனல் சிலை இற தொடுத்து எறிந்து கூவுவார்- அவர்களுடைய அம்புகள் ஏறிட்ட வளைந்தவில் துண்டுபடப் பிரயோகஞ்செய்து துண்டுபடுத்தி வீரகோஷஞ்செய்வார்கள்.

இடைவிடாது சொரிந்தார் என்பார் சோனைமாரி யெனவும், வெற்றிதமதா யிற்றெனக்கருதினரென்பார் துள்ளுவார் எனவும், பகைவர் எய்யும் பாணத்துக்கொ ல்கார் என்பார் ஆனவாளியெதிர்பிழைத்து எனவும், தமது விற்றிறங்காட்டினர் என்பார் சிலையிறத்தொடுத்தெறிந்தெனவுங் கூறினர். (உ0)

தறிந்ததாடகர்ந்தசென்னிதரையுருண்டவரையெனச்
செறிந்ததோள்சரிந்ததேர்சிதைந்தபல்படைக்கலம்
முறிந்தயானைகையிறுமுழங்கிவீழ்ந்தசெம்புனல்
பறிந்தபாறுபாரிடங்கள்பைத்தகூளிமொய்த்தவே.

(இ-ள்.) தாள் தறிந்த - (சேனைவீரர்கள்) கால்கள் முறிபட்டன, தகர்ந்த சென்னி - அறுபட்டதலைகள், தரை உருண்ட - நிலவுலகின்மேலுருண்டன, வரை என செறிந்த தோள் - மலையைப்போல நெருங்கித்திரண்டதோள்கள், சரிந்த - துண்டுபட்டுச்சரிந்துவீழ்ந்தன, தேர்சிதைந்த - தேர்கள் அழிந்தன, பல் படைக்கலம் முறிந்த - பலவகைப்பட்ட ஆயுதங்களு முறிபட்டன, யானை கை இறு - யானைகள் துதிக்கை துண்டுபட்டு, முழங்கி வீழ்ந்த - அலறிவீழ்ந்து சாய்ந்தன, செம் புனல் பறிந்த-உதிரவெள்ளம் எங்கும்பரந்தன, பாறு-கழுகுகளும், பாரிடங்கள்-பூதங்களும், பைத்தகூளி-பரவியபசாசுகளும், மொய்த்த-போர்க்களம் (எங்கும்) நெருங்கின.

தகர்தல் உடைபடல். உருண்ட என்றமையால் அறுபட்ட என்றும். (உக)

மடலினீடுதாரலங்கன்மன்னர்சேனையின்னவா
றுடலினீழலடியகத்தொடுங்கவும்பருச்சியிற்
கடலினீடுகதிர்பரப்புகடவுளெய்துமளவுநின்
றடலினீடியிடைவிடாமலமருழந்தவாலரோ.

(இ-ள்.) மடலின் நீடு தார் அலங்கல் - இதழ்களால் மணமிக்க மாலையணிந்த, மன்னர் சேனை - சோழபாண்டியர்கள் சேனைகள், இன்ன ஆறு-இவ்வகையாக, உடலின் நீழல் - தேகத்தினிழல், அடி அகத்து ஒடுங்க - தமதுகாற்கீழொடுங்கிநிற்க, உம்பர் உச்சி இல் - ஆகாயத்தின்மத்தியில், கடலின் நீடு கதிர்பரப்பு - கடல்போல அளவின்றிப்பரந்த கிரணங்களைவீசும், கடவுள் எய்தும் அளவும் நின்று - சூரியனடையும் நண்பகற்போதுகாறும் நின்று, அடலின் நீடி - வலிமையில் தளர்வின்றி, இடைவிடாமல் அமர் உழந்த - சற்று நீங்காது போர்செய்து நின்றன.

உச்சிப்போதில் தேகநிழல் காற்கீழொடுங்குதலால் உடலினீழலடியகத் தொடுங்க என்றார். இன் ஒப்புப்பொருள்மேல் நின்ற ஐந்தனுருபு. (உஉ)

அந்தநாளனைத்தையும்மழிக்கநின்றவானுதல்
சிந்துதீயெனக்கனன்றுறுத்துநின்றுதெறுதலால்
எந்தயாறுமறவறப்பவிம்பரன்றியும்பரும்
வெந்துவானயாறும்வற்றவேனில்வந்திறுத்ததால்.

(இ-ள்.) அந்தம் நாள் - முடிவுநாளில், அனைத்தையும் அழிக்க நின்ற - எல்லாப்பொருள்களையும் அழிக்கும்படிநின்றருளிய, அரன் நுதல் - உருத்திரமூர்த்தியினெற்றிக்கண், சிந்து தீ என - சிந்தும் தீயைப்போல, கனன்று உருத்து நின்று தெறுதலால் - கொதித்து உஷ்ணித்து நின்று -(சூரியகிரணங்கள்) வாட்டுதலால், எந்த யாறு உம் - எவ்வகைப்பட்டநதிகளும், அறவறப்ப - மிகவும்வற்றவும், இம்பர் அன்றி - இந்நிலவுலகுமன்றி, உம்பரும் வெந்து - விண்ணுலகும் கருகுதலால், வான யாறும் வற்ற - ஆகாயகங்கைவறப்பவும், வேனில் வந்து இறுத்தது - வேனிற்போதுவந்து நிலைபெற்றது.

அந்த என, திரிந்து நின்ற சுட்டுச்சொல்லமையையுணர்த்துதலால் அந்தநாள் எனக்கொண்டு முடிவுநாள் எனப்பொருள்கொள்ளுதலும் அமையும். வற்றுறு சரக்கும் தெய்வநதிகளும் என்பார் எந்தயாறும் என்றார். தனது அதிகாரசத்தியைப் பிரமன்மாலிவர்கள்பால்வைத்துத் தோற்றியுங்காத்தும் இறுதியிலியாவையும் அழித்துநிற்றலால் அந்தநாளனைத்தையும் அழிக்கநின்ற அரன் என்றார். "நிலவுகின்றதன்னருளுருக்கொண்டிடுநிமலன், தலைமைபெற்றிடு புங்கவர்தம்மைமுன்றந்தே, உலகம்யாவையுமழித்தருள்செய்திடவுதவி, அலகிலாவுயிர்யாவையுமயன்கணின்றளிப்பான்." "மாயவன்கணின்றவையெலாம்போற்றிமற்றவைக்குத், தூயதுப்புரவருத்தியேமேல்வினைதொலைச்சி, யாயவற்றிலோர்பற்பலவீடுறவருளி, மேயவாருயிருலகெலாம் பின்னரேவீட்டும்." "அன்னவேலையிலவையெலாமழித்தபினளிப்போர், என்னநின்றவர்தம்மையுமொடுக்குறும்" எனக்காந்தம் தக்ஷகாண்டம் ததீசியுத்தரப்படலத்தில் வருதல்காண்க. நுதல் இடவாகுபெயராய்க் கண்மேல்நின்றது. (உரு)

மண்பிளந்துபிலநுழைந்துவரைபிளந்துநிரையவாய்
எண்பிளந்துநின்றபொங்கரிலையுகப்பிளந்துமேல்
விண்பிளந்துபரிதிநீடுவெங்கரங்கள்யாரையுங்
கண்பிளந்தழன்றுவீசுகானலெங்குமானதே.

(இ-ள்.) பரிதி-சூரியனுடைய, நீடு வெங்கரங்கள் - மிக்ககொடியகிரணங்கள், யாரை உம் - எவரையும், கண்பிளந்து - கண்கூச, அழன்று வீசு கானல் - கொதித்து வீசுங்கானல், மண்பிளந்து - நிலவுலகைப்பிளந்து, பிலம் நுழைந்து-பாதலவுலகிற்சென்று, வரை பிளந்து - மலைகளைப்பிளந்து, நிரைய ஆய் - ஒழுங்குபட்டனவாய், எண்பிளந்துநின்ற - அளவைகடந்துநின்ற, பொங்கர் இலை உக பிளந்து- சோலையிலுள்ள இலைகள் சிந்த எரித்து, மேல்விண்பிளந்து - மீதுள்ளவிண்ணுலகைப்பிளந்து, எங்கும் ஆனது - எவ்விடத்தும் பரவியது.

சூரியகிரணவெம்மையே கானலானதால் வெங்கரங்கள் வீசகானல் எனவும், அதுமிகக் கொடியதாயிருத்தலால் யாரையுங் கண்பிளந்து எனவும், சூரியகிரணம் தோயுமிடமுற்றும் பரவியதாதலால், எங்குமானது எனவுங்கூறினார். கண்பிளந்து செயவெனெச்சத்திரிபு. (உசு)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

ஆயிடையலகைத்தேருமடைந்தவர்வெயர்வுமன்றித்
தூயநீர்வறந்தவந்தச்சுடுபுலந்தோய்ந்தகாலும்
மீயுயர்மதிநிலாவும்வெய்யவாய்ச்சுடுநல்லோரும்
தீயவர்தம்மைச்சேர்ந்தாற்றீயவராவரன்றே.

(இ-ள்.) ஆயிடை - அவ்விடத்துள்ள, அலகைத்தேரும் - கானற்சலமும், அடைந்தவர் வெயவும் அன்றி - அங்கடைந்தவர்வேர்வையுமல்லாமல், தூய நீர் வறந்த - புனிதமாகிய நீரும்வற்றின, அந்த சுடுபுலம் தோய்ந்தகாலும் - அந்தச்சுட்டுவருத்தும் நிலத்தில் அளாவியகாற்றும், மீ உயர் மதிநிலாவும் - விண்ணுலகில் உயர்ந்து விளங்கும் சந்திரன்கிரணமும், வெய்ய ஆய் சுடும் - கொடியனவாகிச்சுடாநிற்கும், நல்லோரும் தீயவர்தம்மை சேர்ந்தால் - நல்லவருங் கெட்டவரைச்சேர்ந்தால், தீயவர் ஆவர் அன்றே - கெட்டவராவாரல்லவா.

தண்ணியதென்றற்காற்று என்பார் தோய்ந்தகாலும் வெய்யவாய்ச்சுடும் எனவும், எங்கும் நீர்ப்பசையொழிந்தன என்பார் ஆயிடையலகைத்தேரு மடைந்தவர் வெயர்வுமன்றித் தூயநீர்வறந்த எனவுங்கூறினார். நல்லோரும் தீயவர்தம்மைச்சேர்ந்தால் தீயவராவரன்றோ என்னும்பொருளால் சுடுபுலந்தோய்ந்தகாற்றும் சந்திரனும் தண்மைக்குணமாறி வெய்யவாய்ச்சுடுமென வர்ணியமாகிய சிறப்புப்பொருள் சாதிக்கப்படுதலால் வேற்றுப்பொருள்வைப்பணி. (உரு)

விளைமதவூற்றுமாறிவெகுளியுஞ்செருக்குமாறித்
தொளையுடைக்கைம்மான்றூங்குநடையவாய்ச்சாம்பிச்சோர்ந்த
உளர்தருமூழிக்காலினோடுவாம்புரவியெய்த்துத்
தளர்நடையுடையவாகித்தைவருதென்றல்போன்ற.

(இ-ள்.) விளைமத ஊற்றும் மாறி - இடைவிடாதொழுகு மதத்தின்சுரப்பு மாறி, வெகுளியும் செருக்கும்மாறி - கோபமும் இறுமாப்புமாறி, தொளை உடைய கைமான் - தொளைபொருந்திய துதிக்கையையுடைய யானைகள், தூங்கு நடைய ஆய்-மந்தநடையை யுடையனவாகி, சாம்பி சோர்ந்த - வாடிச்சோர்ந்தன, உளர் தரும் ஊழிக்காலின் - சஞ்சரிக்கும் ஊழிக்காற்றைப்போல, ஓடுவாம்புரவி எய்த்து-விரைந்தோடுந் தாவாநின்ற குதிரைகள்சோர்ந்து, தளர்நடை உடைய ஆகி - தளர்ந்து நடக்கும் நடையையுடையனவாகி, தைவருதென்றல்போன்ற - தவழ்ந்துசெல்லுந் தென்றலையொத்தன.

இதனால் கானலின்மிகுதியையெடுத்துக்கூறினமையால் மிகுதிநவிற்சியணி.

கானலந்தேர்மேற்சூறைக்காலெனும்பாகன்றூண்ட
வேனில்வேந்தேறிச்சீறிவெப்பமாம்படைகள்வீச
மாநிலங்காவல்பூண்டமானவரிருவர்தங்கள்
தானையுமுடைந்துதண்ணீர்நசைசுடச்சாம்பிற்றன்றே.

(இ-ள்.) கானல் தேர்மேல் - கானலாகிய தேரின்மேல், சூறைக்கால் என்னும் பாகன் தூண்ட - சூறைக்காற்றென்னும் பாகனிருந்துசெலுத்த, வேனில் வேந்து ஏறி சீறி - வேனிற்காலமென்னும் அரசனேறிக் கோபித்து, வெப்பம் ஆம்படைகள்வீச-வெம்மையாகிய ஆயுதங்களையெறிய, மாநிலம் காவல் பூண்ட - பெரியநிலவுலகைக்காக்கும், மானவர் இருவர் தங்கள் தானையும் - சோழபாண்டியர்களுடைய சேனையும், உடைந்து - (அவ்வெம்மைக்குத்) தோற்று, தண்ணீர்நசைசுட - நீரவேட்கைவருத்த, சாம்பிற்று - சோர்ந்தது.

வெம்மைக்குத்தோற்றமையால் தண்ணீர்நசைசுடச் சாம்பிற்று என்றார். கானல் தேர் ஆகவும், சூறைக்காற்றுப்பாகனாகவும், வேனில்வேந்தாகவும், வெப்பம்படைகளாகவும் மிகைகுறைவின்றிச் சமனாகவுருவகஞ்செய்தமையால் அவயவியுருவகவணி. (உ௭)

இரக்கமில்கொடியசெல்வர்மருங்குபோயிரப்பார்போல
உருப்பமொண்டிறைக்குங்கள்ளிநீழல்புக்கொதுங்குவாரும்
தருக்கறவிரப்பாலெய்த்தோர்தம்மினும்வறியர்பாற்சென்
றிரப்பர்போலிலைதீந்துக்கமரநிழலெய்துவாரும்.

(இ-ள்.) இரக்கம் இல் கொடியசெல்வர் மருங்குபோய் - இரக்கமில்லாத தீயசெல்வத்தையுடையவரிடத்துச்சென்று, இரப்பார்போல-இரப்பவர் சிறிது தீயபலனையடைதல்போல, உருப்பம் மொண்டு இறைக்கும் கள்ளி நீழல்புக்கு - வெப்பத்தைமொண்டுவீசுங் கள்ளிமரத்தினிழலிற்புகுந்து, ஒதுங்குவாரும் - நிழலுக்கொதுங்கி வெம்மையையடைகின்றவர்களும், தருக்கு அற இரப்பால் எய்த்தோர் - களிப்பில்லாமல் வறுமையிலிளைத்தவர்கள், தம்மின் உம் வறியர்பாற்சென்று - தம்மைப் பார்க்கிலு மிக்கவறியவரிடத்துச்சென்று, இரப்பர்போல் - இரப்பிற் பயன்பெறாமை போல, இலைதீர்ந்து உக்கமரம் நிழல் எய்துவாரும் - இலைகருகியுதிர்ந்த மரத்தினிழலில் நிழலுக்கடைந்து நிழல்பெறாதவரும்.

உவமைக்கும் பொருட்கும் ஒற்றுமையுண்மையால் உருப்பமொண்டிறைக்கும் என்னும் பொருளின்றொழிலால் தீயவழியினின்றீட்டிய பொருளுடையாரிடத்துச் சென்று இரப்பவர்சிறிது பயன்பெறினும் அது அவர்க்குத்தீமையை விளைவித்தலால் தீயபலன் எனவும், இரக்கமில் என்றமையால் சிறிது எனவும், உவமையின்றொழிலைப் பொருட்கேற்றி நிழல்பெறாதவரும் எனக்கூறினும். இவ்விரண்டும் தொழிலுவமையணிகள். (உ௮)

கொல்லியம்பரிமான்றேரின்குறுநிழலொதுங்குவாரும்
அல்லிருள்வட்டத்தோல்வெண்கவிகையுளடங்குவாரும்
செல்லிடம்பிறிதுகாணார்வீரவான்சென்றோர்நின்ற
கல்லுடனிழல்செல்வாருமாயினார்களமரெல்லாம்.

(இ-ள்.) கொல் இபம் - கொல்லாநின்றயானையும், பரிமான் தேரின் - குதிரைபூண்ட தேருமாகிய இவற்றின், குறுநிழல் ஒதுங்குவாரும் - சிறியநிழலிற்சென்று நிழலுக்கொதுங்குகின்றவர்களும், அல் இருள் வட்டத்தோலுள் - அந்தகாரம் போலும் இருண்டகேடகத்துள்ளும், வெண் கவிகையுள்-தவளவட்டக்குடையுள்ளும், அடங்குவாரும் - நிழலுக்கடங்குகின்றவர்களும், செல் இடம் பிறிதுகாணார்-நிழலுக்கொதுங்கும் வேறிடங்காணாராகி, வீரவான் சென்றோர் நின்ற - வீரசுவர்க்கஞ் சென்றோர் பெயர்பொறித்துநட்ட, கல் உடன் நிழல்செல்வாரும்-கற்களின்கீழ் நிழலுக் கொதுங்கச்செல்லுகின்றவர்களுமாக, களமர் எல்லாம் ஆயினார் - இரண்டுசேனைவீரர்களும் ஆயினார்கள்.

போர்க்களத்திற் புறங்கொடாதுயிர்விட்ட வீரர்போர்த்திறத்தைக் கல்லிலெழுதி யப்போர்க்களத்தில் நடுதல் வழக்காதலால் வீரவான்சென்றோர் நின்றகல் எனவும், பூதவுடம்பழியினும் பிரதாபவுடம்பழியாமையால் நின்ற எனவுங்கூறினார் "நந்தைகன்னின்றான்" எனவருதல்காண்க. உடன் ஏழனுருபு நிற்குமிடத்து மூன்றனுருபுநின்றது உருபுமயக்கம். (உ௯)

ஆயதோரமையந்தன்னிலளவிலாவுயிர்க்குமீன்ற
தாயனார்துலைபோயொர்க்குஞ்சமநிலையாயகூடல்
நாயனார்செழியன்றானைநனந்தலைவேதநாற்கால்
பாயதோர்தண்ணீர்ப்பந்தர்பரப்பியப்பந்தர்காப்பண்.

(இ-ள்.) ஆயது ஓர் அமையம் தன்னில் - இவ்வாறுண்சமையத்தில், அளவு இல்லாத உயிர்க்கும் - எல்லையில்லாத எல்லாவுயிர்களுக்கும், ஈன்றதாய் அன்னார் - பெற்றதாயைப்போலப் பெருங்கருணையையுடையவரும், துலைபோல் - துலையின்ற

யைப்போல, யார்க்கும் சமநிலை ஆய - எவர்க்கு நடுநிலையாயுள்ள, கூடல் நாயனூர் - மதுரையிலெழுந்தருளிய நாயனுருமாகிய சோமசுந்தரக்கடவுள், செழியன் தானை நனந்தலை - இராசேந்திரபாண்டியனுடைய சேனையின் நடுவில், வேதம் நாற்கால் பாயது ஓர் தண்ணீர்ப்பந்தர்பரப்பி - வேதநான்கும் நான்குகால்களாக நிலைபெற்ற தண்ணீர்ப்பந்தல்வைத்து, அ பந்தர் நாப்பண் - அப்பிரபையின் நடுவில்.

கொடியவரைத்தண்டித்தலும் காத்தலாதலால் அளவிலாவுயிர்க்குமீன்ற நாயனூர் எனவும், தனதிடத்துள்ள பொருள்களின் குறை மிகுதிகளைக் கொடுப்போனுக்குங் கொள்வோனுக்கும் நடுநின்று ஐயமறப் புலப்படுக் குந்துலைநாப்போலப்பகைநொதுமல் நட்பு என்னு மூவகைத்திறத்தையும் நோக்காது பாண்டிய சோழர்களுடைய குணங்குற்றங்களை நடுநின்று பலர்க்கும் புலப்படுத்தியருளினமையால் யார்க்கும் சமநிலையாய எனவும், பாண்டியன் நீதியையுடையோனுதலால் செழியன்தானை நனந்தலை தண்ணீர்ப்பந்தர்பரப்பிய எனவுங்கூறினர். (௩௦)

புண்டரநுதலுங்காதின்புறத்தணிமலரும்பாத
முண்டகமலர்மேலொற்றைக்கிண்கிணிமுழக்குங்கச்சியாப்
புண்டதோலுடையுங்கண்டோருள்ளமுங்கண்ணுங்கொள்ளை
கொண்டபுன்னகையுமுள்ளக்கருணையின்குறிப்புந்தோன்ற.

(இ-ள்.) புண்டரம் நுதல் உம் - திரிபுண்டரமணிந்தநெற்றியும், காதின் புறத்து அணிமலரும் - காதின்துளைப்புறத்தணிந்தமலரும், பாதம் முண்டகமலர்மேல் - பாததாமரைமலர்மேலணிந்த, ஒற்றைக்கிண்கிணி முழக்கு உம் - ஒற்றைச்சதங்கையின் கோஷமும், கச்சு யாப்புண்டதோல் உடையும் - கச்சைகட்டிய புலித்தோலாடையும், கண்டோர் உள்ளமும் கண்ணும் - பார்த்தோர்மனத்தையுங் கண்ணையும், கொள்ளை கொண்ட புல் நகையும் - கொள்ளைகொள்ளும் மந்தகாசமும், உள்ளம் கருணையின் குறிப்பும் - திருவுளத்திலெழுந்த அருளின்குறிப்பும், தோன்ற - (காண்போர்க்கு) புலப்பட.

தமதிச்சைக்கேற்ற திருவுருவங்கொண்டுவந்தனர் என்பார் இவ்வாறு கூறினுர். (௩௧)

அருமறையகத்துணின்றுங்கருந்தவராகிவேணிப்
பொருபுனல்பூரித்தாங்கோர்புண்ணியச்சிரகந்தாங்கி
யொருவருக்கொன்றேயாகியிலக்கருக்கிலக்கமாகித்
தருகுறும்புழையால்வாக்கித்தணித்தனர்தண்ணீர்த்தாகம்.

(இ-ள்.) அருமறை அகத்துள் நின்றது ஆங்கு - அரியவேதத்தினுள் கரந்து நின்றருளு நிலையைப்போல, அருந்தவர் ஆகி - (புறத்திலும) அரியதவவேடமுடையவராகி, வேணி பொருபுனல் பூரித்தது ஆங்கு - (தமது) சடையிலணிந்த கரையொடுமோதும் கங்கைநீரை நிரப்பியதுபோல, ஓர் புண்ணியம் சிரகம் தாங்கி - (நீர் நிரப்பிய) ஒப்பில்லாத புண்ணியவடிவாகிய நீர்க்கரகத்தையேந்தி, ஒருவருக்கு ஒன்றே ஆகி - ஒருவர்வந்தால் அவர்க்கு ஒன்ருய், இலக்கருக்கு இலக்கம் ஆகி - இலட்சம்பேர்வந்தால் அவர்களுக்கு இலட்சமாகி, தருகுறும்புழை ஆல் வாக்கி - தோன்றும் சிறியதுவாரங்களால் தண்ணீர்வார்த்து, தண்ணீர்த்தாகம் தணித்தனர் - (பாண்டியன்சேனைக்கு) தண்ணீர்வேட்கையையொழித்தருளினுர்.

வேதத்தில் பெருந்தவமுடையவர் என்று கூறப்பட்டிருத்தலால் அருமறையகத்தனின்றுங் கருந்தவராகியெனவும், தண்ணிதாயெவர்க்கும் நீர்வேட்கைமாற்றிக் குறைபாடின்றியிருத்தலால் வேணிப்பொருபுனல் பூரித்தாங்கோர் புண்ணியச்சிரகம் எனவும், சிரகம் ஒன்றேயாயினும் பலர்க்கும் பயன்படுதல் சிவபெருமான்மாயையின்வன்மையாலாதலால் ஒருவருக்கொன்றேயாகி யிலக்கருக்கிலக்கமாகித், தருகுறும்புழையால்வாக்கித் தண்ணீர்த்தாகம் தணித்தனர் எனவுங்கூறினர். (௩௨)

சுந்தரப்புத்தேள்வைத்ததுறுமலர்வாசந்தெண்ணீர்ப்
பந்தர்புக்கடைந்துநன்னீர்பருகியெய்ப்பகலவாற்றல்
வந்தபின்செழியன்றன்னோர்வளவன்மேலெறிச்சீறி
அந்தமிலனிகஞ்சிந்தித்தும்பைவேய்ந்தடுபோர்செய்தார்.

(இ-ள்.) சுந்தரப் புத்தேள் வைத்த - சோமசுந்தரக்கடவுள் வைத்தருளிய, துறு மலர் வாசம் - மணமிக்க மலரால்வாசமூட்டிய, தெள் நீர் பந்தர் புக்கு அடைந்து - தெள்ளிய தண்ணீர்ப்பந்தலைச்சென் றடைந்து, நல் நீர் பருகி - தண்ணிய நீர் குடித்து, எய்ப்பு அகல - இளைப்பு நீங்க, ஆற்றல் வந்த பின் - (நீர்வேட்கையால் முன்னிழந்த) வல்லமைவந்தபின்பு, செழியன் தன்னோர் - பாண்டியனுடைய சேனைவீரர்கள், வளவன் மேல் எறி - காடுவெட்டிய சோழன்மேல் போர்க்கெழுந்து, சீறி - கோபித்து, அந்தம் இல் அனிகம் - எல்லையில்லாத அவன்சேனைகளை, சிந்தி - புறங்காண, தும்பை வேய்ந்து - தும்பைமாலை சூடி, அடு போர் செய்தார் - கொல்லும் போர்த்தொழில்கள் செய்தார்.

வாசமூட்டியது மலராலென்பார் துறுமலர் எனவும், இழந்தவன்மைவந்தது பந்தலின் தண்ணிழலாலும் நீரின் தண்மைக்குணத்தாலும் என்பார் பந்தர்புக்கடைந்து நன்னீர்பருகி யெனவுங்கூறினர். தமர் என்றாற்போலச் செழியன் என்னும் ஒருமைக்கேற்பத் தன்னோர் எனவந்தது. போர்செய்தற் குறியை யுணர்த்துவது தும்பைமாலையாதலால் தும்பைவேய்ந்து என்றார். "அதிரப்பொருவது தும்பையாம்" என்பதனாலுணர்க. சிந்தி செயவெனெச்சத்திரிபு. (௩௩)

கடலுடைந்தென்னப்பொன்னிக்காவலன்றானைசாய
மடலுடைவாகைவேய்ந்துவளவனைமருகனோடு
மிடலுடைத்தறுகட்சேனைவீரர்வெங்கையாற்பற்றி
அடலுடைக்கன்னிநாடர்க்கரசன்முன்கொண்டுபோந்தார்.

(இ-ள்.) கடல் உடைந்தது என்ன - கடற்பெருக்கு நிலைகடந்து புறத்திற்செல்வதுபோல, பொன்னி காவலன் தானை சாய - காவிரித்துறைநாடனாகிய சோழன் சேனை புறங்கொடுக்க, மடல் உடைய வாகை வேய்ந்து - இதழ்நெருங்கிய வாகைமாலைசூடி, வளவனை மருகனோடும் - அச்சோழனை யவன்மருகனாகிய இராசசிங்கபாண்டியனோடு, மிடல் உடைய தறு கண் சேனைவீரர் - வன்மையை யுடைய அஞ்சாமைமிக்க பாண்டியன் சேனைவீரர்கள், வெம் கையால் பற்றி - தமது முருட்டுக் கைகளாற்பிடித்து, அடல் உடைய கன்னிநாடர்க்கு அரசன் முன் - வெற்றியையுடைய பாண்டிநாட்டார்க் கரசனாகிய இராசேந்திரபாண்டியன்முன், கொண்டுபோந்தார் - கொண்டுசென்றார்கள்.

தண்ணிழலும் தண்ணீரும் பெருமையால் சோழன்சேனை தோல்வியுற்றதெ ன்பார் சாய எனவும், சிவபெருமான் திருவருளால் வெற்றியடைந்ததென்பார் மிடலுடைவாகைவேய்ந்து எனவும், தமதரசனுக்குப் பெருமகிழ்ச்சி தந்தனர் என்பார் வளவனை மருகனோடுவெங்கையாற்பற்றிக் கன்னிநாடர்க்கரசன்முன் கொண்டுபோந்தார் எனவுங்கூறினர். வாகைமாலைவெற்றி குறிப்பதற்கோரறிகுறி "போர்க்களத்துமிக்கோர் - செருவென்றதுவாகையாம்" என்பதனாலுணர்க. (௬௪)

கொடுவந்தவளவன்றன்னைக்கோப்பெருஞ்செழியர்கோமான்
வடுவந்ததம்பியோடுமாடநீள்கூடன்மேய
கடுவந்தமிடற்றான்முன்போய்விடுத்தெந்தைகருத்தியாதென்ன
நடுவந்தநிலையான்கேட்பநாயகனிகழ்த்துமன்றே.

(இ-ள்.) கொடுவந்த வளவன் தன்னை-தனதுசேனாவீரர்கள் பற்றிவந்த சோழனை, கோ பெருஞ் செழியர் கோமான் - அரசியலையுடைய பெரியபாண்டியர்களுட் சிறந்த இராசேந்திரன், வடு வந்த தம்பியோடு - (தனது குடிப்பிறப்பிற்கு) குற்றம் வருவித்த தனதுதம்பியோடு, மாடம் நீள் கூடல் மேய - மாடங்களுயர்ந்த மதுரையிலெழுந்தருளிய, கடு வந்த மிடற்றான் முன் போய் விடுத்து - விஷந்தங்கிய ஸ்ரீகண்டத்தையுடைய சோமசுந்தரக்கடவுள் சந்நிதியிற்சென்று விடுத்து, எந்தை - என் தந்தையே, கருத்து யாது என்ன - நின்திருவுளம் யாதென்று, நடு வந்த நிலையான் கேட்ப - நடுநிலைமையையுடைய அப்பாண்டியன் குறையிரக்க, நாயகன் நிகழ்த்தும்- அச்சோமசுந்தரக்கடவுள் கூறுகின்றார்.

மூத்தோனுக்கென வரையறுத்த சோழன்புதல்வி தனக்கு அன்னையாகக் கருதாது அவனறியாதுசென்று மணம்புணர்ந்ததும் அமையாது மூத்தோனரசியலையுங் கவரக்கருதினானாதலால் வடுவந்ததம்பியெனவும், தனக்குவந்த வெற்றி சிவபெருமான் திருவருளாலாதலால் கடுவந்தமிடற்றான்முன்போய்விடுத்து எனவும், சிவநேயம் உள்ளவழி அரசியலுக்குரிய நடுநிலைமையு நிரம்பும் ஆதலால் நடுவந்தநிலையான்கேட்ப எனவுங்கூறினர். (௬௫)

அறவனீயல்லையோவுன்னகத்தினுக்கிசைந்தசெய்கென்
றிறைவனதருளால்வானின்றெழுமொழிகேட்டுவையைத்
துறைவனுமறத்தினாற்றாற்சோழனைச்சிலமால்யானை
மறவயப்பரிபூண்மற்றும்வழங்கினான்விடுத்தான்பின்னர்.

(இ-ள்.) நீ அறவன் அல்லையோ - நீ மனுநீதியினின்று பிறழாதவனல்லவோ, உன் அகத்தினுக்கு இயைந்த செய்க என்று - உன் கருத்துக்கிசைந்த காரியத்தைச் செய்யக்கடவாயென்று, இறைவனது அருளால் - இறைவன்திருவருளால், வான் நின்று எழு மொழி கேட்டு - ஆகாயத்தினின்றெழும் அசரீரியைக் கேட்டு, வையைத் துறைவனும் - வையைத்துறையையுடைய பாண்டியனும், அறத்தின் ஆறு ஆல் - மநுநூலிற்கூறிய அறத்தின்வழியால், சோழனை - காடுவெட்டிய சோழனுக்கு, சில மால் யானை - (அவனிழந்த) மதமயக்கத்தையுடைய சிலயானைகளையும், மறம் வயம் பரி - வெற்றியையும் வன்மையையுமுடைய சிலகுதிரைகளையும், பூண் - ஆபரணங்களையும், மற்றும் - வேறுள்ளனவற்றையும், வழங்கினான் விடுத்தான் - கொடுத்தனுப்பினான், பின்னர் - பின்பு.

சிவபுண்ணியமேலீட்டினனென்பார் அறவனீயல்லையோவெனவும், அப்புண்ணியமுடையோன் சிறிதுந் தீமைகருதானென்பார் அகத்தினுக்கிசையசெய்க வென

வும், சோழன் சிவநேயமுடையவனும் அவனுக்கு மாமனும் ஆதலால் அச்சிவபெருமானருளிய வழியினின்று இடையூறுசெய்யாது உபகரித்தனன் என்பார் சிலமால்யானை மறவயப்பரிபூண்மற்றும் வழங்கினான்விடுத்தான் எனவுங்கூறினார். சோழனை ஐ உருபுமயக்கம். விடுத்தான் முற்றெச்சம். (கூசு)

வள்ளறன்றம்பியென்னுமன்னவர்சிங்கந்தன்னைத்
தள்ளருந்தறுகணாண்மைத்தருக்கறத்தானுள்செல்வம்
உள்ளனசிறிதுமாற்றியொதுக்கியெவ்வுயிர்க்குந்தாயாய்ப்
பள்ளநீரகலங்காத்துப்பல்வளம்பழுக்கவாழ்ந்தான்.

(இ-ள்.) வள்ளல் - இராசேந்திரபாண்டியன், தன் தம்பி என்னும் மன்னவர் சிங்கம் தன்னை-தனது தம்பியாகிய அரசசிங்கத்தை, தள்ளரும் தறுகண் - நீங்குதலில்லாத அஞ்சாமையும், ஆண்மைத் தருக்கு அற - ஆண்மைச்செருக்கும்(அவனுக்கு) நீங்க, தான் ஆள் செல்வம் உள்ளன - தானாளுஞ் செல்வமாயுள்ள நிலமுதலியபொருள்களுள், சிறிது ஆற்றி ஒதுக்கி - சிறிதுகொடுத் தொதுக்கி, எ உயிர்க்கும் தாய் ஆய்-எல்லாவுயிர்களுக்குந் தான் தாயாகி, பள்ளம் நீர் அலகம் காத்து-கடல்சூழ்ந்த நிலவுலகைக்காத்து, பல் வளம் பழுக்க வாழ்ந்தான் - பலவளங்களும் (தனதுகுடிகளுக்குக்) கைகூடிவாழத் தானும் வாழ்ந்தான்.

தன்னொடுமுரணிநின்றானாயினும் மூத்தோன் தன்பின்னோனை நல்வழிப்படுத்த ஒருவாறு ஒறுக்கவேண்டுதலால் தருக்கறத்தானுள்செல்வம் உள்ளனசிறிதுமாற்றி யெனவும், அதனால் உரிமைகெடுதலால் ஒதுக்கி யெனவும், தன்கோற்கீழ்வாழுங் குடிகள் முட்டின்றிவாழ்தலே யரசன் பெருவாழ்வாதலால் பல்வளம்பழுக்கவாழ்ந்தானெனவுங் கூறினார். தானுள்செல்வமுள்ளன என்றது பொன், பூண், ஆடை,தேயமுதலியன "கிளர்வேந்தன்றன்னாடு - வாட்டானன்றென்றல்வனப்பு" என்பதனால் உணர்க. உம்மை அசைநிலை. (கூஎ)

தண்ணீர்ப்பந்தல்வைத்தபடலம் முற்றிற்று.

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - கஅ௫௫.

முப்பத்தாறாவது

## இரசவாதஞ்செய்தபடலம்.

கலிநிலைத்துறை.

வரதன்மீனவன்படையிடைவந்துநீர்ப்பந்தர்
விரதனாகிநீராருத்தியவினையுளாசெய்தும்
பரதநூலியனாடகப்பாவையாளொருத்திக்
கிரதவாதஞ்செய்தருளியவாடலையிசைப்பாம்.

(இ-ள்.) வரதன் - வள்ளலாகிய சோமசுந்தரக்கடவுள், மீனவன் படை இடை வந்து - இராசேந்திரபாண்டியன் சேனைநடுவில் வந்து, நீர்ப்பந்தர் விரதன்

ஆகி - தண்ணீர்ப்பந்தல்வைத்த தவவேடமுடையவராகி, நீர் அருத்திய வினை-நீர்பருகுவித்த திருவிளையாடலை, உரை செய்தும் - கூறினோம், பரத நூல் இயல் - பரதநூலிலக்கணமமைந்த, நாடகம் பாவையாள் ஒருத்திக்கு - நாடகத்தில்வல்ல பதுமைபோன்ற ஒருபெண்பொருட்டு, இரதவாதம் செய்தருளிய ஆடலை - ரசவாதஞ்செய்தருளிய திருவிளையாடலை, இசைப்பாம் - இனிக்கூறுவாம்.

தம்மையடைந்தவர்க்குப் பெருங்கொடையையுடையவர் என்பார் வரதன் எனவும், அப்பெயர்ப்பொருளைப் பாண்டியனிடத்துப் புலப்படப் பலர்க்குமுணர்த்தினார் என்பார் படையிடைவந்து நீரருத்திய எனவுங் கூறினார். (க)

பருங்கைமால்வரைப்பூழியன்பைந்தமிழ்நாட்டின்
இரங்குதெண்டிரைக்கரங்களாலீர்ம்புனல்வையை
மருங்கினந்தனமலர்ந்தபன்மலர்கடூஉய்ப்பணியப்
புரங்கடந்தவனிருப்பதுபூவணநகரம்.

(இ-ள்.) பருங் கை - பருத்த துதிக்கையையுடைய, மால் வரை - கரியமலைபோன்ற யானைச்சேனையையுடைய, பூழியன் பைந்தமிழ் நாட்டின் - இராசேந்திரபாண்டியனுடைய பாண்டிநாட்டில், ஈர்ம்புனல் வையை - குளிர்ந்த நீர்மயமாகிய வையைநதியானது, இரங்கு தெள் திரை கரங்களால் - ஒலிக்குந் தெள்ளிய அலைகளாகிய கைகளால், மருங்கில் - பக்கத்திலுள்ள, நந்தனம் மலர்ந்த பல் மலர்கள் தூய் - நந்தவனங்களில்மலர்ந்த பலமலர்களைச்சிந்தி, பணிய - வணங்க, புரம் கடந்தவன் இருப்பது - திரிபுரங்களை நகைத்தெரித்தருளிய பெருமானார் எழுந்தருளியிருக்குமிடம், பூவண நகரம் - திருப்பூவணமென்னும் நகரமாம்.

பிரமன் முதலிய பலரும் வழிபட்டுய்தற்குரிய பெருமானார் என்பது தோன்ற வையைதெண்டிரைக்கரங்களால் மலர்கடூஉய்ப்பணிய என்றார். (உ)

எண்ணிலங்குறைசராசரமிலிங்கமென்றெண்ணி
விண்ணினாள்களுங்கோள்களும்விலங்குவதியாக்கைக்
கண்ணினான்கதிர்முதல்பலகடவுளர்பூசை
பண்ணிவேண்டியநல்வரமடைந்ததப்பதியில்.

(இ-ள்.) அங்கு உறை - அங்குவசிக்கும், எண் இல் - அளவில்லாத, சராசரம் - சராசரங்களை, இலிங்கம் என்று எண்ணி - இலிங்கமூர்த்தங்களென்று கருதி, விண்ணின் நாள்களும் கோள்களும் விலங்குவது - ஆகாயத்திற் சஞ்சரிக்கும் நட்சத்திரங்களும் சூரியன்முதலிய நவகோள்களும் (பாதபரிசம்படாமல் மேலே) பிரதக்ஷிணம்செய்யும்படி யுள்ளது, யாக்கைக் கண்ணினான் கதிர் முதல் பல கடவுளர் - இந்திரன் சூரியன்முதலிய பலதேவர்களும், பூசை பண்ணி - பூசைசெய்து, வேண்டிய நல் வரம் அடைந்தது - (தத்தமக்கு) வேண்டிய நல்லவரங்களைப் பெறவுள்ளது, அ பதியில் - (அத்தன்மையையுடைய) அந்நகரில்.

அத்திருநகரெல்லைக்குளுள்ள சராசரங்கள் யாவும் சிவலிங்கத்தோற்றமாதலால் பாதபரிசம்படாமல் பிரதட்சிணம்செய்வதென்பதுதோன்ற விலங்குவதெனவும், சிவபெருமான் திருநாமம் சூரியநாதர் என்பதுதோன்றக் கதிர்முதல் பலகடவுளர்பூசைபண்ணி நல்வரமடைந்தது எனவுங்கூறினார். (௩)

கிளியுளார்பொழிற்பூவணக்கிழவர்தங்கோயிற்
றளியுளார்தவப்பேறனைாதுகுபூங்கார்

அளியுளார்குழலணங்கனாளந்தரத்தவர்க்குங்
களியுளார்தரமயக்குறூஉங்கடலமுதனையாள்.

(இ-ள்.) கிளி உள் ஆர்பொழில் - கிளிகள் தன்னுள்ளே நிறைந்துவசிக்குஞ் சோலைசூழ்ந்த, பூவணக்கிழவர் தம் கோயில் தளியுள்ளார் - திருப்பூவணத்திலெழுந் தருளிய பெருமானார் திருக்கோயிற் புறப்பணியினின்ற பரத்தையர்கள் (வருந்திச் செய்த) தவப்பேறு அன்னாள் - தவப்பலனையொத்தவளும், தாது உகு பூந்தார்-மக ரந்தம்சிந்து மலர்மாலையில், அளி உள் ஆர்குழல் அணங்கு அன்னாள் - வண்டுகளுள் ளேபொருந்தி யிசைபாடும் கூந்தலையுடைய கொல்லியம்பாவையையொத்தவளும், அந்தரத்தவர்க்கும் - விண்ணுலகில்வசிக்குந் தேவர்களுக்கும், உள் களி ஆர்தர-மன த்திற் களிப்புமிக, மயக்குறும் கடல் அமுது அனையாள் - மயக்குங்கடலிற்றோன்றிய அமுதத்தையொத்தவளும்.

எல்லாப்போகங்களுள்ளும் தேவர்களுக்கு அமிர்தம் பெரும்போகம் ஆத லால் கடலமுதனையாள் என்றார். (௪)

நரம்பினேழிசையாழிசைப்பாடலுநடநூல்
நிரம்புமாடலும்பெண்ணலநீர்மையும்பிறவும்
அரம்பைமாதரையொத்தனளறனெறியொழுகும்
வரம்பினாலவர்தமக்குமேலாயினாண்மன்னோ.

(இ-ள்.) நரம்பின் ஏழிசை யாழ் இசைப்பாடலும் - நரம்பின்கண்ணமைந்த குரல்முதலிய ஏழிசைகளையுடையயாழ்வழிப்படும் இசைநிரம்பியபாடலினும், நடம் நூல் நிரம்பும் ஆடலும் - பரதநூலின்விதியினிரம்பிய ஆடலினும், பெண் நலம் நீர் மையும் - பெண்ணிலக்கணத்தன்மையினும், பிறவும் - அவையொழிந்தனவற்றினும், அரம்பைமாதரை ஒத்தனள் - அரம்பையரையொத்தவளும், அறன் நெறி ஒழுகும் வரம்பினால் - சிவபுண்ணியவழியிற்செல்லும் கட்டுப்பாட்டால், அவர் தமக்கு மேல் ஆயினாள் - அவ்வரம்பையர்க்கு மேற்பட்டவளும்.

குரல்முதலிய ஏழிசைகளுக்குந் தானம் நரம்புகளாதலால் நரம்பினேழிசை யெனவும், அவ்விசையினின்று எழும்பண்கள் அகநிலை மருதமும் புறநிலைமருதமும் அருகியன்மருதமும் பெருகியன்மருதமும் என நால்வகைப்பட்டுப் பருந்தினிழல் போலப் பாடலொடுசெல்லுதலால் இசைப்பாடலும் எனவும், சுரங்களின்கணித மாகிய எண்ணும், குற்றெழுத்துமுதலிய எழுத்துக்களும், சுரதமுதலிய ஐந்திலக்க ணங்களும், அகநிலைமருதமுதலிய நான்குபணங்களும், அல்லியமுதலிய பதினொரு கூத்தும் அவளாடலில் விதிவழிநிற்றலால் நடநூல் நிரம்பும் ஆடலும் எனவும், இவ ற்றோடு பெண்ணிலக்கணமுடைமை யரிதாதலால் பெண்ணல நீர்மையும் எனவும், இவற்றிற்குரிய நடைமுதலியன வேண்டுதலால் பிறவும் எனவும், இவற்றையொரு சேரவுடைமையால் அரம்பைமாதரை யொத்தனள் எனவும், அவர்கள்போல அத னையே பொருளெனக்கருதித் தருக்கடையாது சிவபுண்ணியத்தின் வழிநடக்குங் கட்டுப்பாட்டால் அவர்தமக்குமேலாயினாள் எனவுங்கூறினார். குரல்முதலிய ஏழிசை களாவன குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம். (௫)

ஆயமாதர்பேர்பொன்னனையாளென்பவவடன்
னேயவாயமோடிரவிருணீங்குமுன்னெழுந்து
தூயநீர்குடைந்துயிர்புரைசுடர்மதிக்கண்ணி
நாயனாடியருச்சனைகியமமுநாட்டி.

(இ-ள்.) ஆயமாதர்பேர் பொன்னனையாள் என்ப - ஆகிய அப்பெண்ணின் பெயர் பொன்னனையாளென்று கூறுவர், அவள் தன் நேயம் ஆயம் ஓடு - அவள்தன் னுடைய அன்பிற்சிறந்த தோழியர்கூட்டத்தோடு, இரவு இருள் நீங்குமுன் எழுந்து - இராவின் இருள்புலர்தற்குமுன் துயிலுணர்ந்து, தூய நீர்குடைந்து - தெளிந்து புனிதமாகியநீரில்மூழ்கி, உயிர்புரை சுடர்மதிக்கண்ணி நாயனார் - உயிரையொத்தவி ளங்கும் சந்திரனைமாலையாகவணிந்த சிவபெருமானுடைய, அடி அருச்சனைநிய மமும் நடத்தி - திருவடிக்கருச்சனைபுரியுங் கட்டுப்பாட்டையுமுடித்து.

மனம சலனமின்றி நிற்றற்குரியகாலம் வைகறையாதலால் இரவிருணீங்கு முன்னெழுந்து எனவும், கன்மமலத்தைப்போக்கி யுயிர்க்குறுதிபயப்பது சிவார்ச்சனையாதலால் நீர்குடைந்து நாயனாரடி யருச்சனைநியமமு நடத்தியெனவுங்கூறினார்.

திருத்தர்பூவண வாணரைச்சேவித்துச்சுத்த
நிருத்தமாடிவந்தடியரைப்பொருளெனநினையுங்
கருத்தளாயருச்சித்தவர்களிப்பவின்சுவையூ
ணருத்தியெஞ்சியதருந்துவாளஃதவணியமம்.

(இ-ள்.) திருத்தர் பூவண வாணரை சேவித்து - புனிதமுடையவராகிய திருப்பூவணநகரில்வசிக்கும் சிவபெருமானைவணங்கி, சுத்த நிருத்தம் ஆடி வந்து-(நியமமாக) சுத்தநடனம் சந்நிதியில் ஆடிமுடித்து, அடியரை பொருள் என நினையுங் கருத்தளாய் - சிவனடியவரைச் சிவமென நினைக்குங் கருத்துடையவளாய், அருச்சித்து அவர் களிப்ப - அருச்சனைசெய்து அவர்கள் மகிழ்கூர, இன் சுவை ஊண் அருத்தி - இனியசுவையமைந்த கறிகளோடு அமுதுசெய்வித்து, எஞ்சியது அருந்துவாள் - சேடமாயுள்ளதை யுண்பாள், அவள் நியமம் அஃது - அப்பொன்னனையாள் கடமை யதுவாம்.

சுத்தநிருத்தம் நூற்றெட்டுக் கரணமுடையதாய்ச் சாந்திக்கூத்தின் ஒன்றாகிய சொக்கம் ஆதலால் சுத்தநிருத்தம் ஆடிவந்து எனவும், சுத்தத்துவ புவனத்திலிருக்கு மிறைவன் புறத்தே ஆன்மாக்கள் தன்னையுணர்ந்து வழிபட்டுய்ய அடியவர் திருவேடத்துவசித்தருளுதலால் அடியரைப் பொருளென நினையுங் கருத்தளாய் எனவும், அடியாரிடத்து அனபுடையோர் சிவபெருமானிடத் தன்புடையவராதலால் அருச்சித்தெனவும், யாதுகுறையுளதெனினும் நூல்முகத்தாலன்றி அன்றேகழிவதாதலால் அவர்களிப்பவின்சுவையூணருத்தியெனவும், பிறவிப்பிணிக்கு மருந்தாதலால் எஞ்சியதருந்துவாளெனவுங் கூறினார் "ஈசனுக்கன்பில்லா ரடியவர்க்கன்பில்லார்" எனவரும் ஏதுவாலுணர்க. (எ)

மாதரிந்நெறிவழங்குநாண்மற்றவளன்பைப்
பூதலத்திடைத்தெருட்டுவார்போன்மலைவல்லி
காதனாயகர்திருவுருக்காணியவுள்ளத்
தாதரங்கொடுத்தருளினார்பூவணத்தையர்.

(இ-ள்.) மாதர் - பொன்னனையாள், இந்நெறி வழங்கும் நாள் - இச்சிவனடியார் திறத்துப் பத்திபூண்டொழுகும்வழியில் சிறிதுந் தவறாது நடக்குங்காலத்தில், பூவணத்து ஐயர் - திருப்பூவணத்திலெழுந்தருளிய இறைவர், அவள் அன்பை பூதலத்து இடை தெருட்டுவார் போல் - அப்பொன்னனையாள் அடியார்பாற்கொண்ட பத்தியை யுலகினரறிந்துய்யத் தெளிவிப்பவர்போல, மலை வல்லி காதல் நாயகர் - உ

மாதேவியாரது விருப்பமிக்க தலைவராகிய அச்சிவபெருமானுர், திரு உரு காணிய- தமது திருவுருவம் சமைக்க, உள்ளத்து ஆதரம் கொடுத்தருளினுர்-அவள்மனத்தில் பெரியவிருப்பந் தந்தருளினுர்.

மாதர் இறுதிநிலைப் போலியாதலால் அவள் என ஒருமையீறு தோன்றக் கூறினுர். (அ)

ஐயர்தந்தபேரன்புருவாயினுண்மழுமான்
கையர்தந்திருவுருவினைக்கருவினுற்கண்டு
மையகண்ணினுள்வைகலும்வருபொருளெல்லாம்
பொய்யிலன்புகொண்டன்பர்தம்பூசையினேர்வாள்.

(இ-ள்.) மைய கண்ணினுள் - மையெழுதிய கண்களையுடைய பொன்னனையாள், ஐயர் தந்த பேர் அன்பு உரு ஆயினுள் - திருப்பூவணப்பெருமானுர் தந்தருளிய பெரிய அன்பே ஒருவடிவுடையவளாகி, மழு மான் கையர் தம் திரு உருவினை-மழுவையு மானையு மேந்திய திருக்கரங்களையுடைய அப்பெருமானுரது திருவுருவத்தை, கருவினுல் கண்டு - கருக்கட்டி, வைகலும் வரு பொருள் எல்லாம் - (ஆடல்பாடல்களால்) நாள்தோறும் வரும் பொருள்களையெல்லாம், பொய் இல் அன்பு கொண்டு-மெய்யன்பால், அன்பர் தம் பூசையின் நேர்வாள் - அடியவர்பூசைத்திறத்திற் செலுத்துவாள்.

சிவபெருமானுர் திருவுருவம்என்று முடிப்போம்என்னும் ஏக்கறவுடைமையால் அன்புருவாயினுள் என்றுர். (க)

அடியர்பூசனைக்கன்றியெஞ்சாமையாலடிகள்
வடிவுகாண்பதெப்படியென்றுமடியிலச்செழியற்
கொடிவில்பொற்கிழிநல்கியவள்ளலையுன்னிப்
பிடியனுளிருந்தாளஃதறிந்தனன்பெருமான்.

(இ-ள்.) பிடி அன்னுள் - பெண்யானையையொத்த நடையையுடைய பொன்னனையாள், அடியர் பூசனைக்கு அன்றி - சிவனடியவர் திறத்துச் செய்யும் பூசைக்கல்லாமல், எஞ்சாமையால் - மீதிப்படாமையால், அடிகள் வடிவு காண்பது எப்படியென்று - சிவபெருமானுர் திருவுருச்சமைப்பதெவ்வாறென்று, மடி இல் அ செழியற்கு - (சிவநேயத்தில்) சோம்பாத அந்தக் குலபூஷண பாண்டியனுக்கு, ஒடிவு இல் பொற் கிழி நல்கிய வள்ளலை உன்னி - எடுக்கக் குறையாத பொற்கிழியருளிய சோமசுந்தரக்கடவுளைக்கருதி, இருந்தாள்-இருந்தனள். பெருமான் அஃது அறிந்தனன்- அப்பெருமானுர் அதனைத் திருவுளத்திற்கொண்டனர்.

தன் கோற்கீழ்வாழுங் குடிகள் வருத்தங்கண்டு பெருங்கவலையுற்றபாண்டியன் வறுமையொழித் தருளியதுபோலத் தன்குறைபாடொழித்தருளக் கருதினளென்பார் மடியிலச்செழியற்-கொடிவில்பொற்கிழிநல்கியவள்ளலையுன்னியெனவும், உயிர்க்குயிராய் நிற்பார் என்பார் அஃதறிந்தனன்பெருமான் எனவுங் கூறினுர். (௰)

தூயநீறணிமெய்யினர்கட்டங்கந்தொட்ட
கையர்யோகபட்டத்திடைக்கட்டினர்பூதிப்
பையர்கோவணமிசையசையுடையினர்பவளச்
செய்யவேணியரங்கொருசித்தராய்வருவார்.

(இ-ள்.) தூய்ய நீறு அணி மெய்யினர் - களங்கமில்லாத திருநீறணிந்த திருமேனியையுடையவரும், கட்டங்கம் தொட்ட கையர் - மழுவேந்திய திருக்கரத்தையுடையவரும், யோகபட்டத்து இடைக் கட்டினர் - யோகபட்டிகையால் இடைக்கட்டையுடையவரும், பூதி பையர் - திருநீற்றுப்பையையுடையவரும், கோவணம் மிசை அசை உடையினர் - கோவணமீதசைத்த ஆடையையுடையவரும், பவளம் செய்ய வேணியர் - பவளம்போலச் செந்நிறம்வாய்ந்த சடையையுடையவருமாய், அங்கு ஒரு சித்தர் ஆய் வருவார் - அவ்விடத்து ஒரு சித்தமூர்த்திகளாகவந்தருளுவார்.

ஆய் செயவெனெச்சத்திரிபு. (௧௧)

வந்துபொன்னனையாண்மணிமாளிகைகுறுகி
யந்தமின்றிவந்தமுதுசெய்வாரொடுமணுகிச்
சிந்தைவேறுகொண்டடைந்தவர்திருவமுதருந்தா
துந்துமாளிகைப்புறங்கடையொருசிறையிருந்தார்.

(இ-ள்) வந்து - (அத்திருவுருவோடு) வந்தருளி, பொன்னனையாள் மணிமாளிகை குறுகி - பொன்னனையாளுடைய அழகிய வீட்டினைச் சமீபித்து, அந்தம் இன்றி வந்து அமுது செய்வார் ஒடும் அணுகி - எல்லையில்லாதுவந் தமுதுசெய்யும் அடியவரோடும் வந்து, சிந்தை வேறுகொணடு அடைந்தவர் - திருவுளத்தில் மற்றொன்று கருதி யடைந்த சித்தமூர்த்திகள், திரு அமுது அருந்தாது - திருவமுதுண்ணாது, உந்து மாளிகை புறம் கடை - ஒளிவீசு மாளிகையின் கடைவாயிலில், ஒரு சிறை இருந்தார் - ஒருபக்கத்திருந்தார்.

தமது திருவுருவஞ் சமைக்கப் பொன்னனையாள் மனையிலுள்ள உலோகங்களைப் பொன்னாக்கி யருளவந்தவராதலால் சிந்தைவேறுகொண் டடைந்தவர் என்றார். (௧௨)

அமுதுசெய்தருந்தவரொலாமகலவேறிருந்த
வமுதவாரியையடிபணிந்தடிச்சியரைய
வமுதுசெய்வதற்குள்ளெழுந்தருள்கெனவுங்க
ளமுதனூனையிங்கழைமினென்றருளலுமனையார்.

(இ-ள்.) அருந்தவர் எல்லாம் அமுது செய்து அகல - செய்தற்கரிய தவத்தையுடையவரெல்லாம் திருவமுதுசெய்து செல்ல, வேறு இருந்த அமுத வாரியை - வேறிடத்திருந்த அமுதவெள்ளமாகிய சித்தமூர்த்திகளை, அடிச்சியர் அடி பணிந்து - குற்றேவல்செய்யும் பெண்கள் திருவடிவணங்கி, ஐய - ஐயனே, அமுது செய்வதற்கு உள் எழுந்தருள்க என - அமுதுசெய்தருளுதற்கு உள்ளெழுந்தருளக் கடவீரென்று வேண்ட, உங்கள் அமுது அன்னானை - உங்கள் அமுதமொத்த உருவம்வாய்ந்த பொன்னனையாளை, இங்கு அழைமின் என்று அருளலும் - இங்கு அழையுங்க ளென்று கூறியருள, அனையார் - குற்றேவல்செய்யும் அப்பெண்கள்.

தமது அடியவர்க் கினியவளாதலால் அமுதன்னாள் என்றார். (௧௩)

முத்தராமுகிழ்வாணகையல்குலாய்முக்க
ணத்தரானவர்தமரொலாமமுதுசெய்தகன்றார்
சித்தராயொருதம்பிரான்சிறுநகையினரா
யித்தராதலத்தரியராயிருக்கின்றாரொன்றார்.

(இ-ள்.) முத்து - முத்தினையொத்த, வாள் - ஒள்ளிய, முகிழ்நகை - புன்னகையையும், அரா அல்குலாய் - பாம்பின் படத்தையொத்த அல்குலையுமுடைய எம து தலைவியே, முக்கண் அத்தர் ஆனவர் தமர் எல்லாம - திரிநேத்திரங்களையுடைய சிவபெருமானு ரடியவரெல்லாம், அமுது செய்து அகன்றார் - திருவமுதுசெய்து சென்றருளினார்கள், சித்தர் ஆய் ஒரு தமபிரான் - சித்தமூர்த்திகளாய்வந்த ஒருதம்பிரானார், சிறு நகையினர் ஆய் - புன்னகையுடையவராய், இத் தராதலத்து அரியர் ஆய் - இந்நிலவுலகில் கிடைத்தற்கரியவராய், இருக்கின்றார் என்றார் - இருக்கின்றனரென்று கூறினார்கள்.

பெறுதற்கரிய திருவுருவாய்ந்து வந்தனராதலால் இததராதலத்தரியராய் எனவும், தம்பிரான் உயர்திணை யியற்பெயர் ஆதலால் சிறுநகையினராய் எனவுங் கூறினார். "கோவந்தான், கோவந்தார்" எனவருதல் காண்க. (கச)

நவமணிக்கலன்பூத்தபூங்கொம்பரினடந்து
துவரிதழ்க்கனிவாயினுள்சுவாகதங்கிலவென்
றுவமையற்றவர்க்கருக்கியமாசனமுதவிப்
பவமகற்றியவடிமலர்முடியுறப்பணிந்தாள்.

(இ-ள்.) நவ மணிக் கலன் பூத்த பூங் கொம்பரின் - நவமணிகளழுத்திய ஆபரணமலர்ந்த பூங்கொமபுபோல, நடந்து - சென்று, துவர் இதழ் கனி வாயினுள் - பவளம்போன்ற இதழையுடைய கோவைக்கனிபோன்ற தனதுவாயால், சுவாதகங் கில என்று - (உமதுவரவு) நல்லவரவல்லவா என்று, உவமை அற்றவர்க்கு - ஒப்பில்லாத சித்தமூர்த்திகளுக்கு, அருககியம் ஆசனம் உதவி - அருககியத்தையும் ஆசனத்தையுங் கொடுத்து, பவம் அகற்றிய அடிமலர் - (அடைந்தவர்) பிறப்பையொழிக்கும் திருவடித்தாமரையை, முடி உற பணிந்தாள் - தனது தலைகூடப்பணிந்தனள்.

அருக்கியம் என்ற ஏதுவால் பாத்தியம், ஆசமனியமுங்கொள்க. தம்மை யடைந்தோர் பிறவிக்கடல் கடததற் கோர்மரக்கலம் ஆதலால் பவமகற்றிய வடிமலர் என்றார் "பிறவிப்பெருங்கடனீந்துவர்நீந்தார்-இறைவனடிசேராதார்" என்ற ஏதுவா லுணர்க. நவமணிக்கலன்பூத்த பூங்கொம்பர் என்றது இல்பொருளுவமையணி. (கரு)

எத்தவஞ்செய்தேனிங்கெழுந்தருளுதற்கென்றுச்
சித்தர்மேனியும்படிவெழிற்செல்வமுநோக்கி
முத்தவாணகையரும்பநின்றஞ்சலிமுகிழ்ப்ப
வத்தர்நோக்கினாருட்கணாலருள்வலைப்பட்டாள்.

(இ-ள்.) அருள் கண்ணால் அருள் வலைப் பட்டாள் - சித்தமூர்த்திகள் திருவருட்பார்வையினால் அவரது அருள்வலையி லகப்பட்ட பொன்னனையாள், இங்கு எழுந்தருளுதற்கு - அடியேன் சிறுகுடிலுக்கு எழுந்தருள, எத் தவம் செய்தேன் என்று - என்னதவஞ்செய்து முடித்தேனென்று, சிததர் மேனியும் - சித்தமூர்த்திகள் திருமேனியையும், படிவம் எழில் செல்வம் உம் - திருவுருவத்தினழகின்பெருக்கையும், நோக்கி (கண்குளிர) பார்த்து, முத்தம் வாள் நகை அரும்ப நின்று-முத்தினையொத்த ஒள்ளிய புன்னகைதோன்ற நின்று, அஞ்சலி முகிழ்ப்ப - தனதுகரங்குவிக்க, அத்தர் நோக்கினார் - சித்தமூர்த்திகள் பார்த்தருளினார்.

பார்த்தற்கரிய திருவுருவத்தைப் பார்த்து வியப்படைந்தனளென்பார் முத்தவாணகையரும்பநின்று என்றார். (கசு)

ஐயவுள்ளெழுந்தருளுகவடிகணீரடியே
னுய்யவேண்டியபணிதிருவுளத்தினுக்கிசையச்
செய்யவல்லனென்றஞ்சலிசெய்யவுண்ணகையா
மையனோக்கியைநோக்கிமீனோக்கிதன்மணாளன்.

(இ-ள்.) அடிகள் நீர் - அடிகளே நீங்கள், உள் எழுந்தருளுக - உள்ளெழுந்தருளக்கடவீர், அடியேன் உய்ய வேண்டிய பணி - அடியேனாகிய யான் பிழைக்க வேண்டிய பணிவிடையை, திரு உளத்தினுக்கு இசைய செய்யவல்லன் என்று-உமது திருவுளத்தினுக்குப் பொருந்தச்செய்யவல்லேனென்று, அஞ்சலி செய்ய-கைகூப்ப, உள் நகையா-திருவாயுள் புன்னகையரும்பி, மீனோக்கி தன் மணாளன்-அங்கயற்கண்ணியார் தலைவராகிய சோமசுந்தரக்கடவுள், மையல் நோக்கியை நோக்கி - பிறர்க்கு மையலூட்டும் பார்வையையுடைய பொன்னனையாளைப் பார்த்தருளி.

காமனும் விரும்புந் திருவுருவத்தில் விருப்புற்றனள் என்னுங் குறிப்புத் தோன்றமையனோக்கியென்றார். ஐய அசைநிலை. (௧௭)

வடியைநேர்விழியாய்பெருவனப்பினைசிறிதுன்
கொடியைநேரிடையெனவிளைத்தனையெனக்கொன்றை
முடியினானடியாரமென்முகிழ்முலைக்கொடிதாழ்ந்
தடியனேற்குவேறாயொருமெலிவிலையையா.

(இ-ள்.) வடியை நேர் விழியாய் - மாவடுவின் பிளவை யொத்த கண்களையுடையாய், பெரு வனப்பினை - நீ பேரழகுடையாய், உன் கொடியை நேர் இடை என்ன சிறிது இளைத்தனை என - உனது கொடியையொத்த இடையைப்போலச் சிறிது அழகு இன்றி மெலிந்தாய் அது யாதுகாரணமென்றுவினவ, மெல் முகிழ் முலை கொடி - மெல்லிய அரும்பாகிய தனமுகிழ்த்த பூங்கொடியை யொத்த அப்பெண்-கொன்றைமுடியினான் அடி ஆர தாழ்ந்து - கொன்றைமலர் மாலையை யணிந்த சடாமுடியையுடைய சித்தமூர்த்திகளுடைய திருவடியை முட்டின்றி வணங்கி, ஐயா-ஐயனே, அடியனேற்கு - அடியேனாகிய வெனக்கு, வேறாய் ஒரு மெலிவு இல்லை-வேறாக ஒருகுறையில்லை.

அவள்மேற் கழிபேரன்புடைமைதோன்ற அறியார்போலவினாயினார் என்பார் பெருவனப்பினை சிறிதுன்கொடியை நேரிடையெனவிளைத்தனை யெனவும், அவளறியாளாதலால் தன்குறைகூறத்தொடங்கின ளென்பார் அடியாரத் தாழ்ந்து அடியனேற்கு வேறாயொருமெலிவிலை யெனவுங் கூறினார். (௧௮)

எங்கணாயகர்திருவுருக்காண்பதற்கிதயந்
தங்குமாசையாற்கருவுருச்சமைத்தனன்முடிப்பேற்
கிங்குநாடொறுமென்கையில்வருபொருளெல்லா
மங்கள்பூசைக்கேயல்லதையொழிந்திலவென்றாள்.

(இ-ள்.) எங்கள் நாயகர் திரு உரு காண்பதற்கு - எங்களிறைவராகிய சிவபெருமானார் திருவுருச்சமைக்க, இதயம் தங்கும் ஆசையால் - எனதுமனத்தில் நிலைபெற்ற மிக்கவிருப்பத்தால், கரு உரு சமைத்தனன் முடிப்பேற்கு - கருக்கட்டி முடிக்கக்கருதிய வெனக்கு, இங்கு நாள் தோறும் - இவ்விடத்து நாள்தோறும், என் கையில் வரு பொருள் எல்லாம் - எனது கைமுயற்சியால்வரும் பொருளியாவும்,

உங்கள் பூசைக்கு ஏ அல்லது - உங்கள்பூசனைக்கேயன்றி, ஒழிந்தில என்றாள் - சேடமானவை யிலலையென்று கூறினாள்.

இவளது அன்பின்றிறத்தை யுலகினருணர்ந்துய்யச் சிவபெருமான்மூட்டிய விருப்பாதலால் இதயந்தங்கும் ஆசையென்றார், திருவுருச்சமைத்தற்கெஞ்சுவதின்மையால் உங்கள்பூசைக்கேயல்லதை யொழிந்திலவெனக் கூறினாளெனக்கூறினார்.

அருந்துநல்லமுதனையவளன்புசித்திக்கத்
திருந்துதேனெனவிரங்குசொற்செவிமடுத்தையர்
முருந்துமூரலாய்செல்வமெய்யிளமைநீர்மொக்கு
ளிருந்தவெல்லையுநிலையிலவென்பதுதுணிந்தாய்.

(இ-ள்.) அருந்து நல் அமுது அனையவள் - உண்ணும் இனிய அமுதையொத்த வுருவத்தையுடையவள், அன்புசித்திக்க-தனதுபேரன்பு கைகூட, திருந்துதேன் என - வடித்த தேன்சுவைபோல, இரங்கு சொல் செவி மடுத்து - இழுமென இசைக்குஞ் சொல்லைக்கேட்டு, ஐயர் - சித்தமூர்த்திகள், முருந்து மூரலாய் - மயிலிறகினடியையொத்த பற்களையுடையவளே, செல்வம் மெய் இளமை - செல்வமும் சரீரமும் இளமைப்பருவமும், நீர் மொக்குள் இருந்த எல்லை உம் - நீரிற்றோன்றிய குமிழிநின்றவளவும், நிலை யில என்பது - நிற்கும் அளவினவல்ல என்பதை, துணிந்தாய்- நீ ஐயந்திரிபின்றி யுணர்ந்திருக்கின்றாய்.

சிவபெருமானார் திருவுருச் சமைக்கக் கொண்டகருத்து முற்றிய தாதலால் அன்புசித்திக்க வெனவும், பெற்றோர்க்குத் தம்மக்கள் மழலைச் சொற்போல அடியவர்கூறுஞ்சொற்கள் அவர்க்கு இனியன ஆதலால் திருந்துதேனெனச்செவிமடுத்து எனவும், அடியவர் பூசைப்பேறே நிலையுடையதெனக் கருதினவள் ஆதலால் செல்வமெய்யிளமை நீர்மொக்குள் இருந்தவெல்லையும் நிலையிலவென்பது துணிந்தாயெனவுங்கூறினார். (உ0)

அதிகநல்லறநிற்பதென்றறிந்தனையறத்து
ளதிகமாஞ்சிவபுண்ணியஞ்சிவார்ச்சனையவற்று
ளதிகமாஞ்சிவபூசையுளடியவர்பூசை
யதிகமென்றறிந்தன்பரையருச்சனைசெய்வாய்.

(இ-ள்.) அதிகம் நல் அறம் - (செல்வமுதலிய மூன்றனுள்) மேம்பட்ட நல்லபுண்ணியம், நிற்பது என்று அறிந்தனை - நிலையுளதென்றறிந்தாய், அறத்துள் சிவபுண்ணியம் அதிகமாம் - அப்புண்ணியத்துள் சிவபுண்ணியம் மேம்பட்டனவாம், அவற்றுள்-அச்சிவபுண்ணியங்களுள், சிவார்ச்சனை அதிகமாம்-சிவபூசை மேம்பட்டதாம், சிவபூசையுள் அடியவர் பூசை அதிகம் என்று அறிந்து - அச்சிவபூசையுளடியவர்பூசனை மேம்பட்டதென்றறிந்து, அன்பரை அருச்சனை செய்வாய் - சிவனடியவரை (நாள்தோறும்) அருச்சனைசெய்து வருகின்றாய்.

வேதாகமங்களையுணர்ந்து அருள்வழி நில்லாதொழுகுதல் அறம் ஆதலால் அருள்வழிநிற்குஞ் சிவபுண்ணியம் அறத்துளதிகமாம் எனவும், சிவபுண்ணியம் பத்தின் சிவார்ச்சனையென்னும் புண்ணியம் கன்மமலத்தைப்போக்கிப் பிறப்பொழித்தலால் சிவார்ச்சனை யவற்றுளதிகமாம் எனவும், அச்சிவபூசையுள் அவனடியர் பூசனை சிறந்ததாதலால் சிவபூசையுளடியவர்பூசை யதிகம் எனவுங் கூறினார். "அயிங்கிதை

பொறைபேயமெய்மை யறைதலேயரியானே-உயர்ந்தவாதரவேயுள்ள மொபேக்கலே கொடுக்கைதானே - வியந்தவர்ச்சனேயேமெய்யூன் வெறுத்தறுதவமேமேனி - நயந்தபாவனேயேயென்னத் தசமிவைநன்றெந்நாளும்" என்னும் ஏதுவால் சிவபுண்ணியத்தையும், " படியினூலின்படியிப்படியிடை - முடிவிலன்புமுதிருபுளுற்றும்வெண் - பொடிகொள்மேனியன்பூசையினும்மவன் - அடியர்பூசையதிகமதிகமே " என்னும் ஏதுவால் அடியவர்பூசை யதிகம் என்பதையும் அறிக. (உக)

உறுதியெய்தினேயிருமையுமுன்பெயர்க்கேற்ப
விறுதியில்லவன்றிருவுருவீகையாற்காணப்
பெறுதியாகநின்மனேக்கிடைப்பித்தனோயீய
மறுதியானபல்கலன்களுங்கொணர்தியென்றறைந்தார்.

(இ-ள்.) இருமையும் உறுதி எய்தினே - (அதனுல்) இகத்திற்கும் பரத்திற்குமுரிய பயனேயடைந்தாய், உன் பெயர்க்கு ஏற்ப-உனதுபெயர்க்குப் பொருந்த, இறுதி இல்லவன் திரு உரு-தமக்கோரிறில்லாத பெருமானுர் திருவுருவத்தை, ஈகை ஆல் காண பெறுதியாக-பொன்னுற் செய்யப்பெறும்படி, நின் மனே கிடை பித்தளை ஈயம் அறுதியான பல்கலன்களும்-உனது மனேயில் கிடையாயுள்ள பித்தளேயாலும் ஈயத்தாலும் ஏனேயுலோகத்தாலும் செய்த பல பாத்திரங்களேயும், கொணர்தி என்று அறைந்தார் - கொண்டுவருவாயென்று கூறியருளினுர்.

அடியவர்பூசையாற் பெறும்பேறு அளப்பரிதென்பார் இருமையு முறுதியெய்தினேயெனவும், உன்பெயர் ஏமநாதையாதலால் அப்பெயர்க்குத் தக்கதாகச் சிவபெருமானுர் திருவுருவத்தைப் பொன்னுல் முட்டின்றிச் செய்யப் பெறுவாய் என்பார் உன்பெயர்க்கேற்ப இறுதியில்லவன் திருவுருவீகையாற் காணப்பெறுதியாகவெனவும், நாம் இரசவாதஞ்செய்தலில் வல்லோமாதலால் பயன்படாது உன்வீட்டிற் கிடையாயொழிந்த பித்தளே முதலிய உலோகங்களாலாகிய பழங்கலங்களேப் பொன்னுக்கக் கொண்டுவருவாயென்பார் கிடைப்பித்தளே யீயமறுதியான பல்கலன்களுங் கொணர்தியெனவுங் கூறினுர். பெறுதியென்னும் விணேமுற்றேடு ஆகவென்னும் இடைச்சொற்புணர்ந்து விணேயெச்சப்பொருளில் நின்றது. " இன்னவாறன்பியற்றியடியர்பால் - மின்னுபூசைவிளேக்குமவர்கள்பால் - மன்னிவாழ்குவர்மாதொருபாகனுர் - என்னபோகமுமீந்துமகிழ்ந்தரோ " எனச் சூதசங்கிதையில் அடியார் பூசாவிதியும் அவரைப்போற்றிஞேர் பேறும் உரைத்த அத்தியாயத்திற்காண்க. (உஉ)

ஈயஞ்செம்பிரும்பிரசிதமென்பவும்புணர்ப்பாற்
றேயும்பித்தளேவெண்கலந்தராமுதற்றெடுக்கத்
தாயும்பல்வகையுலோகமுங்கல்லெனவலம்பத்
தேயுஞ்சிற்றிடைகொண்டுபோய்ச்சித்தர்முன்வைத்தாள்.

(இ-ள்.) ஈயம் செம்பு இரும்பு இரசிதம் என்பவும் - ஈயமுஞ் செம்பும் இரும்பும் வெள்ளியும் என்று சொல்லப்படுவனவும், புணர்ப்பு ஆல் தோயும் பித்தளே வெண்கலம் தராமுதல் தொடக்கத்து - (ஒன்றேடொன்றின்) சம்பந்தத்தாலாகிய பித்தளேயும் வெண்கலமும் தராவுமுதலிய தொடக்கத்தையுடைய, ஆயும் பல்வகை உலோகமும் - ஆராயும் பலவகைப்பட்ட உலோகங்களும், கல்லென அலம்ப - கல்லென்றெலிக்க, தேயும் சிற்றிடை கொண்டுபோய் - மெலிந்த சிறிய இடையையுடைய பொன்னனேயாள் (குற்றேவல் செய்யும் பெண்களால) கொண்டுசென்று, சித்தர் முன் வைத்தாள் - சித்தமூர்த்திகள் திருமுன் வைத்தனள்.

தான்கொண்ட கருமமுற்றியதென்னுங் கருத்தினளாதலால் கல்லென வல மபத்தேயுஞ் சிற்றிடை கொண்டுபோய்ச் சித்தர்முன் வைத்தாளென்றார். (உ௩)

வைத்தவேறுவேறுலோகமுமழுவுழைகரந்த
சித்தசாமிகணீற்றினைச்சிதறினர்பாவித்
தித்தைநீயிராவெரியிலிட்டெடுக்கினன்பொன்னு
மத்தைநாயகன்றிருவுருக்கொள்கெனவறைந்தார்.

(இ-ள்.) மழு உழை கரந்த சித்தசாமிகள் - மழுவையு மானையு மொளித்து வந்தருளிய சித்தமூர்த்திகள், வைத்த வேறு வேறு உலோகமும் - (பொன்னனையாள் கொண்டுவந்து) வைத்த பலவேறுவகைப்பட்ட உலோகங்களின்மேலும், பாவித்து நீற்றினை சிதறினர் - (பொன்னாகக்கடவதென்று) திருவுளஞ்செய்து திருநீற்றைத் தெறித்து, இத்தை நீ இரா எரியில் இட்டு எடுக்கில் நன்பொன் ஆம் - இவ்வுலோகத்தை நீ இரவில் நெருப்பில் புடம்போட்டெடுத்தால் மாற்றுயர்ந்த பொன்னாகும், அத்தை - அதனால், நாயகன் திரு உரு கொள்க என - சிவபெருமான் திருவுருவதைச் செய்யக்கடவாயென்று, அறைந்தார் - கூறியருளினார்.

தாம் கூறியருளியதைக் கடப்பாடாகக்கொண்டு துணிந்தனர் ஆதலால் எரியிலிட்டெடுக்கினன் பொன்னுமென வறைந்தார் எனக் கூறினார். சிதறினர் முற்றெச்சம். (உ௪)

மங்கைபாகனைமடந்தையுமிங்குநீர்வதிந்து
கங்குல்வாயமுதருந்தியிக்காரியமுடித்துப்
பொங்குகாரிருள்புலருமுன்போமெனப்புகன்று
ளங்கயற்கணுடனைப்பிரியாரதற்கிசையார்.

(இ-ள்.) மங்கைபாகனை-உமாதேவியாரை இடப்பாகத்திலுடைய பெருமானை, மடந்தையும் - பொன்னனையாளும், இங்கு நீர் வதிந்து - இவ்விடத்தில் நீர் தங்கியருளி, கங்குல்வாய் அமுது அருந்தி - இவ்விராப்போதில் திருவமுதுசெய்து, இக்காரியம் முடித்து - இந்தக்காரியத்தை முடித்து, பொங்கு கார் இருள் புலருமுன்போம் என புகன்றாள் - மிக்க கரிய இருட்போது புலர்தற்குமுன் எழுந்தருளுங்களென்று வணங்கிக்கூறினாள், அங்கயறகணாள் தனைப்பிரியார் - அங்கயற்கண்ணம்மையாரைச் சற்றும் பிரியாத அப்பெருமானார், அதற்கு இசையார் - அவ்வார்த்தைக்குடன்படாது.

பகலில் வசித்தருளியதுபோல இரவிலும் பெருமானார் வசித்தருளக் கழிபேரன்புடையவளென்பார் இங்கு நீர் வதிந்து காரிருள் புலருமுன்போ மெனப் புகன்றாள் எனவும், திருவருளைப் பிரிந்தறியார் என்பார் அங்கயற்கணுடனைப் பிரியாரதற் கிசையார் எனவுங்கூறினார். (உ௫)

சிறந்தமாடநீண்மதுரையிற்சித்தர்யாமென்று
மறைந்துபோயினார்மறைந்தபின்சித்தராய்வந்தா
ரறைந்தவார்கழலலம்படவெள்ளிமன்றுடி
நிறைந்தபேரொளியாயுறைநிருத்தனென்றறிந்தாள்.

(இ-ள்.) சிறந்த மாடம் நீள் மதுரையில் - சிற்பநூல் வழிவிதித்த மாடங்கள் உயர்ந்தோங்கிய மதுரைத்திருநகரினுள்ள, சித்தர் யாம் என்று மறைந்துபோயினார்- சித்தமூர்த்திகள் யாமென்று திருவுருக்கரந்து சென்றருளினார், மறைந்தபின்-மறை

ந்தருளியபின், சித்தர் ஆய்வந்தார் - சித்தமூர்த்திகளாய் வந்த பெருமானார் - அறைந்த வார்கழல் அலம்பிட - (பலரும்) புகழும் நீண்ட வீரகண்டை யொலிக்க, வெள்ளி மன்று ஆடி - வெள்ளியம்பத்தில் திருநடனஞ்செய்து, நிறைந்த பேர் ஒளியாய் உறை நிருத்தர் என்று அறிந்தாள் - எங்கும் நிறைந்த பெருஞ்சோதியா யெழுந்தருளிய திருத்தாண்டவமூர்த்திகளென் றறிந்தனள்.

மதுரையிலுள்ளோமென்று மறைந்தருளினமையால் வார்கழலலம்பிட வெள்ளிமன்றுடியுறை நிருத்தரென் றறிந்தனளெனவும், எல்லாவொளிக்கும் ஒளிதரும் பேரொளியாய் நிற்றலால் நிறைந்த பேரொளியாயுறை எனவுங்கூறினார் "மெய்ச் சுடருக்கெல்லாம் ஒளிவந்த பூங்கழல்" எனவரும் ஏதுவாலுணர்க. (உ௬)

மறைந்துபோயினானெனசசிறிதயர்ச்சியுமனத்தி
னிறைந்ததோர்பெருங்கவற்சியைநீக்கினாளென்றுச்
சிறந்ததோர்பெருமகிழ்ச்சியுமுடையளாய்ச்சித்த
ரறைந்தவாறுதீப்பெய்தனளுலோகங்களனைத்தும்.

(இ-ள்.) மறைந்துபோயினார் என - மறைந்து சென்றருளினாரென்று, சிறிது அயர்ச்சியும் - சிறிது துன்பத்தையும், மனத்தில் நிறைந்தது ஓர் பெருங்கவற்சியை நீக்கினார் என்று-(திருவுருவமுடியாமையால் என்றும்) தன் மனத்தில் இடைவிடாதுள்ள துன்பத்தை நீக்கியருளினாரென்று, சிறந்தது ஓர் பெருமகிழ்ச்சியும் உடையளாய்-மேலெழுந்தோங்கிய ஒப்பில்லாத பெருமகிழ்ச்சியையு முடையவளாகி, சித்தர் அறைந்த ஆறு - சித்தமூர்த்திகள் கூறியருளியவண்ணம், உலோகங்கள் அனைத்தும் தீபெய்தனள் - உலோகங்கள் முற்றும் தீயிற்புடம்போட்டனள்.

இறைவரது திருவுருவத்திற் கழிபேரன்புடையளாதலால் மறைந்துபோயினாரெனச் சிறிதயர்ச்சியும் எனவும், தான்கொண்ட கருமத்தை முடித்தனராதலால் மனத்தில் நிறைந்ததோர் பெருங்கவற்சியை நீக்கினாரென்றுச் சிறந்ததோர் பெருமகிழ்ச்சியுமுடையளெனவுங் கூறினார். (உ௭)

அழலடைந்தபினிருண்மலவலிதிரிந்தரன்று
ணிழலடைந்தவர்காட்சிபோனீப்பருங்களங்கங்
கழலவாடகமானதாலதுகொண்டுகனிந்த
மழலையீர்ஞ்சொலாள்கண்டனள்வடிவிலான்வடிவம்.

(இ-ள்.) அழல் அடைந்தபின் - (உலோகம்) நெருப்பினைச்சேர்ந்தபின்பு, அரன் தாள் நிழல் அடைந்தவர்-சிவபெருமானார் திருவடி ஞானச்செல்வத்தையடைந்த மெய்யன்பர், இருள் மலம் வலிதிரிந்த காட்சிபோல்-(என்றும் நீங்காத) ஆணவமலத்தின் வலிமைகெட்ட தோற்றம்போல, நீப்பு அருங்களங்கம் கழல-நீங்காத மாசுகழிய, ஆடகம் ஆனது - பொன்னாகியது, அதுகொண்டு-அப்பொன்னைக்கொண்டு, கனிந்த மழலை ஈர்ஞ்சொலாள்-சுவைபழுத்த தண்ணிய மழலைச்சொற்களையுடைய பொன்னனையாள், வடிவிலான் வடிவம் கண்டனள் - தமக்கோ ருருவமில்லார்க்கோர் திருவுருவத்தை வார்த்தனள்.

திருவடிஞானச்செல்வம் என்றது திருவருண்ஞானச்செல்வத்தை. சூரியனொளியால் இருளிரிதல்போலத் திருவருண்ஞானமேலீட்டால் மலங்கெடுதலாலும், ஆணவம் மாயை காமியங்களுள் காமியம் சுகதுக்கங்களைத் தோற்றுகிறதற்கு முதற்காரணமாகியும், மாயை அச்சுகதுக்கங்கள் எங்குந் தோன்றுதற்குத் தன்காரியமாகிய தநுகரணங்களையும் உயிரையு மியைவித்து நிற்றற்குத் துணைக்காரணமாகியும், ஆண

வம் அவற்றைக் காரியப்படுத்தற்கு நிமித்தகாரணமாகியும் நிற்றலால் இருணம என்றது ஆணவமலமாதலின் இருண்மல வலிதிரிந்தரன்றாள் நிழலடைந்தவர் க இபோல் என்றார். " சுத்தமாஞ்சத்திஞானச் சுடராகுஞ்சிவமொழிந்தச்-சத்திதா ன்றுமுன்னைத் தகவிலாமலங்கள்வாட்டி - அத்தனையருளுமெங்கு மடைந்திடமி கற்றி - வைத்திடமிரவிகாட்டும் வளரொளிபோன்மகிழ்ந்தே" எனவரும் எது லுணர்க. (உ

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மழவிடையுடையான்மேனிவனப்பினைநோக்கியச்சோ
வழகியபிரானேயென்றுவள்ளிமுத்தங்கொண்டன்பிற்
பழகியபரனையாறுப்பரிவினாற்பதிட்டைசெய்து
விழவுதேர்நடத்திச்சின்னாள்கழிந்தபின்வீடுபெற்றாள்.

(இ-ள்.) மழவிடை உடையான் மேனி வனப்பினை - இளமைதங்கிய இடப் வாகனத்தையுடைய பெருமானார் திருவுருவத்தின்பொலிவை, நோக்கி - பார்த்து, அழகிய பிரானே என்று - அழகிய பிரானேவென்று, வள்ளி முத்தங்கொண்டு - (தனது கைகளால் திருக்கவுளை) வள்ளி முத்தமிட்டு, அன்பில் பழகிய பரனை-தன து மெய்யன்பிலிடைவிடாதிருந்த பெருமானை, ஆறாத பரிவினால் பதிட்டைசெய்து- நீங்காத பேரன்பினால் பிரதிட்டைசெய்து, விழவு தேர் நடத்தி - நித்த நைமித்திய ங்களு மகோற்சவமு நடத்தி, சில்நாள் கழிந்தபின் - (இவ்வாறு) சிலநாள் கழிந்த பின்பு, வீடுபெற்றாள் - சிவகதியும் அடைந்தனள்.

சிவபெருமான் திருவுருவினையென்று காண்போமென்றெழுந்த பேரன்பின ளாதலால் அன்பிற்பழகிய பரனையெனவும், அப்பேரன்பாலடையும் பயன் வீடுபெ றுதலால் வீடுபெற்றாளெனவுங் கூறினார். அச்சோ வியப்பிடைச்சொல். (உசு)

நையுநுண்ணிடையினாளந்நாயகன்கபோலத்திட்ட
கையுகிர்க்குறியுஞ்சொன்னகாரணக்குறியுங்கொண்டு
வெய்யவெங்கதிர்கால்செம்பொன்மேனிவேறாகிநாலாம்
பொய்யுகத்தவர்க்குத்தக்கபொருந்துருவாகிமன்னும்.

(இ-ள்.) நையும் நுண் இடையினாள் - இளைத்த நுண்ணிய இடையையுடைய பொன்னனையாள், அந்நாயகன் கபோலதது இட்ட கை உகிர்க்குறியும் - அப்பெரு மானார் கபோலத்திலவள்ளிய நகக்குறியையும், சொன்ன காரணக்குறியும் கொண்டு- அழகிய பிரானேவென்று சொன்ன காரணப்பெயரையுங்கொண்டு, வெய்ய வெங்க திர் கால்-விரும்பத்தக்க சூரியன் கிரணத்தைப்போலக் கிரணம் வீசும், செம்பொன் மேனி வேறு ஆகி - செவந்த பொன்னாலாகிய திருமேனி வேறுபட்டு, நாலாம் பொய் உகத்தவர்க்கு - கலியுகத்தவர்க்கு, தக்க பொருந்து உரு ஆகி - தக்க பொருந்திய தி ருவுருவமாகி, மன்னும் - எழுந்தருளியிருக்கின்றனர்.

வள்ளி முத்தங்கொண்டமையால் கபோலத்தில் நகக்குறியும், திருவுருப்பொ லிவின் மிகுதியால் அழகிய பிரானெனப் பொன்னனையாள் கூறிய காரணப்பெயரு ம் இக்கலியுகத்துமுள்ளன வென்பார் கொண்டு மன்னும் என்றார். (௩0)

இரசவாதஞ்செய்தபடலம் முற்றிற்று.

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - கஅஅ௫.

முப்பத்தேழாவது

# சோழனை மடுவில்வீட்டிய படலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மின்னனையார்பூங்கொன்றைவேணியரிரதவாதம்
பொன்னனையாண்முன்செய்துபோந்ததுபுகன்றேமார்த்தார்
மன்னனைமடுவில்வீட்டிமலரடிக்கன்பனான
தென்னனையமரிற்காத்ததிருவிளையாடல்சொல்வாம்.

(இ-ள்.) மின் அனைய ஆர் பூங்கொன்றை வேணியர் - மின்னலையொத்த ஆத்திமலர்மாலையையும் பொலிவையுடைய கொன்றைமலர்மாலையையும் அணிந்த சடாமுடியையுடைய சோமசுந்தரக்கடவுள், இரதவாதம் - ரசவாதத்தை, பொன்னனையாள் முன் செய்து போந்தது புகன்றேம் - பொன்னனையாள்முன் செய்து சென்றருளிய திருவிளையாடலைக் கூறினேம், ஆர்த்தார் மன்னனை மடுவில் வீட்டி - ஆத்திமாலையையணிந்த சோழனை மடுவில் தள்ளி, மலர் அடிக்கு அன்பன் ஆன தென்னனை - தமது தாமரைமலர்போன்ற திருவடிக்கு மெய்யன்பனாகிய சுந்தரேசபாதசேகரனாகியபாண்டியனை, அமரில் காத்த திருவிளையாடல் சொல்வாம் - போரிற்காத்தருளிய திருவிளையாடலை யினிக்கூறுவாம்.

சித்தமூர்த்திகளாய்க்காட்சிதந்து மறைந்தருளினமையால் மின்னனையார் என்பதற்கு மின்னலையொத்தவரும் எனப் பொருள்கொள்ளுதலும் ஒன்று. அடியாரைப்பாதுகாத்தலும், அவரொடு மாறுபட்டவரை யொறுத்தலும் சிவபெருமான் திருவிளையாட்டென்பதை இப்படலத்தால் உணர்த்துதலால் ஆர்த்தார் மன்னனை மடுவில் வீட்டி மலரடிக்கன்பனான தென்னனை யமரிற்காத்த என்றார். அனைய என்னுங் குறிப்பு வினைப்பெயரெச்சத்தின் அகரவீறுதொக்கது. (௧)

பொன்னெடுந்தேரிராசபுரந்தரன்புரந்தராதிப்
பன்னெடுந்தேவரேத்தப்பரனுலகடைந்தானிப்பா
லந்நெடுந்தகையோன்மைந்தனடலிராசேசனென்போ
னிந்நெடுந்தகையோன்மைந்தனிராசகம்பீரனென்போன்.

(இ-ள்.) பொன் நெடுந்தேர் இராசபுரந்தரன் - பொன்னாலாகிய பெரிய தேரையுடைய இராசேந்திரபாண்டியன், புரந்தரன் ஆதி பல் நெடுந்தேவர் ஏத்த - இந்திரன் முதலிய பல தேவர்களும் துதிக்க, பரன் உலகு அடைந்தான் - சிவலோகத்தை யடைந்தனன், இப்பால் - இப்புறம், அ நெடுந்தகையோன் மைந்தன் - அந்தப் பெருந்தகைமையையுடைய இராசேந்திரபாண்டியனுடைய புத்திரன், அடல் இராசேசன் என்போன் - வெற்றியையுடைய இராசேசபாண்டியனென்று சொல்லப்படுவான், இ நெடுந்தகையோன் மைந்தன் - இந்த இராசேசபாண்டியனுடைய புத்திரன், இராசகம்பீரன் என்போன் - இராசகம்பீர பாண்டியனென்று சொல்லப்படுவான்.

இராசேசபாண்டியன் பல அரசர்களையும் வென்று திறைகொண்டு நிலவுலகமுற்றுந் தனதடிக்கீழ்ப்படுத்தி நெடுநாளரசியல்செய்து வந்தானென்பதுதோன்ற அடல் என விசேடணந்தந்தும், அரசருளாழ்ந்த சிவநேயமுடையவனென்னும் பெயர்ப்பொருட்காரணந்தோன்றத் தனது நாட்டிலுள்ள கிராமமுற்றும் சிவலிங்கப்பிரதிட்டையும் வீடுகள்தோறும் சிவார்ச்சனை நடக்கவுஞ் செய்வித்தவனாதலால் இராசகம்பீரன் எனக் காரணப்பெயர் தந்துங்கூறினார். (௨)

மற்றிவன்குமரன்பாண்டிவங்கியதீபனன்னான்
பொற்றிணிதடந்தோண்மைந்தன்புரந்தரசித்தாமன்னான்
வெற்றிகொள்குமரன்பாண்டிவங்கியபதாகன்வீரம்
பற்றியசுந்தரேசபாதசேகரனவன்சேய்.

(இ-ள்.) இவன் குமரன் - இந்தப்பாண்டியனுடைய புத்திரன், பாண்டி வங்கிய தீபன் - பாண்டிய வங்கிய தீபபாண்டியனென்று சொல்லப்படுவான், அன்னான் பொன் திணி தடந்தோள் மைந்தன் - அப்பாண்டியனுடைய பொன்னிறம் வாய்ந்த திண்ணிய பெரிய தோளையுடைய புத்திரன், புரந்தரசித்து ஆம் - புரந்தரசித்துப் பாண்டியனும், அன்னான் வெற்றிகொள் குமரன் - அப்பாண்டியனுடைய வெற்றி கொண்ட புத்திரன், பாண்டி வங்கிய பதாகன் - பாண்டி வங்கிய பதாகபாண்டியனென்று சொல்லப்படுவான், அவன் சேய் - அப்பாண்டியனுடைய புத்திரன், வீரம்பற்றிய சுந்தரேச பாதசேகரன் - வீரமிக்க சுந்தரேச பாதசேகர பாண்டியனென்று சொல்லப்படுவான்.

பாண்டிய வமசத்துள் புறச்சமைய இருளைப்போக்கிச் சைவசமயவொளியைப் பெருக்கிய காரணந்தோன்றப் பாண்டி வங்கிய தீபன் எனவும், பாண்டியருள் உக்கிரகுமார பாண்டியனையன்றி யிவனும் இந்திரனைப் போரிலெதிர்ந்து வென்றனன் என்னுங் காரணந்தோன்ற புரந்தரசித்தெனவுங் கூறினார். (ரு)

பலர்புகழ்சுந்தரேசபாதசேகரனுந்தென்ன
னலைபுனலுடுத்தகூடலடிகளுக்கன்பனுகிக்
கொலைபுணர்வேலால்வெங்கோற்குறும்பெனுங்களைகடீர்த்து
மலர்தலையுலகமென்னும்வான்பயிர்வளர்க்குநாளில்.

(இ-ள்.) பலர் புகழ் சுந்தரேச பாதசேகரன் ஆம் தென்னன் - பலரும் புகழும் அச்சுந்தரேச பாதசேகரனாகிய பாண்டியன், அலை புனல் உடுத்த கூடல் அடிகளுக்கு அன்பன் ஆகி-கரையொடுமோதும் நீர்சூழ்ந்த மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளுக்கு மெய்யன்பு பூண்டவனாகி, கொலை புணர் வேலால் - கொலைத்தொழில் மிக்க வேலினால், வெங்கோல் குறும்பு என்னும் களைகள் தீர்த்து - கொடுங்கோலையுடைய குறுநிலமன்னரென்னுங் களைகளைக்களைந்து, மலர்தலை உலகம் என்னும் - பரந்த இடத்தையுடைய வுலகில் வசிக்கும் உயிர்களாகிய, வான் பயிர் வளர்க்கும் நாளில் - பெரிய பயிரை வளர்க்குங் காலையில்.

சுந்தரேசபாதசேகரன் என்னுந் தன்பெயர்க் காரணந்தோன்ற நின்றானென்பார் சுந்தரேசபாதசேகரனுந் தென்னன்கூடலடிகளுக்கன்பனாகி யெனவும், அன்பர்கள் மக்களுயிர்க்குறுதிபயக்கும் அறத்தினின்றுஞ் சிறிதுந்தவறார் என்பதுதோன்றக் குடிகளைவருத்துந் தனது பகைவராகிய குறுநிலமன்னர் என்னுந் தீயரை முன்னர்க்களைந்தான் என்பார் வெங்கோற்குறும்பெனுங் களைகடீர்த்து எனவும், வினைப் பகைகளையுமொழித்துக் குடிகளை யோம்பினனென்பார் வான்பயிர் வளர்க்குநாளில் எனவுங்கூறினார். "மாநிலங்காவலனாவான் மன்னுயிர்காக்குங்காலை - தானதனுக்கிடையூறு தன்னாற்றன்பரிசனத்தால்-ஊனமிகுபகைத்திறத்தாற் கள்வராலுயிர்தம்மால் - ஆனபயமைந்துந்தீர்த் தறங்காப்பானல்லனோ" எனவரும் ஏதுவாலுணர்க. (சு)

பத்துமான்றடந்தேர்நூறுபனைக்கைமாநூற்றுப்பத்துத்
தத்துமாவயுதமள்ளர்தானையிவ்வளவேயீட்டி

யித்துணைக்கேற்பநல்கியெஞ்சியபொருள்களெல்லாஞ்
சித்துருவானகூடற்சிவனுக்கேசெலுத்துமன்னே.

(இ-ள்.) மான் தடம் தேர் பத்து - குதிரைபூட்டிய தேர்பத்தும், பனை கை மா நூறு - பனைபோன்ற துதிக்கையையுடைய யானை நூறும், தத்து மான் நூற்றுப் பத்து - தாண்டிச்செல்லுங் குதிரைகள் ஆயிரமும், மள்ளர் அயுதம்-காலாட்கள் பதினாயிரம்பேரும், இவ்வளவே தானை ஈட்டி-இவ்வளவாகவே சேனைகளைச் சேகரித்து, இத்துணைக்கு ஏற்ப நல்கி-இவ்வளவுக்குப் பொருந்தப் பொருளுதவி, எஞ்சிய பொருள்கள் எல்லாம் - சேடமான எல்லாப்பொருள்களையும், சித்து உருவான கூடல் சிவனுக்கே - அறிவே திருவுருவமான மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுள் திருப்பணிக்கே, செலுத்தும் - செலவுசெய்து வருவானாயினன்.

ரதகசதுரகபதாதிகள் போரில் அரசனைச் சூழ்ந்துநிற்றற்கும், அரசன் வருகின்றானென்பதை யுணர்த்தும் ஓரறிகுறிக்குமேயன்றி வெற்றிகொடுப்பதற்கன்றெனக் கருதினானென்பார் பத்துமான்றடந்தேர்நூறு பனைக்கைமாநூற்றுப்பத்துத் - தத்துமானயுதமள்ளர் தானையிவ்வளவேயீட்டி யெனவும், வெற்றிவாய்ப்பதுதெய்வசகாயத்தாலெனக்கருதினானென்பார் எஞ்சியபொருள்களெல்லாம் - சித்துருவான கூடற்சிவனுக்கேசெலுத்தும் எனவுங்கூறினார். (ரு)

கண்டிகைமகுடமாதிக்கலனிரைகுயின்றுந்திங்கண்
மண்டலமிடறுஞ்சென்னிக்கோபுரமாடமாதி
யெண்டிசையிருள்கால்சீப்பவெரிமணியிழைத்துவேய்ந்துந்
திண்டிறலுடையானின்னதிருப்பணிபிறவுஞ்செய்தான்.

(இ-ள்.) கண்டிகை மகுடம் ஆதி கலன் நிரை குயின்றும் - கண்டிகை கிரீடமுதலிய ஆபரணபந்திகளைச் செய்தும், திங்கள் மண்டிலம் இடறும் சென்னி கோபுரம் மாடம் ஆதி - சந்திரமண்டிலத்தை யிடறியோங்கிய சிகரத்தையுடைய கோபுரமும் திருமாளிகையு முதலியனவற்றை, எண் திசை இருள் கால் சீப்ப - எட்டுத்திசையிலுமுள்ள இருளைத் தமது ஒளியாகிய காலாற்சீத்துக்கெடுக்க, எரிமணி இழைத்து வேய்ந்தும் - நெருப்புப்போல ஒளிவீசும் மாணிக்கமிழைத்து அலங்கரித்தும், திண் திறல் உடையான் - வன்மையையுடைய சுந்தரேசபாதசேகர பாண்டியன், இன்ன திருப்பணி - இவைபோன்ற திருப்பணிகளையும், பிறவும் - இவையொழிந்தனவற்றையும், செய்தான் - செய்துவந்தனன்.

பிற என்றது நித்த நைமித்திய முதலிய கடன்களை. (சு)

கல்லுமாறகன்றமார்பன்கருவியின்சிறுமைநோக்கி
மல்லுமாறுததிண்டோள்வளவர்கோனொருவன்காலிற்
செல்லுமாயிரம்பரிக்கோர்சேவகனென்போன்றானே
வெல்லுமாறெண்ணிவஞ்சிவேய்ந்துகொண்டெழுந்துபோந்தான்.

(இ-ள்.) கல்லும் மாறு அகன்ற மார்பன் - மலையும் பகையொழிந்து நட்புக்கொள்ளும் மார்பையுடைய சுந்தரேசபாதசேகர பாண்டியனுடைய, கருவியின் சிறுமை நோக்கி - சேனையின் சிறுமையைப்பார்த்து, மல்லு மாறுத திண் தோள் - மற்றொழிலினீங்காத திண்ணிய தோள்களையுடைய, வளவர்கோன் ஒருவன் - சோழனொருவன், காலில் செல்லும் ஆயிரம் பரிக்கு ஓர் சேவகன் என்போன் - காற்றைப்போல விரைந்து செல்லும் ஆயிரங் குதிரைவீரர்களுக்கு ஒரு குதிரை வீரனென்று சொல்லப்படுவோன், தானே வெல்லும் ஆறு எண்ணி - அவனே யப்பாண்டியனை

வெல்லும் வகையைக்கருதி, வஞ்சி வேய்ந்துகொண்டு - வஞ்சிமாலையைச்சூடி, எழுந்து போனான் - போர்க்கெழுந்து சென்றனன்.

ஆயிரங்குதிரைவீரர்களைத் தானொருவனாகவேநின்று கொல்லும் வீரனாதலால் ஆயிரம் பரிக்கோர் சேவகன் எனவும், ஏனையரசர்கள் துணையின்றித் தானொருவனே வெல்லக் கருதினானாதலால் தானேவெல்லுமாறெண்ணி யெனவும், பகைவர்மேற் போர்க்குச் செல்வதற்கு ஓரறிகுறியாதலால் வஞ்சிவேய்ந்து எனவும் கூறினார். "வட்கார்மேற்செல்லுதல் வஞ்சியாம்" என்பதனால் உணர்க. (எ)

பல்வகைக்கருவியீட்டப்படையொடும்பரவைசீறிச்
செல்வதுபோலக்கன்னித்தீம்புனனாடுநோக்கி
மல்வரையாததோளான்வரவறிந்தெழுந்துமேருக்
கல்வரிசிலையான்முன்போய்க்கைதவன்றாழ்ந்துகூறும்.

(இ-ள்.) பல்வகை - பலவகைப்பட்ட, கருவி ஈட்டப் படையொடும் - ஆயுதங்களையேந்திய சேனாகூட்டத்தோடும், பரவை சீறி செல்வதுபோல - கடல் கொதித்துப் புடை பெயர்ந்து வருதல்போல, தீம்புனல் கன்னி நாடு நோக்கி - இனிய நீர் சூழ்ந்த பாண்டிநாட்டை யெதிர்நோக்கி, வரையாத மல் தோளான் வரவு அறிந்து - அளவறுத்தற்கரிய மற்போர் மிக்க தோளையுடைய சோழனது வருகையையறிந்து, கைதவன் எழுந்து - பாண்டியன் (சிம்மாசனத்தினின்று) எழுந்து, மேருக்கல் வரி சிலையான் முன்போய் - மேருமலையாகிய கட்டமைந்த வில்லையேந்திய சோமசுந்தரக்கடவுள்முன் சென்று, தாழ்ந்து கூறும் - வணங்கிக் கூறுவான்.

இருபெயரொட்டுப் பண்புத்தொகையாகக்கொண்டு கருவியாகிய படையெனப் பொருள்கொள்ளலும் ஒன்று. (அ)

பொன்னனையவேணிப்புனிதவிப்பூமிநேமி
யுன்னதுவலத்தினாலேயுருட்டுமென்வலத்தைநோக்கான்
றன்னதுவலத்தினாலென்றானையின்சிறுமைநோக்கி
யென்னதுதேயங்கொள்வானெண்ணினான்போலுமன்றே.

(இ-ள்.) பொன் அனைய வேணி புனித - பொன்னையொத்த சடாமுடியையுடைய புனிதனே, இ பூமி-இப்பூமியில், உன்னது வலத்தினால் நேமி உருட்டும் என் வலத்தை நோக்கான் - உன்னுடைய திருவருள் வலத்தினால் ஆக்கினாசக்கரத்தைச் செலுத்தும் எனது வன்மையைச் சற்றும் நோக்காது, தன்னது வலத்தினால் - தனது பெருஞ்சேனையின் வன்மையால், என் தானையின் சிறுமை நோக்கி - என்னுடைய சேனையின் சிறுமையைப்பார்த்து, என்னது தேயம் கொள்வான் எண்ணினான் போலும் - என்னுடைய நாட்டைக் கைக்கொள்ளக் கருதினவன்போலும்.

முன்னமே யுனது திருவருளைப் போர்வந்தபொழுது துணையென்று கருதியொழுகினேனென்பான் நேமி உன்னது வலத்தினாலே யுருட்டுமென் வலத்தையெனவும், சேனைப்பெருக்கே தனக்கு வெற்றிதருவதெனக் கருதினானென்பான் தன்னது வலத்தினாலென்றானையின் சிறுமைநோக்கி யென்னது தேயங்கொள்வானெண்ணினன் எனவுங் கூறினான். (கூ)

காவிரிநாடன்சேனைக்கடலிடையெரிபோன்மூண்டு
மேவினனென்றுகூறிமீனவன்வேண்டவானிற்
பூவிரிவாகைநீயேபுனையநாம்பொருதுமென்னா
நாவிரியாதமாற்றநாயகன்கூறக்கேட்டான்.

(இ-ள்.) காவிரி நாடன் (இவ்வாறுகருதிய) சோழன், சேனை கடல் இடை எரிபோல் - தனது சேனையாகிய கடலிடத்து எழுந்த வடவைத்தீப்போல, மூண்டு மேவினன் என்று கூறி - கோபமூண்டு வந்தானென்று சொல்லி, மீனவன் வேண்ட- பாண்டியன் குறையிரக்க, வானில் - ஆகாயத்தில், பூவிரி வாகை நீயே புனைய-பூக் களலர்ந்த வெற்றிமாலையை நீயே சூட, நாம் பொருதும் என்று - நாம் துணையாக வந்து போர் செய்வோமென்று, நாயகன் நாவிரியாத மாற்றம் கூற-சோமசுந்தரக்க டவுள் அசரீரி கூறியருள, கேட்டான் - ( சுந்தரேசபாதசேகரபாண்டியன் ) கேட் டனன்.

போர்வந்தகாலையிற் சிவபெருமான் திருவருள் துணையாய் நிற்குமெனக் க டைப்பிடித்தொழுகினவனாதலால் பூவிரிவாகைநீயே புனைய நாம் பொருதுமென்று. நாவிரியாத மாற்றநாயகன் கூறக் கேட்டான் என்றார். (௪0)

எல்லியங்கமலச்செவ்வியெனமுகமலர்ந்துநாத
னல்லியங்கமலச்செந்தாளகந்தழீஇப்புறம்புபோந்து
பல்லியந்துவைப்பத்தானைப்பரவையுட்பரிமாவூர்ந்து
கொல்லியம்பொருப்பன்சேனைக்கடலெதிர்குறுகினானே.

(இ-ள்.) எல்லி - விடியற்போதில் (மலர்ந்த,) கமலம் செவ்வி என - தாம ரையின் பொலிவைப்போல, முகமலர்ந்து - முகமலர்ச்சியுற்று, நாதன் அல்லி அம் கமலம் செம் தாள் - சோமசுந்தரக்கடவுளுடைய அகவிதழையுடைய அழகிய தாம ரைமலர்போன்ற செவந்த திருவடிகளை, அகம் தழுவி புறம்புபோந்து - தனது மன த்திற்பதித்துப் புறம்பேவந்து, பல் இயம் துவைப்ப - பலவாத்தியங்களும் ஒலிக்க, தானை பரவை உள் பரிமா ஊர்ந்து - தனது சேனைப்பரப்பினடுவில் குதிரையை நட த்தி, கொல்லி அம்பொருப்பன் சேனைக்கடல் எதிர் குறுகினான் - கொல்லிமலையையு டைய சோழனது சேனாசமுத்திரத்தினெதிரே (போர்க்கு) வந்தனன்.

அசரீரியால் வெற்றி தனக்கேயெனத் துணிந்தனனாதலால் கொல்லியம்பொ ருப்பன் சேனைக்கடலெதிர்குறுகினான் என்றார். இறுதியிலு முதலிலும் நின்ற அம் சாரியையிடைச்சொல். (௪௧)

பண்ணுதலிசைவண்டார்க்கும்பசுந்தொடைச்செழியன்றானை
யெண்ணுதலிலவாஞ்சென்னியிரும்படைக்கடனேராறாய்
நண்ணுதலெனப்போய்ப்பொன்னிநாடவன்றமர்கட்கெல்லாங்
கண்ணுதலருளாலங்கோர்கடலெனத்தோன்றிற்றம்மா.

(இ-ள்.) பண் நுதல் இசை வண்டு ஆர்க்கும் - பண்ணோடமைந்த இசையை வண்டுகள் பாடும், பசுந்தொடை செழியன் தானை - வாடுதலில்லாத வேப்பமலர்மா லையையணிந்த பாண்டியனுடைய சேனையானது, எண்ணுதல் இலவாம் சென்னி இரும்படை கடல் நேர் - கணக்கில்லாதனவாகிய சோழனுடைய பெரிய சேனையா கிய கடலுக்கு நேரே, ஆறு ஆய் நண்ணுதல் என போய்-ஓராறுசெல்லுதல்போலச் சென்று, பொன்னி நாடவன் தமர்கட்கு எல்லாம் - சோழனுடைய சேனைகளுக்கெ ல்லாம், கண்ணுதல் அருளால் - சோமசுந்தரக்கடவுளின் திருவருளால், அங்கு ஓர் கடல் என தோன்றிற்று - அவ்விடத்தில் ஓர் பெருங்கடல் வந்ததுபோலப் புலப் பட்டது.

சிவபெருமான் திருவருளால் ஒரு சிறு துரும்பும் பிரமன் முதலியோராயுத த்திற்கு ஒல்காதிருக்கில் அளவிற்சிறிய சேனை பெரிய சேனைக்குப் பெரிதாகப்புலப்

படல் ஓர் வியப்பன்றென்பார் கண்ணுதலருளா லங்கோர் கடலெனத் தோன்றிற்று என வாளா கூறினர். (கஉ)

அடலெனவருமாவூர்ந்துகைதவன்சேனைமுன்போ
யடலணிமேருக்கோட்டியாலவாய்நெடுநாண்பூட்டி
மடலவிழ்துழாய்க்கோனட்டிவாயெரிபுரத்திலூட்டி
யிடலணிகூடற்கோமான்வேடுருவாகிநின்றான்.

(இ-ள்.) அடல் அணி மேருகோட்டி - வலிமைமிக்க மகமேருவை வில்லா கவளைத்து, ஆலவாய் நெடுநாண் பூட்டி - வாசுகியாகிய நெடுநாணையிட்டு, மடல் அவிழ் துழாய் கோல் நாட்டி - இதழவிழ்ந்த துழாய்மாலையையணிந்த திருமாலாகி ய அம்பினை யேறிட்டு, வாய் எரி புரத்தில் ஊட்டி - அந்த அம்பின் வாயிலுள்ள தீக் கடவுளைத் திரிபுரத்திற்கொளுவி, இடல் அணி கூடல் கோமான் - வெற்றிபூண்ட ம துரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுள், வேடு உரு ஆகி - வேட்டுவத்திருவுரு வங்கொண்டு, அடல் என வருமா ஊர்ந்து - புடைபெயர்ந்த கடல்போல விரைந்து செல்லுங் குதிரையைச்செலுத்தி, கைதவன் சேனை முன் போய் நின்றான் - பாண்டி யன் சேனையின் முன்னணியிற் சென்று நின்றருளினர்.

வெற்றிகொள்ளுதலில் வலியர் என்பார் மேருக்கோட்டி ஆலவாய் நாண்பூட் டித்துழாய்க்கோனட்டி வாயெரிபுரத்திலூட்டியெனவும், அவரே யிங்கும் வெல்லக் கருதினர் என்பார் வேடுருவாகிநின்றான் எனவுங்கூறினர். ஆலவாய் விடத்தையுடை ய வாயையுடையதென நிற்றலால் உருபும் பயனுந்தொக்க இரண்டாம்வேற்றுமைத் தொகைநிலைக்களத்துப்புறத்துப்பிறந்த அன்மொழித் தொகைநிலைத்தொடர். துழா ய்க்கோல் என்றது திருமால்மேல் நிற்றலால் முன்மொழியிற் பொருணிலையல். (கங)

கங்குல்வாய்த்திங்கள்போலக்காதணிதந்தத்தோடுங்
கங்குல்வாய்முளைத்தமீன்போற்கதிர்முத்தவடமுங்குஞ்சிக்
கங்குல்வாய்ச்சிலைபோல்வெட்சிக்கண்ணிசூழ்கலாபச்சூட்டுங்
கங்குல்வாய்கிழிக்குந்தந்தக்கடகமுமின்னுக்கால.

(இ-ள்.) கங்குல் வாய் திங்கள்போல - இரவில் நிலவிய சந்திரனைப்போல விளங்கும், காது அணி தந்தம் தோடு உம்-காதிலணிந்த தந்தத்தாலாகிய தோடும், கங்குல் வாய் முளைத்த மீன்போல் - இராப்போதில் முளைத்த நட்சத்திரத்தைப்போ ல, கதிர் முத்த வடமும் - விளங்கு முத்தமாலையும், குஞ்சி கங்குல் வாய் - சிகையா கிய இரவில், சிலைபோல் - (எழுந்த) இந்திரதனுசுபோல, வெட்சி கண்ணி சூழ் கலா பம் சூட்டும் - வெட்சிமாலைசூழ்ந்த மயிலிறகணிந்த உச்சிக்கொண்டையும், கங்குல் வாய் கிழிக்கும் மின்னு - இருட்போதைக்கிழித்து விளங்கும் மின்னல்போல, தந்த க்கடகமும் - தந்தத்தாலாகிய கடகமும், கால - ஒளிவீச.

திருவுருவம் இருள்போல மிக்க கருநிறம் வாய்ந்திருத்தலால் காதணிதந்தத் தோடு திங்கள்போல வெனவும், முத்தவட மீன்போலெனவும், வெட்சிமாலை சூழ்ந் த மயிலிறகணிந்த உச்சிக்கொண்டை சிலைபோலெனவும், தந்தக்கடகம் மின்னல் போலெனவும் ஏது உவமையணிபடக் கூறினர். (கச)

அண்டத்தாரமரர்நாமமன்றுதொட்டடையத்தோற்று
கண்டத்தாரிருளேயெங்குங்கலந்தெனக்கறுத்தமேனி
கொண்டத்தாராரிறற்கோர்கூற்றெனக்கொல்வேலேந்திச்
சண்டத்தீயென்னநின்றான்காவிரித்தலைவன்காண..

(இ-ள்.) அண்டத்து ஆர் அமரர் - விண்ணுலகில் வசிக்கும் தேவர்கள், நாமம் அன்றுதொட்டு அடைய - அச்சத்தை (விடமுண்டருளிய) காலந்தொட்டடைய, தோற்று கண்டத்து ஆர் இருளே - தோற்றியருளிய ஸ்ரீகண்டத்தில் நிறைந்த விடவிருளே, எங்கும் கலந்தால் என்ன - எவ்விடத்துங் கலந்தாற்போல, கறுத்த மேனி கொண்டு - கறுத்த திருமேனியைக்கொண்டு, அதார் ஆரினற்கு - அந்த ஆத்திமாலையையணிந்த சோழனுக்கு, ஓர் கூற்று என்ன - ஒரு யமனைப்போல, கொல் வேல் ஏந்தி - கொல்லும் வேலையேந்தி, சண்டத்தீ என்ன நின்றான் - வடவைத்தீப்போல நின்றருளினர், காவிரித்தலைவன் காணா - (அதனை) சோழன்கண்டு.

சிவபெருமானாரைத் தம்மிலொருவராகக்கருதி யிறுமாந்திருந்த பிரமன் முதலிய தேவர்கள் விடந்தோன்றிய பொழுதஞ்சி யடைந்தகாலையில் அதனை யுண்டருளி யந்நாள் முதலவர்க்குத் தம்மிடத்தச்சந்தோன்ற விஷத்தைக் கண்டத்தில் நிறுத்திய முதல்வனென்பார் அண்டத்தாரமரர் நாமமன்று தொட்டடையத்தோற்று கண்டத்தார் என்றார். (௧௫)

சீறியாயிரம்பரிக்கோர்சேவகன்வந்தேனென்னாக்
கூறினானெதிர்த்தான்வெள்ளிக்குன்றவன்பத்துநூறு
மாறிலாப்பரிக்குமட்டோர்வயவனீயன்றேயெண்ணி
லீறிலாப்பரிக்குமொற்றைச்சேவகன்யானேயென்றான்.

(இ-ள்.) சீறி - கோபித்து, ஆயிரம் பரிக்கு ஓர் சேவகன் வந்தேன் என்னா - ஆயிரங்குதிரைகளுக்கு ஒரு சேவகன் வந்தேனென்று, கூறினான் எதிர்த்தான் - சொல்லிச் சோழனெதிர்த்தான், வெள்ளிக்குன்றவன் - வெள்ளிமலையையுடைய சிவபெருமானார், நீ மாறு இல்லாத பத்துநூறு பரிக்குமட்டு ஓர் வயவன் அன்றே - நீ பகைமையில்லாத ஆயிரங்குதிரைகளுக்குமட்டும ஒரு வீரனல்லவா, எண்இல் ஈறு இல்லாத பரிக்கு உம் - கணக்கில்லாத தமது வன்மைகளுக்கு ஓர் முடிவில்லாத குதிரைகளுக்கும், யானே ஒற்றைச் சேவகன் என்றான் - நானே யொரு சேவகனென்று கூறினார்.

நீ ஆயிரம்பரிக்கோர் சேவகனென்றிறுமாந்தாய் யானோ எண்ணில்லாத குதிரைவீரர்களை வெல்லவல்ல ஒரு வீரனெனத் தம்மைச் சிவபெருமானார் புகழ்ந்து கூறினமையால் நெடுமொழிவஞ்சித்துறை. கூறினான் முற்றெச்சம். (௧௬)

என்றசொல்லிடியேறென்னவிருசெவிதொளைப்பக்கேட்டு
நின்றவனெதிரேமின்னுநீட்டிச்சென்மேகம்போலச்
சென்றுவேல்வலந்திரித்துச்செயிர்த்தனனயிர்த்துச்சீற
வன்றிறனூற்றுப்பத்துவயப்பரிக்கொருவனஞ்சா.

(இ-ள்.) என்ற சொல் - என்று வேடுருவாய்வந்த சிவபெருமானார் கூறியருளிய சொல், இடியேறு என்ன - இடியேற்றினொலியைப்போல, இருசெவி தொளைப்ப கேட்டு நின்றவன் எதிரே - தனது இரண்டு செவிகளுந் தொளைபடக்கேட்டுநின்ற சோழனெதிரே, மின்னு நீட்டி செல் மேகம்போல சென்று - மின்னலைவீசிச்செல்லு மேகம்போலச்சென்று, வேல்வலம் திரித்து செயிர்த்தனன் - வேலை வலப்பாற்றிரித்துக் கோபித்து, அயிர்த்து சீற - மாறுபட்டுச்சீற, வன் திறல் நூற்றுப்பத்து வயப்பரிக்கு ஒருவன் அஞ்சா - வன்மையையும் வெற்றியையுமுடைய ஆயிரங்குதிரைகளுக்கு ஒருவனாகிய சோழன் அஞ்சி.

முன்னர்க்கூறிய சொல்லாலஞ்சித் தன்னை மறந்துநின்ற சோழனுக்கெதிரே மின்னல்போல வேலைத்திரிக்க அதனாற் கட்புலனுங்கலங்கிப் பின்னிட்டான் என்பார் நூற்றுப்பத்து வயப்பரிக்கொருவனஞ்சா என்றார். (கஎ)

யாமினியிந்தவேலாலிறப்பதற்கையமில்லை
யாமெனவகன்றான்மாவோடாயிரம்பரிக்கோர்மள்ளன்
காமனைவெருண்டவேடன்மறைந்தனன்கங்குற்சோதி
மாமகனதுகண்டோடும்வளவனைத்துரந்துசென்றான்.

(இ-ள்.) இனி யாம் இந்த வேலால் இறப்பதற்கு ஐயம் இல்லை யாம் என்ன-இனிநாமிந்த வேலினாற்சாதற்குச் சந்தேகமில்லையாமென்று, ஆயிரம் பரிக்கு ஓர் மள்ளன் மாவோடு அகன்றான்-ஆயிரங்குதிரைகளுக்கு ஒரு வீரனாகிய சோழன் புறங்கொடுத்து ஓடினான், காமனை வெருண்ட வேடன் மறைந்தனன் - மன்மதனையெரித்தருளிய வேடுருக்கொண்டுவந்த சிவபெருமானார் மறைந்தருளினர், கங்குல் சோதி மாமகன் அது கண்டு-இரவில் விளங்கும் சந்திரன் மரபிற்றோன்றிய சுந்தரேசபாதசேகரபாண்டியன் பார்த்து, ஓடும் வளவனை துரந்து சென்றான் - புறங்காட்டியோடும் அச்சோழனைத் துரத்திப்போயினான்.

வெற்றி பாண்டியன் வசத்ததாதலால் காமனை வெருண்ட வேடன் மறைந்தனன் எனவும், ஓடுகிறவன் துரத்துவோனுக் கெளியனாதலால் கங்குற்சோதி மாமகன் வளவனைத் துரந்துசென்றான் எனவுங் கூறினார். (கஅ)

துரந்திடுமளவிலோடுஞ்சோழனுந்திரும்பிநோக்கிக்
கருந்தடங்கண்ணிபாகங்கரந்தவேடுவனைக்காணான்
வருந்துயரச்சந்தீர்ந்தான்மதுரையினளவும்பற்றிப்
புரந்தரற்புறங்கண்டானைப்புறங்கண்டுமுடுக்கிப்போனான்.

(இ-ள்.) துரந்திடும் அளவில் ஓடும் சோழனும் திரும்பி நோக்கி-பாண்டியன் துரத்துங்காலத்தில் புறங்காட்டியோடும் சோழனுந் திரும்பிப்பார்த்து, கருந்தடம் கண்ணிபாகம் கரந்த வேடுவனை காணான் - கரிய பரந்த கண்களையுடைய உமாதேவியின் பாகத்தை மறைத்துவந்த வேட்டுவ மூர்த்தியைக் காணாமையால், வரும் துயர் அச்சம் தீர்ந்தான் - வந்த துன்பமும் பயமு நீங்கி, மதுரையின் அளவும்பற்றி - மதுரையினெல்லைகாறும்பற்றி, புரந்தரன் புறங்கண்டானை புறங்கண்டு முடுக்கி போனான்-இந்திரனைப் புறங்கண்ட பாண்டியனை முதுகுகண்டு விரைந்து துரத்திப்போயினான்.

ஓடிய சோழன் தன்னுயிர்க்கு உய்திவந்ததோ இன்றே எனப்பார்த்தான் என்பார் சோழனுந் திரும்பி நோக்கியெனவும், வேடுவமூர்த்தியாய்வந்த பெருமானைக் காணாமையால் இழந்த வீரம் வந்ததென்பார் துயரச்சந்தீர்த்தான் புறங்கண்டு முடுக்கிப்போனான் எனவுங்கூறினார். (கக)

காலொன்றுமுடுக்கப்பட்டகனலொன்றுநடந்தாலொத்து
வேலொன்றுதடக்கைகேரிவேந்தனுன்முடுக்குண்டோடுஞ்
சேலொன்றுகொடியினான்றன்செழுநகர்விரைந்துசெல்வான்
மாலொன்றுகளிற்றினுங்கோர்மதுமலர்க்கிடங்கில்வீழ்ந்தான்.

(இ-ள்.) கால் ஒன்று முடுக்கப்பட்ட - காற்றென்றினால் விரைந்து மூட்டப்பட்ட, கனல் ஒன்று நடந்தால் ஒத்து-நெருப்பொன்று விரைந்து நடந்தாலொத்து,

வேல் ஒன்று தடம் கை நேரி வேந்தனால் - வேலையேந்திய நீண்ட கையையுடைய சோழனால், முடிக்குண்டு ஓடும் சேல் ஒன்று கொடியினன் - தாக்கப்பட்டுப் புறங்காட்டியோடுங் கயற்கொடியையுடைய பாண்டியன், தன் செழுநகர் விரைந்து செல்வான் - தனது வளமிக்க மதுரையில் விரைந்து செல்லுகிறவன், மால் ஒன்று களிற்றின் - மதமயக்கத்தையுடைய யானை வீழ்ந்ததுபோல, ஆங்கு ஓர் மதுமலர் கிடங்கில் வீழ்ந்தான் - மதுரைத்திருநகரிலுள்ள ஒப்பில்லாத தேன் சிந்துந் தாமரைமலர்ந்த அகழியில் விழுந்தான்.

அச்சமிகுதியா லுணர்வழிந்திருத்தலின் மாலொன்று களிற்றின் எனவும், அகழியில் பாண்டியன் விழுந்தது சிவபெருமானார் திருவருளாதலின் மதுமலர்க்கிடங்கில் வீழ்ந்தான் எனவுங் கூறினார். (உ0)

மீனவன்மதுரைமூதூர்மேற்றிசைக்கிடங்கில்வீழ
மானவெம்புரவியோடும்வளவனும்வீழ்ந்தான்கூடற்
கோனவனருளால்வானோர்குரைகடல்கடையத்தோன்று
மானையினெழுந்தான்றென்னன்கோழிவேந்தாழ்ந்துபோனான்.

(இ-ள்.) மீனவன் மதுரை மூதூர் மேல் திசை கிடங்கில் வீழ - பாண்டியன் மதுரையென்னுந் தொன்றுதொட்டுள்ள திருநகரத்தின் மேற்றிசையிலுள்ள அகழியில் விழ, மானம் வெம்புரவி யோடும் வளவனும் வீழ்ந்தான் - மானத்தையுடைய கொடிய குதிரையோடும் சோழனும் அந்த அகழியில் வீழ்ந்தனன், கூடல் கோனவன் அருளால்-அம்மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளருளினால், வானோர்-தேவர்கள், குரை கடல் கடைய தோன்றும் ஆனையின் - ஒலிக்கும் கடலைக் கடையத் தோன்றிய வெள்ளையானையைப்போல, தென்னன் எழுந்தான் - பாண்டியனெழுந்தனன், கோழி வேந்து ஆழ்ந்து போனான் - உறையூர்க்கரசனாகிய சோழன் அவ்வகழியி லாழ்ந்திறந்தான்.

வீராவேசத்தாலுயிர்க்கிறுதியும் நோக்கானாயினான் என்பார் வளவனும் வீழ்ந்தான் எனவும், பாண்டியனுக்கு வெற்றிகூட்டுதல் பெருமானார் கடன் என்பார் தென்னனெழுந்தான், கோழிவேந்தாழ்ந்துபோனான் எனவுங்கூறினார். மானம் தன்னிலையிற்றாழாதுநிற்றலும், தாழ்வுவந்தவிடத்து உயிர்விடுதலுமாம். (உக)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

பிலத்தளவாழ்ந்தகடிமலர்க்கிடங்கிற்பெருந்தகையவிந்தவன்றுகில்பூண்
கலத்தரும்பேழைபடைபரிமான்றேர்கரியெலாங்கவர்ந்துதண்பொருநைத்
தலத்தவன்றங்கணுயகரணியத்தக்கதூசணிகலனல்கி
நலத்தகையவர்பேரருட்கடற்கன்புநதியெனப்பெருகிவீற்றிருந்தான்.

(இ-ள்.) பிலத்து அளவு ஆழ்ந்த கடிமலர் கிடங்கில் - பாதலத்தினளவு ஆழ்ந்துள்ள வாசமிக்க தாமரைமலர்கள் நெருங்கிய அகழியிலாழ்ந்தெழுந்த, பெருந்தகை - பாண்டியன், அவிந்தவன் துகில் பூண் - ஆழ்ந்திறந்த சோழனுடைய ஆடையும் பூணும், கலத்து அரும் பேழை படை பரிமான் தேர் கரி எல்லாம் கவர்ந்து - ஆபரணங்களை வைத்த பெறுதற்கரிய பெட்டியும் சேனையும் குதிரையும் தேரும் யானையுமாகிய இவைகளையெல்லாங் கைக்கொண்டு, தண் பொருநை தலத்தவன்-தண்ணிய தாமிரபர்ணி சூழ்ந்த பாண்டிநாட்டையுடைய அந்தச் சுந்தரேசபாதசேகரபாண்டியன், தங்கள் நாயகர் அணிய தக்க தூசு அணிகலன் நல்கி-தங்களிறைவரணியத் தான்

கவர்ந்துவற்றுள் திக்க ஆடையையும் ஆபரணங்களையுந்தந்து, நலத்தகையவர் பே ருட்கடற்கு - அவ்விறைவாது பெரிய திருவருளென்னுங் கடலினுக்கு, அன்பு நதியென பெருகி - தான்கொண்ட அன்பு நதியைப்போல உவட்டெடுக்க, வீற்றிருந்த ன் - வீற்றிருந்தான்.

பாண்டியன் என்றுந் தானிட்டும் பொருள்களுள் எஞ்சியதைச் சோமசுந்தரக்கடவுள் திருப்பணிக்குச் செலுத்துங்கருத்தை முட்டின்றி முடித்துவந்தானென்பது தோன்ற அணியத்தக்க ஆசணிகலனலகி அருட்கடற்கன்பு நதியெனப்பெருகி வீற்றிருந்தான் என்றார். பெருகி செயவெனெச்சத்திரிபு. (உஉ)

சோழனைமடுவிலவீட்டியபடலம் முற்றிற்று.



ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - ௨௬0௭.

## முப்பத்தெட்டாவது

# உலவாக்கோட்டையருளியபடலம்.



எழுசீரடியாசிரியவிருத்தம்.

மின்பணிக்கதிர்வேணிவானவன்மீனவன்றனைமானவேன்
முனபணிககவலநதிரித்துமுடுக்கிநேரியடுககலான்
பின்பணிககமலததடத்திறவிட்டவாறிதுபெருமைசா
லன்பனுககுலவாதகோட்டையளித்தவாறுகிளததுவாம்.

(இ-ள்) மின்பணி கதிர் வேணி வானவன் - மின்னலைப்போல ஒளிவீசுதலையுடைய விளங்கும் சடாமுடியையுடைய சோமசுந்தரக்கடவுள், மீனவன் தனை - பாண்டியன்பொருட்டு, மானம வேல் - மானமிக்க வேலினை, பணிக்க முன் வலம் திரிதது முடுக்கி-நடுக்கமுற எதிரே வலப்பால் திரிந்துத் துரத்தி, நேரி அடுக்கலான நேரிமலையையுடைய சோழன், பினபணிகமலம் தடத்து இறவிட்ட ஆறு இது-பின்பு குளிர்ந்த தாமரை நெருங்கிய அகழியில் வீழ்ந்திறக்கச்செய்தருளிய திருவிளையாடலிது, பெருமைசால் அன்பனுக்கு உலவாத கோட்டை அளித்த ஆறு - பெருமைமிக்க தமது அன்பராகிய அடியார்க்கு நல்லார்கு உலவாக்கோட்டையருளிய திருவிளையாடலை, கிளததுவாம் - இனிச் சொல்லுவாம்.

மீனவன்றனையென நான்கனுருபு நிற்குமிடத்து இரண்டனுருபு நின்றது உருபு மயக்கம். (க)

கலிநிலைத்துறை.

பொடியார்க்குமேனிப்புனிதர்க்குப்புனிதவேற்றாக்
கொடியார்க்குவேதக்குமிக்கினியானகூடற்
படியார்க்குஞ்சீர்த்திப்பதியேருழவோருணல்லா
னடியார்க்குநல்லானறத்திற்கும்புகழ்க்குநல்லான்.

(இ-ள்) பொடி ஆர்க்கும் மேனி புனிதர்க்கு - திருநீறணிந்த திருமேனியையுடைய மாசில்லாதவராகிய, புனித ஏறு கொடியார்க்கு - தருமவிடையெழுதிய

உலவாக்கோட்டையளித்ததிருவிளையாடல்.



கொடியையுடைய சோமசுந்தரக்கடவுளுக்கு (உறையுளாகிய,) வேதக்குமிக்கு இணையார்ன கூடல் - பிரபலசுருதிக்கொத்த மதுரையென்னும், படி ஆர்க்கும் கீர்த்தி பதி ஏர் உழவோருள் நல்லான் - நிலவுலகைத் தன்வசமாக்குங் கீர்த்தி நிறைந்த மதுரையில் வசிக்கும் வேளாளர் குலத்திற்றோன்றிய நல்லொழுக்கமுடையவராய், அடியார்க்கு நல்லான்-சிவனடியவர்க்கும் நல்லவராயிருத்தால் (அடியார்க்கு நல்லான் என்னும் அப்பெயர்பூண்டு,) அறத்திற்கும் புகழ்க்கும் நல்லான்-புண்ணியத்திற்கும் அவற்றால் வரும் கீர்த்திக்கும் நல்லவராய் ஒருவருள்ளார்.

புனிதர்க்கு, புனிதவேற்றுக்கொடியார்க்கு என ஒருபொருண்மேல்வந்த பலபெயர். இதனிறுதியில் பயனிலை எஞ்சிநின்றது. அடியார்கு நல்லராவார் அறத்திற் சிறிதுங் குன்றாராதலாலும் புகழ்தேடிவந்தடைய நிற்றலாலும் அறத்திற்கும் புகழ்க்கு நல்லான் என்றார். (உ)

அனையானறத்திற்கருள்போன்றவளான்றகற்பின்
மனையாண்மரபின்வழுவாததருமசீலை
யெனையாருநன்குமதிககவிருக்குநீரா
டனையாள்பதிக்குக்கதிக்குத்தனிச்சார்புபோல்வாள்.

(இ-ள்.) அனையரின் அறத்திற்கு அருள்போனறவள்-அந்த அடியார்க்கு நல்லவர் மேற்கொண்டொழுகும் புண்ணியத்தை வளர்த்தற்கு ஓரருளையொத்த, ஆன்ற கற்பின் மனையாள்-அமைந்த கற்பினையுடைய மனைவி, மரபின வழுவாததருமசீலை-தனது மரபிற்குரிய ஒழுக்கத்தினின்றுந் தவறாத தருமசீலையென்பவள், எனையாரும் நன்குமதிக்க இருக்கும் நீரான்-(அவள்) தன்கணவனொழிந்த மற்றை யெவரும் நன்குமதித்துப்போற்ற மனையறத்தில் வழுவாது நிற்குந் தனமையுடையவளும, தன்னை ஆள் பதிக்கு - தன்னைக்கொண்ட கணவ னடைதற்குரிய, கதிக்கு தனி சார்பு போல்வாள் - சிவகதிக்கு ஒப்பில்லாத ஒருபற்றுக்கோடா யுள்ளவளுமாயிருந்தனள்.

அறத்தை வளர்த்தற்கு அருளுடைமை இன்றியமையாச் சிறப்பினதாதலால் தன்கணவன்கொண்ட சிவபுண்ணியத்தை வளர்ப்பவளென்பார் அவள் அனையானறத்திற்கருள்போன்றவள் எனவும், இல்லறத்திற்குரிய கடன்களைத் தனது கணவன் சொல்வழிநின்று முட்டின்றி முடிப்பவளென்பார் ஆன்ற கற்பின் மனையாள் எனவும், தத்தம் வருணச்சிரம தன்மத்துக்குரிய வொழுக்கத்தினின்றுஞ் சிறிதுந்தவறாதவளென்பார் மரபின் வழுவாத எனவும், அக்காரணத்தால்வந்த பெயரினளென்பார் தருமசீலையெனவும், தனது நற்குண நற்செய்கைகளால் பலரும்புகழ மேம்பட்டவளென்பார் எனையாரு நன்குமதிக்க விருக்குநீராள் எனவும், இத்தன்மைப்பட்ட நற்குணநற்செய்கைகளால் தனது கணவன் கதிசேர்தற்கு ஓர் சோபானமாயிருப்பவளென்பார் தனையாள் பதிக்குக் கதிக்குத் தனிசார்பு போல்வாள் எனவுங் கூறினார்,

பல்லேருழவின்றொழில்பூண்டுபயன்கள்கொள்வான்
வில்லேருழவன்கடன்கொண்டுமிருந்தவெல்லாம்
இல்லேருழத்திமடைச்செல்வமியற்றியேந்த
அல்லேறுகண்டனடியாரையருத்துநீரான்.

(இ-ள். ) பல் ஏர் உழவின் தொழில் பூண்டு - பல ஏர்களாலுழுதொழில்பூண்டு, பயன்கள் கொள்வான் - பெரும்பயனடைய முயலும் அடியார்க்கு நல்லார், வில் ஏர் உழவன் கடன் கொண்டு மிருந்த எல்லாம் - வில்லாகிய ஏரால் பகைப்புலத்தை யுழும் அரசன்கொள்ளும் இறைபிறுத்து, மிகுந்த எல்லாம் - மிகுந்த எல்லாப்பொரு

னையும், இல் ஏர் உழத்தி - இல்லறமாகிய ஏரால் விருந்தின்புலத்தைத் திருத்துந் தரு மசீலை, மடைச்செல்வம் இயற்றி ஏந்த - அறு மாகிய செல்வத்தைப் பாகமசெய்தேந்த, அல் ஏறு கண்டன் அடியாரை அருத்தும் நீரான் - விடம்பொருந்திய ஸ்ரீகண்டத்தை யுடைய சிவபெருமா னடியவரை யுண்பிக்கும் தன்மையுடையவர்.

ஆறிலொருகூறு அரசற்கிறுக்குங்கடனுதலால் வில்லேருழவன் கடன்கொண் டு எனவும், எஞ்சிய ஐந்து கூற்றையும் தென்புலத்தவர் முதலிய ஐவருள் விருந்தின ர்க்கே யுண்பித்தலால் அல்லேறுகண்ட னடியாரையருத்து நீரான் எனவுங் கூறினர். வில்லேருழவன், இல்லேருழத்தி இயைபுருவகவணி.

தொகைமாண்டதொண்டர்சுவையாறுதழீஇயநான்கு
வகைமாண்டமாறுபடுமுண்டிமறுத்தருந்த
நகைமாண்டவன்பின்றலையாயவனல்கநல்கப்
பகைமாண்டசெல்வமணற்கேணியிற்பல்குநாளின்.

(இ-ள்.) தொகைமாண்டதொண்டர் - அளவிறந்த அடியார்கள், ஆறுசுவை தழுவிய நான்குவகைமாண்ட மாறுபடும் உண்டி - அறுசுவைமிக்க நான்கு வகையா ய் மாட்சிமைப்பட்டமைந்த தமமுள் மறுதலையாகிய வுணவுகளுள், மறுத்து அருந்த குடில்லாததை மறுத்துச் சூடுள்ளதை யுண்ண, நகை மாண்ட அனபின் தலையாயவ ன நல்க நல்க - மகிழ்ச்சிமாருத அன்பிறசிறநத அடியார்க்கு நல்லவர் ஊட்டுநதோ றும், பகைமாண்ட செல்வம - எவர்க்கு மனமிசைந்த செல்வமானது, மணல்கேணி யில் - ( எடுக்குந்தோறும் ) மணற்கேணி நீர் சுரத்தல்போல, பல்கும்நாளில் - செல் வம் குறையாதோங்குங்காலததில்.

நான்குண்டியாவன நககல், பருகல், உண்ணல், தின்னல் இவை செய்கை யால் வேறுபடுதலால் மாறுபடு முண்டியெனவும், படைத்ததில் முற்சிகைமாறறிப் பிற்சிகையுண்ணுதல் முறையாதலால் மறுத்தருந்த எனவும், அடியார்க் கிவ்வாறூட் டிவருவதால் பகைமாண்டசெல்வம் எனவும், குறைபடாமல் வளர்ந்தோங்குதல சிவபெருமானர் திருவருளா லாதலால் மணற்கேணியிற் பல்கு நாளின் எனவுங் கூறினர். (௫)

இந்நீரவாயவளங்குன்றினுமின்மைகூறாத்
தன்னீர்மைகுன்றுனெனுந்தன்மைபிறர்க்குத்தேற்ற
நன்னீரவயலின்விளைவஃகிநலிவுசெய்ய
மின்னீரவேணிமதுரேசர்விலக்கினுரே.

(இ-ள்.) இ நீர ஆய வளம் குன்றினும் - இத்தன்மையவாகிய பெருஞ்செல் வங்குறையினும, இன்மை கூறாத தன் நீர்மை குன்றான் என்னும் தன்மை - வறு மையடையாத தனது பத்தித்திறம் சிறிதுங் குறையானென்னுந் தன்மை, பிறர்க் கு தேற்ற - பிறர்க்குவிளக்க, நல் நீர் வயலின் விளைவு அஃகி நலிவு செய்ய - தெள் ளிய நீர்வளமிக்க வயலின் விளைவுகுறைந்து வருத்த, மின் நீர வேணி மதுரேசர் வி லக்கினர் - மின்னலைப்போலும் ஒளியமைந்த சடாமுடியையுடைய சோமசுந்தரக் கடவுள் அவ்விளைவை விலக்கியருளினர்.

நாம்பெழுந்த தேகம் வற்றினும் அடியவர்திறத்து அன்புசெய்தொழுகும் வ ழிபாட்டினின்றும் வழுவுதல் கூடாதென்பது ஆன்மாக்களுணர்ந்துய்யக் கருதினர் என்பார் நன்னீர்வயலின் விளைவஃகி நலிவுசெய்ய - மின்னீரவேணி மதுரேசர் வில க்கினர் என்றார். (௬)

குன்றாவிருத்திக்கடன்கொண்டுகொண்டன்பர்பூசை
நன்றாக்கடத்தத்தொடுத்தான்கடன்றானுமிட்டா
தொன்றானுங்கொண்டவிரதக்குறுதியின்றி
நின்றானுடம்பையொறுக்கின்றநியமம்பூண்டான்.

(இ-ள்.) குன்றாத - குறைவுபடாத, விருத்திக்கடன் கொண்டு கொண்டு - வட்டிக்குக் கடன்வாங்கிவாங்கி, அன்பர் பூசை நன்றாக நடத்த தொடுத்தான் - அடியவர் பூசையைக் குறைவின்றி நடத்தத்தொடங்கி, கடன் தானும் இட்டாது - கடனும் இடையாமல், கொண்ட விரதத்துக்கு ஒன்றானும் உறுதி இன்றி - தாம மேற்கொண்ட விரதமுடித்தற்கு மற்றொன்றினாலும் பற்றுக்கோடில்லாமல், நின்றான் - வாளாநின்றார், உடம்பை ஒறுக்கின்ற நியமம்பூண்டான ( அடியருண்டெஞ்சியதை யுண்ணுங் கட்டுப்பாட்டையுடையவராதலால் ) தமதுடம்பை வருத்துகின்ற நியமத்தைப் பூண்டனர்.

விருத்திககடன் என்றமையால் வட்டிக்குவாங்குங்கடன் என்றும். தொடுத்தான் முற்றெச்சம். (எ)

கொடுப்பாரவரேவிளைவுங்கடன்கோளுமாற்றித்
தடுப்பாரெனின்மற்றதையாவர்தடுக்கவல்லா
ரடுப்பார்விழுமங்களைவாரடியார்க்குநல்லூண
மடுப்பார்நியமந்தடைபட்டுவருந்துகின்றான்.

(இ-ள்.) அடுப்பார் விழுமங்களைவார் - தம்மையடைந்த அடியார் துன்பங்களைக் களைந்தருளும்பெருமானார், கொடுப்பார் அவரே -(அடியவர்க்குவேண்டியாங்கு) கொடுப்பவரும் அவரே, விளைவும் கடன்கோளும் மாற்றி தடுப்பார் என்னின்-அவரே விளைவையும் கடன்கோடலையுமாற்றித் தடுப்பாராயின், அதை தடுக்கவல்லார் யாவர்-அதனையிடையிற்புகுந்து தடுக்கவல்லவர்யார் (அதனால்) அடியார்க்கு நல் ஊண் மடுப்பார் - அடியவர்க்குச்சுவையமைந்த நல்லதிருவமுதையுண்பிக்கும் அடியார்க்கு நல்லார், நியமம் தடைபட்டு வருந்துகின்றான் - (தாமமேற்கொண்ட) கட்டுப்பாடு தடைபட்டு வருந்துகின்றவராயினார்.

தமதாணைவழிச்செல்லும் வினைப்போக்கினை யுயிர்க்குயிராய்நின்று ஊட்டும் இறைவரே ஊட்டாதொழியில் உண்பிப்பவர் வேறின்மையால் மற்றதை யாவர்தடுக்கவல்லார் என்றார். (அ)

விண்ணாறுசூடும்விடையான்றமர்க்கூட்டியன்றி
யுண்ணாதவனன்னுயிர்க்குத்துணையாயகற்பிற்
பண்ணார்மொழிதன்னொடும்பட்டினிவிட்டுநெஞ்சம்
புண்ணாகவாகம்பசித்தீயிற்புழுங்கப்பட்டான்.

(இ-ள்.) விண் ஆறு சூடும் விடையான் - ஆகாயகங்கைசூடிய சடாமுடியையுடைய பெருமானுடைய, தமர்க்கு ஊட்டி அன்றி உண்ணாதவன் - அடியவர்க்கு திருவமுதுசெய்வித்தல்லாமல் உண்ணாத அடியார்க்குநல்லவர், தன் உயிர்க்கு துணையாய கற்பின் - தமதுயிரையும்பெறுதற்கு ஒருபற்றுக்கோடாகின்ற கற்பினையும், பண் ஆர்மொழிதன் ஒடும் பட்டினிவிட்டு - இசையையொத்த சொல்லினையுமு

டைய மனைக்கிழத்தியோடும் புறத்திலிருக்க, நெஞ்சம் புண் ஆக - தமது நெஞ்சம்பு ண்ணுறவும், ஆகம் பசித்தீயில் புழுக்கப்பட்டான் - சரீரம் பசியாகிய தீயினுற்சுட்டு வருந்தப்பட்டார்.

அடியருண்டெஞ்சியதன்மையோராதலால் பட்டினிவிட்டுப் பசித்தீயிற்புழுங்க ப்பட்டான் என்றும். (௯)

இ[illegible]
வறக்குன்றனையான்மனையோடுமடைந்திச்செய்தி
நிறக்கின்றசெம்பொற்சிலையார்க்குநிகழ்த்தியாவி
துறக்கின்றதுவேதுணிவென்றுதுணிந்தபோனான்.

(இ-ள்.) அறம் குன்று அனையான் - சிவபுண்ணியத்தில் மலைபோலக் கலங் காநிலைமையையுடைய அடியார்க்கு நல்லவர், இறக்கும் உடம்பால் - நிலையாதிறக்கு ம இச்சரீரத்தால், இனிபெறும்பேறு யாவது என்று - (வறுமைமேலிட்டால) இனி நாமடையும்பயன் யாதென்றுகருதி, மனையோடும் அடைந்து - தமது மனைக்கிழத்தி யோடுஞ்சென்று சரணடைந்து, இ செய்தி - இந்தச்செய்தியை, நிறக்கின்ற செம் பொன் சிலையார்க்கு நிகழ்த்தி - விளங்குகின்றமேருவை வில்லாகவுடைய பெருமா னார்க்குக்கூறி, ஆவி துறக்கின்றதுவே துணிவு என்று துணிந்தபோனான்-உயிரைவி டுவதே தக்கதென்று துணிந்துசென்றார்.

நெடுந்தூரத்திலுள்ளோரால்காணப்படுந்தோற்றமும், ஒருவராலும் அசை க்கப்படாத நிலைமையையுமுடையவராதலால் அறத்திறகுன்றனையான் எனவும், நிலை யில்லாத சரீரத்தால் பெறும்பேறு அச்சரீரத்தாலாகிய அறப்பயனாதலால் இறக்கு முடம்பாற் பெறும்பேறினியாவதென்னுவெனவும், உயிர்க்குயிராய்நிறைந்த பெரு மானார் யாவுமுணர்வாராதலால் இச்செய்தி நிறக்கின்ற செம்பொற்சிலையார்க்கு நிக ழ்த்தியாவி - துறக்கின்றதுவே துணிவென்று எனவுங்கூறினார். (௬௦)

ஐயன்றிருமுன்னரடைந்தடிதாழ்ந்துவானோ
ருய்யும்படிநஞ்சமுதுண்டவொருவவுன்றன்
மெய்யன்பர்பூசைக்கிடையூறுவிளையவென்றன்
செய்யும்புலனும்விளைவின்றிச்சிதைந்தவென்று

(இ-ள்.) ஐயன் திருமுன்னர் அடைந்து - சோமசுந்தரக்கடவுள் சந்நிதியை யடைந்து, அடிதாழ்ந்து - திருவடிவணங்கி, வானோர் உய்யும்படி நஞ்சு அமுது உ ண்ட ஒருவ - தேவர்களுய்ய நஞ்சினை யமுதுசெய்தருளியபெருமானே, உன் தன் மெய் அன்பர்பூசைக்கு இடையூறு விளைய - உனது மெய்யிலன்பர்பூசனைக்குத்த டையுண்டாக, என் தன் செய்யும்புலனும் விளைவு இன்றி சிதைந்த என்று - என து நன்செய்யும் புன்செய்யும்விளைவு சுருங்கிக்கெட்டன.

குன்றமிர்த்தேவர்களுய்யும்படி யாவுமகிலக்கொல்லவெழுந்த நஞ்சினை யமு துசெய்தருளிய முதல்வனியாதலால் உனது அடியார்க்கு யான்செய்யும்பணிகுன்ற வொழுக்கவறுமையை யொழித்தல் அரிதன்று என்பதுதோன்ற உய்யும் படி நஞ்சமுதுண்டவொருவ என்றார். இஃதுக்குறிப்பெச்சம். (௬௧)

[illegible] அமுத [illegible] - கெடுதலில்லாத அமு [illegible] ஆகி - அமரேழிந்தயாவர்க்கும் அ [illegible] பலதருமங்களையுஞ்செய்வாய், வீடு மேல் நாள் அளிக்கின்ற [illegible] - வெகுதிலை பிறப்பில் தந்தருளுகின்றேமென் று, விசும்பில் கூற - ஆகாயத்திற்கூறியருள.

[illegible] முதலியோர் பலர்க்கும் எனக்கொள்க. (௧௪)

கேட்டின்பமெய்திக்கிளர்விம்மிதனாகிவேதப்
பாட்டின்பயனைப்பணிந்தில்லமடைந்துபண்டை
வீட்டுந்தவப்பேறெனக்கண்டனன்றொண்டர்க்கெந்தை
கூட்டுங்கதிபோலுலவாமற்கொடுத்தகோட்டை.

(இ-ள்.) கேட்டு - (அதனை) கேள்வியுற்று, இன்பம் எய்தி - இன்பமடைந்து, கிளர் விம்மிதன் ஆகி - மேலெழுந்தவியப்புடையவராகி, வேதப்பாட்டின் பயனை பணிந்து - வேதவாக்கியத்தின் பொருளாயுள்ள சோமசுந்தரக்கடவுளை வணங்கி, இல் லம் அடைந்து (தமது) வீட்டையடைந்து, பண்டை ஈட்டும் தவப்பேறு என்ன - மு ன்புதேடிய தவப்பயன்போல, தொண்டர்க்கு - அடியவர்க்கு, எந்தை - எமதுபெரு மானார், கூட்டும் கதிபோல் - அடைவிக்கும் பேரின்பம் (குறையாது என்றும் ஒருப டித்தாயிருத்தல்) போல, உலவாமல் கொடுத்தகோட்டை கண்டனன் - அழியாதி ருக்கக்கொடுத்தருளிய அரிசிக்கோட்டையைப்பார்த்தனர்.

வேதம் ஒவ்வொருகாரணம்பற்றிப் பலகடவுளரைக்கூறினும் அரசனைப்போ லத்தமது சத்திகளை யவர்கள்பாற்பதித்து அவரவர்காரியங்களை நிகழ்த்துமிறைவர் சிவபெருமானேயாதலால் வேதப்பாட்டின்பயன் எனக்கூறினர். (௧௫)

வானாறுசூடிதருகோட்டையைவைகறோறும்
பூநாறுசாந்தம்புகையொண்சுடர்கொண்டருச்சித்
தானாதசெவ்வியடிசிற்குமதற்குவேண்டு
நானாகருவிவிலைக்குமதுநல்கவாங்கி

(இ-ள்.) வான் ஆறு சூடி - கங்கைசூடிய சோமசுந்தரக்கடவுள், தருகோட் டையை - தந்தருளிய அரிசிக்கோட்டையை, வைகல் தோறும் - தினந்தோறும், பூ நா று சாந்தம் புகை ஒண்சுடர்கொண்டு அருச்சித்து - மலராலும் நறுமணங்கமழுஞ் சந் தனத்தாலும் தூபத்தாலும் ஒள்ளியதீபத்தாலும் அருச்சனைசெய்து, செவ்வி ஆனாத அடிசிற்கும் - பதம்நீங்காத அன்னத்திற்கும், அதற்கு வேண்டும் - அவ்வன்னத்திற்கு வேண்டிய, நானாகருவிவிலைக்கும் - பலவிதவுபகரணங்களைப்பெறும்விலைப்பொருட்கும், அது நல்க - அக்கோட்டைகொடுக்க, வாங்கி - வாங்கிக்கொண்டு,

சிவபெருமானார்கூறிய வழிபாட்டினின்றுங் கடவாதொழுகினா னென்பார் வைகறோறும்பூநாறுசாந்தம் புகையொண்சுடர்கொண்டருச்சித்து என்றார். (௧௬)

மின்றாழ்சடையான்றமராய்த்தவர்வேதச்செல்வர்
தென்னாடர்தெய்வம்விருந்தொக்கல்செறிந்தகட்டோர்
முன்னாமெவர்க்குமுறையாற்சொல்லவையாதுநல்கி
பொன்னாருகோயிற்பணியுமொன்னவைமாழ்க்காள்

(இ-ள்.) மின் ஆர் சடையான் தமர் - மின்னலையொத்த சடாமுடியையுடைய பெருமானுடைய அடியவரும், ஆய்ந்தவர் - ஆய்ந்த ஆராய்ச்சியையுடைய சைவரும், வேதச்செல்வர் - அந்தணரும், தென்னாடர் - பிதிரரும், தெய்வம் விருந்து ஒக்கல் செறிந்த நட்டோர் - தெய்வமும் விருந்தினரும் சுற்றத்தாரும் ஒன்றுபட்டுச் சேர்ந்த வரும், முன் ஆம் எவர்க்கும் - முதலாகிய யாவர்க்கும், முகில்போல் வரையாமல் நல்கி - மேகம்போலப் பிரதியுபகாரங் கருதாது கொடுத்து, என்றாள் உம் கோய் ஆறு - எப்பொழுதும வறுமையின்றி, அளகாதிபன் என்ன - குபேரனைப்போல, வாழ்ந்தான் - குறையாதசெல்வராய் நீடித்திருந்தார்.

அடியார்திருவேடத்தில் ஆன்மாக்கள் வழிபட்டுய்யச் சிவபெருமானுர் வசித்தருளுதலின் அவரே யிவராமென்பர் சடையான் தமர் எனவும், அவ்வடியவரிடத்துக்கொண்ட அன்பு என்றும் ஒருபடித்தாய் நிற்க வறபுறத்தும்பேறறிஞர் வேதாகமங்களையுணர்ந்தோர் என்பார் ஆய்ந்தவர் வேதச்செல்வரெனவும், இவர்களையும்வழிபட்டொழுகுதல் ஒருதலை யென்பார் பின்னர்க்கூறுதற்குமுற்படவும், அவர் இல்லறவொழுக்கத்திலும் சிறிதும் வழுவாது நின்றனர் என்பார் தென்னாடர் தெய்வம் விருந்தொக்கல் செறிந்த நட்டோர் எவர்க்கும நல்கியெனவும், இறைவர் தந்தருளியது எவ்விதக்குறைபடாப்பெருஞ்செல்வம் என்பார் நோயின்றளகாதிபனென்னவாழ்ந்தான் எனவுங்கூறினுர். (எ)

மேறபடி வேறு.

அன்பனடியார்க்கினியானனிநாளளந்தல்கித்
தன்பன்னியோடுமயலார்சுற்றந்தமரோடும்
பின்பக்நிலேயேயிமவான்மகளைப்பிரியாத
வின்பவுருவாய்ச்சிவமாநகர்சென்றிறைகொண்டான்.

(இ-ள்.) அன்பன் - சிவநேயராகிய, அடியார்க்கினியான் - அடியார்க்கினியார், நனி நாள் அலந்து அல்கி - அநேகநாளிருந்து ஆயுள்முடிந்து, தன் பன்னியோடும் - தமதுமனைவியோடும், அயலார் சுற்றம் தமர் ஓடும் - தமது ஏவல்செய்வோரும் சுற்றத்தாரும் தமக்குரிய கிளைஞருமாகிய இவர்களோடும், பின்பு அந்நிலையே - பின்பு இவ்வுலகில்நின்றபடியே, இமவான்மகளை பிரியாத இன்பன் உருவாய் - உமாதேவியாரைப் பிரிந்தறியாத சிவபெருமானுர் சாரூப்பியம்பெற்று, சிவமாநகர் சென்று இறைகொண்டான் - சிவபுரத்திற்சென்றுவசித்தார்.

ஏவல்வழிநிற்போர் அவர்மரபினரல்லராதலால் அயலார் எனவும், தமர்என்றது தாய்வழி தந்தைவழி மனைவிவழியராதலால் அவரொழிந்தோரைச் சுற்றம் எனவும், இந்நிலவுலகில் நின்றபடியே சாரூப்பியம்பெற்றுச்சென்றனர் ஆதலால் அந்நிலையே யெனவும், சிவபெருமானுர் திருவருளேயாதலால் இமவான்மகளைப்பிரியாத வின்பன்றுருவாய் எனவுங்கூறினுர். (கஅ)

உலவாக்கோட்டையருளியபடலம் முற்றிற்று.

---

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - கஉஅ௯.

[illegible]

# மாமனாகவந்து வழக்குரைத்தபடலம்

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தாமநாறிதழியார்தமர்க்கன்பன்வறுமைப்பட்டோ
னாமநாறுலவாக்கோட்டையருளியமுறையீதையன்
றேமனாண்முல்லைத்தீந்தார்ச்சிறுதைவணிகற்காக
மாமனாம்படிவங்கொண்டுவழக்குரைவண்ணஞ்சொல்வாம்.

(இ-ள்.) தாமம் நாறு இதழியார் - மணம்வீசும் கொன்றைமாலையையணிந்தபெருமானார், தம் தமர்க்கு அன்பன் வறுமைப்பட்டோன் ஆம் அந்நாள் - தமதடியார்க்கடியார் வறுமைப்பட்ட அந்நாளில், உலவாக்கோட்டை அருளியமுறை ஈது - உலவாக்கோட்டையருளிய திருவிளையாடலிது, ஐயன் - அச்சோமசுந்தரக்கடவுள், தேமன் நாள் முல்லை தீந்தார் - தேனிலைபெற்ற அன்றலர்ந்த இனிய முல்லைமலர்மாலையையணிந்த, சிறுதை வணிகற்கு ஆக - பிள்ளைப்பருவத்தையுடைய ஒருவணிகனுக்காக, மாமன் ஆம் படிவம் கொண்டு - அவன்மாதுலன் திருவுருவங்கொண்டு, வழக்கு உரைவண்ணம் சொல்வாம் - வழக்குப்பேசி ஞாதிகளை வென்றருளிய திருவிளையாடலை யினிக்கூறுவாம்.

பிரணவப்பொருள் தாம் என்ப துணர்த்துதற்கு ஓரறிகுறியாக அணிந்தனர் என்பார் தாமநாறிதழியார் என்றார். (க)

கன்னிநான்மாடக்கூடற்கடிநகர்வணிகமாக்க
டன்னின்மாநிதிக்கோனன்னான்றனபதியென்னும்பேரான்
மன்னினனனையான்கற்பினமடவரல்சுசீலையென்பாள்
பொன்னினுண்முளரிச்சேக்கைப்புண்ணியத்திருவினன்னாள்.

(இ-ள்.) கன்னி நான் மாடக்கூடல் கடிநகர் - என்றுமழியாத மதுரையென்னுங் காவல்பூண்ட திருநகரில்வசிக்கும், வணிகமாக்கள் தன்னில் - வணிகருள், மாநிதிக்கோன் அன்னான் - குபேரனையொத்த, தனபதி என்னும் பேரான் மன்னினன் - தனபதியென்னும் பெயரையுடைய ஒருவணிகனிருந்தனன், அனையான் கற்பின் மடவரல் - அவ்வணிகனது கற்பினையுடைய மனைக்கிழத்தி, சுசீலை என்பாள் - சுசீலையென்னும் பெயரையுடையவள் (அழகில்) பொன்னின் நாள் முளரிச்சேக்கை - பொன்போலன்றலர்ந்ததாமரைத்தவிசில் வசிக்கும், புண்ணியம் திருவின் அன்னாள் - புண்ணியவடிவாகிய இலட்சுமியையொத்தவள்.

மதுரைக்குக் கன்னிநாடு என்பது ஒருதிருநாமமாதலால் கன்னிநாடாகிய நான்மாடக்கூடல் என்று பொருள்கூறுதலும் ஒன்று. குபேரனையொத்திருத்தல் தனதுபெயர்க்காரணத்தால் விளக்கினர் என்பார் தனபதியெனவும், அவன்மனைவி கற்பின்[illegible]யைத் தனதுபெயர்க்காரணத்தால் விளக்கினர் என்பார் சுசீலையெனவுங் கூறினார். (உ)

எனவிவர்தமக்குமைந்தற்பேறின்மையிரங்குகா[illegible]
தனபதிமருகன்றன்னைத்தத்துவ[illegible]
மனமகிழ்சிறப்பா[illegible]
[illegible]

மாமனாகவந்துவழக்குரைத்ததிருவிளையாடல்.



(இ-ள்.) என இவர் தமக்கு - என்றுசொல்லப்பட்ட இவர்களுக்கு, மைந்தன்பேறு இன்றி இரங்கும் நாளில் - புத்திரப்பேறில்லாமல் வருந்துங்காலத்தில், தனபதி - தனபதியென்னும்வணிகன், மருகன் தன்னை - தனது தங்கையின்புத்திரனாகிய மருகனை, தகவுசால் மகவு ஆகக்கொண்டு - நல்லொழுக்கமிக்க புத்திரனாகக்கொண்டு, மனம் மகிழ்சிறப்பான் நல்க - மனமகிழ்ந்துசிறப்புப்பொருள்கொடுக்க, மனைவியும தொழுது வாங்கி - மனைவியுங் கைகூப்பிவாங்கி, புனைவன புனைந்துபோற்றி-பின்ளைப்பருவத்திலணியும் ஆபரணங்களையணிந்து பாதுகாத்து, பொலிவுற வளர்த்துக் கொண்டாள் - காணுக்குநாளோங்க வளர்த்துவந்தனள்.

புத்திரப்பேறு பரபோகத்திற்கோர் துணையாதலால் மைந்தற்பேறின்றியிரங்குநாள் எனவும், அதனைப் பொருளினு மிக்கதாகத்தேடவேண்டுவதாதலால் மருகனறன்னைத் தகவுசானமகவாகக்கொண்டு எனவும், சிவிகாரயகொளளுங்காலையில் பலருமறிய விழாக்கொண்டாடுதலால் மனமகிழ்சிறப்பான் எனவுங்கூறினர். (௯)

தனபதிமகப்பேறற்றானாயினுந்தணவாக்காதன்
மனைவிமேல்வைத்தவாசைமயக்கினால்வருந்தியீன்ற
தனையனைமகவாத்தந்ததங்கைமேறீராப்பூசல்
விளைவிளைத்தொழுகவோர்நாளிளையளும்வெகுண்டுசொல்வாள்.

(இ-ள்.) தனபதி - தனபதியென்னும வணிகன், மகபேறு அற்றான் ஆயினும்-புத்திரப்பேறில்லாதவனானாலும், தணவாதகாதல்-நீங்காதவிருப்பதனையுடைய, மனைவிமேல் - தனதுமனைக்கிழத்தியின்மேல், வைத்த ஆசைமயக்கினால் - கொண்டகாதல்மயக்கததால், வருந்தி ஈன்றதனையனை - தான்வருந்திப்பெறறபுத்திரனை, மக ஆக தந்த தங்கைமேல் - தனக்குப்புத்திரனாகத்தந்ததங்கையின்மேல், தீராத பூசல்வினை விளைத்து ஒழுக - நீங்காதபோர்செய்தவர, ஓர் நாள் - ஒருதினம, இளையளும் வெகுண்டு சொல்வாள் - அவன்தங்கையும்கோபித்து (தனக்கு மூத்தோனைநோக்கி) கூறுகின்றாள்

கற்பின்வழிநிற்பவன் ஆதலால் தணவாககாதல் எனவும, அவன் மனைவிமேல வெறுப்பிலனாதலால் வைத்த ஆசைமயக்கினால் எனவுங்கூறினர். (௰)

பெருமிதமுனக்கேன்பிள்ளைப்பேறற்றபாவிநீயென்
னருமைநன்மகனாலன்றோவிருமையுமடைவாயென்னப்
பெரிதுநாணடைந்துமேலைக்காயினும்பிள்ளைப்பேறு
தருதவம்புரிவேனென்றுத்தனபதிதவமேற்செல்வான்.

(இ-ள்.) உனக்கு பெருமிதம் என் - உனக்குவந்த இறுமாப்பு என்ன, நீபிள்ளைபேறு அற்றபாவி - நீபுத்திரப்பேறில்லாதபாவி, என் அருமை நல் மகனால் அன்றோ - என்னுடையபெறுதற்கரிய நல்லபுத்திரனாலல்லவா, இருமையும் அடைவாய் என்ன - இகபோகத்தையும் பரபோகத்தையும் அடையப்போகின்றாயென்றுகூற, பெரிதும் நாண் அடைந்து - மிகவுநாணங்கூர்ந்து, மேலைக்கு ஆயினும் - வருபிறப்பிற்காயினும், பிள்ளை பேறு தருதவம் புரிவேன் என்று - புத்திரபாக்கியத்தைத்தரும் தவத்தைச்செய்வேனென்று, தனபதி தவம் மேல் செல்வான் - தனபதி தவஞ்செய்யப்போவானாயினன்.

[illegible] தருக்கவத்தைச்செய்யா [illegible] மேல் தவஞ்செய் [illegible] தருதம்புரிகவென்ருத் த [illegible] (ரு)

தன்பெருஞ்செல்வமெல்லாமருமகன்றனக்கேயாக்கி
யன்புகொண்மனைவியோடுமருந்தவநெறியிற்சென்ருன்
பின்பவன்வரவுதாழ்ப்பமருமகன்பெற்றவெல்லாம்
வன்பினுல்வழக்குப்பேசிவெளவினுர்தாயமாக்கள்.

(இ-ள்.) தன்பெருஞ் செல்வம் எல்லாம் - தன்னுடைய அளவிறந்தற்கரிய செல்வத்தையெல்லாம், மருமகன் தனக்கே ஆக்கி - தனதுமருகனுக்கே யுரியதாக்கி, அன்புகொள் மனைவியோடும் - அன்புமிக்க தனது மனைவியோடும், அருந்தவம் நெறியில் சென்ருன் - செய்தற்கரிய தவஞ்செய்தலின மேற்சென்றனன், பின்பு-பின்னர், அவன்வரவுதாழ்ப்ப - (தவமேற்சென்ற) அத்தனபதியின்வருகைநீட்டிக்க, மருமகன் பெற்ற எல்லாம் - மருகன் (தன்மாதுலனுகிய தனபதியிடத்துப்) பெற்ற பெருஞ்செல்வத்தையெல்லாம், வன்பினுல் வழக்கு தாய மாக்கள் பேசி - நீதிகோடிச்சழக்கினைத் தனபதினுதிகள்பேசி, வெளவினுர - கவர்ந்துகொண்டார்கள்.

சிவிகாரங்கொண்டவன்றேயர்வும் அவனுக்குரியனவாயினும் அவை இன்ன இன்னவென வரையறுத்துக்காட்டவேண்டுதலால் அவையிவையெனக்காட்டினுன் எனயார் தன்பெருஞ்செல்வமெல்லாமருமகன்றனக்கேயாக்கியெனக் கூறினுர்.(சு)

விளைநிலனடிமைபைம்பூண்வெறுக்கைநன்பசுக்களேனை
வளனுமாற்றவர்கைக்கொள்ளவன்சிறையிழந்தபுட்போற்
றளர்வுறுமகனுந்தாயுஞ்சார்பிலார்தமமனோர்க்கோர்
களைகணுயிருக்குங்கூடற்கடவுளேசரணமென்ன.

(இ-ள்.) விளை நிலன் அடிமை - கழனியும் அடிமையாளும், பைம்பூண் வெறுக்கை நன்பசுக்கள் - பசிய ஆபரணமும் திரவியமும் நல்லபசுக்களும்,ஏனைவளனும-மற்றைப்பொருள்களுமாகிய இவைகளை, மாற்றவர் கைக்கொள்ள - பகைவர்கள் கவர, வன்சிறை இழந்த புள்போல் - வலியசிறையிழந்த பறவையைப்போல, தளர்வுறும் மகனும் தாயும் - வருந்தும்பிள்ளையும்தாயும், சார்பில்லார் தம்மனோர்க்கு-ஒருபற்றுக்கோடுமில்லாத தம்போலியர்க்கு ஓர் களைகணுய் இருந்தகூடல் கடவுளே - ஒருபற்றுக்கோடாயுள்ள மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளே, சரணம் என்ன - அடைக்கலமென்றுகருதி.

அவர்க்கோர் துணையில்லையென்பார் வன்சிறையிழந்தபுட்போல் எனவும், யாருமில்லார்க்குத் தெய்வந்துணையென்பது வழக்கென்றுளனென்பார் சார்பில்லார் தம்மனோர்க்கோர் களைகணுயிருந்த கூடற்கடவுளே சரணம் எனவுங்கூறினுர். சார்பில்லார் என்னும் வினைமுற்றுப்பெயரெச்சமாயினது. (எ)

வந்துவானகமபோழ்ந்தமணிமுடிவிமானக்கோயிற்
சுந்தரநாதன்பாதத்துணைதொழுதிறைஞ்சியார்க்குந்
தந்தையுந்தாயுமாகுந்தம்பிரானீரேயெங்கட்
கெந்தையுந்தாயுமென்னுவிரங்கினின்றிவையசொல்வாள்.

(இ-ள்.) வான் அளவி போழ்ந்த வந்த - விண்ணுலகையளாவிப் பிளந்து வந்த, மணிமுடி விமானம் கோயில் - இரத்தினமிழைத்த சிகரத்தையுடைய இந்திர விமானமாகிய திருக்கோயிலுள்ளெழுந்தருளிய, சுந்தரன் பாதம் தலை தொழுது இறைஞ்சி - சோமசுந்தரக்கடவுளுடைய இரண்டு திருவடிகளையும் வணங்கிப் பணிந்து, யார்க்கும் தந்தையும் தாயும் பிரான் நீரே - எவ்வுயிர்க்கும் அம்மையப்பராகிய இறைவர் நீரே யிர்களு ள் ஒருவராகிய) கி நின் று இனியசொல் வாள் று இத்தன்மையையுடைய குறைபாடுகளைச் சொல்லா நின்றனள்.

எவ்வுயிர்க்கும் வினைவழி அருந்தர் கொண்டருத்தா லூட்டுவோராதலால் யார்க்குந் தந்தையுந் தாயுமாகுந் தம்பிரானீரேயெனவும், அவ்வுயிர்களுள் தாமும் அடங்கிநிற்றலால் எங்கட்குந் தந்தையுந்தாயுமென்றுமெனவும், அன்னோர்பால் குறை யிரத்தல் தக்கதாதலால் இரங்கியின்றினியசொல்வாள் என்னவுங் கூறினார் "செய் தவேள்வியர்" என்றாற்போலவந்து போழ்ந்த எனவந்தது. (அ)

என்மகன்றன்னை மைந்தனின்மையாலெவருங்காணத்
தன்மகனாகக்கொண்டு தகுதியாலன்றேகாணி
பொன்மனைபிறவுநல்கிப்போயினனெம்முனிப்பால்
வன்மையாற்றாயத்தார்களவையெலாம்வௌவிக்கொண்டார்

(இ-ள்.) மைந்தன் இன்மையால் என்மகன்றன்னை - தனக்குப்புத்திரனில் லாமையால் என்புத்திரனை, எவரும் காண - யாவருமறிய, தன்மகன் ஆக கொண்டு - தனக்குப்புத்திரனாகக்கொண்டு, தகுதியால் — நடுநிலைமையோடு, அன்றே - அப்பொழுதே, காணி பொன் மனை பிறவும் எம்முன் நல்கி - தனக்கு ஆட்சியாயுள்ள நிலங்களையும் திரவியத்தையும் வீடுகளையும் ஏனைப்பொருள்களையும் என் மூத்தோன் என் மகனுக்குக்கொடுத்து, போயினன் -(தவத்தின்மேல்) சென்றான், இப்பால்- சிறிதுநாள்கழிந்தபின், தாயத்தார்கள் - (அவன்) ஞாதிகள், வன்மையால் - கொடு வழக்குப்பேசி, அவை எல்லாம் வவ்விக்கொண்டார் - அப்பொருள்களையெல்லாங் கவர்ந்துகொண்டார்கள்.

இவிகாரத்திற் கேற்பத்தனக்குரியனவெல்லாந் தருதல் முறையாதலால் தகுதியால் என்றான். (௬)

ஒருத்தியானொருத்திக்கிந்தவொருமகனிவனுக்கேறுங்
கருத்திலாச்சிறியன்வேறுகளைகணுங்காணேனைய
வருத்திசாலறவோர்தேறுமருட்பெருங்கடலேயெங்கு
மிருத்திநீயறியாய்கொல்லோவென்றுபாரடியவீழ்ந்தாள்,

(இ-ள்.) ஐய-ஐயனே நான் ஒருத்தி - நானொருத்தி. ஒரு இந்த ஒரு மகன் - தனியின்றின்ற எ இந்தப்பிள்ளையோ ஏகபுத்திரன், இவனும் - இப் த்தறியுங்கருத்துவராத ரட்டையு முன்னையன் றியறியேன், அருத்திசால் அறவோர் தேறும் - அன்புமிக்க அடியவர்தெளிந்தன்ற பெரு அருள் கடலே - பெரியகருணாசமுத்திரமே, எங்கும் நீ இருத்தி - எவ்விடத்

[illegible] இட்டனன் - பல்கும்பிய அ[illegible] பீடத்திருந்து, ஆன்றோர் [illegible] ஆய்ந்துணர்ந்த முடிபை [illegible] - எங்களுக்குரிய பொருளைக்கொடுத்துச் செல்லுங்கள்.

குடிகளை அரசனுணர்வின்வழிநின்றெழுகுதலாதலால் இட்டனனரசனுணை என்றான். (கஉ)

என்றனன்மறித்தலோடுமிழுக்குரையாடிவைது
வன்றிறல்வலியார்தள்ளியடித்தனர்மைந்தனோடுஞ்
சென்றனன்முறையோவென்றுத்திருந்தறத்தவிசினோர்மு
னின்றுரையாடினான்கேட்டறிந்தனர்நீதிநூலோர்.

(இ-ள்.) என்றனன் மறித்தலோடும் - என்று அரசனாணைகூறிமறுக்க, வன்றறல் வலியர் - வன்மைமிக்கஞாதிகள், இழுக்கு உரை ஆடி வைது தள்ளி - தவறு வார்த்தைபேசிவைது பிடர்பிடித்துத்தள்ளி, மைந்தன் ஓடும் அடித்தனர் - புதல்வனோடும் (அவனை) அடித்தார்கள், முறையோ என்று இருந்த அறத்தவிசினோர் முன் சென்றனன் நின்று - இது முறையோவென்று புலம்பிக்கூவித் திருந்திய நியாயபீடத்திருந்தோர் முன்சென்றுநின்று, உரையாடினான் - குறைகூறினான், நீதி நூலோர் கேட்டு அறிந்தனர் - மநுநூலுணர்ந்த அக்கியாயாதிபதிகள் அதனைக்கேட்டுணர்ந்தார்கள்.

அரசனாணைக்குமஞ்சாத கொடியர் என்பார் வன்றிறல் வலியர் என்றார். கக

அறத்தவிசிருப்போரேவலாடவரோடும்போந்து
மறித்தவைக்களத்திற்கூட்டிவந்தனள்வந்தவெல்லை
யறக்கொடிபாகர்வெள்ளியம்பலவாணர்தாமத்
திறத்தனபதியேயென்னத்திருவுருக்கொண்டுசெல்வார்,

(இ-ள்.) அறத்தவிசு இருப்போர் - நியாயபீடத்திருப்பவர், ஏவல் ஆடவரோடும் போந்து - ஏவியவேவுகாரரோடுஞ்சென்று, மறித்து (ஞாதிகளைச்செல்ல ஒட்டாது) மறித்து, அவைக்களத்தில் கூட்டிவந்தனன் - நியாயதலத்திற்கு உடன் கொண்டு சென்று, வந்த எல்லை - அடைந்தகாலையில், அறக்கொடிபாகர் வெள்ளியம்பலவாணர் தாம் - உமாதேவியை இடப்பாகத்தி லுடையவராகிய சோமசுந்தரக்கடவுள், அத்திறம் தனபதியே என்ன திரு உரு கொண்டு செல்வார் - (தவமேற்சென்ற) அத்தனபதியேபோலத் திருவுருவங்கொண்டருளி வருவாராயினார்.

முப்பத்திரண்டறமும்வளர்த்தவர் ஆதலால் அறக்கொடிபாகர் என்றார். (கஎ)

கலிவிருத்தம்

[illegible]

(இ-ள்.) [illegible]

வெட்டெழுத்து உறும் வியாயத்தை [illegible] தனபதி வணிகர் தந்த தனம் எல்லாம்- தனபதி வணிகர் தாமுன்பு [illegible], தந்தம் மைந்தற்கு என்ற மனை எழுதி வாங்கி ஈந்தனர் - [illegible] புரியதென்று அவராற் சாதனமெழுதிவாங்கிக் கொடுத்தார்கள், ஈந்த எல்லை - கொடுத்த சமயத்தில், மனம் மொழி கடந்த நாய்கர் மறைந்து - மனவாக்கிறந்த வணிகத் திருவுருக் கொண்டுவந்த சோமசுந்தரக்கடவுள் அத்திருவுருக்கரந்து, தம் கோயில் புக்கார் - தமது திருக்கோயிலு ளெழுந்தருளினார்.

தனபதி யுருக்கொண்டு வந்தனராயினும் சுட்டறிவிற் கெட்டாதவர் என்பார் மனமொழிகடந்த நாய்கர் என்றார். (௰௫)

இம்மெனப்பலருங்காணமறைந்தவரிருந்தண்கூடற்
செம்மலென்றறிந்துநாய்கச்சிறுவனுக்குவகைதூங்க
விம்மிதமடைந்துவேந்தன்வரிசையுள்வெறுப்பநல்கிக்
கைம்மறிவணிகர்கோயில்புதுக்கினான்கனகங்கொண்டு.

(இ-ள்.) இம் மென பலரும் காண மறைந்தவர் - இம்மெனும் அளவில் யாவருமறிய மறைந்தருளிய வணிகர், இருந்தண் கூடல் செம்மல் என்று அறிந்து-பெரிய தண்ணிய மதுரையி லெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளே யென்று (நியாயாதிபதிகளால்) தெரிந்து, வேந்தன் - சுந்தரேசபாதசேகரபாண்டியன், விம் மிதம் அடைந்து - பெருவியப்புக்கொண்டு, நாய்கச் சிறுவனுக்கு உவகை தூங்க - செட்டிப்பிள்ளைக்குக் களிப்புமிக, வரிசை உள் வெறுப்ப நல்கி - பலவரிசைகளையும் அவன் மனம் வெறுக்கக் கொடுத்து, கைமறி வணிகர் கோயில் - திருக்கரத்தில் மானேந்திவந்த பெருமானார் திருக்கோயிலை, கனகம் கொண்டு புதுக்கினான் - பொன்னாற் புதுக்கினான்.

முன் செய்த மகிழ்ச்சியினும் அரசன் செய்த மகிழ்ச்சி யெல்லையில்லாத தென்பார் நாய்கச் சிறுவனுக்குவகைதூங்க வரிசையுள் வெறுப்பநல்கி யென்றார்.

கலிநிலைத்துறை.

பூதநாயகன்பூரணசுந்தரப்புத்தேள்
பாதசேகரன்வரகுணபாண்டியன்புயத்தி
லோதநீருலகின்பொறைசுமக்கவைத்தும்பர்
நாதர்சேவடித்தாமரைநகைநிழலடைந்தான்.

(இ-ள்.) பூதம் நாயகர் - பஞ்சபூதங்களுக்கும் இறைவராகி, பூரணம் - அவற்றுள்ளும் புறம்பும் நிறைந்த, சுந்தரப்புத் தேள் பாத சேகரன் - சோமசுந்தரபாதசேகரபாண்டியன், வரகுணபாண்டியன் புயத்தில் - வரகுணபாண்டியன் தோளில், ஓதம் நீர் உலகின் பொறை சுமக்க வைத்து - கடல்சூழ்ந்த பூபாரத்தைத் (தனது தோளினின்று மிறக்கி) ஏற்றி, உம்பர் நாதர் - சிவபுரத்தின் றலைவராகிய பெருமானுருடைய, தாமரை சேவடி நகை நிழல் அடைந்தான் - தாமரைமலர்போன்ற செவ்விய திருவடியின் விளங்கு நிழற்கீழ்க் கலந்தனன்.

பூதநாயகர் என்பதற்குப் பூதகணத்தலைவர் எனப் பொருள் கொள்ளுதலும் ஒன்று, அவர் தாளைவழி நிற்பதென்பார் பூதநாயகரெனவும், அவற்றின் குணங்களையெல்லாம் இயங்குவன வென்பார் பூரணசுந்தரப்புத்தேள் எனவும், மன்னுயிர்க்குக் கோடை வெப்பாற்றும் மர நிழல்போலப் பிறவி வெப்பாற்றும் திருவடிநிழல் இ

வரகுணனுக்குச்சிவலோகங்காட்டியதிருவிளையாடல்.



து எதி - சேனாசமுத்திரத்தின்மேற்சென்று போர்க்கெழுந்து, மீனக்கொடியான் அமர் ஆட - கயற்கொடியையுடைய பாண்டியன் போர்செய்ய, ஆழி கடைந்தேறு வெற்பில் கலங்கிற்று என - பாற்கடலானது கடைய எழுந்த மந்தரகிரியால் நிலைகலங்கியதுபோல, ஒள்ளி சேனை உடைந்து ஏக - சோழன் சேனையானது நிலைகலங்கியோட, உள்ளம் வெள்கா - (அதுகண்டு சோழன்) மனம் நாணி, உடைந்து வெந்நிட்டு ஓடினன் - நிலைகலங்கிப் புறங்காட்டி யோடினான்.

சோழன் சேனையைக் கடலாகவும், வரகுணபாண்டியனை மந்தரகிரியாகவுங் கொண்டு அம்மந்தரகிரியால் கடல் நிலை கலங்கியதுபோல அப்பாண்டியனால் சோழன் சேனை நிலைகலங்கிச் சிதறியது என நிற்றலால் தொழிலுவமையணி. (கஅ)

சுறவக்கொடியண்ணறுரந்துபின்பற்றிச்செல்வோன்
புறவக்கடிமுல்லையுந்தாமரைப்போதுமேந்தி
நறவக்கழிநெய்தலங்கானலின்ஞாங்கர்மொய்த்த
இறவப்புலவுகழுவிர்ந்துறைப்பொன்னிசேர்ந்தான்.

(இ-ள்.) சுறவம் கொடி அண்ணல் துரந்து பின்பற்றி செல்வோன் - கயற்கொடியையுடைய வரகுணபாண்டியனால் துரத்திப் பின்பற்றிச் செல்லப்பட்ட சோழன், புறவம் கடி முல்லையும்-முல்லைநிலத்திலுள்ள வாசமிக்க முல்லைமலரையும், தாமரைபோதும் ஏந்தி - தாமரைமலரையுமேந்தி, நறவம் கழி நெய்தல் கானலின் ஞாங்கர்-தேன்சிந்துங் கழிசூழ்ந்த நெய்தனிலத்திலுள்ள சோலையின்பக்கத்தில், மொய்த்த இறவம் புலவு கழுவு ஈர்ந்துறை பொன்னி சேர்ந்தான்-நெருங்கிய இறாலின்புலால் நாற்றத்தைப்போக்கும் குளிர்ந்த துறையையுடைய காவிரிநதியை யடைந்தனன்.

பூசத்துறையிற்புகுந்தாடியப்பொன்னித்தென்சார்
வாசத்திடைமாமருதைப்பணிதற்குவையைத்
தேசத்தவன்கீழ்த்திசைவாயில்கடந்துசெல்லப்
பாசத்தளையும்பழியும்புறநின்றவன்றே.

(இ-ள்.) வையை தேசத்தவன் -வையைநதிசூழ்ந்த பாண்டிநாட்டையுடைய வரகுணன், பூசத்துறையில் புகுந்து ஆடி - பூசத்துறையிற்சென்று நீராடி, அ பொன்னி தென்சார் வாசத்த இடைமாமருதை - அக்காவேரிநதியின் தக்ஷணதீரமாகிய திருவிடைமாமருதி லெழுந்தருளிய பெருமானை, பணிதற்கு - வணங்க, கீழ்த்திசை வாயில் கடந்து செல்ல - கீழைத்திசைவாயிலைக் கடந்துள்ளே செல்ல, பாசம் தளையும் பழியும் புறம் நின்ற - பாசமாகிய பந்தமும் பிரமசாயையும் (உடன்செல்லாது) புறத்தில் நின்றன.

தைமாதத்தின் பருவம் என்பார் பூசத்துறையிற் புகுந்தாடியெனவும், சிவபெருமானர் திருக்கைலையே மருதமரவடிவா யிருக்கின்றது என்பார் பொன்னித் தென்சார் வாசத்திடை மாமருதைப்பணிதற்கு எனவும், முதன்மருதுங் கடைமருதுமுள்ளவென்பார் இடைமாமருது எனவும், பழியொடு மும்மலங்களும் அஞ்சின வென்பார் பாசத்தளையும் பழியும் புறநின்ற எனவுங் கூறினர். (உ0)

சுருதிச்சுரும்புபுறஞ்சூழ்ந்துகுழறத்தெய்வ
மருதிற்சிறந்தபெருந்தேனைக்கண்வாயங்காந்து

பருகிப்படிந்துதழல்வாய்வெண்ணெய்ப்பாவையொப்ப
வுருகிச்செயலற்றுரையற்றுணர்வாகிநின்றான்.

(இ-ள்.) சுருதி சுரும்பு புறம் சூழ்ந்து குழற - வேதங்களாகிய வண்டுகள் புறத்திற்சூழ்ந்திசைபாட, தெய்வம் மருதில் சிறந்த பெருந்தேனை-தெய்வத்தன்மையையுடைய இடைமருதிற் சிறந்து நிறைந்த தெவிட்டாத தேனினை, கண் வாய் அங்காந்து படிந்து பருகி - கண்ணாகிய வாயைத்திறந்து படியப்பருகி, தழல் வாய் வெண்ணெய் பாவை ஒப்ப உருகி - நெருப்பிலிட்ட வெண்ணெயாற்செய்த பதுமை உருகுவதுபோல வுருகி, செயல் அற்று உரை அற்று - செயலொழிந்து வசனித்தலொழிந்து, உணர்வு ஆகி நின்றான் - அறிவு வடிவாகி நின்றான்.

மரத்தில் தேனடையிருத்தல் வழக்காதலால் சிவபெருமான் திருக்கைலையே மருதமரம் ஆதலின் தெய்வமருதிற் சிறந்த தேன் எனவும், தேனைப்பருகினோர்க்கு நாவொன்றே சுவைவடிவா யிருத்தல்போலாது இத்தேனைப் பருகினோர்க்கு ஐம்புலன்களும் ஒருசேரச் சுவைவடிவாயிருத்தலால் தேன் என்னாது பெருந்தேனெனவும், தேனுள்ளவிடத்து வண்டுகளுளவாதலால் சுருதிச் சுரும்பு புறஞ்சூழ்ந்து குழற எனவும், இத்தேனைப் பருகும் வாய் கண்ணாதலால் கண்வாயங்காந்து பருகியெனவும், அத்தேன் சுவைகண்ட மட்டுமே இத்தேன் சுவைமுற்றுமாதலால் படிந்து எனவும், அழலிற்பட்ட வெண்ணெய்ப்பதுமை உருத்தோன்று தழிதல்போல இத்தேனுற்றற் போதமழிதலால் தழல்வாய் வெண்ணெயொப்ப வுருகியெனவும், அத்தேனையுண்டவர் தமது செயலும் உரையுமழிந்து அதன் குணமடுத்து நிற்றல்போல இத்தேனைப் பருகினமையால் செயலும் சொல்லுமிழந்து தமோறிச் சிவபோதமேலிட்டு நிற்றலால் செயலற்றுரையற்றுணர்வாகி நின்றான் எனவுங் கூறினார். உமாதேவியார் ஒர்காலத்துச் சிவபெருமானை வணங்கித் தேவரீர் நிலவுலகத்திலெழுந்தருளியிருக்கும் திருப்பதிகளைக் காட்டியருளல் வேண்டுமென வணங்க, அதற்குத் திருவுளங்கொண்டு அவ்வுமாதேவியாரோடும் எழுந்தருளித் தாமெழுந்தருளியிருக்குந் தலங்களைக்காட்டிக் காவிரிநதியின் தென்கரையிலுள்ள திருவிடைமருதூர்க்கு நேரேயெழுந்தருளுகையில் தமது பிரிவாற்றாது திருக்கைலையானது மருதவிருக்ஷவடிவாக நிற்கக்கண்டு அதனிழலில் சிவபெருமானார் உமாதேவியாரோடு எழுந்தருளி நின்றனர் என்றது திருவிடைமருதூர்ப் புராணத்திற்காண்க. மருதிற்சிறந்த பெருந்தேன் என்றது "அந்தவிடைமருதி லானந்தத்தேனிருந்த - பொந்தைப்பரவிநாம் பூவல்லி கொய்யாமோ" எனவரும் ஏதுவாலுணர்க. (உக)

நிராமயபரமானந்தநிருத்தநான்மாடக்கூடற்
பராபரவிமையாமுக்கட்பகவபார்ப்பதிமணாள
புராதனவகிலநாதபுண்ணியமருதவாண
அராவணிசடையாவென்றெண்ணிலாத்துதிகள்செய்தான்.

(இ-ள்.) நிராமய - பிணியில்லாதவனே, பரமானந்த நிருத்த-(தெரிசித்தோர்க்கு) பேரானந்தத்தைத்தரும் திருக்கூத்தையுடையவனே, நான்மாடக் கூடல் பராபர - மதுரையிலெழுந்தருளிய பராபரனே, இமையாத முக்கண் பகவ - இமையாத திரிநேத்திரங்களையுடைய பகவனே, பார்ப்பதி மணாள - உமாதேவியார் கணவனே, புராதன - (திருமால் முதலிய தேவர்களுக்கும்) மூத்தவனே, அகில நாத - அகில புவனங்களுக்கும் இறைவனே, புண்ணிய - புண்ணியமூர்த்தியே, மருதவாண-இடை

மருதில் வசிப்பவனே, அரா அணி சடையா என்று என்று - பாம்பையணிந்த சடையையுடையவனே யென்றிடையறாது, அளவு இல்லாத துதிகள் செய்தான் - எல்லையில்லாத துதிகள் செய்தான்.

இறப்பும் பிறப்புமில்லான் என்பான் நிராமய எனவும், அவையில்லாதவனே பேரின்பந்தரும் இறைவன் என்பான் பரமானந்த நிருத்த எனவும், எல்லா விலிங்கங்கட்கும் மூலவிலிங்கம் என்பான் நான்மாடக்கூடற் பராபர எனவும், ஐசுவரிய முதலிய அறுவகைக்குணங்களையுந் தனக்கே யுரிமையாகவுடையவன் எனபான் முக்கட்பகவ எனவும், உமாசகித சுந்தரன் என்பான் பார்ப்பதிமணாள எனவும், அயன் முதலிய யாவர்க்கு மூத்தோன் என்பான் புராதன எனவும், அவனே யெல்லாவற்றிற்கும் இறைவன் என்பான் அகிலநாத எனவுங் கூறினார். நிராமயன் நோயில்லாதவன். பராபரன் பராசத்திக்கு மேலானவன். ஐசுவரியமுதலிய அறுவகைக்குணங்களையு முன்னர்க்காண்க. (உஉ)

சொற்பதங்கடந்தசோதிதுதித்தடிபணிந்தவேந்தை
மற்பெருந்தோளாய்கீழைவாயிலிற்பிரமசாயை
நிற்பதந்நெறியாற்செல்லேனிழன்மதியுரிஞ்சுமேலைப்
பொற்பெருவாயினீங்கிப்போதிநம்மதுரைக்கென்றான்.

(இ-ள்.) சொல் பதம் கடந்த சோதி - சொல்லளவையைக்கடந்துநின்ற ஒளிமயமாகிய பெருமானார், துதித்து அடி பணிந்த வேந்தை - தம்மைத்துதித்து வணங்கிய வரகுணபாண்டியனை (நோக்கி,) மல் பெருந் தோளாய் - மற்போர் நிறைந்த பெரிய தோளையுடையாய், கீழை வாயிலில் பிரமசாயை நிற்பது - (நீவந்த) கீழைவாயிலில் பிரமகத்தி நிற்கின்றது, அ நெறியால் செல்லேல் - அவ்வழியிற்செல்லாதே, நிழல் மதி உரிஞ்சு மேலை பொன் பெருவாயில் நீங்கி - ஒளியமைந்த சந்திரமண்டலத்தையளாவும் மேற்றிசையிலுள்ள பொன்னாலாகிய பெரிய வாயிலினின்று நீங்கி, நம்மதுரைக்கு போதி என்றான - நமது மதுரைத் திருநகர்க்குச் செல்வாயென்று கூறியருளினார்.

உமாதேவியார் வேண்டுகோளுக்கிசைய அளவறுத்தற்கரிய சோதிமயமாயெழுந்தருளுதலால் சொற்பதங்கடந்தசோதி என்றார். (உ௩)

வரகுணனதுகேட்டையன்மருதினைவளைந்துநீங்கற்
கருமையால்வாயிறோறுமடிக்கடிவீழ்ந்துவீழ்ந்து
வளைதொளைத்தன்னமேலைவாயிலாற்போவானன்ன
திருமணிக்கோபுரந்தன்பெயரினாற்செய்துசின்னாள்.

(இ-ள்.) வரகுணன் அதுகேட்டு-வரகுணபாண்டியன் அத்திருவார்த்தையைக் கேட்டு, ஐயன் மருதினை வளைந்து - சிவபெருமானார் வசிக்கும் இடைமருதினைப் பிரதக்ஷிணஞ்செய்து, நீங்கற்கு அருமையால் - பிரிதற்கருமையால், வாயில் தோறும் அடிக்கடி வீழ்ந்து வீழ்ந்து - வாயிலினிடந்தோறும் அடிக்கடி வீழ்ந்து பணிந்தெழுந்து,வளை தொளைத்தால் அன்ன-மலையைத்தொளைத்தாலொத்த.மேலைவாயிலால்போவான் - மேலைவாயிலின் வழியாகச் செல்லுகின்றவன், அன்ன திருமணி கோபுரம் - அந்த வாயிலிற் பொலிவுமிக்க இரத்திநமிழைத்த கோபுரமொன்றை, தன் பெயரினால் செய்து-தனது பெயராற்கட்டுவித்து, சில் நாள்-சிலநாள் (அங்கிருந்து.)(உச)

திருப்பணிபலவுஞ்செய்துதென்றிசைவழிக்கொண்டேகிச்
சுருப்பணிநெடுநாண்பூட்டுஞ்சுவைத்தண்டச்சிலையாற்காய்ந்த
மருப்பணிசடையான்கோயில்வழிதொறுந்தொழுதுபோற்றிப்
பொருப்பணிமாடக்கூடற்பொன்னகரடைந்தான்மன்னோ.

(இ-ள்.) திருப்பணி பலவும் செய்து - ஏனைத்திருப்பணி பலவற்றையுஞ் செய்துமுடித்து, தென் திசை வழிக்கொண்டு ஏகி - தென்றிசையின் வழிக்கொண்டு (மதுரையைநோக்கி) சென்று, சுரும்பு அணி நெடுநாண் பூட்டும் சுவைத்தண்டம் சிலையான் காய்ந்த - வண்டினிரையாகிய நெடிய நாண்பூட்டிய கரும்பு வில்லையேந்திய மன்மதனை எரித்தருளிய, மருப்பு அணி சடையான் கோயில் - வராகத்தின் கொம்பினையணிந்த சடாமுடியையுடைய மருதவாணர் திருக்கோயில் (தனதுகண்களுக்குப் புலப்படுதலால்,) வழிதொறும் தொழுது போற்றி - வழிதோறும் வணங்கித் துதித்து, பொருப்பு அணி மாடம் கூடல் பொன் நகர் அடைந்தான் - மலைகளின் வரிசைபோல (நெருங்கியோங்கிய) மாடங்களையுடைய மதுரையென்னுந் திருநகரைச்சேர்ந்தனன்.

சிவபிரான் அனுஞையால் வலஞ்செய்தற்குக் கைலையங்கிரியின் சிகரத்தையொப்ப ஒருமதில் கட்டுவித்தும், [2] திருக்கோயிலிற்கு வடக்கே சோமசுந்தரக்கடவுளுக்கு ஓராலயஞ்செய்வித்தும், [3] ஒரு கள்வனைக் கொலைசெய்வித்தற்பொருட்டுத் தண்டஞ்செய்வோர் கட்டிக்கொண்டுபோக அவன் நெற்றியில் திருநீறிருக்கக்கண்டு கட்டவிழ்த்துவிட்டு இனி, அவன் களவு செய்யாதிருக்கவேண்டிய பொருளைக்கொடுத்தும், [4] இரவில் நரிகள் ஊளையிடுதலைக்கேட்டு ஆலவாயானை யழைக்கின்றனவென்று மனமிளகி யவைகளைப்பிடித்துவரச்செய்து அவைகளுக்கு நல்ல வஸ்திரங்களாற் போர்வை செய்வித்துப் போர்த்தும், [5] தடாகத்தில் தவளை யொலித்தலைக்கேட்டு இவைகள் அரகரவென்று ஒலிக்கின்றனவென்று இரத்தினங்களையும் பொற்கட்டிகளையும் அத்தடாகத்தில் வாரியிறைத்தும், [6] திருமஞ்சன தைலத்திற்காக உலர்த்தும் எள்ளைக்கோயிற் பணிசெய்வோனொருவன் வாரியுண்பதைக்கண்டு நீ யிதை யுண்டது தக்கதோவென்று கேட்க "எள்ளுண்டகடன் தீர்க்கவேண்டும்" என்னும் பழமொழி யொன்றுண்டன்றோ அதனால் மறுமையிலும் மருதவாணர்க்கு அடிமையாவான் தினகின்றேனெனச்சொல்ல, அங்ஙனமாயில் சிறிதுகொடுவென்று எச்சிலெள்ளைவாங்கி புசித்தும், [7] திருவிடைமருதூரெல்லையில் தலையோடொன்று கிடக்கக்கண்டு தனது கையாலெடுத்துக் கண்ணீர்வெள்ளத்திலாட்டி உன்னைப்போல் என் தலையோடுமிந்தத்தலத்திற் கிடக்குமோவென்று மனமுருகியும், [8] திருக்கோயின்முன் நாயமலங்கிடத்தலைப்பார்த்து இதனை யெடுப்போர்க்கு என் தேயத்திற் காற்கூறு கொடுப்பேனென்று முதற்பிரதக்ஷிணத்திலும், அரைக்கூறு கொடுப்பேனென்று இரண்டாம் பிரதக்ஷிணத்திலும், முக்காற்கூறு கொடுப்பேனென்று மூன்றாம் பிரதக்ஷிணத்திலும், முழுக்கூறுங் கொடுப்பேனென்று நாலாம் பிரதக்ஷிணத்திலும் கூறி, யெடுக்கப்படாமையால் என் தேயமுற்றுமே நானே யுடையனென்று அதைத் தனது திருக்கரத்தாலெடுத்துப் புறத்தேயெறிந்தும், திருவீதிப்பிரதக்ஷிணஞ்செய்துவருங்கால் [9] வேப்பமரம் பழுத்து வெயிலில் நிற்றலைக்கண்டு ஐயோ சிவலிங்கப்பெருமானையொத்த திருவுருவங்கள் பலவற்றையுஞ்சுமந்து வெதும்புகின்றனவேயென்று மனம் வருந்தி யம்மரங்களுக்கெல்லாம் மேற்கட்டி கட்டுவித்தும், [10] தனது மனைவியை யிரவில் அந்தப்புரத்திற்கண்டு இப்பெண்கள் சிகாமணி மருதவாணர்க்கே யுரியளென்று ஒருவரும் அறியாவண்ணம் அழைத்துக்கொண்டு திருக்கோயிலிற்குச்சென்று திருக்கதவைத்தட்

டச் சிவபெருமான் திறந்து வருதியென்றருள, அக்காலையில் வணங்கி யிப்பெண்மணியை யங்கீகரித்தருள்கவெனக் , குறையிரப்ப வலக்கைமாத்திரம் வெளிப்பட்டு நிற்க உட்கொண்டருளினர்; அதுகண்டஞ்சி அடியேனாற் றீண்டப்பட்டதென்றோ நீக்கியருளினீர் என்று மனங்கவலைகூர உலகத்தார் உண்மெய்யன்பை யுணரும்படி நாளை யங்கீகரிப்போமென்றுட்கொள்ளும்படி வழிபாட்டினின்றும்,பத்தியின் பெருக்கைக் காட்டினமையால் திருப்பணி பலவுஞ் செய்தும் என்றார். "வெள்ளைநீறுமெய்யிற்கண்டு - கள்ளன்கையிற்கட்டவிழ்ப்பிததும் - ஓடும்பன்னரியூளைகேட்டரனைப் - பாடினவென்றுபடாம்பலவிரித்தும் - குவளைப்புனலிற்றவளையரற்ற - வீசன்றன்னையேத்தினவென்று - காசும்பொன்னுங்கலந்துவீசியும் - வழிபடுமொருவன்மஞ்சனத்தியற்றிய-செழுவிதையெள்ளைத்தின்னக்கண்டு - பிடித்தலுமவனிப்பிறப்புக்கென்ன-இடித்துக்கொண்டவனெச்சிலைநுகர்ந்தும் - மருதவட்டத்தொருதனிக்கிடந்த - தலையைக்கண்டுதலையுறவணங்கி - உம்மைப்போலவெம்மித்தலையும் - கிடத்தல்வேண்டுமென்றடுத்தடுத்திரந்தும் - கோயின்முற்றத்துமீமிசைக்கிடப்ப - வாய்த்தனவென்று நாய்க்கட்டமெடுததும் - காம்புகுத்துதிர்ந்தகனியுருக்கண்டு - வேம்புகட்கெல்லாம்விதானமமைத்தும் - விரும்பினகொடுக்கைபரம்பாறகென்று - புரிகுழற்றேவியைப் பரிவுடன்கொடுத்த - பெரியவன்பின்வரகுணதேவரும" எனப் பட்டினத்துப்பிள்ளையார் கூறியருளிய மும்மணிக்கோவையிற்காண்க. மருப்பணி என்றதை முன்னர்க் கூறியிருத்தலுணர்க. (௨௫)

தொடுபழிதொலைவித்தாண்டசுந்தரத்தோன்றல்பாதக்
கடிமலரடைந்துநாளுங்கைதொழுதுலகமெல்லாம்
வடுவறுசெங்கோலோச்சும்வரகுணனறவோர்நாவா
லடுசுவையமுதமன்னவரன்புகழ்செவிமடுப்பான்.

(இ-ள்.) தொடுபழி தொலைவித்து ஆண்ட சுந்தரத் தோன்றல் பாதம் கடிமலர் அடைந்து-விடாதுதொடர்ந்த பிரமசாயையைப்போக்கி யடிமைகொண்ட சோமசுந்தரக்கடவுளுடைய வாசமிக்க திருவடித்தாமரையையடைந்து, நாளும் கை தொழுது - எப்பொழுதுங் கைகூப்பிவணங்கி, உலகம் எல்லாம் - உலகமுற்றும், வடு அறு செங்கோல் ஓச்சும் வரகுணன் - குற்றமற்ற செங்கோல்நடாத்தும் வரகுணபாண்டியன், அறவோர் நாவால் அடுசுவை அமுதம் அன்ன அரன்புகழ் செவிமடுப்பான் - அந்தணர்கள்தமதுநாவா லட்டசுவைமிக்க அமிர்தத்தையொத்த சிவபெருமான் திருப்புகழமுதை நாள்தோறுஞ் செவியாகிய நாவாலருந்துவானாயினன்.

விடாதபழியென்பார் தொடுபழியெனவும், கடலிற்றோன்றிய அமுதம் சிவபோகம் விளைக்காதென்பார் அறவோர் நாவால் - அடுசுவையமுதமன்ன வரன்புகழ் செவிமடுப்பான் எனவுங்கூறினார். (௨௬)

வேதமாகமம்புராணமிருதிகண்முதலாநாலு
மோதுவதுலகின்மிக்கதுருத்திரவுலகமென்னும்
போதமதகங்கொண்டந்தப்பொற்பதிகாணவேண்டுங்
காதல்செல்வழியேயீசன்கங்குலிற்கோயிலெய்தா.

(இ-ள்.) வேதம் ஆகமம் புராணம் மிருதிகள் முதல் ஆம் நூலும் ஓதுவது-வேதமும் ஆகமமும் புராணமும் மிருதிகளு முதலாகிய நூல்கள்யாவும் எடுத்துக்கூறுவது, உலகில் மிக்கது உருத்திரவுலகம் என்னும்-பிரமனுலகுமுதலிய உலகங்களு

க்குமேற்பட்டது உருத்திரவுலகமேயென்று வற்புறுத்தும், போதம் அகம் கொண்டு - அப்போதத்தைத் தன்னுட்பதித்து, அந்தபொன்பதி காணவேண்டும் காதல்செல்வழியே - அந்த அழகிய சிவபுரத்தைத் தரிசிக்கவேண்டிய விருப்பஞ்சென்றவழியே, ஈசன் கங்குலிற் கோயில் எய்தா - சிவராத்திரியிற் சோமசுந்தரக்கடவுளின் திருக்கோயிலையடைந்து.

பிரமனுலகுமுதலிய வுலகங்களுக்கு ஓர்மணிமுடி கவித்ததுபோல அவற்றின்மீதிருத்தலால் ஓதுவதுலகின்மிக்க வுருத்திரவுலகமென்னும் என்றார். அது பகுதிப்பொருள் விகுதி. (உ௭)

மாழைமான்மடநோக்கிதன்மணாளனைவணங்கிப்
பீழையேழ்பவங்கடந்துநின்னடிநிழல்பெற்றோர்
சூழநீசிவபுரத்தில்வீற்றிருப்பதுதொழுதற்
கேழையேற்கொருகருத்துவந்தெய்தியதெந்தாய்.

(இ-ள்.) மாழை மான் மடநோக்கி தன்மணாளனைவணங்கி - பொன்னிறம்வாய்ந்த மான்போன்ற மருட்பார்வையையுடைய அங்கயற்கண்ணியார்கணவராகிய சோமசுந்தரக்கடவுளைப்பணிந்து, பீழை ஏழ்பவம் கடந்துநின் அடிநிழல் பெற்றோர்சூழ - துன்பத்தைத்தரும் எழுபிறப்பென்னுங் கடலைக்கடந்து உனது திருவடிஞானச்செல்வத்தைப்பெற்றோர் புடைசூழ, நீ சிவபுரத்தில் வீற்றிருப்பது தொழுதற்கு - தேவரீர் நிகரின்றியெழுந்தருளியிருத்தலைக்கண்டு வணங்குதற்கு, எந்தாய்- என்தந்தையே, ஏழையேற்கு ஒருகருத்துவந்து எய்தியது - ஏழையேனாகிய அடியேனுக்கு ஒரு எண்ணம்வந்து மூளத்தது.

ஆத்மிகம், தெய்விகம், பௌதிகம் என்னு மூன்றுதாபங்களையுந் தருதலால் பீழையேழ்பவம் எனவும், திருவருண்ஞானம் அவனது திருவடியைக்கூட்டுவிக்கு ஞானம் ஆதலால் நின்னடிநிழல்பெற்றோர் எனவுங்கூறினார். (உ௮)

என்றகாவலனன்பினுக்கெளியராய்வெள்ளி
மன்றவாணரவ்வுலகையிவ்வுலகிடைவருவித்
தின்றுகாட்டுதுமிவற்கெனத்திருவுளத்தெண்ண
மொன்றினாரஃதுணர்ந்ததாலுருத்திரவுலகம்.

(இ-ள்.) என்றகாவலன் அன்பினுக்கு எளியராய் - என்றுகுறையிரந்த வரகுணபாண்டிய னன்புக்கு உடன்பட்டவராய், வெள்ளிமன்ற வாணர் - வெள்ளியம்பலத்தில் திருக்கூத்தாடிய சோமசுந்தரக்கடவுள், இவற்கு அ உலகை இ உலகு இடைவருவித்து இன்று காட்டுதும் என - இவ்வரகுணனுக்கு அந்தச்சிவபுரத்தையிவ்வுலகத்தினிடத்தில் அழைப்பித்து இப்போது காட்டுவோமென்று, திரு உளத்து எண்ணம் ஒன்றினார் - தமது திருவுளத்தி லெண்ணங்கொண்டருளினார், உருத்திரவுலகம் அஃது உணர்ந்தது - அச்சிவபுரம் அதனையறிந்தது.

பூத்திவலையிற்படுவோர் ஆதலால் அன்பினுக்கெளியராய் என்றார். (உ௯)

கோடிமாமதிக்கடவுளர்குழூஉச்சுடர்பரப்பி
நீடியோரிடத்துதித்[illegible]னமின்மினிநிகர்த்து
வாடிவானிருசுடரொளிமழுங்கவானிழிந்து
தேடினார்க்கரியானுறைசிவபுரந்தோன்ற.

(இ-ள்.) கோடிமாமதிக் கடவுளர் - அநேகங்கோடி சந்திரர்கள், குருசுடர் பரப்பி நீடி ஒரிடத்து உதித்தால் என்ன - நிறந்தங்கிய கிரணத்தைப்பரப்பிக் குறைவின்றி யோரிடத்தில்தோன்றினாற்போல, வான் இருசுடர் ஒளி மின்மினி நிகர்த்து வாடிமழுங்க - விண்ணிற்சஞ்சரிக்கும் சந்திரசூரியர்களினொளி மின்மினியையொத்து நிறங்குன்றிமழுங்க, தேடினார்க்கு அரியான் உறை சிவபுரம் வான் இழிந்துதோன்ற - தேடியபிரமனமாலுக்கு அரிய சிவபெருமானெழுந்தருளிய சிவபுரமானது விண்ணினின்றுமிழிந்து திருக்கோயிலுள்விளங்க.

தண்ணிய ஒளியையுடையதென்பார் மதிக்கடவுளர் குருஉச்சுடர்பரப்பி-நீடியோரிடத் துதித்தென எனவும், அளவில்லாத ஒளியையுடையது என்பார் மின்மினி நிகர்த்து வாடி வானிருசுடரொளிமழுங்க எனவுங்கூறினார். (௯0)

ஆண்டநாயகனந்தியையழைத்தெமக்கன்பு
மாண்டகாதலான்வரகுணவழுதிநம்முலகங்
காண்டல்வேண்டினான்காட்டெனக்கருணையாலேவல்
பூண்டவேத்திரப்படையினன்றொழுதனன்போந்தான்.

(இ-ள்.) ஆண்ட நாயகன் - (நம்மை) அடிமைகொண்ட சோமசுந்தரக்கடவுள், நந்தியை அழைத்து-நந்திநாயனாரையழைத்து, எமக்கு அன்புமாண்ட காதலான் - எம்பா லன்புமிக்க விருப்பத்தையுடையவனாகிய, வரகுணவழுதி - வரகுணபாண்டியன், நம் உலகம் காண்டல் வேண்டினான் காட்டு என - நமதுசிவலோகத்தைத் தரிசிக்கவிரும்பினான் (அவனுக்கு) காட்டாயென்றருள, கருணையால் (அச்சோமசுந்தரக்கடவுள்) திருவருளால், ஏவல் பூண்ட வேத்திரப்படையினன் - (தேவர்கள் நெருக்கையொதுக்கும்) திருப்பணிமேற்கொண்ட வேத்திரப்படையையேந்திய அந்நந்திநாயனார், தொழுதனன போந்தான் - வணங்கிப்புறத்துவந்து.

வேத்திரப்படை பிரம்பாகிய ஆயுதம். பந்தமுத்திகளினும் ஆன்மாக்களிடத்து அருளுடையர் என்பார் ஆண்டநாயகன் எனவும், எம்பாற் கழிபேரன்புடையவன் எனறருளினார் என்பார் எமக்கன்புமாண்டகாதலான் எனவும் கூறினார். தொழுதனன், போந்தான் முற்றெச்சங்கள். (௯௧)

வருதியாலெனப்பணிந்தெழுவரகுணற்கொடுபோய்க்
கருதியாயிரம்பெயருடைக்கடவுணான்முகத்தோன்
சுருதியாதியீறளப்பருஞ்சொயம்பிரகாசப்
பரிதியாள்சிவபுரமிதுபாரெனப்பணித்தான்.

(இ-ள்.) வருதி என - வருவாயென்றருள, பணிந்து எழு வரகுணன் கொடுபோய் - வணங்கியெழுந்த வரகுணபாண்டியனைக்கொண்டுசென்று, ஆயிரம் பெயர் உடையகடவுள் நான்முகத்தோன்கருதி - சகஸ்திரநாமங்களையுடைய திருமாலும் பிரமனும் எண்ணி, சுருதி ஆதி - வேதமுதலிய அளவைகளால், ஈறு அளப்பு அரும் சொயம்பிரகாசம் பரிதி ஆள் - தனதுமுடிபை யளத்தற்கரிய, சொயம்பிரகாசம் பரிதி ஆள் - சொயம்பிரகாசத்தையுடைய ஞானசூரியனாகிய சோமசுந்தரக்கடவுள் ஆண்டருளும், சிவபுரம் இது - சிவபுரமிதுவாம், பார் எனபணித்தான் - பாராயென்றபணித்தருளினார்.

சூரியன்முதலிய எல்லாப்பொருள்களுக்கும் ஒளிதரும் பேரொளியாதலால் ஈறளப்பருஞ்சொயம்பிரகாசப்பரிதி என்றார். (௯௨)

கருப்புரங்கமழ்ந்துளர்பசுங்கால்களாலுதையுண்
டருப்பினஞ்சிதைந்தாயிரப்பத்தியோசனைபோய்
மருக்கமழ்ந்துநூறுயிரம்வாலிதழ்க்கமல
மிருக்குமோடைகள்புடைதொறுந்தழுவியயாறும்.

(இ-ள்.) கருப்புரம் கமழ்ந்து உளர் பசுங்கால்களால் - கருப்புரவாசங்கமழ்ந்து சஞ்சரிக்கும் தென்றற்காற்றுகளால், உதையுண்டு-மொத்துண்டு, அரும்பு இனம் சிதைந்து - அரும்பின் கூட்டங்கள் முறுக்கவிழ்ந்து, ஆயிரப்பத்து யோசனைபோய் மருகமழ்ந்து - பதினுயிரம்யோசனைதூரஞ்சென்று வாசம்வீசி, வால் நூறுயிரம் இதழ் கமலம் இருக்கும் ஓடைகள் புடைதொறும் தழுவிய யாறும்-வெள்ளியலட்சம் இதழ்களையுடைய வெண்டாமரைகளிருக்கும் ஓடைகள் பக்கங்கள்தோறும் தழுவிய ஆறுகளும். (கூக)

வரம்பின்மாதரார்மதுரவாய்திறந்துதேன்வாக்கு
நரம்பினேழிசையாழிசைநகைமலர்த்தருவின்
சுரும்பினேரிசைநாரதர்தும்புருவிசைக்கு
மிரும்புநீர்மெழுகாக்கியவின்னிசையெங்கும்.

(இ-ள்.) வரம்பு இல் மாதரார் - அளவில்லாததெய்வப்பெண்கள், மதுரம் வாய்திறந்து - இனியவாயைத்திறந்து, தேன்வாக்கும் - தேனைக்கவிழ்க்கும், நரம்பின் ஏழிசை - நரம்பின்கண்ணமைந்த ஏழிசைகளையுடைய, யாழ் இசை - வீணையொடுபாடும் இசையும், நகைமலர் தருவின் சுரும்பின் நேர் இசை - மலர்ந்துவிளங்கு மலர்களையுடைய விருக்ஷங்களில் வண்டுகள்பாடும் தம்முளொத்த இசையும், நாரதர் தும்புரு இசைக்கும் - நாரதரும் தும்புருவும்பாடும், இரும்புநீர் மெழுகு ஆக்கிய இன் இசை - இரும்பின்கடினத்தன்மையை மெழுகுபோல இளகுந்தன்மையதாகச் செய்யும் இனிய இசையும், எங்கும் - எவ்விடத்திலு முள்ளனவாம்.

எல்லாவுயிர்களையுந் தன்மயமாக்கும் இசையென்பார் இரும்புநீர் மெழுகாக்கிய இன்னிசை என்றார். (கூச)

அமுதவாவியும்பொன்மலரம்புயத்தடமுங்
குமுதவாயரமாதராங்குயிலினம்பயிலுந்
திமிரவாள்விடுமரகதநெடியபைங்காவுந்
திமிரமாசறக்கழுவியதேவர்வாழ்பதமும்.

(இ-ள்.) அமுதம் வாவியும் - அமுதநிரம்பிய நடைக்கிணறும், பொன்மலர் அம்புயம் தடம் உம் - பொன்போலமலர்ந்த தாமரைகளையுடைய தடாகங்களும், குமுதம் வாய் - ஆம்பல்போன்ற வாயையுடைய, அரமாதர் ஆம் குயில் இனம்பயிலும் - அரமகளிராகிய குயிற்கூட்டங்கள் சஞ்சரிக்கும், திமிரவாள்விடும் - நிரம்ப ஒளிவீசும், மரகதம் நெடியபைங்காவும் - மரகதமாகிய நெடியபசியசோலையும், திமிரம் மாசு அற கழுவிய - இருளாகிய களங்கமொழிய ஒளிவீசும், தேவர்வாழ்பதமும் - தேவர்கள்வாழும் பதமும்.

தேவர்கள் சிவபுரத்தின் வடதிசைக்கண் வாழ்தலால் தேவர்வாழ் பதமும் என்றார். (கூரு)

அலம்புபாற்கடல்போற்புறத்தமுதநீரகழும்
பொலஞ்செய்ஞாயில்சூழ்புரிசையும்பொன்செய்கோபுரமு
நலங்கொள்பூவியல்வீதியுநவமணிகுயின்ற
துலங்குமாளிகைப்பந்தியுஞ்சூளிகைநிரையும்.

(இ-ள்.) அலம்பு பால் கடல் போல் - ஒலிக்கும் பாற்கடல்போல, புறத்து அமுதம் நீர் அகழும் - புறத்தில் அமுதமயமாகிய நீர்நிறைந்த அகழியும், பொலம் செய் ஞாயில் சூழ்புரிசையும் - பொன்னாற்செய்த வுறுப்புகளமைந்தமதிலும், பொன்செய்கோபுரமும் - பொன்னாற்செய்த கோபுரங்களும், நலம் கொள் பூ இயல் வீதியும் - அழகுமிக்க பொலிவமைந்த வீதிகளும், நவமணிகுயின்ற துலங்குமாளிகை பந்தியும் - ஒன்பதுவகை யிரத்திநங்களையுமிழைத்துவிளங்காநின்ற உபரிகையின் வரிசைகளும், சூளிகை நிரையும் - அவற்றினிறப்பின்வரிசைகளும். (கூசு)

ஐம்புலங்களும்வைகலும்விருந்ததாவருந்த
வெம்புநால்வகையுண்டியும்வீணையுஞ்சாந்துஞ்
செம்பொனாரமுமாடலின்செல்வமுந்தெய்வப்
பைம்பொன்மேகலையோவியப்பாவையொப்பாரும்.

(இ-ள்.) ஐமபுலங்களும் - பஞ்சேந்திரியங்களும், வைகலும்-நாள்தோறும், விருந்தது ஆக அருந்த - விருந்தாகவுண்ண, வெம்பு நால்வகை உண்டியும - சிகையாயுள்ள நால்வகையுணவும, வீணையும் - வீணையிசையும், சாந்தும்-கலவைச்சந்தனமும், செம்பொன் ஆரமும் - செவந்தபொன்னாற்செய்த ஆரங்களும், ஆடலின்செல்வமும் - பரதநாட்டியச்செல்வங்களும், தெய்வம் - தெய்வத்தன்மையையுடைய, பைமபொனமேகலை - பசியபொன்னாறசெய்த மேகலையையணிந்த, ஓவியப்பாவை ஒப்பாரும் - சித்திரப்பதுமையையொத்த பெண்களும் (உள்ளன.)

ஐம்புலங்களாவன - மெய், வாய், கண், மூக்கு, செவி, மெய்யால் நுகரும் பொருள் ஓவியப்பாவையொப்பார். வாயால் நுகரும்பொருள் நால்வகையுண்டி. கண்ணால் நுகரும்பொருள் செம்பொனாரம். ஆடலின்செல்வம. மூக்கால் நுகரும்பொருள் சாந்து. செவியால் நுகரும்பொருள் வீணை. மிகுதியால் அஃறிணை முடிபுதந்தாம். (கூஎ)

படர்ந்தவார்சடையுருத்திரர்பணைத்திறுமாந்த
வடங்கொள்பூண்முலையுருத்திரமகளிரோடமரு
மிடங்கொண்மாளிகைப்பந்தியுமிகல்வினைதுன்பங்
கடந்தசெல்வமுங்கவலையில்போகமுங்காட்டி.

(இ-ள்.) படர்ந்த வார் சடை உருத்திரர் - பரவிய நீண்டசடையையுடைய உருத்திரர்கள், பணைத்து இறுமாந்த வடம் பூண் கொள் முலை உருத்திர மகளிரோடு அமரும் - பெருத்து இறுமாந்த முத்துவடமாகிய ஆபரணத்தையணிந்த தனங்களையுடைய பெண்களோடுவசிக்கும், இடம் கொள் மாளிகை பந்தியும் - இடம்பரந்த உபரிகையின் வரிசையையும், இகல் வினை துன்பம் கடந்த செல்வமும் - பகைமையும் (பிறரால்வினையும்) துன்பமுமொழிந்த செல்வத்தையும், கவலை இல் போகமும்- கவலையில்லாத போகங்களையும், காட்டி - (தனித்தனி) காண்பித்து. (கூஅ)

முண்டகாசனன்பதமிதுமூவுலகளந்த
தண்டுழாயவன்புரமிதுதனிமுதல்வடிவங்

கொண்டுவீறுசாலுருத்திரர்கோப்பதியின்ன
வெண்டிசாமுகங்காவலருறைவிடமிவைகாண்.

(இ-ள்.) முண்டகாசனன் பதம் இது - பிரமன்வாழும் பதமிது, மூவுலகு அளந்த தண்டுழாயவன் புரம் இது - மூன்றுலகங்களையு மளந்த தண்ணிய துழாய்மாலையணிந்த திருமால்வாழும் பதமிது, தனி முதல் வடிவம் கொண்டு - ஒப்பற்ற சிவபிரான் திருவுருவங்கொண்டு, வீறு சால் உருத்திரர் கோபதி இன்ன - பெருமைமிக்க உருத்திரர்கள் வசிக்கும் அரசத்தன்மையுடைய பதியிவை, எண் திசா முகம் காவலர் உறை விடம் இவை காண் - எட்டுத்திசைகளையுங் காக்கும் இந்திரன்முதலிய திக்குப்பாலகர் வசிக்குமிடங்களிவையாம்.

சிவபுரத்தின் தென்றிசைவாயிலில் பிரமனும், வடதிசை வாயிலில் திருமாலும் உருத்திரரும் வசித்தலால் முண்டகாசனன்பதமிது உருத்திரர் கோப்பதி இன்ன என்றார். "வியன்கமலத்தயன்றென்பால்விரவ எனவும், உத்தரத்திற்றிருமாலுமுருத்திரரும்பரிதியருமுள்ளாரன்றே" எனவரும் ஏதுக்களாலுணர்க. (௩௯)

தாதமார்க்கம் சரியை

புலருமுன்புனலாடிநீறாடிநம்புனித
னிலகுமாலயம்விளக்கிநந்தனப்பணியியற்றி
மலர்கொய்தாய்ந்தனர்தொடுத்தரன்புகழ்செவிமடுத்திவ்
வுலகவாணராய்ப்போகமுற்றுறைகுநரிவர்காண்.

(இ-ள்.) புலரு முன் புனல் ஆடி - விடியுமுன் நீராடி, நீறு ஆடி-(விதிப்படி) விபூதியணிந்து, நம் புனிதன் இலகும் ஆலயம் விளக்கி - நமதுபெருமான் எழுந்தருளிவிளங்குந் திருக்கோயிலுக்குத் திருவலகிட்டு, நந்தனம் பணி இயற்றி - நந்தவனத்திருப்பணிசெய்து, மலர் கொய்து ஆய்ந்தனர் தொடுத்து - மலர்கொய்து ஆராய்ந்து தொடுத்து, அரன் புகழ் செவி மடுத்து - சிவபெருமான் திருப்புகழைத்தமது காதிற்றேக்கி, இ உலக வாணர் ஆய் - இந்நிலவுலக வாசிகளாய், போகம் உற்று உறைகுநர் இவர் காண் - (இறுதியிலிங்கு) போகம் நுகர்ந்து வசிப்பவர்கள் இவர்கள் பாராய்.

தாதமார்க்கமாகிய சரியையைச் செய்தோரை யிங்குக் கூறினார் "தாதமார்க்கஞ்சாற்றிற்சங்கரன்றன்கோயிற் - றலமலகிட்டிலகுதிருமெழுக்குஞ்சாத்திப்- போதுகளுங்கொய்துபூந்தார்மாலைகண்ணி புனிதற்குப்பலசமைத்துப்புகழ்ந்துபாடித்-தீதிறிருவிளக்கிட்டுத்திருநந்தவனமும் செய்து திருவேடங்கண்டாலடியேன்செய்வ - தியாதுபணியீரென்றுபணிந்தவர்தம்பணியுமியற்றுவதிச்சரியைசெய்தோரீசனுலகிருப்பர்" எனவரும் ஏதுவாலுணர்க. (௪0)

தூயராகியைஞ்சுத்திசெய்தகம்புறமிரண்டி
னேயராய்விதிநெறியினான்முகமனீரெட்டாற்
காயம்வாய்மனவொருமையாலர்ச்சித்துக்கடவு
ளாயனாருகுறைபதநண்ணினாரிவர்காண்.

(இ-ள்.) தூயர் ஆகி - புனிதமுடையவராகி, ஐஞ் சுத்தி செய்து - பஞ்சசுத்திசெய்து, அகம் புறம் இரண்டின் நேயர் ஆய் - உள்ளும் புறம்புஞ் சிவநேயமுடையவராய், விதி நெறியின் ஆல் - ஆகமவிதிமுறையாலும், முகமன் ஈரெட்டால்-சோடசவுபசாரத்தாலும், காயம் வாய் மனம் ஒருமையால் - மனவாக்குக்காயங்களின்

ஒருப்பாட்டாலும், அர்ச்சித்து-அருச்சனைசெய்து, கட்வுள் நாயனார் அருகு உறை பதம் - எல்லாக்கடவுளர்க்கும் இறைவராகிய சோமசுந்தரக்கடவுளின் பக்கலில் உள்ள சாமீபத்தை, நண்ணினார் - அடைந்தவர்கள், இவர் காண் - இவர்கள்காணாய்.

பஞ்சசுத்தியாவன - பூதசுத்தி, ஆன்மசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தியாம். பூதசுத்தியாவது - தத்துவங்கள் நாமல்ல அவை சடமென்றுணர்தல்; ஆன்மசுத்தி - அவ்வாறுணர்தல் ஆன்மபோதத்தாலன்று திருவருளாலென் றுணர்தல்; திரவியசுத்தி - ஆன்மாவுக் குணர்வில்லையென்றுணர்ந்து கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றறியும் பொருள்முற்றும் திருவருளென்றுணர்தல்; மந்திரசுத்தி - ஸ்ரீபஞ்சாக்கரத்தை முறைப்படி மாறி யுச்சரித் ததனுண்மையுணர்தல்; இலிங்கசுத்தி - அநாதிமுத்தசித்துருவாகிய சிவம் பசுபாசங்களிற் பிரிவறநின்று அவற்றைச் சேட்டிப்பிக்குந் தன்மையுணர்ந்து அச்சிவம் இலிங்கத்தினு மெழுந்தருளி யிருக்குமென் றுணர்தல். அகம்புறமிரண்டினையராய் என்றது அகத்தொழில் புறத்தொழி லிரண்டினு மன்புடையர் எனக்கொள்க. சோடசவுபசாரம் என்றது முன்னர்க்காண்க. புத்திரமார்க்கமாகிய கிரியையை இங்குக் கூறினார். "புத்திரமார்க்கம்புகலிற்புதியவிரைப்போது புகையொளிமஞ்சனமமுதமுதல்கொண்டைந்து - சுத்திசெய்தாசனமூர்த்தி மூர்த்திமானுஞ்சோதியையும் பாவித்தாவாகித்துச்சுத்த - பத்தியினாலருச்சித்துப்பரவிப் போற்றிப் பரிவினொடுமெரியில்வருகாரியமும்பண்ணி - நித்தலுமிக்கிரியையினையியற்றுவோர்கள் நின்மலன்றனருகிருப்பர்நினையுங்காலே." எனவரும் ஏதுவால் உணர்க.

கிளர்ந்தகாலினாலங்கியைநிமிர்த்துமேற்கிடைத்து
வளர்ந்தபிங்கலையிடைநடுவழியுகுமதியின்
விளைந்தவின்னமுதுண்டுநம்விடையவன்வடிவங்
குளந்தனிற்குறித்தவனுருக்கொண்டவரிவர்காண்.

(இ-ள்.) கிளர்ந்த காலின் ஆல் - மேலெழுந்த பிராணவாயுவால், அங்கியை நிமிர்த்து - (இதயகமலத்தில் சஞ்சரிக்கும்) அங்கியை மேலேயெழுப்பி, மேற்கிடைத்து - மேற்சென்று, வளர்ந்த இடை பிங்கலை நடு வழி - குன்றாத இடைகலை பிங்கலைக்கு நடுவிலுள்ள சுழிமுனையின்வழியாக, உகும் - சிந்தாநின்ற, மதியின் விளைந்த இன் அமுது உண்டு - சோமமண்டிலத்தில் விளைந்த இனிய அமுதபானம்பண்ணி, நம் விடையவன் வடிவம் - நமது சிவபெருமான் திருவுருவத்தை, குளம் தனில் குறித்து - லலாட தானத்திற் சிந்தித்து, அவன் உருக் கொண்டவர் இவர்காண் - அவனது சாரூப்பியத்தையடைந்தவ ரிவர்கள் பாராய்.

இந்திரியங்களை யொடுக்கி இடைகலையால் வாயுவை இரேசித்துப் பதினாறுமாத்திரையளவு பூரித்து அறுபத்து நான்கு மாத்திரையளவு கும்பித்த அவ்வாயுவைப் பிங்கலையால் அறுபதுமாத்திரையளவு இரேசித்துச் சுழிமுனையிற் செலுத்துதலால் கிளர்ந்தகாலினால் எனவும், உடலமத்தியில் அக்கினிமண்டிலமாதலின் வன்னிபீசத்தால் அவ்வக்கினியைத் தோய்தலால் அங்கியை நிமிர்த்து எனவும், நாசிநுனியிற் செல்லவேண்டுதலால் மேற்கிடைத்து எனவும், அதுவே சந்திரவிம்பமாதலால் ஆறுதாரங்களையுந் தெரிசித்து அதன்வழிச்சிந்தும் அமுதினைப் பருகவேண்டுதலால் நடுவழியுகுமதியின்விளைந்தவின்னமுதுண்டு எனவுங் கூறினார். "சகமார்க்கம்புலனொடுக்கித் தடுத்துவளியிரண்டுஞ்சலிப்பற்றுமுச்சதுரமுதலாதாரங்கள், அகமார்க்கமறிந்தவற்றினரும்பொருள்களுணர்ந்தங் கணைந்துபோய்மேலேறியலர்மதிமண்டிலத்தின், முகமார்க்கவமுதுடலமுட்டத்தேக்கிமுழுச்சோதிநினைந்திருத்தல் முதலாகவினைகள், உக

மார்க்கவட்டாங்கயோகமுற்று முழத்தலுழந்தவர்சிவன்றனுருவத்தைப்பெறுவர்" என வரும் ஏதுவால் சகமார்க்கமாகிய யோகத்தினிலையையுணர்க. (சஉ)

முக்கணாயகன்பொருட்டெனவேள்விகண்முடித்துத்
தொக்கவேதியரிவர்புனற்சாலையித்தொடக்கத்
தக்கபேரறம்புகழ்பயன்றமைநன்குமதிக்கும்
பொக்கமாறியநிராசையாற்புரிந்தவரிவர்காண்.

(இ-ள்.) முக் கண் நாயகன் பொருட்டு என - திரிநேத்திரங்களையுடைய சிவ பெருமான் பிரீதியாக, வேள்விகள் முடித்து - யாகங்களைச்செய்துமுடித்து, தொக்க வேதியர் இவர் - சிவபதம் அடைந்த அந்தணர்களிவர்கள், புனல் சாலை இத் தொடக்கம் தக்க பேர் அறம் - தண்ணீர்ப்பந்தல் வைத்தல் முதலிய தகுந்த பெரிய புண்ணியங்களை, புகழ் பயன் தமை நன்கு மதிக்கும் - புகழையும் பயன்களையு நன்குமதித்துச்செய்யும், பொக்கம் மாறிய நிராசையால் - குற்றம் நீங்கிய நிராசையோடு, புரிந்தவர் இவர் காண் - செய்தவர்களிவர்கள் பாராய்.

புகழையும் பயனையுங் கருதிச்செய்யும் புண்ணியம் ஆரவாரங்கருதியதாதலால் பொக்கமாறியஎனவும், இவற்றைக்கருதாது சிவபிரீதியாகச்செய்தல் நிராசையாதலால் நிராசையாற்புரிந்தவர் எனவுங்கூறினார். ஆறுருபு உடனிகழ்ச்சிக்கண்ணது.

மறையினாற்றினாற்றந்திரமரபினான்மெய்யி
னிறையுநீற்றினர்நிராமயனிருத்தனைந்தெழுத்து
மறையுநாவினர்பத்தராயரன்புகழ்கேட்கு
முறையினாலிவர்வினைவலிமுருக்கினார்கண்டாய்.

(இ-ள்.) மறையின் ஆற்றினால் - வேதநெறியாலாவது, தந்திரம் மரபினால் - ஆகமவிதியினாலாவது, மெய்யில் நிறையும் நீற்றினர் - தமது உடம்பிலணிந்த விபூதியையுடையவரும், நிராமயன் - நோயில்லாதவனாகியும், நிருத்தன் - (ஆன்மாக்களுய்யும்பொருட்டு) இருவகைநடனங்களை யுடையவனாகியு முள்ள சிவபெருமானது, ஐந்து எழுத்தும் - ஸ்ரீபஞ்சாக்கரத்தையும், அறையும் நாவினர் - (முறைப்படி) உச்சரிக்கும் நாவையுடையவருமாய், பத்தர் ஆய்-சிவபெருமானுக்கு அடியவராகி,அரன் புகழ் கேட்கும் முறையினால் - அச்சிவபெருமான் திருப்புகழைக்கேட்கு முறைமையினால், இவர் வினைவலி முருக்கினார் - இவர்கள் வினையின்வன்மையைக் கெடுத்தவர்கள், கண்டாய் - காணாய். (சச)

மறைகளின்சதவுருத்திரமந்திரநவின்றோர்
நிறைகொள்கண்டிகைநீறணிநீரரியாரேனுங்
குறிகுணங்குலன்குறித்திடாதன்பரைச்சிவனென்
றறியுமன்பினாற்பிறவிவேரறுத்தவரிவர்காண்.

(இ-ள்.) மறைகளின் சதவுருத்திர மந்திரம் - வேதங்களிலுள்ள சதவுருத்திரமந்திரத்தை, நவின்றோர் - உச்சரித்து, நிறை கொள் கண்டிகை நீறு அணி - சிவபுண்ணியமமைந்த உருத்திராக்ஷக்கண்டிகையையும் திருநீற்றையும்அணிந்த, நீரர்-தன்மையையுடையோர், யாரேனும் - எவராயிருப்பினும், குறி குணம் குலன் குறித்திடாது - அவர்கள் பெயரையும் குணத்தையுஞ் சாதியையுங்குறியாது, அன்பரை

சிவன் என்று அறியும் அன்பினால்-அடியவரைச் சிவனேயென்றுணரும் அன்பினால், பிறவி வேர் அறுத்தவர் - பிறவியின் வேரை யறுத்தவர்கள், இவர் காண் - இவர்கள் பாராய்.

வேதங்கள் பிரமன்முதல் சதாசிவமீறாக முறையே யேற்றங் கூறுவதால் அவற்றுள் நடுக்கண்டமான சதவுருத்திரமனுக்களை யோக்ரமத்தால் உருத்திரகணங்களைச் சங்காரக்கிரமத்தின் வைத்து அதீதசிவபரியந்தம் வரைப்படுத்திக் கூறுதல் சதவுருத்திரமந்திரமாதலால் மறைகளின் சதவுருத்திரமந்திரம் என்றார். (சரு)

ஆனஞ்சாடியபரஞ்சுடரிறைசிவஞான
தானஞ்செய்தவர்தருப்பணஞ்செய்தவர்சாம
கானஞ்செய்தவற்காலயங்கண்டுதாபித்தோ
ரூனஞ்சேர்பிறப்பறுத்துவாழுத்தமரிவர்காண்.

(இ-ள்.) ஆன் அஞ்சு ஆடிய பரஞ் சுடர் இறை சிவஞான தானம் செய்தவர் - பஞ்சகவ்வியமாடிய சிவபெருமானுடைய சிவஞானதானஞ் செய்தவரும், தருப்பணம் செய்தவர் - தருப்பணஞ் செய்தவரும், சாம கானம் செய்தவற்கு - சாமகானம் பாடும் சிவபிரானுக்கு, ஆலயம் கண்டு தாபித்தோர் - ஆலயத்தைச் சிற்பநூல் விதிவழிதாபித்தவரும் ஆய், ஊனம் சேர் பிறப்பு அறுத்து வாழ் உத்தமர் - குற்றமடைந்த பிறப்பினை யொழித்துவாழும் நல்லோர், இவர்காண் - இவர்கள் பாராய்.

சிவஞானமாவது பரஞானம், அபரஞானம் என இருவகைப்படும். பரஞானம் சிவனோடிரண்டற்று அபேதரூபமாயிருத்தல். அபரஞானமாவது காமிகமுதலிய திவ்வியாகமங்கள். சிவஞானதானமாவது ஆகமத்தினுண்மையைப் பக்குவர்க்குக் கூறுதலும், ஆகமம் தருதலும், அதனை யெழுதற்கு அலேகந்தருதலுமுதலியன. தருப்பணம் சிவப்ரீதியாகத் தருப்பணஞ்செய்தல். (சசு)

சிவனையர்ச்சனைசெய்பவர்க்கிசைவனசெய்தோ
ரவனெனக்குறித்தடியரைப்பூசைசெய்தாறு
சுவையவின்னமுதருத்தினோர்தொண்டர்தம்பணியே
தவமெனப்புரிந்துயர்சிலையைச்சார்ந்தவரிவர்காண்.

(இ-ள்.) சிவனை அர்ச்சனை செய்பவர்க்கு - சிவபெருமானை யருச்சிப்பவர்க்கு, இசைவன செய்தோர் - இசையுங்காரியங்களைச் செய்துவந்தவரும், அடியரை அவன் எனக்குறித்து - அடியவரை யச்சிவபெருமானே யென்றுகருதி, பூசைசெய்து - பூசனைசெய்து, ஆறுசுவைய இன் அமுது அருத்தினோர் - அறுசுவையமைந்த இனிய உணவையுண்பித்தவருமாய், தொண்டர்தம்பணி தவம் எனப்புரிந்து-சிவனடியவர்க்குச்செய்யுங் குற்றேவலே பெருந்தவமென்று விரும்பிச்செய்து, உயர்ச்சிலையைசார்ந்தவர் - உயர்ச்சிலையையடைந்தவர்கள், இவர்காண் - இவர்கள்பாராய். (சஎ)

ஆதிசுந்தரக்கடவுளுக்காலயம்பிறவு
நீதியாலருச்சனைபிறபணிகளுநிரப்பிப்
பூதிசாதனவழிநிலம்புரந்திவணடைந்த
கோதிலாதநின்குடிவழிக்கொற்றவரிவர்காண்.

(இ-ள்.) ஆதி சுந்தரக்கடவுளுக்கு - (எல்லாக்கடவுளர்க்கும்) முதல்வராகிய சோமசுந்தரக்கடவுளுக்கு, ஆலயம் பிறவும் - ஆலயமு மற்றுள்ளனவும், நீதியால்

அருச்சனை - முறைப்படி அருச்சனைகளும், பிறபணிகள் உம் - ஏனைத்திருப்பணிகளு மாகிய இவைகளை, பிரப்பி-முட்டின்றிமுடித்து, பூதிசாதனம் வழி - திருநீற்றையும் ஸ்ரீபஞ்சாக்கரத்தையு முறைப்படிகொண்டு, நிலம் புரந்து - நிலவுலகினைக்காத்து, இவண் அடைந்த கோது இல்லாத நின்குடிவழிகொற்றவர் - இச்சிவலோகமடைந்த குற்றமில்லாத நின்னுடைய குடியிற்றோன்றிய அரசர்கள், இவர்காண் - இவர்கள் பாராய். (சஅ)

என்றுவேத்திரங்கொடுகுறித்தெம்மிறைநந்தி
கொன்றைவேணியனடியர்தங்குழாத்தினைத்தேற்றி
நின்றுவீழ்ந்துவீழ்ந்தஞ்சலிமுகிழ்த்திடநெறியே
சென்றுவானவர்நாயகன்றிருமுன்புவிடுத்தான்.

(இ-ள்.) என்று - என்றுகூறி, வேத்திரம் கொடு குறித்து - பிரம்பாற்சுட்டி, எம் இறை நந்தி - எமது இறைவராகிய நந்திநாயனார், கொன்றைவேணியன்-கொன்றைமாலையையணிந்த சடாமுடியையுடைய சிவபெருமானது, அடியர்தம் குழாத்தினை தேற்றி - அடியவர்கூட்டத்தி னியல்பைவிளக்கி, நெறியே நின்று வீழ்ந்து வீழ்ந்து அஞ்சலி முகிழ்த்திட - முறைவழியே வரகுணனின்று தண்டாகாரமாகவீழ்ந்து வீழ்ந்து கைகூப்ப, சென்று - (அந்நந்திநாயனார்) சென்று, வானவர் நாயகன் திருமுன்புவிடுத்தான் - தேவதேவனாகிய சிவபெருமான்சந்நிதியில் (அவ்வரகுணனை) செலுத்தினார்.

பிரமன் முதலாகப் பாண்டியரீறாக அங்குவசிப்பவர்கள் சிவனடியவர்களாதலால் அடியர்தங்குழாத்தினைத்தேற்றியென்றார். (சகூ)

மறைகளாகமம்வடிவெடுத்திருபுடைவாழ்த்த
நறைகொள்யாழ்தழீஇத்தும்புருநாரதர்பாட
வறைகொள்வண்டிமிர்கொம்பரினரம்பையராடக்
குறைகொள்வானவர்பதங்கிடையாதிறைகொள்ள.

(இ-ள்.) மறைகள் ஆகமம் வடிவு எடுத்து இரு புடை வாழ்த்த - வேதங்களும் ஆகமங்களும் உருவங்கொண்டிருபால்களினும் நின்று வாழ்த்தவும், நறைகொள் யாழ் தழுவி - இனிய இசையமைந்தவீணையை யிடப்பால் தழுவி, தும்புரு நாரதர் பாட - தும்புருவும் நாரதரும் ஒருபால் நின்று பாடவும், அறைகொள் வண்டு இமிர் கொம்பரின் - இசைபாடும் வண்டுகளொலிக்கும் பூங்கொம்பைப்போல, அரம்பையர் ஆட - அரம்பையர்கள் ஒருபால் ஆடவும், குறை கொள் வானவர் - குறையிரக்குந் தேவர்கள், பதம் கிடையாது இறை கொள்ள - சமையம்பெறாது ஒருபால் தங்கவும். (ருO)

மதங்கவிழ்க்குமால்வரைமுகமைந்தனுஞ்சூரன்
கதங்கவிழ்த்தவேற்கந்தனுங்கருதலன்வேள்வி
விதங்கவிழ்த்தவாள்வீரனும்வெயின்முடித்தார்தேன்
பதங்கவிழ்ப்பவீழ்ந்தேயினபணிவழிநிற்ப.

(இ-ள்.) மதம் கவிழ்க்கும் மால் வரை முகம் மைந்தனும் - மதத்தைச் சிந்தும் யானைமுகக்கடவுளும், சூரன் கதம் கவிழ்த்தவேல் கந்தனும்-சூரபன்மனுடையகோபத்தைக் கெடுத்த வேலையேந்திய முருகக்கடவுளும், கருதலன் வேள்வி விதம்

கவிழ்த்த வாள் வீரனும் - தக்கனுடையயாக வகையைச் சிதைத்த வாளையேந்திய வீரபத்திரக்கடவுளும், வெயில் முடி தீர் தேன் பதம் கவிழ்ப்ப வீழ்ந்து - விளங்குங் கிரீடத்திலணிந்த மாலையானது தேன்சிந்த வீழ்ந்து வணங்கி, ஏயின பணி வழி நிற்ப - ஏவினதிருப்பணியின் வழியில் ஒருபால் நிற்கவும். (௫௧)

தூங்குதானையையொதுக்கிவாய்துணைக்கரம்பொத்தி
யோங்குமாலயன்றங்குறையொதுங்கிநின்றுரைப்ப
வாங்குவான்சிலையிந்திரன்முதற்றிசைவாணர்
தாங்கடாம்புரிகாரியக்குறைநின்றுசாற்ற.

(இ-ள்.) தூங்கு தானையை ஒதுக்கி - முன்அசையும் ஆடையை யொருபுறம் ஒதுக்கி, வாய் துணைக்கரம் பொத்தி - தமது வாயை இரண்டுகைகளாலு மமைத்து, ஓங்கும் மால் அயன் - (எல்லாத் தேவர்களிலும்) உயர்ந்த திருமாலும் பிரமனும், தம் குறை ஒதுங்கி நின்று உரைப்ப - தமது குறைபாடுகளை ஒருபால் ஒதுங்கித் தாழ்ந்துநின்று கூறவும், வாங்கு வான் சிலை இந்திரன் முதல் திசை வாணர் - வளைந்த இந்திரதனுசேந்திய இந்திரன்முதலிய திக்குப்பாலகர்கள், தாங்கள் தாம் புரி காரியம் குறை - தாங்கள் செய்யுங் காரியங்களிலுள்ள குறைபாடுகளை, நின்று சாற்ற - ஒருபால் நின்று கூறவும். (௫௨)

எழுவினோடுதண்டேந்திவாய்மென்றெயிறதுக்கிக்
குழுமுபாரிடத்தலைவருங்கோடிகூற்றொதுங்கி
விழுமமூழ்கிமெய்பனித்திடவிதிர்க்குமுக்குடுமிக்
கழுமுளேந்தியகணத்தவர்கடைதொறுங்காப்ப.

(இ-ள்.) எழு வின் ஓடு தண்டு ஏந்தி - வளைதடியினோடு தண்டாயுதத்தையுமேந்தி, வாய் மென்று எயிறு அதுக்கி - வாயினைமென்று பற்களையதுக்கி, குழுமு பாரிடம் தலை வரும் - நெருங்கிய பூதகணத்தலைவரும், கோடி கூற்று ஒதுங்கி விழுமம் மூழ்கி மெய் பனித்திட - அளவில்லாத இயமர்கள் அஞ்சி யொதுங்கித் துன்பத்தி லழுந்தி யுடல்நடுங்க, விதிர்க்கும் முக்குடுமி கழு முள் ஏந்திய கணத்தவர் - அசைக்கு மூன்று சிகையையுடைய சூலத்தை யேந்திய சிவகணங்களும், கடை தொறும் காப்ப - வாயில்தோறுங் காத்தற்றொழில் பூண்டுநிற்கவும். (௫௩)

சித்தர்வானவர்தானவர்சாரணர்திணிதோள்
வைத்தயாழினர்கின்னரர்மாதவரியக்கர்
பைத்தபாரிடர்காருடர்பாதலவாணர்
சுத்தயோகியர்முதல்கணத்தொகையெலாம்பரவ.

(இ-ள்.) சித்தர் வானவர் - சித்தருந் தேவர்களும், தானவர் சாரணர் - அசுரரும் சாரணர்களும், திணி தோள் வைத்த யாழினர் - திண்ணிய தோளிற்சாத்திய வீணையையுடைய விஞ்சையரும், கின்னரர் மாதவர் இயக்கர் - கின்னரர்களும் பெரிய தபோதனர்களும் யக்ஷர்களும், பைத்த பாரிடர் - பரவிய பூதகணத்தலைவரும், காருடர் பாதலவாணர் - கருடர்களும் நாகலோகத்தவர்களும், சுத்த யோகியர் - களங்கமில்லாத யோகியர்களும், முதல் கணத்தொகை எல்லாம் பரவ - முதலிய ஆகாயவாசிகளெல்லாம் (ஒருபால் நின்று) வணங்கவும். (௫௪)

இனிவரும்பிறப்பறுத்தெமைக்காத்தியாலெனத்தங்
கனிவரும்பியவன்பெழுகருணையாரமுதைப்
பனிவருந்தடங்கண்களாற்பருகிமெய்பனிப்ப
முனிவர்சங்கரசிவசிவவெனமறைமுழங்க.

(இ-ள்.) இனி வரும் பிறப்பு அறுத்து எம்மை காத்தி என - இனி வராநின்ற மறுமையை யொழித்து எம்மைக் காப்பாயென்று, தம் கனிவு அரும்பிய அன்பு எழு - தமது கனிந்த அன்பென்னும்வெள்ளத்தில் எழுந்த, கருணை ஆர் அமுதை - அருணிறைந்த சிவமாகிய அமுதினை, பனிவரும் தடங் கண்களால் பருகி - ஆனந்த பாஷ்பஞ் சிந்தும் பரந்த தமது கண்களாகிய வாயாற்பருகி, மெய் பனிப்ப - உடல் கம்பிக்க, முனிவர் சங்கர சிவசிவ என மறை முழங்க - முனிவர்கள் சங்கர சிவசிவ வென்று (ஒருபால்) வேதகோஷஞ் செய்யவும். (௫௫)

வரந்தவாதனயாவர்க்கும்வரன்முறைவழங்கி
முருந்தவாநகைமலைக்கொடிமுகிழ்நகையரும்பத்
திருந்தவாயிரங்கதிர்விடுசிங்கமெல்லணைமே
லிருந்தநாயகனிருக்கைகண்டிறைஞ்சினனிறைவன்.

(இ-ள்.) வரம் தவாதன - தாம் அருளும் வரங்கள் பிறழாமல், யாவர்க்கும் வரன் முறை வழங்கி - எவர்க்கு முறையாகத் தந்தருளி, முருந்து அவாம் நகை மலைக்கொடி முகிழ் நகை அரும்ப - மயிலிறகினடியை நட்புக்கொண்ட தந்தபந்திகளையுடைய உமாதேவியார் (இடப்பாலில்) புன்னகை செய்தருள, திருந்த ஆயிரம் கதிர் விடு - முறைமுறையாக எல்லையில்லாத கிரணங்களை வீசும், சிங்கம் மெல் அணை மேல் - சிங்கத்தாற் சுமக்கும் மெல்லிய ஆசனத்தின்மேல், இருந்த நாயகன் இருக்கை கண்டு, எழுந்தருளிய சிவபெருமானது இருப்பினைத் தரிசித்து, இறைவன் இறைஞ்சினான் - வரகுணபாண்டியன் வணங்கினான்.

அவரவர்தகுதிக்கேற்ப அருளுதலால் பிறழாமல் என்றும். தவாதன முற்றெச்சம். (௫௬)

உரைகளுந்தடுமாறமெய்யுரோமமுஞ்சிலிர்ப்பக்
கரையிறந்தவின்னருட்பெருங்கடலிலன்பென்னுந்
திரையிறந்தவாறீர்த்திடமிதந்துபோய்ச்செப்பின்
வரையிறந்தவானந்தவாரமுதைவாய்மடுத்தான்.

(இ-ள்.) உரை கள் தடு மாறவும் - தான் பேசுஞ்சொற்கள் (நாத்தழு தழுத்தலால்) தடுமாறவும், மெய் உரோமம் சிலிர்ப்பவும் - உடம்பில் உரோமங்கள் புளகிக்கவும், கரை இறந்த இன் அருள் பெருங்கடலில் - கரைகடந்த அருளாகிய பெரியகடலில், அன்பு என்னும் திரை இறந்த ஆறு ஈர்த்திட - அன்பாகிய அலையொழிந்த நதியானது (தன்னை) இழுத்துச் செல்ல, மிதந்து போய் - அந்நதியில் மிதந்து சென்று, செப்பின் வரை இறந்த ஆநந்த ஆர் அமுதை - சொல்லளவையைக்கடந்த பேரின்பமாகிய அரிய அமுதை, வாய் மடுத்தான் - தேக்கெறியப்பருகினான்.

சிவபெருமான் திருவருளாற் சிவஞேயம் விளைதலால் அருட்பெருங்கடலில் என முன்னும், அதனால் விளைந்த சிவஞேயம் சலனமின்றி நிலைபெறவேண்டுதலால் திரையிறந்தவாறு எனப் பின்னும், அதனாற் பருகுவது சிவபோகம் ஆதலால் ஆநந்த

வாரமுது என அதன் பின்னு முறைப்படக் கூறினார். " அவனருளாலே யவன்றாள் வணங்கி " எனவரும் ஆன்றோர் வாக்கானும் உணர்க. சிவபெருமான் திருவருள் எல்லையின்றி யிருத்தலால் அருட்பெருங்கடல் எனவும், கடலிற்சென்று பாய்தல் ஆறுதலால் அன் பென்னும் ஆறு எனவும், கடலில் விளையும் விழுப்பொருள் அமுதாதலால் ஆநந்தவா ரமுதெனவும் மிகைகுறையின்றிச் சமனாக உருவகஞ் செய்தலால் அமைவிலி யுரு வகவணி. (௫௭)

தன்புலன்களுங்கரணமுந்தன்னவேயாக்கி
யன்புடம்புகொண்டவனெதிரருட்சிவலோகம்
பின்புபண்டுபோன்மதுரையாப்பிராட்டியுந்தானு
முன்பிருந்தவாறிருந்தனன்சுந்தரமூர்த்தி.

(இ-ள்.) தன் புலன்களும் கரணமும் தன்னவே ஆக்கி - தனது இந்திரியங் களையும் அந்தக்கரணங்களையும் தன்னுடையனவாகவே செய்து, அன்பு உடம்பு கொண்டவன் எதிர்-அன்பே யொருசரீரமாகக்கொண்டுநின்ற வரகுணபாண்டியனுக் கெதிரே, அருள் சிவலோகம்-அருள்வடிவாகிய சிவபுரமானது, பின்பு பண்டு போல் மதுரையாக - பின்னர் முன்புபோல மதுரையாக, சுந்தரமூர்த்தி-சோமசுந்தரக்கட வுள், தானும் பிராட்டியும் முன்பு இருந்த ஆறு இருந்தனன் - தானும் அங்கயற்க ண்ணியாருமாக முன்னிருந்த வண்ணமே யிருந்தருளினான்.

ஏனைய விடயங்களிற் செல்லாது புலன்களுங் கரணங்களும் அன்பின் வடி வாக நின்றன என்பார் புலன்களுங் கரணமுந் தன்னவே யாக்கி யென்றார். (௫௮)

வேந்தர்சேகரன்வரகுணன்விண்ணிழிகோயி
லேந்தல்சேவடியிறைஞ்சிநின்றிறையருட்பெருமை
யாய்ந்தவாவுதன்னகம்புகவின்பமோடன்பு
தோய்ந்துதாரைநீர்துளும்பநாக்குழறிடத்துதிப்பான்.

(இ-ள்.) வேந்தர் சேகரன் வரகுணன் - அரசர்களுக்கு முடிபோன்ற வரகு ணபாண்டியன், விண் இழி கோயில் ஏந்தல் சேவடி இறைஞ்சி நின்று - விண்ணுல கினின்றும் இழிந்த இந்திரவிமானத்தி லெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளுடைய செவந்த திருவடிகளை வணங்கிநின்று, இறை அருள் பெருமை - அவ்விறைவனுடைய திருவருட்பெருமையானது, ஆய்ந்து அவாவு தன் அகம் புக - ஆராய்ந்து விரும்புந் தனது மனத்தில் பிரவேசிக்க, இன்பம் அன்பு தோய்ந்து-பேரின்பத்திலும் சிவநே யத்திலுமழுந்தி, தாரை நீர் துளும்ப - கண்களில் ஆனந்தபாஷ்பம் ததும்பவும், நா குழறிட - நாக்குழறவும், துதிப்பான் - வணங்குவானாயினான்.

தாரைகண். அடைதற்கரிய சிவபெருமான் திருவருள் நாயிற்கடைப்பட்ட தன்பால் எளிவந்த பெருமை கனவுபோலத் தனக்குக் காணப்பட்டதால் ஆய்ந்த வாவு தன்னகம்புக எனவும், பசுகரணமொழிந்து சிவகரணமாய் ஆராயுந்தோறும் பேரின்பமோடு சிவநேயம் பெருகுதலால் இன்பமோடன்பு தோய்ந்து என்வும், பே ய்பிடிக்கப்பட்டவன்போல அவற்றின் மயமாய் நிற்றலால் நீர்துளும்ப நாக்குழறி ட எனவுங் கூறினார். ஓடு எண்ணிடைச்சொல். (௫௯)

கொச்சகக்கலிப்பா.

நாயினேனென்னைநடுக்கும்பழியகற்றித்
தாயினேராகித்தலையளித்தாய்தாள்சரணஞ்

சேயினேன்காணச்சிவலோகங்காட்டிப்பின்
கோயினேர்நின்றவருட்குன்றேநின்றாள்சரணம்.

(இ-ள்.) நாயினேன் என்னை - இழிந்த நாய்போன்ற என்னை, நடுக்கும் பழி அகற்றி - வருத்தும் பிரமசாயையினின்று நீக்கி, தாயின் நேராகி - (கருணை செய்வதில்) தாயையொத்து, தலை யளித்தாய் தாள் சரணம் - தலையளிதந் தாண்டவனேயுன் திருவடிக்கு வந்தனம், சேயினேன் காண - உனக்கு அண்மையனல்லாத யானுங்கண்டு தரிசிக்க, சிவலோகம் காட்டி-சிவபுரத்தைக் காட்டியருளி, பின் - பின்னர், கோயில் நேர் நின்ற அருள் குன்றே - திருக்கோயிலில் என்னெதிர் நின்றருளிய இருபாமலையே, நின் தாள் சரணம் - உன் திருவடிக்கு வந்தனம்.

சேய் தூரம். கருணையில் தாய்போல்பவன் என்பான் தாயினேராகி யெனவும், நின்னைத் தரிசிக்க அருகனல்ல னென்பான் சேயினேன் எனவும், யான் தரிசித்தற் கருகனல்லனாயினும் நீ என்பாற்செய்த அருள் பெரிதென்பான் அருட்குன்றே யெனவுங் கூறினான். (௬௦)

மாழாந்துசெய்யும்வினைவழிபோய்வன்னரகிற்
றாழாதடியனேற்கன்புதந்தாய்தாள்சரண
மேழாகிநான்குவகையாயெழுபிறப்பும்
பாழாகவென்னைப்பணிகொண்டாய்தாள்சரணம்.

(இ-ள்.) மாழாந்து செய்யும் வினை வழி போய் - மயங்கிச் செய்யும் வினை வழிச்சென்று, வல் நரகில் தாழாது - கொடிய நரகிலழுந்தாமல், அடியனேற்கு அன்பு தந்தாய் தாள் சரணம் - அடியனேனாகிய எனக்கு அன்புதந் தாண்டவனே யுன்றிருவடிக்கு வந்தனம், ஏழாகி நான்கு வகையாய் எழு பிறப்பும் பாழாக - எழுவகைப்பட்டு நான்குவகையு ளடங்கிப் பரந்த பலபிறப்புகளும் என்னிடத்துப் பாழ்பட, என்னை பணி கொண்டாய் தாள் சரணம் - என்னைக் குற்றேவல் கொண்டோயுன் திருவடிக்கு வந்தனம்.

தன்னுடையனவல்லாத விடயங்களைத் தன்னுடையவாகக் கருதுதலால் மாழாந்து செய்யும் எனவும், அதனால் ஏறும் ஆகாமியம் மறுமைக்குக் காரணமாதலால் வினைவழிபோய் எனவும், தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்னும் எழுபிறப்பும் அண்டசம், சுவேதசம், சராயுசம், உற்பிசம் என்னும் நால்வகையு ளடங்குதலால் ஏழாகி நான்குவகையா யெழுபிறப்பும் எனவுங் கூறினான். (௬௧)

வெங்கட்பழியின்வினையேனைவேறாக்கித்
திங்கட்குலக்களங்கந்தீர்த்தாய்நின்றாள்சரண
மங்கட்சிவபுரமுண்டன்புடையார்க்கென்பதையின்
றெங்கட்குக்காட்டியிசைவித்தாய்தாள்சரணம்.

(இ-ள்.) வெங்கண் பழியின் - கொடியபழியினின்று, வினையேனை வேறாக்கி - இருவினைச்சிமிழ்ப்புடைய என்னை வேறுபடுத்தி, திங்கள் குலம் களங்கம் தீர்த்தாய் - எமது சந்திரமரபிற்கு நேர்ந்த குற்றத்தைத்தீர்த்தவனே, நின் தாள் சரணம் - உன் திருவடிக்குவந்தனம், அன்பு உடையார்க்கு - சிவநேயமுடையவர்க்கு, அங்கண் சிவபுரம் உண்டு என்பதை - அவ்விடத்துச் சிவபுரமுண்டு என்று ஆ

கமக்கூறுவதை, இன்று எங்கட்கு காட்டி இசைவித்தாய் - இப்பொழுது எங்களு க்குக்காட்சியளவையாலுணர்த்தித் தெளிவித்தவனே, தாள் சரணம் - உன்றிருவடி க்குவந்தனம்.

பாண்டியர்மரபு ஈடேறச் சவுந்தரபாண்டியராய்த் தேவரீர் முடிகவித்தா சான்ற வுரிமையால் அம்மரபிற்கோர் பழிவாராமற்காத்தல் உமதுகடமை என்பா ன் வினையேனைவேருக்கித் திங்கட்குலக்களங்கந்தீர்த்தாய் எனவும், அடியார்க்குச் சிவபுரம் உண்டென ஆகமம் வளவையாற் கூறப்படுவதை யுலோகாயதன்முதலி யோர்மதம்பட இன்று என்போலியர்க்குக் காட்சியளவையா லுணர்த்தினுயென் பான் எங்கட்குக்காட்டி யிசைவித்தாயெனவுங்கூறினன். (௬௨)

கலிநிலைத்துறை.

என்னவேத்தியின்னருண்முகந்தீறிலாவன்பாற்
பின்னர்வேறுபல்பூசையும்பிறக்குவித்திருந்தான்
மன்னரேறடையார்க்கொருமடங்கலேறடல்வேற்
றென்னரேறெனத்தோன்றியவரகுணதேவன்.

(இ-ள்.) என்ன ஏத்தி - என்றுதுதித்து, இன் அருள் முகந்து - இனியதிருவ ருளைவேண்டி யாங்கடைந்து, ஈறு இல்லாத அன்பால் - அளவிடக்காதபேரன்பி னுல், பின்னர் - பின்பு, வேறுபல் பூசையும் பிறக்குவித்து இருந்தான் - பலவகைப் பட்ட பூசனைகளையும் விளங்கச் செய்வித்திருந்தனன், மன்னர் ஏறு - (அவன்யாரெ ன்னில்) அரசர்களாகியயானைகளுக்கு ஓராண்சிங்கம்போல்பவனும், அடையார்க்கு ஒருமடங்கல் ஏறு - பகைவர்க்கோ ரிடியேறுபோல்பவனும், அடல் வேல் தென்னர் ஏறு என - கொலைத்தொழிலையுடைய வேலையேந்திய பாண்டியர்களுள் ஆண்சிங்க ம்போல்பவனு மென்றுசொல்ல, தோன்றிய வரகுணதேவன் - அவதரித்தவரகுண தேவனென்னும்பாண்டியன்.

சிவபெருமானை மனமொருப்படத்துதித்தலால் அடையும்பேறு திருவருளா தலால் இன்னருண்முகந்து எனவும், பகைவருயிரைக் கவர்வோனுதலால் குவ்வுரு பு பகைதொடர்பொருள்பட அடையார்க்கொருமடங்கலேறு எனவும், பாண்டியரு ட் சிறந்தவனுதலால் கூட்டிப்பிரித்தற் பொருள்படும் ஏழனுருபுதொக்குநிற்ப அடல் வேற்றென்னரேறெனத் தோன்றிய எனவுங்கூறினர். (௬௩)

என்றதென்மலைமுனிவனையிருடிகணோக்கி
யன்றுவாசவன்பழிகரிசாபமந்தணனைக்
கொன்றுதாயொடுங்கூடியகொடுவினைமுதலாத்
துன்றுபாவமுமதுரையிற்றொலைத்தனனன்றே.

(இ-ள்.) என்றதென் மலைமுனிவனை - என்றுகூறியருளிய அகத்தியமுனிவ னை, இருடிகள் நோக்கி - முனிவர்கள்பார்த்து, அன்று-அக்காலையில், வாசவன் பழி - இந்திரனுடைய பிரமசாயையும், கரிசாபம் - வெள்ளையானையின்சாபமும், அ ந்தணனை கொன்று தாயொடுங்கூடிய கொடுவினைமுதலாக - தனதுபிதாவைக்கொ ன்று தாயொடுங்கலந்த மாபாதகன் பாதகமுமுதலாக, துன்றுபாவமும் - நெருங்கி யபாவங்களியாவையும், மதுரையில் தொலைத்தனன் - (சோமசுந்தரக்கடவுள்) மது ரையிலேயேதொலைத்தருளினர்.

பிறதலங்களிற்செய்த கொடும்பழிகளைத்தீர்த்தருளுவது இத்தலம் என்பது இதனாற்கூறப்பட்டது. (௩௪)

பரமனெண்குணன்பசுபதிவரகுணன்பற்றும்
பிரமவன்பழியிடைமருதிடைவிட்டுப்பெயர
வரமளித்தவாறென்னைகொல்வள்ளலேயிதனைத்
திரமுறப்புகலெமக்கெனமுனிவர்கோன்செப்பும்.

(இ-ள்.) பரமன் எண்குணன் பசுபதி - பரமனும் எட்டுக்குணங்களை யுடையவனும் பசுபதியுமாகிய சோமசுந்தரக்கடவுள், வரகுணன் பற்றும் பிரமவன்பழி- வரகுணனைப்பற்றிய வலியபிரமசாயை, இடைமருது இடைவிட்டுப்பெயர வரம் அளித்த ஆறு என்னைகொல் - திருவிடைமருதில் விட்டுநீங்க வரம் அருளியவகை யாது, வள்ளலே - (எங்கட்கு) அருட்கொடையாளராகிய முனிவரே, இதனை எமக்கு திரம் உற புகல் என்ன - இதனையெங்களுக்கு ஐயந்தீரக்கூறி யருளாயென்றிரக்க, முனிவர்கோன் செப்பும் - அகத்தியமுனிவர் கூறியருளுகின்றார்.

ஆன்மாக்களுக்கு மோட்சந்தருபவன் என்பார் பரமன் எனவும், தன்வயத்தனாதல் முதலிய எண்குணங்களையுந் தனக்கே யுரிமையாகவுடையவன் என்பார் எண்குணன் எனவும், பிரமன்முதலியோர் ஆணவமலத்திற் சிமிழ்ப்புண்டு பரதந்திரராய் நிற்றலானும் தான் அவ்வாறின்றிச் சுதந்திரனாய் நிற்றலால் அப்பசுக்களுக்கு இறைவனாவான் என்பார் பசுபதியெனவுங் கூறினார். (௩௫)

பூதநாயகன்சுந்தரன்புண்ணியமூர்த்தி
யாதலாலன்னதலத்துறையடியவரஞ்சிப்
பாதகஞ்செயாதொழுகுறாஉம்படிநினைந்தினைய
தீதுறாஉம்பழிதனையிடைமருதினிற்றீர்த்தான்.

(இ-ள்.) பூதநாயகன் சுந்தரன் - பஞ்சபூதங்களுக்கு இறைவராகிய சோமசுந்தரக்கடவுள், புண்ணியமூர்த்தி ஆதலால - தருமசொரூபி ஆதலால், அன்னதலத்து உறை அடியவர் அஞ்சி பாதகம் செய்யாது ஒழுகுறும்படி நினைந்து—அந்தத்திருவாலவாயிலில் வசிக்கும அடியவர் அஞ்சிப பாதகஞ்செய்யாமல் நல்லொழுக்கத்திலொழுகத் திருவுளங்கொண்டு, இனைய தீது உறும்பழிதனை - இந்தகொடியபாதகத்தை, இடைமருதினில் தீர்த்தான் - திருவிடைமருதில் வரகுணபாண்டியனுக்குத் தீர்த்தருளினார்.

பூதநாயகன் பூதகணங்களுக்குத்தலைவன் எனப்பொருள்கொள்ளுதலும் ஒன்று. செய்தபுண்ணியமோங்கல்போலப் பாவமுமோங்குமென்பதுதோன்ற அஞ்சிப் பாதகஞ்செயாதொழுகுறும்படி யெனவும், இடைமருதினிற்றீர்த்தான் எனவுங்கூறினார். அன்ன - இனையசுட்டுத்திரிபுகள். (௩௬)

என்றகத்தியமுனியிறையிறைகொடுத்தியம்ப
நன்றெனச்சிரம்பணித்துமெய்ஞ்ஞானவானந்தந்
துன்றிநற்றவர்சுந்தரச்சோதிசேவடிக்கீ
ழொன்றுமற்புதவானந்தவுததியுட்களித்தார்.

(இ-ள்.) என்று அகத்தியமுனி இறை - என்று அகத்தியமுனிசிரேஷ்டர், இறைகொடுத்தியம்ப - விடைகொடுத்தருள, நல் தவர் - (கேட்ட) நல்லமுனிவர்கள்,

நன்று என சிரம்பணித்து - தக்கதென்று சிரக்கம்பஞ்செய்து, மெய்ஞ்ஞானம் ஆனந்தம் துன்றி-சிவபெருமான்றிருவுருவாகிய உண்மை அறிவானந்தத்தில்தோய்ந்து, சுந்தரச்சோதி சேவடிக்கீழ் ஒன்றும் - சோமசுந்தரக் கடவுளுடைய செவ்வந்திருவடியின்கீழ்ப்பொருந்திய, அற்புத ஆனந்த உததி உள் களித்தார்-அற்புதம்விளைக்கும் பேரின்பமாகிய கடலுளாழ்ந்திக் களிகூர்ந்தார்கள்.

சிவபெருமான் உண்மைநிலையைக் கேட்டறிந்தாராதலால் நன்றெனச்சிரம்பணித்துமெய்ஞ்ஞானவானந்தந்துன்றி எனவும், அதனால் தம்வசம் அழிந்து ஆநந்தத்திலழுந்தினராதலால் அற்புதவானந்தவுததியுட்களித்தார் எனவுங்கூறினர். (௬எ)

கொச்சகக்கலிப்பா.

அன்னதனித்தொன்மதுரையன்றுதொடுத்தின்றெல்லை
தன்னனையதாயகிலதலங்கள்சிகாமணியாகிப்
பொன்னகரின்வளஞ்சிறந்துபூவுலகிற்சிவலோக
மென்னவிசைபடப்பொலிந்ததேழிரண்டுபுவனத்தும்.

(இ-ள்.) அன்னதனி தொல் மதுரை - அந்த ஒப்பில்லாத தொன்றுதொட்டுள்ள மதுரைத்திருநகரமானது, ஏழிரண்டு புவனத்தும் - பதினான்குலகங்களிலும், அன்றுதொடுத்து இன்று எல்லை - அந்நாள் தொட்டு இந்நாள் காறும், தன் அனையது ஆய் - தனக்குத்தானேயொத்ததாய், அகிலதலங்கள் சிகாமணி ஆகி - எல்லாச் சிவதலங்களுக்கும் ஓர்சிகாமணியாய், வளம் பொன் நகரின் சிறந்து - வளமையால் தேவருலகினு மேம்பட்டு, பூவுலகில் சிவலோகம் என்ன இசைபடப் பொலிந்தது- பூலோகசிவலோகமென்று புகழுண்டாக விளங்கியது.

பூலோக சிவலோகம் எனத் திருவாலவாய்க்குப் போந்த பெயர்க்காரணம் இதனாற்கூறப்பட்டது. (௬அ)

வரகுணனுக்குச்சிவலோகங்காட்டியபடலம் முற்றிற்று.

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - உ0௩0.

## நாற்பத்தொன்றாவது

# விறகுவிற்றபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

நெடியவன்பிரமன்றேடநீண்டவன்றென்னற்கேழின்
முடியதாஞ்சிவலோகத்தைக்காட்டியமுறையீதையன்
படிமிசைநடந்துபாடிப்பாணன்றன்விறகாளாகி
யடிமையென்றடிமைகொண்டவருட்டிறமெடுத்துச்சொல்வாம்.

(இ-ள்.) நெடியவன் பிரமன் தேட நீண்டவன் - திருமாலும் பிரமனுந் தனதுதிருவடியையும் திருமுடியையுந் தேடிக்காண அவர்கட்குப்புலப்படாது ஒளிப்பி

விறகுவிற்ற திருவிளையாடல்.





ழும்பாய் நின்ற சோமசுந்தரக்கடவுள், தென்னற்கு ஏழின்முடியது ஆம் சிவலோக த்தை காட்டிய முறை ஈது - வரகுணபாண்டியனுக்கு ஏழுலகினுக்கும் ஓர்மகுடமா கிய சிவபுரத்தைக்காட்டியருளிய திருவிளையாடலிது, ஐயன் - அச்சோமசுந்தரக்க டவுள், படிமிசை விறகாளாகி நடந்துபாடி - நிலவுலகின்மேல் விறகுசுமக்கும் ஆ ளாய்த் திருவுருவங்கொண்டு நடந்து இசைபாடி, பாணன் தன் அடிமை என்று அ டிமைகொண்ட - பாணபத்திரருடைய அடிமையென்றுகூறி யவரையடிமைகொண் டருளிய, அருள் திறம் எடுத்துச் சொல்வாம் - திருவருளின்திறத்தை யுணர்த்துந் தி ருவிளையாடலை இனியெடுத்துக்கூறுவாம்.

ஏனையோர்க்கரியன் அடியார்க்கெளியன் என்பதை நெடியவன்பிரமன்றேட நீண்டவன் என்பதனாலும், விறகாளாகி யடிமையென்றடிமைகொண்ட என்பதனாலு முணர்த்தினர். ஏழின்முடியதாஞ் சிவலோகம் என்றது, புவலோகங்கடந்துபோய் எனவருஞ்செய்யுளால் உணர்க. (க)

மன்றலந்தெரியன்மார்பன்வரகுணன்செங்கோலோச்சிப்
பொன்றலங்காவலானிற்பொலியுநாளேமநாத
னென்றொருவிறல்யாழ்ப்பாணன்வடபுலத்திருந்தும்போந்து
வென்றிகொள்விருதினோடும்விஞ்சைசூழ்மதுரைசார்ந்தான்.

(இ-ள்.) மன்றல் அம் தெரியல் மார்பன் வரகுணன் - வாசமிக்க அழகிய வேப்பமலர்மாலையையணிந்த மார்பையுடைய வரகுணபாண்டியன், செங்கோல் ஓச்சி பொன் தலம் காவலானில் - செங்கோல்செலுத்தி விண்ணுலகைக்காக்கும் இந் திரனைப்போல, பொலியும் நாள் - விளங்குங்காலையில், ஏமநாதன் என்று விறல் ஒ ருயாழ்ப்பாணன் - ஏமநாதனென்று வெற்றியையுடைய ஒருயாழ்ப்பாணன், வடபு லத்து இருந்தும் போந்து - வடதிசையினின்றும்வந்து, வென்றிகொள் விருதினோடு ம் - வெற்றிகொண்டவிருதுகளோடும், விஞ்சைசூழ் மதுரைசார்ந்தான் - கல்விமிக் கமதுரையையடைந்தான்.

பலவரசர்கள் சபையிலும்சென்று தன்னிசைநூல் வன்மைகாட்டி யங்குள் ள இசைநூற்புலவரைவென்று அவ்வரசர்களால் ஆங்காங்கோர்சின்னம்பெற்றவன் என்பார் வென்றிகொள் விருது என்றார். (உ)

பூழியர்பெருமான்கோயில்புகுந்துவேத்தவையத்தெய்திச்
சூழிமால்யானையானைத்தொழுதுபல்புகழ்கொண்டாடி
யேழிசைமழலைவீணையிடந்தழீஇச்சுருதிகூட்டி
வாழியின்னிசைத்தேன்மன்னனஞ்செவிவழியப்பெய்தான்.

(இ-ள்.) பூழியர் பெருமான் கோயில் புகுந்து - பாண்டியருள் பேரரசனாகி ய வரகுணபாண்டியன் கோயிலிற்சென்று, வேந்து அவையத்து எய்தி - அரச சபையையடைந்து, சூழிமால் யானையானை தொழுது-முகபடாத்தையணிந்த யானை ச்சேனையையுடைய அப்பாண்டியனைவணங்கி, பல்புகழ் கொண்டாடி - பலதிறத்து ந்தோன்றுதொட்டுவந்த அவன்புகழைப்புகழ்ந்து, மழலை ஏழிசை வீணை இடம் தழு வி - மழலைச்சொற்போல இனிமைவாய்ந்த ஏழிசையமைந்தவீணையை யிடப்பால் தழுவி, சுருதிகூட்டி இன் இசை தேன் - அதனாற்சுருதிகூட்டி இனிய இசையாகி யதேனை, மன்னன் அகம் செவி வழிய பெய்தான் - அவ்வரசனுடைய செவியினுள் நிரம்பி வழியவாக்கினான்.

நிலவுலகமுற்றும் தன்னடிக்கீழ்ப்படுத்தினவனென்பார் பூழியர் பெருமான் என்றார். (௩)

முகையுடைந்தவிழ்ந்தமாலைமுடித்தலைதுளக்கித்தூசு
பகலவிர்மணிப்பூணல்கிப்பல்லுணுக்கருவிநல்கி
யகன்மனைவேறுகாட்டியரசர்கோன்வரிசைசெய்ய
விகலறுகளிப்பினோடுமிசைவல்லானில்லிற்புக்கான்.

(இ-ள்.) முகை உடைந்து அவிழ்ந்தமாலை முடிதலை துளக்கி - அரும்பின்முறுக்குடைந்தவிழ்ந்த மாலைசூடிய கிரீடத்தைத்தரித்த தலையையசைத்து, தூசுபகல் அவிர்மணி பூண் நல்கி - ஆடையையும் சூரியனைப்போலவிளங்கும் இரத்தினமழுத்திய ஆபரணங்களையுந்தந்து, பல் உணுக்கருவி நல்கி - பலவகைப்பட்ட வுணவுக்கமைந்த வுபகரணங்களையுந்தந்து, அகன்மனை வேறுகாட்டி - இடம்பரந்தவீடொன்றைத் தனியேகொடுத்து, அரசர்கோன் வரிசைசெய்ய - வரகுணபாண்டியன் வரிசைகள் செய்ய, இகல் அறு களிப்பின் ஓடும் - பகையகன்ற செருக்கினோடும், இசைவல்லான் இல்லில் புக்கான் - இசைநூலில்வல்ல ஏமநாதன் தனக்குக்காட்டிய அவ்வில்லத்திற்சென்றான்.

அரசன்செய்தவரிசைகளால் தன்னோடிசைபாடவல்லோரிங்கில்லையெனக்கருதினன் என்பார் இகலறுகளிப்பினோடும் என்றார். (௪)

மீனவன்வரிசைபெற்றசெருக்கினும்விருதினானு
மானமேல்கொண்டுதன்னோடின்னிசைபாடவல்ல
தானயாழ்ப்புலவர்வேறிங்கில்லெனத்தருக்குஞ்செய்தி
கோனறிந்துழையர்க்கூவிப்பத்திரற்கொணர்திரென்றான்.

(இ-ள்.) மீனவன் வரிசைபெற்ற செருக்கினும் விருதினானும் - பாண்டியன் செய்த வரிசைகளைப்பெற்ற செருக்கினாலும் (பல அரசர்கள்கொடுத்த) விருதினாலும், மானம் மேல் கொண்டு - மானமீக்கூர்ந்து, தன்னோடு இன் இசை பாடவல்ல- தன்னோடு இசைபாடுதலில்வல்ல, தானம் யாழ்ப்புலவர் - தானமமைந்த யாழ்வல்லோர், இங்கு வேறு இல் என தருக்கும் செய்தி - இந்த அரசனவையத்தில் வேறொருவரில்லையென் றிறுமாக்குஞ்செய்தியை, கோன் அறிந்து உழையர்க்கூவி-வரகுணபாண்டியன்தெரிந்து வேவுகாரரையழைத்து, பத்திரன் கொணர்திர் என்றான் - பாணபத்திரரைக்கொண்டு வாருங்களென்று கட்டளையிட்டான்.

தானம் சத்தசுரங்களும் எழுமிடம். (௫)

உழையரால்விடுக்கப்பட்டபத்திரனுவரிவென்றோன்
கழல்பணிந்தருகுநிற்பக்கௌரியனோக்கிப்பாணி
பழகிசைவல்லானோடும்பாடுதிகொல்லோவென்ன
மழலையாழிடந்தோளிட்டபாணர்கோன்வணங்கிச்சொல்வான்.

(இ-ள்.) உழையரால் விடுக்கப்பட்ட பத்திரன் - வேவுகாரரால் செலுத்தப்பட்ட பாணபத்திரர், உவரிவென்றோன் கழல்பணிந்து அருகு நிற்ப - கடலைவென்ற வரகுணபாண்டியனுடைய பாதத்தைவணங்கிப் பக்கலில்நிற்க, கௌரியன் நோக்கி- அப்பாண்டியன் பார்த்து, பாணி பழகு இசைவல்லானோடு பாடுதியோ என்ன - தா

ளங்களிற்பழகிய ஏமநாதனோடு பாடவல்லோயோவென்று வினவ, மழலை யாழ் இடம் தோளிட்ட பாணர்கோன் - மழலைச்சொற்போல இனிமைவாய்ந்த வீணையை இடத்தோளிலிட்ட பாணர்க்கரசராகிய பத்திரர், வணங்கி சொல்வான் - பணிந்து கூறுகின்றார்.

உக்கிரகுமாரப்பெருவழுதியார் கடல்சுவறச்செய்த வென்றி அவர் மரபின் வழிவந்தோர்க்கும் உரியதாதலால் உவரிவென்றோன் என்றார். தாளம்கொட்டு, அசை, தூக்கு, அளவு என நான்குவகைப்படும். கொட்டு ஆவது அமுக்குதல், அசையாவது தாக்கியெழுதல், தூக்கு ஆவது தாக்கித்தூக்குதல், அளவு ஆவது தாக்கின ஓசை நேரே மூன்றுமாத்திரை பெறுமளவும் வருதல். (௬)

தென்னவர்பெருமயானுன்றிருவுளவலனுங்கூடன்
முன்னவனருளுமூட்டுமுயற்சியான்முயன்றுபாடி
யன்னவன்விருதுவாங்கியவனைவீறழிப்பனென்றான்
மன்னவனாளைப்பாடுபோகெனவரைந்துசொன்னான்.

(இ-ள்.) தென்னவர் பெரும - பாண்டியர்களுட்சிறந்த அரசனே, யான் - அடியேன், உன் திருவுளவலனும் - உனதுதிருவுளக்கருத்தின் வன்மையும், கூடல் முன்னவன் அருளும் - மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளின் திருவருளும், மூட்டும் முயற்சியால் - கூட்டிமுடிக்கும் நன்முயற்சியின்வழியே, முயன்று பாடி - சென்று இசைபாடி, அன்னவன் விருதுவாங்கி - அந்த ஏமநாதனுடைய விருதினைவாங்கி, அவனை வீறு அழிப்பன் என்றான் - அவனைச் செருக்கழிப்பேனென்றுகூறினார், மன்னவன் - வரகுணபாண்டியன், நாளை பாடு போக என வரைந்து சொன்னான் - நாளைக்குவந்து அவனோடுபாடு இன்றைக்குப் போகக்கடவாயென்று காலவரையறைசெய்துகூறினான்.

அரசன்பாற் பணிசெய்வோராதலால் உன்திருவுளவலனும் எனவும், சிவபிரான் திருவருளாலன்றி யொன்றுங் கைகூடாதாதலால் கூடன் முன்னவனருளும் எனவும், தம்மாலாவதொன்றில்லையென்பாராதலால் மூட்டுமுயற்சியால் முயன்று பாடியெனவும், இவற்றால் அவனைவெல்லுதல் எளிதென்பாராதலால் விருதுவாங்கி அவனை வீறழிப்பன் எனவுங்கூறினார். (எ)

இற்கண்ணேயிசைவல்லான்போயிருந்துழியனையான்பாங்கர்க்
கற்கும்பாண்மக்கண்மல்லலாவணங்கவலைமன்றம்
பொற்குன்றமனையமாடமறுகெங்கும்போகிப்போகிச்
சொற்குன்றாவகையாற்பாடித்திரிந்தனர்வீறுதோன்ற

(இ-ள்.) இல் கண் ஏ இசைவல்லான் போய் இருந்த உழி - தமதில்லினிடத்துப் பாணபத்திரர்சென்று இருந்த இடத்தில், அனையான் பாங்கர் கற்கும் பாண் மக்கள் - அந்த ஏமநாதன்பக்கலில் இசைகற்கும்பாணர்கள், மல்லல் ஆவணம் கவலை மன்றம் - வளமிக்க கடைவீதியிலும் முத்தெருக்கூடுமிடத்திலும் அம்பலத்திலும், பொன் குன்றம் அனைய மாடம் மறுகு எங்கும் - மேருவையொத்த மாடங்களையுடைய வீதிகளினெவ்விடங்களிலும், போகி போகி - சென்று சென்று, சொல் குன்றா வகையால்பாடி - இசைநூலிற்குரிய சொற்கள் தத்தமக்குரிய மாத்திரைகளிற் குறைபடாதபடிபாடி, வீறுதோன்ற திரிந்தனர் - தமது இசைநூலின்வன்மை யாவர்க்கும் புலப்படத்திரிந்தார்கள்,

இசைநூற்குரியசொற்கள் இயற்சொல், திரிசொல், வடசொல், திசைச்சொற்களாம். குன்றுதவலகையாற்பாடுதல் அச்சொற்களிலுள்ள எழுத்துக்கள் தத்தமக்குரிய மாத்திரைகளிற்குன்றுதவண்ணந் தோன்றப்பாடுதல். (௮)

இவ்விசைகேட்டுநன்றென்றதிசயித்திசைவல்லான்பால்
வவ்விசைமைந்தர்பாடும்வண்ணமீதென்னேகெட்டேன்
அவ்விசைவல்லான்பாடுமுறையெற்றோவவனைநாளைச்
செவ்விசைபாடிவெல்வதெவனெனத்திவவுக்கோலான்.

(இ-ள்.) திவவு கோலான் - வார்க்கட்டமைந்த வீணையில்வல்ல பாணபத்திரர், இ இசை கேட்டு நன்று என்று அதிசயித்து - இந்த இசையைக் கேட்டுக் கெட்டி கெட்டி யென்று வியந்து, இசை வல்லான் பால் வவ்வு இசை மைந்தர் பாடும் வண்ணம் ஈது என்னே கெட்டேன் - இசைநூலில் வல்ல ஏமநாதனிடத்துக்கற்கு மாணாக்கர்கள் பாடும் வகை யிதுவாயின் யான் கெட்டேனே, அ இசை வல்லான் பாடும் முறை எற்றோ - அந்த ஏமநாதன் பாடும்வகை யெவ்வாறுள்ளதோ, அவனை நாளை - அவனை நாளைக்கு, செவ்விசை பாடி வெல்வது எவன் என - செவ்விய இசையைப் பாடிவெல்வது எவ்வாறென்று.

கெட்டேன் வியப்பிடைச்சொல். (௯)

மையணிமிடற்றினானைமதுரைநாயகனைவந்தித்
தையனேயடியேற்கின்றுனருட்டுணைசெய்யல்வேண்டும்
மெய்யனேயென்றுபோற்றிவேண்டிக்கொண்டன்புதோய்ந்த
பொய்யறுமனத்தானில்லம்புக்கினிதிருந்தானிப்பால்.

(இ-ள்.) மை அணி மிடற்றினானை - விஷத்தையணிந்த ஸ்ரீகண்டத்தையுடைய பெருமானாகிய, மதுரை நாயகனை - சோமசுந்தரக்கடவுளை, வந்தித்து - வணக்கஞ்செய்து, ஐயனே - எமதுபெருமானே, அடியேற்கு இன்று உன் அருள் துணை செய்யல் வேண்டும் - அடியேனாகிய எனக்கு இப்பொழுது உன்திருவருள் முன்னிற்க வேண்டும், மெய்யனே என்று போற்றி வேண்டிக் கொண்டு - உண்மைவடிவா யுள்ளவனே யென்று துதித்துவேண்டி, அன்பு தோய்ந்த - சிவநேயத்திற் கலந்த, பொய் அறு மனத்தான்-மெய்ம்மை வாய்ந்த மனத்தையுடைய பாணபத்திரர், இல்லம் புக்கு இனிது இருந்தான் - தமதில்லிற்குச் சென்று கவலையின்றி யிருந்தார், இப்பால் - இப்புறம்.

திருவருளால் யாவுங்கைகூடும் எனக்கருதினாராதலால் அருட்டுணை செய்யல் வேண்டும் எனவும், சிவபெருமான் சந்நிதியில் தங்குறைபாட்டை யொப்புவித்தமையால் அக்குறைபாட்டைக் களையுங்கடமை யவனுக்கே யெனக்கருதியிருந்தனரென்பார் இல்லம்புக்கினி திருந்தான் எனவுங்கூறினார். (௧௰)

கலிநிலைத்துறை.

வருத்தனாகிவந்திரந்தவனிசைப்பகைமாற்ற
விருத்தனாம்விறகாளெனவிண்ணிழிவிமானத்
தொருத்தனாறிவாகியவுண்மையானந்தத்
திருத்தனார்தமதிச்சையாற்றிருவுருக்கொள்வார்.

(இ-ள்.) வருத்தன் ஆகி வந்து இரந்தவன் இசைப் பகை மாற்ற - வருத்தமுடையவராகிவந்து தமது குறைகூறி யிரந்த பாணபத்திரர்க்குப் பகைவனாகிய ஏம

நாதனைக் குடியோட்ட, விருத்தன் ஆம் விறகு ஆள் என - விருத்தவடிவாகிய விறகாளைப்போல, விண் இழி விமானத்து ஒருத்தனார் - விண்ணுலகினின்று மிழிந்த இந்திரவிமானத்திலெழுந்தருளிய ஒப்பில்லாதவரும், உண்மை அறிவு ஆநந்தம் ஆகிய திருத்தனார் - சத்துச் சித்து ஆநந்தவடிவுடையவருமாகிய சோமசுந்தரக்கடவுள், தமது இச்சையால் திரு உரு கொள்வார் - தமது சுதந்திர இச்சையினால் திருவுருவங்கொள்வாராயினார்.

அன்புதோய்ந்த பொய்யறுமனத்தான் என்றமையின் அவர்கொண்ட அன்பே சிவமாதலால் விருத்தனும்விறகாளெனத் திருவுருக்கொள்வார் எனவும், செய்யுளாதலால் அறிவாகியவுண்மையாநந்தத்திருத்தனார் எனவுங்கூறினார். அன்பே சிவம் என்றது "அன்புசிவமிரண்டென்பரறிவிலார்-அன்பேசிவமாவதாருமறிகிலர் - அன்பேசிவமாவதாருமறிந்தபின் - அன்பேசிவமாயமர்ந்திருப்பாரே" எனவருந் திருமந்திரத்தால் உணர்க. (௧௧)

அழுக்குமூழ்கியசிதரசைத்தவிர்சடையமுத
மொழுக்குவெண்மதிவாங்கியேசெருகியதொப்ப
மழுக்குகூனல்வெள்வாய்க்குயம்வலம்படச்செருகி
யிழுக்குதேய்செருப்பருமறைகடந்ததாளேற்றி.

(இ-ள்.) அழுக்கு மூழ்கிய சிதர் அசைத்து - அழுக்குமயமாகிய கந்தையையுடுத்தி, அவிர் சடை - விளங்கும் சடையில் அணிந்த, அமுதம் ஒழுக்கு வெள் மதி வாங்கியே - அமுதைச்சிந்தும் வெள்ளியபிறையைவாங்கி, செருகியது ஒப்ப - பின்புறத்திற் செருகியதைநிகர்க்க, மழுங்கு கூனல் வெள் வாய் குயம் வலம்பட செருகி - மழுங்கிய வளைந்த வெள்ளியவாயையுடைய கொடுவாளை வலப்பாற்செருகி, இழுக்கு தேய் செருப்பு - இழுத்துத் தேய்ந்த செருப்பினை, அரு மறை கடந்ததாள் ஏற்றி - அரிய வேதமுடியைக்கடந்த திருவடியில் தொடுத்து.

வெட்டிமழுங்கிய வாய்வெள்ளியதாதலால் மழுக்குகூனல்வெள்வாய்க்குயம் எனவும், இழுத்துச் செல்லுதலால் தேய்செருப்பு எனவுங்கூறினார். மழுக்குவலிக்கும்வழிவலித்தல். (௧௨)

பழையதோர்பொல்லம்பொத்தியபத்தர்யாழ்க்கோறோ
ளுழையதாகவிட்டெருத்தலைத்தூசலாடியவொண்
குழையகாதினிற்களவிணர்க்குறியகாய்தூக்கித்
தழையும்வார்சிகைசரிந்திடச்சுமையடைதாங்கி.

(இ-ள்.) பழையது ஓர் பொல்லம் பொத்திய பத்தர் யாழ்க்கோல் - பழையதாகிய ஒப்பில்லாத பொல்லம் பொருத்திய பத்தரையுடைய வீணையானது, தோள் உழையது ஆகவிட்டு - தோளினிடத்ததாகத் தொங்கவிட்டு, எருத்து அலைத்து ஊசல் ஆடிய ஒண் குழைய காதினில் - பிடரையலைத்து ஊசல்போலசைந்தாடிய ஒள்ளியகுண்டலத்தையணிந்த காதினில், களவினர் குறிய காய் தூக்கி - களாவின் பூங்கொத்தோடு அதன் சிறிய காய்க்கொத்தையுந் தொங்கவிட்டு, தழையும் வார் சிகை சரிந்திட - தழைந்த நீண்டசிகைசரிய, சுமை யடை தாங்கி - சும்மாடுதாங்கி.

பத்தர் வீணாதண்டத்தின் கோட்டின்புறத்திலுள்ள சுரைக்குடுக்கை. அது வீணையினுறுப்புகளுள் ஒன்று, அதுபழையதாதலால் பொல்லம்பொத்தியஎன்றார். வீ

லையின் உறுப்பாவன "கோடேபத்தா ஆணிநரம்பே - மாடக மெனவரும் வகையி னதாகும்" எனவரும் ஏதுவாலுணர்க. (௧௩)

தறிந்தவிந்தனந்தினந்தொறுந்தாங்கிநீள்பங்கி
பறிந்துதேய்ந்தழுந்தியதலையுடையராய்ப்பரிந்து
மறிந்தகங்கையும்பங்குறைமங்கையுங்காணு
தெறிந்தவிந்தனச்சுமைதிருமுடியின்மேலேற்றி.

(இ-ள்.) தறிந்த இந்தனம் தினம் தொறும் தூங்கி - முறிபட்டவிறகைத்தி னந்தோறுஞ் சுமத்தலால், நீள் பங்கி பறிந்து தேய்ந்து அழுந்திய தலை உடையர் ஆய் - நீண்ட உரோமங்கழிந்து தேய்ந்து அழுந்திய தலையையுடையவராய், பரிந்து-அன்புகூர்ந்து, மறிந்த கங்கையும் - (அலைகளால்) மடங்கிவருங் கங்கையும், பங்கு உறை மங்கையும் காணுது - இடப்பாலில் வசிக்கும் உமாதேவியாருங்காணுமல், எறிந்த இந்தனச் சுமை - வெட்டிய விறகுசுமையை, திரு முடியின் மேல் ஏற்றி - தமது திருமுடியின்மேல்வைத்து.

அவர்கள்காணிவித்திருவுருக்கோடற் கிசையாதாதலால் காணுது எனவும், "அடியார்க்கெளியன்சிற்றம்பலவன்கொற்றன் - குடியார்க்கெழுதுகைத்திட்டு" எனத் தாம் திருவாய்மலர்ந்தருளியது யாருமுணர்துய்யத் திருவுளங்கொண்டனராதலால் எறிந்தவிந்தனச்சுமை திருமுடியின்மேலேற்றி எனவுங்கூறினர். (௧௪)

என்புதோன்றியூனின்றியேயிளைத்தயாக்கையரா
யன்புதோன்றியேகண்டவரகங்கனிந்திரங்க
வன்புதோன்றியமனமொழிகடந்ததாண்மலர்பார்
முன்புதோன்றியதவத்தினுன்முடிமிசைசூட.

(இ-ள்.) என்பு தோன்றி - எலும்புகள் காணப்பட்டு, ஊன் இன்றியே இளைத்த யாக்கையர் ஆய் - சிறிதுந் தசையின்றி இளைத்தசரீரத்தை யுடையவராய், கண்டவர் அன்பு தோன்றி அகம் கனிந்து இரங்க - பார்த்தவர்கள் அன்புகொண்டு மனநெக்குவிட்டிரங்க, வன்பு தோன்றிய மனம் மொழிகடந்த தாள் மலர் - தம்பாலுருகுதலில்லாத மனத்தையும் வாக்கையுங் கடந்துநின்ற பாததாமரைகளை, பார் முன்பு தோன்றிய தவத்தினுல் முடி மிசை சூட - நிலமகள் முன்புசெய்த தவத்தால் தனது முடிமேற்சூடவும்.

சுட்டறிவிற்பட்ட மனமொழியென்பார் வன்புதோன்றிய மனமொழியென்றூர். (௧௫)

திருமுகத்துவேர்வரும்பவாய்குவித்தொலிசெய்ய
வருவர்கற்சுமைதாங்கிமேற்சார்த்துவர்மடுநீர்
பருகுவாரொடுப்பார்தலைவெம்மைவேர்பறிய
விருகையாலடிக்கடியெடுத்தேந்தியூர்புகுவார்.

(இ-ள்.) திரு முகத்து வேர்வு அரும்ப வாய் குவித்து ஒலி செய்ய வருவர்-தமதுதிருமுகத்தில் வேர்வைதோன்றத் திருவாய்குவிந்தொலிசெய்ய வாராநிற்பர், கல் சுமை தாங்கி மேல் சார்த்துவர்-கல்லாலாகிய சுமைதாங்கிமேற் சார்த்தாநிற்பர், மடு நீர் பருகு வார் - மடுவிலுள்ள நீரைப் பருகாநிற்பர், எடுப்பார் - எடுத்துத் தம

து திருமுடிமேல் வைப்பார், தலை வெம்மை வேர் பறிய - தலையில் உஷ்ணத்தாலாகிய வேர்வைகழிய, இரு கையால் அடிக்கடி எடுத்து ஏந்தி - தமது இரண்டு திருக்கரங்களாலும் சுமையை அடிக்கடி மேலேயெடுத்தேந்தி, ஊர் புகுவார் - ஊரிற்செல்லாநிற்பர்.

விறகாள் திருவுருக்கொண்டு வந்தனராதலால் தொழிற்றன்மையணிபடக்கூறினர். (௪௬)

நடந்துகொள்ளுநர்க்கருவிலைபகர்ந்துநான்மாட
மிடைந்தவீதியுங்கவலையுமுடுக்கருமிடைந்து
தொடர்ந்தவேதமும்பிரமன்மால்சூழ்ச்சியும்பகலுங்
கடந்துபோகியவ்விசைவலான்கடைத்தலைசெல்வார்.

(இ-ள்.) நடந்து கொள்ளுநர்க்கு அரு விலை பகர்ந்தும் - வாங்குவோர்க்கு அளவுக்குமேற்பட்ட விலைகூறியும், நால் மாடம் மிடைந்த வீதியும் கவலையும் முடுக்கரும் - பலவகைப்பட்ட மாடங்கள்நெருங்கிய வீதியையு முத்தெருக்கூடுமிடத்தையும் முடுக்குச்சந்திகளையும், மிடைந்து தொடர்ந்த வேதமும் பிரமன் மால் சூழ்ச்சியும் - நெருங்கிப் பின்பற்றிய வேதத்தையும் பிரமன் திருமாலிவர்களுடைய ஆலோசனையையும், பகலும் - பகற்பொழுதையும், கடந்து போகி - கடந்து சென்று, அ இசை வல்லான் கடைத்தலை சேர்வார் - அந்த இசைநூலில்வல்ல ஏமநாதன் கடைவாயிலில் அடைவாராயினர்.

விறகுவிற்கவந்தவரல்லராதலால் அருவிலைபகர்ந்தும் எனவும், ஏமநாதன்விறகுசுமையோடு காணச் சென்றவராதலால் அவ்விசைவலான் கடைத்தலைசேர்வார் எனவும், விந்துசத்தியின் காரியப்பாடாகிய சொற்பிரபஞ்சமாதலால் வேதத்தையும் எனவும், மலச்சிமிழ்ப்புடையராதலால் பிரமன் மால்சூழ்ச்சியும் எனவும், இரவிற் சென்று பாடவேண்டும் என்னும் திருவுளத்தினராதலால் பகலுங்கடந்து எனவுங் கூறினர். (௪௭)

வரவுநேர்ந்தழைப்பவரெனவாம்பல்வாய்மலர
விரவுகான்றுவெண்மதிநகைத்தெழவுயிர்த்துணைவர்
பிரிவுநோக்கினாரெனக்கணீர்பில்குதாமரையி
னிரைகள்கூம்பிடக்கதிரவன்குடகடனீந்த.

(இ-ள்.) வரவு நேர்ந்து அழைப்பவர் என - சந்திரன் வருகையைநோக்கி யழைப்பவர்போல, ஆம்பல் வாய் மலர - ஆம்பல்கள் வாய்மலர, இரவு கான்று வெண் மதி நகைத்து எழ - இராப்பொழுதை வெளிப்படுத்தி வெள்ளியசந்திரன் புன்னகையரும்பி யுதயஞ்செய்யவும், உயிர்த் துணைவர் பிரிவு நோக்கினார் என - தமது உயிர்போன்ற கணவர்களுடைய பிரிவைநோக்கி வருந்திய பெண்களைப்போல, கண்ணீர் பில்கு தாமரையின் நிரைகள் கூம்பிட - கண்ணீரைச் சிந்துந் தாமரைகள் குவிய, கதிரவன் குட கடல் நீந்த - சூரியன் மேலைக்கடலில் நீந்திச்செல்லவும்.

கண்ணீர் கள் நீர் எனப் பிரித்துக் கள்ளாகிய நீரை யெனப் பொருள்கொள்க. ஒருபாலின்பமும் ஒருபாற்றுன்பமு முண்டாத லுலகியல் என்பார் ஆம்பல்வாய் மலர நகைத்தெழ எனவும், தாமரையினிரைகள் கூம்பிடக் கதிரவன்குடகடனீந்த எனவுங்கூறினர். (௪௮)

பறவைவாயடைத்தருகணைபார்ப்பொடும்பெடையைச்
சிறகராலணைத்திரும்பொழிற்குடம்பையுட்செறிய
நறவவாய்ப்பெடையுண்டதேனக்கிவண்டோடைப்
பொறைகொடாமரைப்பள்ளியுட்புகுந்துகண்படுக்க.

(இ-ள்.) பறவை வாய் அடைத்து - ஆண்பறவைகள் கூவாது, அருகு அணை பார்ப்பு ஒடும் பெடையை சிறகரால் அணைத்து - பக்கலில்வந்த குஞ்சுகளோடும் பெண்பறவைகளைச் சிறகுகளால் தழுவி, இரும் பொழில் குடம்பையுள் செறிய-பெரிய சோலைகளிலுள்ள கூடுகளிலடையவும், பெடை வாய் உண்ட நறவம் தேனை வண்டு நக்கி - பெண்வண்டுகள் வாயாலுண்ட தேனினை யாண்வண்டுகள்நக்கி, ஓடை பொறை கொள் தாமரை பள்ளியுள் புகுந்து கண் படுக்க - ஓடைகளிலுள்ள இதழ்ப்பாரத்தையுடைய தாமரைகளாகிய படுக்கையிற்சென்று துயிலவும். (௧௯)

புல்லெனீணிலைக்குரங்கினம்பொதும்பர்புக்குறங்க
முல்லையாய்மகாருய்த்தரக்கன்றுள்ளிமுந்திக்
கொல்லையானிரைமனைதொறுங்குறுகிடச்சிறுபுன்
கல்விமாணவச்சிறார்பயில்கணக்கொலியடங்க.

(இ-ள்.) குரங்கு இனம்-குரங்கின் கூட்டங்கள், புல்லென்-விரைந்து, பொதும்பர் நீள் நிலை புக்கு உறங்க - சோலையிலுள்ள உயர்ந்த மரங்களில் சென்று துயில் கூரவும், முல்லை ஆய் மகார் உய்த்தர - முல்லைநிலத்திலுள்ள ஆயச்சிறுவர்கள் செலுத்த, கன்று உள்ளி - தமது கன்றுகளைக்கருதி, கொல்லை ஆனிரை முந்தி மனை தொறும் குறுகிட - அம்முல்லைநிலத்திலுள்ள பசுக்கள் முற்பட்டுத் தமது வீடுகள் தோறுஞ் செல்லவும், சிறுபுன் கல்வி மாணவச் சிறார் பயில் கணக்கு ஒலி அடங்க- இளங்கல்விபயிலும் மாணாக்கச் சிறுவர்கள் இடைவிடாது கூறும் நெடுங்கணக்கொலியடங்கவும்.

"ஓலைக்கணக்கர்" என்றார் பிறரும். நீணிலை வினைத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித் தொகைநிலைத்தொடர். (௨0)

புனைந்தவாழ்கடற்கரும்படாமுடம்பெலாம்போர்த்து
வனைந்தபூண்முலைநிலமகடுயில்வதுமானக்
கனைந்தகாரிருண்மெல்லெனக்கவிதரப்பிரிவால்
இனைந்தகாதலர்நெஞ்சில்வாளெரிகணைநாட்ட.

(இ-ள்.) புனைந்த - (தன்னை) சூழ்ந்த, ஆழ் கடல் கரும் படாம் உடம்பு எல்லாம் போர்த்து - ஆழ்ந்த கடலாகிய கரியபோர்வையை உடல் முற்றும் போர்த்து, பூண் வனைந்த முலை நிலமகள் துயில்வது மான - ஆபரணத்தையணிந்த தனங்களையுடைய பூதேவி கண்டுயில்கூர்தலையொப்ப, கனைந்த கார் இருள் மெல்லென கவிதர- மிக்க கரிய இருளானது மெல்லெனவந்து உலகினைப்போர்க்கவும், பிரிவால் இனைந்த காதலர் நெஞ்சில் - கணவர் பிரிவால் வருந்திய மகளிருடைய மனத்தில், வாள் எரி கணை நாட்ட - விளங்கும் நெருப்பினையொத்த அம்புகளை மன்மதன் நாட்டவும்.

தலைவர்க்கு ஓதற்பிரிவு முதலிய பிரிவுகளுள ஆதலால் பிரிவால் என்றார். ()

திங்கள்வாணுதன்முயற்கறைத்திலகமுஞ்செவந்த
மங்குலாடையுமயங்கிருளோதியும்வான்மீன்

பொங்குமாரமும்பொலிந்துதன்கொண்கனைப்பொருப்பன்
மங்கைதேடிவந்தாளெனவந்ததுமாலை.

(இ-ள்.) திங்கள் வாள் நுதல் - சந்திரனாகிய வொள்ளிய நெற்றியில், முயல் கறை திலகமும் - களங்கமாகிய திலதமும், செவந்த மங்குல் ஆடையும் - செவ்வாணமாகிய உடையும், மயங்கு இருள் ஓதியும் - மிகவுங் கரிய அந்தகாரமாகிய கூந்தலும், வான்மீன் பொங்கும் ஆரமும் - நட்சத்திரங்களாகிய விளங்காநின்ற முத்துமாலையுமாகிய இவைகளால், பொலிந்து - விளங்கி, தன் கொண்கனை பொருப்பன் மங்கை தேடி வந்தாள் என - தமது கணவனை உமாதேவியார் தேடிவந்ததையொப்ப, மாலை வந்தது - மாலைக்காலம் வந்தது.

என்றும் பிரிந்தறியாத தமதுபெருமானார் பிரிவாராயில் உமாதேவியார் பிரிவாற்றலரிதாதலால் பொருப்பன் மங்கை தேடிவந்தாளென என்றார். முயற்கறை இருபெயரொட்டுப் பண்புத்தொகை நிலைத்தொடர். (௨௨)

எடுத்தவிந்தனமொருபுறத்திறக்கியிட்டூன்றி
யடுத்தவன்புறந்திண்ணைமீதமர்ந்திளைப்பாறித்
தொடுத்தவின்னிசைசிறிதெழீஇப்பாடினார்சுருதி
மடுத்தியாரவன்பாடுவானென்றிசைவல்லான்.

(இ-ள்.) எடுத்த இந்தனம் ஒருபுறத்து இறக்கி இட்டு ஊன்றி - எடுத்த விறகின்சுமையை யொருபுறத்திலிறக்கி நிலத்திலூன்றி, அடுத்தவன் புறம் திண்ணைமீது அமர்ந்து இளைப்பாறி - வந்த ஏமநாதனுடைய வீட்டின்புறத்திலுள்ள திண்ணைமேலிருந்து சற்றிளைப்பாறி, தொடுதத இன் இசை சிறிது எழீஇ பாடினார் - இடைவிடாது பாடும் இனிய இசையைச் சிறிதெழுப்பிப் பாடினார், சுருதி மடுத்து - அச்சுருதியைக்கேட்டு, பாடுவான் அவன் யார் என்று இசை வல்லான் - பாடுகின்ற அவன் யாரென்று இசைநூலில் வல்ல ஏமநாதன்.

பாணபத்திரர் கருத்து முற்றவந்தவராதலால் அடுத்தவன் புறந்திண்ணைமீதமர்ந்து எனவும், ஒருக்காலு மிளைப்பறியா இறைவர் தமது அடியவர்பொருட்டு இளைப்புற்றவர்போ லிருத்தலால் இளைப்பாறியெனவும், அடியவர்கொண்ட நேயமே தாம் ஆதலின் அவர்பொருட்டுப் பாடுபடுவோர் ஆதலால் இன்னிசை சிறிதெழீஇப பாடினார் எனவுங் கூறினார். நேயமே சிவம் என்பது "தேறலின்றெளிவேசிவபெருமானே திருப்பெருந்துறையுறைசிவனே - ஈறிலாப்பதங்களியாவையுங்கடந்த இன்பமேயென்னுடையன்பே" எனவரும் உண்மைத்திருவாக்கால் உணர்க. (௨௩)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

வண்டறைகொன்றையான்முன்வந்துநீயாரையென்றான்
பண்டருவிபஞ்சிபாணன்பத்திரனடிமையென்றான்
முண்டகமலரோன்மாயோன்புரந்தரன்முதன்மற்றேனை
யண்டருந்தன்குற்றேவலடிமையாக்கொண்டவம்மான்.

(இ-ள்.) வண்டு அறை கொன்றையான் முன் வந்து நீ யாரை என்றான் - வண்டுகளொலிக்குங் கொன்றைமாலையையணிந்த சிவபெருமானார்முன்வந்து நீயாரென்றுவினவினான், பண் தரு விபஞ்சி - இசையமைந்த யாழ்வல்லோய், பாணபத்திரன் அடிமை என்றான் - பாணபத்திரனடிமையென்று கூறினார், முண்டக மலரோன்

மாயோன் புரந்தரன் முதல் வனை அண்டரும் - பிரமனும் திருமாலும் இந்திரனுமு தலிய மற்றைத்தேவர்களையும், தன் குற்றேவல் அடிமையாக் கொண்ட அம்மான் - தமது குற்றேவல்செய்யும் அடிமைகளாகக்கொண்ட அப்பெருமானார்.

தம்மைச் சரணடைந்தவரைப் பெருமைப்படுத்துவோரொன்பார் பாணபத்தி ரனடிமையென்றான் எனவும், பசுபதியென்னும் பெயர்க்காரணத்தால் அவர் எல்லாவுயிர்கட்கும்இறைவர் என்பார் மூண்டகமலரோன்மாயோன் புரந்தரன்முதன்ம ற்றேனை - அண்டரூர்தன்குற்றேவலடிமையாக்கொண்டஅம்மான் எனவுங்கூறினார். "எப்புன்மையனாமிகவேயுயர்த்தி விண்ணோரைப்பணித்தியண்ணுவமுதே" என்னும் உண்மைத்திருவாக்கால் உணர்க. (உச)

கனியிசைக்கிழவன்றன்கீழ்க்கற்பவரனேகர்தம்மு
ணனியிசைக்கிழமைவேட்டுநானுமவ்வினைஞனானேன்
றனியிசைக்கிழவனோக்கித்தசையெலாமொடுங்கமூத்தா
யினியிசைக்கிழமைக்காகாயென்றெனைத்தள்ளிவிட்டான்.

(இ-ள்.) கனி இசை கிழவன் கீழ் கற்பவர் அநேகர் உள் - சுவை கனிந்த இசையில்வல்ல பாணபத்திரர் கீழ் இசைகற்போரநேகருள், நனி இசை கிழமை நானும் வேட்டு அ வினைஞன் ஆனேன் - சிறந்த இசைநூல்கற்கும் உரிமையை நானும் விரும்பிக் கற்குந்தொழிலுடையவனுயினேன், தனி இசை கிழவன் நோக்கி - ஒப்பில்லாத இசைநூலில்வல்ல அப்பாணபத்திரர்பார்த்து, தசை எல்லாம் ஒடுங்க மூத்தாய் - (உடம்பில்) சிறிதுந் தசையில்லாதொழிய விருத்தனானாய், இனி - ஆதலால் இனி, இசைக் கிழமைக்கு ஆகாய் என்று - இசைநூல்கற்கும் உரிமைக்குஉதவாயென்று, என்னை தள்ளி விட்டான் - என்னைக் கற்போரினின்று தள்ளிவிட்டனன்.

பாணபத்திரர் கிழிசைகற்றவன் நாலொருவனல்லன் என்பார் கனியிசைக்கிழவன்றன்கிழ்க்கற்பவரநேகர் எனவும், மாணாக்கர் பலராதலால் என்னையிருவருத்துத் தள்ளினரென்பார் தசையெலாமொடுங்கமூத்தா யினியிசைக்கிழமைக்காகாயென்றெனைத்தள்ளிவிட்டான் எனவுங்கூறினார். (உரு)

வெவ்விறகெறிந்துகட்டிவிலைபகர்ந்தேனுமைய
விவ்வயிறோம்புகேனென்றித்தொழில்பூண்டேனென்ன
நைவளந்தெரிந்தவேமநாதனும்விறகுமள்ளா
அவ்விசையொருகாலின்னும்பாடெனவையன்பாடும்.

(இ-ள்.) ஐய - ஐயனே, வெவ்விறகு எறிந்து கட்டி விலை பகர்ந்தேனும் - உலர்ந்த விறகினை வெட்டி விற்றாயினும், இ வயிறு ஓம்புகேன் என்று - இந்தவயிற்றை யோம்பக்கடவேனென்று, இத் தொழில் பூண்டேன் என்ன - இவ்விறகுவிற்குந்தொழிலைப் பூண்டேன் என்றுகூற, நைவளம் தெரிந்த ஏமநாதனும் - அந்த இசைநூலில் வல்ல ஏமநாதனும், விறகு மள்ளா - விறகுசுமக்குந் திண்ணியா, அ இசை ஒருகால் இன்னும் பாடு என - அந்தத் தேவகாந்தாரத்தை ஒருதரம் இன்னும் பாடாயென்று கூற, ஐயன் பாடும் - பெருமானார் பாடுகின்றார்.

ஆசிரியன்சொல்வழி மாணாக்கனொழுகல் கடனாதலால் அவ்விசைத்தொழிலாற் சீவியாது இத்தொழிலாற் சீவிக்கின்றேன் என்பார் வெவ்விறகெறிந்துகட்டி விலைபகர்ந்தேனுமைய - இவ்வயிறோம்புகேனென்றித்தொழில்பூண்டேன் எனவும், நூலளவையாலன்றி யிவ்வாறு பாடுவோரை யிதுகாறுங் கண்டுங் கேட்டும் அறியானாதலால் அவ்விசையொருகாலின்னும்பாடு என எனவும், தாம்பாடிய தேவகாந்தருவம் முற்றும்பாடினரல்லராதலால் ஐயன்பாடும் எனவுங்கூறினார். (உசா)

குண்டுநீர்வறந்திட்டன்னநெடுங்கொடிக்குறுங்காய்ப்பத்தர்த்
தண்டுநீணிறத்தநல்யாழிடந்தழீஇத்தெறித்துத்தாக்கிக்
கண்டுமாடகந்திரித்துக்கௌவியதிவவிற்பாவ
விண்டுதேனொழுகிற்றென்னவீக்கிமென்சுருதிகூட்டி.

(இ-ள்.) குண்டு நீர் வறந்திட்டால் அன்ன - மடுவிலுள்ள நீர்வறந்தாற்போல, நெடுங் கொடி குறுங்காய் பத்தர் தண்டு நீள் நிறத்த நல் யாழ் - நீண்ட கொடியிலுள்ள சிறியகாயாகிய குடுக்கையைப் பின்புறத்திலுள்ள தண்டையுடைய மிக்கநிறமமைந்த நல்லவீணையை, இடம் தழுவி தெறித்து தாக்கி கண்டு - இடப்பால்தழுவி நரம்பினைத்தெறித்துத் தாக்கிப் பார்த்து, மாடகம் திரித்து - முறுக்காணியைத்திரித்து, கௌவிய திவவில் பாவ-அதில் விடாதுபற்றிய கட்டிற்பரவ, தேன் விண்டு ஒழுகிற்று என்ன வீக்கி - தேன்மலரினின்றும் ஒழுகியதுபோல நரம்பினைவீக்கி, மென் சுருதிகூட்டி - மெலிவுபடச் சுருதியையெழுப்பி.

திவவு நரம்பின்கட்டமைதி பெறக் கட்டும் வார்க்கட்டு. குற்றந்தீர்ந்த யாழ் என்பார் நல்யாழ் எனவும், நிறம் ஐந்தும் அமைந்த யாழ் என்பார் நிறத்த யாழ் எனவும்,நரம்பின் வீக்கு மலரினின்றொழுகிய தேனொழுக்குப்போலிருக்கவேண்டும் என்பார் விண்டுதேனொழுகிற்றென்னவீக்கி யெனவுங் கூறினார். "குற்றம் ஆவன செம்பகை, ஆர்ப்பு, அதிர்வு, கூடம் என நான்குவகைப்படும் அவற்றை "இன்னிசைவழியதன்றியிசைத்தல்செம்பகையதாகும் - சொன்னமாத்திரையினேங்கவிசைத்திடுஞ்சுருதியார்ப்பே - மன்னியஇசைவராதுமழுங்குதல்கூடமாகும் - நன்னுதல்சிதறவுந்தலதிர்வெனநாட்டினாரே" எனப் பஞ்சபாரதீயத்தில் வருஞ் செய்யுளாலும். இந்நான்குகுற்றமுமாக் குற்றத்தால்வரும் என "நீரிலேநிற்றலழுகுதலவேதனிலமயங்கும்-பாரிலேநிற்றலிடிவீழ்தல்நோய்மரப்பாற்படல்கோள் - நேரிலேசெம்பகையார்ப்பொடுகூடமதிர்வுநிற்றல் - சேரினோர்பண்கணிலமயக்கப்படுஞ்சிற்றிடையே" எனச்சீவகசிந்தாமணி காந்தருவதத்தையார் இலம்பகத்திற்காட்டிய மேற்கோளாலும், ஐந்துநிறம் ஆவன "மாத்திரைகளொன்பானுந் தானங்களெட்டானும் - எத்துங்கிரியையெண்றீரைந்தும்-கோத்துப்-பதின்மூன்றெழுத்தாற் றொழிலைந்தும்பண்ணின்-மதியோர்களைந்துநிறமாம்" என இசைமரபுடையார் கூறிய செய்யுளாலும், விண்டுதேனொழுகிற்றென்னவீக்கி என்றது "பசும்பொன்யாழ் - நரம்புதேனூர்த்தென" என அவ்விலம்பகத்தில் வருஞ்செய்யுளாலும் உணர்க. (௨௭)

விசையொடுதானந்தோறும்விரனடந்தூசலாட
விசைமுதலேழிற்பல்வேறின்னிசையெழுஞ்சாதாரி
யசையொடுவீதிப்போக்குமுடுகியலராகம்யார்க்கும்
நசைதருநரம்புகண்டமொற்றுமைநயங்கொண்டார்ப்ப.

(இ-ள்.) தானம் தோறும் - சுரங்களெழுந் தானங்கள்தோறும், விசையொடு விரல் நடந்து ஊசல் ஆட - விசையொடு விரல்சென்று போக்குவரவு செய்ய, இசை முதல் ஏழில்-குரல்முதலிய ஏழிசைகட்குமுதலாயுள்ள சத்தசுரங்களில், பல்வேறு இன் இசை எழும் சாதாரி - பலவேறுவகைப்பட்ட இனியஇசைகளில் ஒன்றாயெழும் ஓர்வகைப்பண்ணும், அசை வீதிப் போக்கு முடுகியல் அராகம்- அசையும் வீதிப்போக்கும் வண்ணமும் திறமும் ஆகிய இவைகளால், யார்க்கும் நசை தரும் நரம்பு கண்டம் - எவர்க்கும் விருப்பந்தரும் நரம்பினோசையும் சாரீரவோசையும், ஒற்றுமை நயம் கொண்டு ஆர்ப்ப - தம்முள் வேறின்றி யொலிக்க,

அசைதாளம், அது கொட்டு, அசை, தூக்கு, அளவு என்னும் நான்கனுளொன்று. அது ஒருமாத்திரையளவுபடுந்தாக்கியெழுதல் "கொட்டுமசையுந்தூக்குமளவும்-ஒட்டப்புணர்ப்பதுபாணியாகும்" என்பதனால் அறிக. வீதிப்போக்காவது ந, த முதலிய நாலெழுத்துகள் நேராய்ச்செல்லுதல். மூர்ச்சியலாவது வண்ணம் அது பெருவண்ணம், இடைவண்ணம், வனப்புவண்ணம் என மூன்று வகைப்படும். அராகம் ஆவது யாழ்த்திறம். இவை வீணையோசை சாரீரவோசைகளுக்கு உரியனவாதலால் இவைகளால் என்றும். அசைவு என்னும் பாடத்தை அசையெனக்கொள்க. (௨௮)

வயிறதுகுழியவாங்கலழுமுகங்காட்டல்வாங்குஞ்
செயிரறுபுருவமேறல்சிரநடுக்குறல்கண்ணாடல்
பயிரறுமிடறுவீங்கல்பையெனவாயங்காத்த
லெயிறதுகாட்டலின்னவுடற்றொழிற்குற்றமென்ப.

(இ-ள்.) வயிறு குழிய வாங்கல் - (பாடும்பொழுது) வயிறுகுழிபட மேல்வாங்குதலும், அழு முகங் காட்டல் - அழுமுகங்காட்டுதலும், வாங்கும் செயிர் அறு புருவம் ஏறல் - வளைந்த குற்றமில்லாத புருவம் நெற்றிமேற்செல்லுதலும், சிரம் நடுக்குறல்-தலையசைத்தலும், கண் ஆடல் - கண்ணாடுதலும், பயிர் அறும் மிடறு வீங்கல்-குற்றமில்லாதகண்டம் வீங்குதலும், பை யென வாய் அங்காத்தல்-பையைப்போல வாயைத்திறத்தலும், எயிறு காட்டல் இன்ன - பற்களைக் காட்டுதலுமுதலிய இவை போல்வனவற்றை, உடல் தொழில் குற்றம் என்ப - சரீரத்தொழிலால் வருங் குற்றமென்று இசைநூலார் கூறுவர்.

சிவபெருமானார்பாடியது தேவகாந்தாரமாதலால் அக்கந்தருவம் பாடும்பொழுது இக்குற்றங்களொழியப் பாடுவது முறை ஆதலால் உடற்றொழிற் குற்றம் என்றார் "கண்ணிமையாகண்டந்துடியாகொடிறசையா - பண்ணளவும்வாய்தோன்றுபற்றெரியா - எண்ணிலிவை - கள்ளார்நறுந்தெரியற்கைதவனேகந்தருவர் - உள்ளாளப்பாடலுரை, உளளாளம்விந்துவுடனாதமொலியுருட்டுத் - தள்ளாததூக்கெடுத்தறான்படுத்தல் - மெள்ளக் - கருதிநலிதல்கம்பித்தல்குடிலம் - ஒருபதின்மேலொன்றென்றுரை" என இசைமரபுடையார் கூறிய செய்யுள்களால் உணர்க, "வீரனன்கவைத்தவணிகுரல்வீங்காது - நான்மறைதுள்ளும்வாய்பிளவாது - காட்டியுள்ளுணர்த்து சோக்கமாடாது - பிதிர்கனன்மணிசூழ்முடிநடுக்காது - வயிறுகுழிவாங்கியழுமுகங் காட்டாது" எனக் கல்லாடத்திலும் வருதல்காண்க. அது பகுதிப்பொருள்விகுதி.()

வெள்ளைகாகுளிகீழோசைவெடிகுரனாசியின்ன
வெள்ளியவெழாலின்குற்றமெறிந்துநின்றிரட்டலெல்லை
தள்ளியகழிபோக்கோசையிழைத்தனெட்டுயிர்ப்புத்தள்ளித்
துள்ளலென்றின்னபாடற்றொழிற்குற்றம்பிறவுந்தீர்ந்தே.

(இ-ள்.) வெள்ளை காகுளி கீழோசை வெடிகுரல் நாசி இன்ன - நிறமில்லாத வெள்ளோசையும் காகுளிப்பாட்டும் கீழிசையும் வெடித்தகுரலும் நாசிப்பாட்டு முதலிய இவைபோல்வன, எள்ளிய எழாலின் குற்றம்-இசைநூலார்விலக்கிய சாரீரவோசையின்குற்றமாம், எறிந்து நின்று இரட்டல் - எறிந்து நின்றிரட்டலும், எல்லை தள்ளிய கழிபோக்கு - அளவுகடந்தகழிபோக்கும், ஓசை யிழைத்தல் - ஓசையிழைத்தலும், நெட்டுயிர்ப்பு - பெருமூச்செறிதலும், தள்ளி துள்ளல் என்ற இன்ன- ஒருபுற மோட்டலு மென்று சொல்லப்பட்ட இவை முதலான, பாடல் தொழில்

குற்றம் - பாடுந்தொழிற் குற்றத்தினும், பிறவும் தீர்ந்து - பிறகுற்றத்தினும் நின்று நீங்கி.

நிறமில்லாத வெள்ளோசையென்றதில் நிறம் முன்னர்க்கூறியிருத்தலாலுணர்க. காகுளி பேய் கத்தினாற்போற்பாடுதல். கீழோசை நிறமுந் தானமுங் குறைபடுங்கட்டையிசை. நாசிப்பாட்டு ஒருதானத்தேபாட ஒருதானத்தில் நழுவுவது. எறிந்துநின்றிரட்டல் ஒருபண்ணைப்பாட வேறொருபண்ணிலேவிலங்கிநின்றிரட்டல். கழிபோக்கு ஓரோசையானதன்மைநீங்கிப் பலவோசையாய்வருதல். ஓசையிழைத்தல் காகங்கத்தினாற்போலக்கத்துதல். ஒருபுறம் ஒட்டல் பாடுந்திறத்தை யொதுக்கிப்பாடுதல். பிற என்றது அசைவுமுதலியன. அசைவு சோம்பல். தானம் - நெஞ்சு மிடறு, நாக்கு, மூக்கு, அண்ணுக்கு, உதடு, பல், தலை. குற்றந்தெரிந்து என்னும் பாடத்தைக் குற்றமெறிந்து நின்று எனவும், ஓசையிழைத்த நெட்டுயிர்ப்பு என்னும் பாடத்தை ஓசையிழைத்த னெட்டுயிர்ப்பு எனவும் பாடங்கொள்க. இவ்வாறு பாட வேறு பாடுகள் பலவுள அவற்றை யாங்காங்குணர்க. "நாசிகாகுளிவெடிகுரல்வெள்ளை, பேசாக்கீழிசையொருபுறமோட்டல், நெட்டுயிர்ப்பெறிதலெறிந்துநின்றிரட்டல், ஓசையிழைத்தல்கழிபோக்கென்னப், பேசுறுகுற்ற மசைவொடுமொற்றி" எனக்கல்லாடத்திலும் வருதல் உணர்க. (௩௦)

எழுதுசித்திரம்போன்மன்னியிழுமெனுமருவியோதை
முழவொலிகஞ்சநாதம்வலம்புரிமுரலுமோசை
கொழுதிசைவண்டின்முரியெனவிசைக்குணனும்வேரல்
விழுமிலைசிரன்மீன்மேல்வீழ்வீழ்ச்சிபோற்பாடற்பண்பும்.

(இ-ள்.) எழுது சித்திரம் போல் மன்னி - (ஓவியநூலோர்) எழுதிய சித்திரம்போலப் பதுமாசனத்திலிருந்து, இழுமெனும் அருவி ஓதை - இழுமென்றொலிக்கும் அருவியினோசையும், முழவொலி - முழவின்முழக்கமும், கஞ்சம் நாதம்-கஞ்சக்கருவியினோசையும், வலம்புரி முரலும் ஓசை - வலம்புரிச்சங்கு முழங்குமுழக்கமும், கொழுது இசை வண்டின் தாரி என - மலர்களை மூக்காலுழுதுபாடும் வண்டின்முழக்கும்போல, இசைக்குணனும் - இசைக்கும் இசையின்குணமும், வேரல் விழும் இலை - மூங்கிலினின்று வீழாநின்ற இலையின்வீழ்ச்சியும், சிரல் மீன்மேல்வீழ் வீழ்ச்சி போல் - மீனெறிபறவை மீன்மேல்விழும் வீழ்ச்சியும்போல, பாடல் பண்பும்-பாடும்பாடலின்குணமும்.

ஓவியநூலுட்கூறிய விருத்தியொன்பதுள் பதுமாசனமுதல்விருத்தி "பதுமகமுற்கட்டிதமேயொப்படி, இருக்கைசம்புட மயமுகம்சுவத்திகம், தனிப்புடமண்டிலமேகபாதம், உளப்படவொன்பதும், ஆகுந்திரிதரவில்லாஇருக்கை" எனச்சிலப்பதிகாரத்திற்காட்டிய மேற்கோளாலுணர்க. இவற்றுள் வலம்புரிநாதமும் வண்டினோசையும் உத்தமமான ஓசைகள் "துய்யமொழிமென்குயிலும் சோலைவரிவண்டினமும், வையமுழங்கும்வலம்புரியும் - கைவைத்துத், தும்புருவும்நாரதரும் பாடியமூவோசையென, நம்புநீர்நால்வேதத்துள், சிச்சிலிபூனைகுடமுழக்கஞ்செம்மைத்தாம், உச்சிமலைநீர்விழுக்காடொண்பருந்து - பச்சைநிற, வேயினிலைவீழ்ச்சியுடன்வெள்ளாளிழுப்பறவை - ஏயுங்காலோசையியம்பு" என இசைமரபுடையார்கூறியநூலுட்காண்க. இன்னும் பருந்தின்வீழ்ச்சி, பூனையின்புணர்ச்சி, வானம்பாடிசிற்கும்நிலை, குயிலோசை முதலியனவுங்கொள்க. "வண்டின்முரியுங் கஞ்சநாதமும்-சிரல்வானிலையுங் கழையிலைவீழ்வதும்-அருவியோசையு முழவின்முழக்கமும்-வலம்புரிச்சத்தமும்

வெருவின்புணர்ச்சியும்-இன்னுமென்றிசைப்பப் பன்னியவிதியொடு" எனக் கல்லாடத்திலும் வருதல்காண்க. (கூக)

பொருந்தமந்தரத்திறேடுமத்திமைதாரம்போக்கித்
திருந்தியதுள்ளறூங்கன்மெலிவதுசிறப்பச்செய்து
மருந்தனசெய்யுளோசையிசையோசைவழாமல்யார்க்கும்
விருந்தெனச்செவியின்மாந்தப்பாடினார்வேதகீதர்.

(இ-ள்.) பொருந்த - இசைய, மந்தரத்திறேடு - படுத்தலோசையோடு, மத்திமை தாரம்போக்கி - சமனேசையும் எடுத்தலோசையுமாகிய இவற்றில் அளவுகளையடக்கி, திருந்திய துள்ளல் தூங்கல் மெலிவது சிறப்பசெய்து - திருத்தமாகத் துள்ளப்படுதலும் தூங்கப்படுதலும் மெலிக்கப்படுதலுமாகிய இவை சிறந்து நிற்கச்செய்து, மருந்து அன்ன செய்யுள் ஓசை இசை ஓசைவழாமல் - அமுதத்தையொத்த பாடலினேசையும் இசையினேசையும் தம்முள்வழுவாமல், வேத கீதர் - சாமவேதகீதராகிய பெருமானார், யார்க்கும் விருந்து என்ன செவியில் மாந்த பாடினார் - எவர்க்கும் விருந்துபோலக் காதாற்பருகப் பாடியருளினார்.

மந்தரம்படுத்தல், மத்திமைநலிதல், தாரம் எடுத்தல், இவை இசைநூலுள் வரும் ஓசை வேறுபாடுகள் "நீடவுங்குறுகவும் நிவப்புந்தூக்கிப் - பாடியபுலவர் என்ரூர் ஐயனாரிதனாரும். மந்தரமுதலியவற்றிலடக்கித் துள்ளல்முதலியன செய்துபாடுதல் "சருக்கரைக்குன்றிற்றேன்மழைசான்றது" போல ஆதலால் மருந்தனசெய்யுளோசை யிசையோசையெனவும், பாவும் பண்ணும் வேறன்மையால் செய்யுளோசை இசையோசையெனவும், சாமவேதகீதராதலால் யார்க்கும் விருந்தெனப்பாடினார் எனவுங்கூறினார் "பாவோடணைதலிசையென்ரூர் பண்ணென்ரூர், மேவார்பெருந்தானமெட்டானும்-பாவாய், எடுத்தன்முதலாவிருநான்கும்பண்ணிப், படுத்தமையாற்பண்ணென்றுபார்" எனவரும் ஏதுவால் உணர்க. மந்திரத்திறேடு மத்திமதாரம் என்னும்பாடத்தை, மந்தரத்திறேடு மத்திமைதாரம்போக்கி எனப்பாடங்கொள்க.

நாற்சீரால் இடைமடக்காய்வந்த ஒருபோகு கொச்சகம்.

கந்தருவம்.

விரைசார்மலரோனறியாவிகிர்த
னரசாய்மதுரையமர்ந்தானென்னே
யரசாய்மதுரையமர்ந்தானவனென்
புரைசார்மனனும்புகுந்தானென்னே.

(இ-ள்.) விரைசார் மலரோன் அறியாவிகிர்தன் - வாசமிக்க தாமரைமலரில் வசிக்கும் பிரமனுணராத வேறுபாட்டையுடையபெருமான், அரசு ஆய் மதுரை அமர்ந்தான் என்னே - பாண்டியர் திருக்கோலங்கொண்டு மதுரையில் வீற்றிருந்தனன் அதுயாதுகாரணமோ, அரசு ஆய் மதுரை அமர்ந்தான் - அரசனாய் அம்மதுரையில் வீற்றிருந்த, அவன் என்புரைசேர் மனனும் புகுந்தான் என்னே - அப்பெருமான் என்னுடைய களங்கமமைந்த மனத்திலுங் குடிபுகுந்தான் அது யாதுகாரணமோ அறியேன்.

தம்மையொருபொருளாக நன்குமதித் திறுமாப்போரறிதற்கரிய விகுர்தியுடையவன் என்பார். விரைசார்மலரோனறியாவிகிர்தன் எனவும், அவர்க்கன்றியவ்வர்க்கெளியன் என்பார் அரசாய்மதுரை யமர்ந்தான் எனவும், அவ்வாருதல் பெரு

வியப்பு என்பார் என்னேயெனவும், திருவருட்போதத்தால் மலபந்தம் நீங்கினும் இங்குவிருந்தபாண்டம்போல ஒருகால் அதுவந்து தாக்கும் என்பார் புணர்சேர்மனனும் எனவும், அம்மனத்திலுங் குடிபுகுந்தது அஃதினும் ஓர் பெரியவியப்பு என்பார் புகுந்தானென்னேயெனவுங் கூறினர். "மூவராலுமறியொணுமுத லாயவானந்தமூர்த்தியான், யாவராயினுமன்பரன்றி யறியொணுமலர்ச்சோதியான்" எனவும் "போதமேலாகப்பண்டே புல்லியமலங்கடீர்ந்தும், வாதனைதாக்குமாபோல்" எனவும் வரும் ஏதுக்களாலுணர்க. (௩௩)

பாடன்மறையுந்தெளியாப்பரமன்
கூடல்கோயில்கொண்டானென்னே
கூடல்போலக்கொடியேனகமு
மாடலரங்காவமர்ந்தானென்னே.

(இ-ள்.) பாடல் மறையும் தெளியாத பரமன் - பாட்லமைந்தவேதங்களுந் தெளிந்துணராத இறைவன், கூடல் கோயில் கொண்டான் என்னே - மதுரையில் திருக்கோயில்கொண் டெழுந்தருளினன் அது யாதுகாரணம், கூடல்போல கொடியேன் அகமும் - அம்மதுரையைப்போலக் கொடுந்தொழிலையுடைய என்மனத்தையும், ஆடல் அரங்கு ஆக அமர்ந்தான் என்னே - ஆடுதற்குரிழிலமைந்த நாடகசாலையாகக்கொண்டு வீற்றிருந்தருளினன் அது யாது காரணமோ அறியேன்.

சுட்டறிவிற்பட்ட பாசஞானமாகிய சொற்பிரபஞ்சமாதலால் பாடன்மறையுந்தெளியாப் பரமன் எனவும், சுட்டறிவிற்படாது சுத்ததத்துவபுவனத்து வசிக்குமிறைவன் இங்குள்ளோர் தரிசித்துய்தற்குத் திருக்கோயிலுள் திருமேனிகொண்டெழுந்தருளியிருத்தலால் கூடல்கோயில் கொண்டான் எனவும், அடியவர் மனத்திடையுறுது வசிப்பவனுதலால் கூடல்போலக் கொடியேனகமும் ஆடலரங்கா அமர்ந்தான் எனவுங்கூறினர். "தாவரசங்கமங்களென்றிரண்டுருவினின்று, மாபரன்பூசை கொண்டுமன்னுயிர்க்கருளைவைப்பன்" எனவும் "நெக்குநெக்குநினைப்பவர்நெஞ்சுளே, புக்குநிற்கும்பொன்னார்சடைப்புண்ணியன்" எனவும்வரும் ஏதுக்களால் உணர்க. ()

நீலவண்ணன்றேருநிமல
னாலவாயிலமர்ந்தானென்னே
யாலவாயானலரில்வாசம்
போலென்னுளமும்புகுந்தானென்னே.

(இ-ள்.) நீலவண்ணன் தேருநிமலன் - கரியநிறத்தையுடைய திருமால் தேடியுணராத பெருமான், ஆலவாயில் அமர்ந்தான் என்னே - திருவாலவாயி லெழுந்தருளியிருந்தனன் அது யாதுகாரணமோ, ஆலவாயான் - அத்திருவாலவாயிலெழுந்தருளிய பெருமான், அலரில் வாசம்போல்-மலரில் மணம் அபேதமாயிருத்தல்போல, என் உளமும் புகுந்தான் என்னே - ஏழையேன்மனத்திலுங்குடிபுகுந்தான் யாதுகாரணமோ அறியேன்.

அன்புஞ் சிவமும் அபேதமாயிருந்தலால் அலரில்வாசம்போ லென்னுளமும் புகுந்தான் எனக்கூறினர் "மாறிநின்றென்னைமயக்கிடும்வஞ்சப் புலனைந்தின்வழியடைத்தமுதே, ஊறிநின்றென்னுளெழுபரஞ்சோதி யுள்ளவாகாணவந்தருளாய், தேறலின்றெளிவேசிவபெருமானே திருப்பெருந்துறையுறைசிவனே, ஈறிலாப்பதங்களியாவையுங்கடந்த வின்பமேயென்னுடையன்பே" என்னுந் திருப்பாசுரத்துள் என்னுடையன்பே என்னும் ஏதுவால் அபேதமாயிருத்தல் காண்க. (௩௫)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பாணர்தம்பிரானைக்காப்பான்பருந்தொடுநிழல்போக்கென்ன
யாணரம்பிசைபின்செல்லவிசைத்தவின்னிசைத்தேனண்ட
வாணர்தஞ்செவிக்காலோடிமயிர்த்தொளைவழியத்தேக்கி
யாணரின்னமுதயாக்கையிசைமயமாக்கிற்றன்றே.

(இ-ள்.) பாணர் தம்பிரானை காப்பான் - பாணருள் தலைவராகிய பத்திரரைக் காக்க, பருந்து ஒடு நிழல் போக்கு என்ன - பருந்தினொடு நிழல் செல்லுதல்போல, யாழ் நரம்பு இசை பின்செல்ல - வீணைநரம்பிலெழுந்த இசையின்பின்செல்ல, இசைத்த இன் இசைதேன் - பாடிய இனிய இசையாகியதேன், அண்டவாணர்தம் செவிக்கால்ஓடி - ஆகாயவாசிகளாகிய விஞ்சையர்முதலியோருடைய காதாகிய கால்வாய் வழியேசென்று, மயிர்தொளைவழியதேக்கி - உரோமங்களின் தொளைவழியாய் நிரம்பிவடியநிரப்பி, யாணர் இன் அமுதம் யாக்கை இசை மயம் ஆக்கிற்று - உண்ணுந்தோறும் புதுமைவிளைக்கும் இனிய அமுதத்தாற்பெருகிய அவர்கள் சரீரத்தை யிசைமயமாகச் செய்தது.

பருந்தொடு அதனிழல் பின்பற்றிச்செல்லுதல்போல வீணையோசையின்பின் சாரீரவோசைசெல்லுதலால் பருந்தொடுநிழல்போக்கென்ன என்றார் "பருந்துமத னிழலும் பாட்டுமெழாலும்" என ஷை காந்தருவதத்தையார் இலம்பகத்தில் வருஞ் செய்யுளுக்குப் பருந்து பறக்கின்றவிடத்து முறையேயுயர்ந்து தன்னிலத்தின் கட்டாழ்ந்து பின்னு மம்முறையே மேன்மேலுயர்கின்றாற்போலப் பாடவேண்டுதலி னுவமையாயிற்றென்றார் நச்சினார்க்கினியர். யாழ்நரம்பு யாணரம்பு, வாழ்நர் வாணர் என ஈறுகெட்டு நகரம் ணகரமாகத் திரிந்து நின்றன. (௩௬)

தருக்களுஞ்சலியாமுந்நீர்ச்சலதியுங்கலியாநீண்ட
பொருப்பிழியருவிக்காலுநதிகளும்புரண்டுதுள்ளா
வருட்கடல்விளைத்தகீதவின்னிசையமுதமாந்தி
மருட்கெடவறிவன்றீட்டிவைத்தசித்திரமேயொத்த.

(இ-ள்.) தருக்களும் சலியா - ஓரறிவுயிர்களாகிய மரங்களும் அசையாவாய், முந்நீர்ச்சலதியும் கலியா - முத்தொழிலையுடைய கடலும் ஒலியாவாய், நீண்டபொருப்பு இழி அருவிக்காலும் நதி ளும் புரண்டுதுள்ளா - உயர்ந்த மலையினின்றிழியும் அருவியாகிய கால்களும் நதிகளும் அலைகளாற்புரண்டு துள்ளாவாய், அருள்கடல்விளைத்த கீதம் இன் இசை அமுதம்மாந்தி - கிருபாசமுத்திரமாகிய இறைவர்பாடிய இனிய இசையாகிய அமுதத்தைப்பருகி, மருள்கெட (பார்ப்போர்) மயக்கம் நீங்க, அறிவன் தீட்டிவைத்த சித்திரமே ஒத்த - சிற்பநூலில்வல்ல ஓவியப்புலவன் எழுதிவைத்த சித்திரங்களையே யொத்திருந்தன.

சலிக்குந்தருக்கள் முதலியன சித்திரித்த தருக்கள் முதலியனபோல அசைவற்று நின்றன என்பார் சித்திரமேயொத்த என்றார். முத்தொழில்களாவன சிருட்டி, திதி, சங்காரங்கள். (௩௭)

வீணைகைவழுக்கிச்சோர்வார்சிலர்சிலர்விரனட்த்தும்
யாணரம்பெழாலுங்கண்டத்தெழாலும்வேறுகவேர்ப்பார்
நாணமோடுவகைதுள்ளநாத்தலநடுங்கித்தங்கள்
மாணிழையவர்மேல்விழ்வார்விஞ்சையர்மயங்கிச்சில்லோர்.

(இ-ள்.) சிலர் - (இசைகேட்டகின்னரருள்) சிலர், வீணை கைவழுக்கி சோர்வார் - ஏந்திய வீணை கையினின்றும் வழுவிக்கீழச் சோர்வடைவார்கள், சிலர் - கந்தருவருட்சிலர், விரல்நடத்தும் யாழ்நரம்பு எழாலும் - விரல்கள்சென்றுலாவும் வீணையினரம்பிலெழுந்த ஓசையும், கண்டத்து எழாலும் வேறுகவேர்ப்பார் - கண்டத்தோசையும் வேறுபட வெயர்வரும்புவார்கள், விஞ்சையர் சில்லோர் - விஞ்சையருட்சில்லோர், நாணம் உவகைதள்ள - நாணமொருபாலும் மகிழ்ச்சியொருபாலுமேலோங்க, நாத்தலம் கடுங்கி மயங்கி - நாக்குழறிமதிமயங்கி, தங்கள் மாணிழையவர்மேல் வீழ்வார் - தங்கள் மனைவியர்மேற் சோர்ந்து வீழ்வார்கள்.

இதனால் இசைகேட்ட வீணையில்வல்ல கின்னரர் முதலியோர் தத்தந்தொழிலிழந்தனர்கள் என்பது கூறப்பட்டது. ஓடு எண்ணுப்பொருட்டு. (௩அ)

போதுளான்பரமன்பாதப்போதுளானானான்வேலை
மீதுளான்பரமாநந்தவேலைமீதுள்ளானானான்
தாதுளாங்கமலக்கண்போற்சதமகனுடலமெல்லாம்
காதுளானல்லேனென்றான்கண்ணுளான்கானங்கேட்டு.

(இ-ள்.) கண்ணுளான் கானம் கேட்டு - நுதற்கண்ணுடைய சிவபெருமான் பாடிய தேவகானங்கேட்டு, போது உள்ளான் - தாமரைமலரில் வசிக்கும் பிரமன், பரமன் பாதம் போது உள்ளான் ஆனான்-அச்சிவபெருமான் திருவடித்தாமரையின் கீழுள்ளவனானான், வேலை மீது உள்ளான் - திருப்பாற்கடலிலறிதுயில் கூருந் திருமால், பரமாநந்த வேலை மீது உள்ளான் ஆனான் - பேரின்பக்கடல்மேலுள்ளவனானான், சதமகன் - இந்திரன், தாது உள் ஆம் கமலக்கண்போல் - மகரந்த நிறைந்த தாமரைமலர்போன்ற கண்கள்போல, உடலம் எல்லாம் காது உள்ளான் அல்லேன் என்றான் - உடலமுற்றும் செவிகளுடையவனல்லனாயினேனென்று கவலையுற்றான்.

பிரமன் - கேட்ட இசையின்பத்தோடிரண்டற்றபேதமாயிருத்தலால் சார்புபற்றிப் போதுளான் பரமன்பாதப் போதுளான் எனவும், திருமாலும் இசையின்பத்தால் விழுங்கப்படுதலின் சார்புபற்றி வேலைமீதுள்ளான் பரமாநந்தவேலைமீதுள்ளான் எனவும், இந்திரன் இசைகேட்டற்குத் தனதிரண்டு செவிகளும் போதா ஆதலால் கண்போலுடலமெல்லாங் காதுளானல்லேனென்றான் எனவுங்கூறினார். (௩௯)

முனிவருந்தவத்தராதிமுத்தர்மாசித்தரன்பின்
துனிவரும்பழங்கண்டீர்ப்பான்சுந்தரத்தோன்றல்கீதங்
கனிவருங்கருணையென்னுங்கடலிலன்பென்னுமாற்றிற்
பனிவருங்கண்ணீர்வெள்ளம்பாய்ந்திடவின்பத்தாழ்ந்தார்.

(இ-ள்.) முனிவு அரும் தவத்தர் ஆதி - வெறுப்பில்லாத மாதவத்தினர் முதலிய, முத்தர் மாசித்தர் - முத்தரும் பெரிய சித்தரும், அன்பின் துனிவரும் பழங்கண் தீர்ப்பான்-அன்பினையுடைய பாணபத்திரர் கொண்ட நடுக்கமிக்க துன்பத்தையொழித்தற்பொருட்டு, சுந்தரத்தோன்றல் கீதம் - சோமசுந்தரக்கடவுள் பாடிய தேவகானம், கனிவரும் கருணை என்னும் கடலில்-(பாணபத்திரரிடத்து) கனிந்த கிருபையென்னுங் கடலாதலாலதன்கண், அன்பு என்னும் ஆற்றின்-அன்பென்னும் நதியோடு, பனிவரும் கண்ணீர் வெள்ளம் பாய்ந்திட - துளிக்கும் ஆநந்தபாஷ்பமுங் கலந்து பாய, இன்பத்து ஆழ்ந்தார் - இன்பக்கடலிலழுந்தினார்கள்.

அன்பினர் என்பது அன்பின் என ஈறுதொக்குநின்றது. பாணபத்திரர் கொண்ட அன்பால் அவரிடத்துக் கருணைநிகழ்ந்ததென்பார் சுந்தரத்தோன்றல் கீதம் க

ணிவருங் கருணையென்னுங் கடல் எனவும், அக்கருணையால் அன்புமுதிர்ந்து தோன்றும் என்பார் அன்பென்னுமாற்றில் எனவும், அவ்வன்பால் ஆனந்தபாஷ்பம் பொழிதலும் தமவசமழிதலும் நிகழும் என்பார் பனிவருங் கண்ணீர்வெள்ளம் பாய்ந்திட இன்பத்தாழ்ந்தார் எனவுங் கூறினார். சிவபெருமான் திருவருளால் பத்தியுண்டாம், பத்திதோன்றில் அச்சிவபெருமான் திருவருளுண்டாம் என்பதற்கு "ஆங்கவனருளாற்பத்திமையுண்டாம் பத்தியாலவனருளுண்டாம்" என் வாயுசங்கிதையினும் "நேசவருள்புரிந்துநெஞ்சல்வஞ்சக்கெடப்-பேராதுநின்றபெருங்கருணைப்பேராறே" எனத் திருவாசகத்தினும், அன்பால் ஆனந்தபாஷ்பஞ் சிந்தலுக்கும் தம்வசமழிதலுக்கும் "மெய்தானரும்பிவிதிர்விதிர்த்துன் விரையார்கழற்கென்கைதான்றலைவைத்துக்கண்ணீர்ததும்பி" எனவும் "முனையாவன்பென்புருகவோலமிட் - டலைகடற்றிரையினார்த்தார்த்தோங்கித் - தலைதடுமாறாவீழ்ந்துபுரண்டலறிப் - பித்தரின்மயங்கிமத்தரின்மதித்து - நாட்டவர்மருளவுங்கேட்டவர்வியப்பவும் - கடக்களிறேற்றாத்தடப்பெருமதத்தின்-ஆற்றேனாகவவையஞ்சுவைதரு-கோற்றேன்கொண்டுசெய்தனன்" எனவரும் திருவாசகத்தினும் உணர்க. (௪0)

ஊடிவேறொதுங்கித்துன்பவுவரியுட்குளித்தார்தம்மிற்
கூடிவேறற்றவின்பக்குளிர்கடல்வெள்ளத்தாழ்ந்தார்
நாடிவேறிடைப்பிரிந்தார்மேன்மனநடத்திமேனி
வாடிவேளலைப்பச்சோர்ந்துமம்மர்நோயுழந்தார்மண்ணோர்.

(இ-ள்.) மண்ணோர்-நிலவுலகிலுள்ளவர்களுள், ஊடி வேறு ஒதுங்கி - பிணங்கிவேறிடத்தொதுங்கி, துன்ப உவரி உள் குளித்தார்-துன்பக்கடலில் முழுகிய பெண்கள், தம்மில் கூடி - தமது கணவரோடு கலந்து, வேறு அற்ற இன்பம் குளிர் கடல் வெள்ளத்து ஆழ்ந்தார் - தம்முளொன்றுபட்ட இன்பமாகிய தண்ணிய கடல்வெள்ளத்திலழுந்தினார்கள், நாடி - (பொருள்முதலியவற்றை) நாடி, வேறு இடை பிரிந்தார் மேல் மனம் நடத்தி - மறுபுலத்துச்சென்ற கணவர்மேல் தமது மனத்தைச் செலுத்தி, மேனி வாடி - உடல் மெலிந்து, வேள் அலைப்ப சோர்ந்து - மன்மதன் வருத்த வுணர்வழிந்து, மம்மர் நோய் உழந்தார் - காமநோயில் வருந்தினார்கள்.

ஊடிய மகளிர் இசைகேட்டவல நீங்கிக் கூடினார் என்றதனால் மெய்ப்பாடு மகிழ்ச்சியும், கணவர்ப்பிரிந்த மகளிர் ஓதற்பிரிவு முதலியவற்றின்மேற் பருவம் வரைந்து கூறிச் சென்ற தத்தங் கணவர்மேல் மனஞ்செலுத்துதலால் மெய்ப்பாடு அவலமும் எனக்கொள்க. (௪௧)

பைத்தலைவிடவாய்நாகம்பல்பொறிமஞ்ஞைநால்வாய்
மத்தமானரிமான்புல்வாய்வல்லியமருட்கையெய்தித்
தத்தமாறறியாவாகித்தலைத்தலைமயங்கிச்சோர
இத்தகைமாவும்புள்ளுமிசைவலைப்பட்டவம்மா.

(இ-ள்.) பைதலை விடம் வாய் நாகம் - படம்பொருந்திய தலையையும் விஷம்பொருந்திய வாயையுமுடைய பாம்பும், பல் பொறி மஞ்ஞை நால்வாய் மத்தமான் - பலபொறிகள்வாய்ந்த மயிலும் தொங்கியசையும் வாயையுடைய யானையும், அரி மான் புல் வாய் வல்லியம் - சிங்கமு மானும் புலியும், மருட்கை எய்தி - மயங்கி, தத்தம் ஆறு அறியா ஆகி - தத்தமக்குரிய செல்லுநெறியுணராதனவாகி, தலைத்தலைமயங்கி சோர - இடங்கள்தோறுந் தலைதடுமாறி மயங்கிச்சோர்ந்து நிற்றலால்,

இத்தகை மாவும் புள்ளும் இசை வலைப்பட்ட - இத்தன்மையையுடைய மிருகமும் ப றவைகளும் இசையாகிய வலையிலகப்பட்டன.

ஓரறிவுடைய தருக்கள் முதலியனவே யன்றியை யறிவுடையனவாய்ப் புத ப்புணர்ச்சியினறி னின்ற மிருகமும் பறவையும் தாம் செல்லும் நெறியையும் தத்தம் பகைமையையும் நோக்காது சலிப்பின்றி நின்றனவென இசையின்பெருமைக் குணங் கூறுவார் வியப்பிடைச்சொற்றந்து இசைவலைப்பட்டவம்மா என்றார். "வானவர் மக்கள்நரகர் விலங்குபுள் - ளாதிசெறியறிவோடையறிவுயிரே" என்பதனால் ஐய றிவுடையன என்பதுணர்க. (௪௨)

வன்றரைகிழியவீழ்போய்வான்சினைகரியநின்ற
வொன்றறிமரங்களெல்லாஞ்செவியறிவுடையவாகி
மென்றளிரீன்றுபோதுவிரிந்துகண்ணீருஞ்சோர
நன்றறிமாந்தர்போலநகைமுகமலர்ந்தமாதோ.

(இ-ள்,) வன் தரை கிழிய வீழ் போய் - வலியநிலங் கிழிபட விழுதாவீழ்த் தி, வான் சினை கரிய நின்ற - பெரிய கிளைகள் கரிந்துபோக நின்ற, ஒன்று அறி ம ரங்கள் எல்லாம் - பரிசமென்னும் ஓரறிவையுடைய மரங்கள் யாவும், செவி அறிவு உடைய ஆகி - (ஓசையுணரும்) செவியுணர்ச்சியையுமுடையனவாகி, மென் தளிர் ஈன்று - மெல்லிய தளிர்தளிர்த்து, போது விரிந்து - அரும்பிமலர்ந்து, கண்ணீரும் சோர - கண்ணீருஞ் சிந்த, நன்று அறி மாந்தர் போல - நன்றுதீது பகுத்துணருமக்கள்போல, நகைமுகம் மலர்ந்த - நகையொடு முகமலர்ந்தன.

"புன்மரமுதலவுற்றறியு மோரறிவுயிர்" என்றதனால் ஒன்றறிமரங்கள் என் ன்றார். கண்ணீர் கள் நீர் எனப்பிரித்துக் கள்ளாகிய நீர் எனக்கொள்க. நகை ஒளி, சிரிப்பு. கரிந்தமரந்தளிர்த் தரும்பிமலர்ந்துகள்ளொழுக்கி நிற்பச்செய்வது இசையி ன் பண்பாதலால் அதன்பண்பை யவற்றின்மேலேற்றிச் செவியறிவுடையவாகி நன் றறிமாந்தர்போல நகைமுகமலர்ந்தவன்றே என்றார். (௪௩)

வாழியவுலகின்வானோர்மனிதர்புள்விலங்குமற்றும்
ஆழியகரணமெல்லாமசைவறவடங்கவையன்
ஏழிசைமயமேயாகியிருந்தனவுணர்ந்தோருள்ளம்
ஊழியிலொருவன்றாள்புக்கொடுங்கியதன்மையொத்த.

(இ-ள்.) உலகின் வானோர் மனிதர் - பொன்னுலகிலும் நிலவுலகிலுமுள்ள தேவர்களும் மனிதர்களும், புள் விலங்கு மற்றும் - பறவையுமிருகமும் ஏனைப்பொரு ள்களும், ஆழிய கரணம் எல்லாம் அசைவு அற அடங்க - ஆழ்ந்த மனமுதலிய கர ணங்களெல்லாம் சலனமின்றி யொருப்பட்டுநிற்க, ஐயன் ஏழிசை மயமே ஆகி இ ருந்தன - சோமசுந்தரக்கடவுள் பாடியருளிய ஏழிசையின் மயமாய் முடிந்திருந்த லால், உணர்ந்தோர் உள்ளம் - பரஞானமுடையோர் உள்ளம், ஊழியில் ஒருவன் தாள் புக்கு ஒடுங்கிய தன்மை ஒத்த - ஊழிகாலத்திலு முலவாதுள்ள சிவபெருமா ன் திருவடியில் சென்றொடுங்கிய தன்மையை யொத்திருந்தன.

ஆக்கல் காத்தற்பொருட்டுப் பிரமனையுந் திருமாலையுந் தந்து அவர்கள் பால திகார சத்தியைவைத் தூழியிலொடுக்கித் தானொருமுதலாய் நிற்றலால் ஊழியிலொ ருவன் எனவும், அப்பெருமானார் திருவடியிற் சென்றொடுங்கிய உள்ளம் இரண்டற அபேதமாய் நிற்றலால் தாள்புக்கொடுங்கிய தன்மையொத்த எனவுங் கூறினார்.

நிலவுகின்ற தன்னருளுருக்கொண் டூடுநிமலன்-தலைமைபெற்றிடு புங்கவர்தம்மை முன்றந்தே - உலகம் யாவையு மளித்தருள் செய்திட வுதவி - அலகிலாவுயிர்யாவை யுமயன்க ணின்றளிப்பான் எனவும், மாயவன்கணின்றவையெலாம்போற்றி"எனவு ம், அன்னவேலையி லவையெலாமழித்தபி னளிப்போர் - என்னநின்றவர் தம்மையு மொடுக்குறு மிதற்பின் - முன்னருள்ளதோ ரேகமாயுறையுமெம்மூர்த்தி " எனவுங் காந்தத்திலும் " இறுதியாங் காலந்தன்னி லொருவனேயிருவர் தாமும் - உறுதியா ய்நின்றொன்னி லிறுதிதானுண்டாகாதாம் - அறுதியிலரனே யெல்லாமழித்தலா ல வனுலின்னும் - பெறுதுநாமமக்கரோக்கம் பேரதிகாரணத்தாலே " எனச் சித்தியா ரிலும் வருதல்காண்க. (௪௪)

கண்ணிறைநுதலோன்சாமகண்டத்தினெழுந்தமுல்லைப்
பண்ணிறைதேவகீதஞ்சராசரவுயிரும்பாரும்
விண்ணிறைதிசைகளெட்டும்விழுங்கித்தன்மயமேயாக்கி
யுண்ணிறையுயிருமெய்யுமுருக்கியதிசைவல்லானை.

(இ-ள்.) கண் நிறை நுதலோன் சாமகண்டத்தின் எழுந்த - தீக்கண்பொரு ந்திய நெற்றியையுடைய சோமசுந்தரக்கடவுளின் சாமகீதநிறைந்த ஸ்ரீகண்டத்தினி ன்று மெழுந்த, முல்லைப்பண் நிறை தேவகீதம் - சாதாரிப்பண்ணாகிய நிறைந்த தே வகானம், சராசரவுயிரும் பாரும் - சராசரங்களையும் நிலவுலகத்தையும், விண்ணும் நிறை திசைகள் எட்டும் - விண்ணுலகத்தையும், நிறைந்த எட்டுத்திசைகளையும், வி ழுங்கி தன்மயமே ஆக்கி - விழுங்கித் தன்மயமாகச்செய்து, இசை வல்லானை - இ சைநூலில் வல்ல ஏமநாதனை, உள் நிறை உயிரும் மெய்யும் உருக்கியது - உள்ளேநி றைந்த உயிருமுடலும் நெக்குவிட்டுருகச் செய்தது. (௪௫)

கலிநிலைத்துறை.

சிந்தைதோயுமைம்பொறிகளும்செவிகளாப்புலன்கள்
ஐந்துமோசையாவிசைவலானிருந்தனனாகப்
பந்தநான்மறைநாவினாற்பத்திரனாளாய்
வந்துபாடினாரிந்தனச்சுமையொடுமறைந்தார்.

(இ-ள்.) சிந்தை தோயும் ஐம்பொறிகளும் செவிகள் ஆக - மனத்தின்வழி யியங்கும் மெய்முதலிய ஐந்துபொறிகளும் செவிகளாகவும், புலன்கள் ஐந்தும் ஓ சை ஆக-சத்தமுதலிய ஐம்புலன்களும் சத்தவுணர்ச்சியாகவும், இசை வல்லான் இ ருந்தனனாக-இசைநூலில் வல்ல ஏமநாதனிருக்க, பத்திரன் ஆளாய் வந்து - பாண பத்திரர் அடிமையாய் வந்து, பந்தம் நான் மறை நாவினால் பாடினார். கட்டமைந் த நான்குவேதங்களையும் தமது திருநாவாற் பாடியருளிய சோமசுந்தரக்கடவுள், இந்தனச்சுமையொடு மறைந்தார் - விறகின் சுமையோடு மறைந்தருளினார்.

பதம், நிரை, பாழி, சாகை, பஞ்சாதி, அருவாகம் என உறுப்புகளுடைய எ ன்பார் பந்த நான்மறை யெனவும், மனம் இசை வழித்தாய் நிற்றலால் மனம் வாயி லாகச்செல்லும் ஐம்பொறிகளும் அவ்வழியால்நின்றன வென்பார், ஐம்பொறிகளு ஞ் செவிகளா எனவும், ஒருணர்ச்சி யதிகரித் தெழுங்கால் ஏனையுணர்ச்சிகள் சுரு ங்கு மென்பார். புலன்களைந்துமோசையா எனவுங் கூறினார். (௪௬)

யானறிந்தசாதாரியன்றிம்பருளிதனை
நானறிந்தென்றொருவருநவின்றிலர்தேவ

கானமீதிவற்குணர்த்தினேன்கடவுளேயன்றி
ஏனைமானிடர்வல்லரோவிதுவியப்பென்ற.

(இ-ள்.) யான் அறிந்த சாதாரி அன்று - இது நான்தெரிந்த சாதாரிப்பண்ணல்ல, இம்பருள் இதனை நான் அறிந்தது என்று ஒருவரும் நவின்றிலர்-இந்நிலவுலகில் இப்பண்ணினை யான் கேட்டறிந்துளேனென்று ஒருவருங் கூறிற்றிலர், ஈது தேவகானம் - விறகாள் பாடிய இது தேவகானமாம், இவற்கு உணர்த்தினேன் கடவுளே அன்றி - இவனுக்குக் கற்பித்தவன் கடவுளேயல்லாமல், ஏனை மானிடர் வல்லர் ஓ - (அவரொழிந்த) மானிடர் கற்பிக்க வல்லரோ, இது வியப்பு என்று - இது அற்புதமான செய்தியென்று.

இப்பண் இலவுலகில் வழங்கினும் ஈது தேவகானம் என்றமையால் யானறிந்த சாதாரியன்று எனவும், இதனை நானறிந்ததென்றொருவரும் நவின்றிலர் எனவும், இவன் மானிடனாதலின் கற்பித்தவன் கடவுளாவான் வேண்டுமாதலால் கடவுளேயன்றி யேனைமானிடர் வல்லரோ எனவுங்கூறினன். (௪எ)

இழுக்கிவிட்டவிக்கிழமகனிசையிதேலந்த
வழுக்கில்பத்திரன்பாடலெற்றேவெனமதியா
வழுக்கமுற்றெழுந்திசைவலானடுத்ததன்பண்டர்
குழுக்களுங்குலைகுலைந்திடவிருள்வழிக்கொண்டான்.

(இ-ள்.) இழுக்கி விட்ட இக் கிழமகன் இசை இதேல் - (பாணபத்திரனால்) தள்ளிவிட்ட இந்தமுதுமகன்பாடுமிசை யிதுவாகில், அந்த வழுக்கு இல் பத்திரன் பாடல் எற்றே என மதியா-அந்தக்குற்றமில்லாத பாணபத்திரன் பாடும் பாடலைத் தன்மையதோவென்றுகருதி, இசை வல்லான் - இசைநூலில்வல்ல ஏமநாதன், அழுக்கம் உற்று எழுந்து-கவலையுற்றெழுந்து, அடுத்த தன் பண்டர் குழுக்களும் குலை குலைந்திட - தன்கீழ்க்கற்ற பாடல்மக்கள்கூட்டங்களும் நிலைதடுமாறிச்செல்ல, இருள் வழி கொண்டான் - பாதிராத்திரியிற் கரந்தோடத்தலைப்பட்டான். (௪அ)

மடக்குபல்கலைப்பேழையுமணிக்கலம்பிறவு
மடக்குபேழையுங்கருவியாழ்க்கோலுமாங்காங்கே
கிடக்கமானமுமச்சமுங்கிளர்ந்துமுன்னீர்த்து
நடக்கவுத்தரதிசைக்கணேநாடினனடந்தான்.

(இ-ள்.) பல் கலம் மடக்கு பேழையும் - பலவகைப்பட்ட ஆபரணங்கள்வைத்த மடக்குப்பெட்டியும், மணிக் கலம் பிறவும் அடக்கு பேழையும் - இரத்தினமழுத்திய ஆபரணங்களையு மற்றுள்ளனவற்றையும் அடக்கிய பெட்டிகளும், கருவி யாழ்க் கோலும் ஆங்கு ஆங்கு கிடக்க - வீணையும் வைத்த இடந்தோறும் அவ்வாறேயிருக்க, மானமும் அச்சமும் கிளர்ந்து முன் ஈர்த்து நடக்க - மானமும் பயமு மேலெழுந்து முன்னிழுத்துச் செல்ல, உத்தர திசைக் கண்ணே நாடினன் நடந்தான்-வடதிசையின்கண்ணே நாடிச்சென்றான்.

பாணபத்திரரோடு பாடில் தனக்கு மானக்கேடு வரும் என்பதோர் அச்சங் கொண்டானாதலால் மானமும் அச்சமுங் கிளர்ந்து முன்னீர்த்துநடக்க வெனவும், அவற்றால்வைத்த யாவுமறந்தனனாதலால் ஆங்காங்கேகிடக்க எனவுங்கூறினர். (௪௯)

சிவிகையோர்வழிவிறலியரோர்வழிசெல்லக்
கவிகையோர்வழிகற்பவரோர்வழிகடுகக்

குவிகையேவலரொருவழிகூடநாணுள்ளத்
தவிகையோவருமொருவழியகன்றிடநடந்தான்.

(இ-ள்.) சிவிகை ஓர் வழி விறலியர் ஓர் வழி செல்ல - பல்லக்கு ஓர்வழியினும் பாடும்பெண்களோர்வழியினு மயங்கிச் செல்லவும், கவிகை ஓர் வழி கற்பவர் ஓர் வழி கடுக - குடை ஓர்வழியிலும் தன்கீழ்க் கற்பவரோர்வழியிலும் விரைந்துசெல்லவும், குவிகை ஏவலர் ஒரு வழி கூட - கூப்பிய கைகளையுடையவராய்க் குற்றேவல் செய்யும் பணிமக்கள் ஓர்வழியிற்செல்லவும், உள்ளத்து நாண் அவிகை ஓவரும் ஒரு வழி அகன்றிட - தமதுமனத்தில் நாணொழிந்தபாடற் கீழ்மக்களும் ஒருவழியிற் செல்லவும், நடந்தான் - தானொருவழியிற் சென்றான். (௫௦)

அன்றுபத்திரன்கனவில்வந்தாடலேறழகர்
இன்றுபத்திரவிசைவலானிடைவிறகாளாய்ச்
சென்றுபத்திரனடிமையாமென்றுபாண்செய்து
வென்றுபத்திரஞ்செய்துநின்வேண்டுகோளென்றார்.

(இ-ள்.) ஆடல் ஏறு அழகர் - வெற்றிவாய்ந்த இடபவூர்தியையுடைய சோமசுந்தரக்கடவுள், அன்று பத்திரன் கனவில் வந்து - அப்பொழுது பாணபத்திரர் சொப்பனத்தில் வந்து, இன்று - இப்பொழுது, பத்திர - பத்திரனே, இசைவலான் இடை - ஏமநாதனிடத்து, விறகாளாய் சென்று - விறகுசுமையாளாய்ச்சென்று, யாம் பத்திரன் அடிமை என்று பாண் செய்து வென்று - நாம் பாணபத்திரனடிமையாளென்று இசைபாடிவென்று, நின் வேண்டுகோள் - உனது வேண்டுகோளால், பத்திரம் செய்தும் என்றார் - நின்னைக் காவல்செய்தோமென்றுகூறியருளினார்.

அடியவர்க்கெளியராதலால் விறகாளாய்ச்சென்று பத்திரனடிமையாம் எனவும், அடியவர்வேண்டிற் றருள்பவர் ஆதலால் நின்வேண்டுகோள் பத்திரஞ்செய்தும் எனவுங் கூறியருளினார் "அளவறுப்பதற்கரியவ னிமையவர்க்கெளியானங்-கள வறுத்துநின்றுண்டமை கருத்தினுட்கசிந்துணர்ந்திருந்தேயும்" எனவரும் திருவாசகத்தாலும "சலமிலன்சங்கரன்சார்ந்தவர்க்கல்லால் - நலமிலனாடொறுநல்குவானலன்" எனவரும் திருநாவுக்கரசுநாயனார் தேவாரத்தாலும் உணர்க. (௫௧)

குஞ்சிநாண்மலர்க்கொன்றையாரங்ஙனங்கூறு
நெஞ்சினானினைப்பரியசொற்கேட்டலுநெஞ்ச
மஞ்சினானிதுசெய்யவோவடியனேன்மறைகட்
கெஞ்சினானையின்றிரந்தவாறென்றுகண்விழித்தான்.

(இ-ள்.) குஞ்சி நாள் மலர் கொன்றையார் - சிகையில் அன்றலர்ந்த கொன்றைமலர்மாலையை யணிந்த சிவபெருமானார், அங்ஙனம் கூறும் நெஞ்சினால் நினைப்பரிய சொல் கேட்டலும் - அவ்வாறுகூறியருளும் மனத்தாலும் நினைத்தற்கரியசொல்லைக்கேட்ட அப்பொழுதே, நெஞ்சம் அஞ்சினான் - மனந்துணுக்குற்றார், இது செய்யவோ - இந்த இழிதொழிலைச் செய்யவா, அடியனேன் - நாயினுங் கடைப்பட்ட அடியேன், மறை கட்கு எஞ்சினானை - வேதங்களுக்குந் தொடத்தொட நீண்ட பெரியவனை, இன்று இரந்த ஆறு என்று கண் விழித்தான் - இப்பொழுது குறைகூறியிரந்தவகையென்று கண்விழித்தெழுந்தார்.

நெஞ்சினானினைப்பரியசொல் என்பதுதோன்ற அங்ஙனங்கூறும் எனவும், இழிதொழிலென்பது தோன்ற இதுசெய்யவோ எனவும், வாக்கிறந்து நின்ற இறைவர்

என்பதுதோன்ற மறைகட்கெஞ்சினுர் எனவும், இவ்வாறு கூறுதற்கும் செய்தற்கும் அன்றே இரந்ததென்பதுதோன்ற இன்றிரந்தவாறு எனவும், இது தமக்குப் பேரபராதமாய் விளைந்ததென்பது தோன்ற நெஞ்சமஞ்சினுன் எனவுங்கூறினுர். (௫௨)

கண்மலர்ந்தெழுபத்திரன்கரையிலாவுவகை
யுண்மலர்ந்தெழுமன்புகொண்டூக்கவெங்கதிரோன்
விண்மலர்ந்தெழுமுன்புபோய்விசும்பிழிகோயிற்
பண்மலர்ந்தநான்மறைப்பொருளடித்தலம்பணிந்தான்.

(இ-ள்.) கண் மலர்ந் தெழு பத்திரன் - துயிலுணர்ந்தெழுந்த பாணபத்திரர், கரை இல்லாத உவகை உள் மலர்ந்து எழும் அன்பு கொண்டு ஊக்க - எல்லையில்லாத மகிழ்ச்சியை யுள்ளே பெருக்கி யெழுந்த அன்புசெலுத்த, வெங் கதிரோன் விண் மலர்ந்து எழு முன்புபோய் - சூரியன் ஆகாயத்திலுதயஞ்செய்து எழுதற்குமுன்சென்று, விசும்பு இழி கோயில் - விண்ணுலகத்தினின்று மிழிந்த இந்திரவிமானத்திலெழுந்தருளிய, பண் மலர்ந்த நான் மறைப் பொருள் - இசையமைந்த நான்கு வேதங்களின் பொருளாயுள்ள சோமசுந்தரக்கடவுளின், அடித்தலம் பணிந்தான் - திருவடியையவணங்கினுர்.

அன்பால் மகிழ்ச்சிபெருகுதலின் உவகையுண்மலர்ந்தெழுமன்பு எனவும், அன்பாற்சிந்தித்தலும் சேவித்தலும் உளவாதலின் அன்புசொண்டூக்க வடித்தலம்பணிந்தான் எனவுங்கூறினுர். "அன்பினுலடியேனுவியோடியாக்கையானந்தமாய்க்கசிந்துருக" எனவும் "சிந்தனைநின்றனக்காக்கிநாயினேன்றன் - கண்ணிணைநின்திருப்பாதப்போதுக்காக்கி - வந்தனையுமம்மலர்க்கேயாக்கிவாக்குன் - மணிவார்த்தைக்காக்கியைம்புலன்களார - வந்தனை" எனவும் வரும் திருவாசகத்தால் உணர்க. (௫௩)

கடியகானகம்புகுதவோகட்டியவிறகை
முடியிலேற்றவோமுண்டகத்தாள்கணொந்திடவங்
தடியனேன்பொருட்டடாதசொற்பகரவோவஞ்சக்
கொடியனேன்குறையிரந்தவாவிளைந்ததேகுற்றம்.

(இ-ள்.) கடிய கானகம் புகுதவோ - வெப்பமமைந்த காட்டிற்செல்லவோ, கட்டிய விறகை முடியில் ஏற்றவோ - கட்டிய விறகு சுமையைத் திருமுடியிலேற்றவோ, முண்டகம் தாள்கள் நொந்திட வந்து-தாமரைமலர்போன்ற திருவடிகள் நோவ நடந்தருளி, அடியனேன் பொருட்டு அடாத சொல் பகரவோ - குற்றடியேனிமித்தம் பாணபத்திரனடிமையென்று தகாத சொல்லைக்கூறவா, வஞ்சக்கொடியனேன்- வஞ்சக்கொடுந்தொழிலையுடையேன், குறை இரந்த ஆறு - குறைகூறி யிரந்தவகை, குற்றம் விளைந்தது - (அதனுல்) பெரும்பிழை யடியேனுக்கு விளைந்தது.

அடியேன் குறையிரந்தது காட்டிற்சென்று கட்டிய விறகைத் திருமுடியிலேற்றித் திருவடிநோவ நடந்து விலைகூறிப்பத்திரனடிமையென்றுகூறுதற்கா,ஐயோ நானிரந்தது கொடிது என்பார் விளைந்ததே குற்றம் என்றுர். (௫௪)

நெடியனேமுதல்வானவர்நெஞ்சமுஞ்சுருதி
முடியனேகமுங்கடந்தநின்முண்டகப்பாதஞ்
செடியனேன்பொருட்டாகவிச்சேணிலந்தோய்ந்த
வடியனேற்கெளிதாயதோவையநின்பெருமை.

(இ-ள்.) நெடியனே முதல் வானவர் நெஞ்சமும் - திருமால் முதலிய தேவர்களிதயங்களையும், சுருதிமுடி அனேகமும் கடந்த - பல பிரபல சுருதிகளையுங் கடந்துநின்ற, நின் முண்டகம் பாதம் - உனது தாமரைமலர்போன்ற திருவடிகள், செடியனேன் பொருட்டாக - இழிதொழிலையுடையே னிமித்தமாக, இ சேண் நிலம் தோய்ந்த - இந்தப் பெரிய நிலவுலகிற்றோய்ந்தன, ஐய நின் பெருமை - ஐயனே யளத்தற்கரிய உனது பெருமை, அடியனேற்கு எளிதாயதோ - புழுத்தநாயினே னளவிலளக்கநின்றதோ.

மலபந்தமுடைமையாலும், பாசஞானமாகிய சொற்பிரபஞ்சமாதலாலும் மனவாக்கிறந்து நின்றனவென்பார் நெடியனேமுதல் வானவர் நெஞ்சமுஞ் சுருதி முடியனேகமுங் கடந்தநின் முண்டகப்பாதம் எனவும், நின்னடியவர் குழுவுள் புழுத்தநாயினுங் கடைப்பட்ட சிறியேன் பொருட்டோ நிலவுலகில் தோயவேண்டும் என்பார் செடியனேன் பொருட்டாக விச்சேணிலந் தோய்ந்தவெனவும், மெய்யன் பர்க்கன்றி யென்பாலவ்வாறுதல் தக்கதன்றென்பார் எதிர்மறைப்பொருள் படும் ஓகாரம் புணர்த்தி ஐயநின்பெருமை அடியனேற்கெளிதாயதோ எனவுங் கூறினார் "பரவுவாரிமையோர்கள் பாடுவன நால்வேதம்-குரவுவார்குழன்மடவாள் கூறுடையாளொருபாகம் - விரவுவார்மெய்யன்பினடியார்கண் மேன்மேலுன் - அரவுவார்கழலடிகள் காண்பாரோவரியானே" எனவரும் திருவாசகத்தால் உணர்க. (௫௫)

நாதவந்தமுங்கடந்தமெய்ஞ்ஞானவானந்த
போதமென்பரஃதின்றொருபுடவிமானுடமா
யாதபந்தெறத்தறிந்தவிந்தனஞ்சுமந்தடியேன்
பேதையன்பளவாயதோபெருமநின்னுருவம்.

(இ-ள். பெரும - பெருமானே, நின் உருவம் - தேவரீர் திருவுருவம், நாத அந்தமுங் கடந்த-நாதாந்தத்தையுங் கடந்த, மெய் ஞானம் ஆனந்தபோதம் என்பர்- உண்மையறிவானந்தமென்று கூறுவர், அஃது - அத்திருவுருவம், இன்று ஒருபுடவி மானுடம் ஆய் - இப்பொழுது நிலவுலகி லொரு மானிடத்திருவுருவமாய், ஆதபம் தெற - வெயில் சுட்டு வருத்தலால், தறிந்த இந்தனம் சுமந்து - முறிபட்ட விறகினைச்சுமந்து, பேதை அடியேன் அன்பு அளவாயதோ-பேதைமைத்தன்மையுடைய அடியேனன்பென்னும் எல்லையிலடங்கியதோ.

நின்மலசொரூபம் என்பார் நின்னுருவம் எனவும், குடிலையென்பார் நாதவந்தம் எனவும், அந்நின்மலசொரூபமாகிய சிவம் தனது சத்தியை விரித்து அதுவேயுடம்பாகநின்று பிரபஞ்சத்தைக் காரியப்படுத்தற்பொருட்டுத் தன் சத்தியால் அக்குடிலை யுபாதானமாகத் தோற்றிய நாதம், விந்து, சாதாக்கியம், ஈஸ்வரம், சுத்தவித்தையென்னும் ஐந்து தத்துவங்களும் கொள்ளவேண்டும் என்பார் இறந்ததுதழீஇய எச்சவும்மை தந்து நாதவந்தமும் எனவும், அந்நின்மலசொரூபம் அவற்றைக்கடந்து நின்றது என்பார் கடந்த மெய்ஞ்ஞானவானந்தபோதம் என்பர் எனவும், மலபந்தராகிய ஆன்மாக்கள் உய்தற்பொருட்டுத் தனது சத்தியால் திருமேனிகொண்டருளியதுபோல அவ்வான்மாக்களுளொருவனாகிய ஏழையேன்பொருட்டும் திருவருளால் மானிடத்திருவுருக்கொண்டு போந்ததென்பார் இன்றொருபுடவிமானுடமாய் எனவும், பத்திவலையிற்படுவதாதலா லடியேன் றரத்துக்கேற்ப ஆண்டுகொண்டருள எளிவந்ததென்பார் ஆதபந்தெறத்தறிந்தவிந்தனஞ் சுமந்தடியேன் - பேதையன்பளவாயதோவெனவுங்கூறினார். தனது சத்தியால் திருமேனிகொண்டருளியது என்பதற்கு

"பொன்மைநிலாதிவன்னம்பொருந்திடப்பளிங்கவற்றின்-தன்மையாய்நிற்குமாபோற் சத்திதன்பேதமெல்லாம்-நின்மலன்ருனாய்த்தோன்றி நிலைமையொன்ருயேநிற்பன்-முன்னருட்சத்திதன்பான் முகிழ்க்குந்தான்முனையானன்றே" எனவருஞ் சித்தியாரினும், என்றாத்துக்கேற்ப என்றதற்கு "எப்பெருந்தன்மையும் எவ்வெவர்திறமும் - அப்பரிசதனாலாண்டுகொண்டருளி" எனவரும் திருவாசகத்திலும் உணர்க. (௫௬)

மறிந்ததெண்டிரைகிடந்தவனுந்தியில்வந்தோ
னறிந்ததன்றரும்பொருள்வரம்பகன்றெழுவிசும்புஞ்
செறிந்தவண்டமுங்கடந்ததுசிறியனேன்பொருட்டாத்
தறிந்தவிந்தனஞ்சுமந்ததோதம்பிரான்முடியே.

(இ-ள்.) மறிந்த தெண்டிரை கிடந்தவன் உந்தியில் வந்தோன் - மடங்கிவருந் தெள்ளிய அலைகளையுடைய திருப்பாற்கடலி லறிதுயில்கூருந் திருமாலும், உந்தியில் வந்தோன் - அவனுந்தியில் வந்த பிரமனும், அறிந்தது அன்று - உணர்ந்ததுமன்று, அரும்பொருள் வரம்பு அகன்று - அணுவளவையுங்கடந்து, எழுவிசும்பும் - பரந்த விண்ணுலகத்தையும், செறிந்த அண்டமும் கடந்தது - (அதுவொழிந்த) ஏனையண்டங்களையுங்கடந்து நின்றது, தம்பிரான் முடி - தேவரீர் திருமுடி, சிறியனேன் பொருட்டாக-(அது) கடைப்பட்ட வறிவிற் சிறியேன் நிமித்தம், தறிந்த இந்தனம் சுமந்ததோ - முறிபட்ட விறகுச்சுமையைச் சுமந்து திரிந்ததோ. (இஃதோர் பெருவியப்பு.)

தம்பிரான் அண்மைவிளி "பிரமன்மால்காணுப்பெரியோன்" என்பார் மறிந்ததெண்டிரை கிடந்தவனுந்தியில்வந்தோன் அறிந்ததன்று எனவும், அணுவுக்கணுவென் என்பார் அரும்பொருள் வரம்பகன்று எனவும், மகத்துக்கு மகத்தென்பார் எழுவிசும்புஞ்செறிந்த வண்டமும் கடந்தது எனவும், அது அடியவர்க்கெளியது என்பார் சிறியனேன் பொருட்டாத்தறிந்த இந்தனஞ் சுமந்ததோ எனவுங்கூறினர். "அணுத்தருந்தன்மையிலையோன்" எனவும் "அண்டப்பகுதியினுண்டைப்பிறக்கம்-அளப்பருந்தன்மை வளப்பெருங்காட்சி - ஒன்றனுக்கொன்று நின்றெழில்பகரின் - நூற்றொருகோடியின் மேற்படவிரிந்தன - இன்னுழைகதிரின் றுன்னணுப்புரையச் - சிறியவாகப்பெரியோன்" எனவும் வருந் திருவாசகத்தால் உணர்க. (௫௭)

என்னவந்தனைசெய்துநின்றேத்தியங்கயற்கண்
மின்னமர்ந்தபங்கொருவனைவலங்கொடுமீண்டு
மன்னர்தம்பிரானகியவரகுணதேவன்
றன்னைவந்தடிபணிந்தனன்றந்திரிக்கிழவோன்.

(இ-ள்.) என்ன - என்று, வந்தனை செய்து நின்று ஏத்தி - வணங்கிநின்று துதித்து, அங்கயற்கண் மின் அமர்ந்த பங்கு ஒருவனை-அங்கயற்கண்ணியார் குடிகொண்ட பாகத்தையுடைய சோமசுந்தரக்கடவுளை, வலங்கொண்டு மீண்டு - பிரதக்ஷிணஞ்செய்து திரும்பி, மன்னர் தம்பிரான் ஆகிய வரகுணதேவன் தன்னை - அரசர்க்ருக்கரசனாகியவரகுணதேவபாண்டியனை, தந்திரிக்கிழவோன் வந்து அடிபணிந்தனன்-வீணையில்வல்ல பாணபத்திரர் வந்து பாதங்களை வணங்கி யொருபால் நின்றனர்.

தந்திரி வீணையினரம்பு அது வீணைமேல் நிற்றலால் விட்டவாகுபெயர். (௫௮)

வந்தவேழிசைத்தலைமகன்வரவறிந்தரச
னந்தவேழிசைக்கிழவனையழையெனவுழையோர்

பந்தயாழமகனிருக்கைபோய்ப்பார்த்தனர்காணார்
சிந்தையாகுலமடைந்தவன்போனவாதெளியார்.

(இ-ள்.) அரசன் வந்த ஏழிசைத் தலை மகன் வரவு அறிந்து - அந்த வரகுணதேவபாண்டியன் தன்பால் வந்த ஏழிசையில் வல்ல யாழ்ப்பாணர் வருகையையறிந்து, அந்த ஏழிசைக்கிழவனை அழையென - (வடபுலத்திருந்துவந்த) அந்த ஏழிசையில்வல்ல ஏமநாதனை யழையாயென்று பணிக்க, உழையோர் - வேவுகாரர், பந்தம் யாழ் மகன் இருக்கை போய் பார்த்தனர் - நரம்பின் கட்டமைந்த வீணையில்வல்ல ஏமநாதனுடைய விடுதியிற்சென்று பார்த்து, காணார் - அவனைக்காணாது, சிந்தை ஆகுலம் அடைந்தவன் - மனத்தில் வருத்தமுற்றெழுந்த ஏமநாதன், போன ஆறு தெளியார் - போனவழி தெளியாதவர்களாய்.

பார்த்தனர் காணார் முற்றெச்சங்கள். ஆறு இடப்பெயர்ச்சொல் ஈறுதொக்கு நின்றது. (௫௯)

எங்குளானெனத்தேடுவாரிவரெதிரயல்வா
யங்குளார்சிலரறிந்தவாறறைகுவாரவனேற்
றிங்குளான்விறகெடுத்தொருமுதுமகனிவன்பாற்
பொங்குமேழிசைப்பத்திரனடிமையாய்ப்போந்தான்.

(இ-ள்.) எங்குளான் என தேடுவார் இவர் எதிர் - எங்கொளித்தானென்று தேடித்திரியும் வேவுகாரர் எதிரே, அயல் வாய் அங்கு உள்ளார் சிலர் - (அவன்விடுதியின்) பக்கலி லங்கு வசிப்பவருட்சிலர், அறிந்த ஆறு அறைகுவார் - தெரிந்தவகையை யொருவாறு கூறுவர், அவன் நேற்று இங்கு உள்ளான் - அவன்நேற்றைப்பொழுதிங்கிருந்தான், ஒரு முது மகன் விறகு எடுத்து - ஒருவிருத்தன் விறகுசுமை யெடுத்து, இவன் பால் - இந்த ஏமநாதனிடத்து, பொங்கும் ஏழிசை பத்திரன் அடிமையாய் போந்தான் - விளங்கும் ஏழிசையில்வல்ல பாணபத்திர ரடிமையென்று வந்தனன். (௬௦)

பாடினான்பின்புபட்டதுதெரிகிலேம்பாதி
ளோடினானெனக்கேட்டலுமொற்றர்போய்க்கொற்றஞ்
சூடினானவையடைந்தவர்சொல்லியவாறே
யாடினார்வியப்படைந்தனுமானமுற்றரசன்.

(இ-ள்.) பாடினான் - பாடினன், பின்பு பட்டது தெரிகிலேம் - பின்நிகழ்ந்த செய்தியை யறியோம், பால் நாள் ஓடினான் என கேட்டலும் - பாதியிரவில் ஓடினானென்று கூறக்கேட்ட அன்றே, ஒற்றர் போய் - வேவுகாரர்சென்று, கொற்றம் சூடினான் அவை அடைந்து - வெற்றிமாலையைச் சூடிய வரகுணபாண்டியனது சபையையடைந்து, அவர் சொல்லிய ஆறே ஆடினார் - அங்குள்ளோர் கூறியபடியேகூறினார், அரசன் வியப்பு அடைந்து அனுமானம் உற்று - அவ்வரகுணபாண்டியன்அதிசயங்கூர்ந்து அனுமானித்து.

இசையில் மிகவும் வல்ல ஏமநாதன் பாணபத்திர னடிமையென்று போந்த ஒருமுதுமகன் பாடலைக்கேட்டு ஓடினான் எனக்கேட்டலால் ஒருபெருவியப்பும், பாணபத்திரர் தம்பகைவனாகிய ஏமநாதனை யாழில்வல்ல ஒரு முதுமகனைக் கொண்டு வென்றாரோவென்று கருததலால் அநுமானமும் அரசன்கொண்டனன் என்பார் வியப்படைந்தனுமானமுற்று என்றார். (௬௧)

தன்னடைந்தவத்தந்திரித்தலைவனைநோக்கி
யென்னவாறவன்போனவாறிங்கினும்போன
பின்னையாதுநீசெய்தனையெனவிசைப்பெருமான்
றென்னர்கோனடிதொழுதுதன்செய்தியைமொழிவான்.

(இ-ள்.) தன் அடைந்த அதந்திரி தலைவனை நோக்கி - தன்பால்வந்த அந்த யாழில்வல்ல பாணபத்திரரைப் பார்த்து, என்ன ஆறு அவன் போன ஆறு - என்ன வகை அவன் சென்றவிதம், இங்கினும் நீ போனபின்னை யாது செய்தனை என-இங்குநின்றும் நீ போனபின்பு என்னசெய்தாயென்று வினவ, இசைப்பெருமான்-இசைநூலில்வல்ல பாணபத்திரர், தென்னர் கோன் அடி தொழுது - பாண்டியர்பெருமானாகிய அவ்வரகுணன் பாதங்களைவணங்கி, தன் செய்தியை மொழிவான் - தம்மிடத்து நிகழ்ந்த செய்தியைச் சொல்லுவாராயினார்.

இன்னுருபு நீக்கப்பொருள்மேல் நின்ற ஐந்தனுருபு. (௬௨)

நென்னல்வாயடியேனினதாணிழனீங்கிப்
பின்னல்வார்சடைமௌலியெம்பிரானடிபணிந்தே
யின்னலார்குறையிரந்துமீண்டிருக்கைபுக்கிருந்தேன்
கன்னலார்மொழிபங்கரென்கனவில்வந்தருளி.

(இ-ள்.) நென்னல் வாய் - நேற்றைப் பொழுதில், அடியேன் நினதாள் நிழல் நீங்கி - அடியேன் உமது திருவடிநிழலினின்றும் நீங்கி, பின்னல் வார் சடை மௌலி எம்பிரான் அடி பணிந்தேன்-பின்னிய நீண்டசடாமகுடத்தையுடைய யெமது பெருமானாகிய சோமசுந்தரக்கடவுள் திருவடியையவணங்கி, இன்னல் ஆர் குறை இரந்து - துன்பமிக்க எனது குறைபாடுகளை யிரந்து, மீண்டு இருக்கை புக்கு இருந்தேன் - (அங்குநின்றும்) திரும்பி யென்வீட்டிற் சென்றிருந்தேன், கன்னல் ஆர் மொழி பங்கர் என் கனவில் வந்தருளி - கருமபின் சுவையையொத்த சொற்களையுடைய உமாதேவியை யிடப்பாகத்திலுடைய அச்சோமசுந்தரக்கடவுள் என்கனவில் வந்தருளி.

அடியவர் குறை முடிப்பவர் சோமசுந்தரக்கடவுளாதலால் அவர்திருவடிக்கீழ் என்குறை யொப்புவித்தேன் என்பார் எமபிரானடிபணிந்தேன் - இன்னலார் குறையிரந்துமீண்டிருக்கைபுக்கிருந்தேன் என்றார "காதலாக்கெய்ப்பினில்வைப்புவாழ்க" எனத் திருவாசகத்தில் வருதல்காண்க. (௬௩)

ஓடியுன்பொருட்டாகநாம்விறகெடுத்துழன்று
வாடிநின்பகைபுறங்கடைவந்துசாதாரி
பாடிவென்றுநின்பகைவனைத்துரந்தனமெனச்சொல்
லாடினார்விழித்தேனிதுநிகழ்ந்ததென்றறைந்தான்.

(இ-ள்.) ஓடி உன் பொருட்டாக-காட்டிற்சென்றுன்நிமித்தமாக, நாம் விறகு எடுத்து உழன்று வாடி-நாம் விறகுசுமையெடுத் துழன்றுவருந்தி,நின் பகை புறங்கடை வந்து-நின்பகைவனாகிய ஏமநாதனுடைய தலைவாயிலில்வந்து,சாதாரி பாடி வென்று - சாதாரிப்பண்பாடி வெற்றிசெய்து, நின் பகைவனை துரந்தனம் என சொல்லாடினார் - உனது பகைவனை யோட்டினோமென்று கூறியருளினார், விழித்தேன்-(அடியேன்)துயிலொழிந்தனன், இது நிகழ்ந்தது என்று அறைந்தான்-இது தானடந்தசெய்தியென்று கூறினார்.

தஞ்சரணடைந்தவர் துயரொழித்தல் அவர்பரமாதலால் ஓடியும்பொருட்டா
க நாம்விறகெடுத்துழன்றுபாடிவென்று நின்பகைவனைத்துறந்தனம் என்றார். பகை-
சொல்லால் அஃறிணையேனும் பொருளால் உயர்திணையாதலால் வருமொழி வல்லெ
ழுத்து இயல்பாய்நின்றது. முன்னம்மடியேனறியாமையினான் முனிந்தென்னைநலிந்
துமுடக்கியிடப் - பின்னையடியேனுமக்காளும்பட்டேன் சுடுகின்றதுசூலைதவிர்த்தரு
ள்வீர் - தன்னையடைந்தார் வினைதீர்ப்பதன்றோதலையா யவர்தங்கடனாவதுதான்-அன்
னநடையார்திகைக்கெடிலவீரட்டானத்துறையம்மானே" என வரும் ஆளுடைய
ரசுகள் தேவாரத்தால் உணர்க. (௯௨)

ஏவன்மைந்தர்போய்விளங்கிவந்திசைத்ததும்வீணைக்
காவலன்கனாநிகழ்ச்சியுமொத்தலிற்கைக்கும்
பூவலங்கலானிஃதுநம்பொன்னகர்க்கூடற்
றேவர்தம்பிரான்றிருவிளையாட்டெனத்தெளிந்தான்.

(இ-ள்.) ஏவல் மைந்தர் போய் விளங்கி வந்து இசைத்ததும் - வேவுகாரர்செ
ன்று தெரிந்துவந்து கூறியசெய்தியும், வீணைக் காவலன் கனா நிகழ்ச்சியும் ஒத்தலி
ல் - வீணையில் வல்ல பாணபத்திரர்கண்ட கனவினிகழ்ச்சியும் தம்முளொத்தலால்,
கைக்கும் பூ அலங்கலான் - வேப்பமலர் மாலையையணிந்த பாண்டியன், இஃது -
இவ்வாறு நிகழ்ந்தது, நம் பொன் நகர் கூடல் தேவர் தம்பிரான் - நமது அழகிய
நகரமாகிய மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளின், திருவிளையாட்டு எ
ன தெளிந்தான் - திருவிளையாட்டேயென்று தெளிந்துணர்ந்தனன்.

இதனால் அநுமானமொழிந்து துணிந்தனன் என்பார் இஃது நம்பொன்னகர்
க்கூடல்தேவர்தம்பிரான் திருவிளையாட்டெனத்தெளிந்தான் என்றார். (௯௩)

இகழ்ந்தகூற்றெறிசேவடிக்கிடையறாநேசந்
திகழ்ந்தபத்திரனன்பையுந்தேவரைக்காப்பா
னகழ்ந்தவாழிநஞ்சுண்டவனருளையும்வியந்து
புகழ்ந்துபோய்மதுராபுரிப்புனிதனைப்பணியா.

(இ-ள்.) இகழ்ந்த கூற்று எறி சேவடிக்கு - அவமதித்தெதிர்ந்த இயமனை யு
தைத்தருளிய செவந்த திருவடிகளுக்கு, இடையறாத நேசம் திகழ்ந்த பத்திரன் அ
ன்பையும் - சிறிதும் நீங்காத சிவநேயத்தால் விளங்கிய பாணபத்திரருடைய பத்தி
மையையும், தேவரை காப்பான் - பிரமன்முதலிய தேவர்களைக் காத்தற்பொருட்டு,
அகழ்ந்த ஆழி நஞ்சு உண்டவன் அருளையும் - (சகரர்) தோண்டிய கடலிற்றோன்றி
ய நஞ்சினையமுது செய்தருளிய பெருமானாது திருவருளையும், வியந்து புகழ்ந்து
போய் - மெச்சிப்புகழ்ந்து சென்று, மதுராபுரி புனிதனை பணியா - மதுரையிலெழு
ந்தருளிய சோமசுந்தரக்கடவுளை வணங்கி.

தன்னையடைந்தோர் துயரொழித்தலில் வல்லது என்பார் இகழ்ந்த கூற்றெ
றி சேவடியெனவும், அச்சேவடிக்கீழ் செலுத்தும் அன்பே எல்லாந்தரவல்லது
என்பார் பத்திரனன்பையும் எனவும், அந்த அன்பு பல பிறவிகளினும் நேர்ந்த சிவ
புண்ணிய முதிர்ச்சியால் வந்ததென்பார் இடையறாநேசம் திகழ்ந்த எனவும், கரு
ணைசமுத்திரம் என்பதற்கு ஈதன்றியொரு காட்டில்லையென்பார் தேவரைக்காப்பான்
அகழ்ந்த ஆழிநஞ்சுண்டவன் எனவும், கொண்ட அன்பால் விளைந்தது என்பார் அரு
ளையும் வியந்து எனவுங்கூறினார். இயமனையுதைத்தும் நஞ்சுண்டது முன்னர்க்கூறி

யிருத்தலால் உணர்க. "அந்தணாளனுன்னடைக்கலம்புகுத வவனைக்காப்பதுகாரண மாக - வந்தகாலன்றனுருயிரதனைவவ்வி னுய்க்குன்றன்வண்மைகண்டடியேன்-எந் தைநீயெனைநமன்றமர்நலியிலிவன்மற் றென்னடியானெனவிலக்கும் - சிந்தையால் வந்துன்றிருவடியடைந்தேன் செழும்பொழிற்றிருப்புன்கூருளானே" எனவரும் ஆ ரூருடைநம்பிகள் தேவாரத்தால் சேவடியின்பெருமையையும், "புல்லாகிப்பூடாய்ப் புழுவாய்மரமாகிப் - பல்விருகமாகிப்பறவையாய்ப்பாம்பாகிக் - கல்லாய்மனிதரா ய்ப்பேயாய்க்கணங்களாய் - வல்லசுரராகிமுனிவராய்த்தேவராய்ச் - செல்லாநின்ற வித்தாவரசங்கமத்துள் - எல்லாப்பிறப்பும்பிறந்திளைத்தே னெம்பெருமான் - மெய் யேயுன்பொன்னடிகள்கண்டின்றுவீடுற்றேன்" எனவரும் திருவாசகத்தால் சிவபுண் ணியமுதிர்ச்சியால் வந்ததென்பதும், "செற்றுலமுயிரனைத்துமுண்டிடவேதிமிர்ந் தெழலுஞ்சிந்தைமேற்கொள் - பற்றுலங்கதுநுகர்ந்துநான்முகனேமுதலோர்தம்பா வைமார்க்குப் - பொற்றாலிதனையளித்தோன்" எனவரும் காந்தத்தால் தேவரைக் காப்பான் நஞ்சுண்டவன் என்பதும், "ஆங்கவனருளாற்பத்திமையுண்டாம் பத்தி யாலவனருளுண்டாம்" என முன்னர்க்காட்டிய செய்யுளால் அன்பால் விளைந்தது அருள் என்பதும் உணர்க. (௬௬)

பத்தர்யாழிசைக்கிழவனைப்பனைக்கைமானெருத்தில்
வைத்துமாடநீணகர்வலஞ்செயவித்துமலர்ந்த
சித்தமாழ்ந்திடவரிசைகண்மிதப்புறச்செய்து
தத்துமான்றொடைத்தேரினான்றன்மனைபுகுவான்.

(இ-ள்.) பத்தர் யாழ் இசைக்கிழவனை - பத்தரமைந்த வீணையில்வல்ல பா ணபத்திரனை, பனைக்கை மான் எருத்தில் வைத்து - பனந்துண்டை யொத்த துதிக் கையையுடைய யானையின் பிடரின்மேல் வைத்து, மாடம் நீள் நகர் வலம் செய்வி த்து - உபரிகைகணிறைந்த மதுரைநகரினைப் பிரதக்ஷிணம் செய்வித்து, மலர்ந்த சி த்தம் மாழ்ந்திட வரிசைகள் மிதப்புற செய்து - சிவநேயத்தில் மலிந்த அவரது ம னமுமயங்கப் பல வரிசைகளையும் வெறுக்கக்கொடுத்து, தத்துமான் தொடை தேரி னான் தன்மனை புகுவான்-தாவிச்செல்லுங் குதிரையைப்பூட்டிய தேரையுடைய வர குணபாண்டியன் தனது கோயிலுக்குச் செல்லுவோன். (௬௭)

தேவருந்தவமுனிவருந்தேவரிற்சிறந்தோர்
யாவருந்தமக்காட்செயவிருப்பவரிருதா
ளோவவந்துமக்காட்செய்துநுங்குறைமுடித்தா
ராவரேனுமக்கனைவருமேவலரன்றே.

(இ-ள்.) தேவரும் தவமுனிவரும் - தேவரும் தவத்தையுடையமுனிவர்களு ம், தேவரில் சிறந்தோர் யாவரும் - தேவருட் சிறந்த பிரமன் முதலிய எல்லோரும், தமக்கு ஆள் செய இருப்பவர் - தமது குற்றேவல்செய்ய இருக்கும் பெருமானார், இ ரு தாள் நோவ வந்து உமக்கு ஆள் செய்து நும் குறை முடித்தார் ஆவரேல் - தமது இரண்டுதிருவடிகளும் வருந்த வந்து உமக்கு அடிமைசெய்து உமது குறைபாட்டை யொழித்தருளுவராயில், உமக்கு அனைவரும் ஏவலர் அன்றே - உமக்கு அத்தேவர் முதலிய எல்லோரும் குற்றேவல்செய்யும் ஏவன்மக்களல்லவோ.

தேவர்முதலியோர் தத்தம் அதிகாரத்தில் மேம்படக் குற்றேவல்செய்து வ ழிபடநிற்கும் இறைவர் என்பான் தேவருந்தவமுனிவருந் தேவருட்சிறந்தோர் யாவ

ருந்தமக்காட்செயவிருப்பவர் எனவும், அவரே திருவடிகள்நோவ விறகுசுமந்து பத்திரனடிமையென்று உமது குறைமுடிப்பாராயின் பிரமன்முதல் பிபீலிகாந்தங்காறுமுமகசேவல்செய்யும் பசுக்களன்றோ என்பான் உமக்கனைவரும் ஏவலரன்றோ எனவுங்கூறினான் "வாழ்த்துவதும்வானவர்கடாம்வாழ்வான்மனநின்பால் - தாழ்த்துவதுந்தாமுயர்ந்துதம்மையெல்லாந்தொழவேண்டி" எனவருந் திருவாசகத்தால் யாவருந்தமக்காட்செயவிருப்பவர் என்பதுணர்க. (௬௮)

ஆதலாலெனக்குடையர்நீருமக்குநானடியே
னீதலாலெனக்கும்மொடுவழக்குவேறிலைநா
னோதலாவதோர்குறையுளதின்றுதொட்டுமக்கு
வேதநாதனைப்பாடலேகடனெனவிடுத்தான்.

(இ-ள்.) ஆதலால் எனக்கு உடையர் நீர் - ஆகையாலென்னை யாளாகவுடையவர் நீரே, உமக்கு நான் அடியேன - உமக்கு நானடிமை, ஈது அல்லால் எனக்கு உம்மொடு வேறு வழக்கு இல்லை - இதுவன்றி யெனக்கு உம்மொடு வேறு தொடுவழக்கின்று, நான் ஓதல் ஆவது ஓர் குறை உள்ளது - அடியேன் உம்மிடத்துக்கூறும் ஒரு குறைபாடுள்ளது, (அதாவது) இன்று தொட்டு - இந்நாள் தொட்டு, வேதநாதனை பாடலே உமக்கு கடன் என விடுத்தான் - நான்மறைகளுக்கும் இறைவனாகிய சோமசுந்தரக்கடவுளைப் பாடுதலே யுமக்குக் கடமையென அனுப்பினான்.

நீர் ஆண்டானும் நானடிமையும் ஆதலால் என்பால்வந்து பாடுதல் தவிர்க என்பான் ஈதலாலெனக்கும்மொடு வழக்குவேறிலையெனவும், உமதிறைவன்பாற் சென்று பாடுதலே யுமதுகடப்பாடென்பான் ஓதலாவதோர் குறையுளதெனவுங் கூறினான். (௬௯)

அரசனல்கியவெறுக்கைபூணாடைகள்பிறவும்
பரசுநாவலர்மாணவர்யாவர்க்கும்பகிர்ந்து
வரிசையாலிசைக்கிளையொடுமனையில்வந்தெய்திக்
கரைசெயாமகிழ்சிறந்திசைக்காவலனிருந்தான்.

(இ-ள்.) அரசன் நல்கிய வெறுக்கை பூண் ஆடைகள் பிறவும் - வரகுணபாண்டியன் கொடுத்த திரவியமும் ஆபரணமும் ஆடைகளும் அவையொழிந்த மற்றுள்ளனவுமாகிய பொருள்களையும், பரசு நாவலர் மாணவர் யாவர்க்கும் பகிர்ந்து - தம்மை வணங்கும் கவிஞரும் இசை கற்கு மாணாக்கர்களுமாகிய எவர்க்கும் அவற்றைப் பங்கிட்டுக்கொடுத்து, வரிசையால் - (அரசன்செய்த) வரிசையோடு, இசைக்கிளையொடு மனையில் வந்து எய்தி - (சூழ்ந்த) இசைநூல்வல்லாரோடு தம் வீட்டில் வந்தடைந்து, கரை செய்யாத மகிழ்சிறந்து - அளவிடற்கரிய மகிழ்ச்சிகூர்ந்து, இசை காவலன் இருந்தான் - இசைநூலில்வல்ல பாணபத்திரர் இருந்தனர்.

உயிர்ச்சார்பும் பொருட்சார்புமாகிய பற்றொழிந்தவராதலால் யாவர்க்கும் பகிர்ந்து எனவும், சிவபெருமானடியவர்பாற்கொண்ட திருவருளை யுள்ளுந்தோறும் ஆராமகிழ்ச்சி மீக்கூர்தலால கரைசெயாமகிழ்சிறந்து எனவுங்கூறினார். (௭0)

விறகுவிற்றபடலம் முற்றிற்று.

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - ௨௪00.

திருமுகங்கொடுத்ததிருவிளையாடல்.



நாற்பத்திரண்டாவது

# திருமுகங்கொடுத்தபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

முன்னவன்மதுரைமூதூர்முழுமுதலிசைவலானை
யின்னிசைபாடிவென்றதென்னுரைசெய்கேனந்தத்
தென்னவன்சேரன்மாடேதிருமுகங்கொடுத்துப்பாணர்
மன்னவன்றனக்குச்செம்பொன்வழங்கியவழக்கஞ்சொல்வாம்.

(இ-ள்.) முன்னவன் - (அயன்முதலியஎல்லாத்தேவர்கட்கும்) மூத்தவனும், மதுரை மூது ஊர் முழு முதல் - மதுரையென்னுந் தொன்றுதொட்டுள்ள திருநகரில்வசிக்குந் தனிமுதல்வனுமாகிய சோமசுந்தரக்கடவுள், இசை வல்லானை இன் இசை பாடி வென்றது - (வடபுலத்துநின்றும் போந்த) இசைநூலில்வல்ல ஏமநாதனை இனியதேவகாந்தருவம்பாடி வென்ற திருவிளையாடலை, என் உரை செய்கேன் - (அடியேன்) எவ்வாறெடுத்துக்கூறி முடிப்பேன், அந்த தென்னவன் - அந்தப்பாண்டியர்திருக்கோலங்கொண்ட இறைவன், சேரன் மாடு திருமுகம் கொடுத்து - சேரமான் பெருமானார்க்குத் திருமுகங்கொடுத்தருளி, பாணர் மன்னவன் தனக்கு - பாணர்பெருமானார்க்கு, செம் பொன் வழங்கிய வழக்கம் சொல்வாம் - செம்பொனருளிய திருவிளையாடலை யினியெடுத்துக் கூறுவேம். (க)

இனிமதியெமக்கீதென்றுயாழ்வல்லோனன்றுதொட்டுப்
பனிமதிமருமான்கோயிற்பாணிசைக்கிழமைநீத்துக்
குனிமதிமிலைந்தநாதன்கோயின்முப்போதுமெய்திக்
கனிமதியன்பிற்பாடுங்கடப்பாடுநியமம்பூண்டான்.

(இ-ள்.) யாழ் வல்லோன் - யாழில்வல்ல பாணபத்திரர், ஈது இனி எமக்கு மதி என்று - இப்பணி இனி யெமக்கு நல்லறிவு கொளுத்துமென்று, அன்று தொட்டு - அந்நாள் தொட்டு, பனி மதி மருமான் கோயில் பாண் இசைக்கிழமை நீத்து - குளிர்ந்த சந்திரன் மரபில்வந்த பாண்டியனது கோயிலில் (நாள்தோறுஞ் சென்று பாடும்) இசைப்பாடலுரிமையை யொழித்து, குனி மதி மிலைந்தநாதன் கோயில் முப்போதும் எய்தி - வளைந்த பிறையையணிந்த சோமசுந்தரக்கடவுள் திருக்கோயிலைக் காலைமுதலிய மூன்றுபொழுதும் சென்றடைந்து, மதி கனிந்த அன்பில் - தம் மனத்திற் கனிந்த அன்பின் முதிர்ச்சியால், பாடும் கடப்பாடு நியமம் பூண்டான் - பாடும் கடமையாகிய நியமத்தை மேற்கொண்டனர். (உ)

இத்தொழிலன்றிவேறுதொழிலிவற்கின்மையாலே
பத்திரனிலம்பாடெய்தப்பொறுப்பரோபழனக்கூடற்
சித்தவெம்மடிகள்வேந்தன்பொன்னறைசெல்வம்வெளவிப்
பத்தர்யாழிடத்தோளேந்திப்பாடுவான்காணவைப்பார்.

(இ-ள்.) இ தொழில் அன்றி வேறு தொழில் இவற்கு இன்மையால் - இப்பணியன்றி வேறுபணி யிவர்க்கில்லாமையால், பத்திரன் இலம் பாடு எய்த - பாணபத்திரர் (வருவாயின்மையின்) வறுமையடைய, பழனம் கூடல் சித்த எம் அடிகள் பொறுப்பரோ - வயல்சூழ்ந்த மதுரையிலெழுந்தருளிய சித்தமூர்த்திகளாகிய எ

மதூ அடிகள் ஏற்றுவரோ, வேந்தன் பொன் அறை செல்வம் வெளவி-அரசனுடைய கருவூலத்திலுள்ள பொருள்களை(ஒருவருமுணராவண்ணம்) கவர்ந்து,பத்தர் யாழ் இடத்தோள் ஏந்தி பாடுவான் காண வைப்பார் - பத்தரமைந்த வீணையை யிடத்தோளி லேந்திப்பாடும் பாணபத்திரர்காண (நாள்தோறும்) வைத்தருளுவார்.

இன்மைபடுதல் இலம்பாடு என நின்றது. சிவபிரானூர் திருமுன்னரன்றிப் பாடும் பணிவேறின்மையால் வருவாயின்றென்பார் வேறுதொழி லிவற்கின்மையாலே பத்திரனிலம்பாடெய்த எனவும், அடியவர்குறை முடிப்பது அவர் பரம் என்பார் பொறுப்பரோ எனவும், பாண்டியனுணராது கவர்ந்தனர் என்பார் வேந்தன் பொன்னறைச்செல்வம் வெளவி யெனவும், அன்றன்றுள்ள குறைமுடிப்பான் நல்கி வந்தனர் என்பார் பாடுவான் காணவைப்பார் எனவுங் கூறினூர். (௩)

சிலபொலங்காசுசின்னுண்மணிக்கலன்சின்னுள்செம்பொற்
கலைவகைசின்னுளம்பொற்சாமரைக்காம்புசின்னு
ளலர்கதிரரிமான்சேக்கையாடகத்தகடுசின்னுள்
குலமணிவருக்கஞ்சின்னுள்கொடுத்திடக்கொண்டுபோவான்.

(இ-ள்.) சில் நாள் சில பொலங்காசு-சிலநாள் சில பொற்காசும், சில் நாள் மணிக்கலன்-சிலநாள் இரத்திநமழுத்திய ஆபரணமும், சில் நாள் செம்பொற்கலை வகை-சிலநாள் பீதாம்பரமும், சில் நாள் அம்பொன் சாமரைக் காம்பு-சிலநாள் அழகிய பொன்வேய்ந்த சாமரையின் காம்பும், சில் நாள் அலர் கதிர் அரி மான் சேக்கை ஆடகம் தகடு - சிலநாள் பரந்த ஒளிவாய்ந்த சிம்மாசனத்தில் வேய்ந்த பொற்றகடும், சில் நாள் மணிக்குல வருக்கம் - சிலநாளிரத்திநக்கூட்டங்களும், கொடுத்திட கொண்டு போவான் - கொடுத்தருளக்கொண்டு போவாராயினூர்.

ஒருபொருளிலேயே நாடோறுங் கொடுத்துவரில் அது குன்றிக்கரவு வெளிப்படுமெனத் திருவுளங் கொண்டருளினர் என்பார். சில பொலங்காசு சின்னுள் குலமணிவருக்கஞ் சின்னுள் கொடுத்திட என்றூர். (௪)

கைவரும்பொருளைத்தந்தகள்வருந்தானுமன்றி
யெவ்வெவர்தமக்குந்தோற்றுதெரியிலிட்டழித்துஞ்சின்னஞ்
செய்வனசெய்துந்தன்னைச்சேர்ந்தவரிரந்தோர்கைபார்த்
துய்பவர்பிறர்க்குமாறுதுதவியுட்கவலைதீர்ப்பான்.

(இ-ள்.) கை வரும் பொருளை - தமது கையிற்கிட்டிய பொருள்களை, தந்த கள் வரும் தானும் அன்றி - தந்தருளிய கள்வரும் தாமுமன்றி, எவ்வெவர் தமக்கும் தோற்று - யாவர்க்கும் புலப்படாமல், எரியில் இட்டு அழித்தும் - நெருப்பிலிட்டுருக்கியும், சின்னம் செய்வன செய்தும் - உருவேறு படுத்தும் பொருள்களை யுருவேறுபடுத்தியும், தன்னை சேர்ந்தவர் இரந்தோர் கைபார்த்து உய்பவர் பிறர்க்கும் மாறுது உதவி - தம்மை யடைந்தவரும் தம்பாலிரப்பவரும் தமது கைவரவைப்பார்த்துப் பிழைப்பவரும் இவரொழிந்த பிறருமாகிய எவர்க்கும் வரையாது கொடுத்து, உள் கவலை தீர்ப்பான் - மனக்கவலையை யொழித்துவருவார்.

சிவபெருமான் நல்கிவந்த பொருள்கள் பாண்டியன் பொருள்களாதலா லவனுணர்ந்தால் ஐயுறுவானேயென்னுங் கருத்தால் வேறுபடுத்தினராதலின் கள்வருந் தானுமன்றி யெவ்வெவர் தமக்குந் தோற்றுதெரியிலிட் டழித்துஞ் சின்னஞ்செய்வன செய்தும் என்றூர். (௫)

வைகலுங்கொடுப்போர்பின்னாண்மறுத்தனராகப்போய்ப்போய்க்
கைதொழுதிறைஞ்சிவாளாவருமவன்கலியின்மூழ்கி
யுய்வகைவேறுகாணாதொக்கலுமொக்கவாடிக்
கையறவடையநோனாதுறங்கினான்கனவினெல்லை.

(இ-ள்.) வைகலும் கொடுப்போர் - நாள்தோறுங் கொடுத்துவரும் பெருமானார், பின் நாள் மறுத்தனராக - வருநாளில் மறுக்க, போய் போய் கைதொழுது இறைஞ்சிவாளாவருமவன் - (நாள்தோறுஞ்) சென்று சென்று கைகூப்பிவணங்கி யிசைபாடி ஒன்றும் பெறாதுவரும் பாணபத்திரர், கலியில் மூழ்கி - வறுமையிலழுந்தி, உய் வகை வேறு காணாது - பிழைக்கும் வகைவேறொன்று முணராது, ஒக்கலும் ஒக்க வாடி - தமது சுற்றத்தோடு மொருசேர வாடி, கையறவு அடைய - துன்பமிக, நோனாது உறங்கினான் - அதற்கு ஆற்றாதுகண்டுயில் கூர்ந்தார், கனவின்எல்லை - (அவர்) சொப்பனத்தில்.

உதவுவோர் மறுக்கில் உய்வகைவேறின்மையால் உய்வகைவேறு காணாதென்றார். (௬)

சித்தவெம்பெருமான்வந்துசெப்புவானப்பாநிம்பத்
தொத்தவன்கோசந்தன்னிற்றும்பியுண்கனியின்வெளவி
யித்தனமின்றுகாறுமீந்தனமெம்பாலன்பு
வைத்தவனறிந்தாற்சங்கைமனத்தனாய்விகற்பங்கொள்வான்.

(இ-ள்.) சித்த எம் பெருமான் வந்து செப்புவான் - சித்தமூர்த்திகளா யெமது பெருமானார் வந்துகூறுவார், அப்பா - அப்பனே, நிம்பம் தொத்தவன் கோசந்தன்னில் - வேப்பமலர் மாலையையணிந்த பாண்டியனுடைய கருவூலத்தில், தும்பி உண் கனியின் வெளவி - யானை நோயுண்ட விளாங்கனியிலுள் ளீடின்மைபோலக் கருவூலம் வறப்ப அதிலுள்ள பொருளைக் கவர்ந்து, இதனம் இன்று காறும் ஈந்தனம் - இப்பொருளையிந்நாள்காறுங் கொடுத்து வந்தனம், எம்பால் அன்பு வைத்தவன் அறிந்தால் - எம்மிடத்து நின்போ லன்புவைத்த வரகுணபாண்டியனுணர்ந்தால், சங்கை மனத்தன் ஆய் விகற்பம் கொள்வான் - ஆசங்கைகொண்ட மனமுடையவனாய் வேறுபாடுகொள்வான்.

யானை நோய்விழுந்த விளங்கனி கனிபோலப் பிறர்க்குப் புலப்பட்டுள்ளீடில்லாதிருத்தல்போலக் கருவூலம் சேமித்தகபன் முத்திரையோடும் பிறர்க்குப் புலப்பட்டு உள்ளிருந்ததனம் சிறிதுமின்றி வறிதாகக் கவர்ந்தோம் என்பார் கோசந்தன்னிற்றும்பியுண்கனியின் வெளவி இத்தனமின்றுகாறு மீந்தனம் எனவும், வரகுண பாண்டியன் உன்னைப்போல எம்மிடத்துக் குறைபடாத நேயமுடையவன் என்பார் எம்பா லன்புவைத்தவன் எனவும், அவனுணர்ந்தால் எமது இறைவர்பொருளைக் கவர்ந்தனர் யாரோ என்செய்கேன் எனப் பெருந்துயருறுவான் அது கண்டு யாம் ஆற்றேம் நின் துயர் களைந்ததுபோல அவன் துயர்களையவரும் என்பார் அறிந்தாற் சங்கைகொண் மனத்தனாய் விகற்பங்கொள்வான் எனவும் அருளினார். (௭)

மயலறக்கற்புக்காக்குமகளிர்போற்றுறவுகாக்க
முயலும்யோகரிலுட்காப்புமுரசெறிபுறஞ்சூழ்காப்புங்
கயவிலச்சினையுநிற்கக்கவர்ந்ததற்புதமிக்கள்வ
னுயிர்தொறுமொளித்தகள்வனொருவனேவறியேனென்பான்,

(இ-ள்.) மயல் அற கற்பு காக்கும் மகளிர் போல் - மயக்கமறக் கற்பினைக் காக்குங் கற்புடைமகளிர் போலவும், துறவு காக்க முயலும் யோகரில் - துறவறத்தைக் காக்க முயலுஞ் சிவயோகிகளைப்போலவும், உள் காப்பும் - நின்றநிலைபெயராத அகக்காவலும், முரசு எறி புறம் சூழ் காப்பும் - முரசெறிந்து புறஞ்சூழ்ந்து வரும் புறக்காப்பும், கயல் இலச்சினையும் நிற்க - இட்டகயலிலச்சினையிட்டபடியே யாயுமிருக்க, கவர்ந்தது அற்புதம்-(கருவூலத்து இருந்த பொருளை) வௌவியது பெருவியப்பு (நினைக்கில்) இகள்வன் - இந்தக்கள்வன், உயிர் தொறும் ஒளித்த கள்வன் ஒருவனோ - உயிர்கள்தோறுந் தன்னிலை தோன்றாதொளித்த கள்வனாகிய இறைவனோ, அறியேன் என்பான் - நானறியேனென்று கூறிஐயுறுவான.

கற்புடைமகளிர் தமது கற்பைக்காத்தற்கின்றியமையாத நாணம்,மடம், அச்சம்,பயிர்ப்பு என்னும் நாற்குணங்களையும் ஒருங்கேயுடைமையும், துறவினர்தாங்கொண்ட துறவைக்காத்தற்குவிட்ட பாசத்தொடக்குவாதலை மீட்டும வந்து தாக்காமல் பொறிவாயிலாகச்செல்லு மனத்தைத் தம வசப்படுத்துதைக்குக் குருலிங்கசங்கமங்களை வழிபடுகைமுதலிய சற்காரியங்களை யொருங்கே யுடைமையும் அவர்கட்கு உட்காப்பு ஆதல்போல, வில்வாள்முதலிய படைக்கலங்களை யேந்தி யிமைகொட்டாது நின்ற நிலைபெயராதுகாக்கும் திண்ணியவீரர் காப்புஎன்பார் உட்காப்பு எனவும், பறையறைந்து புறஞ்சூழ்ந்து திரியுங் காப்புஎன்பார் முரசெறிபுறஞ்சூழ் காப்புஎனவும், இருவகைக்காப்பும் அன்றிஇட்ட இலச்சினை இட்டவாறே யிருக்கக் கருவூலத்திருந்த பொருளைக் கவர்ந்தவன் உயிர்க்குயிராய் நின்றாட்டும் இறைவனோஎன ஆசங்கை கொள்வான் என்பார் இக்கள்வனுயிர்தொறு மொளித்த கள்வனொருவனோவறியே னென்பான் எனவுங் கூறியருளினர். (அ)

கோமகனினையசெய்தியறியுமேற்கோசங்காப்போர்க்
காமுறுந்தண்டநின்போலன்பகத்தெம்மைவைத்த
தேமருபோந்தின்கண்ணிச்சேரமான்றனக்கிப்போது
நாமொருமுடங்கறிட்டிநல்குவம்போதியென்று.

(இ-ள்.) கோமகன் இனைய செய்தி அறியுமேல் - பாண்டியனிச்செய்தியை யுணர்வானாயில், கோசம் காப்போர்க்கு தண்டம் ஆமுறும் - கருவூலங் காப்பவர்க்குத் தண்டனையுண்டாம், நின்போல் - உன்னைப்போல, அன்பு அகத்து எம்மை வைத்த - அன்பால் தம்மனத்திலென்றும் எம்மை நீங்காதுவைத்த, தேம் உறு போந்தின் கண்ணி சேரமான் தனக்கு - தேன்மிக்க பனமாலையையணிந்த சேரமான்பெருமாளாகிய கழறிற்றறிவார் நாயனார்க்கு, இ போது நாம் ஒரு முடங்கல் தீட்டி நல்குவம்போதி என்று - இன்று நாமோரோலைவரைந்து கொடுப்போம்போவாயென்று.

அன்பேதாமாயிருத்தலால் அகத்தெம்மைவைத்த என்றார். சேரர்குலத்தவரித்து அரசியல் வெறுத்துத் திருவஞ்சைக்களத்திற்சென்று சிவபிரான் திருவடிக்கன்புபூண்டொழுகியும், தமது பிதா அரசியல்துறந்து தவஞ்செய்ய வனத்திற்குச்சென்றகாலையில் அமைச்சர் முதலியோர் வந்து குறையிரப்பச் சிவபெருமான் அனுஞையால் முடிசூடியும், சிவபெருமான் திருமுன்னர்ச்சென்று வணங்கி யானைமேல் பிரதக்ஷிணம் வருங்காலையில் தான் கொண்டுவந்த உவர்மண்-மழையால் நனைந்து தேகமுற்று மொழுகி யுலர்ந்ததால் வெண்ணிறம்வாய்ந்த ஓர் ஈர்ங்கொல்லி தம்மெதிர் வரக்கண்டு சிவனடியரென்று யானையைவிட்டிழிந்து வணங்க, அவ்வீர்ங்கொல்லி ப

தைந்நூக்கண்டுமதிகலங்கியெதிர்வணங்கி யடியேன் அடிவண்ணூனென்றுகூற, அடியேன் அடிச்சேரன் திருநீற்றுத்திருவேடத்தை நினைப்பித்தீர்வருந்தாது சென்மினெனமொழிந்தும், நடராசப்பெருமான் திருவடிக்கு வழிபட்டு நாடோறும் அர்ச்சித்துத்திருச்சிலம்பொலிகேட்டு வகைகூர்ந்துவருங்காலையில் ஒருகால் அத்திருச்சிலம்பொலி தாழ்ப்ப, யாது தவறு திருவடிக்கிழைத்தேனோ வென்று உயிர்விட உடைவாளுருவித் தமது மார்பினூட்டியும் மெய்யன்பிற் றலைப்பட்டு நின்றமையால் நின்போலன்பகத் தெம்மைவைத்த - தேமுறுபோர்த்தின் கண்ணிச் சேரமான் எனவுங் கூறியருளினர். "மண்மேற் சைவநெறி வாழவளர்த்து முன்னை வழியன்பாற் - கண்மேல்விளங்கு நெற்றியினார் கழலேபேணுங் கருத்தினராய் - உண்மேவிய அன்பினராகி யுரிமை யரசர் தொழில்புரியார் - தெண்ணீர்முடியார் திருவஞ்சைக்களத்திற் றிருத்தொண்டே புரிவார்" எனவும், வந்த மரபினரசளிப்பான் வளைஞ்சார் தவத்தின் மருவியபின் - சிந்தைமதிநூறே ரமைச்சர் சிலநாளாய்ந்து தெளிந்தநெறி - முந்தை மரபின் முதல்வர் திருத்தொண்டு முயல்வார் மூதற்குக-இந்துமுடியார் திருவஞ்சைக்களத்திலவர்பா லெய்தினார், எய்தியவர் தம்மெதிரிறைஞ்சி யிருந்தண் சாரன்மலைநாட்டுச் - செய்திமுறைமையா லுரிமைச் செங்கோலரசுபுரிவதற்கு - மைதீர்நெறியின்முடி சூடியருளு மரபால்வந்ததெனப் - பொய்தீர்வாய்மை மந்திரிகள்போற்றிப் புகன்றபொழுதின்கண், இன்பம் பெருகுந் திருத்தொண்டுக் கிடையூறாக விவர் மொழிந்தார் - அன்புநிலை மெய்வழுவாமை யரசுபுரக்க மருளுண்டேல் - என்புமரவும் புனைந்தாரை விடைபெற்றறிவே னெனப்புக்கு - முன்பு தொழுது விண்ணப்பஞ்செய்தார் முதல்வாருளினால் எனவும், தம்பிரானார் கோயில்வலங்கொண்டு திருமுன்றுழ்ந்தெழுந்து - குமபயானைமேல் கொண்டுகொற்றக் குடையுஞ் சாமரையும் - நம்புமுரிமையவர் தாங்க நலங்கொண்டார் சூழ்வலங் கொள்வார் - மொய்ம்பிலுவரின் பொதிசுமந்தோர் வண்ணான்முன்னே வரக்கண்டார், மழையிற்கணாந் தங்குவருமேனிவெளுத்த வடிவினால் - உழையிற்பொலிந்த திருக்கரத்தாரடியார் வேடமென்றுணர்ந்தே - இழையிற்செறிந்த வோடைநுதல் யானைக்கழுத்தினின்றிழிந்து - விழைவிற்பெருகுங் காதலினால் விரைந்துசென்று கைதொழுதார், சேரர்பெருமான் றொழக்கண்டு சிந்தைமயங்கி முன்வணங்கி - யாரொன்றடியேனைகொண்டதடியேனடிவண்ணானென்னச் - சேரர்பிரானுமடிச் சேரனடியேனென்று திருநீற்றின் - வாரவேட நினைப்பித்தீர் வருந்தாதேகுமெனமொழிந்தார் எனவும், நீடுமுரிமைப்பேரரசாளிகழும் பயனுநிறைதவமும் - தேடும்பொருளும் பெருந்துணையுந் தில்லைச்சிற்றம்பலத்துள் - ஆடுங்கழலேயெனத் தெளிந்த வறிவாலெடுத்த திருப்பாதங் - கூடுமன்பினர்ச்சனைமேற் கொண்டார் சேரர்குலப்பெருமான், வாசத்திருமஞ்சனம்பள்ளித்தாமம் சாந்தமணித்தூபம் - தேசிற்பெருகுஞ் செழுந்தீப முதலாயினவுந் திருவமுதும் - ஈசர்க்கேற்ற பரிசினாலர்ச்சித் தருளவென்னாளும் - பூசைக்கமர்ந்த பெருங்கூத்தர்பொற்பார் சிலம்பினொலியளித்தார், வானக்கங்கைநதிபொதிந்த மல்குசடையார் வழிபாட்டுத் - தூநறசிறப்பினர்ச்சனையாந் தொண்டுபுரிவார் தமக்கொருநாட் - டேனக்கலர்ந்த கொன்றையினாராடற்சிலம்பினொலி முன்போல் - மானப்பூசை முடிவின்கட் கேளாதொழிய மதிமயங்கி, பூசைகடிது முடித்தடியேனென்னோபிழைத்த தெனப்பொருமி - யாவையும்பூன் மற்றினி வேறடையு மின்பமியாதென்று - தேசின்விளங்குமுடை வாளையுருவித் திருமார்பினிலூட்ட - ஈசர்விரைந்து திருச்சிலம்பி னோசைமிகவு மிசைப்பித்தார்" எனவும் கழறிற்றறிவார் நாயனார்புராணத்தில் வருதல் காண்க. (௯)

மறைக்குரைசெய்தவாக்கான்மதிமலிபுரிசையென்னுஞ்
சிறப்பியல்சீர்சால்செய்யுட்பாசுரஞ்செப்பித்தீட்டிப்
பிறைச்சடைப்பெருமானல்கிமறைந்தனன்பெரும்பாண்செல்வ
னுறக்கநீத்தாடிப்பாடியுவகைமாகடலிலாழ்ந்தான்.

(இ-ள்.) மறைக்கு உரை செய்த வாக்கால்-வேதத்திற்குப் பொருள்கூறியருளிய திருவாக்கினால், மதி மலி புரிசைஎன்னும் சிறப்பியல் சீர் சால் செய்யுள் பாசுரம் செப்பி தீட்டி-"மதி மலி புரிசை" என்னும் சிறப்புமிக்கசீர் அமைந்த செய்யுளாகிய திருப்பாசுரமொன்று திருவாய்மலர்ந்து வரைந்தருளி, பிறை சடை பெருமான் நல்கி மறைந்தனன்-பிறையையணிந்த சடையையுடைய பெருமானார் கொடுத்து மறைந்தருளினார், பெரும் பாண் செல்வன் உறக்கம் நீத்து ஆடி பாடி-பெரிய பண்பாடுதலில் வல்ல பத்திரர் துயிலினின்று மெழுந்து - (ஆநந்தமேலீட்டால்) ஆடியும் பாடியும், உவகை மாகடலில் ஆழ்ந்தான் - மகிழ்ச்சியென்னும் பெரியகடலி லழுந்தினார்.

"மதிமலிபுரிசை மாடக்கூடற் - பதிமிசை நிலவும் பானிறவரிச்சிறை - அன்னம்பயில் பொழிலாலவாயின் - மன்னிய சிவன்யா மொழிதருமாற்றம் - பருவக்கொண் மூப்படியெனப் பாவலர்க் - குரிமையினுரிமையி னுதவியொளிதிகழ் - செருமாவுகைக்குஞ் சேரலன்காண்க - பண்பால் யாழ்வல்ல பாணபத்திரன் - தன் போலெம்பாலன்பன் றன்பால் - காண்பது கருதிப் போந்தனன் - மாண்பொருள் கொடுத்துவர விடுப்பதுவே" சோமசுந்தரக்கடவுள் திருவாய்மலர்ந்தருளிய திருப்பாசுரம். சொல்லமைதியும் பொருளமைதியுமுட்டின்றி நிறைந்துள்ளதென்பார் சிறப்பியல் எனவும், செய்யுளின்பங் குறைபாடிலதென்பார் சீர் சால் எனவும், தேவர் கோமான் திருவாக்காதலினத னெல்லையில் பெருமைதம்மால் விதத்தலரிதென்பார் செய்யுள் என்றமையாது பாசுரம் எனவுங் கூறினார். மதி மலி புரிசை - சிற்பநூல்வல்லோர் நுண்ணுணர்வின் வரம்புகடந்த மதில்சூழ்ந்த, மாடக்கூடல்பதி - நான்மாடக்கூடல் என்னுந் திருநகரமாகிய, மிசைநிலவும்பால் நிறம்வரிசிறை - மேலே பறந்துலவும் வெள்ளியநிறமும் தூவியின் வரிகளுமமைந்த சிறையையுடைய, அன்னம்பயில்பொழில் - அன்னங்கள் சஞ்சரிக்குஞ் சோலைசூழ்ந்த திருவாலவாயிலில் மன்னியசிவன்யாம் - என்றுமுள்ள சிவன் - யாம், மொழிதருமாற்றம் - கூறியருளுமணிவார்த்தை, பருவம் கொண்மூ படி என் - கார்கால மேகம்போல, பாவலர்க்கு - நாற்கவிகளில் வல்லுநர்க்கு, உரிமையின் உரிமையின் உதவி - தனதுரிமையினின்று அவர்களுக்குரிமைப்பட வுதவி, ஒளி திகழ் செருமாஉகைக்கும் - தேவமணி முதலிய இலக்கணங்களால் ஒளிவாய்ந்து விளங்கிப் பகைவர் போர்முனையில் அஞ்சாது பாய்ந்துசெல்லுங் குதிரையைச் செலுத்தும், சேரலன் காண்க - சேரமான் எதிர்கொண்டு காண்க, பண்பால் யாழ்வல்ல பாணபத்திரன் - இசைத்தொழிற் பண்பால் யாழ் வாசித்தலில் வல்ல பாணபத்திரன், தன்போல் எம்பால் அன்பன் - தன்னைப்போல எம்மிடத்தி லன்புமிக்கோன், தன்பால் காண்பது கருதிபோந்தனன் - தன்னைக் காணக் கருதிவந்தனன், மாண் பொருள் கொடுத்து வர விடுப்பது - அறத்தின் வழியீட்டிய பொருள்கொடுத்து என்னிடத்து வரவிடுக்க. என்பது பதப்பொருள். ஒவ்வொருகால் தம்மாலியைந்த திருநாமங்களையுடைய திருப்பதி என்பார் மாடக்கூடல் ஆலவாய் எனவும், யாம் என்றுந் தோற்றக் கேடுகளிலம் என்பார் மன்னிய எனவும், நம்மால் வரையாதுகொடுக்கும் வள்ளன்மையையும் பகைமுகத் தஞ்சாதுசெல்லும் வீரத்தையும் உடையையென்பார் பருவக்கொண்மூப்படியெனப் பாவலர்க்குரிமையினுரிமையினுதவி எனவும், செருமாவுகைக்குஞ்சேரலன் எனவும்,

பண்முறைவழாதுபாடுதலில்வல்லோன் என்பார்பண்பால்யாழ்வல்ல எனவும்,பேரன்பில்மிக்கோய் என்னும் உயர்வுதோன்ற முன்னிலைப்பொருள்படப் படர்க்கையையுபசரித்துத்.தன்போல் எனவும், தமது அனுஞையால் வந்தனன் என்பார் காண்பது கருதிப்போந்தனன் எனவும், அறத்தின்வழியீட்டியநிகரில் பொருள் என்பார் மாண்பொருள் எனவும், அவனிடத்து என்றும் இசைகேட்கும் விருப்புடையோம் என்பார் வியங்கோட்பொருள்பட வரவிடுப்பதுவே எனவுங் கூறினார். "மேவுமுரிமையரசளித்தேவிரும்பு காதல்வழிபாடும் - யாவும்யாருங் கழறினவுமறியு முணர்வுமீறிலாத் - தாவில்விறலுந் தண்டாதகொடையும் படைவாகனமுதலாங் - காவன்மன்னர்க்குரியனவுமெல்லாங் கைவந்துறப்பெற்றார்" என் ஷை நாயனார்புராணத்தில் வருதல்காண்க. "அதிர் கழலுதியர்வேந்தற்கருள்செய்த பெருமையாலே - எதிரில்செல்வத்துக்கேற்ற விருநிதிகொடுக்கவென்று - மதிமலிபுரிசையென்னும் வாசகம்வரைந்தவாய்மை - கதிரொளிவிரிந்ததோட்டுத் திருமுகங்கொடுத்தார்கான" எனத் திருமுகப்பாசுரம் தந்தருளினமை ஷை புராணத்திலும் காண்க. (௧௦)

கலிவிருத்தம்.

வாங்கியதிருமுகமணிப்பட்டாடையிட்
டாங்கிறையடிபணிந்தகன்றுபத்திர
னோங்கியகோயிலைவலங்கொண்டொல்லென
நீங்கிமேல்வரைப்புலநெறிக்கொண்டேகுவான்.

(இ-ள்.) வாங்கிய திரு முகம் - தாம் வாங்கிய திருமுகத்தை, மணிப் பட்டாடை இட்டு - அழகிய பட்டுடையில்வைத்து, இறை அடி பணிந்து - சித்தமூர்த்திகளாய் வந்தருளிய சோமசுந்தரக்கடவுள் திருவடியைவணங்கி, பத்திரன் ஆங்கு அகன்று - பாணபத்திரர் அங்குநின்றும் நீங்கி, ஓங்கிய கோயிலை வலங் கொண்டு - (விண்ணளவ) ஓங்கிய திருக்கோயிலைப் பிரதக்ஷிணஞ்செய்து. ஒல்லென நீங்கி - விரைந்துநீங்கி, மேல் வரைப்புலம் நெறிக்கொண்டு ஏகுவான் - மேற்றிசைக்கணுள்ள மலைநாட்டின் வழிக்கொண்டு செல்லத்தொடங்கினார்.

சங்கப்புலவருள் முதற்புலவராருளிய திருமுகமாதலால் மணிப்பட்டாடையிட்டெனவும், விரைவிற்செல்க எனக் கட்டளையாதலால் ஒல்லெனநீங்கியெனவுங்கூறினார். "சங்கப்புலவர்திருமுகந்தந்தலைமேற்கொண்டு" எனவும் "வேண்டிற்றெல்லாங்குறைவின்றித் - தரமம்மோலைதருகின்றோந் தாழாதேகிவருகென்று" எனவும் மேற்படி புராணத்தில் வருதல்காண்க. (௧௧)

கொல்லையுங்குறிஞ்சியுங்கொதிக்கும்வெம்பரற்
கல்லதரத்தமுங்கடந்துமுட்புறப்
பல்சுளைக்கனியடியிடறப்பையபைய
நல்வளங்கெழுமலைநாடுநண்ணினான்.

(இ-ள்.) கொல்லையும் குறிஞ்சியும் - முல்லைநிலத்தையுங் குறிஞ்சிநிலத்தையும், கொதிக்கும் வெம் பரல் கல் அதர் அத்தமும் கடந்து - (முறுகிய வெம்மையால்) கொதிக்காநின்ற வெய்யபரற்கல்நிறைந்த வழியையுடைய பாலைநிலத்தையுங் கடந்து, முள் புறம் பல் சுளை கனி அடி இடற - முள்ளைப்புறத்திலுடைய பலசுளைகளமைந்த (மூக்கூழ்த்துவீழ்ந்த) பலாக்கனிகள் தமது காலிலிடற, பைபைய - மெல்லமெல்லச்சென்று, நல் வளம் கெழு மலை நாடு நண்ணினான் - நல்லவளமிக்க மலைநாட்டை யடைந்தனன்.

மழைவளஞ்சிறந்த மலைநாடென்பார் முட்புறப்-பல்சுளைக் கனியடியிடற வென்றார். (௧௨)

அலைகடனெடுந் துகிலந் நாடெனுந்
தலைமகடனக்குவான்றடவுகுன்றுபூண்
முலையெனவிளங்கின முகத்திற்றீட்டிய
திலதமேயானது திருவஞ்சைக்களம்.

(இ-ள்.) அலை கடல் நெடுந் துகில் அந்த நாடு என்னும் தலை மகள் தனக்கு - அலைக்குங் கடலாகிய நெடிய ஆடையையுடுத்த அந்த மலைநாடென்னுந் தலைமகளுக்கு, வான் தடவு குன்று - வானளாவிய மலைகளே, பூண் முலை என விளங்கின - ஆபரணமணிந்த முலைகளைப்போல விளங்கின, முகத்தில் தீட்டிய திலதமே ஆனது - அத்தலைமகள் முகத்திலிட்ட திலதமாக விளங்கியது, திரு அஞ்சைக்களம் - திருவஞ்சைக்களமென்னுந் திருநகரம்.

எல்லாவுறுப்புகளிலும் சிறந்தது முகம் அதனைவிளக்குவது திலதம் ஆதல் போல ஏனைநாடுகளிற்சிறந்தது சேரநாடு என்பார் முகம் எனவும், அந்நாட்டில் சிறந்து பொலிவது திருவஞ்சைக்களம் என்பார் முகத்திற்றீட்டிய திலதமே யானதெனவுங் கூறினார். (௧௩)

அறமகளாக்கமுமலரின்மேயசெந்
நிறமகளாக்கமுநீதிசான்றபோர்
மறமகளாக்கமும்வடசொற்றென்கலைத்
திறமகளாக்கமுஞ்சிறந்தவந்நகர்.

(இ-ள்.) அற மகள் ஆக்கமும்-தருமமாதாலாகிய ஞானச்செல்வமும், அலரில் மேய செந்நிற மகள் ஆக்கமும் - தாமரைமலரில் வசிக்கும் இலட்சுமியாலாகிய பொருட்செல்வமும், நீதி சான்ற போர் மறம் மகள் ஆக்கமும் - நீதியின்வழியமைந்த போர்த்தொழிற்குரிய வீரலக்ஷுமியினாலாகிய பிரதாபச்செல்வமும், வடசொல் தென் கலை திற மகள் ஆக்கமும - ஆரியம் தமிழென்னும் பகுப்பமைந்த கலைமகளாலாகிய கல்விச் செல்வமும், அந்நகர் சிறந்த - அத்திருநகரிற் சிறந்து பொலிந்தன.

ஞானச்செல்வம் தருமத்தாலாதலால் அறமகளாக்கமும் எனவும், அறத்தால்வரும் பொருட்செல்வம் திருமகளாலாதலால் அலரின்மேய செந்நிறமகளாக்கமும் எனவும், பொருளால்வரும் பிரதாபச்செல்வமும் வீரலட்சுமியாலாதலால் நீதிசான்றபோர் மறமகளாக்கமும எனவும், அறமுதலியவற்றைத் தருதல், கல்விச்செல்வமாதலால் வடசொற்றென் கலைத்திறமகளாக்கமும் சிறந்த என்றார். (௧௪)

மண்புகழந்நகர்மறுகின்மாடொரு
தண்புனற்சாலையிற்சார்ந்துளானிப்பால்
விண்புகழ்நீதியவ்வேந்தற்கன்பிராக்
கண்புனைநுதலினார்கனவிற்றோன்றினார்.

(இ-ள்.) மண் புகழ் அந்நகர் மறுகில் மாடு - நிலவுலகு புகழும் அத்திருநகர் வீதியிலுள்ள, ஒரு தண் புனல் சாலையில் சார்ந்துள்ளான் - ஒரு தண்ணியநீர்ப்பந்தலைப் பாணபத்திரரடைந்திருந்தனர், இப்பால் - இப்புறம், விண் புகழ் நீதி அ வேந்தற்கு - விண்ணுலகு புகழுமநு நீதியையுடைய அச்சேரமான்பெருமானார்க்கு, அன்

று இரா - அன்றிரவில், கண் புனை நுதலினூர் கனவில் தோன்றினூர் - நுதற்கண்ணுடைய பெருமானூர் சொப்பனத்தி லெழுந்தருளினூர். (௧௫)

தென்னவன்மதுரையிலிருக்குஞ்சித்தர்யா
நின்னிடைவந்துளேநின்னைக்கண்டுதா
னன்னிதிவேண்டநம்மோலைகொண்டுநம்
மின்னிசைப்பாணபத்திரனிங்கெய்தினூன்.

(இ-ள்.) தென்னவன் மதுரையில் இருக்கும் சித்தர் யாம் - பாண்டியனரசுபுரியு மதுரையிலிருக்கும் சித்தர்நாம், நின் இடை வந்துள்ளேம் - நின்பால் வந்தோம், நின்னை கண்டு தான் நல் நிதி வேண்ட நம் ஓலை கொண்டு - உன்னைக்கண்டு தான் மிக்க பொருளைப் பெற நமது திருமுகங்கொண்டு, நம இன் இசை பாணபத்திரன் இங்கு எய்தினூன் - நம்பாலன்புள்ள இனியஇசையில் வல்ல பாணபத்திரனிங்கு வந்திருக்கின்றனன். (௧௬)

மற்றவற்கருநிதிகொடுத்துமன்னநீ
தெற்றெனவரவிடுகென்றுசித்தர்தாஞ்
சொற்றனர்போயினூர்சுரக்குந்தண்ணளி
யொற்றைவெண்குடையினூனுறக்கநீங்கினூன்.

(இ-ள்.) மன்ன அவற்கு அரு நிதி கொடுத்து - அரசனே யப்பாணபத்திரனுக்குப் பெறுதற்கரிய பொருள்கொடுத்து, தெற்றென வரநீ விடுக என்று - விரைந்து அவன் எம்பால்வர நீ அனுப்புக என்று, சித்தர் தாம் சொற்றனர் போயினூர் - சித்தமூர்த்திகள் சொல்லிச் சென்றருளினர், தண் அளி சுரக்கும் ஒற்றை வெண்குடையினூன் உறக்கம் நீங்கினூன் - தண்ணிய கருணைசுரக்கும் ஒப்பில்லாத தவளவட்டக்குடையையுடைய சேரமான்பெருமானூர் துயிலுணர்ந்தனர். (௧௭)

கங்குல்வாய்க்கண்டவக்கனவைப்பெண்ணையந்
தொங்கலான்றமரொடுசொல்லிச்சேற்கணூள்
பங்கினூன்றிருமுகங்கொணர்ந்தபத்திர
னெங்குளான்கொல்லெனத்தேடவெண்ணுவான்.

(இ-ள்.) கங்குல் வாய் கண்ட அக்கனவை - இரவிற்கண்ட அச்சொப்பனத்தை, அம் பெண்ணை தொங்கலான் தமரொடு சொல்லி-அழகிய பனைமாலையணிந்த சேரமான்பெருமானூர் தமதுறவினராகிய அமைச்சரோடு கூறி, சேற் கண்ணூள் பங்கினூன் திரு முகம் கொணர்ந்த - அங்கயற்கண்ணியாரை யிடப்பாகத்திலுடைய சோமசுந்தரக்கடவுளருளிய திருமுகத்தைக் கொண்டுவந்த, பத்திரன் எங்குள்ளான் என்ன தேட எண்ணுவான் - பாணபத்திர ரெங்குளரோ வென்று தேடக் கருதுவார்.

சிவபெருமான் திருவருட்பெருமை தம்முளடங்காது மேலிட்டதாலமைச்சரொடு கூறினர் என்பார் தமரொடுசொல்லி என்றூர். (௧௮)

மற்றவர்தமைத்துரீ இவருகதில்லெனக்
கொற்றவனேவலோர்குறுகிமாடமுந்
தெற்றியுநியமமுமன்றுஞ்சென்றுசென்
றெற்றிகழ்மணிநகரெங்குந்தேடுவார்.

(இ-ள்.) அவர் தம்மை அருவி தில்லென வருக என - அப்பாணபத்திரரை யின்று தேடிவிரைந்து வருகவென்றேவ, கொற்றவன் ஏவலோர் குறுகி-பாண்டியனுடைய வேவுகாரர் பலவிடங்களினுஞ்சென்று, மாடமும் தெற்றியும் நியமமும் மன்றும் சென்று சென்று-மாடங்களிலும் திண்ணைகளிலும் கடைவீதிகளிலும் அம்பலங்களிலும் போய்ப்போய், எல் திகழ் மணி நகர் எங்கும் தேடுவார்-சூரியனைப்போல விளங்கும் அழகிய நகரமெங்கும் தேடுவாராயினார்கள்.

என்று தரிசிப்போம் என்று எழுந்த பேரவாவினனாதலால் தில்லென வருக என்றார் என்றார். தில் என்னும் இடைச்சொல்காலத்தின்மேல் நிற்றலால் விரைந்து என்றும் "விழைவேகாலமொழியிசைக்கிளவியென் - றம்மூன்றென்ப தில்லைச்சொல்லே" என்பது சூத்திரம். (௧௯)

தருமநீர்ப்பந்தரிலிருக்குந்தந்திரி
வருமிசைக்கிழவனைக்கண்டுவல்லைபோய்த்
திருமகற்குணர்த்தினார்சேனையோடெழீஇப்
பெருமகன்பாணர்தம்பிரானைநண்ணினான்.

(இ-ள்.) தருமம் நீர்ப் பந்தரில் இருக்கும் தந்திரி வரும் இசைக் கிழவனைக் கண்டு - அறத்தின்பொருட்டமைத்த தண்ணீர்ப்பந்தலில் (இளைப்பாற)வசிக்கும் வீணையில்வல்ல பாணபத்திரரைப்பார்த்து, வல்லை போய் திரு மகற்கு உணர்த்தினார் - விரைந்து சென்று சேரமான் பெருமானார்க்குக் கூறினார்கள், சேனை யோடு எழீஇ - தமதுசேனையோடெழுந்து, பெரு மகன் பாணர் தம்பிரானை நண்ணினான் - அன்பிற் பெரிய அச்சேரமான்பெருமானார் பாணர்பெருமானாராகிய பத்திரரையடைந்தனர்.

அருட்செல்வம்போல அரசியற்குறுப்பாகிய பொருட்செல்வத்திலும் பெரியர் என்பதுதோன்றத் திருமகன் என்றமட்டும் அமையாது பெருமகன் என்றார். (௨௦)

கண்டனன்முகிழ்த்தகைக்கமலஞ்சென்னிமேற்
கொண்டனன்பாடினன்கூத்துமாடினன்
றண்டெனவீழ்ந்தனனன்பிற்றண்ணறு
வண்டெனமகிழ்ந்தனன்மன்னர்மன்னனே.

(இ-ள்.) மன்னர் மன்னன் கண்டனன் - அரசர்களுக்கரசாகிய சேரமான் பெருமானார்கண்டு, அன்பில் - அன்பால், முகிழ்த்த கைக்கமலம் சென்னிமேல் கொண்டனன் - கூப்பிய கைத்தாமரைகளைத் தமது சிரத்தின்மேற் குவித்து, பாடினன் கூத்தும் ஆடினன் தண்டு என்ன வீழ்ந்தனன் - பாடி யானந்தக்கூத்தாடித் தண்டம் போல நிலமீறுவீழ்ந்து, தண் நறு வண்டு என்ன மகிழ்ந்தனன் - தண்ணிய தேனைக்கண்ட வண்டுபோலப் பத்திரரைக்கண்டு மகிழ்கூர்ந்தனர்.

செய்மைக்கட்கண்டபோதே கிரியாங்கஞ்செய்துவணங்கினர் என்பார் முகிழ்த்தகைக்கமலஞ் சென்னிமேற்கொண்டனன் எனவும், தீப்பசி சுட்டுவருத்த இரை தேடித்திரிந்துழன்ற வண்டு தேனைக்காணின் ஆராமகிழ்ச்சியி லழுந்துதல்போலப் பாணபத்திரரை யென்று காண்போமென ஏக்கற்றுநின்ற கழறிற்றறிவாராகிய பெருமானார் கண்டவுடன் தலையன்பாற் பரவசமாகிப் பாடி யாடி நிலமீது அட்டாங்கமாகத் திருவடியில் வீழ்ந்து வணங்கி ஆராவின்பம் அடைந்தனர் என்பார் தண்ணறு வண்டெனமகிழ்ந்தனன் மன்னர்மன்னனே எனவுங்கூறினார். கண்டனன், கொண்டனன், பாடினன், ஆடினன், வீழ்ந்தனன்முற்றெச்சங்கள் "கேட்டபொழுதேகைதலை

மேற்கொண்டுளோர்தபேரன்பால் - நாட்டம்பொழிநீர்வழிந்திழிய வெழுந்துநடுக்க மிகவெய்தி - ஒட்டத்தம்பொன்மாளிகையின்புறத்திலுருகுஞ்சிந்தையுடன் - பாட்டின்றலைமைப்பாணனார் பாதம்பலகாற்பணிகின்றார்" என வ்டி புராணத்தில் வருதல் காண்க. திரியாங்கத்திற்கு "சிரமேகரங்கம்வலக்கரத்தைச் சிரத்திற்குவித்தல்துவிதாங்கம் - சிரமேல்வாமகரத்தினையுஞ் சேர்த்தறிரிவிதாங்கமதாம் - சிரநீள்கரஞ்சானுக்கணிலந்தீண்டிற்பஞ்சாங்கமதாகும்-சிரமோவாயகாதுகைசானுசெகத்திற்படிதலட்டாங்கம்" எனவருஞ் சிவபுண்ணியத்தெளிவால் உணர்க. (உக)

வாங்கினன்றிருமுகமலர்க்கணொற்றினன்
றாங்கினன்முடிமிசைத்தாமம்போன்மகிழ்
தூங்கினன்றடங்கணீர்துளிப்பமெய்யெலாம்
வீங்கினன்பொடிப்பெழவேந்தர்வேந்தனே.

(இ-ள்.) வேந்தர் வேந்தன் - அரசர்க்கரசாகிய சேரமான்பெருமானார், திருமுகம் வாங்கினன் மலர் கண் ஒற்றினன் - திருமுகத்தைவாங்கித் தமது மலர்போன்றகண்களிலொற்றி, முடி மிசை தாமம் போல் தாங்கினன் - சிரத்தின்மேல் மலர்மாலைபோலச்சூடி, மகிழ் தூங்கினன் - மகிழ்ச்சி கூர்ந்து, தடம் கண் நீர் துளிப்ப பொடிப்பு எழ மெய் எல்லாம் வீங்கினன் - பரந்தகண்களினின்றும் ஆநந்தபாஷ்பம் சிந்தவும் புளகரும்பவும் உடல்முற்றும் விம்மினார்.

நாயிற்குத் தவிசிட்டதுமபோலக் கடைப்பட்ட என்னையும் ஓர்பொருளாகத்திருவுளத்திற்கொண்டருளி மேம்படுத்தற்கன்றோ திருமுகங்கொடுத்தருளினமை யெனக்கருதினாராதலால் "வாங்கினன்றிருமுகமலர்க்கணொற்றினன் - தாங்கினன்முடிமிசைத்தாமம்போன்மகிழ் - தூங்கினன்றடங்கணீர் துளிப்பமெய்யெலாம் - வீங்கினன்பொடிப்பெழ என்றார் "அடியேன்பொருளாத்திருமுகங்கொண்டணைந்ததென்னவவர்தாமும் - கொடிசேர்விடையார்திருமுகங்கை கொடுத்துவணங்கக்கொற்றவனார் - முடிமேற்கொண்டுகூத்தாடி மொழியுங்குழறிப்பொழிகண்ணீர் - பொடியார்மார்பிற்பரந்துவிழப்புவிமேற்பலகால்வீழ்ந்தெழுந்தார்" என வ்டிபுராணத்தில் வருதல்காண்க. (உஉ)

எண்சீரடியாசிரியவிருத்தம்.

மின்னவிருஞ்செம்பொன்மணிமாடக்கூடன் மேயசிவன்யாமெழுதிவிடுக்குமாற்ற, நன்னர்முகிலெனப்புலவர்க்குதவுஞ்சேர நரபாலன்காண்கதன்போனம்பாலன்ப, வின்னிசையாழ்ப்பத்திரன்றன் மாடேபோந்தானிருநிதியங்கொடுத்துவரவிடுப்பதென்னத், தென்னர்பிரான்றிருமுகத்தின்செய்திநோக்கிச சேரர்பிரான்களிப்பெல்லைதெரியானாகி.

(இ-ள்.) மின் அவிரும் செம் பொன் மணி மாடம் கூடல் மேய சிவன் யாம் - ஒளிவிளங்கும் செம்பொன்னாலாகிய மாடங்கள்நெருங்கிய மதுரையிலெழுந்தருளிய சிவபெருமான்யாம், எழுதி விடுக்கும் மாற்றம்-திருக்கைதொட்டுவரைந்தனுப்புந் திருமுகம், நன்னர் முகில் என புலவர்க்கு உதவும் சேர நரபாலன் காண்க-(உலகிற்கு) நன்மைபயக்கு மேகம்போலக் கற்றறிந்தபுலவர்க்கு நன்மைபயக்கும் சேரமானரபதியே காணக்கடவாய், தன் போல் நம் பால் அன்பன்-நின்னைப்போல நம்மிடத்து அன்பனாகிய, இன் இசை யாழ்ப்பத்திரன் தன் மாடே போந்தான்-இனிய இசையமைந்த யாழில்வல்ல பாணபத்திரன் நின்னிடத்து வந்தனன், இரு நிதியம்

கொடுத்து வர விடுப்பது என்ன - (அவர்க்குப்) பெருநிதிகொடுத்து வரவிடுக்க வென்று, தென்னர் பிரான் திரு முகத்தின் செய்தி நோக்கி - பாண்டியர் பெருமானாராகிய சோமசுந்தரக்கடவுள் வரைந்தருளிய திருமுகத்தின் செய்தியைப்பார்த்து, சேரர் பிரான் களிப்பு எல்லை தெரியான் ஆகி - சேரர்பெருமானார் எழுந்த மகிழ்ச்சியில் வரம்பு தெரியாதவராகி.

திருமுகத்தின் செய்தியை முறைப்படி வழிபட்டுவணங்கி யுணர்ந்தனர் என்பார் தென்னர்பிரான் திருமுகத்தின்செய்தி நோக்கியெனவும், சிவபிரானார் என்னையும் ஒரு அடியவனாகக் கொண்டருளக்கருதிய திருவருள் எல்லையில்லது எனக்கருதினர் என்பார் களிப்பெல்லைதெரியானாகி யெனவுங்கூறினார் "பரிவிற்போற்றித்திருமுகத்தைப்பலகாற்றொழுதுபடியெடுக்க - உரியவகையாலெடுத்தோதியும்பர்பெருமானருள்போற்றி" "கூனலிளவெண்பிறைக்கண்ணிமுடியாரடிமைகொண்டருளும் - பான்மையருளின்பெருமையினை நினைந்துபலகாற்பணிந்தேத்தி" என வடி புராணத்தில் வருதல்காண்க. சேரநரபாலன் அண்மைவிளி. (௨௫)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பொன்னின்றளிகைமிசைவைத்துப்புழைக்கைமதமான்றலையேற்றி
மன்னுங்கோளையாழ்ப்புலவனைமுன்வைத்துப்பின்னேதானிருந்து
மின்னுங்கதிர்காலிணைக்கவரிவீசிப்பல்வேறியங்கலிப்பத்
தென்னென்றளியாரிசைத்தாரான்றிருமாநகரைவலஞ்செய்யா.

(இ-ள்.) பொன்னின் தளிகை மிசை வைத்து - பொன்னாலாகிய தவிசின் மேல்வைத்து, புழைக்கை மத யான் தலை ஏற்றி - தொளைபொருந்திய துதிக்கையையு மதத்தையுமுடைய யானையின்மத்தகத்தின்மேலேற்றி, மன்னும் கோளை யாழ்ப் புலவனைமுன் வைத்து பின்னே தான் இருந்து - நிலைபெற்ற இசையமைந்த யாழில்வல்ல பாணபத்திரரை முன்னர்வைத்துத் தான் பின்னரிருந்து, மின்னும் கதிர் கால் இணைக் கவரிவீசி - விளங்காநின்ற ஒளிவீசும் இணைக்கவரிகளைவீசி, பல் வேறு இயம் கலிப்ப - பலவேறுவகைப்பட்ட வாச்சியங்களொலிக்க, தென் என்று அளி ஆர் இசை தாரான் - தென்னென்றிசைபாடி வண்டுகளார்ந்த மாலையையுடைய சேரமான்பெருமானார், திரு மா நகரை வலஞ் செய்யா - பெரிய அழகிய திருநகரினை வலஞ்செய்வித்து.

சிவனடியவரைச் சிவமேயெனவுணர்ந்த ஆரா அன்பினர் என்பார் முன்வைத்துப் பின்னேதானிருந்து-மின்னுங்கதிர்காலிணைக்கவரிவீசி எனக்கூறினார். "தேசிகர்தம்மைச்சிவனேசர்தம்மையும் - ஈசனெனவேயுளத்துளெண்" எனச் சைவசமய நெறியில் வருதல் காண்க. (௨௬)

பஞ்சுதடவுஞ்சீறடியார்பலமங்கலங்கொண்டெதிர்போத
மஞ்சுதடவுநீள்குடுமிமாடமனையிற்கொடுபோகி
நஞ்சுதடவுமணிகண்டனன்பன்றனைநன்னீராட்டி
யஞ்சுதடவியோவியஞ்செய்தமைத்தமணிமண்டபத்தேற்றி.

(இ-ள்.) பஞ்சு தடவும் சீறு அடியார் பல மங்கலம் கொண்டு எதிர் போத - செம்பஞ்சுக்குழம்புதடவிய சிற்றடியையுடைய சுமங்கலப்பெண்கள் கண்ணடி முதலிய அட்டமங்கலம் ஏந்தி எதிரேவர, மஞ்சு தடவு நீள் குடுமி மாடம் மனையில் கொடு போகி - மேகமளாவிய நீண்டசிகரத்தையுடைய உபரிகையையுடைய தமது கோ

யிற்குக்கொண்டு சென்று, நஞ்சு தடவு மணி கண்டன் அன்பன் தன்னை - நஞ்சம் பொருந்திய ஸ்ரீகண்டத்தையுடைய சோமசுந்தரக்கடவுளினன்பராகிய பாணபத்திரனை, நல் நீராட்டி - வாசமமைந்த நீரால் திருமஞ்சனஞ்செய்வித்து, அஞ்சு தடவி ஓவியம் செய்து அமைத்த - பஞ்சவன்னங்களாற் சித்திரம் செய்தமைத்த, மணி மண்டபத்து ஏற்றி - இரத்தினமழுத்திய மண்டபத்தில் இருந்தருளச்செய்து.

அட்டமங்கலங்கள். கண்ணடி, இடபம், விளக்கு, சிவற்சர், கவரி, சங்கு, சுவத்திகம், நிறைகுடம், வாசநீர் இன்னவகையின என்பது திருமணப்படலத்திற் காண்க. (௨௫)

அம்பொற்றவிசிட்டருச்சனைசெய்தாறுசுவையின்னமுதருத்திச்
செம்பொற்கலவைநறுஞ்சாந்தந்தேம்பூவாதிமுகவாசம்
பைம்பொற்கலத்துவெள்ளிலைதீம்பழுக்காய்பிறவுமுறைநல்கி
யும்பர்க்கிறைவன்றிருமுகத்திலுய்ப்பதெனலாலுய்த்துமென.

(இ-ள்.) அம் பொன் தவிசு இட்டு-அழகிய பொன்னாலாகிய ஆசனந்தந்து, அருச்சனை செய்து - அருச்சித்து, ஆறு சுவை இன் அமுது அருத்தி - அறுசுவையமைந்த இனிய அமுதுண்பித்து, செம் பொன் கலவை நறுஞ்சாந்தம்-செவந்த பொன்னிறம் வாய்ந்த கூட்டுவர்க்கமாகிய நறுமணங்கமழுஞ் சந்தனமும், தேம் பூ ஆதி முகவாசம் - இனிய மலர் முதலிய தூபமும், பைம்பொன் கலத்து வெள்ளிலை தீம் பழுக்காய் பிறவும் முறை நல்கி - பசிய பொற்றட்டில் வெற்றிலையும் சுவையமைந்த பாக்கும் மற்றுள்ளனவு முறையாகக்கொடுத்து, உம்பர்க்கு இறைவன் திருமுகத்தில் உய்ப்பது எனலால் - தேவர்கட்கிறைவராகிய சோமசுந்தரக்கடவுள் வரைந்தருளிய திருமுகத்தில் அனுப்புவது என்றிருத்தலால், உய்த்தும் என - (அவ்வாறே) அனுப்புவோமென்று.

சிவனடியவரை யச்சிவனைப்போலக்கருதி யருச்சித்து வழிபடல் முறையாதலால் அம்பொற்றவிசிட்டருச்சனைசெய்து எனவும், வந்தவழியிளைப்பாற உபசரித்தலால் அறுசுவையின்னமுதருத்தி "செம்பொற்கலவை நறுஞ்சாந்தந் தேம்பூவாதி முகவாசம்-பைம்பொற்கலத்து வெள்ளிலைதீம் பழுக்காய்பிறவுமுறைநல்கி" எனவுங்கூறினார். (௨௬)

செம்பொனறையைத்திறந்தழைத்துக்காட்டியினையதிருவெல்லா
மும்பர்பெருமானடியீர்நீருடையீர்கவர்ந்துகொண்மினென
விம்பர்நிழற்றும்வெண்குடையானிசைப்பவெதிர்தாழ்ந்திசைக்கிழவ
னம்பனருளுக்குரியீர்நீர்நல்கிற்றமையுமெனக்கென்ன.

(இ-ள்.) செம்பொன் அறையை திறந்து - கருவூலத்தைத்திறந்து, அழைத்து காட்டி - அழைத்துக்காண்பித்து, இனைய திரு எல்லாம் - இச்செல்வம் யாவையும், உம்பர் பெருமான் அடியீர்-தேவர்பெருமானடியவரே, நீர் உடையீர்-நீரேயுடையீர், கவர்ந்து கொண்மின் என இம்பர் நிழற்றும் வெண் குடையான் இசைப்ப - கைக்கொள்ளுங்களென்று இந்நிலவுலகிற்கு நிழல் செய்யும் வெள்ளிய தவளவட்டக்குடையையுடைய சேரமான் பெருமானார் கூற, இசைக்கிழவன் எதிர் தாழ்ந்து - பாணபத்திரர் எதிர்வணங்கி, நீர் நம்பன் அருளுக்கு உரியீர் - நீர் சிவபெருமான் திருவருளுக்குரியீர், நல்கிற்று எனக்கு அமையும் என்ன - நீர் கொடுப்பதெனக்குப் போதுமென்று. (௨௭)

மன்னன்ருனெண்ணியவாற்ருல்வழங்கவழங்கமறுத்துமறுத்
தின்னறீருமிசைக்கிழவனிலங்கும்பொலம்பூணிருநிதியம்
பொன்னஞ்சிவிகைகரிபரிமான்பொற்பட்டாடைபலபிறவுந்
தன்னவென்னுமளவாற்ருற்ருனேகொள்ளத்தார்வேந்தன்.

(இ-ள்.) மன்னன் தான் எண்ணிய ஆற்ருல் வழங்க வழங்க மறுத்து மறுத்து-சேரமான்பெருமானுர் கருதியபடியே கொடுக்குந்தோறும் போதும் போதுமென்று மறுத்து, இன்னல் தீரும் இசைக்கிழவன் - வறுமை நீங்கிய பாணபத்திரர், இலங்கும் பொலம் பூண் இருநிதியம் - விளங்கும் பொன்னுலாகிய ஆபரணமும் பெரிய தனமும், பொன் அம் சிவிகை கரிபரிமான் பொன் பட்டாடை பிற பலவும் - பொன்னுலாகிய அழகிய பல்லக்கும் யானையும் குதிரையும் பீதாம்பரமும் அவையொழிந்த பலவும், தன்ன என்னும் அளவு ஆற்ருல் - சிறியனவென்னும் அளவின் வகையால், தானே கொள்ள - பாணபத்திரரே கைக்கொள்ள, தார்வேந்தன்-பனைமாலையையுடைய சேரமான்பெருமானுர்.

தமது சேனைமுதலியவற்றையும் அரசியலையுந் தந்தனர் என்பார் மன்னன்ருனெண்ணியவாற்ருல் வழங்கவழங்க எனவும், அரசுறுப்பையும் அரசியலையும் பாணபத்திரர் ஒழித்தனர் என்பார் மறுத்துமறுத்து எனவும், அங்கு வழங்கியது வரம்பிலதாயினும் சேரமான்பெருமானுர் கருத்திற்குச் சிறிது என்பார் தன்னவென்னுமளவாற்ருனேகொள்ள எனவுங்கூறினர். " பரந்தநிதியின்பரப்பெல்லாம் பாணனுர்பத்திரனுர்க்கு - நிரந்ததனங்கள்வெவ்வேறு நிரைத்துக்காட்டிமற்றிவையும் - உரந்தங்கியவெங்கரிபரிகண் முதலாவுயிருள்ளனதனமும் - புரந்தவரசுங்கொள்ளுமெனமொழிந்தார்பொறையர்புரவலனுர, பாணனுர்பத்திரனுரும் பைம்பொன்மௌலிச்சேரலனுர்-காணக்கொடுத்தவிவையெல்லாங் கண்டுமகிழ்வுற்றதிசயித்துப் - பேணவெனக்குவேண்டுவன வடியேன்கொள்ளப்பின்ஞகனுா-ஆணையரசுமரசுறுப்புங் கைக்கொண்டருளுமெனவிறைஞ்ச, இறைவராணைமறுப்பதனுக் கஞ்சியிருந்தாரிகல்வேந்தர் " என வெஷ புராணததில் வருதல்காண்க. தன்னத்த தொகுக்கும் வழித்தொகுத்தல். தன்னது என்னும பாடத்தைத் தன்னஎனக்கொள்க. (௨௮)

பின்னேழடியோசேட்சென்றுபெருமைசான்றவரிசையினுற்
றன்னேரிசையான்றனேவிடுத்துமீண்டானுகத்தமிழ்மதுரை
மின்னேர்சடையாரிசைத்தொண்டன்ருனுமீண்டுவெயில்விரிக்கும்
பொன்னேர்மௌலிநிதிக்கிழவன்போலமதுரைநகர்புக்கான்.

(இ-ள்.) பின் ஏழடியோ - பின்பு ஏழடி தூரமோ (சென்றது,) சேண் சென்று - நகரின்புறங்காறும் பின்சென்று, பெருமைசான்ற வரிசையினுல் தன் நேர் இசையான் தனை விடுத்து மீண்டான் ஆக-பெருமைமிக்க வரிசையோடு தம்மையொத்த இசையில்வல்ல பாணபத்திரரையனுப்பி (அவரனுமையால்)சேரமான்பெருமானுர் மீள, தமிழ் மதுரை மின் நேர் சடையார் இசைத்தொண்டன் தானும் - தமிழ் வழங்கு மதுரைத்திருநகரி லெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளுக்கு இசைத்தொண்டுபூண்ட பாணபத்திரரும், மீண்டு-அங்கு நின்றுந்திரும்பி, வெயில் விரிக்கும் பொன் ஏர் மவுலி நிதிக்கிழவன் போல-சூரியனைப்போல ஒளிவிரிக்கும் பொலிவமைந்த முடியையுடைய குபேரன்போல, மதுரை நகர் புக்கான் - மதுரைத்திருநகரிற் சேர்ந்தார்.

பலகையிட்ட திருவிளையாடல்



தமதில்லிற்குவந்து மீளும் பெரியோர் பின் ஏழடித்தூரஞ்சென்று விடுத்தல் முறையாக இவர் ஆராஅன்பால் நகர்ப்புறங்காறும் பின்சென்றனர் என்பார் பின்னேழடியோ சேட்சென்று எனவும், அப்பெரியோர் விடுக்கவருதல் முறையாதலால் விடுத்து மீண்டானாக எனவும், யானைமேற்போந்தாராதலால் பொன்னேர் மவுலி நிதிக்கிழவன்போல மதுரைநகர்புக்கான் எனவுங் கூறினார். பதினான்கடி பின்னே செல்லவேண்டும் எனல் "போம்பொழுதுபின்னே பதினான்கடிபோக - நாம்பெற்றோமென்றெண்ணிநன்று" எனவரும் சைவசமயநெறியிற்காண்க. "பண்புபெருகும்பெருமாளும் பாணனார்பத்திரனார்பின் - கண்கள்பொழிந்தகாதலிர் வழியகலையாற்றொழுதனைய - நண்புசிறக்குமவர்தம்மை நகரின்புறத்துவிடைகொண்டு எனவும், அறைமும்மதத்துக்களிறுபரியுள்ளிட்டனவேண்டுவகொண்டோர் - பிறைவெண்கோட்டுக்களிற்றுமேல்கொண்டு போந்தார்பெரும்பாணர்" எனவும் ஷை புராணத்தில் வருதல் காண்க. (௨௯)

வந்துமதுரைப்பெருமானை வணங்கிக்கொணர்ந்தநிதியெல்லா
மிந்துமருமானகருள்ளார்யாருமறியயாவர்க்கு
முந்தைவேதமுதல்வர்க்கும்புலவோர்தமக்குமுறைநல்கிச்
சந்தயாழினிசைப்பாணர்தருமமனையான்வைகினான்.

(இ-ள்.) வந்து மதுரைப்பெருமானை வணங்கி — அங்குவந்து மதுரைத்திருநகரிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளை வணங்கி, கொணர்ந்த நிதி எல்லாம்-கொண்டுவந்த பொருள் யாவையும், இந்து மருமான் நகர் உள்ளார் யாரும் அறிய - சந்திரமரபில்வந்த வரகுணபாண்டியன் மதுரைத் திருநகரிலுள்ளவரெவரும் உணர, யாவர்க்கும் முந்தை வேத முதல்வர்க்கும் புலவோர் தமக்கும் முறை நல்கி-தம்பாற்கற்கு மாணாக்கரெவர்க்கும் முற்பட்டவேத நூலுணர்ந்த முதற்குலத்தினராகிய அந்தணர்களுக்குங் கற்றறிந்த வல்லவர்க்கு முறையேதந்து, சந்தம யாழினிசைப் பாணர் தருமம் அனையான் - சந்தமமைந்த வீணையினிசையில்வல்ல பாணர்கள் செய்த புண்ணியத்தையொத்த பாணபத்திரர், வைகினான் - மகிழ்வோடு இருந்தனர்.

உலகினர் தாமடைந்த பொருளைப் பிறர்க்குதவியுய்யும்பொருட்டுத் தாம் கொடுத்துக் காட்டினர் என்பார் யாருமறிய முறைநல்கி என்றார். (௩௦)

திருமுகங்கொடுத்தபடலம் - முற்றிற்று.

ஆகப் பாயிரம் உள்படத் திருவிருத்தம் - ௨௯௩௦.

## நாற்பத்துமூன்றாவது

# பலகையிட்டபடலம்.

கொச்சகக்கலிப்பா.

கருந்துழாய்முகிலொருபாற்கலந்தவர்பத்திரற்குநிதி
திருந்துதாருநியனிடைத்திருமுகமீந்தளித்ததிது
வருந்தியாழவனிசைப்பமழைதூங்குநள்ளிரவி
லிருந்துபாடெனப்பலகையிட்டதூஉமினிப்பகர்வாம்.

(இ-ள்.) கருந்துழாய் முகில்-கரிய துழாய்மாலையையணிந்த மேகம்போலக் கருநிறம்வாய்ந்த திருமாலே, ஒருபால் கலந்தவர் - வலப்பாகத்திற்கொண்ட பெருமானார், பத்திரற்கு - பாணபத்திரர்க்கு, திருந்து தார் உதியன் இடை திருமுகம் ஈந்து நிதி அளித்தது இது - திருந்திய பனைமாலையை யணிந்த சேரமான் பெருமானாரிடத்துத் திருமுகங்கொடுப்பித்துத் திரவியங் கொடுத்தருளிய திருவிளையாடலிது, வருந்தி யாழவன் இசைப்ப - (மழையில்) வருத்தமுற்று வீணையில்வல்ல பாணபத்திரரிசைபாட, மழை தூங்கு நள் இரவில் - மழைபொழியும் நடுராத்திரியில், இருந்து பாடு என - இருந்து பாடாயென்று, பலகை இட்டதும் - பலகைதந்தருளிய திருவிளையாடலையும், இனி பகர்வாம் - இனி யெடுத்துக்கூறுவாம்.

சிவபெருமான் தாருகாவனமுனிவர்களுய்தற்பொருட்டுப் பன்னிரண்டு தேவவருடம் பலியேற்றுலவியகாலையில், உமாதேவியாரைக் கவரவந்த பிரகலாதன் புத்திரனாகிய அந்தகாசுரனைப் புறங்கண்ட மகளிர் வடிவாய்க் காவற்றொழில் பூண்டு நின்ற திருமால் புணர்த்திய நாறுசத்திகளும் சிவபிரானை வணங்கி வினவத் திருவாய்மலர்ந்தருளிய "உலகெலாமீன்றுங்காவல்புரிந்துமீட்டொடுக்குகின்ற - அலகிலாவிச்சைக்கென்றுங்காரணமாகியொன்றாய் - இலகுபேரொளியாயென்றனிடமருங்கொளிருஞ்செல்வி - நிலவுநான்மறையுமேத்துநிகரில்சிற்சத்தியாமால், வலப்புறமதனின்மேயவண்டுகண்படுக்குங்கூந்தல் - உலப்பருங்காலாதீதவுருவமாயொளியாயொன்றாய்க் - கலப்பிலவ்வியத்தந்தோன்றுங்காரணமாகியாளு - நலத்தகுகுணக்குன்றாகுநாரணனுமன்றே" எனும் விடையைக் கூர்மபுராணம் அந்தகாசுரன் சாரூபம் அடைந்த அத்தியாயத்திற்காண்க. (க)

முன்புடையநாயகனைமுப்போதும்புகுந்திறைஞ்சி
யின்புறுமேழிசைக்கிழவனிருநிதியமருளியபின்
அன்புசிறந்தனையிரவுமடைந்துபணிந்தடல்விடையின்
பின்புறநின்றேழிசையும்பாடிவரும்பேறடைவான்.

(இ-ள்.) முன்பு உடைய நாயகனை - முன்னாளில் தம்மை யாளாகவுடைய சோமசுந்தரக்கடவுளை, முப்பொழுதும் புகுந்து இறைஞ்சி - காலைமுதலிய மூன்று காலத்திலும் சென்று வணங்கி, இன்பு உறும் ஏழிசைக் கிழவன் - மகிழ்ச்சிகூரும் பாணபத்திரர், இரு நிதியம் அருளிய பின் - (சேரமான்பெருமானாரால்) எல்லையில்லாதபொருளைத் தந்தருளியபின், அன்பு சிறந்து - தலையன்பிற்பட்டு, அனை இரவும் அடைந்து பணிந்து - நடுநிசியிலுஞ் சென்று வணங்கி, அடல் விடையின் பின் புறம் நின்று-வெற்றியையுடைய அதிகாரநந்தி நாயனார் பின்னேநின்று, ஏழிசையும் பாடி வரும் பேறு அடைவான்-குரல்முதலிய ஏழிசைகளையும் நாள்தோறும் பாடிவரும்பயனையடைவாராயினர்.

உணர்ந்தோர்பாலன்றி மற்றோர்பால் ஒருவன் கற்ற கல்வி பயன்படாதாதலால் வீணையிலிசைந்தவனும் அதிலிசைத்திறத்தை யுணர்பவனுமாகிய சிவபிரான் திருமுன்னர்ச்சென்று பாடுதலின் தாம் கற்ற கல்வித்திறத்தாலாய பயனை யடைந்தனர் என்பார் பாடிவரும் பேறடைவான் என்றார் "இன்னிசைவீணையிலிசைந்தோன் காண்க-அன்னதொன்றவ்வயினறிந்தோன்காண்க" எனவருந் திருவாசகத்தால் உணர்க. (உ)

தொழுந்தகையன்பருந்தேவர்தொகுதிகளுந்தொழத்திங்கட்
கொழுந்தலையநதியலையக்குனிக்கின்றதனிக்கடவுள்

செழுந்தாளச்சிவிகையின்மேற்றேவிதிருப்பள்ளியறைக்
கெழுந்தருளும்போதுபணிந்தேத்துவானோரிரவில்.

(இ-ள்.) தொழும் தகை அன்பரு' - யாவரும் வணங்கும் பெருந்தகைமை யையுடைய அடியார்களும், தேவர் தொகுதிகளும் தொழ - வானவர்கூட்டங்களும் வணங்கவும், திங்கள் கொழுந்து அ[illegible] இளஞ்சந்திரன் ஒருபாலசையவும், நதி அலைய - கங்கை யொருபால[illegible]யெடுத்தோங்க[illegible]நின்ற தனிக்கடவுள் - வெள்ளியம்பலத்துள் திருநடனஞ்செய்தருளும் ஒப்பில்லாத பெருமானார், செழுந்தாளம் சிவிகையின் மேல் - பருத்த முத்துகளாலமைந்த சிவிகையின்மேல், தேவி திருப்பள்ளி அறைக்கு - உமாதேவியார் திருப்பள்ளியறைக்கு, எழுந்தருளும் போது - எழுந்தருளுங்காலையில், ஓர் இரவில் - ஒரு நடுநிசியில், பணிந்து ஏத்துவான் - வணங்கித்துதிக்க.

ஏத்துவான் வினையெச்சம். போகாங்கபூசனைகாலமாதலால் ஓரிரவில் எனவும், ஏனைக்கால தரிசனங்களினும் விசேடதரிசனமாதலால் பணிந்தேத்துவான் எனவுங்கூறினார். (௩)

இன்னிசையாழ்ப்பெரும்பாணனெவ்விடையூறடுத்தாலுந்
தன்னியமநெறியொழுக்கந்தவானென்பதுலகறியப்
பொன்னியலுஞ்சடைமௌலிப்புராணர்திருவிளையாட்டா
லன்னிலையிற்கருங்கொண்மூவார்த்தெழுந்ததிசையெல்லாம்.

(இ-ள்.) இன் இசை யாழ் பெரும் பாணன் - இனிய இசையமைந்த யாழில் வல்ல பாணபத்திரர், எ இடையூறு அடுத்தாலும் - எவ்வகைப்பட்ட இடையூறு வரினும், தன் நியமம் ஒழுக்கம் நெறி தவான் என்பது - தமது கட்டுப்பாடாகிய வொழுக்கநெறியினின்றுஞ் சிறிதுந்தவறுரொன்பதை, உலகு அறிய - உலகினரறிய, பொன் இயலும் சடை மௌலி புராணர் திருவிளையாட்டால் - பொன்னையொத்த செவந்த சடாமகுடத்தையுடைய சோமசுந்தரக்கடவுள் திருவிளையாட்டினால், அல் நிலையில் - இராப்போதில், திசை எல்லாம் - எண்டிசைமுற்றிலும், கருங் கொண் மூ ஆர்த்து எழுந்த - கருக்கொண்டமேகங்கள் இடித்தெழுந்தன.

மெய்யன்பின் வழியொழுகுவோர் தமதுயிர்க்கிறுதிவரினும் அந்நிலையினின்றுந் தவறுார் என்பது உலகினரறிந்துய்யத் திருவுளங்கொண்டார் என்பார் திருவிளையாட்டால் கொண்மூவார்த்தெழுந்த திசையெல்லாம் என்றார். (௪)

தடித்துநிரைபுடைபரப்பித்தடுமாறித்திசைமயங்கத்
துடித்துவிடவாயரவஞ்சோர்ந்துசுருண்டளையொதுங்க
விடித்துடுவின்கணம்புதைப்பவிருள்கான்றுசலபதிமுன்
முடித்திடுவான்வரவழைத்தமுகிலேழும்வளைந்தனவே.

(இ-ள்.) தடித்து நிரை புடை பரப்பி - மின்வரிசைகளை யயலிற்பரப்பி, தடுமாறி திசைமயங்க - எண்டிசையிலுள்ளவர்கள் தலைதடுமாறிமயங்கவும், விடம் வாய் அரவம் - விடமமைந்த வாயையுடைய பாம்புகள், துடித்து சோர்ந்து சுருண்டு அளை ஒதுங்க - உடல்துடித்துச் சோர்ந்து சுருண்டு பிலங்களிற்புகவும், இடித்து - இடியிடித்து, உடுவின் கணம் புதைப்ப இருள் கான்று - நட்சத்திரக் கூட்டங்கள் புதைபட இருளைவீசி, சலபதி - வருணன், முன் முடித்திடுவான் - முன்பு மதுரையையழிக்க,

வர அழைத்த எழு முகிலும் வளைந்தது என - அனுப்பிய சத்தமேகங்களும் அம்மதுரையை வளைந்ததுபோல வளைந்து.

முடித்திடுவாள் வினையெச்சம். (௫)

கருங்கடலைவிசும்பெடுத்துக்கவிழ்ப்பதெனவெண்டாரை
நெருங்கிருளிருப்புக்கோனி[illegible]ந்ததெனநிறங்கருக
வொருங்குசொரிந்துள்ளுண[illegible]ளுட்புறம்பு
மருங்கொடுகிழ்மேலென்றுந்தெரியாதமயங்கிருள்வாய்.

(இ-ள்.) கருங் கடலை விசும்பு எடுத்து கவிழ்ப்பது என்ன - கரியகடலை ஆகாயந் தலைகீழாகவெடுத்துக் கவிழ்ப்பது போலவும், நெருங்கு இருளின் - அள்ளிக்கொள்ள அமைந்த இருளில், இருப்புக்கோல் நிரைத்தது என்ன-நாராசங்களை யொழுங்குபட வைத்ததுபோலவும், வெள் தாரை நிறம் கருக-வெள்ளிய மழைத்தாரைகள் நிறந்திரிந்துதோன்ற, ஒருங்கு சொரிந்து-ஒருசேர வருஷித்து, உள் உணரார் உள்ளம் போல்-தம்மை அறியாதவர் மனம் இருண்டிருத்தல்போல,உள் புறம்பு மருங்கு கீழ் மேல் என்றும் தெரியாத-உள்ளென்றும் புறமென்றும் அயலென்றும் கீழென்றும் மேலென்றும் பகுத்தறிதற்கரிய, மயங்கு இருள்வாய்-இருண்ட இருட்போதில்.

இருளொடுகூடிய கண் இருள்மயமாய் நிற்றல்போலப் பாசத்தோடு கூடிய ஆன்மா அப்பாசமயமாய் நிற்றலால் உள்ளுணரா ருள்ளம்போல் என்றார். ஒடு எண்ணிடைச்சொல். (௬)

மாமாரியிடைநனைந்துவருவானம்மாரிதனைப்
பூமாரியெனநினைந்துதிருக்கோயில்புகுந்தெய்திக்
காமாரிதனைப்பணிந்துகருணைமாரியினனைந்து
தேமாரிபொழிவதெனத்தெள்விளியாழ்வாசிப்பான்.

(இ-ள்.) மா மாரி இடை நனைந்து வருவான் - பெருந்தாரைகளாய் விழு மழையில் நனைந்துவரும் பாணபத்திரர், அமாரி தன்னை பூமாரி என்ன நினைந்து-அந்த மழையை மலர்மழைபோலக்கருதி, திருக் கோயில் புகுந்து எய்தி - திருக்கோயிலைச் சென்றடைந்து, காமாரி தன்னை பணிந்து - சோமசுந்தரக்கடவுளைவணங்கி, கருணை மாரியில் நனைந்து - அவர் திருவருள்மழையால் நனைந்து, தே மாரி பொழிவது என-தேன்மழைபொழிந்ததுபோல, தெள் விளி யாழ் வாசிப்பான் - தெள்ளிய இசையமைந்த வீணைவாசிக்கத்தொடங்கினர்.

திருவருண்ஞானமுடையோர்க்கு எவ்விடையூறுவரினும் அதுவும் அத்திருவருளேயெனக் கருதுவராதலால், அம்மாரிதனைப் பூமாரியென நினைந்து எனவும், அத்திருவருளொன்றுமே பெரும்பேறெனக் கருதுவாராதலால் கருணைமாரியினனைந்து எனவுங்கூறினர். "கொள்ளேன்புரந்தரன் மாலயன்வாழ்வுகுடிகெடினும் - நள்ளேனினதடியாரோடல்லால் நரகம்புகினும் - எள்ளேன்திருவருளாலேயிருக்கப் பெறினிறைவா" என்னும் ஏதுவால் உணர்க. (௭)

விடைக்கடவுள்பின்னின்றுவீணையிடத்தோள்கிடத்திப்
புடைத்துநரம்பெறிந்துமிடற்றொலிபோக்கிப்பொலங்கொன்றைச்
சடைக்கடவுள்செவிவழிபோயருட்பைங்கூழ்தலையெடுப்பத்
தொடைத்தமிழினிசைப்பாணிச்சுவையமுதமடைதிறந்து.

(இ-ள்.) விடைக் கடவுள் பின் நின்று - அதிகார நந்திநாயனார் பின்னே நின்று, வீணை இடத்தோள்கிடத்தி-வீணையை யிடத்தோளிற் சேர்த்து, நரம்பு புடைத்து எறிந்து - வீணையினரம்பைத் தாக்கித் தட்டி, மிடறு ஒலி போக்கி - சாரீரத்தொனியெழுப்பி, பொலம் கொன்றை சடை கடவுள் செவி வழி போய் - பொன்னிறம்வாய்ந்த கொன்றைமாலையையணிந்த சடாமகுடத்தையுடைய சோமசுந்தரக்கடவுள் திருச்செவியாகிய கால்வழிச்சென்று, அருள் பைங்கூழ் தலை எடுப்ப-திருவருளாகிய பயிரானது தலையெடுத்தோங்க, தமிழின் தொடை இசைப்பாணி - தமிழாற்றொடுத்த இசைப்பாடலாகிய, சுவை அமுதம் மடை திறந்து - சுவைகனிந்த அமுதமானது மடையுடைத்து.

சிவபெருமான் கீதப்பிரியராதலால் திருச்செவியைக் கால்வாயாகவும், திருவருளைப் பைங்கூழாகவும், இசைப்பாடலை யமுதவெள்ளமாகவும் உருவகஞ்செய்தமையால் அவை யியையுருவகவணி. "அன்னதொன்றவ்வயி னறிந்தோன்காண்க" என்னுந் திருவாசகத்தா லுணர்க. (அ)

நரம்புநனைந்திசைமழுங்கநனைந்துடலம்பனிப்பவிசை
வரம்பொழுகுவிரன்மிறைத்துவலிவாங்கமயிர்சிலிர்ப்ப
நிரம்பியசேறடிபுதைப்பநின்றுநிறையன்பிசையா
யரும்புதல்போலென்புருக்குமமுதவிசைபாடுமால்.

(இ-ள்.) நரம்பு நனைந்து இசை மழுங்க — நரம்பு மழையால் நனைந்து இசை குன்றவும், உடலம் நனைந்து பனிப்ப - தமது சரீரம் அம்மழையால் நனைந்து நடுங்கவும், இசை வரம்பு ஒழுகு விரல் மிறைத்து வலி வாங்க - குரல் முதலிய இசையினெல்லை கடவாது செல்லும் விரல்கள் விறைத்து வலிவாங்கவும், மயில் சிலிர்ப்ப- (குளிரால்) மயிர்கள் சிலிர்க்கவும், நிரம்பியசேறு அடி புதைப்ப-நிரம்பிய சேறு தமது காலைப் புதைக்கவும், நின்று (உடலம்) கம்பியாது நின்று, நிறை அன்பு இசையாய் அரும்புதல்போல்-நிறைந்த அன்பே இசை வடிவாய்ப் பொங்கி மேலெழுதல்போல, என்பு உருக்கும் அமுதம்இசை பாடும் - எலும்பினையு முருக்கும் அமுதம்போலச் சுவைகனிந்த இசைபாடுவாராயினர்.

ஏனைத் தசை முதலிய பொருள்களை யுருக்குவதுமன்றியென நிற்றலால் என்பு என்பத னிறுதியில் இறந்தது தழீஇய எச்சவும்மை தொக்கு நின்றது. பெருமழையால் தம் வசமழிந்து நிற்றலால் நிறையன்பிசையா யரும்புதல்போல் என்றார். (கூ)

இடைமடக்காய் அறுசீரான்வந்த
ஒருபோகுகொச்சகம்.

மாதர்நகையாய்மதுரேசருண்பலிக்கெம்மனைவாய்வந்து
காதன்முகத்தரும்பிக்காட்டியென்சிந்தைகவர்ந்தார்போலுங்
காதன்முகத்தரும்பக்கையறவுதீரக்கலப்பேன்பாதி
பேதையுருவாயிருந்தார்நாணிவிழித்தாவிபிழைத்தேன்போலும்.

(இ-ள்.) மாதர் நகையாய் - அழகிய தந்தபந்திகளையுடைய தோழியே, மதுரேசர் - மதுரையி லெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுள், உண் பலிக்கு - உண்ணும் ஐயத்தின் பொருட்டு, எம்மனை வாய் வந்து - எமது இல்லில் வந்து, காதல் முகத்து அரும்பி காட்டி - புணர்ச்சிக் குறிப்பைத் தமது திருமுகத்தில் தோற்றுவித்து, என் சிந்தை கவர்ந்தார் போலும் - எனது மனத்தைக் கைக்கொண்டார்போலும்,

காதல் முகத்து அரும்ப - அக்குறிப்பு என்முகத்திலுந் தோன்ற, கையறவு நீரகலப்பேன் - காமவாதை நீரக் கலக்கத் தொடங்கினேன், பாதி பேதை உருவாய் இருந்தார் - தமது திருமேனியிற் பாதி பெண்வடிவாயிருந்தனர், நாணி விழித்து - (அதனால்) கலத்த லொழிந்து விழித்து, ஆவி பிழைத்தேன் - உயிர் படைத்தேன்.

கனவு நிலையுரைத்தல் என்னுந் துறைப்பொருள்மேல் வைத்துத் தலைவி கூற்றாகக் காமச்சுவை பயப்பக்கூறினும், அது-பதியே தலைவனும் பசுவே தலைவியும் திருவருளே யுயிர்த்தோழியுமாகக் கொண்டு கூறிய குறிப்பின்மேல் நின்று, உண்பலிக்கு என்றது சர்தாரமாகிய திருமேனிகொண்டு சகலர்க் கருளுதற்பொருட்டு உடல் பொருள் ஆவி கோடன் மேலும், காதன்முகத்தரும்பி யென்றது அச்சகலர்க்கருளும்பாவனு திட்சைமேலும், கலப்பேன் என்றது நின்மல சொப்பனத்தின்மேலும், விழித்து என்றது நின்மல சாக்கிரத்தின்மேலும் நிற்றலாற் பிறிதுநுவற்சியணி. போலும் என்னும் இரண்டனுள் பின்னது ஒப்பில்போலி யிடைச்சொல். (௪0)

ஒண்ணுதலாய்வெண்டலைகொண்டுண்பலிக்குநம்மனையினூடேகூடற்
கண்ணுதலாருள்ளாளக்கானமிசைத்தென்னுள்ளங்கவர்ந்தார்போலுங்
கண்ணுதலார்பாடுமவிநயங்கண்டாகங்கலப்பேன்பாதி
பெண்ணுருவமாயிருந்தார்வெள்கிவிழித்தாவிபெற்றேன்போலும்.

(இ-ள்.) ஒள் நுதலாய் - ஒள்ளிய நெற்றியையுடைய தோழியே, வெள் தலை கொண்டு - பசைகழிந்த கபாலத்தையேந்தி, உண்பலிக்கு - உண்ணும்பலியின் பொருட்டு, நம் மனையின் ஊடே - நமது இல்லின்கண்ணே, கூடல் கண்ணுதலார் - மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுள், உள்ளாளக்கானம் இசைத்து - தேவகாந்தருவம்பாடி, என் உள்ளம் கவர்ந்தார் போலும் - என் மனத்தைக் கொள்ளை கொண்டார்போலும், கண்ணுதலார் பாடும் அவி நயம் கண்டு - அச்சோமசுந்தரக்கடவுள் பாடிய அவிநயத்தைப்பார்த்து, ஆகம் கலப்பேன் - அவரது திருமார்பிற் கலக்கத் தொடங்கினேன், பாதி பெண் உருவமாய் இருந்தார் - தமது திருமேனியிற் பாதி பெண்வடிவமாயிருந்தனர், வெள்கி விழித்து - அதனால் கலத்தலொழிந்து விழித்து, ஆவிபெற்றேன் - உயிர்பிழைத்தேன்.

உள்ளாளக்கானம் என்றது உபதேசதிட்சையின்மேல் நின்றது. இதுவும் அவ்வணி. (௪௧)

ஐயரியுண்கண்ணாய்திருவாலவாயுடையாரையங்கொள்வான்
மையனகைசெய்தென்வனமுலையின்மேற்செங்கைவைத்தார்போலு
மையனகைசெய்தென்வனமுலைமேற்கைவைப்பமாழ்கிச்சோர்வேன்
றையலிடங்கண்டுநடுநடுங்கிவிழித்தாவிதரித்தேன்போலும்.

(இ-ள்.) ஐயரி உண் கண்ணாய் - பஞ்சரேகை படர்ந்த கண்களையுடையவளே, திருவாலவாய் உடையார் ஐயம் கொள்வான் - திருவாலவாயென்னு மதுரைத் திருப்பதியையுடைய சோமசுந்தரக்கடவுள் பலியேற்கும்பொருட்டு, மையல் நகை செய்து-காமக்குறிப்புணர்த்தும் புன்னகையரும்பி, என் வனம்முலையின்மேல் செங்கை வைத்தார்போலும் - எனது சந்தனக்கோலத்தையுடைய தனத்தின்மேல் தமது செவந்த திருக்கரத்தைவைத்தனர்போலும், மையல் நகை செய்து - அப்புன்னகையரும்பி, என்வனம்முலைமேல் கைவைப்பமாழ்கி சோர்வேன் - எனது சந்தனக்கோலத்தையுடைய தனத்தின்மேற் கைவைக்க மயங்கிச்சோரும் யான், தையல் இடம்

கண்டு நடுநடுங்கி விழித்து - உமாதேவியாரிடப்பாகத்தைக்கண்டு நடுக்குற்று விழித்து, ஆவி தரித்தேன் - உயிர் பிழைத்தேன்.

என் வனமுலையின்மேற் செங்கைவைத்தார் என்றது பரிசதீட்சையின்மேல் நின்றது. இதுவும் அவ்வணி. (சஉ)

மேற்படி வேறு.

பாடுவாரிருவர்க்கன்றுபரிசிலாக்கொடுத்தசங்கத்
தோடுவார்செவியிலூட்டுந்தொண்டுகண்டிதன்மேனின்று
பாடுவாயுனக்கேயிந்தப்பலகையென்றாழ்ந்தவன்பி
னாடுவார்விசும்பிற்கூறிநகைமணிப்பலகையிட்டார்.

(இ-ள்.) பாடுவார் இருவர்க்கு - பாடுந் தும்புரு நாரத ரிருவருக்கும், அன்று பரிசில் ஆக கொடுத்த - அக்காலையில் கொடையாகக் கொடுத்தருளிய, சங்கம் தோடு வார் செவியில் ஊட்டும் தொண்டு கண்டு - சங்கத்தோடணிந்த நீண்ட திருச்செவியிலூட்டும் இசைத்தொண்டை யுணர்ந்து, இதன்மேல் நின்று பாடுவாய் - இந்தப்பலகையின்மேல் நின்று பாடுவாய், உனக்கே இந்த பலகை என்று - உனக்கே யிந்தப் பலகை யுரியதென்று, ஆழ்ந்த அன்பின் நாடுவார் - மெய்யன்பினை நாடியருளும் பெருமானார், விசும்பில் கூறி நகை மணி பலகை இட்டார் - அசரீரி கூறிவிளங்கும் இரத்திநமழுத்திய பலகையொன்று கொடுத்தருளினார்.

சங்கத்தோட்டின் வடிவாகநின்று தும்புரு நாரத ரிருவரும் கீதம்பாடத் தமது திருச்செவிகளைக் காணியாகக்கொடுத்த பெருமானார் சேற்றிற்கால் புதைய நின்று பாணபத்திரர் கீதம்பாட இசைவரோ என்பார் நகைமணிப்பலகையிட்டார் என்றார் "தோடுடைய செவியன்" என ஆளுடைய பிள்ளையார் தேவாரத்தில் முதற்கண் விதந்தகுறிப்பும், நக்கீரதேவர் திருவெழுகூற்றிருக்கையில் "இரண்டுநின்குழையே யொன்றுநின்னேறே" என்று விதந்த குறிப்பும் அது. (சங)

இறையருளாணையஞ்சியிட்டபொற்பலகையேறி
நறைகெழுமதுரகீதம்பாடிநான்மறைகள்சூடு
மறைகழலகத்துட்கொண்டுபலகையுமங்கைகொண்டு
மறைவழியாழ்வல்லோன்றன்மனைவயிற்செல்லுமெல்லை.

(இ-ள்.) இறை அருள் ஆணை அஞ்சி - இறைவரருளிய ஆஞையை யஞ்சி, இட்ட பொன் பலகை ஏறி - கொடுத்தருளிய பொன்னுலாகிய பலகையின்மேலேறி நறை கெழு மதுரகீதம் பாடி - தேனினிமைபோன்ற இனியகீதத்தைப்பாடி, நான் மறைகள் சூடும் அறை கழல் அகத்துள் கொண்டு - நான்கு வேதங்களுஞ் சூடிய ஒலிக்கும் வீரகண்டைகட்டிய திருவடியைத் தமது மனத்திற் பதித்து, பலகையும் அங்கை கொண்டு (கொடுத்தருளிய) அப்பலகையையுந் தமது கையிலேந்தி, மறை வழி யாழ் வல்லோன் - வேதத்தின் வழியாழ் வாசித்தலில் வல்ல பாணபத்திரர், தன்மனைவயின் செல்லும் எல்லை - தமது வீட்டிற்செல்லுங் காலையில்.

"நான் மறைப்பயனுமேழிசை" என்றமையால் மறைவழி யாழ்வல்லோன் எனவும், ஏறுதற்கு அஞ்சினாராதலால் இறையருளாணை யஞ்சியிட்ட பொற்பலகையேறி எனவுங் கூறினார். (சச)

மின்னுமாமேகநீங்கிவிசும்புவாய்விளங்கித்தென்றன்
மன்னுமாமலையின்மேயமாதவன்குடித்தவைகற்

பொன்னுமாமணியுமுத்தும்புலப்படக்கிடந்தவேலை
யென்னமீன்விளங்கித்தோன்றவேகியில்புகுந்தானிப்பால்.

(இ-ள்.) தென்றல் மன்னு மாமலையில் மேய - மந்தமாருதம் நிலைபெற்ற பெரிய பொதியமலையிற் பொருந்திய, மாதவன் குடித்த வைகல் - அகத்தியமுனிவர் பருகிய காலையில், பொன்னும் மாமணியும் முத்தும் புலப்பட கிடந்த வேலை என்ன - பொன்னும் பெரிய இரத்தினங்களும் முத்தங்களுங் கண்களுக்குப் புலப்பட இருந்த கடல்போல, மின்னும் மாமேகம் நீங்கி - மின்னல் வீசும் பெரிய மேகங்கள் நீங்குதலால், விசும்பு வாய் விளங்கி மீன் விளங்கி தோன்ற - ஆகாயத்தின் வாய் விளங்க நட்சத்திரங்கள் விளங்கித்தோன்ற, ஏகி இல் புகுந்தான் - (வழிதெரிந்து) சென்று தமது இல்லிற்சென்றார், இ பால் - இப்புறம்.

விசும்பு கடல்போலவும் நட்சத்திரங்கள் பொன்னும் இரத்தினங்களும் முத்தங்களும் போலவும் எனக்கூறியது பண்புவமை. விளங்கி செயவெனெச்சத்திரிபு.

பாயிருட்படலங்கீண்டுபரிதிகண்விழித்துச்செங்கை
யாயிரம்பரப்பிமுந்நீரலைகடனீந்துமெல்லை
மாயிருஞாலங்காக்கும்வரகுணனிரவுதங்க
ணாயகன்பாடற்கீந்தநல்லருட்பரிசில்கேட்டான்.

(இ-ள்.) பரிதி கண் விழித்து பாய் இருள் படலம் கீண்டு - சூரியன் கண்விழித்துப்பரவிய இருட்கூட்டத்தைக் கிழித்து, செங்கை ஆயிரம் பரப்பிமுந்நீர் அலை கடல் நீந்தும் எல்லை - செவ்வந்த ஆயிரங்கரங்களைப் பரப்பி மூன்று தொழிற்குணங்களையுடைய அலைக்குங் கீழைக்கடலை நீந்திச்செல்லுங் காலையில், மாயிரு ஞாலம் காக்கும் வரகுணன் - பெரிய நிலவுலகைக் காக்கும் வரகுணபாண்டியர், இரவு - நடுநிசியில், தங்கள் நாயகன் பாடற்கு ஈந்த - தங்கள் குலதெய்வமாகிய சோமசுந்தரக் கடவுள் பாணபத்திரர் பாடலுக்குக் கொடுத்தருளிய, நல் அருள் பரிசில் கேட்டான்- நல்ல அருட்கொடையைக் கேள்வியுற்றனர்.

உதயஞ் செய்தலும் இருளொழித்தலும் கிரணங்களை வீசுதலுங் கீழைக்கடல் கடத்தலுமாகிய சூரியன் செயல்களை விழித்து, கீண்டு, செங்கையாயிரம் பரப்பி முந்நீரலை கடனீந்தும் எனக் கூறியது குணவணி. (௧௬)

இன்னிசைக்கரசையிட்டபலகைமீதிருத்திமன்னர்
மன்னவனிவனேயெங்கண்மதுரைநாயகனென்றுன்னி
மின்னிவர்மணிப்பூணல்கிவிளைநிலமிகவுநல்கி
நன்னிதிவெறுப்பநல்கிவரிசையாநடத்திவந்தான்.

(இ-ள்.) இன் இசைக்கு அரசை - இனிய இசையில் வல்ல பாணபத்திரரை, இட்ட பலகை மீது இருத்தி - கொடுத்தருளிய அந்தப் பொற்பலகையின்மேலெழுந்தருளச்செய்து, மன்னர் மன்னவன்-வரகுணபாண்டியர், இவனே எங்கள் மதுரை நாயகன் என்று உன்னி - இவரே யெங்கள் குலதெய்வமாகிய சோமசுந்தரக்கடவுளென்று கருதி, மின் இவர் மணி பூண் நல்கி - ஒளிபரந்த இரத்தினமழுத்திய ஆபரணங்களைக்கொடுத்து, விளை நிலம் மிகவும் நல்கி - விளைவு சுருங்காத கழனிகளையுமிகவுங்கொடுத்து, நல் நிதி வெறுப்ப நல்கி - இன்பம் விளைக்குந் தனங்களையும் ஆ

சைகேட்க்கொடுத்து, வரிசையா நடத்தி வந்தான் - என்றும் இவ்வாறே வரிசையாகக்கொடுத்து நடத்திவந்தனர். (௧௭)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

இறையருள்வரிசைபெற்றபத்திரனுமேறுயர்த்தவனைநாற்போது
முறையினல்வழிபட்டொழுகுவானாகமுடிகெழுவரகுணவேந்து
மறைமுதலடிகள்வந்துவந்தனையால்வழுத்துவான்சில்பகல்கழிய
நிறைபெருஞ்சுடரோன்றிருவுருவடைந்துநெறியினற்சிவபுரமடைந்தான்

(இ-ள்.) இறை அருள் வரிசை பெற்ற பத்திரனும் - வரகுணபாண்டியர் கொடுத்த வரிசைபெற்ற பாணபத்திரரும், ஏறு உயர்த்தவனை - இடபக்கொடியையுயர்த்திய சோமசுந்தரக்கடவுளை, நாற் போதும் - நான்குகாலத்தும், முறையினல் வழிபட்டு ஒழுகு வானாக - ஆகமமுறைப்படி வழிபட்டு நடந்துவர, முடி கெழு வரகுண வேந்தும் - கிரீடஞ்சூடிய வரகுணபாண்டியரும், மறை முதல் அடிகள் வந்து வந்தனையால் வழுத்துவான் - வேதமுதல்வராகிய சோமசுந்தரக்கடவுளை வலம்வந்து வந்தனையோடு துதிப்பவர், சில் பகல் கழிய - சிலநாள் செல்ல, நிறை பெருஞ்சுடரோன் திரு உரு அடைந்து - சாரூபம் பெற்று, நெறியினல் சிவபுரம் அடைந்தான் - சிவபெருமானார் திருவருள் வழித்தாகச் சிவபுரத்தை யடைந்தனர்.

நாற்போதுகாலை, நண்பகல், மாலை, நடுநிசி. நிறைபெருஞ்சுடரோன் எங்கும் நிறைந்த பேரொளியா யுள்ளவர். (௧௮)

பலகையிட்டபடலம் - முற்றிற்று.

ஆகப் பாயிரம் உள்படத் திருவிருத்தம் - உ௧௪௮.

## நாற்பத்துநான்காவது

# இசைவாதுவென்றபடலம்.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

கூடலம்பதியிலாடகமேருக்கொடியவிற்குரிசிலடியவனுக்குப்
பாடலின்பரிசிலாகியசெம்பொற்பலகையிட்டபடிபாடினமன்னன்
வீடரும்பொருவில்கற்புடையாளோர்விறலியைப்பரமனிறையருள்பற்றி
மாடகஞ்செறியும்யாழ்வழிபாடிவாதுவென்றவரலாறுமிசைப்பாம்.

(இ-ள்.) கூடல் அம்பதியில்-மதுரைத்திருநகரில், ஆடகம் மேரு கொடியவில் குரிசில்-பொன்மேருவாகிய வெற்றிக்கொடிகட்டிய வில்லையேந்திய சோமசுந்தரக்கடவுள், அடியவனுக்கு-பாணபத்திரருக்கு, பாடலின் பரிசில் ஆகிய - (அவர்பாடிய) பாடலுக்குப் பரிசிலாக, செம்பொன் பலகை இட்டபடி பாடினம்-செம்பொன்னலாகிய பலகையைத் தந்தருளிய திருவிளையாடலைக் கூறினோம், அன்னான் வீடு அரும் பொருவில் கற்பு உடையாள் - அப்பத்திரருடைய அழியாத ஒப்பற்ற கற்பினையுடை

ய மனைவியார், பரமன் நிறை அருள் பற்றி-சிவபிரான் திருவருளையோர் பற்றுக்கோடாகப் பற்றி, மாடகம் செறியும் யாழ் வழி பாடி - மாடக மமைந்த வீணையின்வழியே பாடி, ஓர் விறலியை - ஒருபாடினியை, வாது வென்ற வரலாறும் இசைப்பாம் - வாதில்வென்ற திருவிளையாடலையும் இனிக் கூறுவாம்.

மாடகம் நால்வகை விரலளவான பாலிகைவடிவாய் நரம்பை வலித்தல் மெலித்தல் செய்யும் கருவி. ஆகிய செய்யிய வென்னும் வினையெச்சம். (க)

வரகுணன்கதியடைந்தபினம்பொன்மௌலிசூடியவிராசவிராசப்
புரவலன்புவிமடந்தையைவேட்டுப்புயந்தழீஇக்கொடுநயந்தருநாளிற்
பரவுமன்பதைபுரந்தொழுகந்தப்பஞ்சவற்குரியரஞ்சனவுண்கண்
மரபின்வந்தமடவார்பலரேனைமையல்செய்யுமடவார்பலர்மாதோ.

(இ-ள்.) வரகுணன் கதி அடைந்த பின் - வரகுணபாண்டியர் சிவகதியடைந்த பின்னர், அம்பொன் மௌலி சூடிய இராச இராசப்புரவலன் - அழகிய பொன்னாலாகிய கிரீடஞ்சூடிய இராசராச பாண்டியன், புவி மடந்தையை வேட்டு புயம் தழுவி கொடு நயம் தரு நாளில்-பூதேவியை மணந்து புயத்தில் தழுவி (தன் கோற்கீழ்வாழுங் குடிகளுக்கு) இன்பந்தந்து வருங்காலையில், பரவும் மன்பதை புரந்து ஒழுகு அந்த பஞ்சவற்கு - பரவிய மக்கட்பரப்பைப் பாதுகாத்து மறநூல்வழி நடக்கும் அந்தப்பாண்டியனுக்கு, உரியர் - உரியபெண்கள், மரபின் வந்த அஞ்சனம் உண் கண் மடவார் பலர் - தனது மரபில் வந்த மையெழுதிய கண்களையுடைய பெண்கள் பலர், ஏனை மையல் செய்யும் மடவார் பலர் - அவரொழிந்த மயக்கஞ்செய்யுங் காமக்கிழத்தியர் பலர். (உ)

அன்னபோகமடவாருளொருத்தியரசனுக்கமுதுமாவியுமாகு
மின்னனாண்மதுரகீதமிசைக்கும்விஞ்சையின்றுறைவலாளவளுக்கும்
பன்னகாபரணனின்னிசைபாடும்பத்திரன்பொருவில்கற்புடையாட்கு
மன்னுகீதவினையாலிகன்மூளவழுதிகாதன்மடமாதுபொருளாய்.

(இ-ள்.) அன்னபோக மடவார் உள் ஒருத்தி-அந்தக் காமக்கிழத்தியருளொருத்தி, அரசனுக்கு அமுதம் ஆவியும் ஆகும் மின் அன்னாள் - இராசராசபாண்டியனுக்கு உணவு முயிருமாகிய மின்னலையொத்த பேரழகுவாய்ந்தவள், மதுரகீதம் இசைக்கும் விஞ்சையின் துறை வல்லாள் - இனிய கீதம்பாடும் கல்வியின் துறையில் வல்லவள், அவளுக்கும் - அக்காமக்கிழத்திக்கும், பன்னகாபரணன் இன் இசை பாடும் பத்திரன் பொருவு இல் கற்பு உடையாட்கும் - சர்ப்பாபரணத்தை யணிந்த சிவபிரான் சந்நிதியிலினிய இசைபாடும் பத்திரருடைய ஒப்பில்லாத கற்பினையுடைய மனைக்கிழத்திக்கும், மன்னு கீதம் வினையால் இகல் மூள் - நிலைபெற்ற கீதத்தொழிலா லொருவர்க்கொருவர் பகையுண்டாக, வழுதி காதல் மடமாது பொருளாய் - அப்பாண்டியனுடைய காமக்கிழத்தி சினங்கொண்டு. (௩)

பாடினிக்கெதிரோர்பாடினிதன்னைப்பாடவிட்டிவள்படைத்தசெருக்கை
யீடழிப்பலெனவெண்ணியெழீஇத்தன்னிறைமகற்கஃதிசைத்தலுமந்தத்
தோடிறப்பொருகயற்கணினாடான்சொன்னவாறுமுழுகுமன்னவர்மன்ன
னுடியத்தகையவிறலியையீழநாட்டினும்வரவழைத்துவிடுத்தான்.

(இ-ள்.) பாடினிக்கு எதிர் ஓர் பாடினி தன்னை பாடவிட்டு - பாணபத்திரனுடைய மனைவிக்கு எதிரே யொரு பாடினியைப் பாடவிட்டு, இவள் படைத்த செருக்

கை ஈடு அழிப்பல் என எண்ணி எழீஇ - இப்பாணபத்திரன் மனைவி படைத்த கர்வத்தை யடியோடழிப்பேனென்று கருதி யெழுந்து, தன் இறைமகற்கு அஃது இசைத்தலும் - தனது தலைவனாகிய பாண்டியனுக்கு அதனைக்கூற, அந்த தோடு இறபொரு கயல் கண்ணினாள் தான் - (காமக்கிழத்தியருட்சிறந்த) தோடு புறங்காட்டப் போர்செய்யும் கயல்போன்ற கண்களையுடைய அந்தக்காமக்கிழத்தி, சொன்ன ஆறு ஒழுகுமன்னவர் மன்னவன்-சொன்னவண்ணம் (அவள் மேற்கொண்ட காதலால்) நடக்கும் அப்பாண்டியன், நாடி - ஆராய்ந்து, அ தகைய விறலியை-வெல்லும் அத்தகைமையையுடைய பாடினியை, ஈழநாட்டினும் வர அழைத்து விடுத்தான் - ஈழநாட்டினின்றும் வரவழைத்தனன். (௪)

பந்தயாழ்முதுகுதைவரவிட்டுப்பாடலாயமிருபக்கமுமொய்ப்ப, வந்த
பாடினிமடந்தையுமன்னர் மன்னனைத்தொழுதொர்கின்னரமாதிற், சந்த
வேழிசைமிழற்றினளின்றாடன்னைநோக்கியொருமின்னிடையாண்மேற்,
சிந்தைபோக்கிவருதீப்பழிநோக்காத்தென்னருக்கரசனின்னதுசெப்பும்.

(இ-ள்.) பந்தம் யாழ் முதுகுதை வரவிட்டு - கட்டமைந்த வீணைமுதுகைத் தடவத் தொங்கவிட்டு, பாடல் ஆயம் இருபக்கமும் மொய்ப்ப - பாடுந்தோழிகளிரு பக்கலிலுஞ் சூழ்ந்துவர, வந்த பாடினி மடந்தையும் - மரக்கலத்தினின்றும் வந்த பாடினியும், மன்னர் மன்னனை தொழுது - இராசராசபாண்டியனை வணங்கி, ஓர் கின்னரமாதில் - ஒரு கின்னரப்பெண்போல, சந்தம் ஏழிசை மிழற்றினள் நின்றாள் தன்னை நோக்கி - பண்ணாக அமைந்த ஏழிசைகளையும் பாடிநின்ற ஈழப்பாடினியை நோக்கி, ஒரு மின் இடையாள்மேல் சிந்தைபோக்கி - ஒரு காமக்கிழத்திமேல் தன் மனத்தைச்செலுத்தி, வரு தீ பழி நோக்காத-அதனால் வருங் கொடும்பழியை நோக்காத, தென்னருக்கு அரசன் இன்னது செப்பும் - பாண்டியர்க்குள் வீரம் வாய்ந்த அப்பாண்டியன் இது கூறுகின்றான். (௫)

பத்திரன்மனைவிதன்னையெம்முன்னர்ப்பாடுதற்கழையதற்கவளாற்றாது
த்தரஞ்சொலினும்யாமவள்சார்பாயுனைவிலக்கினும்விடாதுதொடர்ந்தே,
சித்தநாணுறவஞ்சினமிட்டுச் செல்லனில்லெனவளைந்துகொளென்னா,
வெய்த்தநுண்ணிடையினளையிருக்கைக்கேகிநாளைவருகென்றுவிடுத்தான்.

(இ-ள்.) பத்திரன் மனைவி தன்னை எம்முன்னர் பாடுதற்கு அழை - பாணபத்திரனுடைய மனைவியை யெமது முன்னே பாடுதற்கு அழையாய், அதற்கு அவள் ஆற்றாது உத்தரம் சொலினும் - அவள் (உன்னோடுபாட ஆற்றாமல்) போக்குச்சொன்னாலும், யாம் அவள் சார்பு ஆய் உன்னை விலக்கினும்-யாம் அவள் பக்கமாய் நின்று உன்னைத்தடுத்தாலும், விடாது தொடர்ந்து-நீ விடாமல் பின்றொடர்ந்து, சித்தம் நாணம் உற-அவள் மனத்தில் நாணமீதூர, வஞ்சினம் இட்டு-சபதங்கூறி, செல்லல் - போகாதே, நில் என வளைந்து கொள் என்னா-நில்லென்று தடுப்பாயென்று, எய்த்த நுண் இடையினளை - இளைத்த நுண்ணிய இடையையுடைய ஈழப்பாடினியை, இருக்கைக்கு ஏகி நாளைவருக என்று விடுத்தான் - (இன்றுனக்குவிடுத்த) விடுதிக்குச்சென்று நாளைக்கு வரக்கடவாயென்று அனுப்பினான். (௬)

கலிநிலைத்துறை.

பின்னரின்னிசைப்பத்திரன்பெருந்தகைவிறலி
தன்னையங்கழைத்துளத்தொன்றுபுறத்தொன்றுசாற்று

மென்னொடின்னிசைபாடுவாருளர்கொலோவிங்கென்
றுன்னிவந்திருக்கின்றனளிசைவலாளொருத்தி.

(இ-ள்.) பின்னர் இன் இசைபத்திரன் பெருந்தகை விறலி தன்னை அங்கு அழைத்து - பின்பு இனிய இசைபாடுதலில்வல்ல பாணபத்திரருடைய கற்புவாய்ந்த மனைக்கிழத்தியைத் தன் சமுகத்திலழைத்து, உளத்து ஒன்று புறத்து ஒன்று சாற்றும்-அகத்தொன்றும் புறத்தொன்றுமாகக் கூறுகின்றான், இங்கு என்னொடு இன் இசை பாடுவோர் உளரோ என்று - இச்சபையில் என்னோடிசைபாடுதலில் வல்லாருளரோவென்று, இசைவல்லாள் ஒருத்தி - இசைநூலில்வல்ல பெண்ணொருத்தி, உன்னி வந்திருக்கின்றனள் - கருதி யகங்கரித்து வந்திருக்கின்றாள்.

பத்திரர் மனைவியை வெல்லுதற்பொருட்டு ஈழநாட்டினின்றும் ஒருவல்ல பாடினியைத் தானழைப்பித்திருந்தும் ஒன்றும் உணராதான்போல என்னொடின்னிசைபாடுவாருளர்கொலோ விங்கென்றுன்னி வந்திருக்கின்றனள் என்றமையால் உளத்தொன்று புறத்தொன்று சாற்றும் என்றார். (எ)

ஆடமைத்தடந்தோளினாயவளொடுங்கூடப்
பாடவல்லையோபகரெனப்பாடினிபகர்வாள்
கோடருந்தகைக்கற்புமிக்கூடலெம்பெருமான்
வீடருங்கருணையுமெனக்கிருக்கையால்வேந்தே.

(இ - ள்.) ஆடு அமை தடம் தோளினாய் - அசையும் மூங்கிலையொத்த பெரிய தோளினையுடையாய், அவளொடும் கூட பாடவல்லையோ பகர் என - மரக்கலத்தில் வந்த பாடினியோடும் நீ கூடநின்று பாடவல்லாயோ கூறென்று வினவ, பாடினி பகர்வாள் - பாணபத்திரர் மனைவி கூறுகின்றார், வேந்தே-அரசனே, கோடு அருந்தகை கற்பும் - மாறுபடுதலில்லாத பெருந்தகைமையையுடைய கற்புநிலையும், இ கூடல் எம்பெருமான் வீடு அருங்கருணையும் - இந்த மதுரையிலெழுந்தருளிய வெமது சோமசுந்தரக்கடவுளின் அழிதலில்லாத திருவருளும், எனக்கு இருக்கையால் - எனக்குக் கைகூடியிருத்தலால்.

கொழுநன் வழிநிற்குங் கற்புடைமடவார்க்கு அக்கொழுநனையன்றி வேறு தெய்வமின்றாயினும் தங்கணவர் சொல்வழித் திருவாலவாயுடையார்க்கு அன்புபூண்டொழுகினர் என்பார் கோடருந்தகைக் கற்பும் என முன்னர் விதந்து கூறியும், அப்பெருங்கற்புபோல மெய்யன்பும் பெரிதுடைமையால் பெற்ற திருவருள் பெரிதென்பார் வீடருங்கருணையும் எனப் பின்னர் விதந்துங் கூறினார். (அ)

பாடிவெல்வதேயன்றிநான்பரிபவமுழந்து
வாடுவேனலேனென்றுரைவழங்கலுமதுக்கா
லேடுவார்குழலவளையுமிருக்கையுய்த்திருந்தா
னீடுவார்தினைப்பொருநையந்தண்டுறைநிருபன்.

(இ-ள்.) நான் பாடி வெல்வதே அன்றி - நான் பாடி வெற்றிகொள்ளுதலேயல்லாமல், பரிபவம் உழந்து வாடுவேன் அல்லேன் என்று உரைவழங்கலும்-(தோல்வியால்) துன்பமுற்று வாட்டமுறேனென்று கூற, மது கால் ஏடுவார் குழல் அவளையும் இருக்கை உய்த்து - தேன் சிந்து மலரிதழை யணிந்த நீண்ட கூந்தலையுடைய பாணபத்திரர் மனைவியையும் அவர் இல்லிற்குச்செலுத்தி, நீடுவார் தினை பொரு

னை அம் தண் துறை நிருபன் இருந்தான் - நீடிய பெரிய அலைக்ளையுடைய தாமிரபர் ணியின் அழகிய தண்ணிய துறையையுடைய பாண்டியனிருந்தனன்.

அவற்றின் மிகுதியால் வெல்வதே திண்ணம் என்பார் பாடிவெல்வதேயன்றி நான் பரிபவமுழந்து வாடுவேனலேன் என்றார், (௬)

மற்றைவைகலவ்விருவரைப்பஞ்சவன்மதுரைக்
கொற்றவன்றனதவையிடையழைத்துநேர்கூட்டிக்
கற்றவேழிசைகேட்குமுன்கலத்தினும்போந்த
வெற்றிவேன்மதர்நெடுங்கணாள்விறலியைவைதாள்.

(இ-ள்.) மற்றை வைகல் - பின்னாளில், அவ்விருவரை பஞ்சவன் மதுரைக் கொற்றவன் தனது அவை இடை அழைத்து, அந்த இரண்டு பாடினிகளையும் மது ரைக்கு அரசனாகிய பாண்டியன் தனது சபையில் வருவித்து, நேர்கூட்டி கற்ற ஏழி சை கேட்கு முன் - இருவரையுஞ் சந்திப்பித்து அவர்கள்கற்ற குரல் முதலிய ஏழி சைகளையுங்கேட்பதற்குமுன், கலத்தினும் போந்த- மரக்கலத்தினின்றும் வந்த, வெ ற்றி வேல் மதர் நெடுங்கணாள் விறலியை வைதாள்-வெற்றிவாய்ந்த வேல்போன் ற மதர்த்த நெடிய கண்களையுடை பாடினி பாணபத்திரர் மனைவியை வைதனள். ()

குற்றமெத்தனையெத்தனைகுணங்கள்யாழ்க்கோலுக்
குற்றதெய்வம்யாவிசைப்பதெவ்வுயிருடம்புயிர்மெய்
பெற்றவோசையெவ்வளவவைக்குத்தரம்பேசி
மற்றெனோடுபாடில்லையேல்வசையுனக்கென்றாள்.

(இ-ள்.) யாழ்க் கோலுக்கு எத்தனை குற்றம் எத்தனை குணங்கள் - வீணைக் கு எவ்வளவு குற்றங்கள் எவ்வளவு குணங்கள், உற்ற தெய்வம் யா - பொருந்தி ய தெய்வங்கள் யாவை, இசைப்பது எவ்வுயிர் எவ்வுடம்பு எவ்வுயிர் மெய் - ஒ லிப்பது எந்தவுயிரொழுத்து எந்தமெய்யெழுத்து எந்த வுயிர்மெய்யெழுத்து, பெற்ற ஓசை எவ்வளவு - (அவைகட்கு) அமைந்த ஒலி யெவ்வளவின, அவைக்கு உத்தரம் பேசி - அவைகட்கு விடைகூறி, மற்று என்னோடு பாடு - பின்பு என்னோடுபாடு, இல்லையேல் உனக்கு வசை என்றாள் - இல்லையாயின் உனக்குக் குற்றம் விளையும் என்றனள்.

குற்றம் ஆவன செம்பகை, ஆர்ப்பு, கூடம், அதிர்வு இவை பிறத்தற்குரிய நீரிலே நின்றிளகியதும், மெல்கியதும், வெந்ததும், தக்கநிலத்திற் பிறவாததும், இடிவீழ்ந்ததும், நோயுற்றதுமான மரங்களாம். நோயாவன வெயிலுங் காற்று நிரு நிழலு மிகுதல். செம்பகையாவது பண்ணோடுவராத இன்பமில்லாத ஓசை. ஆர்ப் பாவது மாத்திரை கடந்தொலித்தல். கூடம்ஆவது இசைவழிப்படாது மழுங்குதல் அதிர்வு ஆவது இழுமெனும் ஓசையின்றிச் சிதறியுரைக்கும் உச்சரிப்புடையது "இன் னிசை வழியதன்றி யிசைத்தல் செம்பகையதாகும் - சொன்னமாத்திரையினோங்க விசைத்திடுஞ் சுருதியார்ப்பே - மன்னியவிசைவராது மழுங்குதல் கூடமாகும் - ந ன்னுதல் சிதறவுந்தலதிர்வென நாட்டினாரே "நீரிலேநிற்றலழுகுதல் வேதனில மயங் கும் - பாரிலே நிற்றலிடிவீழ்தல் நோய்மரப்பாற் படல்" எனவரும் ஏதுக்களாலு ணர்க. குணங்கள் ஆவன கொன்றை, கருங்காலி, முருக்கு, குமிழ், தணக்கு அக்கு ற்றங்களொழிந்த மரங்களாம் "சொல்லிய கொன்றை கருங்காலி மென்முருக்கு - நல்லகுமிழுந்தணக்குடனே - மெல்லியலாய். உத்தமமான மரங்களிவையென்றார்

வித்தகயாழோர்வீதி" "இருநிலமடந்தை யீன்றதிரு விசம்பென்னுங் கைத்தாய் - திருநிலமின்னுப் பொன்னுண்முகின்முலை மாரித்தீம்பால் - ஒருநலங் கவினியூட்டவுண்டுநோய் நான்கு நீங்கி - அருநலங் கவினிவாள்வா யரிந்திதுவந்ததென்றான்" என்ற ஏதுக்களாலுணர்க. தெய்வங்களாவன விசுவாமித்திரன், சமதக்கினி, சந்திரன், சூரியன், கௌதமன், காசிபன், ஈசன். தெய்வம்பொருளா லுயர்திணையேனும் சொல்லாலஃறிணையாதலால் யா என்னும் அஃறிணைப் பன்மைப்பயனிலை தந்தார்.

இருமையும்பெறுகற்பினளியம்புவாள்கலத்தின்
வருமரும்பெறற்கல்வியும்வாதின்மேலூக்கப்
பெருமையும்பலர்விரும்புறுபெண்மையின்செருக்குந்
திருமகன்சவையறியவாய்திறக்கவேண்டாவோ.

(இ-ள்.) இருமையும் பெறு கற்பினள் இயம்புவாள் - இகத்தையும் பரத்தையும் பெறுதற்குரிய கற்பினையுடைய பத்திரர் மனைவியார் கூறுகின்றனர், கலத்தின் வரும் அரும் பெறல் கல்வியும் - மரக்கலத்தினின்று மிக்குவந்த பெறுதற்கரிய கல்வியையும், வாதின் மேல் ஊக்கப் பெருமையும் - வாதின்மேற் சென்ற ஊக்கத்தின் பெருமையையும், பலர் விரும்புறு பெண்மையின் செருக்கும் - பலரும் விரும்புவதாகிய பெண்ணலத்தின் செருக்கையும், திரு மகன் சவை அறிய வாய் திறக்க வேண்டாவோ - இப்பாண்டியன் சபையிலுள்ளோர் அறிய வாய்திறக்க வேண்டாமா.

இம்மையிற் புகழையு மறுமையிற் பதமுத்தியையும் பெறுதற்குரிய சாதனம் கற்பாதலால் இருமையும்பெறு கற்பினள் எனவும், மரக்கலத்தின்மேல் வந்தது ஈழப்பாடினிகற்ற கல்வியால் ஆதலால் உடைமைமேலேற்றி அரும்பெறற் கல்வியும் எனவும், அதனாலெழுந்த செருக்கு ஆதலால் வாதின்மேலூக்கப் பெருமையும் எனவும், பலரும்விரும்பும் பொதுமகளாதலால் பெண்மைச் செருக்கும் எனவும், இவற்றால் பொருள்கவரவேண்டுதலால் திருமகன் சவையறியவாய் திறக்கவேண்டாவோ எனவுங் கூறினர். (௬௨)

நெய்யுண்பூங்குழன்மடவாரானின்னொடும்வாது
செய்யும்பூசலுக்கெதிரலாற்றீயவாய்திறந்து
வையும்பூசலுக்கெதிரலேன்மானம்விற்றுன்போ
லுய்யும்பாவையரேயதற்கெதிரெனவுரைத்தாள்.

(இ-ள்.) நெய் உண் பூங்குழல் மடவரால் — நெய்பூசிய மலரையணிந்த கூந்தலையுடைய ஈழப்பாடினியே, நின்னொடும் வாது செய்யும் பூசலுக்கு எதிர் அல்லால் — உன்னோடும் இசைவாது செய்யும் போருக்கு நான் எதிரேயல்லாமல், தீயவாய் திறந்து வையும் பூசலுக்கு எதிர் அல்லேன் - கொடிய வாயைத்திறந்து கொடுஞ்சொற்களைப் பேசும்போருக்கு நான் எதிரல்லேன், மானம் விற்று உன்போல் உய்யும் பாவையரோ அதற்கு எதிர் என - மானத்தைவிற்று உன்னைப்போல உயிர்பிழைக்கும் விலைமாதர்களே யக்கொடுஞ்சொற்களுக்கு எதிராவார்களென்று, உரைத்தாள் - கூறினர். (௬௩)

வென்றிமீனவன்விலக்குவான்போலெதிர்விலக்கித்
துன்றுதார்க்குழன்மடந்தைமீர்பாடுமின்றோற்றோர்
வென்றமாதரார்க்கடிமையாய்விடுவதேசபத
மென்றுமானமுண்டாக்கலுமீழநாட்டரிவை.

(இ-ள்.) வென்றி மீனவன் - வெற்றியையுடைய பாண்டியன், விலக்குவா ன் போல் எதிர் விலக்கி - விலக்குவானைப்போல எதிரேநின் றிருவரையும் விலக்கி, துன்று தார் குழல் மடந்தை மீர் பாடு மின் - நெருங்கிய மாலையையணிந்த கூந்தலை யுடையபெண்காள் பாடுங்கள், தோற்றோர் வென்ற மாதரார்க்கு அடிமையாய் விடு வதே சபதம் என்று - தோல்வியுற்றபெண்கள் வென்ற பெண்களுக்கு அடிமையாய் விடுதலே யுங்களுக்குள் சபதமென்று, மானம் உண்டாக்கலும் - இருவருக்கு மான த்தை மூட்டலும், ஈழ நாடு அரிவை - ஈழநாட்டினின்றும் வந்த பாடினி. (௧௪)

முந்தியாழிடந்தழீஇக்குரல்வழிமுகிழ்விரல்போ
யுந்தவேபெருமிதநகையுட்கிடந்தரும்பச்
சந்தவேழிசையிறைமகன்றாழ்செவிக்கன்பு
வந்தகாதலாண்மழலையினமுதெனவார்த்தாள்.

(இ-ள்.) முந்தி - தான் முற்பட்டு, யாழ் இடம் தழுவி - வீணையை யிடத் தோளில் தழுவி, குரல்வழி - குரல் என்னும் நரம்பின்வழியே, முகிழ் விரல் போய் உந்த - முகிழ்த்த விரல்சென்று தாக்கவும், பெருமிதம் நகை உள் கிடந்து அரும்ப - பெருமிதப் புன்னகையானது உள்ளிருந்து முகிழ்ப்பவும், சந்தம் ஏழிசை-பண்ணுக வமைந்த ஏழிசைகளையும், இறை மகன் தாழ் செவிக்கு-இராசராசபாண்டியனுடைய வார்ந்து தாழ்ந்தகாதில், அன்பு வந்த காதலாள் - அவனன்பு கைவந்த காமக்கிழத் தியின், மழலை இன் அமுது என வார்த்தாள் - மழலைச் சொல்லாகிய இனிய அமு தம்போல வார்த்தனள்.

அரசன் தன்பால் நன்குமதிப்புடைமையால் முந்தியெனவும், பெருமிதந கையுட் கிடந்தரும்ப எனவும், காமக்கிழத்தியர் பலருள்ளும் இசைநூலில்வல்ல கா மக்கிழத்திசொல்லே பாண்டியனுக்கு ஏறுதலால் அன்புவந்த காதலாள் மழலையின் னமுதெனவுங் கூறினர். (௧௫)

வீணைவாங்கினண்மாடகமுறுக்கினள்விசித்து
வாணரம்பெறிந்திருசெவிமடுத்தனரியக்கர்
நாணமெல்விரனடைவழிநாவிலையமுதம்
பாணர்கோமகன்விறலியும்பலர்செவிநிறைத்தாள்.

(இ-ள்.) வீணை வாங்கினள் மாடகம் முறுக்கினள் - வீணையையெடுத்து மா டகத்தை முறுக்கி, விசித்து வாள் நரம்பு எறிந்து - கட்டமைத்து ஒள்ளிய நரம்பு களைத் தட்டி, இரு செவி மடுத்தனர் இயக்கர் நாண - தமது இரண்டு காதாலுமடு த்து யக்ஷர்களும் நாண மீதூர, மெல் விரல் நடை வழி - மெல்லிய விரல்கள் அந்ந ரம்புகளில் நடத்தலின் வழியே, நாவின் அமுதம் - தமது நாவால் விளைக்கும் இ சையமுதத்தை, பாணர் கோமகன் விறலியும் - பாணர்தலைவராகிய பத்திரர் மனை வியாரும், பலர் செவி நிறைத்தாள் - பலர்செவிக்கும் ஊட்டினார்.

அரசனை யொருபொருளாகக் கருதிலர் என்பார் பலர் செவிநிறைத்தாள் என்றார். வாங்கினள் முறுக்கினள் மடுத்தனர் முற்றெச்சங்கள். இயக்கர் என்பதனி றுதியில் எச்சவும்மை தொகுத்தல். (௧௬)

அரசனுட்கிடையறிந்திலரவைக்களத்துள்ளார்
விரைசெய்வார்குழற்பாடினிபாட்டலைவியந்தார்
புரைசைமானிரைப்பூழியனிலங்கையிற்போந்த
வரைசெய்குங்குமக்கொங்கையாள்பாட்டலைமகிழ்ந்தான்.

(இ-ள்.) அவைக் களத்துள்ளார் அரசன் உட்கிடை அறிந்திலர் - சபையிலுள்ளவர்கள் அரசனுள்ளக் கருத்தை யறியாதவராய், விரை செய் வார் குழல் பாடினி பாடலை வியந்தார் - வாசங்க மழுநீண்ட கூந்தலையுடையபாணபத்திரர் மனைவியின் பாடலை மெச்சினார்கள், புரைசை மான் நிரை பூழியன்-கழுத்திற் கயிறுபூண்ட யானைக்கூட்டங்களையுடைய பாண்டியன், இலங்கையில் போந்த வரை செய் குங்குமம் கொங்கை யாள் பாடலை மகிழ்ந்தான் - இலங்கையினின்றும் வந்த மலையையொத்த குங்குமக்குழம் பணிந்த தனத்தையுடைய ஈழப்பாடினியின் பாடலை மெச்சினான்.

புரசை புரைசை இடைநிலைப்போலியாய் நின்றது. (௧௭)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தென்னவனுட்கோளெல்லைதெரிந்தனரவையத்துள்ளா
ரன்னவன்புகழ்ந்தவாறேபுகழ்ந்தனரவளைத்தானே
முன்னவனருளைப்பெற்றுமும்மையுந்துறந்தோரேனு
மன்னவன்சொன்னவாறேசொல்வதுவழக்காறன்றோ.

(இ-ள்.) அவையத்து உள்ளார் - சவைக்களத்திலுள்ளவர், தென்னவன் உள் கோள் எல்லை தெரிந்தனர் - பாண்டியனுடைய உள்ளக் கருத்தையுணர்ந்து, அவளைத் தானே - அந்த ஈழப்பாடினியையே, அன்னவன் புகழ்ந்த ஆறே புகழ்ந்தனர் - பாண்டியன் புகழ்ந்த வண்ணமே புகழ்ந்தார்கள், முன்னவன் அருளை பெற்று - சிவபெருமான் திருவருளைப் பெற்று, மும்மையும் துறந்தோரேனும் - ஈடணாத்திரயங்களையுங் கைவிட்டவராயினும், மன்னவன் சொன்ன ஆறே சொல்வது வழக்கு ஆறு அன்றோ - அரசன் சொல்லியவழியே சொல்லுதல் வழக்கல்லவா.

ஈடணாத்திரயங்கள் மண், பெண், பொன். உம்மை அரசன்கோற் கீழ்வாழுங் குடிகளுமன்றி யென நிற்றலால் இறந்தது தழீஇய எச்சப்பொருட்டு, முன்னர்க் கூறிய தலைவற்புறத்தற்கு நீர்சென்ற வழிப்புணை செல்லுதல் வழக்காதல்போல அரசன் சொன்னவழிக் குடிகளும் செல்லுதல் வழக்காதலால் மன்னவன் சொன்னவாறே சொல்லுதல் வழக்காறன்றோ எனக் கூறியது வேற்றுப்பொருள் வைப்பணி. (௧௮)

பொன்றளிரனையாண்மையற்புதுமதுநுகர்ந்துதீது
நன்றறியாதகன்னிநாடவனவையைநோக்கி
யின்றொருநாளிற்றேரத்தக்கதோவிதுவென்றந்த
வென்றடுவேற்கணாளைப்போமெனவிடுத்தான்மன்னே.

(இ-ள்.) பொன் தளிர் அனை யாள் மையல் புது மது நுகர்ந்து - பொன் தளிர்த்தாலொத்த மேனியையுடைய காமக்கிழத்தி தருங் காமமாகிய புத்தம் புதிய நறவைப்பருகி, நன்று தீது அறியாத கன்னி நாடவன் அவையை நோக்கி - நன்மை தீமைகளைப் பகுத்தறியாத பாண்டியன் சபையிலுள்ளோரைப்பார்த்து, இது இன்று ஒருநாளில் தேரத்தக்கதோ என்று - இவ்விசைத்திறத்தை யிப்போதே யொருநாளில ளந்தறியக்கூடுவதோ வென்றுகூறி, அந்த வென்று அடுவேல் கண்ணாளை போம் என விடுத்தான் - அந்த இரண்டுபாடினிகளையும் போகக்கடவீரென விடை கொடுத்தான்.

வென்ற அடுவேல்கண்ணார் பகைவரை வெற்றிகொள்ளும் வேல்போன்ற கண்களையுடையவர். விடுத்தல் வினையாதலால் விடுத்தான் என்றார்-காமமுங் கள்ளுங் கொண்டோரும் பருகினோரும் ஒருசேர அறிவிழந்து குணங் குற்றங்களைப் பகுத்தறிதலின்மை ஒருதலையாதலால் மையற்புதுமது எனவுருவகஞ் செய்தார். (௧௯)

மருவியவாயமேத்தவிருந்தினள்மனைவந்தெய்திப்
புரவலன்றனதுபாட்டைப்புகழ்ந்ததேபுகழ்ந்ததாகப்
பெருமிதந்தலைக்கொண்டாறுப்பெருங்களிப்படைந்துமஞ்சத்
திருமலரணைமேலார்வங்கிளைத்தினிதிருந்தாளிப்பால்.

(இ-ள்.) மருவிய ஆயம் ஏத்த - தன்னைச் சூழ்ந்த பெண்கள் கூட்டம் வாழ்த்த, விருந்தினள் மனை வந்து எய்தி - ஈழத்தினின்றும் வந்த புதிய பாடினிதன்விடுதியில் வந்தடைந்து, புரவலன் தனது பாட்டை புகழ்ந்ததே புகழ்ந்ததாக - பாண்டியன் தனது பாடலைப் புகழ்ந்ததே புகழ்ச்சியாகக்கொண்டு, பெருமிதம் தலைக்கொண்டு ஆறு பெருங் களிப்பு அடைந்து-இறுமாப்புமேற்கொண்டு நீங்காதபெருஞ்செருக்கடைந்து, மஞ்சம் திருமலர் அணை மேல் - மஞ்சத்திற் பரப்பிய அழகிய புஷ்பசயனத்தின்மேல், ஆர்வம் கிளைத்து இனிது இருந்தாள் - மகிழ்ச்சியிடையறாதோங்கக் குறைவின்றிருந்தாள்.

பின்னிகழுந் தெய்வச்செயலை முன்னரறியாத இகழ்ச்சி தோன்றப் புரவலன் றனது பாட்டைப் புகழ்ந்ததே புகழ்ந்ததாகப் பெருமிதந் தலைக்கொண்டு என்றார். (௨௦)

வணங்குறுமருங்கிற்கற்பின்மடவரன்மதங்கிதானு
மணங்கிறைகொண்டநெஞ்சளங்கயற்கண்ணிபாகக்
குணங்குறிகடந்தசோதிகுரைகழலடிக்கீழெய்தி
யுணங்கினள்கலுழ்கண்ணீரளொதுங்கிநின்றிதனைச்சொன்னாள்.

(இ-ள்.) வணங்குறு மருங்கின் கற்பின் மடவரல் மதங்கி தானும் - வளையுமிடையையும் கற்பினையுமுடைய பத்திரர் மனைவியரும், அணங்கு இறை கொண்ட நெஞ்சள் - துன்பங் குடிகொண்ட மனமுடையவராய், அங்கயற் கண்ணி பாகம் - அங்கயற்கண்ணியாரை இடப்பாலுடையவராய், குணம் குறி கடந்த சோதி-குணங் குறிகளைக்கடந்த பேரொளியாகிய சோமசுந்தரக்கடவுளுடைய, குரை கழல் அடிக்கீழ் எய்தி உணங்கினள் கலுழ் கண்ணீரள் - ஒலிக்கும் வீரகண்டை புனைந்த திருவடிக்கீழடைந்து புலர்ந்துசிந்துங் கண்ணீருடையவராகி, ஒதுங்கி நின்று இதனை சொன்னாள் - ஒருபாலொதுங்கி நின்று இதனைக் கூறுகின்றார்.

பிரமன் முதலிய பசுக்களுய்தற்பொருட்டுச் சகளமூர்த்தியாய் அங்கயற்கண்ணியாரை யிடப்பாலிலுடையராயினும் தமக்கோர் விகாரமின்மையின் நிட்களசொரூபியே யென்பார் அங்கயற்கண்ணியாகக் குணங் குறிகடந்த சோதிஎன்றார்.

தென்னவன்றிவையஞ்செய்யகோல்செலுத்திக்காத்த
மன்னவன்வழுதிவாரவழிவழக்குரைப்பதாறு
னன்னவன்கருத்துக்கேற்பவவையருமனையரானார்
பின்னடுகிலைமைதூக்கிப்பேசுவார்யாவரையா.

(இ-ள்.) தென்னவன் ஆகி - பாண்டியர் மரபிற்றோன்றி, வையம் செய்ய கோல் செலுத்தி காத்த மன்னவன் வழுதி - உலகினைச் செங்கோல் செலுத்திக் காக்கும் அரசனாகிய பாண்டியன், வாரம் அழி வழக்கு உரைப்பது ஆனான் - நடுநிலைமையைக் கைவிட்டு அழிவழக்கைப் பேசுவதானான், அன்னவன் கருத்திற்கு ஏற்ப - அப்பாண்டியனுட்கிடைக்கியைய, அவையரும் அனையர் ஆனார்-சபையிலுள்ள பெரியோரும் அத்தன்மையராயினார், ஐயா பின் நடு நிலைமை தூக்கி பேசுவார் யாவர் - ஐயனே பின்பு நடுநிலைமையினின்று சீர்தூக்கிப் பேசுமாக்கள் யாருளர்.

பாண்டியர் மரபிற்றோன்றினோர் யாரும் நடுநிலைமையையுடையவர்களே யென்பார் தென்னவனாகி யெனவும், அதற்கியையக் குடிகளை யோம்புதலால் செங்கோலுடையவன் என்பார் செய்ய கோல் செலுத்திக்காத்த மன்னவன் வழுதியெனவும், அக்குடிகளுள் என்னிடத்துமட்டுங் கொடுங்கோலன் என்பார் வாரவழி வழக்குரைப்பதானான் எனவும், அரசன் சென்ற வழிக்குடிகளுஞ் செல்லுதல் வழக்கு என்பார் அவையருமனையரானார் எனவும், அரசன்மேற் றெய்வம் உளது ஆதலால் தேவரீரன்றிப் பேசுவாரிலர் என்பார் பின்னடு நிலைமைதூக்கிப் பேசுவார் யாவரையா எனவுங் கூறினார். (௨௨)

உன்னருட்டுணைசெய்தென்பாலுறுகணோய்துடைப்பதென்ன
மின்னனாய்நீயேநாளைவெல்லுமாசெய்துமஞ்சே
லென்னவாகாயவாணியீறிலானருளாற்கேட்டு
மன்னருங்கற்பினாடன்மனைபுகுந்திருந்தாண்மன்னோ.

(இ-ள்.) உன் அருள் துணை செய்து - உனது திருவருட்டுணை செய்து, என்பால் உறு கண் நோய் துடைப்பது என்ன-என்னிடத்துள்ள துன்பநோயை யொழிக்கக்கடவாயென்றிரக்க, மின் அன்னாய் நீயே நாளை வெல்லும் ஆறு செய்தும் - மின்னலையொத்தவளே நீயே நாளைக்கு வெல்லும் வண்ணஞ் செய்வோம், அஞ்சேல் என்ன - சிறிதும் அஞ்சாதே என்று, ஆகாயவாணி ஈறிலான் அருளால் கேட்டு - (எழுந்த) அசரீயைச் சோமசுந்தரக்கடவுளின் திருவருளாற்கேட்டு, மன் அருங்கற்பினாள் தன் மனை புகுந்து இருந்தாள் - நிலைபெற்ற அரிய கற்பினையுடைய பத்திரர் மனைவியார் தமது இல்லிற்சென்றிருந்தனர்.

அடியவர்க்கிடையூறுவரின் அவ்விடையூற்றையன்றே யொழிக்குங் கருணாநிதியாதலால் மின்னனாய் நீயே நாளை வெல்லுமா செய்துமஞ்சேல் - என்னவாகாயவாணி யீறிலானருளாற்கேட்டு என்றார். "காதலர்க்கெய்ப்பினில் வைப்புவாழ்க" என்னுந் திருவாசகத்தால் உணர்க. துடைப்பது துவ்விகுதியீற்று வியங்கோள்வினைமுற்று. "கொள்ளப்படாது மறப்பதறிவிலன்கூற்றுக்களே" எனவரும் ஏதுவால் உணர்க. (௨௩)

அன்றுபோன்மற்றைஞான்றுமழைத்தனன்பாடல்கேட்டுக்
குன்றுபோற்புயத்தானென்னற்கூறியவாறேகூற
மன்றுளார்பலருமன்னவண்ணமேசொன்னார்கேட்டு
நின்றபாண்மடந்தைபாண்டிநிருபனைநோக்கிச்சொல்வாள்.

(இ-ள்.) அன்று போல் மற்றை ஞான்றும் அழைத்தனன் - சென்ற நாள் போல் வருநாளிலும் அவ்விரண்டு பாடினிமாரையு மழைப்பித்து, பாடல் கேட்டு - அவர்கள் பாடும் பாடலைக்கேட்டு, குன்று போல் புயத்தான் றென்னல் கூறிய ஆறே

கூற - மலைபோல் உயர்ந்த புயத்தையுடைய பாண்டியன் நேற்றுக் கூறியதுபோல வே யின்றுங்கூற, மன்று உள்ளார் பலரும் அன்ன வண்ணமே சொன்னார் - சபை யிலுள்ள பெரியோர் பலரும் அரசன் கூறிய அவ்வண்ணமே கூறினார்கள், கேட்டு- அதனைக்கேட்டு, நின்ற பாண் மடந்தை - அங்கு நின்ற பத்திரர் மனைவியார், பாண் டி நிருபனை நோக்கி சொல்வாள் - பாண்டிநாட்டரசனைப்பார்த்துக் கூறுகின்றார். சொல்வாள் எதிர்காலத்தில் வந்த நிகழ்காலம். (உச)

தென்னரேறனையாய்ஞாலமனுவழிச்செங்கோலோச்சு
மன்னரேறனையாய்வாரவழக்கினையாதலானீ
சொன்னவாறவையுஞ்சொல்லத்துணிந்ததுதுலைநாவன்ன
பன்னகாபரணர்முன்போய்ப்பாடுகேம்பாடுமெல்லை.

(இ-ள்.) தென்னர் ஏறு அனையாய் - பாண்டியர்களுள் ஆண்சிங்கத்தையொ த்தவனே, ஞாலம் மநுவழி செங்கோல் ஒச்சும் மன்னர் ஏறு அனையாய் - உலகில் மநுநூல்வழிச் செங்கோல் நடாத்தும் அரசர்களுள் ஆண்சிங்கம் போன்றவனே, வாரவழக்கினை ஆதலால் - நடுநிலைமையிகந்த வழக்கினையுடையாயாதலால், நீ சொ ன்ன ஆறு அவையும் சொல்ல துணிந்தது - நீ சொன்னபடி சபையுஞ் சொல்லத் துணிந்தது, துலை நா அன்ன பன்னக ஆபரணர் முன் போய் பாடுகேம் - துலையின் முள்ளையொத்த சர்ப்பாபரணத்தையுடைய சோமசுந்தரக்கடவுள் சந்நிதியிற்சென் று நாங்களிருவரும் பாடுகின்றோம், பாடும் எல்லை - பாடுங்காலையில்.

ஒருபாற்கோடாது துலைநாப்போல நடுநின்று குணங் குற்றங்களைச் சீர்தூக் கியுணரும் நீ என்பாற் கோடிநின்றனையென்பார் நீ வாரவழக்கினையாதலால் எனவு ம், நீ கோடினும் யாவருக்கும் இறைவராகிய சோமசுந்தரக்கடவுள் திருமுன் ஆன் மாக்களிடத்துத் துலைநாப்போல ஒருதன்மையதாய் என்றுங் கோடாதுநிற்பது ஆத லால் அதுவே குணங் குற்றங்களை யளந்தறிதற்பாலது என்பார் துலைநாவன்ன பன் னகாபரணர்முன் போய்ப்பாடுகேம் எனவுங் கூறினார். (உரு)

இருவரோம்பாட்டுங்கேட்டுத்துணிந்திவள்வென்றாளென்
றொருவர்சந்நிதியிற்சொன்னாற்போதுமென்றுரைத்தாள்பாண்டித்
திருமகனனையவாறேசெய்மினீர்செய்மினென்ன
மருவளர்குழலினார்தமனைபுகுந்திருந்தார்பின்னாள்.

(இ-ள்.) இருவரோம் பாட்டும் கேட்டு - எங்களிருவருடைய பாட்டையுங் கே ட்டு, ஒருவர் துணிந்து - ஒருவர் மனந்துணிந்து, இவள் வென்றாள் என்று சந்நிதியி ல் சொன்னால் போதும் என்று உரைத்தாள் - இருவருள் இவள்தான் வென்றாளென் று (சோமசுந்தரக்கடவுள்) சந்நிதியிற்சொன்னால் அமையுமென்று கூறினார், பாண் டி திருமகன் அனைய ஆறே நீர் செய்மின் செய்மின் என்ன - பாண்டிநாட்டரசனாகி ய இராசராசபாண்டியன் அப்படியே நீங்கள் செய்யுங்களென்றுகூற, மருவளர் கு ழலினார் தம்மனை புகுந்து இருந்தார்-வாசமிக்க கூந்தலையுடைய பாடினிமாரிருவரும் தமது இல்லிற்சென்றிருந்தார்கள், பின்னாள் - மறுநாளில்.

சந்நிதியில் முன்போலக் குணங்குற்றங்களை நோக்காது துணிந்து இவள் வெ ன்றனளென்று கூறல் யாவர்க்கும் அச்சம்என்பார் துணிந்திவள் வென்றாள் என்று ஒருவர் சந்நிதியிற் சொன்னாற்போதும் என்றார். செய்யுளாதலால் செய்மினீர் செய் மின் என்றார், செய்மின் செய்மின் துணிவுப்பொருளில்வந்த அடுக்குத்தொடர்.()

கலிவிருத்தம்.

தென்றனாட்டனுமந்திரச்செல்வரு
நன்றுதீதுணர்நால்வகைக்கேள்வியோ
ரொன்றவேகியொளிவிடுவெள்ளிமா
மன்றவாணர்மாமண்டபத்தெய்தினர்.

(இ-ள்.) தென்றல் நாடனும் மந்திரச் செல்வரும் - பாண்டியனும் அமைச்சர்களும், நன்று தீது உணர் நால்வகைக் கேள்வியோர் ஒன்ற ஏகி - இசையிலுள்ள குணங்குற்றங்களைப் பகுத்துணரும் நான்குவகைப்பட்ட கேள்விநிறைந்த இசைநூற் புலவர்கள் தம்மைச் சூழ்ந்துவரச்சென்று, ஒளி விடு வெள்ளி மாமன்ற வாணர் மா மண்டபத்து எய்தினர் - ஒளிவீசும் வெள்ளியம்பலவாணர் மகாமண்டபத்திலடைந்தார்கள்.

நால்வகைக் கேள்விகளாவன கீதஞானம், இலயஞானம், சுருதிஞானம், தாளஞானங்களாம். (உஎ)

எய்தியம்மடமாதனையிங்குறச்
செய்திரென்னத்திருமகனேவலோர்
நொய்தினோடிநொடித்தழைத்தாரொடு
மைதிகழ்ந்தவிழியார்வருவரால்.

(இ-ள்.) எய்தி - அடைந்து, அ மடமாதனை இங்கு உற செய்திர் என்ன - அந்தப்பாடினியை யிங்குவரச் செய்யுங்களென்று பணிக்க, திருமகன் ஏவலோர் நொய்தின் ஓடி - பாண்டியன் ஏவல் வழி நிற்கும் வேவுகாரர் விரைந்தோடி, நொடித்து அழைத்தாரொடு-அரசன் கட்டளையைக்கூறி யழைத்த வவ்வேவுகாரரோடு, மைதிகழ்ந்த விழியார்வருவர் - மைவிளங்கிய கண்களையுடைய பாடினிகள் வாராநிற்பர். (உஅ)

படிமையார்தவப்பாடினிவந்தெனக்
கடிமையாவளின்றையமின்றாலெனக்
கொடுமையார்மனக்கோட்டச்செருக்கொடுங்
கடுமையாகவந்தாள்கலத்தின்வந்தாள்.

(இ-ள்.) தவப்படிமை ஆர் பாடினி வந்து எனக்கு இன்று அடிமை ஆவள் - தவவேடமுடைய பாடினி வந்து எனக்கு இப்போது அடிமையாவாள், ஐயம் இன்று என-அதற்கோர் ஐயமில்லையென்று, கொடுமை ஆர் மனம் கோட்டம் செருக்கொடும் - கொடுமை மிக்க மனக்கோணலால் வந்த செருக்கினோடும், கலத்தின் வந்தாள் - மரக்கலத்தில் வந்த பாடினி, கடுமையாகவந்தாள் - விரைந்துவந்தனள்.

அரசன் தன்பாற் சார்பாக நிற்றலால் அடிமையாவளின்றையமின்றால் என எனவும், சந்நிதியாதலால் முன்போலக் கூறுனெனக் கருதிலளாதலால் கொடுமையார் மனக்கோட்டச் செருக்கொடுங் கடுமையாகவந்தாள் எனவுங் கூறினர். (உகூ)

கற்புமிக்கெழுகற்புங்கருத்தினிற்
சிற்பரஞ்சுடர்சேவடிமேல்வைத்த
வற்புமிக்கெழமெல்லவந்தாளரோ
பொற்புமிக்குளபத்திரன்பொன்னனாள்.

(இ-ள்.) கற்பு மிக்கு எழு கற்பும் - கல்வியறிவால் மேம்பட்டு விளங்குங் கற்பும், கருத்தினில் - தமது மனத்தில், சிற்பரஞ்சுடர் சேவடிமேல் வைத்த அற்பும் மிக்கு எழ - சோமசுந்தரக்கடவுளுடைய செவ்வந்த திருவடிமேல் வைத்த பத்திமையும் பொலிந்து தோன்ற, பொற்புமிக்கு உளபத்திரன் பொன் அன்னாள் மெல்ல வந்தாள் - அழகு மிக்க பத்திரருடைய மனைவியார் பைய வந்தனர்.

கற்புமன்றிச் சிவநேயமுமிக்குடையார் என்பது தமது நடையாற் பலர்க்குந்தோன்ற வந்தனர் என்பார் மெல்லவந்தாள் என்றார். (௩௦)

அலங்குமாரமோடங்கதமாதிபல்
கலன்கடாங்கிக்கலைஞர்குழாத்திடை
யிலங்குமாடமதுரைக்கிறைவரும்
புலங்கொணாவலர்போல்வந்துவைகினார்.

(இ-ள்.) இலங்கு மாடம் மதுரைக்கு இறைவரும் - விளங்கு மாடங்களைநெருங்கிய மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளும், அலங்கும் ஆரமோடு அங்கதம் ஆதி பல் கலன்கள் தாங்கி - விளங்கு முத்தாரத்தோடு வாகுவலைய முதலிய ஆபரணங்களையணிந்து, கலைஞர் குழாத்து இடை - இசைப்புலவர் கூட்டத்துள், புலம் கொள் நாவலர் போல் வந்து (இசைநூலில்) உணர்வுமிக்க புலவர் போல வந்து, வைகினார் - தங்கியருளினார். (௩௧)

அந்தவேந்தவைதன்னிலருங்கலம்
வந்தவேய்த்தடந்தோளிசைமாதராண்
முந்தவேத்திசைபாடினண்முந்தையோர்
சிந்தைவேட்டொன்றுஞ்செப்பினரில்லையால்.

(இ-ள்.) அந்த வேந்து அவை தன்னில் - அந்த அரசசபையில், அருங்கலம் வந்த வேய் தடம் தோள் இசை மாதராள் - தொழின்முற்றிய மரக்கலத்தில் வந்த மூங்கில்போன்ற பருத்த தோளையுடைய பாடினி, முந்த ஏத்திசை பாடினள் - முற்பட நால்வகை வருணவாழ்த்தும் பாடினாள், முந்தை யோர் சிந்தை வேட்டு ஒன்றும் செப்பினர் இல்லை - (அச்சபையிலுள்ள) முதியோர் மனம் விரும்பிச் சிறிதும் ஒன்றுங் கூறிற்றிலர்.

நால்வகை வருணவாழ்த்தாவது நால்வகைவருணப் பூதரைச் சிறுதேவப்பிரணியாற்றுதித்து மூவடி முக்கால் வெண்பாவால் அவர் அணியையு மாலையையும் ஆடையையும் நிறத்தையுங் கொடியையுந்துதித்து அவர்களாலொன்று பெறுதல் "அந்தணர்வேள்வியோடருமறைமுற்றுக - வேந்தன்வேள்வியோடியாண்டுபல்வாழ்க-வணிகரிருநெறிநிதிபெருகுக - பதினெண்கூலமுழுவர்க்குமிகுக - அரங்கியற்கூத்துநிரம்பிவினைமுடிக - வாழ்கநெடுமுடிகூர்கவெனவாய்ச்சொலென் - றிப்படிபலிகொடுத்திறைவனிற்றோர்க்குச் - சேட்படவமைத்துச்செழும்புகைகாட்டிச் - சேவடிதேவனையேத்திப்பூதனை - மூவடிமுக்கால்வெண்பாமொழிந்து - செவியிழுக்குறுமைவேந்தனையேத்திக் - கவியொழுக்கத்துநின்றுழிவேந்தன் - கொடுப்பனகொடுக்கவமையுமென்ப" என மதிவாணனார் இசைநூலுள் வருதல் காண்க. (௩௨)

வீணைதோளிடனேந்தியவெண்மலர்
வாணிபாடவிருக்கையின்வைகியே
யாணரம்பெறிந்தின்னிசையோர்ந்தெறிஇப்
பாணர்கோமகன்பண்ணியும்பாடுமால்.

(இ-ள்.) வீணை இடன் தோள் ஏந்திய வெண் மலர் வாணி பாடு அ இருக்கையின் வைகி - வீணையை யிடத்தோளிலேந்திய கலைமகள் பாடும் அவ்வாசனத்தில் தாமுமிருந்து, யாழ் நரம்பு எறிந்து இன் இசை ஓர்ந்து எழீஇ - வீணையினரம்பைத் தட்டி யின்னிசையை யாய்ந்தெழுப்பி, பாணர் கோமகன் பன்னியும் பாடும் - பாணர்க்கரசாகிய பத்திரருடைய மனைவியாரும் பாடலுற்றார்.

வாணியிருக்கையாவது ஒன்பது விருத்தியுள்பது மாசனம் அது காலடிகளை மாற்றிக் குதிமேலாயிருத்தல் " பதுமுகமுற்கட்டிதமேயொப்படி - இருக்கைசம்புடமயமுகஞ்சுவத்திகம் - தனிப்புடமண்டிலமேகபாதம் - உளப்படவொன்பதும் - ஆருந்திரிதரலில்லாதிருக்கை" எனவருஞ்சூத்திரத்தால் ஒன்பது விருத்தியுங்காண்க. அகரச்சுட்டுப் பதுமாசனத்தின் உயர்ச்சிமேல் நின்றது. (௩௩)

இடைமடக்காய் அறுசீரான்வந்த ஒருபோகுகொச்சகம்.

கந்திருவம்.

குடங்கைநீரும்பச்சிலையுமிடுவார்க்கிமையாக்குஞ்சரமும்
படங்கொள்பாயும்பூவணையுந்தருவாய்மதுரைப்பரமேட்டி
படங்கொள்பாயும்பூவணையுந்தருவாய்கையிற்படுதலைகொண்
டிடங்கடோறுமிரப்பாயென்றேசுவார்க்கென்பேசுவனே.

(இ-ள்.) குடங்கை நீரும் பச்சிலையும் இடுவார்க்கு - உள்ளங்கையளவு நீரையும் பசிய இலையையும் இட்டுவழிபடும் அடியார்க்கும், இமையாத குஞ்சரமும் படம் கொள்பாயும் பூ அணையும் - ஐராவதத்தையும் படத்தையுடைய சர்ப்பசயனத்தையும் தாமரைத்தவிசையும், மதுரை பரமேட்டி தருவாய் - மதுரையிலெழுந்தருளிய பெருமானே தந்தருளுவாய், படம் கொள் பாயும் பூ அணையும் தருவாய் - (வழிபடும் அடியவர்க்கும்) சர்ப்பசயனத்தையுந் தாமரைத்தவிசையுந் தந்தருளு நீயே, கையில் படுதலை கொண்டு - திருக்கரத்தில் கபாலத்தையேந்தி, இடங்கள் தோறும் இரப்பாய் என்று - (தாருகவனமுனிவர்) இல்லந்தோறும் இரக்கின்றாயென்று, ஏசுவார்க்கு என் பேசுவன் - இகழும் புறச்சமயிகளுக்கு (யான்) யாது கூறுவேன்.

அடியார்க்கு வுன்பதினிறுதியில் தொக்குநின்ற எதிரதுதழீஇய எச்சவும்மையால் சிலந்திமுதலிய அஃறிணைப்பொருள்களுக்கும் எனக்கொள்க. இந்திரனும் திருமாலும் பிரமனும் அடைந்தவாழ்வு சிவபிரானை வழிபட்ட வழிபாட்டால் என்பது தோன்றநிற்றலால் குறிப்பெச்சம். உதாரணி எனினும் அமையும். அகச்சமயிகள் தாருகவனமுனிவர் கௌதமர் சாபமொழிந்துய்தற்பொருட்டென அவர் திருவருளைப்பாராட்டி மகிழ்வர். புறச்சமயிக ளிவ்வுண்மையுணராது பழிப்பராதலால் ஏசுவார்க்கென்பேசுவனே என்றார். சிலந்தி முதலிய என்றது நக்கீரதேவர் அருளிய கோபப்பிரசாதத்தில் சீர்மலிசிலந்திக்கின்னரசளித்தும் " எனவரும் ஏதுவாலும், இந்திரன் முதலியோர் அடைந்தவாழ்வு சிவபிரானை வழிபட்டமையால் என்றது "வாழ்த்துவதும்வானவர்கடாம் வாழ்வான்மனநின்பால் தாழ்த்துவதுந்தாமுயர்ந்து தம்மை யெல்லாந்தொழவேண்டி" எனவருந் திருவாசகத்தாலும் உணர்க. தாருகவனமுனிவர் பன்னிரண்டுவருட மழையின்மையால் கௌதமரில்லிற்சென்று அவருபசரிக்க வுயிர்வாழ்ந்து வருங்கால் மழைவளம்பெருகி நாடுசெழிக்கத் தமதில்லிற்குச்செல்லக்கருதி, அம்முனிவர்கள் - மாயையால் ஒரு பசுவை யமைத்துவிட, அப்பசு நரம்பு தோன்ற இளைத்து நிற்றற்கிரங்கிக் கௌதமர் அதனைப் பாதுகாத்தற்கருகு சென்று தீண்டவும், அதனை யாற்றாதப் பசு வீழ்ந்துயிர்மாளவே தாருகவனமுனிவர்

பசுவைக்கொன்றேனில்லில் உயிர்வாழ்தல் தக்கதன்றெனக்கூறித் தமதில்லிற்குச் சென்றனர். அதனாற் றுன்புற்றுழந்த அக்கௌதமர் ஞானக்கண்ணால் நோக்கி யிவர்கள் செய்த மாயையென்றுணர்ந்து வேதவொழுக்கமுஞ் சிவநேயமுமாறி நரகில் வீழக்கடவர்களெனச் சபித்தனர். அவ்வாறே யவையொழிந்து துயருறுந் தாருகவனமுனிவர் திருமாற்குக்கூற, இவர்கள் செய்த தீங்கை யுணர்ந்து அந்தோ இது பெரும்பாவமெனத் திருவுளத்திற்கொண்டு நித்தியகன்மமே பொருளெனக்கொள்ளும் ஓர் பொய்ந்நூலை யமைத்துத்தர, அதனிற் றொடக்குண்டுழலும் அம்முனிவர்க்கிரங்கி யருளுதற்பொருட்டுப் பன்னிரண்டுவருடந் தாருகவனத்திற் பலியேற்றுலவினர் என்பது “அன்னநூலின்வழிநூல்கள் முனிவரோதியருசெய்தி - யின்னற்கடலுள்வீழ்ந்திடவு மெம்மானதனுக்குளமிரங்கிப்-பன்னுமறையோர்துயர்தீர்ப்பான் பலியேற்றுண்ணறலைக்கிடோய்-மன்னுமுயர்தாருகவனத்தி னன்னோர்சாலைமருங்கடைந்தான்” “அன்னகாலைமுனிவரர்க ளமருமுயர்தாருகவனத்திற் - பன்னீராண்டுநல்லருளிற் பயின்றுலாவி” எனக் கூர்மபுராணம் அந்தகாசுரன் சாரூபமடைந்த அத்தியாயத்தில் வருதல் காண்க. (௩௪)

தேனார்மொழியார்விழிவழியேசெல்லாதவர்க்கேவீடென்று
நானாவேதப்பொருளுரைத்தாய்நீயேமதுரைநம்பரனே
நானாவேதப்பொருளுரைத்தாய்நீயேபாதிநாரியுரு
வானாயென்றுபிறர்பழித்தாலடியேன்விடையேதறைவேனே.

(இ-ள்.) மதுரை நம்பரனே - மதுரையிலெழுந்தருளிய நமது பரமனே, தேன் ஆர் மொழியார் விழி வழியே செல்லாதவர்க்கே வீடு என்று - தேன்சுவையையொத்த சுவை நிரம்பிய சொற்களையுடைய பெண்களின் கட்பார்வையின் வழியே செல்லாத சிவயோகிகளுக்கே மோட்சமென்று, நானா வேதப்பொருள் நீயே உரைத்தாய் - பலவகைப்பட்ட வேதப்பொருளை விரித்து நீயே கூறினாய், நானா வேதப்பொருள் உரைத்தாய் நீயே - பலவகைப்பட்ட வேதப்பொருளினை விரித்துக் கூறிய நீயே, பாதி நாரி உரு ஆனாய் என்று பிறர் பழித்தால் அடியேன் விடை ஏது அறைவேன் - இடப்பாதி முற்றும் பெண்ணுருவானாய் என்று புறச்சமயிகளிகழில் அடியேன் யாது விடைகூறுவன்.

மண் பொன்னால்வரும் இன்பங்களினும் பெண்ணின்பம் பெரிதாகலினதனை விடுதலே வீடென்பார் தேனார் மொழியார் விழிவழியே செல்லாதவர்க்கே வீடென்று எனவும், ‘அது ஞானகாண்டத்திற் கூறப்படுவதென்பார் நானாவேதப்பொருளுரைத்தாய் நீயேஎனவும், வேதம் விச்சுவரூபியெனக் கூறுதற்கியைய ஆன்மாக்களுக்கு வீடருளுதற்பொருட்டுப் பந்தமருளப்பாதிநாரி யுருவானாயென்று அகச்சமயிகள் பேரின்புறுவர், அவ்வுண்மையுணராத புறச்சமயிகள் இகழ்வரே யென்பார் பிறர்பழித்தா லடியேன் விடையேதறைவேனே எனவுங் கூறினார். “தென்பாலுகந்தாடுந் தில்லைச்சிற்றம்பலவன் - பெண்பாலுகந்தான் பெரும்பித்தன்காணேடி - பெண்பாலுகந்திலனேற் பேதாயிருநிலத்தோர் - விண்பாலியோகெய்தி வீடுவர்காண்சாழலோ”, எனவரும் ஏதுவால் உணர்க. (௩௫)

வரதனாகியெவ்வுயிர்க்குமாயாவிருத்திவலியடக்கிச்
சரதமானவீட்டின்பந்தருவாய்மதுரைத்தனிமுதலே
சரதமானவீட்டின்பந்தருவாய்வீடுபெறுவார்போல்
விரதயோகநிலையடைந்தாரென்பார்க்கென்னாள்விளம்புவனே.

(இ-ள்.) மதுரை தனி முதலே - மதுரையிலெழுந்தருளிய ஒப்பிகந்த முதல்வனே, வரதன் ஆகி எவுயிர்க்கும் மாயா விருத்தி வலி அடக்கி - அருட்கொடையையுடையவனாகி யெல்லாவுயிர்களுக்கும் மாயாமலத்தின் றொழிலெழவொட்டாமல் தடுத்து, சரதம் ஆன வீடு இன்பம் தருவாய் - என்றும் நித்தியமான மோட்சவின்பத்தைத் தந்தருளுகின்றாய், சரதம் ஆன வீடு இன்பம் தருவாய் - என்றும் நித்தியமான மோட்சவின்பத்தைத் தருகின்ற நீயே, வீடு பெறுவார் போல் - மோட்சவின்பத்தைப் பெற முயலும் சிவயோகிகளைப்போல, விரத யோக நிலை அடைந்தாய் என்பார்க்கு - நோன்புபோல யோகநிலையினைக் கைக்கொண்டருளினை யென்னும் புறச்சமயிகளுக்கு, நான் என் விளம்புவன் - நானென்ன விடைகூறுவன்.

மாயாமலத்தின் றொழிலாவது தனுகரணபுவன போகங்களாய்க் கன்மத்துக்கேற்ற சரீரங்களைக் கொடுத்தல். வலியடக்கலாவது அழுக்கைக்கொண்டே யழுக்கையொழித்தல்போல மாயையைக்கொண்டே யந்தமாயையை யொழித்தல். முத்திநிலை வாக்கிறந்ததாதலால் சநகர் முதலிய நால்வருமுணர வுணர்த்திய சிவயோக நிலையென அகச்சமயிக ளுணர்வர், புறச்சமயிக ளவ்வுண்மையுணரா ராதலால் விரதயோக நிலையடைந்தா யென்பார்க்கென்னான் விளம்புவனே என்றார். "உருவாதிசதுவிதமாய்" எனவும் "கன்மமாணுக்களியார்க்கு மாவாரமாய்" எனவும் "மாயைகொடுமலமொழிப்பன் முன்னோன்" எனவும் "நன்றாகநால்வருக்கு நான்மறையினுட்பொருளை - அன்றாலின்கீழிருந்தங் கறமுரைத்தான்காணேடி - அன்றாலின்கீழிருந்தங் கறமுறைத்தானாயிடினுங் - கொன்றான்காண்புரமூன்றுங் கூட்டோடேசாழலோ" எனவரும் ஏதுக்களாலுணர்க. (௩௯)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

கண்ணுதன்மதுரைப்பிரானையிவ்வாறுகருதியபாணியாற்கனிந்து
பண்ணுதல்பரிவட்டணைமுதலிசைநூல்பகர்முதற்றொழிலிருநான்கு
மெண்ணுறுவார்தல்வடித்திடன்முதலாமெட்டிசைக்கரணமும்பயப்ப
மண்ணவர்செவிக்கோவானவர்செவிக்கும்வாக்கினுவிளையமுதம்.

(இ-ள்.) கண்ணுதல் மதுரை பிரானை - நெற்றிக் கண்ணையுடையவராகிய சோமசுந்தரக்கடவுளை, இ ஆறு கருதிய பாணியால் கனிந்து - இவ்வகையாகப் பொருளமைந்த பண்ணினால் மனங்கனிந்து, பண்ணுதல் பரி வட்டணை முதல் - பண்ணுதல் பரிவட்டணைமுதலாக, இசை நூல் பகர் முதல் தொழில் இரு நான்கும் - இசைநூல்கூறும் முதற்றொழில்களாகிய எட்டும், எண்ணுறு வார்தல் வடித்திடல் முதல் ஆம் எட்டு இசைக்கரணமும் - எண்ணிநிற்கும் வார்தல் வடித்தல் முதலிய எண்வகைப்பட்ட இசைக்கரணமும், பயப்ப - நிலைத்துப் பயன்பட, மண்ணவர் செவிக்கோ - நிலவுலகினர் செவிக்குமட்டோ, வானவர் செவிக்கும் நாவினா அமுதம் வாக்கினுள் - தேவர்களது செவிக்கும் தமது நாவாலட்ட இசையமுதத்தை வார்த்தார்.

முதற்றொழில் எட்டாவன பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு, கையூழ், விளையாட்டு, குறும்போக்கு. பண்ணலாவது இணை, கிளை, பகை, நட்பு; ஆனநரம்புகள் பெயருந்தன்மை மாத்திரையறிந்து வீக்குதல். பரிவட்டணை வீக்கினநரம்பை விரல்களால் அகமும் புறமுங் கரணஞ்செய்து தடவிப்பார்த்தல். ஆராய்தல் ஆரோகண வவரோகண வகையாலிசையைத்தெரிதல். தைவரல் சுருதியேற்றல், செலவு ஆளத்தியிலே நிரம்பப்பாடுதல். கையூழ்பாடகினைத்த வண்ணத்திற்

சந்தத்தை விடுத்தல். விளையாட்டு வண்ணத்திற்செய்த பாடல்களை யின்பமாகப்பாடுதல். குறும்போக்கு குடைக்கச்செலவு தள்ளற் செலவுபாடுதல். வார்தல் வடித்தல் முதலிய எட்டிசைக்கரணங்களாவன வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல், உருட்டல், தெருட்டல், எள்ளல், பட்டடை. வார்தல், எடுத்தல், வடித்தல், படுத்தல், உந்தல், நலிதல், உறழ்தல், கும்பித்தல், உருட்டல், உருட்டு, தெருட்டல், ஒலி, எள்ளல், குடிலம், பட்டடை, தாக்கு. (௩எ)

இடையினோடேனைப்பிங்கலையியக்கமிகந்துமூலந்தொடுத்தியக்கி
நடுவுறுதொழிலாற்பிரமரந்திராந்தநடைபெறவிசைக்குமுள்ளாள [மாள்
மிடறுவீங்காள்கண்ணிமைத்திடாளெயிறுவெளிப்படாள்புருவமேனிமி
கொடிறதுதுடியாள்பாடலுமதுகேட்டனைவருங்குதுகுலமடைந்தார்.

(இ-ள்.) இடையினோடு - இடைகலையோடு, ஏனை பிங்கலை இயக்கம் இகந்து அதுவொழிந்த பிங்கலையிலும் இயங்கும் சஞ்சரிப்பொழிந்து, மூலம் தொடுத்து இயக்கி - மூலாதாரத்தினின்றும் வாயுவை எழுப்பி, நடு உறு தொழிலால்-சுழுமுனையின் றொழிலால், பிரமரந்திராந்தம் நடை பெற இசைக்கும் உள்ளாளம் - பிரமரந்திர முடிவுகாறுஞ் செல்லப்படும் தேவகாந்தருவத்தை, மிடறு வீங்காள் கண் இமைத்திடாள் - கண்டம் வீங்காதும் கண்ணிமை கொட்டாதும், எயிறு வெளிப்படாள் புருவம் மேல் நிமிராள் - பற்கள் தோன்றாதும் புருவமேலெறாமலும், கொடிறு அது துடியாள் பாடலும் - கபோலந்துடியாமலும் பாட, அதுகேட்டு அனைவரும் குதுகுலம் அடைந்தார் - அத்தேவகாந்தருவத்தைக் கேட்டு எல்லோரும் களிப்படைந்தார்கள்.

பதினொருவகையாற் பாடும் உள்ளாளம் பாடுங்கால் இடைகலை பிங்கலை யியக்கமறுத்து மூலாதாரமுதல் பிரமரந்திரங்காறும் வாயுவை யியக்கி நடுவுதொழில் வரப்பாடுவதாதலால் இடையினோடேனைப் பிங்கலையியக்க மிகந்து மூலந்தொடுத்தியக்கி - நடுவுறுதொழிலாற் பிரமரந்திராந்த நடைபெறவிசைக்கு முள்ளாளம் என்றார். பதினொருவகையாவன "உள்ளாளம் விந்து வுடனாத மொலியுருட்டுத் - தள்ளாததூக்கெடுத் தருன்படுத்தல் - மெள்ளக் - கருதிநலிதல் கும்பித்தல் குடிலம் - ஒருபதின்மே லொன்றென்றுரை" என்னும் ஏதுவால் உணர்க. (௩அ)

கன்னிநாடுடையான்கைதவனெனும்பேர்க் காரணந்தேற்றுவானென
னத்தா,னின்னிசையறிஞனாகியுமுன்போலியம்புவானொருப்படுகின்றான்,
முன்னவனருளாற்றன்மனக்கோட்ட முரண்கெடப்பொதுமையானோக்கி,
யின்னவடானேவென்றனளென்று ஙினையவாறனைவருமொழிந்தார்.

(இ-ள்.) கன்னி நாடு உடையான்-பாண்டிநாட்டையுடைய இராசராசபாண்டியன், கைதவன் எனும் பேர் காரணம் தேற்றுவான் என்ன (தனக்குவந்த) கைதவன் என்னும்பெயர்க்கு ஒருவாறு காரணத்தைப் பலர்க்குந்தெளிவிப்பவனைப்போல, தான் இன் இசை அறிஞன் ஆகியும் - தானினிய இசைநூலில் வல்ல புலவனாகியும், முன் போல் இயம்பு வான் ஒருப்படுகின்றான் - முன்புபோலக் கூற உடன்படுகின்றவன், முன்னவன் அருளால் - சோமசுந்தரக்கடவுள் திருவருளினால், தன் மனம் கோட்டம் முரண் கெட - தனது மனக்கோணலின் மாறுபாடு கெட, பொதுமையால் நோக்கி - நடுநிலைமையினின்று சீர்தூக்கி, இன்னவள் தானே வென்றனள் என்றான் - இந்தப் பாணபத்திரன் மனைவியே வெற்றிகொண்டனளென்று கூறினான், இனைய ஆறு அனைவரும் மொழிந்தார் - இப்படியே அங்குள்ள பெரியோர் யாவருங் கூறினார்கள்.

கைதவன் தவங்கை கூடினவன் எனப் பொருள்பட நின்ற தொடர்மொழி ஒருசொல்லாய் வஞ்சமுடையவன் என இவன் பாற்காரணந் தோற்றநிற்றலால் ஒருவாறு என்றும், சிவபெருமான் திருவருளால் மனக்கோட்டம் ஒழிதலால் நடுநிலை நின்றான் என்பார் பொதுமையால் நோக்கி என்றும். (௩௯)

கரியுரைமொழிந்தகைதவனிலங்கைக்கைதவப்பாடினிகழுத்திற்
புரிகுழன்மாதையிருத்தெனவிருத்தும்போதுமையிடங்கரந்திருந்த
வரியநாவலரீதற்புதமீதற்புதமெனவறைந்தவைகாண
விரிகதிர்மின்போன்மறைந்தனர்யாரும்வியந்தனர்பயந்தனன்வேந்தன்.

(இ-ள்.) கரி உரை மொழிந்த கைதவன் - சாக்ஷி மொழிகூறிய பாண்டியன், இலங்கை கைதவம்பாடினி கழுத்தில்-இலங்கையினின்றும் வந்த வஞ்சனையையுடைய பாடினியின் கழுத்தில், புரி குழல் மாதை இருத்து என இருத்தும் போது - கட்டமைந்த கூந்தலையுடைய பத்திரர் மனைவியை இருத்தாயென்றேவ வேவற்பெண்களிருத்துங் காலையில், உமை இடம் கரந்து இருந்த - உமாதேவியாரிடப்பாகத்தைக் கரந்து மானிடத் திருவுருவங் கொண்டிருந்த, அரிய நாவலர் - அரிய இசைநூலில் வல்ல நாவலர் பெருமானாராகிய சோமசுந்தரக்கடவுள், ஈது அற்புதம் ஈது அற்புதம் என அறைந்து - இச்செயலற்புதமென்று கூறி, அவை காண விரி கதிர் மின் போல் மறைந்தனர் - சபையிலுள்ளோருணர விரிந்த கிரணத்தையுடைய மின்னலைப்போல மறைந்தருளினார், யாரும் வியந்தனர் - கண்டோரெவரும் அதிசயித்தனர், வேந்தன் பயந்தனன் - இராசராசபாண்டிய னச்சங் கூர்ந்தனன்.

பாண்டிய னடுநிலைமையைக் கைவிட்டு முன்னர் மனக்கோட்டமுற்றவனாயிருத்தலால் வேந்தன் பயந்தனன் எனவும், தமது திருவருளாலின்று பாண்டிய னடுநிலைமையினின்றமையால் உவகைப்பொருள் பயப்ப ஈதற்புதமீதற்புதமெனவுங் கூறினார். (௪௦)

செங்கணேறழகராடலீதென்றேயாவருந்தெளிந்தனரேத்தி
யங்கணாயகர்தங்கருணையின்றிறனுமடியவரன்பையுந்தூக்கித்
தங்கணாருவிபெருகவானந்தத்தனிப்பெருஞ்சலதியிலாழ்ந்தார்
வங்கமேல்வந்தாள்பிடர்மிசையிருந்தமாணிழைவிறலியைமன்னன்.

(இ-ள்.) செங்கண் ஏறு அழகர் ஆடல் ஈது என்று - செவந்த கண்களையுடைய விடைமேலழகர் திருவிளையாடலிதுவென்று, யாவரும் தெளிந்தனர் ஏத்தி - எவருந்தெளிந்து துதித்து, அங்கண் நாயகர்தம் கருணையின் திறனும் அடியவர் அன்பையும் தூக்கி - அவ்விடத்துச் சோமசுந்தரக்கடவுளின் திருவிளையாடலின் திறத்தையும் அடியவர் அன்பின் திறத்தையும் சீர்தூக்கி, தம் கண் ஆர் அருவி பெருக ஆனந்தம் தனிப்பெருஞ்சலதியில் ஆழ்ந்தார் - தமது கண்களில் ஆனந்தவெள்ளம் உவட்டெடுக்கப் பேரின்பமாகிய ஒப்பில்லாத பெரியகடலிலழுந்தினார்கள், வங்கம் மேல் வந்தாள் பிடர் மிசை இருந்த மாணிழை விறலியை - மரக்கலத்தின்மேல் வந்த பாடினியின் பிடர்மேலிருந்த பத்திரர் மனைவியை, மன்னன் - இராசராச பாண்டியன்.

திருவருளா லன்பும், அன்பாற் றிருவருளுமா யொன்றனை யொன்று தொடர்ந்துநிற்றலால் அவ்விரண்டின் றிறத்தையும் பெரிதளந்தார் என்பார் கருணையின் றிறனும் அடியவரன்பையுந்தூக்கி எனவும், அவை அவராலளத்தற்கரிதென்பார் தங்கணாருவிபெருக ஆனந்தத்தனிப்பெருஞ்சலதியிலாழ்ந்தார் எனவுங் கூறினார். (௪௧)

இறக்குவித்தவட்குமுந்தமுத்தாரமெரிமணிக்கலன்றுகில்வரிசை
பெறக்கொடுத்தேனையவட்குமுண்மகிழ்ச்சிபெறச்சிலவரிசைதந்தவையிற்
சிறக்கவந்தொருங்குவைகிவானிழிந்ததெய்வதக்கோயில்புக்கிருந்த
வறக்கொடியிடஞ்சேர்பெரும்புலவோர்க்குமருங்கலனுதிகணல்கா.

(இ-ள்.) இறக்கு வித்தவட்கு - ஈழப்பாடினி கழுத்தினின்றுமிறங்கச்செய்த பத்திரர் மனைவியார்க்கு, முந்த - முற்பட, முத்தாரம் எரி மணி கலன் துகில் வரிசை பெற கொடுத்து - முத்துமாலிகையையும் தீப்போலச் செந்நிறம் வாய்ந்த இரத்தினமழுத்திய ஆபரணங்களையும் பீதாம்பரங்களையும் வரிசையாகப் பெறத்தந்து, ஏனை அவட்கும் உள் மகிழ்ச்சி பெற சில வரிசை தந்து - ஈழப்பாடினிக்கும் மனத்தில் மகிழ்ச்சியரும்பச் சிலவரிசைகள் கொடுத்து, அவையில் சிறக்க வந்து ஒருங்கு வைகி - சபையில் மேம்பட ஒருசேர இருந்து, வான் இழிந்த தெய்வதம் கோயில் புக்கு இருந்த - விண்ணினின்றும் இழிந்த தெய்வத்தன்மையயுடைய திருக்கோயிலிற்சென்று எழுந்தருளிய, அறக்கொடி இடம் சேர் பெரும் புலவோர்க்கும் அருங்கலன் ஆதி கள் நல்கா - உமாதேவியாரை இடப்பாகத்திலுடைய பெரிய புலவர் சிகாமணிக்கும் அரிய ஆபரணாதிகளைத்தந்து.

வெற்றியுற்றவராதலால் முற்படவரிசைபெறக் கொடுத்து எனவும், தோல்வியுற்றவளாயினும் தன்னால் வருவிக்கப்பட்டவளாதலால் உண் மகிழ்ச்சிபெறவரிசை தந்து எனவுங் கூறினர். (சஉ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மன்னவர்வலிகளெல்லாந்தெய்வத்தின்வலிமுன்னில்லா
வன்னமாதெய்வஞ்செய்யும்வலியெலாமரண்மூன்றட்ட
முன்னவன்வலிமுன்னில்லாவெனப்பலர்மொழிவதெல்லா
மின்னபாண்மகளிற்காணப்பட்டதென்றிறும்பூதெய்தா.

(இ-ள்.) மன்னவர் வலிகள் எல்லாம் - அரசருடைய வலிமைகளெல்லாம், தெய்வத்தின் வலி முன் நில்லா - தெய்வத்தின் வலிமை முன்னில்லாவாம், அன்ன மா தெய்வம் செய்யும் வலி எல்லாம்-அந்தப்பெரிய தெய்வங்கள் செய்யும் வலிமைகளெல்லாம், அரண் மூன்று அட்ட முன்னவன் வலி முன் நில்லா என - திரிபுரங்களையும் நகைத்தெரித்த சிவபெருமான் வலிமை முன்னில்லாவாமென்று, பலர் மொழிவது எல்லாம் - பலருங் கூறுவதெல்லாம், இன்ன பாண் மகளில் காணப்பட்டது என்று இறும்பூது எய்தா - இந்தப் பாடினியாரிடத்துக் காணப்பட்டதென்று வியப்படைந்து.

அரசன்மக்கட்கூற்றுதலின் அவனினும் ஏனைத்தேவர்கள் சிறந்தவர்கள் என்பார் மன்னவர் வலிகளெல்லாந் தெய்வத்தின்வலிமுன்னில்லா எனவும், அத்தெய்வங்கள் சிவபெருமான் ஆணைவழிப்பட்டொழுகுவன வென்பார் அன்னமாதெய்வஞ்செய்யும் வலியெலாமரண்மூன்றட்ட மன்னவன்வலிமுன்னிலா எனவும், இதுபலருங்கூறு மூதுரை என்பார் எனப் பலர்மொழிவதெல்லாம் எனவும், அம்மூதுரை இவர்பாலின்று நாமறிய நின்றது என்பார். இன்னபாண்மகளிற்காணப் பட்டதென்றிறும்பூதெய்தா எனவுங் கூறினர். ஆணைவழிப்பட்டொழுகுவன என்பது "யாதொருதெய்வங்கொண்டீரத்தெய்வமாகிவந்து மாதொருபாகனூர்தாம்வருவர்" எனவும், "இங்குநாஞ்சிலர்க்குப்பூசை யியற்றினுலிவர்களேவந் - தங்குவான்றருவாரன்றேலத்தெய்வமத்தனைக்காண்-எங்கும்வாழ்தெய்வமெல்லா மிறைவனுணையானிற்ப" எனவரும் ஏதுக்களால் அறிக. (சங)

மின்னியல்சடையினுனைவிடைகொடுவலஞ்செய்தேகி
யின்னியமியக்கஞ்செய்யவெழில்கொடன்கோயிலெய்தித்
தொன்னிதிபெற்றான்போலச்சுகுணபாண்டியனைப்பெற்று
மன்னியமகிழ்ச்சிவீங்கவைகினனிராசராசன்.

(இ-ள்.) மின் இயல் சடையினானை விடை கொடு வலம் செய்து ஏகி - மின்னையொத்த சடையையுடைய பெருமானாரிடத்து விடைபெற்றுச் சென்று, இன் இயம் இயக்கம் செய்ய - இனிய வாச்சியங்களொலிக்க, எழில் கொள் தன் கோயில் எய்தி - பொலிவுமிக்க தன்கோயிலையடைந்து, தொல் நிதி பெற்றான் போல - தொன்றுதொட்டுள்ள சங்கநிதி பதுமநிதிகளைப் பெற்றவன்போல, சுகுண பாண்டியனை பெற்று - சுகுணபாண்டியனை யீன்று, மன்னிய மகிழ்ச்சி வீங்க - நிலைபெற்ற மகிழ்ச்சிமிக, இராச ராசன் வைகினான் - இராசராசபாண்டிய னிருந்தனன்.

நிதி சாதியொருமை. (௭௪)

இசைவாது வென்றபடலம் முற்றிற்று.

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம் - உ௬௯உ.

## நாற்பத்தைந்தாவது

# பன்றிக்குட்டிக்கு முலைகொடுத்தபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

இருளைக்கந்தரத்தில்வைத்தோன்றன்னிடத்தென்றுமன்பின்
றெருளைத்தந்தவட்குமாறுந்தெரிவையையிசையால்வெல்ல
வருளைத்தந்தளித்தவண்ணமறைந்தனந்தாயாய்ப்பன்றிக்
குருளைக்குமுலைதந்தாவிகொடுத்தவாறெடுத்துச்சொல்வாம்.

(இ-ள்.) இருளை கந்தரத்தில் வைத்தோன் - விடத்தினை ஸ்ரீ கண்டத்தில் வைத்த பெருமானார், தன் இடத்து என்றும் அன்பின் தெருளை தந்த வட்கு - தம்மிடத்தில் எப்பொழுதும் மெய்யன்பினைவைத்த பத்திரர் மனைவியார்க்கு, மாறும் தெரிவையை - பகையாயுள்ள ஈழப்பாடினியை, இசையால் வெல்ல அருளை தந்து - இசையினால் வெல்லத் திருவருள்வைத்து, அளித்த வண்ணம் அறைந்தனம் - பாலித்த திருவிளையாடலைக் கூறினோம், பன்றி குருளைக்கு தாயாய் முலை தந்து ஆவி கொடுத்த ஆறு எடுத்து சொல்வாம் - பன்றிக்குட்டிகளுக்குத் தாயாய்வந்து முலைகொடுத்துப் பாலித்த திருவிளையாடலை யினி யெடுத்துக் கூறுவாம். (௧)

முறையெனவிமையோர்வேண்டமுளைத்தநஞ்சயின்றுசான்று
புறையெனமிடற்றில்வைத்தவும்பரான்மதுரைக்காரந்
திறையெனவிரிநீர்வையத்தெற்கதுகுருவிருந்த
துறையெனவுளதோர்செல்வத்தொன்மணிமாடமூதூர்.

(இ-ள்.) இமையோர் முறையென வேண்ட - தேவர்கள் முறையோவென்று குறையிரக்க, முளைத்த நஞ்சு அயின்று - கடலிற் றோன்றிய விடத்தையுண்டு, சான்றாய் உறையென மிடற்றில் வைத்த - சாட்சியா யிருவென்று அவ்விடத்தை ஸ்ரீகண்டத்தில் வைத்தருளிய, உம்பரான் - சிவபுரத்தையுடைய பெருமானார் (எழுந்தருளிய), மதுரைக்கு ஆரம் திறை என எறி நீர் வையை தெற்கது - திருவாலவாய்க்கு முத்தங்களைத் திறையாக வீசும் வையைநதியின் தென்பாலுள்ளது, குரு விருந்துறை என உள்ளது ஓர் செல்வம் தொல் மணி மாடம் மூதூர் - குருவிருந்துறை யெனவுள்ள ஒப்பில்லாத செல்வமிக்க தொன்றுதொட்டுள்ள இரத்திநமழுத்திய மாடங்கள் நெருங்கிய பெரியநகரம்.

விடத்துக்கு ஆற்றாது அயன்முதலியதேவர்கள் முறையிட்டனர் என்பார் முறையெனவிமையோர்வேண்ட எனவும், அவர்பாற்கொண்ட கருணையால் உண்டனர் என்பார்முளைத்த நஞ்சயின்று எனவும், யாவர்க்குந்தாமிறைவரென்பதுமலச்சிமிழ்ப் புண்டபசுக்களுணர்ந்துய்யவைத்தனர் என்பார் சான்றாயுறையெனமிடற்றில்வைத்தவும்பரான் எனவுங்கூறினார். "ஐயனேயடியேங்க ளறியாமைத் தொடக்குண்டகையரோமாதலினுன்கண்ணருள்பெற்றெய்தாது - வெய்யநறுஞ்சுவையமிழ்தம் பெறற்பொருட்டுவெவ்வினையேம் - பையரவான்மந்தரத்தாற்பாற்கடலைக்கடைந்தேமால் - துன்றியதீஞ்சுவையமிழ்தந்தோன்றாதுவிடந்தோன்றி - யின்றுசராசரமனைத்துமெரிசெய்துநீறாக்கிற் - றன்றினருளொரித்தாயுன்னருளன்றிமுயல்வதெல்லாம் - ஒன்றொழியவொன்றாமென்றுணைக்குமொழிமெய்யாமே-இதுபொழுதுகாத்திலையே லெமக்கிறுதியின்றேயாம்-விதுமுடித்தபெருங்கருணைவெள்ளமேயென்றிரந்தான் - மதுமலர்த்தார்விண்ணவருமனங்கலங்கிமுறையிட்டார்-அதுவுணர்ந்தெம்பெருமானுமஞ்சலீரென்றருளி" எனவும் "சகமெலாம்பொடிபடுத்தெழுந்தழல்விடமிடற்றில் - திகழுவைத்தனன் முப்புரமெரியெழச்சிரித்தோன்-அகலருந்திறத்தெண்குணநிறைந்தபேராண்மைப்-பகவன்மேன்மைமற்றெம்மனோரளவிடற்பாற்றோ" எனவும் வரும் ஏதுக்களால் உணர்க. (௨)

தருநாதனாதிவானோர்தங்குருவிருந்துநோற்பக்
குருநாதனெனப்பேர்பெற்றுக்கோதிலாவரந்தந்தேற்றில்
வருநாதன்சித்திரத்தேர்வலவனோருடனேகஞ்சத்
திருநாதன்பரவவைகியிருக்குமச்சிறந்தவூரில்.

(இ-ள்.) தரு நாதன் ஆதி வானோர் தம் குரு இருந்து நோற்ப - பஞ்சதருக்களின் தலைவனாகிய இந்திரன்முதலிய தேவர்களுடைய குருவாகிய பிரகஸ்பதியிருந்து நோற்றலால், குரு நாதன் என பேர் பெற்று - குருநாதன் எனக் காரணப்பெயர் கொண்டருளி, கோது இல்லாத வரம் தந்து ஏற்றில் வருநாதன் - குற்றமில்லாதவரங்களையவர்க்குதவி யிடபவூர்தியில் வந்தருளுஞ் சிவபெருமான், சித்திரத் தேர் வலவனோர் உடன் கஞ்சம் திருநாதன் பரவ வைகி இருக்கும் அ சிறந்த ஊரில்-சித்திரரதனென்னுங் கந்திருவனுடனே, தாமரை மலரில் வசிக்கும் இலக்குமி நாயகனாகிய திருமால் வணங்கவெழுந்தருளியிருக்கும் அந்தச் சிறந்த குருவிருந்துறையென்னுந் திருப்பதியில்.

சிவபெருமானுக்கு மன்றித் திருப்பதிக்கும் வந்தபெயரும் காரணப்பெயர் என்பார் குருவிருந்து நோற்ப எனவும், பிரகஸ்பதி பேறடைந்ததுமன்றி யோர் கந்திருவனும் திருமாலும் பேறடைய நின்ற திருப்பதியென்பார் சிறந்தவூர் எனவுங் கூறினார். (௩)

சுகலனென்றொருவேளாளனவன்மனைசுகலையென்பா
ளிகலருங்கற்பினாள்பன்னிருமகப்பெற்றாள்செல்வப்
புகலருஞ்செருக்காலன்னபுதல்வரைக்கடியாராகி
யகலருங்களிப்புமீதூரன்பினால்வளர்க்குநாளில்.

(இ-ள்.) சுகலன் என்று ஒரு வேளாளன் அவன் மனை சுகலை யென்பாள் - சுகலனென்றொரு வேளாளனுள்ளான் அவனுடைய மனைவி சுகலையென்னும் பெயருடையவள், இகல் அருங் கற்பினாள் பன்னிருமக பெற்றாள் - பகைமையில்லாத கற்பினையுடைய அந்தச் சுகலையென்பவள் பன்னிரண்டு பிள்ளைகளைப் பெற்றாள், செல்வம் புகல் அருஞ் செருக்கால் அன்ன புதல்வரை கடியார் ஆகி - பெருஞ்செல்வத்தாலாகிய சொல்லுதற்கரிய இறுமாப்பால் அம்மைந்தர்களைக் குற்றங் கண்டவழி யொறுக்காதவர்களாகி, அகலருங் களிப்பு மீதூர் அன்பினால் - நீங்காத களிப்புமிக்க அன்போடு, வளர்க்கும் நாளில்-வளர்க்குங் காலையில்.

செல்வப்பெருக்கால் கல்வி பயிற்றுவிக்க மறந்தனர் என்பார் செல்வப்புகலருஞ் செருக்கால் எனவும், குணங்குற்றங்களை யறியாப்பருவத்தில் குற்றங் கண்டவழி யொறுத்துக் குணத்தின்பாற்படுத்த லொழிந்தனர் என்பார் அன்னபுதல்வரைக் கடியாராகி எனவும், பொருட்பேறுபோல மக்கட்பேறும் பெரிதுடையோம் என இறுமாந்தனர் என்பார் அகலருங்களிப்புமீ தூரன்பினால் வளர்க்கு நாளில் எனவுங் கூறினார். (௪)

தந்தையுந்தாயுமாயத்தறுகண்மிக்குடையராகி
மைந்தரும்வேடரோடுகூடிவெங்கானில்வந்து
வெந்தொழில்வேட்டஞ்செய்வார்வெயில்புகாப்புதற்கீழெய்தி
யைந்தவித்திருந்துநோற்குங்குரவனையங்குக்கண்டார்.

(இ-ள்.) தந்தையும் தாயும் மாய - தமது பிதாவுந் தாயுமிறக்க, தறு கண் மிக்கு உடையர் ஆகி - கொடுந்தொழிலை மிகவும் உடையவராகி, மைந்தரும் வேடரோடு கூடி - அப்பன்னிரு புதல்வரும் வேடரோடு கலந்து, வெங்கானில் வந்து வெந்தொழில் வேட்டம் செய்வார் - வெம்மை மிக்ககாட்டில் வந்து கொடுந்தொழிலாகிய வேட்டையாடுகின்றவர்கள், வெயில் புகாத புதல் கீழ் எய்தி - சூரியகிரணஞ் செல்லாத அடர்ந்த ஓர் புதலின் கீழ்ச்சென்று, ஐந்து அவித்து இருந்து நோற்கும் குரவனை அங்கு கண்டார் - ஐம்புலன்களையும் வென்றிருந்து தவஞ்செய்யும் பிரகஸ்பதியைப் புதலின்கீழ்ப் பார்த்தனர்.

தாய்தந்தையர் வளர்க்குங்காலே கூடவளர்ந்த கொடுந்தொழிலராதலால் தறுகண்மிக்குடையராகி யெனவும், அரசர்க்கன்றி யேனையோர்க்கு வேட்டம் உயிர்க்கொலையாய் முடியுமாதலால் வெந்தொழில் வேடராகி யெனவும் கூறினார். மிக்கு செயவெனெச்சத்திரிபு. ஐந்து புலங்கள்மேல் நிற்றலால் பண்பாகுபெயர். (௫)

கைத்தலம்புடைத்துநக்குக்கல்லும்வெம்பரலும்வாரி
மெய்த்தவன்மெய்யிற்றாக்கவீசினார்வினையைவெல்லு
முத்தமன்வீக்கஞ்செய்தார்தலத்தினுக்குவமொன்றுன்னிச்
சித்தநொந்தினையவஞ்சத்தீயனைச்செயிர்த்துநோக்கா.

(இ-ள்.) கைத்தலம் புடைத்து நக்கு - கைகொட்டிச் சிரித்து, கல்லும் வெம்பரலும் வாரி மெய்த்தவன் மெய்யில் தாக்க வீசினார் - கல்லையுங் கொடியபருக்கைகளையும் பொறுக்கிப் பொய்மை யொழிந்த தவமேற்சென்ற பிரகஸ்பதியின் மேனியிற் றாக்க எறிந்தார்கள், வினையை வெல்லும் உத்தமன் - வினையையொழிக்கும் உத்தமநெறியிற்சென்ற அப்பிரகஸ்பதி, உவர் தவத்தினுக்கு வீக்கஞ்செய்தார் என்று உன்னி-இவர்கள் நமது தவத்தினுக்கழிவுசெய்தாரென்று கருதி, சித்தம் நொந்து - மனம் வருந்தி, இனைய வஞ்சம் தீயரை வெகுண்டு நோக்கா - இந்த வஞ்சம்பூண்ட கொடியரைக் கோபித்துப்பார்த்து.

கொடுந்தொழிலிற் பயின்றவராதலால் என்றுங் கண்டறியாத ஓர் பெருவியப்பாக இருந்ததென்பார் கைத்தலம்புடைத்து நக்குஎனவும், சற்கருமம் கன்மமலத்தைப் போக்குவதென்பார் வினையை வெல்லும் உத்தமன் எனவுங் கூறினார். (௬)

தொழுந்தொழின்மறந்துவேடத்தொழிலுழந்துழல்வீர்நீர்மண்
ணுழுந்தொழிலுடையநீராற்பன்றியினுதரத்தெய்திக்
கொழுந்தழலனையவேனக்குருளையாய்த்தந்தைதாயை
யிழந்தலமுறுமினென்னவிட்டனன்கடியசாபம்.

(இ-ள்.) தொழும் தொழில் மறந்து - (பெரியோரைக் காணில்வழிபட்டு) வணங்குந் தொழிலைக் கைவிட்டு, வேடத் தொழில் உழந்து உழல் வீர் - வேட்டுவர் தொழிலை மேற்கொண்டுழலுகின்ற செய்கையையுடையீர், நீர் மண் உழும் தொழில் உடைய நீரால்-நீங்கள் நிலத்தை யுழுந்தொழிலையுடைய குலத்திற்பிறந்ததன்மையால், பன்றியின் உதரத்து எய்தி - வராகத்தின் கருப்பத்தை யடைந்து, கொழுந் தழல் அனைய ஏனம் குருளையாய் - முதிர்ந்த நெருப்பை யொத்த வெய்ய கோபத்தையுடைய பன்றிக்குட்டிகளாய், தந்தை தாயை இழந்து அலமுறு மின் என்ன கடிய சாபம் இட்டனன்-(பிறந்தபோதே) தந்தைதாயிழந்து வருந்துங்களென்று கடுஞ்சாபம் அருளினார்.

பெரியோரைக் காணில் உபசரித்து வணக்குதலுங்கள் குலத்திற்குரிய தொழில் என்பார் தொழுந்தொழில் மறந்து எனவும், பாவத்திற்கஞ்சாது கல்லெறிதல் வேடர்குலத்துக்குரிய தொழில் என்பார் மறந்து வேடத்தொழிலு வந்து எனவும், உங்கள் குலத்திற்குரிய தொழில் உழுதொழிலாதலால் மூக்காலுழும் இழிபிறப்பை யடைமின் என்பார் ஏனக் குருளையாய் எனவும், இகழ்ந்த பழிகழியப பிறந்தபோதே யல்லலுறுவீர் என்பார் தந்தைதாயை யிழந்தலமுறுமின் எனவுங் கூறினார்.

பாவத்தையனையமைந்தர்பன்னிருபேருமஞ்சிச்
சாவத்தையேற்றெப்போதுதணிவதிச்சாபமென்ன
வாவத்தையகற்றுமீசனருட்கழனினைந்துவந்த
கோவத்தைமுனிவுசெய்தக்கடவுளர்குரவன்கூறும்.

(இ-ள்.) பாவத்தை அனைய மைந்தர் பன்னிரு பேரும் அஞ்சி - பாவமுருவெடுத்ததை யொத்த பன்னிரண்டுமைந்தரும் அச்சங்கொண்டு, சாவத்தை ஏற்று - அருளிய சாபத்தை மேற்கொண்டு, எப்போது இசாபம் தணிவது என்ன - எக்காலையி லிந்தச்சாபம் ஒழிவதென்று குறையிரக்க, ஆவத்தை அகற்றும் ஈசன் அருள் கழல் நினைந்து - ஆன்மாக்களுக்கு வருமிடையூற்றை யொழித்தருளுஞ் சிவபெருமானது கருணைவடிவாகியதிருவடியை நினைந்து, வந்த கோவத்தை முனிவு செய்து அக்கடவுளர் குரவன் கூறும் - தமக்குவந்த சினத்தை வெறுத்து அத்தேவகுருவாகிய பிரகஸ்பதி கூறுகின்றார்.

தாம்செய்த செய்கையால் வருங்கெடுதி யின்னதென முன்னரறியும் உணர் வினரல்லராதலால் அஞ்சியெனவும், அவர்களறியாமையி னியல்பை யுணர்ந்தமை யால் வந்தகோபத்தை முனிவுசெய்து எனவும், ஆன்மாக்க ளுய்தற்பொருட்டுக்கொ ண்டருளிய திருக்கோலத்தினுறுப்புகள் அருள்வடிவாதலால் அருட்கழல் எனவுங் கூறினர். (அ)

என்னையாளுடையகூடலேகநாயகனேயுங்கட்
கன்னையாய்முலைதந்தாவியளித்துமேலமைச்சராக்கிப்
பின்னையானந்தவீடுதருமெனப்பெண்ணோர்பாகன்
றன்னையாதரித்தோன்சொன்னான்பன்னிருதநயர்தாமும்.

(இ-ள்.) என்னை ஆளுடைய கூடல் ஏக நாயகனே - என்னை யாளாகவுடைய திருவாலவாயிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளே, உங்கட்கு அன்னையாய் முலை தந்து ஆவி அளித்து - (தாயிழந்தலமரும்) உங்களுக்குத் தாயாய் வந்து முலை கொடுத்துப் பாலித்து,மேல் அமைச்சர் ஆக்கி - சிலநாள் கழிந்த பின்னர் உங்களைப் பாண்டியனுக்கு மந்திரிகளாக்கி, பின்னை ஆனந்த வீடு தரும் என - பின்பு சிவகதி தந்தருளுவரென்று, பெண் ஓர் பாகன் தன்னை ஆதரித்தோன் சொன்னான் - உமா தேவியை யோர் பாலுடைய அக்கடவுளே முதல்வனென்று பற்றிய பிரகஸ்பதி யருளினர், பன்னிரு தநயர் தாமும் - பன்னிரண்டு மைந்தரும்.

அவனையன்றி வேறு முதல்வரின்மையால் ஏகநாயகன் என்றார். (௯)

தொன்மைசால்குருவிருந்ததுறையதன்புறத்தவான
பன்மைசால்கானவாழ்க்கைப்பன்றிகட்கரசாய்வைகுந்
தன்மைசாறனியேனத்தின்றன்பெடைவயிற்றிற்சென்று
வன்மைசால்குருளையாகிப்பிறந்தனர்வழக்கான்மன்றே.

(இ-ள்.) தொன்மை சால் குருவிருந்த துறை யதன் புறத்த ஆன - தொன்றுதொட்டுள்ள குருவிருந்த துறையின் புறத்திலுள்ள, பன்மை சால் கானம் வாழ்க்கை பன்றி கட்கு - பலவகைப்பட்ட காட்டில் வாழும் பன்றிகளுக்கு, அரசு ஆய் வைகும் தன்மை சால் தனி ஏனத்தின் தன்பெடை வயிற்றில் சென்று - வேந்தாய் நிலைபெற்ற தன்மைமிக்க ஒப்பில்லாத ஆண்பன்றியின் உயிர்த்துணையாகிய பெண் பன்றியின் கருப்பத்திலடைந்து, வன்மை சால் குருளை ஆகி பிறந்தனர் - வன்மை மிக்க குட்டிகளாகி யன்றே பிறந்தார்கள், வழக்கால்-சாபமிடையீடுபடாதென்னும் வழக்கினால்.

"குணமென்னுங்குன்றேறி நின்றார்வெகுளி - கணமேயுங்காத்தலரிது" என்னுந் திருக்குறளாலுணர்க. கானவாழ்க்கை இடைப்பிறவரல். (௧0)

ஆனநாளொருநாளெல்லையரசருக்கரசனான
மீனவன்மதுரைநீங்கிமேற்றிசைக்கானநோக்கி
மானமாவேட்டஞ்செய்வான்மத்தமாவுகைத்துத்தண்டாச்
சேனைதன்புறம்பேமொய்ப்பச்செல்கின்றான்செல்லுமெல்லை.

(இ-ள்.) ஆன நாள் - இவ்வாறான காலையில், ஒருநாள் எல்லை அரசருக்கு அரசன் ஆன மீனவன் - ஒருநாளளவில் அரசர்க்கரசனாகிய இராசராசபாண்டியன், மதுரை நீங்கி - மதுரையினின்றும் நீங்கி, மேற்றிசை கான நோக்கி-அம்மதுரைக்கு

மேற்றிசையிலுள்ள அடவியை நோக்கி, மானம் மா வேட்டம் செய்வான் - பெரிய மிருகவேட்டை மாடுதற்பொருட்டு, மத்தம் மா உகைத்து - மதமயக்கத்தையுடைய யானையைச் செலுத்தி, தண்டா சேனை தன் புறம்பே மொய்ப்ப செல்கின்றான் - நீங்காத சேனைகள் தன்புறத்தே சூழ்ந்துவரச் செல்லுவானாயினான், செல்லும் எல்லை - அவ்வாறு செல்லுமளவில்.

மாவழங்கிடங்கடேரவல்லதோல்வன்காலொற்றர்
பாவடிச்சுவடுபற்றிப்படர்ந்துநாறழல்புலால்வாய்த்
தீவிழியுழுவையேனந்திரிமருப்பிரலைபுல்வாய்
மேவிடனறிந்துவல்லேவிரைந்துவந்தெதிரேசொன்னார்.

(இ-ள்.) மா வழங்கு இடங்கள் தேர வல்ல தோல்வன் கால் ஒற்றர் - மிருகங்கள் சஞ்சரிக்கும் இடங்களை யுணரவல்ல தொடுதோல் வீக்கிய முருட்டுக்கால்களையுடைய தூதுவர்கள், பாவடி சுவடு பற்றி படர்ந்து - யானையின் காலடிச் சுவட்டைப்பற்றிப் பின்சென்று, நாறு அழல் புலால் வாய் தீவிழி உழுவை - காரணமின்றித் தோன்றுங் கோபாக்கினியையும் புலால்நாறும் வாயையும் தீக்கொப்புளிக்குங் கண்களையுமுடைய புலிகளும், ஏனம் திரி மருப்பு இரலை புல் வாய் மேவு இடன் அறிந்து - பன்றிகளும் திருகிய கொம்புகளையுடைய கலைமானும் மானும் இருக்கும் இடங்களை யுணர்ந்து, வல்லே விரைந்து வந்து எதிரே சொன்னார் - கடுக விரைந்துவந்து பாண்டியன் முன்பு கூறினார்கள்.

அழல் கோபத்தின்மேல் நிற்றலால் உவமையாகுபெயர். (௪௨)

மறத்துறைவேட்டமாக்கள்வல்லைபோயொடியெறிந்து
புறத்துவார்வலைகள்போக்கிநாயதன்புறம்புபோர்ப்ப
நிறைத்துமாவொதுக்கியீட்டும்படைஞராய்நிரைசூழ்நிற்ப
அறத்துறைமாறாக்கோலனாணைமேல்கொண்டுநிற்ப.

(இ-ள்.) மறம் துறை வேட்ட மாக்கள் - கொலைத்தொழிலின் வழியே சென்ற வேட்டமாடுதலில் வல்லோர், வல்லை போய் - விரைந்து சென்று, ஒடி யெறிந்து - ஒடிவீசி, புறத்து வார் வலைகள் போக்கி - புறம்பே வாராலாகிய வலைகளைக்கட்டி, நாய் அதன் புறம்பு போர்ப்ப நிறைத்து - நாய்கள் வலையின் புறம்பே சூழ்ந்துநிற்க அவற்றை நிறைத்து, மா ஒதுக்கி ஈட்டும் படைஞர் ஆய் நிரை சூழ் நிற்ப - மிருகங்களையொதுக்கி யோரிடத்தில் கூட்டும் சேனாவீரராய் வரிசைபடச் சூழ்ந்து நிற்கவும், அறம் துறை மாறாத கோலான் ஆணைமேல் கொண்டு நிற்ப - மநுநூல்வழியிற் றிறம்பாத செங்கோலையுடைய இராசராசபாண்டியன் ஆனைமேலேறி யொருபால் நிற்கவும்.

ஒடியெறிதல் மூலைபோக்குதல். அறம் தானியாகுபெயராய் மநுநூல்மேல் நின்றது. (௧௩)

சில்லரிதுடிகோடெங்குஞ்செவிடுறச்சிலையாநிற்பப்
பல்வகைப்பார்வைகாட்டிப்பயில்விளியிசையாநிற்ப
வல்லியமிரலைமையன்மானினம்வெருளாநிற்ப
வில்லிறவலித்துவாங்கிமீளிவெங்கணைகடேர்த்தார்.

(இ-ள்.) சில்லரி துடி கோடு எங்கும் செவிடு உற சிலையா நிற்ப - சில்லரியென்னும் ஒருவகை வாச்சியமும் உடுக்கையும் கொம்பும் எவ்விடத்துஞ் செவிடுபட

ஒலிக்காநிற்கவும், பல்வகை பார்வை காட்டி பயில்·விளி இசையா நிற்ப - பலவகைப்பட்ட பார்வைகளையுங்காட்டிச் சைகைவிளி யொருபாலிசைக்காநிற்கவும், வல்லியம் இரலை மையல் மான் இனம் வெருளா நிற்ப - புலியும் கலைமானும் மயக்கத்தையுடைய மான்கூட்டமுமஞ்ச, வில் இற வலித்து வாங்கி மீளி வெங்கணைகள் தூர்த்தார் - வில்முறியும்வண்ண மண்டிலாகாரமாக வளைத்து வெற்றிமிக்க கொடிய பாணங்களைத் தூர்த்தனர்கள்.

புலிபோலப் புலியையும் மான்போல மானையுங்காட்டல் பார்வைகாட்டல். அம்மிருகங்கள் தம்முளழைக்குஞ் சைகைபோல விளித்தல் பயில்விளி. சில்லரி - ஒலிக்கும் ஒருகட்பறை. சில் ஒலி. (௧௪)

கலிநிலைத்துறை.

செறிந்தமான்முறிந்ததாள்சிதைந்தசென்னிசெம்புனற்
பறிந்தவாறுவெண்ணிணம்பரிந்துவீசுகையிறு
மறிந்தவேழுயர்ந்தவேழமாண்டவெண்குவல்லியம்
பிறிந்தவாவியோடும்வாய்பிளந்தவாய்விழுந்தவே.

(இ-ள்.) செறிந்த மான் - நெருங்கிய மான்கள், தாள் முறிந்த சென்னி சிதைந்த - கால்கள் முறிந்து தலையறுபட்டு, செம்புனல் ஆறு பறிந்த - உதிரவெள்ளம் பெருக்கின, ஏழ் உயர்ந்த வேழம் - ஏழுமுழமுயர்ந்த யானைகள் வெள் நிணம் பரிந்து - வெள்ளிய நிணங்களைச்சிந்தி, வீசு கையிறு - வீசுந் துதிக்கையற்று, மறிந்த மாண்ட - மடங்கி வீழ்ந்திறந்தன, எண்கு - கரடிகளும், வல்லியம் - புலிகளும், பிறிந்த ஆவியோடும் - நீங்கிய பிராணனோடும், வாய் பிளந்த ஆய் விழுந்த - வாய் பிளந்து விழுந்தன.

முறிந்த, சிதைந்த, மறிந்த முற்றெச்சங்கள். ஏழுமுழமுயர்தல் "காலோர் நான்குந்தனிக்கையுங்கோசமும்-வாலுமுப்போடேழு மாநிலந்தோயப் - பாலுஞ்சங்கும்போலுங்காலுகிரது-காலினும் ஞான்றவொருதனிக்கையினும்-வாயினும்வாலினு மருப்பினுங்கோறல்-வல்லதுமூன்றுமுழச்சுற்றுமுடைத்தாகி-ஏழுமுழமுயர்ந்தொன்பதுமுழநீண்டதும்" எனவருஞ் சூத்திரத்தாலறிக. (௧௫)

தொட்டபுற்கிழங்குவாடைதொடவிரைந்துகண்ணியுட்
பட்டவும்பொறித்துவைத்தபார்வைவீழ்ந்தடுத்தவுங்
கட்டியிட்டவலைபிழைத்துஞமலிகௌவநின்றவு
மட்டிலாதவொட்டிநின்றமுள்ளர்வேலின்மாய்ந்தவே.

(இ-ள்.) தொட்ட புல் கிழங்கு வாடை தொட - கல்லியெடுத்துவைத்த புல்லின் கிழங்குகளின் வாடை வீச, விரைந்து கண்ணி உட் பட்டவும் - விரைந்தோடிக் கௌவி வலையிற் பட்டனவும், பொறித்து வைத்த பார்வை வீழ்ந்து அடுத்தவும் - எழுதிகாட்டிய பார்வையை நோக்கி விரும்பிவந்தடுத்தனவும், கட்டி இட்ட வலை பிழைத்து ஞமலி கௌவ நின்றவும் - கட்டிய வலையினின்று தப்பி நாய்கள் கௌவ நின்றனவுமாகிய, மட்டிலாத-அளவில்லாதனவாகிய மிருகங்கள், ஒட்டி நின்ற மள்ளர் வேலின் மாய்ந்த - பதுங்கிநின்ற வேட்டமாக்கள் வேலினாலிறந்தன.

பார்வை வலைகளைப்போலப் புற்கிழங்குகளும் படுக்குங் கருவியாதலால் தொட்டபுற்கிழங்குவாடை தொட என்றார். பட்ட, அடுத்த, நின்ற என்னு முற்றுகள்பெயரொச்சத்தின்மேல் நின்றன. (௧௬)

பட்டமாவொழிந்துநின்றமறவிலங்குபல்சில
வட்டமாவளைந்துடுத்தவலையினுந்தியப்புறத்
தெட்டிநின்றகொலைஞர்மேலெதிர்ந்துமீளவெயில்வளைந்
தொட்டிஞாமலையுமாப்பொறிக்கணங்களொத்தவே.

(இ-ள்.) பட்டமா ஒழிந்து - இறந்த மிருகங்களொழிய, நின்ற மறம் விலங்கு பல் சில - பிழைத்துநின்ற மிருகங்களுள் பல மிருகங்களும் சில மிருகங்களும், வட்டம் ஆக வளைந்து உடுத்த வலையின் உந்தி - மண்டிலமாக வளைந்து சூழ்ந்த வலையினின்றுந் தாவி, அப்புறத்து எட்டி நின்ற கொலைஞர் மேல் எதிர்ந்து மீள-வலையின் அப்புறத்தில் அடுத்துநின்ற வேட்டுவமாக்கள் மேற்பாய்ந்து மீளுதல், எயில் வளைந்து ஒட்டிஞா-மதிலை முற்றுகைசெய்து போர்செய்ய நின்ற வீரர்களோடு, மலையும் மா பொறிக் கணங்கள் ஒத்த - போர்செய்ய வமைத்த இயந்திரங்களாகிய மிருகங்களை யொத்திருந்தன.

ஒழிந்து செயவெனெச்சத்திரிபு. (கஎ)

வல்லியந்தொலைத்தகன்றுமான்றொலைத்தகன்றுவெங்
கல்லியங்குமெண்கினைத்தொலைத்தகன்றுகயவுவாய்
வெல்லிபந்தொலைத்துமள்ளர்விட்டவாளியிங்ஙனஞ்
சொல்லினுங்கடிந்துபோய்த்துணித்தமாவளப்பில.

(இ-ள்.) மள்ளர் விட்ட வாளி - சேனாவீரர்களெய்த அம்புகள், சொல்லினும் கடிந்துபோய் - (முனிவர்) சாபத்தினும் விரைந்துசென்று, வல்லியம் தொலைத்து அகன்று - புலிகளைத் தொலைத்துருவி, மான் தொலைத்து அகன்று - மானினங்களைத் தொலைத்துருவி, வெம் கல் இயங்கும் எண்கினை தொலைத்து அகன்று - வெப்பம்வாய்ந்த மலைகளிற் சஞ்சரிக்கும் கரடிகளைத்தொலைத்துருவி, கயவு வாய் வெல் இபம் தொலைத்து - பெரியவாயையுடைய வெற்றியையுடைய யானைமேற்றைத்து, இங்ஙனம் துணித்தமா அளப்பில - இவ்வாறு துண்டுபடுத்திய மிருகங்கள் அளவில்லாதன.

முனிவர்கள் சாபம் சபிக்கப்பட்டவர்கள்மேல் அன்றே செல்லுதலின் சொல்லினும் கடிந்துபோய் என்றார். இன்னுருபு எல்லைப்பொருள்மேல் நின்றது. (கஅ)

மடுத்தவாளியிற்பிழைத்துவலையைமுட்டியப்புறத்
தடுத்தமானைவௌவிநாயலைத்துநின்றவாதிநா
ளுடுத்தபாசவலையினின்றுமுய்குவாரையொய்யெனத்
தடுத்தவாவிளைத்துநின்றதையலாரையொத்தவே.

இ-ள். மடுத்த வாளியின் பிழைத்து - பாய்ந்த அம்பினின்றுந் தப்பி, வலையைமுட்டி அப்புறத்து அடுத்தமானை - கட்டியவலையினின்றுந் தாண்டி யப்புறஞ்சென்ற மானினை, நாய் வௌவி அலைத்துநின்ற - நாய்கள் கவ்வி யப்புறஞ்செல்லவொட்டாமல் வருத்திநின்றன, ஆதி நாள் உடுத்த பாசம் வலையினின்றும் உய்குவாரை - முன்னாளிலே விடாது தொடர்ந்த ஆணவமலமாகிய வலையினின்றும் தப்பிப்பிழைக்க முயலும் பெரியோர்களை, ஒய்யெனதடுத்து அவாவிளைத்து நின்ற தையலாரை ஒத்த - விரைந்து செல்லவொட்டாமல் தடுத்து (ஆடையணிமுதலியவற்றால்) முன்னின்று ஆசையை விளைவிக்கும் பெண்கள் செயலை யொத்திருந்தன.

பதிபசுபாசம் என்னு மூப்பொருளும் அநாதியாதலால் ஆதிநாள் எனவும், பசுவோடொற்றித்து நிற்றலால் உடுத்தபாசம் எனவும், போகநுகர்ச்சிக்கு வினைமுதலால் வலையெனவுங் கூறினர் "ஒன்றதாயநேகசத்தி யுடையதாயுடனுயாதி - அன்றதாயான்மாவின்ற னறிவொடுதொழிலையார்த்து - நின்றுபோத்திருவத்தைநிகழ்த்திச் செம்பினிற்களிம்பேய்ந் - தென்றுமஞ்ஞானங்காட்டு மாணவமியைந்துநின்றே" எனவரும் ஏதுவால் உணர்க. (௧௯)

மதியைநேர்வகிர்ந்துகௌவியனையவான்மருப்புவெங்
கதியவேழமீதுதாதுகாலுநீலமுகையினி
னுதியவேனுழைந்தசெம்புணூழில்வீழுமுதிரநீர்
முதியகானவரையின்மீதுமொய்த்ததீயையொத்தவே.

(இ-ள்.) மதியை நேர் வகிர்ந்து கௌவியது அனையவால் மருப்பு - சந்திரனைச் சரிபாதியாகப் பிளந்து கௌவியதையொத்த வெள்ளியகொம்புகளையுடைய, வெம் கதிய வேழம் மீது - வெய்ய நடையையுடைய யானையின்மேல், தாது காலும் நீலம் முகையினில் நுதிய வேல்நுழைந்த நூழில் செம்புண் - மகரந்தத்தைச்சிந்தும் நீலோற்பலத்தினரும்புபோல் விடம்பூசிய நுனியையுடைய வேல்தைத்தலால் அந்த யானையின் செவந்த சதைகளினின்றும், வீழும் உதிர நீர்-வீழாநின்ற உதிரவெள்ளமானது, முதிய கானம் வரையின்மீது மொய்த்ததீயை ஒத்த - பெரியகாடடர்ந்த மலையின்மேல் நெருங்கிய தீத்திரளையொத்திருந்தன.

நுழைந்தகாரணப்பொருளில்வந்த பெயரெச்சமாதலால் தைத்தலால் என்றும். நீலமுகையினில்நுதிய என்பது பண்புபற்றிய வுவமையாதலால் விடம்பூசிய எனப் பொருளின்குணத்தை விரித்தாம். நூழில்யானை. (௨௦)

மள்ளரோசைதுடியினோசைவயிரினோசைவாளிபோய்த்
தள்ளவீழ்விலங்கினோசைதப்பியோடுமானின்மேற்
றுள்ளுநாய்குரைக்குமோசைகானமூடுதொக்குவா
னுள்ளுலாயுடன்றொலிக்குமுருமினோசைபுரையுமால்.

(இ-ள்.) மள்ளர் ஓசை - வீரருடைய வீரகோஷமும், துடியின் ஓசை வயிரின் ஓசை - உடுக்கையினொலியும் ஊதுகொம்பின் முழக்கமும், வாளிபோய்தள்ள வீழ் விலங்கின் ஓசை - அம்புகள்சென்று தாக்கவீழு மிருகங்களினாரவாரமும், தப்பி ஓடும் மானின்மேல் துள்ளும் நாய் குரைக்கும் ஓசை (வலையினின்றும்) தப்பியோடிய மான்களின்மேல் தாவிச்செல்லும் நாய்கள் குரைக்கின்ற குரைப்பும், கானம் ஊடு தொக்கு - காட்டில் ஒரு சேரத்திரண்டு, வான் உள் உலாய் உடன்று ஒலிக்கும் உருமின் ஓசை புரையும்-மேகத்திற்றோன்றி மிக்கொலிக்கும் இடியினோசையையொத்திருக்கும். (௨௧)

இன்னவேறுபல்விலங்கெலாமலைத்திலங்குவேன்
மன்னரேறுதென்னர்கோமகன்குடக்கினேகுவா
னன்னபோதொரேனமேனவரசிருக்குமடவிவாய்
முன்னரோடிவந்துநின்றுவந்தசெய்திமொழியுமால்.

(இ-ள்.) இன்னபல் வேறு விலங்கு எல்லாம் அலைத்து - இப்படி பல வேறு வகைப்பட்ட மிருகங்களையெல்லாம் வருத்தி, இலங்கு வேல் மன்னர் ஏறு தென்னர் கோமகன் - விளங்கும் வேலையேந்திய அரசர்களுள் ஆண்சிங்கம்போன்ற இராசரா

ஐபாண்டியன், குடக்கின் ஏகுவான் (அங்குநின்றும்) மேற்றிசைநோக்கிச்செல்லுகின்றவனாயினன், அன்னபோது — அப்போது, ஓர் ஏனம் - ஒருபன்றியானது, ஏனம் அரசு இருக்கும் அடவி வாய் முன்னர் ஓடி வந்து நின்று - பன்றி வேந்திருக்கும்காட்டில் முற்பட ஓடிவந்து (ஒருபுடை ஒதுங்கி) நின்று, வந்த செய்தி மொழியும் - தான்வந்தசெய்தியைக் கூறுநிற்கும். (உஉ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

எங்களுக்கரசேகேட்டியிங்குளவிருகமெல்லாந்
திங்களுக்கரசன்கொன்றுவருகின்றானென்றுசெப்ப
வெங்களிப்படைந்துபன்றிவேந்தனுமடுபோராற்றச்
சங்கையுற்றெழுந்துபோவான்றன்னுயிர்ப்பெடையைநோக்கா.

(இ-ள்.) எங்களுக்கு அரசே கேட்டி - எங்களுக்கரசனே கேட்பாய், இங்கு உள்ள விருகம் எல்லாம் - இக்காட்டிலுள்ள மிருகங்களையெல்லாம், திங்களுக்கு அரசன்கொன்று வருகின்றான் என்று செப்ப - இராசராசபாண்டியன் கொலைசெய்து வருகின்றானென்றுகூற, பன்றி வேந்தனும் வெம்களிப்பு அடைந்து - பன்றியரசனும் வீரச்செருக்கடைந்து, அடுபோர் ஆற்ற சங்கை உற்று எழுந்து போவான் - கொல்லும் போர்த்தொழில்செய்ய மேற்கொண்டெழுந்து போகின்றவன், தன் உயிர்பெடையை நோக்கா - தனது உயிர்போன்ற பெண்பன்றியைப்பார்த்து.

தன்னொடு போர்செய்யும் வீரரை யிதுகாறும் பேர்செய்தற்குப் பெறாதிருந்த கவலை மிக்குடையதென்பார் கொன்று வருகின்றானென்று செப்பவெங்களிப்படைந்து எனவும், போர்பெற்றமையா லக்கவலையொழிந்ததென்பார் அடுபோராற்றச்சங்கையுற்றெழுந்து எனவுங் கூறினர். (உ௩)

இன்றுபாண்டியனைநேரிட்டிருஞ்சமராடிவென்று
வன்றிறல்வாகையோடுவருகுவனேயோவன்றிப்
பொன்றுவனேயோநீயுன்புதல்வரைப்பாதுகாத்து
நன்றிவணிருத்தியென்னநங்கைப்பேடின்னகூறும்.

(இ-ள்.) இன்று பாண்டியனை நேரிட்டு இரும் சமராடி வன்திறல் வென்று வாகையோடு வருகுவனேயோ - இப்பொழுது பாண்டியனை யெதிர்த்துப் பெரிய போர்செய்து வலிய வீரத்தால் அவனைவென்று வெற்றிமாலைபுனைந்து வருவேனோ, அன்றி பொன்றுவனேயோ - இதுவன்றி யவனாலிறப்பேனோ, நீ உன் புதல்வரை பாது காத்து இவண் நன்று இருத்தி என்ன - நீ உன்மக்களைப் பாதுகாத்துச் சுகமாயிருப்பாயென்றுகூற, நங்கை பேடு இன்ன கூறும் - சிறந்த பெண்பன்றி யிதனைக் கூறுநிற்கும். (உ௪)

ஆவியங்கேகவிந்தவாகமிங்கிருப்பதேயிப்
பாவியோமேனாளிந்தப்பறழினைவகுத்ததெய்வ
மாவமராடிவென்றுவருதியேல்வருவேனன்றி
நீவிளிந்திடத்துமாய்வேனிழலுக்குஞ்செயல்வேறுண்டோ.

(இ-ள்.) ஆவி அங்கு ஏக இந்த ஆகம் இங்கு இருப்பதே - எனது பிராணனங்குப் போர்க்குச்செல்ல இந்தச்சரீரம் இவ்விடத்துச்சுகமாயிருப்பதும் வழக்கோ, மேல் நாள் இ பாவியோம் இந்த பறழினை தெய்வம் வகுத்தது - முற்பிறப்பில் இந்தப் பாவமிகுதியையுடைய வெமக்கு இந்தக் குட்டிகளைத் தெய்வந்தந்தது, மா அம

ராடி வென்று வருதியேல் வருவேன் - (பாண்டியனோடு) பெரியபோர்செய்து வருவாயானல் வருவேன், அன்றி - அதுவன்றி, நீ விளிந்த இடத்து மாய்வேன் - நீ இறந்த இடத்தி லிறப்பேன், நிழலுக்கும் வேறுசெயல் உண்டோ - உனது தேகநிழல்போல விடாது பின்செல்லும் எனக்கும் வேறு செயலுளதோ (என்று கூ.ற.)

தெய்வம் என்றது பழவினையை. கற்புடையாட்குக் கணவனியக்கி லியக்கமும், அவனியக்க மொழியின் தனக்கு இயக்கமின்மையு முடைமையால் ஆவியங்கே கவிந்தவாக மிங்கிருப்பதே யெனவும், கணவன் பின்செல்லுதற்கோர் தடையும் மக்கட்பேற்று லின்பநுகர்த லின்மையுமுடைமையால் இப்பாவியோமேனுளிந்தப்பறழிவைவகுத்ததெய்வம் எனவும், தேகம் அழிந்தவிடத்துத் தேகசாயையும் ஒருசேர அழிதல் இயல்பாதலால் நிழலுக்குஞ் செயல் வேறுண்டோ எனவுங் கூறியது. வருத்தது துவ்வீறு தொகுத்தல். (௨௫)

போதுகமெழுகவென்றுப்பொருக்கெனவெழுந்துநீலத்
தாதுறழேனப்பாட்டிதன்புடைதழுவிச்செல்லும்
பேதுறுபறழைநூக்கிப்பின்றொடர்ந்தணைந்துசெல்லக்
காதெயிற்றெறுழிவேந்தன்காலெனநடந்தானன்றே.

(இ-ள்.) போதுகம் எழுக என்று - போவோம் எழக்கடவாயென்று பன்றியரசன் கூற, நீலம் தாது உறழ் ஏனம் பாட்டி - நீலோற்பலத்தின் மகரந்தத்தையொத்த கருநிறம்வாய்ந்த பெண்பன்றி, பொருக்கென எழுந்து - (தன்கணவனுக்குமுன் போருக்கு) விரைந்தெழுந்து, தன் புடை தழுவி செல்லும் பேது உறு பறழை நூக்கி - தனது பக்கலில் தழுவிச்செல்லு மயக்கமிக்க குட்டிகளைத்தள்ளி, பின் தொடர்ந்து அணைந்து செல்ல - பின்தொடர்ந்து நிழல்போலவிடாது தொடர, காது எயிறு எறுழி வேந்தன்-கொல்லும் வக்கிரதந்தங்களையுடைய அப்பன்றியரசன், கால் என சென்றான் - காற்றைப்போலப் போர்க்குவிரைந்து சென்றனன்.

வீரரினும் அவர்மனைவிமார் வீரத்தைப் பாதுகாத்தலையே கண்ணுகவுடைமையால் பொருக்கெனவெழுந்து என்றார் " செம்புகாட்டியகண்ணிணைபாலெனத்தெளிந்தீர் - வெம்புகாட்டிடைநுழைதொறும்வெரிநுறப்பாய்ந்த - கொம்புகாட்டுதிரோதடமார்பிடைக்குளித்த - அம்புகாட்டுதிரோகுலமங்கையர்க்கம்மா " எனவரும் ஏதுவால் உணர்க. (௨௬)

பல்வகைச்சாதியுள்ளபன்றியின்கணங்களெல்லாம்
வெல்படைத்தறுகட்சேனைவீரராய்முன்புசெல்லச்
செல்லெனத்தெழித்துச்செங்கட்டீயுகமானமென்னு
மல்லல்வாம்புரவிமேல்கொண்டெழுந்தனன்வராகவீரன்.

(இ-ள்.) பல் வகை சாதி உள்ள பன்றியின் கணங்கள் எல்லாம் - பலவகைப்பட்ட சாதியாயுள்ள பன்றியின்கூட்டங்களெல்லாம், வெல் படை தறுகண் சேனை வீரர் ஆய் முன்பு செல்ல - வெல்லும் ஆயுதங்களை யேந்திய அஞ்சாமையையுடைய சேனைவீரராய் முன்னேசெல்ல, செல் என தெழித்து - மேகம்போலக் கோஷித்து, செம் கண் தீ உக - செவந்த கண்களினின்றும் கோபாக்கினி சிந்த, வராகம் வீரன் - பன்றிகளுள் மிக்க வீரம்வாய்ந்த அரசன், மானம் என்னும் மல்லல் வாம் புரவி மேல் கொண்டு எழுந்தனன் - மானமாகிய மிகவுந் தாவுங் குதிரையின்மேற்கொண்டெழுந்தான்.

மானம் போரிற்பின் வாங்குதல் நேரிடின் உயிர்வாழாமை. (௨௭)

முற்படுதூசியாகநடக்கின்றமுரட்காற்பன்றி
மற்படுசேனைநேரோவருகின்றமன்னர்மன்னன்
வெற்படுதடந்தோள்வன்றாள்வீரர்மேற்சீறிச்செல்லப்
பிற்படவொதுங்கிவீரர்பெய்தனரப்புமாரி.

(இ-ள்.) முன் படு தூசி யாக நடக்கின்ற - முன்னணியாகச் செல்லுகின்ற முரண் கால் பன்றி - முருட்டுக்கால்களையுடைய பன்றிகள், மல் படு சேனை நேரே வருகின்ற மன்னர் மன்னன் - மற்போரில் மிக்க தமது சேனைக்கு நேரே வருகின்ற இராஜராஜபாண்டியனுடைய, வெற்பு அடு தட தோள்வன் தாள் வீரர்மேல் சீறிசெல்ல - மலையைவென்ற பெரியதோளையு முருட்டுக்கால்களையுமுடைய சேனாவீரர்கள் மேல் சீறிப்பாய, வீரர்பின்பட ஒதுங்கி அப்புமாரிபெய்தனர் - அவ்வீரர்கள் பின்னே சிறிதொதுங்கிநின்று சரவருஷத்தைச் சொரிந்தார்கள். (௨௮)

சொரிந்தனசோரிவெள்ளஞ்சொரிந்தனவீழ்ந்தயாக்கை
சரிந்தனகுடர்களென்புதகர்ந்தனவழும்புமூளை
பரிந்தனசேனங்காகம்படர்ந்தனவுயிருமெய்யும்
பிரிந்தனவேனநின்றபிறைமருப்பேனவீரர்.

(இ-ள்.) ஏனம் சொரிந்தன சோரிவெள்ளம் சொரிந்தன-பாய்ந்தபன்றிகளுள் சில வருஷிக்கு மேகங்களைப்போல உதிரவெள்ளத்தைச்சிந்தின, யாக்கைவீழ்ந்த சில உடலறுபட்டுவீழ்ந்தன, குடர்கள்சரிந்தன - சில குடல்கள் சரிந்தன, என்புதகர்ந்தன - சில எலும்புகள் நூறுங்கின, வழும்பு மூளை பரிந்தன - சில வழும்பும் மூளைகளும் கசிந்தன, சேனம் காகம் படர்ந்தன - பருந்துகளுங் காகங்களும் பரவின, உயிரும் மெய்யும்பிரிந்தன - சில உயிரும் உடலும் தம்மினின்று நீங்கின, நின்ற பிறை மருப்பு ஏன வீரர்-உயிர்பிழைத்துநின்ற பிறையையொத்த வக்கிரதந்தங்களையுடைய ஏனைப்பன்றி வீரர்கள்.

சொரிந்தன என்னும் வினைமுற்றுப் பெயராய் வினைமுதற் பொருள்மேல் நின்றது. (௨௯)

பதைத்தனரெரியிற்சீறிப்பஞ்சவன்படைமேற்பாய்ந்து
சிதைத்தனர்சிலரைத்தள்ளிச்செம்புனல்வாயிற்சோர
வுதைத்தனர்சிலரைவீட்டியுரம்புதைபடக்கோடூன்றி
வதைத்தனர்சிலரைநேரேவகிர்ந்தனர்சிலரைமாதோ

(இ-ள்.) பதைத்தனர் எரியில் சீறி - பதைபதைத்துத் தீப்போலக்கோபித்து, பஞ்சவன் படைமேல் பாய்ந்து சிலரை சிதைத்தனர் - பாண்டியனுடைய சேனாவீரர்கள்மேற் பாய்ந்து சில வீரர்களை யழித்தார்கள், செம்புனல் வாயில் சோர சிலரை தள்ளி உதைத்தனர் — உதிரவெள்ளம் வாயினின்றுஞ் சோரச் சிலவீரர்களைக் கீழே தள்ளி யுதைத்தார்கள், சிலரை உரம் புதைபட கோடு ஊன்றி வீட்டி வதைத்தனர்- சில வீரர்களை மார்புகளிற் புதைபடத் தமது வக்கிரதந்தங்களை யழுத்தி வதைசெய்தார்கள், சிலரை நேரே வகிர்ந்தனர் - சிலரை நேரே பிளந்தார்கள். (௩௦)

தாள்சிதைந்தாருஞ்சில்லோர்தலைசிதைந்தாருஞ்சில்லோர்
தோள்சிதைந்தாருஞ்சில்லோர்தொடைசிதைந்தாருஞ்சில்லோர்
வாள்சிதைந்தாருஞ்சில்லோர்வரையறுத்தலரோன்றீட்டு
நாள்சிதைந்தாருஞ்சில்லோர்நராதிபன்சேனைவீரர்.

(இ-ள்.) நராதிபன் சேனைவீரர் - இராசராசபாண்டியனுடைய சேனைவீரர்களுள், தாள் சிதைந்தாரும் சில்லோர் - கால்முறிந்தவர்களும் சிலர், தலைசிதைந்தாரும் சில்லோர் - தலையறுபட்டு வீழ்ந்தவரும் சிலர், தோள் சிதைந்தாரும் சில்லோர்- தோளறுபட்டு வீழ்ந்தவரும் சிலர், தொடைசிதைந்தாரும் சில்லோர் - தொடையறுபட்டுவீழ்ந்தவருஞ்சிலர், வாள் சிதைந்தாரும் சில்லோர் - வாளையேந்திய கையறுபட்டு வீழ்ந்தவரும் சிலர், வரையறுத்து அலரோன் இட்டும் நாள் சிதைந்தாரும் சில்லோர்-வரையறைசெய்து பிரமன் எழுதிய ஆயுள் நாளுலந்தவரும் சிலராயினர்கள்.

உயிர்கழிந்தவுடம்பை யுயர்திணைப்பொருள்மேல் வைத்துச் சிதைந்தார் எனக்கூறியது "படுமகன்கிடக்கைகாணூஉ - ஈன்றஞான்றினும் பெரிதுவந்தனளே" என்றாற்போல வந்தது. வாள் கைமேல் நின்றது விடாத ஆகுபெயர். (௩௧)

கண்டனர்கன்னிநாடுகாவலனமைச்சர்சீற்றங்
கொண்டனர்முசலநேமிகூற்றெனவீசியார்த்தார்
விண்டனர்மாண்டார்சேனைவீரருமனையவெல்லைப்
புண்டவழெயிற்றுவேந்தைப்புடைநின்றபேடைநோக்கா.

(இ-ள்.) கன்னி நாடு காவலன் அமைச்சர் கண்டனர் சீற்றம் கொண்டனர்- பாண்டிநாட்டரசனாகிய இராசராசபாண்டியனுடைய மந்திரிகள் கண்டு கோபங்கொண்டு, முசலம் நேமி கூற்று என வீசி ஆர்த்தார் - இருப்புலக்கைகளையுஞ் சக்கரங்களையும் எறிந்து கோஷித்தார்கள், சேனைவீரரும் விண்டனர் மாண்டார் - பன்றிச்சேனைவீரரு முயிர்விட்டிறந்தார்கள், அனைய எல்லை - அக்காலையில், புண் தவழ் எயிறு வேந்தை - (பகைவர்) தசையுலாவும் வக்கிரதந்தங்களை யுடையபன்றி யரசை, புடை நின்ற பேடு நோக்கா - பக்கலில் நின்ற பெண்பன்றி பார்த்து.

கண்டனர் கொண்டனர் விண்டனர் முற்றெச்சங்கள். (௩௨)

ஏவியசேனையெல்லாமிறந்தனவினிநாஞ்செய்ய
லாவதென்வாளாநாமுமழிவதிங்கென்னைதப்பிப்
போவதேகருமமென்றுபுகன்றதத்துணையைநோக்கிச்
சாவதையஞ்சாவேனத்தனியரசொன்றுசாற்றும்.

(இ-ள்.) ஏவிய சேனை எல்லாம் இறந்தன - (நாம் போர்முகத்து) விட்ட சேனைகளெல்லா மடிந்தன, இனி நாம் செய்யல் ஆவது என் - இனி நாம் செய்யக்கடவதென்ன, இங்கு வாளா நாமும் அழிவது என்னை - இவ்விடத்தில் பயனின்றி நாமு முயிர்விடுதலால் பலனென்னை, தப்பி போவதே கருமம் என்று புகன்றது - உயிர்தப்பிப் பிழைத்துப்போவதே காரியமென்று கூறியது, அ துணையை நோக்கி சாவதை அஞ்சாத ஏனம் தனி அரசு ஒன்று சாற்றும் - அந்தப் பெண்பன்றியைப் பார்த்து உயிர்விடுகைக்கு அஞ்சாத ஒப்பற்ற பன்றி யரசு ஒரு செய்தி கூறாநிற்கும். (௩௩)

நுண்ணறிவுடையராகிநூலொடுபழகினும்
பெண்ணறிவென்பதெல்லாம்பேதைமைத்தாதலானுன்
கண்ணறிவுடைமைக்கேற்றகாரியமுரைத்தாய்மான
மெண்ணறிவுடையோர்க்கெல்லாமிழுக்குடைத்தன்றேவீதால்.

(இ-ள்.) நுண் அறிவு உடையர் ஆகி நூலொடு பழகினும் - நுண்ணிய உணர்வுடையவராகி யாழ்ந்த நூலிற் பலகால் பயிலினும், பெண் அறிவு என்பது எல்லாம் - பெண்ணுணர்ச்சியென்று கூறுவதெல்லாம், பேதைமைத்து - பெரும்பேதை

மையயுடையது, ஆதலால் - ஆகையால், உன் கண் அறிவு உடைமைக்கு ஏற்ற காரியம் உரைத்தாய் - உன்பாலுள்ள உணர்ச்சியுடைமைக்குப் பொருந்திய செய்கையளவு கூறினாய், மானம் எண் அறிவுடையோர்க்கு எல்லாம் ஈது இழுக்கு உடைத்து அன்றே - மானத்தைப் பெறும்பேறாகக்கருதும் உணர்வுடையவர்க்கெல்லாம் இச்செயல் குற்றமுடையதல்லவா.

சேனைமாயப்போரிற்பின்னிடுதல் போரில் மானமுடைய அரசனுக்குப் பெருந்தவறு என்னும்-மானம் எண்ணறிவுடையோர்க்கெல்லா மிழுக்குடைத்தன்றே வீதாலென்றது "நுண்ணறிவுடையராய் நூலோடுபழகினும்-பெண்ணறிவென்பது பெரும்பேதைமைத்தே" என்னும் சூத்திரம் ஆசிரியவசனமாதலால் ஆசிரியவசனங்கூறல். கூறுவதெல்லாம் "உள்ளுவதெல்லாமுடனெய்தும்" என்றாற்போல வந்த ஒருமைபன்மை மயக்கம். (௩௪)

தூங்கிருள்வறுவாய்ச்சிங்கமிரண்டுறைதுறையின்மாடோர்
வாங்கிருமருப்புக்கேழல்வந்துநீர்பருகிமீளும்
வீங்கிருளுடற்காரேனமொன்றுறைதுறையில்வீரந்
தாங்கிருமடங்கனீர்க்குத்தலைப்படவஞ்சுமன்றே.

(இ-ள்.) தூங்கு இருள் வறுவாய் சிங்கம் இரண்டு உறை துறையின் மாடு-நிலைபெற்ற இரவில் ஈரம்புலர்ந்த வாயையுடைய இரண்டு சிங்கங்கள் பருகவசிக்கும் நீர்த்துறையின்கண், ஓர் வாங்கு இருமருப்பு கேழல் வந்து நீர் பருகி மீளும் - வளைந்த இரண்டு வக்கிரதந்தங்களையுடைய ஒருபன்றி வந்து நீர் பருகித்திரும்பும், வீங்கு இருள் உடல் கார் ஏனம் ஒன்று உறைதுறையில் - மிக்க கருநிறம் வாய்ந்த சரீரத்தையுடைய பெரிய பன்றி யொன்று பருகவசிக்கும் நீர்த்துறையில், வீரம் தாங்கு இருமடங்கல் - வீரமிக்க இரண்டு சிங்கங்கள், நீர்க்குதலைப்பட அஞ்சும் - தண்ணீர் பருகுதற்கு வர அஞ்சாநிற்கும்.

இரைதேடுங்காலம் இராப்போதாதலால் தூங்கிருள் எனவும், இரைதின்றபின் நீர் வேட்கைமிகுதலால் வறுவாய் எனவும், தனது குடிப்பிறந்தோர் வீரம் பெரிதெனலால் சிங்கமிரண்டுறை துறையின் மாடோர் வாங்கிருமருப்புக்கேழல் வந்து நீர்பருகி மீளும் எனவும், ஏனைமிருகங்களுக்கஞ்சாத வலிய சிங்கம் தனது குடிப்பிறந்தோர்க்கு அஞ்சியொழுகும் எனலால் வீங்கிருளுடற்காரேனமொன்றுறைதுறையில்வீரம் - தாங்கிருமடங்கல்நீர்க்குத்தலைப்படவஞ்சும் எனவுங் கூறிற்று. கருமை பெருமை. (௩௫)

அத்திடமரபின்வந்துபிறந்துளேனாதலாலே
கைத்திடுதாரான்வீரங்கவர்ந்திசைதிசையும்வானும்
வைத்திடவல்லேனன்றிமடிந்திடவல்லேனாகிற்
பொய்த்திடுமுடம்பேயன்றிப்புகழுடம்பழிவதுண்டோ.

(இ-ள்.) அ திடம் மரபின் வந்து பிறந்துள்ளேன் ஆதலால்-நான் அந்த வீரம்வாய்ந்த குடிப்பிறப்பிற் பிறந்தவனாதலால், கைத்திடு தாரான் வீரம் கவர்ந்து - வேப்பமலர்மாலையை யணிந்த பாண்டியனுடைய வீரத்தைக் கொள்ளைகொண்டு, இசை திசையும் வானும் வைத்திட வல்லேன் - எனது பிரதாபத்தை யெட்டுத்திக்கிலும் விண்ணுலகத்திலும் நாட்டவல்லேன், அன்றி மடிந்திட வல்லேன் ஆகில்-அதுவன்றிப் போரிற் புறங்காட்டாது இறக்கவல்லேனாகில், பொய்த்திடும் உடம்பே

அன்றி புகழ் உடம்பு அழிவது உண்டோ - நிலைபெறாத பூதவுடம்பு அழிவதல்லாம ல் புகழுடம்பழிதலுளதா (இல்லையென்றபடி.)

கைத்தல் கசத்தல் குணகுணிக்கு ஒற்றுமையுண்மையால் குணத்தைக் குணி மேலேற்றிக் கைத்திடுதாரான் என்றார். புகழுடம்பழியப் பூதவுடம்புவளர்த்தல் ஏனையோர்க்குரித்தென்பான் இசைதிசையும் வாலும் வைத்திடவல்லேன் எனவும், பூதவுடம்பழியப் புகழுடம்புவளர்த்தல் தனக்கே யுரித்தென்பான் மடிந்திடவல்லே னுகிற் பொய்த்திடுமுடம்பேயன்றிப் புகழுடம்பழிவதுண்டோ எனவுங்கூறினான் ()

கலிநிலைத்துறை.

நீநில்லெனத்தன்பெடைதன்னைநிறுத்திநீத்தென்
கானில்லெனவாழ்கருமாவின்கணங்களெல்லா
மூனில்லுயிருண்டனமென்றினியோடல்கூடற்
கோனில்லெனவார்ப்பவன்போலக்கொதித்துநேர்ந்தான்.

(இ-ள்.) நீ நில் என தன் பெடை தன்னை நிறுத்தி நீத்து - அஞ்சும் நீ நில்லா யென்று தனது பெண்பன்றியை நிறுத்தியதனினின்றும் பிரிந்து, என் கான் இல்லெ ன வாழ் கருமாவின் கணங்கள் எல்லாம் - எனது காட்டையே மனையெனக்கொண் டு வாழும் பன்றியின் கூட்டங்களையெல்லாம், ஊனில் உயிர் உண்டனம் என்று இ னி ஓடல் - உடம்பிலுள்ள உயிரைக் கொள்ளைகொண்டோம் இனிப் போரொழிந்த தென்று செல்லாதே, கூடல் கோன் நில் என ஆர்ப்பவன்போல கொதித்து நேர்ந் தான் - பாண்டியனே நீ நில்லாயென்று வீரகோஷஞ்செய்பவனைப்போலப் பொங்கி ப் போர்செய்ய எதிர்ந்தான்.

இது தன் வீரத்தைப்புகழ்ந்து கூறினமையால் நெடுமொழிவஞ்சித்துறை. ()

நிலத்தைக்கிளைத்துப்பிலங்காட்டிநிமிர்ந்ததூள்வான்
றலத்தைப்புதைப்பத்தனியேனவரவுநோக்கி
வலத்தைப்புகழ்ந்தான்வியந்தான்சிலைவாங்கிவாளிக்
குலத்தைச்சொரிந்தான்பொருநைத்துறைக்கொற்கைவேந்தன்.

(இ-ள்.) நிலத்தை கிளைத்து பிலம் காட்டி - பூமியைப்பறித்துப் பாதலத்தை க்காட்டி, நிமிர்ந்த தூள் வான் தலத்தை புதைப்ப - மேலெழுந்ததூட்படலம் விண் ணுலகத்தைப்பொதிய, தனி ஏனம வரவு நோக்கி - ஒப்பில்லாத பன்றியின்வருகை யைப்பார்த்து, பொருநை துறைக் கொற்கை வேந்தன் - தாமிரபர்ணியின் துறைக்கு ம் வையையின்துறைக்கும் அரசனாகிய பாண்டியன், வலத்தை புகழ்ந்தான் வியந் தான் - அதன்வீரத்தைப் புகழ்ந்து மெச்சி, சிலை வாங்கி வாளி குலத்தை சொரிந்தா ன் - வில்லைவளைத்துப் பாணபடலமாகிய வருஷங்களை வருஷித்தான்.

தன்குலங்கள் மடிந்துகிடத்தலைக்கண்டும் அஞ்சாது போர்க்கு வருதலின் வீ ரனருமையை வீரனேயறிவான் என்பார் வலத்தைப் புகழ்ந்தான் வியந்தான் என் றார், கொற்கை என்றதை வையையின்துறையென்றது சிலப்பதிகாரத்தில் அடியா ர்க்குநல்லாருரையிற் கண்டது. (௩௮)

குறித்துச்செழியன்விடுவாளியைக்கோலவேந்தன்
பறித்துச்சிலவாளியைவாய்கொடுபைம்புலென்னக்
கறித்துச்சிலவாளியைக்கால்கொடுதேய்த்துத்தேய்த்து
முறித்துச்சிலவாளியைவாலின்முறித்துநின்றான்,

(இ-ள்.) குறித்து செழியன் விடு வாளியை - தன்னைக் குறியாகக்கொண்டு பாண்டியனெய்யும் பாணங்களை, கோலம் வேந்தன் பறித்து - பன்றியரசன் உடலினின்றும் பறித்து, சில வாளியை பைம்புல் என்ன கறித்து - (அவற்றுள்) சிலபாணங்களைப் பசும்புல்லைக் கறித்தல்போலக் கறித்து, சில வாளியை கால் கொடு தேய்த்து தேய்த்து முறித்து - சிலபாணங்களைக் காலால் நிலத்தில் தேய்த்துத் தேய்த்து முறித்து, சிலவாளியை வாலில் முறித்தும் நின்றான் - சிலபாணங்களை வாலினால் முறித்தும் நின்றனன். (௩௯)

மானம்பொறாதுமதியின்வழிவந்தவேந்தன்
றானம்பொறாதுகவிழ்க்கும்புகர்த்தந்திகையி
லூனம்பொறாதமுசலங்கொடுந்தேறியுய்த்தா
னேனம்பொறாதார்த்திடியேற்றினெழுந்ததன்றே.

(இ-ள்.) மதியின் வழி வந்த வேந்தன் மானம் பொறாது - சந்திரன் மரபில் வந்த இராசராசபாண்டியன் மானமீக்கூர்ந்து, தானம் பொறாது கவிழ்க்கும் புகர் தந்தி கையில் - கொண்ட மதப்பெருக்கினையாற்றாம லொழுக்கும் புள்ளிதங்கிய முகத்தையுடைய யானையின் துதிக்கையில், ஊனம் பொறாத முசலம் கொடுத்து ஏறி உய்த்தான் - சிற்பநூல்வழிக்குற்றம் அறவகுத்த இருப்புலக்கையைக்கொடுத்து அந்த யானைமேலேறிச் செலுத்தினன், ஏனம் பொறாது ஆர்த்து இடியேற்றின் எழுந்தது-பன்றி கோபத்தையாற்றாது கோஷித்து இடியேறுபோலப் போர்க்கு எழுந்தது.

மிருகங்களுள் ஓர் பன்றியாலவைப்புண்டனன் எனப் பிறர் கூறும் பழிக்கு ஆற்றாது நொந்தனன் என்பார் மானம்பொறாது எனவும், நமது வீரத்தையுணர்ந்திருந்தும் நம்மையொத்த ஓர்மிருகத்தால் கொல்லக்கருதினனென்று கருதியது என்பார் ஏனம் பொறாதார்த்து எனவுங்கூறினார். (௪0)

தந்திபொருப்பைத்துணிக்கென்றுதழன்றுசீற்ற
முந்திக்கதலிக்கொழுந்தண்டெனவூசற்கையைச்
சிந்திப்பிறைவாளெயிறோச்சிச்சிதைத்துவீட்ட
முந்திக்கடுந்தேர்மிசைப்பாய்ந்தனன்மூரித்தாரான்.

(இ-ள்.) தந்தி பொருப்பை துணிக்க என்று - யானையாகிய மலையைத் துண்டுபடுத்தக் கடவேனென்று கருதி, தழன்று சீற்றம் உந்தி-கொதித்துக் கோபங்கொண்டு, கதலி கொழுந்தண்டு என்ன ஊசல் கையை சிந்தி - வாழையின் கொழுவிய தண்டைப்போல ஊசல்போலாடுங் கையைத் துணித்து, பிறைவாள் எயிறு ஓச்சி சிதைத்து வீட்ட - பிறைபோன்ற ஒள்ளிய வக்கிரதந்தத்தா லழுந்தக்குத்தி யழித்துக்கொல்ல, மூரிதாரான் - தொன்றுதொட்டுள்ள வேப்பமலர்மாலையணிந்த இராசராசபாண்டியன், கடுந்தேர் மிசை முந்தி பாய்ந்தனன்-விரைந்து செல்லுந் தேரின்மேல் முற்பட்டுப் பாய்ந்தனன்.

கடுந்தேர் கடியென்னும் உரிச்சொற்றிரிபு. (௪௧)

திண்டேர்மிசைநின்றடனேமிதிரித்துவிட்டான்
கண்டேனவேந்தன்விலக்கிக்கடுங்காலிற்பாய்ந்து
தண்டேருடையத்தகர்த்தான்பரிதன்னிற்பாய்ந்து
வண்டேறுதாரான்விடவேலைவலந்திரித்தான்.

(இ-ள்.) திண் தேர் மிசை நின்று அடல் நேமி திரித்து விட்டான் - திண்ணியதேரின்மேல் ஆரோகணித்துக் கொல்லுஞ் சக்கரத்தைச் சுழற்றியெறிந்தனன், ஏ

ன வேந்தன் கண்டு விலக்கி கடுங் காலில் பாய்ந்து தண் தேர் உடைய நகர்த்தான்- பன்றியரசன்கண்டு அதனை விலக்கிக் கடியகாற்றைப்போல விரைந்து பாய்ந்து தண்ணியநிழல்வாய்ந்த தேர்சிதைபடும்படி யுடைத்தான், வண்டு எறு தாரான் பரிதன்னில் பாய்ந்து விடம் வேலை வலம் திரித்தான் - வண்டுகள் குடிகொண்ட மாலையையணிந்த பாண்டியன் குதிரைமேற்பாய்ந்து விஷம்பூசிய வேலினை வலம்படத்திரித்தனன். (௪௨)

சத்திப்படைமேல்விடுமுன்னர்த்தறுகண்வீரன்
பத்திச்சுடர்மாமணித்தார்ப்பரிமாவின்பின்போய்
மொத்திக்குடர்செம்புனல்சோரமுடுகிக்கோட்டாற்
குத்திச்செகுத்தான்பொறுத்தானலன்கூடல்வேந்தன்.

(இ-ள்.) சத்திப் படை வேல் விடு முன்னர் - வேலாயுதத்தைவிடுதற்குமுன், தறு கண் வீரன் - அஞ்சாமையையுடைய பன்றிவேந்தன், சுடர் பத்தி மா மணி தார் பரி மாவின் பின் போய் மொத்தி - நிரைவரிசையையுடைய பருத்த இரத்தினங்களழுத்திய கிண்கிணிமாலைபூண்ட அக்குதிரையின்பின்சென்று தாக்கி, குடர் செம் புனல் சோர - குடலும் உதிரமுஞ் சோர, முடுகி கோட்டால் குத்தி செகுத்தான்- விரைந்து தனது வக்கிரதந்தத்தால் குத்திக்கொன்றனன், கூடல் வேந்தன் பொறுத்தான் அலன் - பாண்டியன் மானமீக்கூர்ந்து. (௪௩)

மண்ணிற்குதித்துவலிகண்டுவராகவேந்தை
யெண்ணித்தலையிற்புடைத்தான்கையிருப்புத்தண்டாற்
புண்ணிற்படுசெம்புனலாறுபுடவிபோர்ப்ப
விண்ணிற்புகுந்தான்சுடர்கீறிவிமானமேலால்.

(இ-ள்.) மண்ணில் குதித்து-(குதிரையினின்றும்) நிலவுலகின்மேற்குதித்து, வலிகண்டு எண்ணி - அதன் வன்மையைக்கண்டு ஆராய்ந்து, கை இருப்பு தண்டால் வராகவேந்தை தலையில் புடைத்தான் - கையிலேந்திய இரும்பாலாகிய தண்டத்தால் தலையிலடித்தான், புண்ணில் படு செம்புனல் ஆறு புடவி போர்ப்ப - அடிபட்ட புண்ணின்றொழுகும் உதிரவெள்ளம் நிலவுலகைப்போர்க்க, சுடர் கீறி விமானம் மேல் விண்ணில் புகுந்தான் - சூரியமண்டிலத்தைக் கிழித்துச்சென்று விமானமேல் வீரசுவர்க்கஞ் சென்றனன்.

பன்றியைத் தலையிற்புடைக்கிலழியுமாதலால் எண்ணி எனவும், வீரசுவர்க்கம் புகுவோர் சூரியமண்டிலத்தின் வழியேசென்று திவ்ய தேகம்பெறுதலால் சுடர் கீறியெனவும், திவ்ய தேகம் பெற்றபின் விமானமேல் செல்லுதலால் விமானமேல் எனவுங் கூறினார். (௪௪)

வேனிற்கிழவோனில்விளங்கிவியந்துவானோர்
தேனிற்பொழிபூமழைபெய்யநனைந்துதெய்வ
கானத்தமுதுண்டிருகாதுங்களித்துவீர
வானத்தமுதுண்டரமங்கையர்கொங்கைசேர்ந்தான்.

(இ-ள்.) வேனில் கிழவோனில் விளங்கி - மன்மதனைப்போல விளங்கி, வானோர் வியந்து பொழி பூமழை தேனின் பெய்ய நனைந்து - தேவர்களதிசயித்துப் பொழியும் புஷ்பவருஷம் தேனினைப்பெய்ய நனைந்து, தெய்வகானத்து அமுது இரு காதும் உண்டு - தேவகானமாகிய அமுதினை யிரண்டு காதாலும் பருகி, களித்து வீரவானத்து அமுது உண்டு - களிப்படைந்து வீரசுவர்க்கத்திலுள்ள தேவாமிர்தத்தை

யாய்ாற்பருகி, அரமங்கையர் கொங்கை சேர்ந்தான்-அரமகளிர் சுவர்க்கத்தை யடைந்தனன்.

உம்மை இனைத்தென வறிபொருளில்வந்த முற்றும்பொருட்டு. வீரசுவர்க்கஞ்சென்றவன் அரமகளிர் சுவர்க்கத்திலும் சேர்தல் முறையாதலால் அரமங்கையர் கொங்கை சேர்ந்தான் என்றார். கொங்கை சுவர்க்கம். (௫௫)

கலிவிருத்தம்.

பின்றுணையாயபெடைத்தனியேன
மென்றுணைமாயவிருப்பதுகற்போ
வென்றிலனேனும்விசும்படைவேனு
லென்றிகல்வேந்தையெதிர்த்ததுருத்தே.

(இ-ள்.) பின் - அதன்பின், துணை ஆய தனி பெடை எனம் - துணையாகநின்ற ஒப்பில்லாத பெண்பன்றியானது, என் துணை மாய இருப்பது கற்பு ஓ - எனது உயிர்க்கேள்வனிறக்க நானிருந்துயிர்வாழ்வது கற்பியலோ, வென்றிலனேனும் விசும்பு அடைவேன் என்று - வெற்றிகொள்கிலனாகிலும் வீரசுவர்க்கத்தை யடைவேனென்று, இகல் வேந்தை உருத்து எதிர்த்தது - பகைகொண்ட இராசராசபாண்டியனைக் கோபித்துப் போர்செய்ய எதிர்த்தது.

துணைவனுயிர்துறந்தபோதே யுடலுயிர்போலப் பிரியாதுநின்ற துணைவியும் உயிர்துறத்தல் கற்பியலாதலால் என்றுணைமாயவிருப்பதுகற்போ எனவும், துணைவன் சென்ற வீரசுவர்க்கத்தில் தானுஞ்சென் றவனோடொருங்குறைதலை விரும்பியதாதலால் விசும்படைவேனென்று எதிர்த்தது எனவுங் கூறினார். (௫௬)

விறனவில்பேட்டைவிளிப்பதுவேந்தற்
கறனலவென்றவனாள்வினைமள்ளர்க்
கிறைமகனானசருச்சரனென்றோர்
மறமகனேர்ந்தமராடவளைந்தான்.

(இ-ள்.) விறல் நவில் பேட்டை விளிப்பது - வீரங்கூறிப் போர்க்கெதிர்ந்த பெண்பன்றியைக் கொல்வது, வேந்தற்கு அறன் அல என்று - இராசராசபாண்டியனுக்குப் போர்த்தருமமல்லவென்று, அவன் ஆள் வினை மள்ளர்க்கு இறை மகன் ஆன சருச்சரன் என்ற ஓர் மற மகன் நேர்ந்து - அப்பாண்டியனேவிய வினைமுயலும்மறவீரர்களுக்குப் பதியாகிய சருச்சரனென்று சொல்லப்பட்ட ஒருவீரன் எதிர்த்து, அமர் ஆட வளைந்தான் - (அப்பன்றியோடு) போர்செய்யச் சூழ்ந்தான்.

அரசர்கள் தம்மோடொத்த போர்வீரரோடு போர்செய்தல் தக்கது என்பார் பேட்டைவிளிப்பது வேந்தற்கறனல எனவும், வேட்டமாக்களின் தலைவன் என்பார் ஆள்வினைமள்ளர்க்கிறைமகன் எனவுங் கூறினார். (௫௭)

நனிபொழுதாடமராடினனஞ்சிற்
கனிசினவன்பெடைகாய்சினவேடத்
தனிமகனைத்தனைவீட்டினதாற்ற
லினியிலையென்னவிளைத்துயிர்சோர்வான்.

(இ-ள்.) நனி பொழுது ஆடு அமர் ஆடினன் - நெடும்போது வெற்றிதரும் போர்செய்தான், நஞ்சில் கனி சினம் வன் பெடை - நஞ்சைப்போலக் கொடுமைபழுத்த கோபத்தையுடைய வலியபெண்பன்றி, காய் சினம் தனி வேட மகனை தனை

வீட்டினது - கொதித்தெழுங்கோபத்தில் தனக்கொருவர் நிகரில்லாதவேட்டுவவீர னைக் கீறி நிலத்தில் தள்ளியது, ஆற்றல் இனி இல்லை என்ன இளைத்து உயிர் சோர்வா ன் - போராற்றும் வன்மை இனிச்சிறிதுமில்லையென்று கண்டோர்கூற இளைத்துயி ர்சோருமவ்வீரன்.

பெண்ணென்றிகழ்ந்த போரிற்புகுந்த வீரனுக்கு இதுகாறும் அவன்செய்த போரினும் பெரிதாகத்தோன்றியதென்பார் நனிபொழுதாடமராடினன் என்றார். ()

இரும்புசெய்தண்டிணையிம்மெனவோச்சிப்
பொரும்பெடைசென்னிபுடைத்துவிளிந்தான்
விருந்தினராயிருவோரும்விமானத்
தருந்திறல்வானமடைந்தனரன்றே.

(இ-ள்.) இரும்பு செய் தண்டிணை இம்மென ஓச்சி - இரும்பாற்செய்த தண் டத்தை யிம்மென்று மளவிலோக்கி, பொரும் பெடை சென்னி புடைத்து விளிந் தான் - போர் செய்யும் அப்பெண் பன்றியின் தலையின்மேலடித்துத் தானும் இறந் தான், இருவோரும் விருந்தினர் ஆய் விமானத்து அருந்திறல் வானம் அடைந்தனர்- மடிந்த இருவரும் தேவர்கட்கு விருந்தினராய் விமானத்திலேறியரிய வீரசுவர்க்கத் தி லடைந்தார்கள்.

வீரர்களுயிர்விடும்பொழுதும் தம்மோடெதிர்ந்த வீரர்களுயிர் வாங்கித் தம் முயிர் விடுதல் அவர்கட்கியற்கையாதலால் சென்னிபுடைத்து விளிந்தான் எனவும், இருவரும் ஒருசேர வுயிரிழந்தமையால் சிறப்பால் உயர்திணை முடிபுதந்து அடைந் தனர் எனவுங் கூறினார். (௯௯)

வன்றிறன்மன்னவர்மன்னவனுந்தன்
பொன்றிகழ்மாநகர்புக்கனனிப்பால்
பன்றிவிழுந்துபருப்பதமாகா
நின்றதுபன்றிநெடுங்கிரியென்ன.

(இ-ள்.) வன் திறல் மன்னவர் மன்னவனும் - மிக்க வெற்றிவாய்ந்த இரா ரராசபாண்டியனும், தன் பொன் திகழ் மாநகர் புக்கனன் - தன்னுடைய இலக்கு மி விளங்கும் பெரிய நகரிலடைந்தனன், இபால் - இப்புறம், பன்றி நெடுங்கிரி என் ன பன்றி விழுந்து பருப்பதம் ஆகா நின்றது - நெடியவராக கிரியென்று கண்டோர் சொல்லப் பன்றி வீழ்ந்து பருப்பதமாகிப் பொலிந்தது. (௱)

அன்றுதொடுத்ததனுக்கதுபோரா
யின்றும்வழங்குவதிம்பரிலந்தக்
குன்றிலருந்தவர்விஞ்சையர்கோபம்
வென்றவரெண்ணிலர்வீடுறநோற்பார்.

(இ-ள்.) இம்பரில் - இந்நிலவுலகில், அன்று தொடுத்து இன்றும் அதனுக்கு அது பேராய் வழங்குவது - அக்காலந்தொட்டு இதுகாறும் அம்மலைக்குப் பன்றிமலை யென்ன அப்பெயரேயாய் வழங்காநின்றது, அந்த குன்றில் அருந்தவர் விஞ்சையர் கோபம் வென்றவர் எண்ணிலர் - அந்த மலையில் அரிய தபோதனர்களும் வித்தியா தரர்களும் கோபம் வென்ற யோகிகளுமாகிய அளவிறந்தோர் வசித்து, வீடு உற நோற்பார் - சிவகதி யடையத் தவஞ்செய்கின்றார்கள்.

தவத்திற் கிடையூறுயுள்ள கோபம் காமம் மயக்கம் என்னு முக்குற்றங்களுள் கோபங் கொடியதாதலால் கோபம் வென்றவர் என்றார். (௱௯)

கலிநிலைத்துறை.

என்றுகூறியவருந்தமிழ்க்கிறைவனைநோக்கித்
துன்றுமாதவரறிவிலாச்சூகரவுருவக்
குன்றின்மீதிருந்தவரொலாங்கோதறநோற்று
நின்றகாரணம்யாதெனக்குறுமுனிநிகழ்த்தும்.

(இ-ள்.) என்று கூறிய அருந்தமிழ்க்கு இறைவனை நோக்கி - என்று சொல்லியருளிய அகத்தியமுனிவரை வணங்கி, துன்றும் மாதவர் - நெருங்கிய பெரிய தபோதனர்களும், அறிவில்லாத சூகரம் உருவம் குன்றின்மீது இருந்தஅவர் எல்லாம்- அறிவில்லாத பன்றிவடிவமைந்த மலையின்மேல் இருந்த அவ்விஞ்சையர்முதலிய யாவரும், கோது அற நோற்று நின்ற காரணம் யாது என்ன - முக்குற்றமு மறத்தவஞ் செய்து நின்ற காரணம் யாதென்று வினவ, குறு முனி நிகழ்த்தும்-அந்த அகத்திய முனிவர் கூறியருள்கின்றனர்.

வடமொழிக்குப் பாணினிமுனிவ ரிறைவராதல்போல அதற்கெதிராகிய தென்மொழிக்கு அகத்திய முனிவரிறைவராதலால் தமிழ்க்கிறைவர் எனக் காரண ஆக்கப்பெயர்தந்து கூறினார். கோது என்பதனிறுதியில் இனைத்தென அறிபொருளில் வந்த முற்றும்மை தொகுத்தல். (௱௨)

வேனில்வேளெனவிளங்குவிச்சாதரனென்னுந்
தானயாழ்மகன்புலத்தியன்றவத்தினுக்கிடையூ
றானபாண்செயப்பன்றியாச்சபித்தனனறவோ
னேனமாகுவோனுய்வதென்றெனக்கெனமுனிவன்.

(இ-ள்.) வேனில் வேள் என்ன விளங்கு விச்சாதரன் என்னும் தானம் யாழ் மகன் - வேனிற்காலத்துக்குரிய மன்மதனைப்போல வடிவமைந்து விளங்கும் வித்தியாதரனாகிய தானங்களமைந்த வீணையில் வல்ல ஒரு யக்ஷன், புலத்தியன் தவத்தினுக்கு இடையூறு ஆன பாண் செய்ய - புலத்தியமுனிவர் தவத்திற் கிடையூறுயுள்ள இசைப்பாடல் பாட, அறவோன் பன்றியாக சபித்தனன் - அம்முனிவன் வராகமாகச் சாபந் தந்தனன், ஏனம் ஆகுவோன் என்று உய்வது எனக்கு என்ன - பன்றிவடிவாகும் அந்த யக்ஷன் எப்பொழுது அப்பன்றிவடிவத்தினின்று நீங்குந் தீர்வு எனக்குள்ளதென்று வினவ, முனிவன் - அப்புலத்திய முனிவன்.

புலத்திய முனிவன் தவத்தை யழித்தற்பொருட்டுப் பாடினன் என்பார் புலத்தியன் றவத்தினுக்கிடையூறான பாண்செய எனவும், அவன் செய்த தீங்குக்கு ஏற்பச் சபித்தனன் என்பார் பன்றியாச்சபித்தனன் எனவுங் கூறினார். (௱௩)

மன்னர்மன்னனுந்தென்னவன்வந்துநின்வனத்திற்
றுன்னுபல்வகைவிலங்கெலாந்தொலைத்துனைமாய்க்கும்
பின்னரிவ்வுருப்பெறுகெனப்பணித்தனனியக்க
னன்னவாறுவந்திறந்துபின்பழவுருவடைந்தான்.

(இ-ள்.) மன்னர் மன்னன் ஆம் தென்னவன் வந்து - இராசராசனாகிய பாண்டியன் வேட்டமேல் வந்து, நின் வனத்தில் துன்னு பல்வகை விலங்கு எல்லாம்

தொலைத்து - உனது காட்டில் நெருங்கிய பலவகைப்பட்ட மிருகங்களை யெல்லாங் கொன்று, உன்னை மாய்க்கும் - உன்னையுங் கொல்லுவான், பின்னர் இ உருபெறுக என பணித்தனன் - பின்பு இந்த யட்ச வடிவத்தைப் பெறக்கடவாயென்று பணித்தருளினான், இயக்கன் அன்ன ஆறு வந்து இறந்து பின் பழ உரு அடைந்தான்-அவ்வித்தியாதரன் அப்படியே வந்து பிறந்து பின்னர்ப் பண்டுள்ள உருவத்தை யடைந்தனன்.

பணித்தல் அருளிச்செய்தல் "விண்டலை யாவர்க்கும் வேந்தன் வண்டில்லை மெல்லங்கழிசூழ் - கண்டலையே கரியாக்கன்னிப் புன்னைக்கலந்தகள்வர் - கண்டிலையே வரக்கக்குலெல்லாமங்குல்வாய் விளக்கும் - மண்டிலமேபணியாய் தமியேற்கொருவாசகமே"என்னுந் திருக்கோவையாரில் பணியாய்என்பதற்கு நச்சினார்க்கினியார் எழுதிய உரையிற்காண்க. அடியார்க்கினியார் இதனைச் சிலப்பதிகாரத்தில் திசைச்சொல் என்றார். (௫௪)

ஆயபுண்ணியவிஞ்சையனாகமாய்க்கிடந்த
தூயநீரதாலவ்வரைமீமிசைத்துறந்த
பாயகேள்வியரிறைகொளப்பட்டதெவ்வுயிர்க்கு
நாயனார்மதுரேசருநயந்தவணுறைவார்.

(இ-ள்.) அ வரை ஆய புண்ணிய விஞ்சையன் ஆகம் ஆய் கிடந்த தூய நீரது - அந்தமலை இவ்வாறாகிய புண்ணிய சொரூபத்தையுடைய யக்ஷன் சரீரமாயிருந்த பரிசுத்தத்தன்மையையுடையது, மீமிசை துறந்த பாய கேள்வியர் இறை கொளப்பட்டது - (அதனால்) தன்மேற் பரந்த நூற்கேள்வியையுடைய முனிவர்களால் வசிக்கப்பட்டது, எ உயிர்க்கும் நாயனார் மதுரேசரும் நயந்து அவண் உறைவார் - (பசுபதி யென்னும் பெயர்க் காரணத்தால்) அயன் முதலிய எல்லா வுயிர்கட்கும் இறைவராகிய சோமசுந்தரக்கடவுளும் அவ்விடத்தில் எழுந்தருளி யிருக்கின்றனர்.

புண்ணியவிஞ்சையன் என்றமையால் தூயநீரது என்றார். (௫௫)

என்றகத்தியன்விடைகொடுத்தியம்பினனிப்பாற்
பன்றியேற்றையும்பாட்டியும்பைம்புனத்திட்டுச்
சென்றவிந்தபின்பன்னிருகுருளையுந்திகைப்புற்
றன்றலக்கணோயுழந்தமையாரளந்துரைப்பார்.

(இ-ள்.) என்று அகத்தியன் விடை கொடுத்து இயம்பினன் - என்றகத்திய முனிவர் விடைதந்தருளினார், இபால் - இப்புறம், பன்றி ஏறும் பாட்டியும் பைம்புனத்து இட்டு சென்று அவிந்த பின் - ஆண்பன்றியும் பெண்பன்றியும் பசியவனத்தில் தங்குட்டிகளை யிட்டுப் போர்க்குச்சென்று இறந்தபின், பன்னிரு குருளையும் திகைப்புற்று-அப்பன்னிரண்டு குட்டிகளும் (தாய்தந்தைகளை யிழத்தலால்) மயங்கி, அன்று அலக்கண் நோய் உழந்தமை-அக்காலையில் துன்பநோயடைந்ததை, அளந்து உரைப்பார் யார் - வரையறுத்துக் கூறுவோர் எவர் (ஒருவருமில்லை என்றபடி.)

இளங்குட்டிகளாதலால் தாய்தந்தைகளை யிழந்துற்ற துன்பம் பெரிதென்பார் அன்றலக்கணோ யுழந்தமையாரளந்துரைப்பார் என்றார். ஏறு ஐகாரச்சாரியைபெற்று இடையில் வல்லொற்று விரிந்து ஏற்றையென நின்றது. (௫௬)

ஓடுகின்றனதெருமராவுறுவனகிழலைத்
தேடுகின்றனதாய்முலைத்தீம்பால்வேட்டு
வாடுகின்றனதாகவெம்பசிநனிவருத்த
வீடுகின்றனவெயில்சுடவெதும்புகின்றனவால்.

(இ-ள்.) ஓடுகின்றன தெருமரல் உறுவன-(பன்றிக்குட்டிகளும்) ஓடித் தாய்தந்தைகளைப் பெருமையால் சுழன்றும், நிழலை தேடுகின்றன தாய் முலை நிய பால் வேட்டு வாடுகின்றன - நிழலைத் தேடிச்சென்றும் தாய்முலை யினினிய பாலைவிரும்பி வாடியும், தாகம் வெம்பசி நனி வருத்த வீடுகின்றன - நாகமுங் கொடியபசியும் மிகவும் வருத்த உயிர்சோர்ந்தும், வெயில் சுட வெதும்புகின்றன-சூரியகிரணஞ் சுட்டு வருத்த வெம்பி வருந்தாநின்றன.

ஓடுகின்றன முதல் வீடுகின்றன என்பதுகாறும் வினைமுற்றெச்சங்கள். (ருஎ)

இன்னவாறிவையணங்குறுமெல்லைவேல்வல்ல
தென்னராகியதேவர்கடேவரங்கயற்கண்

யன்னகானகத்திச்சையாலாடல்செய்திருந்தார்.

(இ-ள்.) இன்ன ஆறு இவை அணங்குறும் எல்லை - இவ்வாறு இப்பன்றிகள் வருந்துங் காலையில், வேல் வல்ல தென்னர் ஆகிய தேவர்கள் தேவர் - வேல்வித்தையில் வல்ல சவுந்திரபாண்டியராய்த் திருக்கோலங்கொண்டருளிய அயன்முதலிய தேவர்கட்குக் கடவுளராகிய சோமசுந்தரக்கடவுள், அங்கயற் கண் மின் அன்னொளொடும் மின் அவிர் விமானம் மீது ஏறி - அங்கயற்கண்ணியாராகிய மின்னலையொத்த உமாதேவியாரோடும் ஒளிவீசி விளங்கும் விமானத்தின்மேலெழுந்தருளி, அன்ன கானகத்து இச்சையால் ஆடல் செய்திருந்தார்-அக்காட்டில் தமதிச்சையால் திருவிளையாடல் செய்தருளி யிருந்தனர்.

இச்சை யென்றது இச்சாசத்தியை. அதாவது சிவபெருமான் ஆன்மகோடிகளை யிரட்சித்தருள வேண்டுமெனத் திருவுளத்தில் நிகழ்ந்த வியாபாரசத்தி. "ஒன்றதாயிச்சா ஞானக்கிரியை யென்றொரு மூன்றாகி - நின்றிடுஞ்சத்தியிச்சையுயிர்க் கருணைசமாகும் - நன்றெலாஞானசத்தியானயந்தறிவனுதன் - அன்றருட்கிரியை தன்னாலாக்குவனகிலமெல்லாம்" எனவரும் ஏதுவாலுணர்க. (ருஅ)

ஏனமென்பறழுறுகணோய்க்கிரங்கினாரிச்சை
யானவன்புதந்தத்துயரகற்றுவானின்ற
மானவன்புடைப்பேடையின்வடிவெடுத்தயருங்
கானவன்பறழ்கலங்கனார்கலங்கநேர்வந்தார்.

(இ-ள்.) ஏனம் மென் பறழ் உறுகண் நோய்க்கு இரங்கினார் - பன்றியின் மெல்லிய குட்டிகளுற்ற துன்பமிக்க பசிநோய்க்கிரங்கி, இச்சை ஆன அன்பு தந்து அதுயர் அகற்றுவான் - தமதிச்சையாலாகிய அன்புகூர்ந்து அத்துன்பத்தை யொழித்தருள, நின்ற மானம் வன்பு உடைய பேடையின் வடிவு எடுத்து-நிலைபெற்ற மிக்க வலிமையையுடைய பெண்வராகத்தின் கோலங்கொண்டு, கானம் அயரும் வன் பறழ் கலங்கு அனார் கலங்க நேர் வந்தார் - காட்டிற் சோரும் வலிய அந்தக் குட்டிகளின் வருத்தும் பசித்துன்பங்கெட எதிரே வந்தருளினார். (ருகூ)

கிட்டுகின்றதந்தாயெதிர்குட்டியுங்கிட்டி
முட்டுகின்றனமொய்ப்பனமுதுகுறத்தாவி
யெட்டுகின்றனகால்விசைத்தெறிவனநிலத்தை
வெட்டுகின்றனகுதிப்பனவோடுவமீள்வ.

(இ-ள்.) கிட்டுகின்ற தம் தாய் எதிர் - நெருங்கிய தமது தாய்க்கெதிரே, குட்டியும் கிட்டி முட்டுகின்றன மொய்ப்பன - பன்றிக்குட்டிகளும் நெருங்கி முட்டியும் மொய்த்தும், முதுகு உறதாவி எட்டுகின்றன கால் விசைத்து எறிவன - (முதுகிற் பொருந்தத் தாவியெட்டியும் காலால் விசைத்தெறிந்து, நிலத்தை வெட்டுகின்றன குதிப்பன ஓடிவ மீள்வ - நிலத்தை வெட்டியும் குதித்தும் ஓடியும் திரும்பாநின்றன.

தாயிழந்தலமரும் பன்றிகள் தாயைக் கண்டளவில் ஆராப்பெருமகிழ் வுற்றன என்பார் கிட்டிமுட்டுகின்றன மொய்ப்பனமுதுகுறத்தாவி யெட்டுகின்றன கால் விசைத்தெறிவன நிலத்தை வெட்டுகின்றன குதிப்பன வோடிவமீள்வ என்றார்-முட்டுகின்றன என்பது முதல் ஓடிவ என்பதுகாறும் முற்றெச்சங்கள். (௬0)

ஏனமின்னமுங்காண்பரிதாகியவேன
மானமெய்ம்மயிர்முகிழ்த்திடத்தழுவிமோந்தருளின்
மானமென்முலையருத்திமாவலனும்வன்றிறனு
ஞானமும்பெருந்தகையுநற்குணங்களுநல்கா.

(இ-ள்.) ஏனம் இன்னமும் காண்பு அரிதாகிய ஏனம் - திருமாலாகியவராகம் இன்னமுங் காண்டற்கரிய வராகமானது, ஆனமெய்மயிர் முகிழ்த்திட தழுவி மோந்து - தனது சரீரத்திலுள்ள மயிர்கள் சிலிர்க்கத் தழுவிமோந்து, அருளின் மானம் மெல் முலை அருத்தி - தனது பேரருளால் சுரந்த பெரிய முலைப்பாலூட்டி, மாவலனும் வன் திறனும் ஞானமும் பெருந்தகையும் நற்குணங்களும் நல்கா - (பகைவர்க்குப் புறங்கொடாத) பெரிய வலிமையும் மிக்க சதுரப்பாடும் ஞானமும் பெருந்தகைமையும் ஏனைநற்குணங்களுமாகிய இவைகளை (அத்திருமுலைப்பாலோடு) கொடுத்தருளி.

சிவபெருமான் கொண்டருளுந் திருக்கோலத்தி னுறுப்புகள் யாவுந் திருவருள்வடிவே யாதலால் அருளின் மானமென்முலை யருத்தியெனவும், அத்திருவருளாலடைதற்கரிய பெரும்பேறுகள் யாவும் எளிதினெய்துமாகலால் மாவலனும் வன்றிறனும் ஞானமும் பெருந்தகையு நற்குணங்களும் நல்கா எனவுங் கூறினார். உறுப்புகள் யாவுந் திருவருள்வடிவென்றது "உருவருள்குணங்களோடு முணர்வருளுருவிற்றோன்றும் - கருமமுமருளரன்றன்கரசரணுதிசாங்கம் - தருமருளுபாங்கமெல்லாந்தானருடனக்கொன்றின்றி - யருளுருவுயிருக்கென்றே யாக்கினனசிந்தனன்றே" எனவரும் ஏதுவால் உணர்க. (௬௧)

துங்கமாமுகமொன்றுமேருகரமுகமா
வங்கம்யாவையுமானுடயாக்கையவாக்கிக்
கங்கைநாயகன்கடவுளர்நாயகன்கயற்கண்
மங்கைநாயகன்கருணைபாந்திருவுருமறைந்தான்.

(இ-ள்.) துங்கம்மாமுகம் ஒன்றுமேருகரமுகமாக-உயர்ந்தபெரியமுகமொன்றுமே பண்டுள்ள பன்றிமுகமாக அமைத்து, அங்கம்யாவையும் மானுடயாக்கையாக ஆக்கி-ஏனையுறுப்புகளியாவையும் மானிட சரீரவுறுப்புகளாகச் சமைத்து, கங்கைநாயகன் கடவுளர்நாயகன் கயல்கண் மங்கைநாயகன்-கங்கையின் தலைவரும் தேவர்களிறைவரும் அங்கயற்கண்ணியார் கணவருமாகிய சோமசுந்தரக்கடவுள், கருணை ஆம்திரு உருமறைந்தான்-அருளுருவாகிய திருவுருவைக்கரந்தருளினார்,

யாவையும் புனிதமாக்குந் தன்மைதோன்றக் கங்கைநாயகன் எனவும், பசுப தியென்னும்பெயர்க் காரணந்தோன்றக் கடவுளர்நாயகன் எனவும், அருட்கிறைவர் என்பது தோன்றக் கயற்கண்மங்கைநாயகன் எனவும். அவர்கொண் டருளுந் திருக் கோலம் அவரிச்சைவழித்தென்பது தோன்றக் கருணையார் திருவுருவெனவுங் கூறினர், (சுஉ)

இம்மையிப்பவத்தன்னையாயினிவருபவமுஞ்
செம்மைசெய்தசேதனத்தையுஞ்சேதனஞ்செய்தா
ரெம்மையெப்பவத்தாயினுமெனைப்பலவுயிர்க்கு
மம்மையப்பராய்க்காப்பவரவரலாலெவரே.

(இ-ள்.) இம்மை இப்பவத்து அன்னையாய் இனிவருபவமும் செம்மைசெய்து - இந்நிலவுலகில் இப்பிறப்பில் பன்றிக்குருளைகளுக்குத் தாயாய் இனியவைகட்கு வரும் பிறப்பையும் புனிதமாக்கி, அசேதனத்தையும் சேதனம் செய்தார் - அறிவில லாத அவ்வுயிர்களையும் அறிவுடைய உயிர்களாகச்செய்தருளினர், எ பவத்து ஆயினு ம் எம்மையும் எனை பல உயிர்க்கும் அம்மை அப்பர் ஆய் காப்பவர் அவர் அல்லால் எவர் - எப்பிறப்பிலாயினும் எமக்கும் மற்றைப் பல வுயிர்களுக்கும் தாய்தந்தையரா ய் நின்று காப்பவரவரன்றியாருளர் (ஒருவரும் இல்லை என்றபடி.)

பன்றிகள் யாக்கைகளை மானிடயாக்கைகளாகச் செய்தமையால் அசேதன த்தையுஞ் சேதனஞ்செய்தார் எனவும், அச்சேதனயாக்கைகளால் நிலைநிலையாமைக ளையுணர்ந்து பற்றொழிந்து அதிபக்குவர்களாய்ச் சிவகதியடையச் செய்தருளினமை யால் இனிவருபவமுஞ் செம்மைசெய்து எனவும், சங்காரகாலத்தில் மாயையிலொ டுங்கிக்கிடந்த ஆன்மாக்களைச் சிருட்டிகாலத்தில் ஆணவமலபாகம் வருவித்தற்பொ ருட்டுத் தமது சத்தியால் தனுகரணபுவனபோகங்களைத் தந்தருளியென்று பாகம் வருமெனத் தமது திருவுளத்தில் அநவரதமும் அநுக்கிரகித்து நிற்றலால் அம்மைய ப்பராய்க் காப்பவர்எனவும், அவரன்றி முத்தியருள்பவர் வேறில்லாமையால் அவரா லாலெவரேயெனவுங் கூறினர். நான்கனுருபு நிற்குமிடத்து இரண்டனுருபு நிற்றலா ல் உருபுமயக்கம், உம்மை செய்யுளாதலால் தொக்குநின்றது. (சுங)

பன்றிக்குட்டிக்கு முலைகொடுத்தபடலம் - முற்றிற்று.

---

ஆகப் பாயிரம் உள்படத் திருவிருத்தம் - உஉ௫௫.

---

நாற்பத்தாறுவது

# பன்றிக்குட்டிகளை மந்திரிகளாக்கிய படலம்.

---

கலிநிலைத்துறை.

தந்தைதாயிழந்தலமருங்குருளையைத்தாயாய்
வந்துநாயகன்முலைகொடுத்தருளியவகையீ
தந்தவாறிருமைந்தருமந்திராகி
யெந்தையார்சிவபுரம்புகுந்திருந்தவாறிசைப்பாம்.

௫க

(இ-ள்.) தந்தை தாய் இழந்து அலமரும் குருளையை - தாய்தந்தைகளை யிழந்து வருந்தும் பன்றிக்குட்டிகளுக்கு, நாயகன் தாய் ஆய் வந்து முலை கொடுத்தருளிய வகை ஈது-சோமசுந்தரக்கடவுள் அன்னையாய்த் திருவுருக்கொண்டுவந்து பால் கொடுத்தருளிய திருவிளையாடலிது, அந்த ஆறிருமைந்தரும் மந்திரர் ஆகி - அந்தப் பன்னிரண்டு குமரர்களும் இராசராசபாண்டியனுக்கு அமைச்சர்களாய், எந்தையார் சிவபுரம் புகுந்திருந்த ஆறு இசைப்பாம் - எமது பெருமானார் சிவபுரத்தைப் பின்னரடைந்த திருவிளையாடலை யினிக் கூறுவாம்.

தந்தையாய பன்றி முற்பிறப்பில் ரிங்கியென்னும் பெயரையுடைய யக்ஷன். ()

ஆதிநாயகன்றிருவுருமறைந்தபினனைய
கோதிலாறிரண்டேனமாக்குமாருங்காலைச்
சோதியாறிரண்டருக்கர்போற்றோன்றியப்பொருப்பி
லோதியாய்ந்தபல்கலைஞராயொருங்குவீற்றிருந்தார்.

(இ-ள்.) ஆதி நாயகன் திரு உரு மறைந்த பின்-எல்லாத் தேவர்கட்கு முதல்வராகிய இறைவர் திருவுருவங் கரந்தருளிய பின்னர், அனைய கோது இல் ஆறிரண்டு ஏன மாகுமாரும் - அந்தக் குற்றமில்லாதவராக முகத்தையுடைய பன்னிரண்டு குமரர்களும், காலை சோதி ஆறிரண்டு அருக்கர் போல் தோன்றி - வைகறையிலுதயஞ்செய்த கிரணத்தையுடைய பன்னிரண்டு சூரியர்களைப்போல ஒளிவாய்ந்து, அப்பொருப்பில் ஓதி ஆய்ந்த பல் கலைஞர் ஆய் ஒருங்கு வீற்றிருந்தார் - அவ்வராகமலையில். கற்றாராய்ந்த அறுபத்துநான்கு கலைகளிலும் வல்லராயொருசேரவீற்றிருந்தனர்கள்.

எல்லாத்தேவர்கட்கு முற்பட்டவன் என்பார் ஆதிநாயகன் எனவும், நூல்களையாராய்ந்து தம்முட்பகையின்றிச் சாந்தகுணம் வாய்ந்திருந்தனர் என்பார் ஒருங்கு வீற்றிருந்தார் எனவுங்கூறினார். "மன்னவெம்பிரான்வருகவென்னெனை மாலு நான்முகத்தொருவன்யாரினு - முன்னவெம்பிரான்வருகவென்னெனை முழுதம்யாவையுமிறுதியுற்றநாட்-பின்னவெம்பிரான்வருக" என்னுந் திருவாசகத்தால் உணர்க.

அனையராயவர்வைகுநாளறைபுனற்கூடற்
புனிதநாயகனருட்டிறமுயிர்க்கெலாம்பொதுவா
யினியவாவனவென்பதையாவருந்தேற
வனிதைபான்மொழிமங்கைதன்மணாளனை வினவும்.

(இ-ள்.) அனையர் ஆய் அவர் வைகும் நாள் - அத்தன்மையராயவர்களிருக்குங் காலையில், அறை புனல் கூடல் புனித நாயகன் அருள் திறம் - ஒலிக்கும் நீர் சூழ்ந்த மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளின் திருவருளின்றிறங்கள், உயிர்க்கு எல்லாம் பொது ஆய் இனிய ஆவன என்பதை - எல்லா வுயிர்களுக்கும் பொதுமையாய் நின்றின்பந்தருவன என்று உண்மை நூல்கள் கூறுதலை, யாவரும் தேற - எவரும் எளிதிலுணர்ந்துய்ய, பால் மொழி வனிதை மங்கை தன் மணாளனை வினவும் - பால்போல இனிமை வாய்ந்த சொற்களையுடைய அங்கயற்கண்ணம்மையார் தமது கணவரை வினவுகின்றார்.

அவரவர் தரத்திற்கேற்பத் திருவருளும் பலவாறாய் நிற்கும் என்பார் அருட்டிறம் எனவும், பிரமன்முதல் பிபீலிகாந்தங்காறு மொருதன்மையவாய் நின்று பயப்பன என்பார் உயிர்க்கெலாம் பொதுவாயினியவாவன எனவுங் கூறினார். (௩)

வெவ்விலங்கினும்வெய்யதாயசேதனவிலங்கா
மிவ்விலங்கெயிற்றேனமென்குருளைகட்கிரங்கித்

கைவிலங்கினையெய்தநீகருணையாய்முலைதந்
தவ்விலங்கறிவகற்றியதியாதெனவிறைவன்.

(இ-ள்.) வெவ்விலங்கினும் வெய்யது ஆய் - கொடிய மிருகங்களினுங் கொடியதாய், அசேதன விலங்கு ஆம் இ இலங்கு எயிறு ஏனம் மென் குறளை கட்கு இரங்கி - இழிந்த மிருகமாகிய இந்த விளங்கும் வக்கிரதந்தங்களையுடைய பன்றியினது மெல்லிய குட்டிகளுக்குக் கருணைகூர்ந்து, கை விலங்கினை எய்த நீ - சமணர்களேவிய) யானையை யெய்துகொன்ற நீ, கருணை ஆய் முலை தந்து அ விலங்கு அறிவு அகற்றியது யாது என்ன - தனது திருவருளால் தாயாய்வந்து முலைகொடுத்தருளியந்த மிருகத்தின் அறிவொழித்தருளியது யாதென்று வினவ, இறைவன்-சோமசுந்தரக்கடவுள்.

விக்கிரமபாண்டியனுக்கிரங்கி யவனைக் காத்தற்பொருட்டு யானையைக் கொன்ற தேவரீர் குடிகளுக்கிரங்கி யவர்களைக் காத்தற்பொருட்டாடிய பாண்டியன் வேட்டத்திற்பட்ட பன்றியின் குருளைகட்கு இரங்கிய காரணம் யாது என்பார் ஏனமென்குறளைகட்கிரங்கிக்கருணையாய் முலைதந்து அறிவகற்றியதியாதென்றூர். (ச)

அகிலவேதமுமாகமபேதமுநம்மைச்
சகலசீவதயாபரனென்றுரைசால்பா
லிகலில்சேதனமசேதனமாகியவிரண்டும்
புகலில்வேறலவெமக்கவைபொதுமையவதனுல்.

(இ-ள்.) அகில வேதமும் ஆகம பேதமும் நம்மை சகல சீவ தயாபரன் என்று உரை சால்பால் - எல்லா வேதங்களும் பலவகைப்பட்ட ஆகமங்களும் எல்லா ஆன்மாக்களிடத்தும் ஒருதன்மைத்தான தயாமூர்த்தியென்று கூறும் பெருந்தகைமையால், இகல் இல் சேதனம் அசேதனம் ஆகிய இரண்டும் - மாறுபடுதலில்லாத உணர்வுடைய வுயிர்களும் உணர்விலுயிர்களுமாகிய இரண்டு பொருள்களும், புகலில் - சொல்லுமிடத்து, எமக்கு அவை வேறு அல-எமக்கு அவைகள் வேறல்ல, பொதுமைய - ஒரு தன்மையன, அதனுல் - அக்காரணத்தால்.

வேதாகமங்களின் கூற்று ஆப்தவாக்கியம் என்பது தோன்ற அகிலவேதமுமாகமபேதமும் எனவும், இருபத்தெட்டுவகைய என்பது தோன்ற ஆகமபேதமும் எனவுங் கூறினுர். (ரு)

தாயிழந்துவெம்பசித்தழலகஞ்சுடத்தழன்று
காயுமாதபம்புறஞ்சுடக்கானிடைக்கிடந்து
தீயுமேனமென்குருளைகடெருமாவிரங்கி
யாயுமாய்முலையளித்துயிரளித்தனமதனுல்.

(இ-ள்.) தாய் இழந்து வெம்பசி தழல் அகம் சுட - தாயை யிழத்தலால் கொடிய பசியாகிய நெருப்பு உள்ளே சுட்டு வருத்தலாலும், தழன்று காயும் ஆதபம் புறம் சுட - கொதித்து வருத்தும் கடுவெயிலானது புறத்திற்சுட்டு வருத்தலாலும், கான் இடை கிடந்து தீயும் ஏனம் மென் குருளைகள் தெருமர இரங்கி - காட்டிற்கிடந்து தீயா நின்ற பன்றியின் மெல்லிய குட்டிகள் சுழன்று வருந்த அதற்கு இரங்கி, ஆயும் ஆய் முலை அளித்து உயிர் அளித்தனம் - தாயுமாகி முலைகொடுத்து அவ்வுயிர்களை யோம்பினேம், அதனுல் - அக்காரணத்தால்.

தம்மாற்கூறிய வேதாகமங்கள் தமக்குப் பொருமைய வென்பதைக் கடைப்பிடித்தி யாவருமுய்ய அசேதனயாக்கையைக் கொண்டருளினுர் என்பது தோன்ற இழிவு சிறப்பும்மை தந்து ஆயுமாய் என்றார். (௬)

அளவிலாற்றலுந்திறனுநல்லரும்பெறற்கல்வி
விளைவுஞானமுங்கிடைத்தனர்மீனவற்கினிமேல்
வளைவிலாதகோலமைச்சராய்வளம்பலபெருக்கிக்
களைவில்பாசநீத்தெம்பெருங்கணத்தவராவார்.

(இ-ள்.) அளவு இல் ஆற்றலும் திறனும் அரும் பெறல் நல் கல்வி விளைவும் ஞானமும் கிடைத்தனர் - எல்லையில்லாத வன்மையையும் திறத்தையும் பெறுதற்கரிய நல்ல கல்வித்தேர்ச்சியையும் ஞானத்தையும் (நம்மால்) அடைந்தார்கள், மீனவற்கு இனிமேல் வளைவு இல்லாத கோல் அமைச்சர் ஆய் - பாண்டியனுக்கு இனிமேல் கோடாத செங்கோலையுடைய மந்திரிகளாய், பலவளம் பெருக்கி - (அப்பாண்டியனுக்கு) பல செல்வவளங்களையும் நாடோறும் பெருகச்செய்து, களைவு இல் பாசம் நீத்து எம் பெருங்கணத்தவர் ஆவார் - நீங்குதலில்லாத பாசங்களினின்று நீங்கி யெமது பெரிய சிவகணத்தலைவராவார்கள்.

எடுத்த காரியங்களை முற்றுதற்கு வன்மை வேண்டுதலின் அளவிலாற்றல் எனவும், குணங் குற்றங்களையுணர்ந்து காரியங்களில் முயலுதற்குச் சதுரப்பாடுவேண்டுதலின் அதன்பின் திறனெனவும், அத்திறன் கல்வியறிவா லிடையூறின்றி முற்றுப்பெறுதாகலின் அதன்பின் அரும்பெறற்கல்வி விளைவு எனவும், அக்கல்வி விளைவு ஞானமின்றாயிற் பயன்பெறுதாகலின் அதன்பின் ஞானமும் என முறைப்பட வைத்துக் கூறினமையாற் காரணகாரிய மாலையணி. வெட்டுவாய்தோறும் செம்பிற்கலந்த காளிதம்போல ஆன்மபோதத்தோடுங் கலந்துநிற்றலால் களைவில்பாசம் என்றார்.

என்றுநாயகனயகிக்கிறைகொடுத்தியம்பி -
யன்றுமீனவன்கனவில்வந்தரசகேள்பன்றிக்
குன்றிலேனமாமுகத்தராய்ப்பன்னிருகுமரர்
வென்றிவீரராய்வைகுநர்மிக்கறிவுடையார்.

(இ-ள்.) என்று நாயகன் நாயகிக்கு இறை கொடுத்து இயம்பி - என்று சோமசுந்தரக்கடவுள் அங்கயற்கண்ணியார்க்கு விடைகொடுத்தருளி, அன்று மீனவன் கனவில் வந்து - அப்பொழுதே யிராசராசபாண்டியனுடைய சொப்பனத்தில் வந்தருளி, அரச கேள் - அரசனே கேளாய், பன்றிக்குன்றில் ஏனம் மாமுகத்தர் ஆய் பன்னிரு குமரர் வென்றி வீரர் ஆய் வைகுநர்-வராகமலையில் பன்றிமுகத்தையுடையவராய்ப் பன்னிரண்டு குமரர்கள் வெற்றிவாய்ந்த வீரர்களாய் வசிக்கின்றார்கள், மிக்க அறிவுடையார் - அவர்கள் அறிவின் சால்புடையவர்கள்.

அமைச்சராவோர்க்குத் தமதரசற்குப் பகைவர் புறங்காட்ட வாகைசூட்டும் வன்மையுடைமையும், முக்காலநிகழ்ச்சியையுமுணர்ந்து தொழிலை முட்டின்றி முடிக்கும் அறிவுடைமையும் வேண்டும் என்னுங் குறிப்புத்தோன்ற வென்றி வீரராய் வைகுநர் மிக்கறிவுடையோர் எனக் கூறியருளினமையால் உதாரவணி. (௮)

அவனாகின்கடைக்கமைச்சராக்கோடியென்றளவில்
சிவபராஞ்சுடாருள்செயச்செழியர்கோவேந்தன்
கவலருங்களிப்புடையனுக்கண்மலர்ந்தெழுமான்
றவழ்நெடுந்திணாக்கருங்கடறத்திநீந்தெல்லை.

(இ-ள்.) அவரை நின் கடைக்கு அமைச்சர் ஆக கோடி என்று அளவு இல் சிவபரஞ்சுடர் அருள் செய - அக்குமரர்களை யுனது திருவாயிலில் மந்திரிக்கிழமை தந்துகொள்வா யென்று எல்லையில்லாத சிவபரஞ்சோதியாகிய சோமசுந்தரக்கடவுள் திருவருள் செய்ய, செழியர்கோ வேந்தன் கவலரும் களிப்பு உடையன் ஆய் கண் மலர்ந்து - இராசராசபாண்டியன் கவற்சி சிறிதுமில்லாத பெருங்களிப்பு உடையவனாகித் துயிலுணர்ந்து, எழுமான் நெடுந்திரை தவழ் கருங்கடல் தந்தி நீந்து எல்லை - சூரியன் தேரிற்பூட்டிய ஏழுகுதிரைகளும் நெடிய அலைகள் தவழுங் கரிய பெருங்கடலைத்தாவி நீந்தி யுதயமாகும் வைகறைப்போதில்.

சோமசூரியாக்கினிகளுக்கு ஒளிதரும் பேரொளி என்பார் அளவில் சிவபரஞ்சுடர் எனவும், களிப்புத்திளைக்குங் காலிடைக்கிடை கவலைவந்துறுவது என்பார் கவலருங் களிப்புடையனாய் எனவுங் கூறினார். (௯)

மாண்டகேள்விசான்மந்திரர்க்குணர்த்தியம்மலைமேற்
காண்டகேனமாவீரரைக்கொணர்கெனக்கருணை
பூண்டகாவலனமைச்சரும்போயவர்க்கண்டு
வேண்டவீரருமீண்டினார்மீனவன்றிருமுன்.

(இ-ள்.) மாண்ட கேள்வி சால் மந்திரர்க்கு உணர்த்தி - மாட்சிமைப்பட்ட நூற்கேள்வியில் மிக்க அமைச்சர்களுக்கு அறிவித்து, அமலை மேல் காண் தகு ஏன மா வீரரை கொணர்க என - அவ்வராகமலையின்மேல் வசிக்கும் பொலிவுமிக்கவராக வீரர்களைக் கொண்டுவரக்கடவீரென்று கூற, கருணை பூண்ட காவலன் அமைச்சரும் போய் - கருணையில் மிக்க பாண்டியன் சொல்வழி மந்திரக்கிழவர்களுஞ்சென்று, அவர் கண்டு வேண்ட - அக்குமரர்களைக் கண்டு தமது அரசனாணையைக் கூற, வீரரும் மீனவன் திருமுன் ஈண்டினார் - அவ்வராக வீரர்களும் அப்பாண்டியனவைக் களத்துவந்தார்கள்.

குடிகளிடத்து அருளுடைமையால் கருணைபூண்ட காவலன் என்றார். (௧0)

வந்திறைஞ்சியவராகமாமைந்தரைநேர்கண்
டந்தமில்களிப்படைந்துவேந்தமைச்சியற்கிழமை
தந்துவேறுபல்வரிசையுந்தக்கவாநல்கிக்
கந்துசீறியகடகரிக்கைதவன்பின்னர்.

(இ-ள்.) வேந்து - பாண்டியன், வந்து இறைஞ்சியவராக மாமைந்தரை நேர் கண்டு அந்தம் இல் களிப்பு அடைந்து - தனது அவைக்களத்தில் வந்து வணங்கியவராக வீரர்களை நேரே பார்த்து எல்லையில்லாத மகிழ்ச்சியை யடைந்து, அமைச்சு இயல் கிழமை தந்து - மந்திரக்கிழமையையுங்கொடுத்து, பல் வேறு வரிசையும் தக்க ஆறு நல்கி - பலவகைப்பட்ட வெவ்வேறு வரிசைகளையும் அவர்கள் தகுதிக்கேற்றபடி செய்து, கந்து சீறிய கடகரி கைதவன் பின்னர் - கட்டுத்தறியை முறிக்கு மதமிக்க யானைச்சேனையயுடைய அப்பாண்டியன் பின்பு. (௧௧)

பழையமந்திரக்கிழார்மடப்பாவைபோல்வாரை
விழவுசால்கடிமங்கலம்விதியினாற்புணர்த்தி
யழகிதாமெனநடத்தினனையரும்வீரக்
கழலினாற்கொருகவயமூங்கண்ணுமாய்நடப்பார்.

(இ-ள்.) பழைய மந்திரக்கிழார் மடப்பாவை போல் வாரை - தன்பால் முன்னுள்ள அமைச்சர்கள் பெற்ற இளமைவாய்ந்த பதுமைபோன்ற பெண்களை, சால்கடி விழவு மங்கலம் விதியினால் புணர்த்தி - சிறப்புமிக்க விவாகோற்சவத்தை வேதவிதிப்படி பன்னிரு குமரர்க்கும் கூட்டி, அழகிது ஆம் என்ன நடத்தினான் - (கண்டோர்) அழகிதென்று சொல்ல முடித்தான், அனையரும் வீரக்கழலினாற்கு ஒரு கவயமும் கண்ணும் ஆய் நடப்பார்-அக்குமாரர்களும் வீரகண்டையையணிந்த அப்பாண்டியனுக்குக் கவசமுங் கண்களுமாகி நடந்தார்கள்.

பாண்டியனுக் கோரிடையூறின்றிப் பாதுகாத்து வருவதால் கவயமுமாய் எனவும், தீவழியினின்று நல்வழியிற் செலுத்தலால் கண்ணுமாய் எனவுங் கூறினார்.

கலிநிலைத்துறை.

உடம்பாறிரண்டிற்குயிரொன்றெனவொன்றியைவாய்
விடம்பாயரவம்விழுங்குமிரையொத்துநெஞ்சந்
திடம்பாடுகொள்ளவினைவாங்கிச்செழியன்கல்வி
யிடம்பாடுநல்கும்பயன்போன்மகிழ்வெய்தநின்றார்.

(இ-ள்.) செழியன் - பாண்டியன், உடம்பு ஆறிரண்டிற்கும் உயிர் ஒன்று என ஒன்றி - அக்குமாரர்கள் பன்னிரண்டு சரீரத்திற்கும் உயிர் ஒன்று என்று கண்டோர்சொல்லக் கலந்து, ஐ வாய் விடம் பாய் அரவம் விழுங்கும் இரை ஒத்து - ஐந்துதலைகளையுடைய விடம்பரவிய சர்ப்பம்விழுங்கும் இரையையொத்து, நெஞ்சம் திடம் பாடு கொள்ள வினை வாங்கி - அவர்கள்மனம் சலனமின்றி நிற்கத் தனது கருமத்தைமுடித்து, கல்வி இடம் பாடு நல்கும் பயன்போல் மகிழ்வு எய்த நின்றார் - தான் கற்றகல்வி மிகவும் பயக்கும் பயனைப்போல மகிழ்ச்சியடையத் தொழிற்றலைநின்றார்கள்.

அறம்பொருள் இன்பவுபதைகளால் ஆராய்ந்துகொள்ளப்பட்ட அமைச்சர்கள் தெய்வமுதலியவற்றால் அரசனுக்கு வருந் துன்பத்தைச் சாந்திமுதலியவற்றால் ஒழித்துப் பகைவர் முதலியோரால் வருந் துன்பத்தை முன்னருணர்ந்து பாதுகாத்து அளவில்லாத தொழில்களால் வருந்தும் அவ்வரசன் பூபாரத்தைத் தமது பாரமாக மேற்கொண்டொழுகுவோர் அவராதலின் அவரோடு மனங்கலந்து அரசன் நடக்க வேண்டும் என்பார் உடம்பாறிரண்டிற்கும் உயிரொன்றென வொன்றியெனவும், ஐந்தலையால் விழுங்கு மிரையோருடலிற் சென்றமைதல்போல ஐயுறாதாராய்ந்து தெளிந்த அமைச்சர்களிடத்து ஒருகாலையுநின் அமைச்சு இல்லாதென்னுங் கருத்தால் தங் கருமத்தை நெகிழ்த்துவிடுவ ராதலால் அவர்கள் கொண்ட கருத்தே யரசன் கொண்டொழுகவேண்டும் என்பார் ஐவாய் விடம் பாயரவம் விழுங்கும் மிரையொத்து எனவும், தன்கருமத்தில் முயலும் அமைச்சர்கள் அவ்வுரிமையாலவர் பிறர்போல் நில்லாது கேளிரா மொழுகுதலைப் பொறாதார் கூறுஞ் சொற்களைக்கேட்டரசனவரை யவமதியாது நன்குவப்பின் அக்கருமத்தின் கண்ணவர்க்கு மேன்மேலும் ஊக்கம்பிறக்கும் என்பார் நெஞ்சந்திடம்பாடு கொள்ளவெனவும், தன்னாட்டில் நிகழுஞ் செய்தியை யாராய்ந்துணரக், கண்போல்வாராயினும் அமைச்சர் செய்யுங் கருமங்களை நாடோறும் அரசன் ஆராயவேண்டும் என்பார் வினைவாங்கியெனவும், இம்மையிலொருவற்குக் கற்ற கல்வி பொருளையும் புகழையும் பெருக்கி மகிழ்வுறுத்தி மறுமையிலும் உயிர்சென்றுழிச்சென்று பயன்தந்து மகிழ்வுறுத்தும் என்பார் கல்வியிடம்பாடு நல்கும் பயன்போல் மகிழ்வெய்த எனவுங் கூறினார். (௬௩)

நல்லாவின்பாலினறுந்தேன்கலந்தென்னப்பன்னூல்
வல்லாருமாகிமதிநுட்பருமாகிச்சோர்வில்
சொல்லாலடையார்மனமுங்களிதூங்கச்சொல்லிப்
பல்லார்பிறர்சொற்பயனாய்ந்துகவரவல்லார்.

(இ-ள்.) நல் ஆவின் பாலில் நறுந்தேன் கலந்தால் என்ன - நல்ல பசுவின் பாலில் நறுமணங்கமழும் தேன்கலந்தாற்போல, பல் நூல் வல்லாரும் ஆகி மதி நுட்பரும் ஆகி - பலநூல்களில் வல்லவருமாய் நுண்ணறிவுடையருமாய், சோர்வு இல் சொல்லால் அடையார் மனமும் களிதூங்க சொல்லி - இடையில் மறதியில்லாத சொற்களால் பகைவர் மனங்களிப்படையப்பேசி, பல்லார் பிறர் சொல் பயன் ஆய்ந்து கவரவல்லார் - பலரும் பிறருஞ் சொல்லுஞ் சொற்களிலுள்ள பயனை யாராய்ந்து கைக்கொள்ள வல்லவராகி.

மநுநூல்முதலிய நூலுணர்ச்சியாகிய செயற்கையறிவோடு தெய்வந்தரவந்த இயற்கையாகிய நுண்ணறிவு அமைச்சர்கட்கு அமையின் அவ்வமைச்சர் பகைவர் செய்யும் சூழ்ச்சியை முன்னரறிந்தழித்து அப்பகைவர் அறிந்தும் அழித்தற்குக்கூடாத சூழ்ச்சியைச் சூழ்வர், இவர்கள் முன்னமே தெய்வந்தரப்பெற்று அஃது ஒருங்கே யமைந்திருத்தலின் அது அரசனுக்குப் பாலோடுகலந்த நறுந்தேன்போலிருந்த தென்பார் நல்லாவின்பாலினறுந்தேன் கலந்தென்னப்பனூல் - வல்லாருமாகிமதி நுட்பருமாகி யெனவும், பிறர்கூறுஞ் சொல்லிற் சோர்வுபோலாது அமைச்சர்கூறுஞ் சொல்லிற் சோர்வுவரில் தமது அரசன் ஆக்கத்தையொழித்துக் கேடுபயக்கும் ஆதலால் அதனை யவர்கள் காத்தோம்பவேண்டும் என்பார் சோர்வில் சொல்லால் எனவும், வழுவின்மை, சுருங்குதல், விளங்குதல், இனிதாதல், விழுப்பயன்தருதல் என்னுங் குணங்களாலமைந்து பகைவரும் பகைமையொழிந்து நட்பினைவிரும்பும் வண்ணம் பேசுஞ்சொல் அமைச்சர்க்குவேண்டும் என்பார் அடையார்மனமுங் களிதூங்கச் சொல்லியெனவும், தம்பரிசனமாயினாரும் பகைவரும் விரும்பத் தாம் கூறுஞ் சொற்களை நிரைபடக்கோத்துக்கூறி அவர்கள் கூறுஞ் சொற்களில் வழுவுளவாயினும் அவற்றைநோக்கி யிகழாது பயனைமாத்திரங்கொண்டொழிதல் அமைச்சர்க்கு இன்றியமையாத குணம் என்பார் பல்லார் பிறர்சொற்பயனாய்ந்து கவரவல்லார் எனவுங்கூறினார். (௧௪)

பழையேமிறையூழ்கொளப்பட்டமென்றேமாப்பெய்தா
ருழையேவல்செய்யுஞ்சிறுர்போலவொதுங்கிவேந்தன்
விழைவேததனைவிடம்போலவெறுத்துவெஃகா
ரழல்போலணுகாரகலார்நிழலன்னநீரார்.

(இ-ள்.) நிழல் அன்ன நீரார் - பாண்டியன் தேகசாயையைப்போல விடாது நிற்குந் தன்மையையுடைய பன்னிருகுமாரரும், பழையேம்-நாம் பழையோம், இறை ஊழ்கொளப் பட்டம் என்று ஏமாப்பு எய்தார்-அரசனால் முறையாக நன்குமதிக்கப் பட்டோமென்று இறுமாப்படையாது, உழை ஏவல் செய்யும் சிறுர்போல ஒதுங்கி-பக்கலில்நின்று ஏவிய ஏவல்செய்யுஞ் சிற்றுள்களைப்போல வொதுங்கி நின்று, வேந்தன் விழைவு ஏது - அரசன்விரும்பிய பொருள்யாதோ, அதனை விடம்போல வெறுத்து வெஃகார் - அதனை விஷம்போல வெறுத்து விரும்பாமல், அழல்போல் அணுகார் அகலார்-அரசனைத் தீப்போலக்கருதி யவனை யணுகவுமாட்டார் நீங்கவுமாட்டார்.

அரசன் சினங்கொள்ளுங்காலிவர் பழையர் எனக் கண்ணோடாது உயிரைக்க வர்தலால் பழையேம் என்றே மாப்பெய்தார் எனவும், அரசனால் நன்குமதிக்கப்பட் டோமென்று அவன் வேண்டாதனசெய்யின் அவ்வரசன் தம்மைவேறொருவராகக்க ருதி மாறுபடுவானாதலால் கொளப்பட்டமென்றே மாப்பெய்தாரெனவும்,அரசன் த மக்கிளையனாயினும் அவனறங்குங்கால் அவன் ஒளி யுலகங்காத்துவருதலால் அவனை க் கடவுளெனவும் தம்மைவழிபடு மக்களெனவுங்கருதிப் பணிந்தொழுகில் அவனாலெ ல்லாச்செல்வமும் எளிதில் வந்தெய்தும் ஆதலால் உழை யேவல்செய்யுஞ் சிறார்போ ல வொழுங்கியெனவும், அரசனுக்குச் சிறப்பாகவுரிய வாவி, மண்டபம் பூம்பொழி ல் நுகர்தல் முதலியவும் ஒப்பனையும் மேன்மையுமுதலியவற்றைத் தாமும் அவனோ டொத்தவராகக் கருதுதற்கு அஞ்சி, விரும்பாது ஒழுகுவராயின் அவனே விரும்பி யெல்லாச்செல்வமுந் தருவானாதலால் விழைவேததனை விடம்போலவெறுத்து வெஃ கார் எனவும், மிகவும் விட்டு நீங்கில் குளிர் நீக்காது மிகவும் அணுகில் சுடும் தீயைப் போல மிகவும்விட்டு நீங்கில் பயன்தராதும் மிகவும் அணுகில் சினங்கொண்டொறு க்கும் அரசன்பால் இடைநிலத்து நின்றொழுகவேண்டுதலால் அழல்போலணுகாரக லார் எனவுங்கூறினர். (கரு)

மறுக்குஞ்செயனீத்துநடக்கையின்வையத்தோரை
யொறுக்கும்பொருளும்பணிகேட்கையினொன்னலாரைச்
செறுக்கும்பொருளுங்கவரார்விளைசெல்வமாக்க
ளிறுக்கும்பொருளேயிறைவற்கிவரீட்டுஞ்செல்வம்.

(இ-ள்.) மறுக்கும் செயல் நீத்து நடக்கையின் - தாம்விலக்கிய தீத்தொழில் களைவிலக்கி விதித்தவழி நடத்தலால், வையத்தோரை ஒறுக்கும்பொருளும் - தங் கோற்கீழ்வாழுங் குடிகளைத் தண்டித்தலால் வரும்பொருள்களையும், பணிகேட்கையி ன் - தாம்பணித்தபணியைக் கேட்டொழுகுதலால், ஒன்னலாரை செறுக்கும்பொரு ளும் - பகைவரைக் கோபித்தலால் வரும் பொருளையும், கவரார் - கைக்கொள்ளாது, விளை செல்வ மாக்கள் இறுக்கும் பொருளே - விளைதல் முதலியவற்றால் வருஞ் செ ல்வத்தையுடைய குடிகள் இறை யிறுக்கும்பொருளே, இறைவற்கு இவர் ஈட்டும் செல்வம் - அரசனுக்கு இவர்கள் தேடும்பொருள்களாம்.

மறுக்கும் செயலாவது தீக்கொளுவுதல், நஞ்சிடுதல், கருவியாற்கொல்லுத ல், திருடுதல், ஆறலைத்தல், சூறையாடல், பிறர்மனைவியைவிரும்பல் முதலிய தீச்செ யல்கள். விதித்தவழியாவது அத்தீமையொழித்து அரசன்கோற்கீழடங்கி யொழுகு தல், ஒறுத்தல் துன்பஞ்செய்தல், பொருட்கோடல், கொல்லுதல் எனமுத்திறப்படும் அவற்றுள் துன்பம் தங்கோற்கீழ்வாழுங் குடிகள் குற்றஞ்செய்யின் அவரைத்தூயரா க்குதற்பொருட்டு ஒரோவழித்துன்பஞ் செய்யும் ஒறுப்பொன்றேயன்றிப் பொருள் கோடலின்மையால் பொருளுங்கவரார் எனவும், தாம்பணித்தபணி மேற்கொண் டொழுகுதலால் பகைவர்பால் திறைகோடலேயன்றி யவர் கருவூலத்துள்ள பொருள் முதலியவற்றைக் கவர்தல் செங்கோன்மையன்மையால் ஒன்னாரைச் செறுக்கும் பொருளுங் கவரார் எனவும், குடிகள்பால் தாம்கொண்ட அருளோடும், அதனால் அ வர் தம்பாற்கொண்ட அன்போடும்கூடிவரும் ஆறிலொன்றும், மரக்கலத்தாலும் கா லாலும்வருஞ் சுங்கப்பொருளும் அரசற்குரிய பொருள்களாதலால் விளைசெல்வமாக் களிறுக்கும்பொருளே யிறைவற் கிவரீட்டுஞ்செல்வம் எனவுங் கூறினர். (கசு)

மறத்தானவேலான்மனக்கொள்கைதன்னெஞ்சுள்வான
நிறத்தாடிநீழலெனத்தோற்றநிறுத்துமற்ற

மறத்தாறெனிலாற்றுவரன்றெனிலாக்கமாவி
யிறத்தான்வரினுமனத்தானுமிழைக்கவெண்ணார்.

(இ-ள்.) மறத்து ஆன வேலான் மனக்கொள்கை - கொலைத்தொழிலிற்பழகிய வேலையேந்திய இராசராசபாண்டியனுடைய மனக்கொள்கை, தம் நெஞ்சு உள் - தமது மனத்தில், வானம் நிறத்து ஆடி நீழல் என்ன தோற்ற - ஆகாயத்தைப்போலப் புகைநிறம்வாய்ந்த கண்ணாடிநீழல்போலப் புலப்படுதலால், நிறுத்து-அதனைச்சீர்தூக்கி, அது அறத்து ஆறு என்னில் ஆற்றுவர் - அக்கொள்கை மநுநூல்வழிப்பட்டதாகுல் செய்தலும், அன்று என்னில் ஆக்கம் ஆவி இறவரினும் - அல்லையாயின் தமது செல்வமும் உயிரும் அழிய அரசற்குக்கோபம் வரினும், மனத்தானும் இழைக்க எண்ணார் - தமது மனத்தாலாயினுஞ் சிறிதுஞ் செய்யக்கருதாது தவிர்தலும் உடையார்.

இங்கிதம், வடிவு, தொழில், சொல்முதலிய அளவைகளால் அரசன் மனக்கொள்கையை யளக்காது மனத்தொடு கண்ணு முகமுங்கலந்தன ஆதலால் அவற்றால் அளந்தனர் என்பார் மறத்தான வேலான் மனக்கொள்கை தந்நெஞ்சுள் வானநிறத்தாடி நீழலெனத்தோற்ற எனவும், அரசன் மனக்கொள்கையை முற்றுவித்தற்கு அதன் குணங்குற்றங்களை யாராய்தற்கு முன்னர்ச் சீர்தூக்கவேண்டும் ஆதலால் நிறுத்து எனவும், அமைச்சராவார் மநுநூல் கற்றுணர்தல் செய்வன தவிர்வன அறிதற்கேயாதலின் குணத்தையறிந்து முற்றுவிக்கில் அதனால்வரும் புகழ் மந்திரிகள் மேற்றேயாம் ஆதலால் மற்றதறத்தாறெனிலாற்றுவர் எனவும், குற்றமாயின் அதனை அரசன் மொழித்தற்பொருட்டு இடித்து உறுதிகூறு அவனுக்கிறுதிபயக்குங் கருமத்தை முற்றுவிக்கில் அப்பழியை யுலகம் தம்மேலேற்றும் ஆதலால் ஆக்கமாவி யிறத்தான்வரினு மனத்தானுமிழைக்கவெண்ணார் எனவுங்கூறினார். தந்நெஞ்சுள் எனத் திருத்துக. (௧௭)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

இன்னவாறொழுகும்பன்னிருவோருமீகையுந்தருமமும்புகழுந்
தென்னர்கோமகற்குவைகலும்பெருகத்திசையெலாம்விசயமுண்டாக்கிப்
பன்னகாபரணன்சிவபுரமடைந்துபரன்கணநாதருட்கலந்து
மன்னிவீற்றிருந்தார்மன்னர்மன்னவனும்வான்பதமடைந்து வீற்றிருந்தான்.

(இ-ள்.) இன்ன ஆறு ஒழுகும் பன்னிருவோரும்-(அரசற்கு ஆவனசெய்து) இவ்வாறு நடக்கும் பன்னிரண்டு குமாரரும், ஈகையும் தருமமும் புகழும் தென்னர் கோமகற்கு வைகலும் பெருக - பொருளும் அறமும் புகழ்ச்சியும் பாண்டியனுக்கு நாள்தோறும் வளர்ந்தோங்க, திசை எல்லாம் விசயம் உண்டாக்கி - எட்டுத்திக்குகளிலுங் கொற்றத்தை நாட்டி, பன்னகாபரணன் சிவபுரம் அடைந்து பரன் கணநாதர் உள் கலந்து மன்னி வீற்றிருந்தார் - சர்ப்பாபரணத்தையணிந்த சிவபெருமானார் சிவபுரத்தையடைந்து சிவகணநாதருள் தாமுங் கணநாதர்களாய்க்கலந்து நிலைபெற்று வசித்திருந்தனர்கள், மன்னர் மன்னவனும் வான்பதம் அடைந்து வீற்றிருந்தான் - இராசராசபாண்டியனும் இந்திரபதத்தையடைந்து சிகரின்றியிருந்தனன்.

அரசங்கமாறனுள் பொருளே படை, குடி, அமைச்சு, நட்பு, அரண் என்னும் ஐந்திற்கு முக்கிய கருவி ஆதலால் ஈகை எனவும், அதனால் தருமமும புகழும் நாள்தோறும் பல்கலால் தருமமும் புகழும் வைகலும் பெருக எனவும், அதனாற் பகைவர் தவனடிக் கீழ்ப்படுதலால் திசையெலாம் விசயமுண்டாக்கியெனவுங் கூறினார். இது காரண மாலையணி. (௧௮)

பன்றிக்குட்டிகளை மந்திரிகளாக்கியபடலம் முற்றிற்று.

ஆகப் பாயிரம் உள்படத் திருவிருத்தம் - ௨௨௭௩.

## நாற்பத்தேழாவது

# கரிக்குருவிக்கு உபதேசஞ்செய்தபடலம்.

கொச்சகக்கலிப்பா.

வரிக்குருகிப்பத்திரற்குப்பலகையிட்டமணிகண்ட
னரிக்குருளைவடிவானவடல்வீரர்க்கரசன்பார்
பரிக்குமமைச்சியலளித்தபரிசுரைத்தாம்பசுபதியாற்
கரிக்குருவிகுருமொழிகேட்டருளடைந்தகதைபகர்வாம்.

(இ-ள்.) வரிக்கு உருகி பத்திரற்கு பலகை இட்ட மணி கண்டன் - இசைப் பாடலுக்கு உருகிப் பாணபத்திரர்க்குப் பலகைதந்தருளிய ஸ்ரீகண்டராகிய சோமசுந்தரக்கடவுள், அரிக்குருளை வடிவு ஆன அடல் வீரர்க்கு - பன்றிக்குட்டிகளின் வடிவாகிய வெற்றிவாய்ந்த பன்னிரண்டு வீரர்களுக்கும், அரசன் பார் பரிக்கும் அரசியல் அளித்த பரிசு உரைத்தாம் - பாண்டியனாட்டினைத் தாங்கு மந்திரக்கிழமை கொடுத்தருளிய திருவிளையாடலைக் கூறினாம், பசுபதியால்-அச்சோமசுந்தரக்கடவுளால், கரிக்குருவி குரு மொழி கேட்டு அருள் அடைந்த கதை பகர்வாம் - கரிக்குருவியானது உபதேசமொழி கேள்வியுற்று அவரது திருவருளையடைந்த திருவிளையாடலைக் கூறுவாம்.

எல்லா வுயிர்கட்கும் பொதுமையன் என்பது தோன்றப் பசுபதி என்றார். ()

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மன்னவனிராசராசன்வானவர்க்கரசனான
பின்னவன்குமரனானபெருவலிமடங்கலன்னான்
றுன்னலரடுபோர்சாய்க்குஞ்சுகுணபாண்டியனீர்ஞால
மின்னறீர்த்தறக்கோலோச்சியீர்ங்குடைநிழற்றுநாளில்.

(இ-ள்.) மன்னவன் இராசராசன் வானவர்க்கு அரசன் ஆன பின் - இராசராசபாண்டியன் தேவர்களுக்கு அரசனா யிந்திரபதத்தை யடைந்தபின், அவன் குமரன் ஆன பெரு வலி மடங்கல் அன்னான் - அவனுடைய புத்திரனாகிய பெரிய வன்மைவாய்ந்த ஆண்சிங்கத்தை யொத்து, துன்னலர் அடு போர் சாய்க்கும் சுகுண பாண்டியன் - பகைவர் செய்யும் கொலைத்தொழில் வாய்ந்த போர்முனையைச்சாய்க்கும் சுகுணபாண்டியனானவன், நீர் ஞாலம் இன்னல் தீர்த்து அறக்கோல் ஓச்சி - கடல்சூழ்ந்த நிலவுலகிற்கு நலிவினை யொழித்துச் செங்கோலைச் செலுத்தி, ஈர்ங்குடை நிழற்றும் நாளில் - தண்ணிய தவளவட்டக்குடையால் நிழல்செய்யுங் காலையில்.

தன்னாலும், தன் பரிசனத்தாலும், பகைவராலும், கள்வராலும், விலங்குகளாலும் குடிகட்கு வரும் நலிவினை இன்னல் என்றார். (உ)

ஆற்றல்சாலொருவன்மேனாளாற்றவுமறனேயாற்றி
மாற்றமில்சிறிதுபாவஞ்செய்ததன்வலத்தால்வந்து
தேற்றமில்கயவாயாகிச்செனித்தலாற்காகமர்தி
கூற்றெனவூற்றஞ்செய்யக்குருதிசோர்தலையதாகி.

(இ-ள்.) ஆற்றல் சால் ஒருவன் மேல் நாள் - வலிமைமிக்க வொருவன் முன்பிறப்பில், ஆற்றவும் அறனே ஆற்றி - பெரும்பாலும் (உயிர்க்குப் பற்றுக்கோடு

கரிக்குருவிக்கு உபதேசித்த திருவிளையாடல்



ஆகிய) தருமத்தையே செய்து, மாற்றம் இல் சிறிது பாவம் செய்து அதன் வலத்தால் வந்து தேற்றம் இல் கயவாய் ஆகி செனித்தலால் - சிறுபான்மை மாறுதலில்லாத பாவத்தைச் செய்து அப்பாவவன்மையால் அசேனமாகிய கரிக்குருவியாய்ப் பிறத்தலால், காகம் ஆதி கூற்று என ஊற்றம் செய்ய - காகமுதலிய பறவைகள் இயமனைப்போல இடையூறு செய்ய, குருதி சோர் தலையது ஆகி - உதிரஞ் சிந்துந் தலையையுடையதாகி.

நாகஞ் சிறிதாயினும் விடம் உயிர்க்கிறுதி தந்தே யொழிதல்போலப் பாவஞ் சிறிதாயினும் இழிபிறப்பைத் தந்தேயொழியும் என்பது தோன்ற மாற்றமில் பாவம் என்றார். (ங)

புட்கெலாமெளிதாயூறுபாடஞ்சிப்புறத்துள்வைகி
யுட்கிநீள்வனத்துட்போகிவழிமருங்கொருசார்நிற்குங்
கட்கவிழ்ந்தொழுகப்பூத்தகவிழிணர்மரமேல்வைகி
வெட்கமீதூரச்சாம்பிவெய்துயிர்த்திருக்குமெல்லை.

(இ-ள்.) புட்கு எல்லாம் எளிது ஆய் - எல்லாப் பறவைகளுக்கும் வருத்துதற்கு எளிய பறவையாய், ஊறு பாடு அஞ்சி - (அவைகள் செய்யும்) இடையூற்றுக்கு அஞ்சி, புறத்து உள் வைகி உட்கி - நகர்ப்புறத்திலிருந்தும் (அங்கும் பறவைகள் வருத்துதற்கு) அஞ்சி யாற்றாது, நீள் வனத்து உள் போகி - பெரிய காட்டிற்சென்று, வழி மருங்கு ஒரு சார் நிற்கும் - வழியில் ஒருபால் நிற்கும், கள் கவிழ்ந்து ஒழுக பூத்த - மதுவைக் கவிழ்த்துச் சிந்த மலர்ந்த, கவிழ் இணர் மரம் மேல் வைகி- கவிழ்ந்த பூங்கொத்துகளையுடைய மாமரத்தின்மேலிருந்து, வெட்கம் மீதூர சாம்பி வெய்துயிர்த்து இருக்கும் எல்லை - நாணமீதூரச் சோர்ந்து பெருமூச்செறிந்து வசிக்குமளவில்.

எல்லாப் பறவைகளும் வருத்த நிற்றலால் எளிதாய் எனவும், மாமரம் ஆதலால் கவிழிணர் மரம் எனவும், தன்னையொத்த பறவைச்சாதிகள் வருத்த நிற்றலால் வெட்கமீதூரச் சாம்பி யெனவுங் கூறினார். "அலையாது கீழிணர் நின்ற மேற்பகைமாவின்" என வரும் ஏதுவால் காண்க. (ச)

விடையவனீறுபூசுமெய்யவன்பூண்டகண்டித்
தொடையவன்புறம்புமுள்ளுந்தூயவன்குடையுங்கையி
லுடையவன்றருமதீர்த்தயாத்திரையொழுக்கம்பூண்ட
நடையவனொருவனந்தநறுந்தருநிழலிற்சார்ந்தான்.

(இ-ள்.) விடையவன் நீறு பூசும் மெய்யவன் - சிவபெருமான் திருநீறுபூசுந் திருமேனியையுடையவனாய், பூண்ட கண்டி தொடையவன் - ஆபரணமாகப்பூண்ட உருத்திராட்சக்கண்டிகையாகிய மாலையையுடையவனாய், உள்ளும் புறம்பும் தூயவன் - அகமும் புறமுந் தூய்மையையுடையவனாய், கையில் குடையும் உடையவன் தருமதீர்த்தயாத்திரை ஒழுக்கம்பூண்ட நடையவன் ஒருவன் - கையிலேந்திய குடையையும் உடையவனாய்ப் புண்ணிய வடிவமாகிய தீர்த்த யாத்திரை செல்லும் நியதியே தனக்கோராபரணமாகப் பூண்ட நடைப்பிடியையுடைய வொருவன், அந்த நறுந்தரு நிழலில் சார்ந்தான் - அந்தநறு மணமிக்க மாமரத்தினிழலை யடைந்தனன்.

சிவபெருமானுக்கே யுரியதாதலால் விடையவனீறுபூசும் எனவும், உள்ளம் போலப் புறமுஞ் சிவவேடப் பொலிவால் தூயனாயிருத்தலால் புறம்பும் உள்ளுந் தூ

யவன் எனவும், புண்ணியதீர்த்தங்களிற் சென்றுமூழ்குதலே யொழுக்கமாகக் கொண்ட கட்டப்பாடுடைமையால், தருமதீர்த்தயாத்திரை யொழுக்கம் பூண்ட கடையவ னெனவுங் கூறினர். கடைப்பிடி ஈறுதொக்குக் கடையென நின்றது. விடையவனீறு என்றது "திருவாலவாயான் றிருநீறே" என ஆளுடையபிள்ளையாரருளிய திருப்பாசுரத்தால் உணர்க. (ரு)

இருந்தவன்சிலரைநோக்கியியம்புவானெவர்க்கும்பேறு
தருந்தலந்தீர்த்தமூர்த்திதன்மையிற்சிறந்தவன்பு
வருந்தமிழ்மதுரைபொற்றாமரைத்தடஞ்சுந்தரேசப்
பெருந்தகையென்றுசான்றோர்பேசுவராதலாலே.

(இ-ள்.) இருந்தவன் - (அந்த மாமர நிழலில்) இருந்த முனிவன், சிலரை நோக்கி இயம்புவான் - அங்குள்ள சிலரைப் பார்த்துக் கூறுகின்றான், எவர்க்கும் பேறு தரும் தலம் தீர்த்தம் மூர்த்தி தன்மையில் சிறந்த - அடைந்த எவர்க்கு முத்திப்பயனை நல்குந்தலமும் தீர்த்தமு மூர்த்தியுமாகிய தன்மைகளுட் சிறந்துள்ளன, அன்பு வரும் தமிழ் மதுரை பொற்றாமரைத் தடம் சுந்தரேசப் பெருந்தகை என்று சான்றோர் பேசுவர் - கேட்போர்க்கு அன்புபயக்குந் தமிழ் வழங்கும் மதுரையும் பொற்றாமரைத் தீர்த்தமுஞ் சோமசுந்தரமூர்த்தியுமே யென்று பெரியோர் கூறுகிற்பர், ஆதலால் - ஆகையால். (சு)

ஓரிடத்தினையமூன்றுவிழுப்பமுமுள்ளதாகப்
பாடரித்தில்லையேனைப்பதியிடத்தொன்றேயென்றுஞ்
சீருடைத்தாகுங்கூடற்செழுநகரிடத்தம்மூன்றும்
பேருடைத்தாகுமென்றாற்பிறிதொருபதியாதென்றான்.

(இ-ள்.) ஓர் இடத்து இனைய மூன்று விழுப்பமும் உள்ளது ஆக பார் இடத்து இல்லை - ஒருதானத்தில் தலமேன்மையுந் தீர்த்தமேன்மையு மூர்த்திமேன்மையுமாகிய இந்த மூன்று மேன்மையும் உளதாக இங்கன்றி நிலவுலகிலெங்குமில்லை, ஏனை பதி இடத்து ஒன்றே - மற்றைத் தலங்களில் ஒன்றேயுள்ளது, என்றும் சீர் உடைத்து ஆகும் கூடல் செழுநகர் இடத்து அ மூன்றும் பேர் உடைத்து ஆகும் என்றால் - எப்பொழுதும் திருவிழாச்சிறப்புடையதாகிய மதுரையென்னும் வளமிக்க திருநகரில் அம்மூன்றுமேன்மையும் பேர்பெற்றதாயுளதாமென்னில், பிறிது ஒரு பதி யாது என்றான் - (இவ்வாறு சிறந்த) வேறொருதலம் யாதுள்ளதென்று கூறினான்.

தலமேன்மை முதலிய மூன்றும் மதுரையிலுள்ளவே யேனைத்திருப்பதிகளிலில்லையென்பான் ஏனைப்பதியிடத்தொன்றே யென்றும், இவைகளாற் சிறந்து விளங்குவது மதுரையே என்பான் கூடற்செழுநகரிடத் தம்மூன்றும் பேருடைத்தாகுமென்றாற் பிறிதொருபதியாதென்றான் என்றுங் கூறினன். விழுப்பம் தொகுத்தல். (எ)

இம்மதுரேசன்சேவித்தேத்துவோர்க்கெளியனாகிக்
கைம்மலர்நெல்லிபோலக்கருதியவரங்களெல்லா
மிம்மையினுடனேநல்குமேனையதலத்துவானோ
ரம்மையினன்றிநல்காராதலாலதிகனென்றான்.

(இ-ள்.) இமதுரேசன் சேவித்து ஏத்துவோர்க்கு எளியன் ஆகி - இந்த மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுள் தன்னை வணங்கும் அடியவர்க்கெளி

யவனுகி, கைமலர் நெல்லி போல கருதிய வரங்கள் எல்லாம் இம்மையின் உடனே நல்கும் - கையிலேந்திய நெல்லிக்கனியைப்போல வேண்டிக் கருதிய எல்லா வரங்களையும் இப்பிறப்பில் உடனே தந்தருளுவன், ஏனைய தலத்து வாஞேர் அம்மையின் அன்றி நல்கார் - மற்றைத் தலங்களிலுள்ள மூர்த்திகள் மறுமையினன்றிக் கொடார்கள், ஆதலால் அதிகன் என்றான் - ஆகையால் சோமசுந்தரக்கடவுளே மேம்பட்டவனென்று கூறினன்.

கையிலேந்திய நெல்லிக்கனி தன்னை நோக்குவோர்க்குப் புறம்புபோலப் புலப்படாத அகவடிவையும் உடனே புலப்படுத்தல்போல வேண்டிய வரங்களையிப்பிறப்பிலேயே யுடனே புலப்படத் தந்தருளுதலால் கைம்மலர் நெல்லிபோலக் கருதிய வரங்களெல்லாம் இம்மையினுடனே நல்கும் என்றார். (அ)

மற்றதுகேட்டுகொம்பர்வைகியகயவாய்ஞானம்
பெற்றதுபறவையாகிப்பிறந்ததும்பிறவுந்தேற்ற
முற்றதுநாமிச்சன்மமொழிப்பதற்கறவோனிங்ஙன்
சொற்றதேயுறுதியென்றுதுணிவுகொண்டெழுந்ததன்றே.

(இ-ள்.) அது கேட்டு கொம்பர் வைகிய கயவாய் - அதனைக் கேள்வியுற்ற அப்போதே கொம்பிலிருந்த கரிக்குருவியானது, ஞானம் பெற்றது பறவை ஆகி பிறந்ததும் பிறவும் தேற்றம் உற்றது - ஞானமடைதலால் பறவையாய்த் தான் வந்து பிறந்ததையும் மற்றுள்ளனவற்றையுந் தெளிந்து, நாம இ சன்மம் ஒழிப்பதற்கு அறவோன் இங்ஙன் சொற்றதே உறுதி என்று - நாம் இந்தப் பிறப்பினை யொழித்தற்கு இம்முனிவன் இங்குக் கூறியதே யுறுதி பயப்பதென்று கருதி, துணிவு கொண்டு எழுந்தது - துணிந்து (மதுரைக்குச் செல்ல) எழுந்தது.

இறப்பு நிகழ்வெதிர் வென்னு முக்காலங்களில் நிகழு நிகழ்ச்சியையுணரு ஞானம்பெற்றதென்பார்ஞானம பெற்றது பறவையாகிப் பிறந்ததும் பிறவுந் தேற்ற முற்றது என்றார். (க)

ஆய்மலர்க்கானநீங்கியாடகமாடக்கூடற்
போய்மலர்க்கனககஞ்சப்புண்ணியப்புனறோய்ந்தாம்பல்
வாய்மலர்க்கயலுண்கண்ணாண்மணாளனைவலஞ்செய்தன்பிற்
றோய்மலர்க்கழலினானையகத்தினாற்றொழுதர்சித்தே.

(இ-ள்.) ஆய் மலர் கானம் நீங்கி - வண்டுகளாராயு மலர்களையுடைய காட்டினின்றும் நீங்கி, ஆடகம் மாடம் கூடல் போய் - பொற்றகடு வேய்ந்த மாடங்கள் நெருங்கிய மதுரையிற் சென்று, மலர் கனக கஞ்சம் புண்ணியம் புனல் தோய்ந்து - மலர்தலையுடைய பொற்றாமரைபூத்த புண்ணியதீர்த்தத்தில் படிந்து, ஆம்பல் வாய் மலர் கயற் கண்ணாள் மணாளனை வலஞ் செய்து - ஆம்பல் மலர்போன்ற திருவாயினையுடைய தாமரைமலர்போன்ற அங்கயற்கண்ணியார் கணவராகிய சோமசுந்தரக்கடவுளைப் பிரதிக்ஷணஞ்செய்து, அன்பில் தோய் மலர் கழலினானை அகத்தினால் அர்ச்சித்து தொழுது-அடியவரன்பிற்கலந்த தாமரைமலரையொத்த திருவடியையுடைய அச்சோமசுந்தரக்கடவுளை மனத்தினாலருச்சனைசெய்து வணங்கி.

மானதபூசை செய்தது என்பார் அகத்தினாற்றொழுதர்ச்சித்து எனவும்,அன்புஞ் சிவமும் அபேதம் என்பார் அன்பிற்றோய் மலர்க்கழலினான் எனவுங் கூறினார். ()

இன்னணமூன்றுவைகல்கழிந்தபினெம்பிராட்டி
தன்னமர்காதலானைத்தாழ்ந்தெதிர்நோக்கியைய

வென்னையிக்கயவாய்செய்யுஞ்செயலிதன்வரவியாதென்ன
முன்னவனதன்றன்செய்திவரவெலாமுறையாற்கூறு.

(இ-ள்.) இன்னணம் மூன்று வைகல் கழிந்த பின் - இவ்வாறு மூன்றுதினங் கழிந்தபின்பு, எம்பிராட்டி தன் அமர் காதலனை தாழ்ந்து எதிர் நோக்கி - எமது பிராட்டியாராகிய அங்கயற்கண்ணியார் தம்மால் விரும்பப்பட்ட கணவராகிய சோமசுந்தரக்கடவுளை வணங்கி யெதிரே பார்த்து, ஐய - ஐயனே, இ கயவாய் செய்யும் செயல் என்னை - இந்தக் கரிக்குருவி செய்யும் செய்கையாது, இதன் வரவு யாது என்ன - இது இங்கு வருகை யாதென்று வினவ, முன்னவன் அதன் தன் செய்தி வரவு எல்லாம் முறையால் கூறு - அச்சோமசுந்தரக்கடவுள் அதனது முன்னிகழ்ந்த செய்தியும் இங்குவந்த செய்தியுமாகிய இவைகளை யெல்லா முறைபடக்கூறி.

மக்கள் நோய்தீரத் தாய் மருந்தருந்தல் போல ஆன்மாக்களுணர்ந்து வழிபட்டு மலச்சிமிழ்ப்பு ஒழித்துய்ய அறிந்தும் அறியார்போல வினவினர் என்பார் எம்பிராட்டி தன்னமர்காதலனைத் தாழ்ந்தெதிர்நோக்கிச் செய்யுஞ் செயலிதன் வரவியாதென்ன எனக் கூறினர். (௧௧)

பத்திமைநியமம்பூண்டபறவைமேற்கருணைநாட்டம்
வைத்திமையாதமுக்கண்மறைமுதலொருசேய்க்கன்று
நித்தியநிலைமைநல்கிநேர்ந்தவெங்கூற்றைக்காய்ந்த
சத்தியஞானமித்திஞ்சயத்தினையுபதேசித்தான்.

(இ-ள்.) இமையாத முக்கண் மறை முதல் - இமைத்தலில்லாத திரிநேத்திரங்களையுடைய சோமசுந்தரக்கடவுள், பத்திமை நியமம் பூண்ட பறவை மேல் கருணை நாட்டம் வைத்து - பத்திசெய்து வழிபடுதலையே கடப்பாடாகக் கொண்ட கரிக்குருவியின்மேல் கிருபாநோக்கம் வைத்து, ஒரு சேய்க்கு அன்று நித்திய நிலைமை நல்கி - (தம்மை வழிபட்ட) மார்க்கண்டேயருக்கு அக்காலையில் நித்தியத்துவத்தைத் தந்தருளி, நேர்ந்த வெங்கூற்றை காய்ந்த சத்திய ஞான மித்திஞ்சயத்தினை - அவர்மேலெதிர்ந்த கொடிய இயமனை உதைத்தருளிய உண்மைஞானமாகிய மித்திஞ்சய திருமந்திரத்தை, உபதேசித்தான் - (கரிக்குருவிக்கு) உபதேசித்தருளினர்.

குரு சந்தானம் விளங்கற்பொருட்டும் ஆன்மாக்களுணர்ந்து கதியடைதற்பொருட்டும் வேதங்களை யருளிய முதல்வன் என்பார் மறைமுதல் எனவும், இமைக்கிற் சூரிய சந்திரர் இயக்கமொழியும் என்பார் இமையாதமுக்கண் எனவும், என்றும் அழியாத்தன்மை யருளினர் என்பார் நித்தியநிலைமை நல்கி யெனவும், கூறினர். மித்திஞ்சயம் மூன்றெழுத்தோடு கூடிய திருமந்திரம். இதனைக் குருமுகத்திலுணர்க. இயமனை யுதைத்த வரலாறு முன்னர்க்கூறியதுட்காண்க "ஆரணமாகமங்களருளின் உருவுகொண்டு - காரணனருளானுகிற் கதிப்பவரில்லையாகும்-நாரணன்முதலாயுள்ளசுரர்நரர் நாகர்க்கெல்லாம் - சீரணிகுருசந்தானச்செய்தியுஞ் சென்றிடாவே" எனவரும் ஏதுவால் மறைமுதல் என்றதற்குக் கூறியதுணர்க. (௧௨)

கலிவிருத்தம்.

உவமையற்றவனுரைத்தமந்திரஞ்
செவிமடுத்தலுஞ்சிற்றுணர்ச்சிபோய்ப்
பவமகற்றிடப்படுகரிக்குரீஇ
கவலைவிட்டரன்கழல்வழுத்துமால்.

(இ-ள்.) உவமை அற்றவன் உரைத்த மந்திரம் செவி மடுத்தலும் - தனக்கு நிகரில்லாத பெருமான் உபதேசித்தருளிய மந்திரத்தைக் காதிற்கேட்டலும், சிற்றுணர்ச்சி போய் - சிற்றறிவு நீங்கி, பவம் அகற்றிடப் படு கரிக்குருவி - (அத்திருமந்திரத்தால்) இனிவரும் பிறப்பு நீக்கப்பட்ட கரிக்குருவியானது, கவலை விட்டு அரன் கழல் வழுத்தும் - கவலையொழிந்து அப்பெருமான் திருவடியைத் துதிக்கும்.

யாவும் தனது சத்தியாலாக்கப் படுபொருள்கள் ஆதலால் தனக்குத்தானே யொத்தவன் என்பார் உவமையற்றவன் எனவும், அவனுலுரைத்தருளப்படுவது பேரறிவு நல்கிப் பிறவியையொழிக்கும் என்பார் சிற்றுணர்ச்சிபோய்ப் பவமகற்றிடப் படுகரிக்குரீஇ எனவும், அதனுலினிவரும் கவலையொழிந்ததென்பார் கவலைவிட்டு எனவுங்கூறினுர். (௧௮)

எண்ணிலாவுயிர்க்கிறைவபோற்றிவான்
றண்ணிலாமதிச்சடிலபோற்றியென்
புண்ணியப்பயன்போற்றியங்கயற்
கண்ணிநாதநின்கருணைபோற்றியால்.

(இ-ள்.) எண் இல்லாத உயிர்க்கு இறைவ போற்றி - எல்லையில்லாத ஆன்ம கோடிகளுக்குத் தலைவனே உன்னை வந்திக்கக்கடவேன், வான் தண் நிலாமதி சடில போற்றி - ஆகாயத்தில் தவழும் தண்ணிய கிரணம்வாய்ந்த சந்திரனையணிந்த சடாமகுடத்தையுடையவனே வணங்கக்கடவேன், என் புண்ணியப்பயன் போற்றி-எனது சிவபுண்ணியத்தின் பேருயுள்ளவனே வந்திக்கக்கடவேன், அங்கயற்கண்ணி நாத நின் கருணை போற்றி - அங்கயற்கண்ணியம்மையார் தலைவனே யுனது திருவருளை வந்திக்கக்கடவேன்.

மலத்திற்சிமிழ்ப்புண்ட சிற்றறிவுடைய ஆன்மாக்களுக்கு முதல்வன் அம்மலத்தினீங்கிய பேரறிவுடையவனு யுணர்த்துவோன் ஆதலால் எண்ணிலாவுயிர்க்கிறைவ போற்றியெனவும், தன்னைச் சரணடைந்தோர் நலிவையொழித்தருளுந் தயாமூர்த்தியாதலால் வான் தண்ணிலாமதிச் சடிலபோற்றியெனவும், தான் செய்த சிவபுண்ணியம் இம்மையிலேயே பயக்கச்செய்தவன் ஆதலால் என் புண்ணியப் பயன் போற்றியெனவும், திருவருட்டுணைவனுய் என்றுங் கருணையேயுடையவன் ஆதலால் அங்கயற்கண்ணிநாத நின்கருணை போற்றியெனவுந் துதித்தது. (௧௯)

தெளிதலின்றியேசெய்ததீமையால்
விளியுமென்னையுமாளல்வேண்டுமோ
வெளியரெங்குளாரென்றுதேர்ந்துதேர்ந்
தளியையாவதுன்னருளின்வண்ணமே.

(இ-ள்.) தெளிதல் இன்றியே - (குணங்குற்றங்களால்வரும்பயன்) தெளியாது, செய்த தீமையால் விளியும் என்னையும் ஆளல் வேண்டுமோ-நான் செய்த கொடுவினையால் இழிபிறப்புற்றிறக்குமென்னையும் ஓர்பொருளாகக்கருதி யாளவேண்டுமோ, எளியர் எங்கு உள்ளார் என்று தேர்ந்து தேர்ந்து அளியை ஆவது - (அடியேனையொத்த எளியரெங்குளரென்று நாடியவர்மேற் கருணையுடையையாயிருத்தல், உன் அருளின் வண்ணம் - உன் திருவருளின் திறம்.

முக்காலநிகழ்ச்சியையு முணரும் ஞானந் தோன்றினமையால்தான் முற்பிறப்பிற்செய்தது தனக்குத்தோன்றியதுஎன்னும் தெளிதலின்றியே செய்த தீமையால் விளியுமென்னையும் எனவும், அக்கொடுந்தொழிலால் ஓம்பப்பட்டவனல்லனென்னும்

ஆளல்வேண்டுமோ எனவும், பக்குவர்க்கன்றி, யாதரிப்போர் ஒருவருமின்றிக்கவலு ம் எளியர் எங்குளரென்று நாடித் தனது முற்றுமுணர்தற்றன்மையால் தனித்தனி யொருசேரநாடி யருள்செய்தலே யுன்னருளின் திறன் என்னும் எளியரெங்குளரெ ன்று தேர்ந்து தேர்ந்தளியையாவ துன்னருளினவன்மை எனவுங்கூறியது. (௩௫)

உம்மைநல்லறமுடையநீர்மையா
லிம்மையிம்மனுவியம்பினுயிது
வம்மைநன்னெறிக்கேதுவாதலான்
மும்மையுந்நலமுடையமொய்ம்பினேன்.

(இ-ள்.) உம்மை நல் அறம் உடைய நீர்மையால் - முற்பிறப்பி லடியேன்செ ய்த சிவபுண்ணியப்பேறு பெரும்பாலும் உடையனாதற்றன்மையால், இம்மை இம னு இயம்பினுய் - இப்பிறப்பில் இத்திருமந்திரத்தை யருளினுய், இது அம்மை நல் நெறிக்கு ஏது ஆதலால் - இது மறுமையில் சிவகதியிலுய்த்தற்குக் காரணமாதலால், மும்மையும் நலம் உடைய மொய்ம்பினேன் - உம்மை இம்மை அம்மை யென்னும் முத்திறத்துப்பேறுமடைந்த வலியனுயினேன்.

முற்பிறப்பில் சிவபுண்ணியப்பேறும் இப்பிறப்பில் திருமந்திரப்பேறும் வரு பிறப்பில் சிவகதிப்பேறும் ஒருங்குடையேன் என்னும் மும்மையும் நலமுடைய மொ யம்பினேன் என்றது. (௩௬)

ஆயினும்மெனக்கையவோர்குறை
தீயபுள்ளெலாமூறுசெய்தெனைக்
காயுமானமுங்கழியக்கண்டபே
ரேயெனும்படிக்கெளியனுயினேன்.

(இ-ள்.) ஆயினும்- (நினது திருவருட்டுணையால் பெரும்பேறடைந்தேன்) ஆ னுலும், ஐய ஓர்குறை எனக்கு - ஐயனே யோர் குறையெனக்குள்ளது, தீய புள் எல்லாம் - கொடிய பறவைகளெல்லாம், மானமும் கழிய ஊறு செய்து என்னை கா யும்படிக்கு - வலிமையோடு மானமும் என்னினின்று நீங்க இடையூறு செய்து என்னை வருத்தும்படிக்கும், கண்ட பேர் ஏ என்னும்படிக்கு - பார்த்தபேர் ஏ என்று இழித்து ஒட்டும்படிக்கும், எளியன் ஆயினேன் - எளியனுநிலையடைந்தேன்.

ஏ இழிப்புக்குறிப்பையுணர்த்தும் ஓரிடைச்சொல். உம்மை வலிமையுமன்றி என நிற்றலால் இறந்தது தழீஇய எச்சப்பொருட்டு. குறையென்னும் வினைமுதல் எளியனுதல் என்னும் பயனிலைகொண்டது. (௩௭)

என்னவக்குரீஇயியம்பவெம்பிரா
னன்னபுட்கெலாம்வலியையாகெனப்
பின்னுமக்குரீஇதாழ்ந்துபேதையேற்
கின்னுமோர்வரந்தருதியென்றதால்.

(இ-ள்.) என்ன அகுரீ இ இயம்ப - என்று அக்குருவி குறையிரக்க, எம்பி ரான் - எமது பெருமான், அன்ன புட்கு எல்லாம் வலியை ஆக என்ன - அப்பறவை களுக்கெல்லாம் வலியாளுகக்கடவா யென்றருள, பின்னும் அகுரீஇ தாழ்ந்து-மீளவு ம் அந்தக்குருவி வணங்கி, பேதையேற்கு இன்னும் ஓர் வரம் தருதி என்றது - அறி வில்லாத அடியேனுக்கு இன்னும் ஓர்வரந் தந்தருளாயென்றிரந்தது.

என்றும் அருள்வள்ளல் என்பது தோன்றப், பின்னுமக்குரீஇத் தாழ்ந்து பேதையேற் - கின்னுமோர் வரந்தருதி யென்றது என்றார். (கஅ)

வலியையென்பதென்மரபினுக்கெலாம்
பொலியவேண்டுமெப்போதுநீசொன
வொலியமந்திரமோதியோதிநாங்
கலியைவெல்லவுங்கருணைசெய்கென.

(இ-ள்.) வலியை என்பது - வலியையாகவென எனக்கருளிய பேறு, என் மரபினுக்கு எல்லாம் - என்மரபிலுள்ள பறவைகளுக்கெல்லாம், எ போதும் பொலிய வேண்டும் - எந்நாளும் குறைவின்றி விளங்கவேண்டும், நீ சொன்ன ஒலிய மந்திரம் ஓதி ஓதி - நீயருளிய ஒலியையுடைய திருமந்திரத்தை யிடையீடின்றிப் பயின்று, நாம் கலியை வெல்லவும் கருணை செய்க என்ன - நாங்கள் துன்பத்தைப் புறங்காணவும் கருணை செய்தருளா யென்றிரக்க.

தானடைந்தபேறு தன்குலமுழுதும அடையக் கருதுதல் ஆன்றோர் வழக்கென்று முறைமையை இககரிக்குருவி விளக்கியதென்பார் உளப்பாட்டுப் பன்மைப் பொருள்பட, நாம் கலியைவெல்லவுங் கருணைசெய்கென என்றது என்றார். இதனை யடியில்வருஞ் செய்யுளிற் காண்க. (கசு)

ஆவதாகவென்றமரர்நாயகன்
மூவெழுத்தினுன்முடிந்தவம்மனு
தாவிறெய்வதமிருடிசந்தமோ
டோவிலோசைமூன்றொடுந்தெருட்டினுன்.

(இ-ள்.) ஆவது ஆக என்று - குறையிரந்தது கைகூடக் கடவதென்று, அமரர் நாயகன் - தேவர்கள் பெருமானாகிய சோமசுந்தரககடவுள், மூ எழுத்தினும் முடிந்த அமனு - மூன்றெழுத்தினுல் முடிந்த அத்திருமந்திரத்தை, தா இல் தெய்வதம் இருடி சந்த மோடு - கெடுதலில்லாத தெய்வம் ருஷிசந்தஸ் என்னும் இவைகளோடும், ஓவு இல் ஓசை மூன்றொடு-நீங்குதலில்லாத அநுதாத்தமுதலிய மூன்றொலிகளோடும், தெருட்டினுன் - தெளிவுபெற அருளினர்.

மூவெழுத்தினுல் முடிந்த அமமனு என்றது திரியம்பகம் என்னும் திருமந்திரம். சந்தஸ் என்றது காயத்திரி சந்தஸ். ஓசைமூன்று எனறது அநுதாத்தம், உதாத்தம், சொரிதம். (உ0)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

குருமொழிபயின்றுமுள்வாய்க்குருவிதன்குலனுந்தன்போல்
அருமறைமுதல்வனீந்தவாற்றலாற்பறவையெல்லாங்
பெருமைசால்வலியானென்னும்பெயரவாயுலகின்மன்னக்
கருமணிகண்டன்செம்பொற்கணைகழலடிசேர்ந்தன்றே.

(இ-ள்.) முள் வாய் குருவி குரு மொழி பயின்று - முள்போலக் கூரிய வாயையுடைய கரிக்குருவியானது குரு உபதேசத்தை யிடைவிடாது பழகி, தன் குலனும்-தன்சாதிப் பறவைகளும், தன் போல்-தன்னைப்போல, முதல்வன் ஈந்த அருமறை ஆற்றலால் - சோமசுந்தரக்கடவுளருளிய அரிய திரியம்பகமனுவின் வன்மையால், பறவை எல்லாம் - தன்சாதிப் பறவைகளெல்லாம், பெருமை சால் வலியான் என்னும் பெயர ஆய் உலகில் மன்ன - பெருமைமிக்க வலியானென்னும் பெய

ளையுடையன வாயுலகில் நிலைபெற, கருமணி கண்டன் செம்பொன் கழை கழல் அடி சேர்ந்தன்று - கரிய நீலமணிபோன்ற ஸ்ரீகண்டத்தையுடைய அச்சோமசுந்தரக் கடவுளுடைய செவந்த பொன்னுலாகிய ஒலிக்கும் வீரகண்டைகட்டிய திருவடியை யடைந்தது.

முன்வாய் முன்போலக்கூறியவாய் என நிற்றலால் பண்புவமைத்தொகை.()

இக்கரிக்குருவிதானோற்றெய்தியவரத்தைதன்போல்
ஒக்கலுமெளிதாவெய்தப்பெற்றதாலுலகின்மேன்மைத்
தக்கவனொருவன்வாழத்தன்கிளைவாழ்வதென்ன
மிக்கவரெடுத்துக்கூறும்பழமொழிவிளக்கிற்றன்றே.

(இ-ள்.) இ கரிக்குருவி தான் நோற்று எய்திய வரத்தை - இந்தக் கரிக்குருவி தான்வருந்தி நோற்றடைந்த வரத்தை, தன் போல் ஒக்கலும் எளிதாக எய்த பெற்ற தால் - தன்னைப்போலத் தன் சாதிப் பறவைகளெல்லாம் வருந்தாமல் எளிதாக அடையப் பெற்றதினால், உலகில் மேன்மை தக்கவன் ஒருவன் வாழ - உலகின்கண் மேன்மையோடு நடுநிலைமையையுடைய வொருவன் வருந்தி முயன்றுவாழ, தன் கிளை வாழ்வது என்ன - அவன்கீழ் அவன் உறவினர் யாவரும் வாழ்வாரென்று, மிக்கவர் எடுத்து கூறும் பழமொழி விளக்கிற்று - ஆன்றோரெடுத்துக் கூறுமூதுரையை விளக்கியது.

தக்கவன் வருந்திமுயன்றுவாழ்தல் அவன் கிளைவாழ்வதற்கு என்பார் தக்கவனொருவன் வாழத் தன்கிளை வாழ்வதென்ன வெனவும், மூதுரை ஆன்றோர் கூற்று என்பார் மிக்கவரெடுத்துக்கூறும் பழமொழி விளக்கிற்று எனவுங் கூறினார் "அழன்மண்டுபோழ்தி னடைந்தவர்கட்கெல்லாம் - நிழன்மரம்போலொப்பத் தாங்கிப் பழுமரம்போற் - பல்லார்பயன்றுய்ப்பத் தான்வருந்தி வாழ்வதே - நல்லாண்மகற்குக்கடன்" எனவரும் ஏதுவால் உணர்க. (உஉ)

ஷை வேறு.

ஈசனடிக்கன்பில்லார்போலெளியாரில்லையாவர்க்கும்
ஈசனடிக்கன்புடையார்போல்வலியாரில்லையாவர்க்கும்
ஈசனடிக்கன்பின்மையினுலெளிதாய்த்திரிந்தவிக்கயவாய்
ஈசனடிக்கன்புடைமையினுல்வலிதாயிற்றேயெவ்வுயிர்க்கும்.

(இ-ள்.) ஈசன் அடிக்கு அன்பு இல்லார் போல் - சிவபெருமான் திருவடிக்கீழன்பில்லாதவர்போல, யாவர்க்கும் எளியார் இல்லை - எவருள்ளும் எளியவரில்லை, ஈசன் அடிக்கு அன்பு உடையார் போல் - அச்சிவபெருமான் திருவடிக்கீழன்புடையவர்போல, யாவர்க்கும் வலியார் இல்லை - எவருள்ளும் வலியவரில்லை, ஈசன் அடிக்கு அன்பு இன்மையினுல் எளிது ஆய் திரிந்த இ கயவாய் - அப்பெருமான் திருவடிக்கீழன்பில்லாமையினுல் எப்பறவைகளுள்ளும் எளிதாகத்திரிந்த இந்தக் கரிக்குருவி, ஈசன் அடிக்கு அன்பு உடைமையினுல் எ உயிர்க்கும் வலிது ஆயிற்று - அப்பெருமான் திருவடிக்கீழன்புடைமையினுல் எப்பறவைகளுள்ளும் வலிதாயிருந்தது.

சிவபெருமான் திருவடிக்கீழ் அன்பில்லாதவரே யெளிமையிற் சிறந்தோர்க்கு உவமிக்கப்படுவோர் என்பார் ஈசனடிக்கன்பில்லார்போ லெளியாரில்லை யெனவும், பிரமன் முதல் பிபீலிகாந்தம் காறும் என்பார் யாவர்க்கும் எனவும், அப்பெருமான் திருவடிக்கீழ் அன்புடையவரே வன்மையிற் சிறந்தோர்க்கு உவமிக்கப்படுவோர் என்பார் ஈசனடிக்கன்புடையார்போல் வலியாரில்லை யெனவும், இவ்விருதி

றத்தையும் கரிக்குருவி விளக்கியது என்பார் ஈசனடிக்கன்பின்மையினு லெளிதாய்த் திரிந்தவிக்கயவாய் - ஈசனடிக்கன்புடைமையினால் வலிதாயிற்றே யெவ்வுயிர்க்கும் எனவுங் கூறினர். "பூமேலயனோடுமாலும் புகலரிதென் - றேமாறிநிற்க வடியேனிறுமாக்க - நாய்மேற்றவிசிட்டு நன்றுப்பொருட்படுத்த - தீமேனியானுக்கே சென்றூதாய்கோத்தும்பீ" எனவரும் ஏதுவால் உணர்க. (௨௩)

கரிக்குருவிக்கு உபதேசஞ் செய்தபடலம் - முற்றிற்று.

---

ஆகப் பாயிரம் உள்படத் திருவிருத்தம் - ௨௨௯௯.

---

## நாற்பத்தெட்டாவது

# நாரைக்கு முத்திகொடுத்தபடலம்

---

கலிவிருத்தம்.

அத்திதந்தவிமானமழகியார்
பத்திதந்தபறவைக்குமந்திர
சித்திதந்ததிறனிதுநாரைக்கு
முத்திதந்தகருணைமொழிகுவாம்.

(இ-ள்.) அத்தி தந்த விமானம் அழகியார் - அஷ்டகசங்களாற் சுமக்கப்பட்ட விமானத்திலெழுந்தருளிய சுந்தரவிடங்கப்பெருமானர், பத்தி தந்த பறவைக்கு மந்திர சித்தி தந்த திறன் இது - அன்புசெய்து வழிபட்ட கரிக்குருவிக்கு மந்திரசித்தி தந்தருளிய திருவிளையாடலிது, நாரைக்கு முத்தி தந்த கருணை மொழிகுவாம் - நாரைக்குச் சிவகதி தந்தருளிய கருணைத்திறமாகிய திருவிளையாடலை யினிக் கூறுவாம்.

சிவபெருமான் திருவிளையாடலும் ஆன்மாக்களுக்குச் சிவஞானந்தரும் திருவருள் ஆதலால் முத்திதந்த கருணை மொழிகுவாம் என்றார். "உருவருள் குணங்களோடுமுணர்வரு ளுருவிற்றோன்றுங் - கருமமுமருள்" என்ற ஏதுவால் உணர்க.

தேக்குநீர்வையைநாட்டொருதென்புலத்
தாக்குமாடவைப்பொன்றுளதவ்வயின்
வீக்கும்யாழ்செயும்வண்டுக்குவீழ்நற
வாக்குதாமரைவாவியொன்றுள்ளதால்.

(இ-ள்.) தேக்கும் நீர் வையை நாடு ஒரு தென் புலத்து - நிறைந்தநீர் மயமாகிய வையைநதி சூழ்ந்த பாண்டிநாட்டில் ஓர்சார் தென்பாலில், ஆக்கும் மாடம் வைப்பு ஒன்று உள்ளது - சிற்பநூல் வழி சமைத்த மாடங்களையுடைய நகரம் ஒன்றுள்ளது, அவயின் - அவ்விடத்தில், வீக்கும் யாழ் செய்யும் வண்டுக்கு - நரம்பின் கட்டமைந்த வீணையினிசைபோல இசைபாடும் வண்டுகளுக்கு, வீழ் நற வாக்கு தாமரை வாவி ஒன்று உள்ளது - விரும்புந் தேனை வாக்காநின்ற தாமரைகளையுடைய தடாகம் ஒன்றிருக்கின்றது. (௨)

ஆழமிக்ககயந்தலையத்தலை
வாழுமீனமனைத்தையும்வாய்ப்பெய்து

சூழனந்துமுத்தீனுந்துறைக்கணே
தாழ்வதோர்செய்யதாண்மடநாரையே.

(இ-ள்.) ஆழம் மிக்க கயந்தலை - அது அளத்தற்கரிய ஆழத்தையுடைய டாகமாம், அதலை வாழும் மீனம் அனைத்தையும் வாய்ப்பெய்து - அத்தடாகத்தில் வாழு மீன்களையெல்லாங் கொள்ளைகொண்டு, சூழல் நந்து முத்து ஈனும் துறைக்கண் ஏ - சுற்றிலுஞ் சங்குகள் முத்துகளையீனுந் துறையிலே, செய்ய தாள் ஓர் மடமை நாரை தாழ்வது - செவந்த கால்களையுடைய ஒரு இளநாரை வாசஞ்செய்யா நின்றது. (௩)

சிறியநாண்மழையின்றியச்சேயிதழ்
வெறியதாமரைமோடைவியன்கரை
இறைகொணாரையிருவினைப்பௌவமும்
வறியதாகிவறப்பவறந்ததால்.

(இ-ள்.) சிறிய நாள் மழை இன்றி - சிலநாள் மழையின்மையால், அ சேய் இதழ் வெறிய தாமரை ஓடை வியன் கரை இறை கொள் நாரை - அந்தச் செவந்த இதழையுடைய வாசமிக்க தாமரைகள் நிறைந்த தடாகத்தின் விசாலித்த கரையிற்றங்கிய நாரையினது, இருவினை பௌவம் உம் வறியது ஆகி வறப்ப - நல்வினை தீவினை யென்னுங் கடலும் சிறிதுமில்லாது வறக்க, வறந்தது - அத்தடாகம் வற்றியது.

தடமும் பொய்கையும் வாவியும் மடுவுங் குளமும் ஓடையும் உருவால் வேறுபடினும் அவையெல்லாம் நீர்நிலையேயாதலால் இங்கு ஓடையென்முர். வேதாகம வழி நில்லாமையே பாவமும் அந்நூல் வழிநின்று அருள்வழி நில்லாமையே புண்ணியமும ஆதலால் அவை பந்தம் என்பார் இருவினைப்பௌவமும் எனவும், அருள்வழி நிற்றல் வாய்த்ததென்பார் வறியதாகி வறப்பவறந்தது எனவுங் கூறினர். உம்மை உயர்வு சிறப்புப்பொருட்டு. (௪)

நுரைசெறித்தனநோன்சிறைநாரையும்
இரைவிரும்பியவ்வாவியிகந்தொரீஇ
விரையவந்தொருகானிடைவீழ்ந்ததால்
புரையிலோர்க்கிடனாகுமப்பொங்கர்வாய்.

(இ-ள்.) நுரை செறித்தால் அன்ன நோன் சிறை நாரையும் - நுரைகளை இடையறாது செறித்தாலொத்த வெள்ளிய வலியசிறையையுடைய நாரையும், இரை விரும்பி அவாவி இகந்து ஒரீஇ - இரையை விரும்பியத் தடாகத்தினின்று நீங்கி, விரைய வந்து ஒரு கான் இடை வீழ்ந்தது - விரைந்துவந்து ஒருகாட்டில் சோர்ந்து விழுந்தது, புரையிலோர்க்கு இடன் ஆகும் அ பொங்கர் வாய் - குற்றமில்லாத முனிவர்களுக்கு உறையுளாகிய மரச்செறிவையுடைய அக்காட்டில். (௫)

முத்தரானமுனிவர்குழாத்தொடும்
சுத்தவாரந்தவாரியுட்டோய்ந்துதன்
சித்தமாசுகழீஇச்சிவமாகிய
சத்தியத்தவமாமுனிதங்குமால்.

(இ-ள்.) முத்தர் ஆன முனிவர் குழாத்து ஒடும் - சீவன்முத்தராகிய முனிவர்கூட்டத்தோடும், சுத்தம் ஆரந்தம் வாரி உள் தோய்ந்து - களங்கமில்லாத பேரி

ன்பவெள்ளத்துள் மூழ்கி, தன் சித்தம் மாசு கழுவி - தனது மனத்தழுக்கைப்போக்கி, சிவம் ஆகிய சத்தியத்தவன் மாமுனி தங்கும் - சிவவடிவாகிய சத்தியத்தவன் என்னும் பெயரையுடைய பெரிய தபோதனனொருவன் வசிக்கின்றனன்.

பரஞானத்தால்வந்த சிவாநந்தவெள்ளம் என்பார் சத்தவாநந்த வாரியெனவும், வெள்ளத்தில் மூழ்கினோர் புறத்தழுக்கு ஒழிதல்போலச் சிவாநந்தவெள்ளத்திலமுழ்ந்தினோர் ஆணவமலசத்தியாகிய மனஅழுக்கு ஒழிந்தார் என்பார் சித்தமாசு கழீஇ எனவும், அங்ஙனம் சிவம்பிரகாசிக்கும் என்பார் சிவமாகிய எனவுங்கூறினர்.

கூப்பிடெல்லைகுணித்துச்சதுரமாய்
யாப்பமைந்துசுற்றெங்கும்படித்துறைக்
கோப்பமைந்துகுளிர்சந்தியாமடம்
காப்பமைந்தோர்கயந்தலையுள்ளதால்.

(இ-ள்.) கூப்பிடு எல்லை சதுரம் ஆய் குணித்து யாப்பு அமைந்து - ஒரு குரோச அளவு சதுரமாய் வரையறுத்துக் கட்டுதலமையப்பட்டு, சுற்று எங்கும் படித்துறை கோப்பு அமைந்து-சுற்றிலும் எங்கும் படித்துறைக்கோவை யமையப்பட்டு, குளிர் சந்தியா மடம் காப்பு அமைந்த - தண்ணிய நிழல்செய்யும் சந்தியாமடம் காவலோடமைந்த, ஓர் கயந்தலை உள்ளது - ஒரு தடாகமுள்ளது. (எ)

விரைசெய்சண்பகம்பாதிரிவேங்கைதேன்
இரைசெய்வஞ்சியிலஞ்சிகுராமரா
நிரைசெய்கிஞ்சுகநீண்மருதாதியா
உரைசெய்பன்மரமும்புறத்துள்ளவால்.

(இ-ள்.) விரை செய் சண்பகம் பாதிரி வேங்கை - வாசம் வீசும் சண்பகமும் பாதிரியும் வேங்கையும், தேன் இரை செய் வஞ்சி இலஞ்சி குரா மரா - வண்டுகளொலிக்கும் வஞ்சியுமகிழும் குரவும் மராவும், நிரைசெய் கிஞ்சுகம் நீள் மருது ஆதியாக-வரிசையாயுள்ள முண்முருக்கும் நீண்ட மருதுமுதலாக, உரைசெய் பல் மரமும் புறத்து உள்ள - கூறும் பலமரங்களும் (அத்தடாகத்தின்) புறத்திலுள்ளன. (அ)

அந்தவாவியின்பேரசோதீர்த்தமென்
றிந்தஞாலமியம்புவதாலிரை
உந்தவாவுகொடுக்கவெழுந்துமுன்
வந்தநாரையதன்கரைவைகுமால்.

(இ-ள்.) அந்த வாவியின் பேர் - அந்தத் தடாகத்தின்பெயர், அசோ தீர்த்தம் என்று இந்த ஞாலம் இயம்புவது - அச்சோததீர்த்தமென இவ்வுலகினராற் கூறப்படுவது, இரை உந்து அவாவு கொடுக்க எழுந்து - இரையானதுமிக்க விருப்பினைக்கொடுக்க மேலெழுந்து, முன் வந்த நாரை அதன் கரை வைகும் - அந்தடாகத்தின்முன்வந்த நாரையானது அதன்கரையில் தங்காநிற்கும். (கூ)

ஆய்ந்தமாதவரப்புனிதத்தடந்
தோய்ந்துதோய்ந்தங்கெழுந்தொறுந்தோட்புறம்
சாய்ந்தவார்சடைக்கற்றையிற்றதுமீன்
பாய்ந்துபாய்ந்துபுரள்வனபார்த்தரோ.

(இ-ள்.) ஆய்ந்த மாதவர் - வேதாகமங்களை யாராய்ந்துணர்ந்த பெரிய தபோதனர்கள், அ புனிதம் தடம் தோய்ந்து தோய்ந்து எழுந்தோறும் - அந்த வா

விதாகிய தடாகத்தில் நீராடி யெழுந்தோறும், தோள் புறம் சாய்ந்த வார் சடை கற்றையில் - பிடரில் சாய்ந்துகிடக்கின்ற நீண்ட சடாடவியில், தத்து மீன் பாய்ந்து பாய்ந்து புரள்வன பார்த்து - தாவாநின்ற மீன்கள் தம்முட்பாய்ந்து புரள்தலைப் பார்த்து.

தோட்புறம் பிடர் ஆதலால் பிடர் என்றும். தோய்ந்து தோய்ந்து, பன்மைப்பொருளில் வந்த அடுக்கு. பாய்ந்து பாய்ந்து இடைவிடாமைப் பொருளில் வந்த அடுக்கு. அங்கு அசைநிலை. (சய)

ஈண்டையித்தவத்தோர்திருமேனியைத்
தீண்டவெத்தவஞ்செய்தனவேகொலென்
றூண்டைமீனமக்காகாவெனவிரை
வேண்டுநாரைவெறுத்தங்கிருந்ததால்.

(இ-ள்.) ஈண்டு இதவத்தோர் திருமேனியை தீண்ட - இவ்விடத்தில் இந்தத் தபோதனர்களுடைய திருமேனியைப் பரிசித்தற்கு, எதவம் செய்தன ஏ கொல் என்று - (மீன்கள்) என்னதவஞ்செய்தனவோவென்று கருதி, ஆண்டு மீன் நமக்கு ஆகா என - அவ்விடத்திலுள்ள அம்மீன்கள் நமக்கு இரையாகாவென்று, இரை வேண்டு நாரை வெறுத்து அங்கு இருந்தது - இரைவேண்டிவந்த நாரை யதனை வெறுத்து அங்கு வசித்தது. (கக)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தந்நிகர்தவத்தோர்யாருந்தடம்படிந்தேறிநித்தம்
மன்னியகருமமுற்றிச்சந்தியாமடத்தில்வைகி
மின்னியமகுடஞ்சூடிவேந்தனாயுலகங்காத்த
பொன்னியற்சடையான்கூடற்புராணநூலோதுகின்றார்.

(இ-ள்.) தம் நிகர் தவத்தோர் யாரும் - தம்மையொத்த தவத்தினையுடைய எல்லோரும், தடம் படிந்து ஏறி மன்னிய நித்த கருமம் முற்றி - அத்தடாகத்தில் நீராடிக் கரையேறி இடைவிடாது என்றுமுள்ள நித்த கருமத்தைமுடித்து, சந்தியா மடத்தில் வைகி - சந்தியாமடத்திலிருந்து, மின்னிய மகுடம் சூடி வேந்தன் ஆய் உலகம் காத்த பொன் இயல் சடையான் கூடல் புராணம் நூல் ஓதுகின்றார் - விளங்காநின்ற கிரீடத்தைத்தரித்துச் சவுந்தரபாண்டியரா யுலகினைக்காத்துவந்த பொன்போலச் செந்நிறம் வாய்ந்த சடாமகுடத்தையுடைய சோமசுந்தரக்கடவுளுடைய திருவாலவாய் மான்மியநூலையோதி வருகின்றவர்களாயினார்கள். (கஉ)

அண்ணலெம்பெருமான்செய்தவருள்விளையாட்டுமாதிப்
பண்ணவன்சிறப்புங்கூடற்பழம்பதிச்சிறப்புந்தீர்த்தத்
தெண்ணருஞ்சிறப்புஞ்சேர்ந்தோர்க்கெளிவருமிறைவனென்னும்
வண்ணமுமெடுத்துக்கூறக்கேட்டங்குவதியுநாரை.

(இ-ள்.) அண்ணல் எம்பெருமான் செய்த அருள் விளையாட்டும் - இறைவனாகிய எமது பெருமான் செய்தருளிய திருவிளையாடலையும், ஆதி பண்ணவன் சிறப்பும் - முன்னைப்பழம்பொருட்கு முன்னைப்பழம் பொருளாகிய சோமசுந்தரமூர்த்தியின் சிறப்பையும், கூடல் பழம் பதி சிறப்பும் - திருவாலவாயென்னும் தொன்றுதொட்டுள்ள தலச்சிறப்பையும், தீர்த்தத்து எண்ணரும் சிறப்பும் - தீர்த்தத்தின் வரையறுத்தற்கரிய சிறப்பையும், சேர்ந்தோர்க்கு எளிவரும் இறைவன் என்னும் வண்ணமும்-அடைந்தவர்க்கெளிய கருணைவள்ளலென்னுந் திறத்தையும், எடுத்து கூற

அங்கு வதியும் நாரை கேட்டு - விதந்து அம்முனிவர்கள்கூற அவ்விடத்துத் தங்கும் நாரை கேட்டு. (௧௩)

மடம்படுமறிவுநீங்கிவல்வினைப்பாசம்வீசித்
திடம்படுமறிவுகூர்ந்துசிவபரஞ்சோதிபாதத்
திடம்படுமன்புவாவென்றீர்த்தெழவெழுந்துநாரை
தடம்படுமாடக்கூடற்றனிநகரடைந்துமாதோ.

(இ-ள்.) மடம் படும் அறிவு நீங்கி - அறியாமைநீங்கி, வல்வினை பாசம் வீசி- எழுந்த ஞானோதயத்தால்) வலிய ஆகாமியகன்மபந்தத்தை யொழித்து, திடம் படும் அறிவு கூர்ந்து - உயிர்க்குறுதி தரும் ஞானோதயம்பெற்று, சிவபரஞ்சோதி பாதத்து இடம் படும் அன்பு வா என்று ஈர்த்து எழ நாரை எழுந்து - சோமசுந்தரக்க —வுளின் திருவடியிற்பரந்த நேயம் வாவென்றிழுக்க நாரை அங்குநின்று மேலெழுந்து, தடம் படு மாடம் கூடல் தனி நகர் அடைந்து - விசாலித்த உபரிகைகள் நிறைந்த கூடலாகிய ஒப்பில்லாத திருநகரையடைந்து.

பிராரத்தம் நுகரும்போதே யிடையிலேறும் வினையாதலால் ஆகாமியத்தை வல்வினை என்றார். ஞானோதயத்தால் ஒழித்து என்றது "ஏன்றவினையுடலோடேகு மிடையேறுவினை - தோன்றிலருளேசுடும்" என்ற திருவருட்பயனால் உணர்க. (௧௪)

வாங்கியதிரைசூழ்பொற்றாமரைபடிந்திமையாவேழந்
தாங்கியவிமானமேயதலைவனைத்தாழ்ந்துசூழ்ந்து
தேங்கியவருட்கணோக்கந்தெரிசித்துத்திருமுன்வைகி
யோங்கியகருணைமேனியுள்ளுறத்தியானஞ்செய்து.

(இ-ள்.) வாங்கிய திரை சூழ் பொன் தாமரை படிந்து - வளைந்த அலைகள் சூழ்ந்த பொற்றாமரைத்தீர்த்தத்தில் நீராடி, இமையாத வேழம் தாங்கிய விமானம் மேய தலைவனை தாழ்ந்து சூழ்ந்து - (தெய்வத்தன்மையால்) இமை கொட்டாத அஷ்டகசங்கள் சுமந்த விமானத்திலெழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளை வணங்கிப் பிரதக்ஷிணம்செய்து, தேங்கிய அருள் கண் நோக்கம் தெரிசித்து - தன்மேல் தேக்கிய திருவருட்பார்வையைத் தெரிசித்து, திரு முன் வைகி ஓங்கிய கருணை மேனி உள் உறதி யானம் செய்து - திருமுன்னரிருந்து (ஆன்மாக்களிடத்து) வளர்ந்தோங்கிய திருவருளாகிய திருமேனி தனதுள்ளத்திற்பதியத் தியானித்து.

சஞ்சிதகன்மம் ஒழிந்ததென்பார் தேங்கியவருட்கணோக்கந் தெரிசித்து எனவும், ஆன்மாக்களுணர்ந்து பூசித்துய்தற்பொருட்டுத் திருக்கோயிலுள் திருமேனி கொண்டருளினமையால் ஓங்கிய எனவும், திருவருளே திருமேனியாதலால் கருணைமேனி யெனவுங் கூறினார். சஞ்சிதகன்மம் திருவருணோக்கால் ஒழியும் என்றது "செய்யதிருக் - கண்ணருளானோக்கிக் கடியபிறப்பாற்பட்ட - புண்ணுமிருவினையும் போயகல" எனவரும் போற்றிப்பஃறொடையிற்காண்க. (௧௫)

இந்நிலைநியமமூனைந்தெல்லைஞான்றியன்றுபின்னாள்
அந்நிலையொழுகுநாரையாடககமலந்தோய்வான்
வன்னிலைமதில்சூழ்ஞாங்கர்வந்துழிப்பசியால்வெந்து
மின்னிலைவேல்போற்றுள்ளுமீன்கவர்ந்துண்குமென்னா.

(இ-ள்.) மூவைந்து எல்லை ஞான்று - பதினைந்துதினம், இ நிலை நியமம் இயன்று-இவ்வாறு செய் கடனைச் செய்து, பின் நாள் அநிலை ஒழுகு நாரை - வழிநாளில் அந்நியமத்தை முடிக்கும் நாரை, ஆடக கமலம் தோய்வான் - பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராட, வல் நிலை மதில் சூழ் ஞாங்கர் வந்த உழி - வலியநிலையையுடை

ய சுற்றுமதிலின்பக்கலில் வந்த இடத்து, பசியால் வெந்து - பசித்தழலால் நீந்து கருகி, மின் இலை வேல் போல் துள்ளும் மீன் கவர்ந்து உண்கும் என்று - விளங்கு ந் தகட்டுவடிவாகிய வேலைப்போலத் துள்ளாநின்ற மீனைக் கொள்ளைகொண்டு உண்போமென்று கருதி. (கசு)

சிறிதுளத்துள்ளிநாதன்றிருவருள்வலத்தாற்பின்னர்
அறிவுவந்தச்சோவிந்தவறப்பெருந்தீர்த்தத்துள்ளே
எறியுமீனருந்தவாசையெழுந்ததேயெனக்கிப்போதிப்
பிறவியெவ்வொழிவதென்றுப்பேரஞரடைந்துபின்னும்.

(இ-ள்.) சிறிது உளத்து உள்ளி - சற்று மனத்திற்கருதி, நாதன் திரு அருள் வலத்தால் - சோமசுந்தரக்கடவுளுடைய திருவருளின் வன்மையால், பின்னர் அறிவு வந்து - பின்பு ஞானம்வந்து, அச்சோ - ஐயோ, இந்த அறம் பெருந் தீர்த்தத்து உள்ளே - இந்தத் தருமவடிவாகிய பெரிய தீர்த்தத்துள், எறியும் மீன் அருந்த எனக்கு இப்போது ஆசை எழுந்தது - துள்ளு மீனைத்தின்ன எனக்கு இப்போது விருப்பமெழுந்தது, இ பிறவி என்று ஒழிவது என்று - (இக்கொடுமையால்) இந்தப்பிறவி யெப்பொழுதொழிவதென்று, பேர் அஞர் அடைந்து - பெருந்துன்பமடைந்து, பின்னும் - மீளவும். (கஎ)

சுந்தரச்செம்மல்பாதத்துணைமலரன்பிற்றோய்ந்து
சிந்தைவைத்திருக்குமெல்லைதேவருமறையுஞ்செய்யும்
வந்தனைக்கரியானுளாமனநினைவடிவாய்த்தோன்றி
யெந்தமக்கினியாய்வேண்டும்வரமென்கொலியம்புகென்றான்.

(இ-ள்.) சுந்தரச் செம்மல் மலர் பாதம் துணை அன்பில் தோய்ந்து - சோமசுந்தரக்கடவுளுடைய தாமரைமலர்போன்ற இரண்டு திருவடிகளிலும் வைத்த அன்பிற்படிந்து, சிந்தை வைத்திருக்கும் எல்லை - தனது மனத்தையங்கிலேயிற் பெயராது வைத்திருக்குந் தருணத்தில, தேவரும் மறையும் செய்யும் வந்தனைக்கு அரியான் - தேவர்களும் வேதங்களுஞ் செய்யும் வழிபாட்டிற்கு அணுகொணாதவராகிய அச்சோமசுந்தரக்கடவுள், நாரை மனம் நினை வடிவு ஆய் தோன்றி - நாரைமனத்திற்கருதிய திருவுருவோடு காட்சிதந்து, எம் தமக்கு இனியாய் வேண்டும் வரம் என் கொல் இயம்புக என்றான் - எமக்கு இனியவனே நீ வேண்டும் வரம் யாதென்று வினவினர்.

அன்பின்வடிவாயிருந்தது என்பார் அன்பிற்றோய்ந்து சிந்தைவைத்திருக்குமெல்லை யெனவும், தேவர்கள் மலச்சிமிழ்ப்புடைமையாலும் திரிவிதகரணங்களைக் கொண்டறிய நிற்றலால் வேதம்பாச ஞானமாதலாலும் அரியன் என்பார் தேவருமறையுஞ்செய்யும் வந்தனைக்கரியான் எனவும், சாதாரமாகிய திருவுருக்கொண்டு வந்தனர் என்பார் மனநினைவடிவாய்த் தோன்றியெனவுங் கூறினர். (கஅ)

கலிவிருத்தம்.

செய்யகான்மடநாரையுஞ்சென்றுதாழ்ந்
தையனேயிப்பிறவியறுத்துநின்
மெய்யர்வாழ்சிவலோகத்தின்மேவிநான்
உய்யவேண்டுமொன்றின்னமுமுண்டரோ.

(இ-ள்.) செய்ய கால் மட நாரையும் சென்று தாழ்ந்து - செவந்த கால்களையுடைய இளமைதங்கிய நாரையும் புடைபெயர்ந்துவணங்கி, ஐயனே - ஐயனே, இ பிறவி அறுத்து நின் மெய்யர் வாழ் சிவலோகத்தின் மேவி நான் உய்ய

ண்டும் - இந்தப் பிறவி வேரையறுத்து உனது மெய்யன்பர் வாழும சிவலோகத் ரயடைந்து அடியேன் பிழைக்கவேண்டும், இன்னமும ஒன்று உளது - இன்ன ) ஒருவரமுள்ளது. (கசு)

வள்ளலென்மரபுள்ளவுமற்றைய
புள்ளுமிந்தப்புனிதமலர்த்தடத்
துள்ளமீனுயிருண்ணினெக்காலமுந்
தள்ளொணாதபழிவந்துசாருமே.

(இ-ள்.) வள்ளல் - கிருபாவள்ளலே, என் மரபு உள்ளவும் மற்றைய புள் ம் - என்மரபிலுள்ள பறவைச்சாதிகளும் ஏனைப்பறவைகளும், இந்த புனிதம் ம தடத்து உள்ள மீன் உயிர் உண்ணின் - இந்தக் களங்கமில்லாத பொற்றாமரைத் ந்தத்திலுள்ள மீன்களுயிரைக் கொள்ளைகொள்ளில், எ காலமும் தள் ஒணாத ழி வந்து சாரும் — எந்தக்காலத்திலும் ஒழித்தற்கரிய பாவம் வந்தடையும். (உ0)

என்றுமித்தடமீனிலவாகநீ
நன்றுசால்வரநல்கெனவெள்ளிமா
மன்றுளானும்வரந்தந்துபோயினான்
சென்றுநாரைசிவலோகஞ்சேர்ந்ததால்.

(இ-ள்.) என்றும் இ தடம் மீன் இலவாக - எப்பொழுதும் இந்தப் புனிததீ தத்தில் மீன்களில்லாதிருக்கும்படி, நீ நன்று சால் வரம் நல்கு என்ன—நீ நன்மை க்க வரந்தந்தருளாயென்று குறையிரக்க, மா வெள்ளி மன்று உள்ளானும் வரம் ந்து போயினான் - பெருமைமிக்க வெள்ளியம்பலத்தில் நடித்தருளிய சோமசுந்தர டவுளும் வரமருளிச் சென்றனர், நாரை சிவலோகம் சென்று சேர்ந்தது - நாரை வலோகத்தைச் சென்றடைந்தது. (உக)

இயங்களைந்துமியம்பவிமானமேற்
புயங்கணான்குமுக்கண்களும்பொற்பவான்
வியங்கொள்பூமழைவெள்ளத்துளாழ்ந்துபோய்
வயங்கொணந்திகணத்துள்வதிந்ததே.

(இ-ள்.) இயங்கள் ஐந்தும் இயம்ப - தேவவாச்சியங்களைந்துமொ ானம் மேல் - விமானத்தின்மேல், புயங்கள் நான்கும் முக்கண்களும் பொற்ப - ான்குபுயங்களு மூன்று கண்களும் அழகுசெய்ய, வான் வியம் கொள் பூமழை வள்ளத்து உள் ஆழ்ந்து போய் - வானுலகோர் சிந்திய புஷ்பமாரியாலாகிய வெ ளத்துள் மூழ்கிச் சிவலோகம் சென்று, வயம் கொள் நந்தி கணத்து உள் வதிந் து - வெற்றிமிக்க நந்திநாயனார் சிவகணத்துள் தானும ஒன்றாகத்தங்கியது.(உஉ)

அன்றுதொட்டின்றளவும்பொற்றாமரை
யென்றுரைக்குமெழின்மலரோடையிற்
சென்றுகைத்துத்திரிகின்றமீனலா
லொன்றுமற்றனநீர்வாழுயிர்களும்.

(இ-ள்.) அன்றுதொட்டு இன்று அளவும் - அக்காலந்தொட்டு இக்காலங்கா ம், பொற்றாமரை என்று உரைக்கும் எழில் மலர் ஓடையில் - பொற்றாமரையென் ு கூறும் பொலிவுமிக்க திருக்குளத்தில், சென்று உகைத்து திரிகின்ற மீன் அல் ால் - உலாவித் தாவித்திரிகின்ற மீன்களும் அன்றி, நீர்வாழ் உயிர்களும் ஒன்றும் ற்றன - நீரில் வாழும் உயிர்களும் சிறிதும் இன்றியொழிந்தன. (உங)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தன்கிளையன்றிவேற்றுப்பறவைகடாமுந்தன்போ
னன்கதியடையவேண்டிற்றேகொலிந்நாரைசெய்த
வன்பினில்வியப்போவீசனருளினில்வியப்போவன்பர்க்
கின்புருவானவீசனன்பருக்கெளிதேயையப.

(இ-ள்.) தன் கிளை அன்றி - தனது சாதிப்பறவைகளுமல்லாமல், வேற்று பறவைகள் தாமும் - வேறு சாதிப்பறவைகளும், தன் போல் - தன்னைப்போல, நன் கதி அடைய வேண்டிற்று - நல்ல சிவகதியையடைய வாமும் வேண்டியது, இ நாரை செய்த அன்பினில வியப்பு ஓ - இந்த நாரை வழிபட்ட பத்திமையில் வியப்புளதோ, ஈசன் அருளினில் வியப்பு ஓ - (அப்பத்திமைக்கு அருளும் சோமசுந்தரக்கடவுளின் திருவருளில் வியப்புளதோ, அன்பர்க்கு இன்பு உரு ஆன ஈசன் அன்பருக்கு எளிதே - அடியார்களுக்கு அவயவங்கள்தோறும் இன்பவடிவாய் நின்ற அச் சோமசுந்தரக்கடவுளினடியார்க்கு அத்திருவருள் எளிது.

பொற்றாமரைத்தீர்த்தம் மீனில்லாதிருக்க வரம்பெற்றதால் தன் கிளையன்றி வேற்றுப்பறவைகள் தாமுந் தன்போல் நன்கதியடையவேண்டிற்று எனவும், அன்பே இன்புருவான சிவம் ஆதலால் அன்பர்க்கின்புருவான வீசன் எனவும், அன்பினில் வியப்போ என வினவினார்க்கு அன்பால் திருவருள் விளைதலால் ஈசனன்பருக் கெளிதேயெனவுங் கூறினார். "ஆக்கவனருளாற்பத்திமையுண்டாம் பத்தியாலவனருளுண்டாம்" எனவும், "கொடியேனூன்றழை-குரம்பைதோறும்நாயுடலகத்தே-குரம்பைகொண்டின்றேன்பாய்த்திநிரம்பிய - அற்புதமானவமுததாரைகள் - எறபுத் துளைதொறுமேற்றினன்" எனவும் வரும் எதுக்களால் உணர்க. (௨௪)

கலிவிருத்தம்.

மறக்குறும்புகளைகட்டுமண்ணின்மே
லறப்பெரும்பயிராக்கியதன்பயன்
சிறக்கநல்கிடவுண்டுசெருக்குவான்
றுறக்கமெய்தியிருந்தான்சுகுணனும்.

(இ-ள்.) மறம் குறும்புகளைகட்டு - பாவமாகிய களையைக்களைந்து, மண்ணின்மேல் அறம் பெரும் பயிர் ஆக்கி - நிலவுலகின்மேல் தருமமாகிய பெரிய பயிரேற்றி, அதன் பயன் சிறக்க நல்கிட உண்டு செருக்குவான் - அவ்வறப்பயிராலாகிய பயன் மிகவுங் கைகூடக் கிளைஞருமன்றித் தானும் நுகர்ந்து இறுமாக்கும், சுகுணனும் - சுகுணபாண்டியனும், துறக்கம் எய்தி இருந்தான் - தேவருலகையடைந்து மகிழ்ச்சியோடிருந்தனன்.

குடிகட்குவருந் தீங்கினையொழித்தனன் என்பார் மறக்குறும்புகளை கட்டு எனவும், மநுநூல்வழிச்செங்கோலோச்சினன் என்பார் மண்ணின்மேல் அறப்பெரும்பயிராக்கியெனவும், அதனால் விளையும் பொருளின்பங்களைக் குறைவின்றி நுகர்ந்தனன் என்பார் அதன்பயன் சிறக்க நல்கிடவுண்டு எனவுங்கூறினார். (௨௫)

நாரைக்கு முத்திகொடுத்தபடலம் முற்றிற்று.

ஆகப்பாயிரம் உள்படத் திருவிருத்தம்-௨௱௨௧.

---

கூடற்காண்டம் முற்றிற்று.

---